# நாலாயிரத் திவ்விய பிரபந்தம்

## 1. முதலாம் ஆயிரம்

## பெரியாழ்வார்

## திருப்பல்லாண்டு

தொகுப்பு – இங்கர்சால்

#1

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்து ஆண்டு

பல கோடி நூறாயிரம்

மல் ஆண்ட திண் தோள் மணி வண்ணா உன்

சேவடி செவ்வி திருக்காப்பு

#2

அடியோமோடும் நின்னோடும் பிரிவு இன்றி ஆயிரம் பல்லாண்டு

வடிவாய் நின் வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு

வடிவு ஆர் சோதி வலத்து உறையும் சுடர் ஆழியும் பல்லாண்டு

படை போர் புக்கு முழங்கும் அ பாஞ்சசன்னியமும் பல்லாண்டே

#3

வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல் வந்து மண்ணும் மணமும் கொண்-மின்

கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள் குழுவினில் புகுதல் ஒட்டோம்

ஏழாட்காலும் பழிப்பிலோம் நாங்கள் இராக்கதர் வாழ் இலங்கை

பாழாளாக படை பொருதானுக்கு பல்லாண்டு கூறுதுமே

#4

ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம் வந்து எங்கள் குழாம் புகுந்து

கூடு மனமுடையீர்கள் வரம் பொழி வந்து ஒல்லை கூடு-மினோ

நாடும் நகரமும் நன்கு அறிய நமோ நாராயணாய என்று

பாடு மனம் உடை பத்தருள்ளீர் வந்து பல்லாண்டு கூறு-மினே

#5

அண்ட குலத்துக்கு அதிபதி ஆகி அசுரர் இராக்கதரை

இண்ட குலத்தை எடுத்து களைந்த இருடீகேசன்-தனக்கு

தொண்ட குலத்தில் உள்ளீர் வந்து அடி தொழுது ஆயிர நாமம் சொல்லி

பண்டை குலத்தை தவிர்ந்து பல்லாண்டு பல்லாயிரத்து ஆண்டு என்-மினே

#6

எந்தை தந்தை தந்தை-தம் மூத்தப்பன் ஏழ் படிகால் தொடங்கி

வந்து வழிவழி ஆட்செய்கின்றோம் திருவோண திருவிழவில்

அந்தியம் போதில் அரி உரு ஆகி அரியை அழித்தவனை

பந்தனை தீர பல்லாண்டு பல்லாயிரத்து ஆண்டு என்று பாடுதுமே

#7

தீயில் பொலிகின்ற செம் சுடர் ஆழி திகழ் திருச்சக்கரத்தின்

கோயில் பொறியாலே ஒற்றுண்டு நின்று குடிகுடி
ஆட்செய்கின்றோம்

மாய பொரு படை வாணனை ஆயிரம் தோளும் பொழி குருதி

பாய சுழற்றிய ஆழி வல்லானுக்கு பல்லாண்டு கூறுதுமே

#8

நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும் அத்தாணி சேவகமும்

கை அடைக்காயும் கழுத்துக்கு பூணொடு காதுக்கு குண்டலமும்

மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்து என்னை வெள்ளுயிர் ஆக்க
வல்ல

பை உடை நாக பகை கொடியானுக்கு பல்லாண்டு கூறுவனே

#9

உடுத்து களைந்த நின் பீதக ஆடை உடுத்து கலத்தது உண்டு

தொடுத்த துழாய் மலர் சூடி களைந்தன சூடும் இ
தொண்டர்களோம்

விடுத்த திசை கருமம் திருத்தி திருவோணத் திருவிழவில்

படுத்த பை நாக அணை பள்ளிகொண்டானுக்கு பல்லாண்டு
கூறுதுமே

#10

ஏ நாள் எம்பெருமான் உன்தனக்கு அடியோம் என்று எழுத்துப்பட்ட

அ நாளே அடியோங்கள் அடி குடில் வீடுபெற்று உய்ந்தது காண்

செந்நாள் தோற்றி திரு மதுரையில் சிலை குனித்து ஐந்தலைய

பை நாக தலை பாய்ந்தவனே உன்னை பல்லாண்டு கூறுதுமே

#11

அல்வழக்கு ஒன்றும் இல்லா அணி கோட்டியர் கோன்
அபிமானதுங்கன்

செல்வனை போல திருமாலே நானும் உனக்கு பழவடியேன்

நல் வகையால் நமோ நாராயணா என்று நாமம் பல பரவி

பல் வகையாலும் பவித்திரனே உன்னை பல்லாண்டு கூறுவனே

#12

பல்லாண்டு என்று பவித்திரனை பரமேட்டியை சார்ங்கம் என்னும்

வில்லாண்டான்-தன்னை வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பிய
சொல்

நல்லாண்டு என்று நவின்று உரைப்பார் நமோ நாராயணாய
என்று

பல்லாண்டும் பரமாத்மனை சூழ்ந்திருந்து ஏத்துவர் பல்லாண்டே

#13

வண்ண மாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்

கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்

எண்ணெய் சுண்ணம் எதிரெதிர் தூவிட

கண்ணன் முற்றம் கலந்து அளறு ஆயிற்றே

#14

ஓடுவார் விழுவார் உகந்து ஆலிப்பார்

நாடுவார் நம்பிரான் எங்குத்தான் என்பார்

பாடுவார்களும் பல் பறை கொட்ட நின்று

ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே

#15

பேணி சீர் உடை பிள்ளை பிறந்தினில்

காண தாம் புகுவார் புக்கு போதுவார்

ஆண் ஒப்பார் இவன் நேர் இல்லை காண் திரு

வோணத்தான் உலகு ஆளும் என்பார்களே

#16

உறியை முற்றத்து உருட்டி நின்று ஆடுவார்

நறு நெய் பால் தயிர் நன்றாக தூவுவார்

செறி மென் கூந்தல் அவிழ திளைத்து எங்கும்

அறிவு அழிந்தனர் ஆய்ப்பாடி ஆயரே

#17

கொண்ட தாள் உறி கோல கொடு மழு

தண்டினர் பறியோலை சயனத்தர்

விண்ட முல்லை அரும்பு அன்ன பல்லினர்

அண்டர் மிண்டி புகுந்து நெய்யாடினார்

#18

கையும் காலும் நிமிர்த்து கடார நீர்

பைய ஆட்டி பசும் சிறு மஞ்சளால்

ஐய நா வழித்தாளுக்கு அங்காந்திட

வையம் ஏழும் கண்டாள் பிள்ளை வாயுளே

#19

வாயுள் வையகம் கண்ட மட நல்லார்

ஆயர் புத்திரன் அல்லன் அரும் தெய்வம்

பாய சீர் உடை பண்பு உடை பாலகன்

மாயன் என்று மகிழ்ந்தனர் மாதரே

#20

பத்து நாளும் கடந்த இரண்டாம் நாள்

எ திசையும் சயமரம் கோடித்து

மத்த மா மலை தாங்கிய மைந்தனை

உத்தானம் செய்து உகந்தனர் ஆயரே

#21

கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்

எடுத்துக்கொள்ளில் மருங்கை இறுத்திடும்

ஒடுக்கி புல்கில் உதரத்தே பாய்ந்திடும்

மிடுக்கு இலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்

#22

செந்நெல் ஆர் வயல் சூழ் திருக்கோட்டியூர்

மன்னு நாரணன் நம்பி பிறந்தமை

மின்னு நூல் விட்டுசித்தன் விரித்த இ

பன்னு பாடல் வல்லார்க்கு இல்லை பாவமே

#23

சீத கடல் உள் அமுது அன்ன தேவகி

கோதை குழலாள் அசோதைக்கு போத்தந்த

பேதை குழவி பிடித்து சுவைத்து உண்ணும்

பாத கமலங்கள் காணீரே பவள வாயீர் வந்து காணீரே

#24

முத்தும் மணியும் வயிரமும் நன் பொன்னும்

தத்தி பதித்து தலைப்பெய்தால் போல் எங்கும்

பத்து விரலும் மணி வண்ணன் பாதங்கள்

ஒத்திட்டு இருந்தவர் காணீரே ஒள் நுதலீர் வந்து காணீரே

#25

பணை தோள் இள ஆய்ச்சி பால் பாய்ந்த கொங்கை

அணைத்து ஆர உண்டு கிடந்த இ பிள்ளை

இணை காலில் வெள்ளி தளை நின்று இலங்கும்

கணை கால் இருந்தவா காணீரே காரிகையீர் வந்து காணீரே

#26

உழந்தாள் நறு நெய் ஓரோர் தடா உண்ண

இழந்தாள் எரிவினால் ஈர்த்து எழில் மத்தின்

பழம் தாம்பால் ஓச்ச பயத்தால் தவழ்ந்தான்

முழந்தாள் இருந்தவா காணீரே முகிழ் முலையீர் வந்து காணீரே

#27

பிறங்கிய பேய்ச்சி முலை சுவைத்து உண்டிட்டு

உறங்குவான் போலே கிடந்த இ பிள்ளை

மறம் கொள் இரணியன் மார்பை முன் கீண்டான்

குறங்குகளை வந்து காணீரே குவி முலையீர் வந்து காணீரே

#28

மத்த களிற்று வசுதேவர் தம்முடை

சித்தம் பிரியாத தேவகி-தன் வயிற்றில்

அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதன்

முத்தம் இருந்தவா காணீரே முகிழ் நகையீர் வந்து காணீரே

#29

இரும் கை மத களிறு ஈர்க்கின்றவனை

பருங்கி பறித்துக்கொண்டு ஓடும் பரமன்-தன்

நெருங்கு பவளமும் நேர் நாணும் முத்தும்

மருங்கும் இருந்தவா காணீரே வாள் நுதலீர் வந்து காணீரே

#30

வந்த மதலை குழாத்தை வலிசெய்து

தந்த களிறு போல் தானே விளையாடும்

நந்தன் மதலைக்கு நன்றும் அழகிய

உந்தி இருந்தவா காணீரே ஒளி இழையீர் வந்து காணீரே

#31

அதிரும் கடல் நிற வண்ணனை ஆய்ச்சி

மதுர முலை ஊட்டி வஞ்சித்து வைத்து

பதரப்படாமே பழம் தாம்பால் ஆர்த்த

உதரம் இருந்தவா காணீரே ஒளி வளையீர் வந்து காணீரே

#32

பெரு மா உரலில் பிணிப்புண்டு இருந்து அங்கு

இரு மா மருதம் இறுத்த இ பிள்ளை

குருமா மணி பூண் குலாவி திகழும்

திருமார்வு இருந்தவா காணீரே சே இழையீர் வந்து காணீரே

#33

நாள்கள் ஓர் நாலைந்து திங்கள் அளவிலே

தாளை நிமிர்த்து சகடத்தை சாடி போய்

வாள் கொள் வளை எயிற்று ஆருயிர் வவ்வினான்

தோள்கள் இருந்தவா காணீரே சுரி குழலீர் வந்து காணீரே

#34

மை தடம் கண்ணி யசோதை வளர்க்கின்ற

செய்த்தலை நீல நிறத்து சிறு பிள்ளை

நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய

கைத்தலங்கள் வந்து காணீரே கனம் குழையீர் வந்து காணீரே

#35

வண்டு அமர் பூம் குழல் ஆய்ச்சி மகனாக

கொண்டு வளர்க்கின்ற கோவல குட்டற்கு

அண்டமும் நாடும் அடங்க விழுங்கிய

கண்டம் இருந்தவா காணீரே காரிகையீர் வந்து காணீரே

#36

எம் தொண்டை வாய் சிங்கம் வா என்று எடுத்துக்கொண்டு

அம் தொண்டை வாய் அமுது ஆதரித்து ஆய்ச்சியர்

தம் தொண்டை வாயால் தருக்கி பருகும் இ

செம் தொண்டை வாய் வந்து காணீரே சே இழையீர் வந்து காணீரே

#37

நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்

நாக்கு வழித்து நீராட்டும் இ நம்பிக்கு

வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்

மூக்கும் இருந்தவா காணீரே மொய் குழலீர் வந்து காணீரே

#38

விண் கொள் அமரர்கள் வேதனை தீர முன்

மண் கொள் வசுதேவர்-தம் மகனாய் வந்து

திண் கொள் அசுரரை தேய வளர்கின்றான்

கண்கள் இருந்தவா காணீரே கன வளையீர் வந்து காணீரே

#39

பருவம் நிரம்பாமே பார் எல்லாம் உய்ய

திருவின் வடிவு ஒக்கும் தேவகி பெற்ற

உருவு கரிய ஒளி மணி வண்ணன்

புருவம் இருந்தவா காணீரே பூண் முலையீர் வந்து காணீரே

#40

மண்ணும் மலையும் கடலும் உலகு ஏழும்

உண்ணும் திறத்து மகிழ்ந்து உண்ணும் பிள்ளைக்கு

வண்ணம் எழில் கொள் மகர குழை இவை

திண்ணம் இருந்தவா காணீரே சே இழையீர் வந்து காணீரே

#41

முற்றிலும் தூதையும் முன்கை மேல் பூவையும்

சிற்றில் இழைத்து திரிதருவோர்களை

பற்றி பறித்துக்கொண்டு ஓடும் பரமன்-தன்

நெற்றி இருந்தவா காணீரே நேர் இழையீர் வந்து காணீரே

#42

அழகிய பைம்பொன்னின் கோல் அம் கை கொண்டு

கழல்கள் சதங்கை கலந்து எங்கும் ஆர்ப்ப

மழ கன்று இனங்கள் மறித்து திரிவான்

குழல்கள் இருந்தவா காணீரே குவி முலையீர் வந்து காணீரே

#43

சுருப்பு ஆர் குழலி யசோதை முன் சொன்ன

திருப்பாத கேசத்தை தென் புதுவை பட்டன்

விருப்பால் உரைத்த இருபதோடு ஒன்றும்

உரைப்பார் போய் வைகுந்தத்து ஒன்றுவர் தாமே

#44

மாணிக்கம் கட்டி வயிரம் இடை கட்டி

ஆணிப்பொன்னால் செய்த வண்ண சிறு தொட்டில்

பேணி உனக்கு பிரமன் விடுதந்தான்

மாணி குறளனே தாலேலோ வையம் அளந்தானே தாலேலோ

#45

உடையார் கன மணியோடு ஒண் மாதுளம் பூ

இடை விரவி கோத்த எழில் தெழ்கினோடு

விடை ஏறு காபாலி ஈசன் விடுதந்தான்

உடையாய் அழேல் அழேல் தாலேலோ உலகம் அளந்தானே
தாலேலோ

#46

என் தம்பிரானார் எழில் திருமார்வர்க்கு

சந்தம் அழகிய தாமரை தாளர்க்கு

இந்திரன்-தானும் எழில் உடை கிண்கிணி

தந்து உவனாய் நின்றான் தாலேலோ தாமரை கண்ணனே தாலேலோ

#47

சங்கின் வலம்புரியும் சேவடி கிண்கிணியும்

அம் கை சரி வளையும் நாணும் அரை தொடரும்

அம் கண் விசும்பில் அமரர்கள் போத்தந்தார்

செம் கண் கரு முகிலே தாலேலோ தேவகி சிங்கமே தாலேலோ

#48

எழில் ஆர் திருமார்வுக்கு ஏற்கும் இவை என்று

அழகிய ஐம்படையும் ஆரமும் கொண்டு

வழு இல் கொடையான் வயிச்சிரவணன்

தொழுது உவனாய் நின்றான் தாலேலோ தூ மணி வண்ணனே தாலேலோ

#49

ஓத கடலின் ஒளி முத்தின் ஆரமும்

சாதி பவளமும் சந்த சரி வளையும்

மா தக்க என்று வருணன் விடுதந்தான்

சோதி சுடர் முடியாய் தாலேலோ சுந்தர தோளனே தாலேலோ

#50

கான் ஆர் நறும் துழாய் கைசெய்த கண்ணியும்

வான் ஆர் செழும் சோலை கற்பகத்தின் வாசிகையும்

தேன் ஆர் மலர் மேல் திருமங்கை போத்தந்தாள்

கோனே அழேல் அழேல் தாலேலோ குடந்தை கிடந்தானே தாலேலோ

#51

கச்சொடு பொன் சுரிகை காம்பு கனக வளை

உச்சி மணிச்சுட்டி ஒண் தாள் நிரை பொன் பூ

அச்சுதனுக்கு என்று அவனியாள் போத்தந்தாள்

நச்சு முலை உண்டாய் தாலேலோ நாராயணா அழேல் தாலேலோ

#52

மெய் திமிரும் நான பொடியோடு மஞ்சளும்

செய்ய தடம் கண்ணுக்கு அஞ்சனமும் சிந்துரமும்

வெய்ய கலைப்பாகி கொண்டு உவளாய் நின்றாள்

அய்யா அழேல் அழேல் தாலேலோ அரங்கத்து அணையானே தாலேலோ

#53

வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலை உண்ட

அஞ்சன வண்ணனை ஆய்ச்சி தாலாட்டிய

செம் சொல் மறையவர் சேர் புதுவை பட்டன் சொல்

எஞ்சாமை வல்லவர்க்கு இல்லை இடர்-தானே

#54

தன் முகத்து சுட்டி தூங்க தூங்க தவழ்ந்து போய்

பொன் முக கிண்கிணி ஆர்ப்ப புழுதி அளைகின்றான்

என் மகன் கோவிந்தன் கூத்தினை இள மா மதீ

நின் முகம் கண் உள ஆகில் நீ இங்கே நோக்கி போ

#55

என் சிறுக்குட்டன் எனக்கு ஓர் இன்னமுது எம்பிரான்

தன் சிறு கைகளால் காட்டி காட்டி அழைக்கின்றான்

அஞ்சன வண்ணனோடு ஆடல் ஆட உறுதியேல்

மஞ்சில் மறையாதே மா மதீ மகிழ்ந்து ஓடி வா

#56

சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதி பரந்து எங்கும்

எத்தனை செய்யினும் என் மகன் முகம் நேர் ஒவ்வாய்

வித்தகன் வேங்கட வாணன் உன்னை விளிக்கின்ற

கைத்தலம் நோவாமே அம்புலீ கடிது ஓடி வா

#57

சக்கர கையன் தடம் கண்ணால் மலர விழித்து

ஒக்கலை மேல் இருந்து உன்னையே சுட்டி காட்டும் காண்

தக்கது அறிதியேல் சந்திரா சலம் செய்யாதே

மக்கள் பெறாத மலடன் அல்லையேல் வா கண்டாய்

#58

அழகிய வாயில் அமுத ஊறல் தெளிவுறா

மழலை முற்றாத இளம் சொல்லால் உன்னை கூவுகின்றான்

குழகன் சிரீதரன் கூவ கூவ நீ போதியேல்

புழை இல ஆகாதே நின் செவி புகர் மா மதீ

#59

தண்டொடு சக்கரம் சார்ங்கம் ஏந்தும் தட கையன்

கண் துயில்கொள்ள கருதி கொட்டாவி கொள்கின்றான்

உண்ட முலை பால் அறா கண்டாய் உறங்காவிடில்

விண்-தனில் மன்னிய மா மதீ விரைந்து ஓடி வா

#60

பாலகன் என்று பரிபவம் செய்யேல் பண்டு ஒரு நாள்

ஆலின் இலை வளர்ந்த சிறுக்கன் அவன் இவன்

மேல் எழ பாய்ந்து பிடித்துக்கொள்ளும் வெகுளுமேல்

மாலை மதியாதே மா மதீ மகிழ்ந்து ஓடி வா

#61

சிறியன் என்று என் இளம் சிங்கத்தை இகழேல் கண்டாய்

சிறுமையின் வார்த்தையை மாவலியிடை சென்று கேள்

சிறுமை பிழை கொள்ளில் நீயும் உன் தேவைக்கு உரியை காண்

நிறை மதீ நெடுமால் விரைந்து உன்னை கூவுகின்றான்

#62

தாழியில் வெண்ணெய் தடம் கை ஆர விழுங்கிய

பேழை வயிற்று எம்பிரான் கண்டாய் உன்னை கூவுகின்றான்

ஆழி கொண்டு உன்னை எறியும் ஐயுறவு இல்லை காண்

வாழ உறுதியேல் மா மதீ மகிழ்ந்து ஓடி வா

#63

மை தடம் கண்ணி யசோதை-தன் மகனுக்கு இவை

ஒத்தன சொல்லி உரைத்த மாற்றம் ஒளி புத்தூர்

வித்தகன் விட்டுசித்தன் விரித்த தமிழ் இவை

எத்தனையும் சொல்ல வல்லவர்க்கு இடர் இல்லையே

#64

உய்ய உலகு படைத்து உண்ட மணி வயிறா ஊழி-தொறு ஊழி பல ஆலின் இலை-அதன் மேல்

பைய உயோகு துயில்கொண்ட பரம்பரனே பங்கய நீள் நயனத்து அஞ்சன மேனியனே

செய்யவள் நின் அகலம் சேமம் என கருதி செலவு பொலி மகர காது திகழ்ந்து இலக

ஐய எனக்கு ஒருகால் ஆடுக செங்கீரை ஆயர்கள் போர் ஏறே ஆடுக ஆடுகவே

#65

கோளரியின் உருவம்கொண்டு அவுணன் உடலம் குருதி குழம்பி எழ கூர் உகிரால் குடைவாய்

மீள அவன் மகனை மெய்ம்மை கொள கருதி மேலை அமரர் பதி மிக்கு வெகுண்டு வர

காள நன் மேகம்-அவை கல்லொடு கால் பொழிய கருதி வரை குடையா காலிகள் காப்பவனே

ஆள எனக்கு ஒருகால் ஆடுக செங்கீரை ஆயர்கள் போர் ஏறே ஆடுக ஆடுகவே

#66

நம்முடை நாயகனே நான்மறையின் பொருளே நாவியுள் நல் கமல நான்முகனுக்கு ஒருகால்

தம்மனை ஆனவனே தரணி தல முழுதும் தாரகையின் உலகும் தடவி அதன் புறமும்

விம்ம வளர்ந்தவனே வேழமும் ஏழ் விடையும் விரவிய வேலை-தனுள் வென்று வருபவனே

அம்ம எனக்கு ஒருகால் ஆடுக செங்கீரை ஆயர்கள் போர் ஏறே ஆடுக ஆடுகவே

#67

வானவர் தாம் மகிழ வன் சகடம் உருள வஞ்ச முலை பேயின் நஞ்சம்-அது உண்டவனே

கானக வல் விளவின் காய் உதிர கருதி கன்று-அது கொண்டு எறியும் கரு நிற என் கன்றே

தேனுகனும் முரனும் திண் திறல் வெம் நரகன் என்பவர் தாம் மடிய செரு அதிர செல்லும்

ஆனை எனக்கு ஒருகால் ஆடுக செங்கீரை ஆயர்கள் போர் ஏறே ஆடுக ஆடுகவே

#68

மத்து அளவும் தயிரும் வார் குழல் நன் மடவார் வைத்தன நெய் களவால் வாரி விழுங்கி ஒருங்கு

ஒத்த இணை மருதம் உன்னிய வந்தவரை ஊரு கரத்தினொடும் உந்திய வெம் திறலோய்

முத்தின் இள முறுவல் முற்ற வருவதன் முன் முன்ன முகத்து அணி ஆர் மொய் குழல்கள் அலைய

அத்த எனக்கு ஒருகால் ஆடுக செங்கீரை ஆயர்கள் போர் ஏறே ஆடுக ஆடுகவே

#69

காய மலர் நிறவா கரு முகில் போல் உருவா கானக மா மடுவில் காளியன் உச்சியிலே

தூய நடம் பயிலும் சுந்தர என் சிறுவா துங்க மத கரியின் கொம்பு பறித்தவனே

ஆயம் அறிந்து பொருவான் எதிர்வந்த மல்லை அந்தரம் இன்றி அழித்து ஆடிய தாள் இணையாய்

ஆய எனக்கு ஒருகால் ஆடுக செங்கீரை ஆயர்கள் போர் ஏறே ஆடுக ஆடுகவே

#70

துப்பு உடை ஆயர்கள்-தம் சொல் வழுவாது ஒருகால் தூய கரும் குழல் நல் தோகை மயில் அனைய

நப்பினை-தன் திறமா நல் விடை ஏழ் அவிய நல்ல திறல் உடைய நாதனும் ஆனவனே

தப்பின பிள்ளைகளை தன மிகு சோதி புக தனி ஒரு தேர் கடவி தாயொடு கூட்டிய என்

அப்ப எனக்கு ஒருகால் ஆடுக செங்கீரை ஆயர்கள் போர் ஏறே ஆடுக ஆடுகவே

#71

உன்னையும் ஒக்கலையில் கொண்டு தம் இல் மருவி உன்னொடு தங்கள் கருத்து ஆயின செய்துவரும்

கன்னியரும் மகிழ கண்டவர் கண் குளிர கற்றவர் தெற்றிவர பெற்ற எனக்கு அருளி

மன்னு குறுங்குடியாய் வெள்ளறையாய் மதில் சூழ் சோலைமலைக்கு அரசே கண்ணபுரத்து அமுதே

என் அவலம் களைவாய் ஆடுக செங்கீரை ஏழ் உலகும் உடையாய்

ஆடுக ஆடுகவே

#72

பாலொடு நெய் தயிர் ஒண் சாந்தொடு சண்பகமும் பங்கயம் நல்ல

கருப்பூரமும் நாறி வர

கோல நறும் பவள செம் துவர் வாயினிடை கோமள வெள்ளி

முளை போல் சில பல் இலக

நீல நிறத்து அழகார் ஐம்படையின் நடுவே நின் கனி வாய்

அமுதம் இற்று முறிந்து விழ

ஏலும் மறைப்பொருளே ஆடுக செங்கீரை ஏழ் உலகும் உடையாய்

ஆடுக ஆடுகவே

#73

செங்கமல கழலில் சிற்றிதழ் போல் விரலில் சேர் திகழ்

ஆழிகளும் கிண்கிணியும் அரையில்

தங்கிய பொன் வடமும் தாள நன் மாதுளையின் பூவொடு பொன்

மணியும் மோதிரமும் கிறியும்

மங்கல ஐம்படையும் தோள் வளையும் குழையும் மகரமும்

வாளிகளும் சுட்டியும் ஒத்து இலக

எங்கள் குடிக்கு அரசே ஆடுக செங்கீரை ஏழ் உலகும் உடையாய்

ஆடுக ஆடுகவே

#74

அன்னமும் மீன் உருவும் ஆளரியும் குறளும் ஆமையும் ஆனவனே ஆயர்கள் நாயகனே

என் அவலம் களைவாய் ஆடுக செங்கீரை ஏழ் உலகும் உடையாய் ஆடுக ஆடுக என்று

அன்ன நடை மடவாள் அசோதை உகந்த பரிசு ஆன புகழ் புதுவை பட்டன் உரைத்த தமிழ்

இன்னிசை மாலைகள் இ பத்தும் வல்லார் உலகில் எண் திசையும் புகழ் மிக்கு இன்பம்-அது எய்துவரே

#75

மாணிக்க கிண்கிணி ஆர்ப்ப மருங்கின் மேல்

ஆணிப்பொன்னால் செய்த ஆய் பொன் உடை மணி

பேணி பவள வாய் முத்து இலங்க பண்டு

காணி கொண்ட கைகளால் சப்பாணி கரும் குழல் குட்டனே சப்பாணி

#76

பொன் அரைநாணொடு மாணிக்க கிண்கிணி

தன் அரை ஆட தனி சுட்டி தாழ்ந்து ஆட

என் அரை மேல் நின்று இழிந்து உங்கள் ஆயர்-தம்

மன் அரை மேல் கொட்டாய் சப்பாணி மாயவனே கொட்டாய் சப்பாணி

#77

பல் மணி முத்து இன் பவளம் பதித்து அன்ன

என் மணி வண்ணன் இலங்கு பொன் தோட்டின் மேல்

நின் மணி வாய் முத்து இலங்க நின் அம்மை-தன்

அம்மணி மேல் கொட்டாய் சப்பாணி ஆழி அம் கையனே சப்பாணி

#78

தூ நிலா முற்றத்தே போந்து விளையாட

வான் நிலா அம்புலீ சந்திரா வா என்று

நீ நிலா நின் புகழாநின்ற ஆயர்-தம்

கோ நிலாவ கொட்டாய் சப்பாணி குடந்தை கிடந்தானே சப்பாணி

#79

புட்டியில் சேறும் புழுதியும் கொண்டுவந்து

அட்டி அமுக்கி அகம் புக்கு அறியாமே

சட்டி தயிரும் தடாவினில் வெண்ணெயும் உண்

பட்டி கன்றே கொட்டாய் சப்பாணி பற்பநாபா கொட்டாய் சப்பாணி

#80

தாரித்து நூற்றுவர் தந்தை சொல் கொள்ளாது

போர் உய்த்து வந்து புகுந்தவர் மண் ஆள

பாரித்த மன்னர் பட பஞ்சவர்க்கு அன்று

தேர் உய்த்த கைகளால் சப்பாணி தேவகி சிங்கமே சப்பானி

#81

பரந்திட்டு நின்ற படு கடல்-தன்னை

இரந்திட்ட கை மேல் எறி திரை மோத

கரந்திட்டு நின்ற கடலை கலங்க

சரம் தொட்ட கைகளால் சப்பாணி சார்ங்க வில் கையனே
சப்பாணி

#82

குரக்கு இனத்தாலே குரை கடல்-தன்னை

நெருக்கி அணை கட்டி நீள் நீர் இலங்கை

அரக்கர் அவிய அடு கணையாலே

நெருக்கிய கைகளால் சப்பாணி நேமி அம் கையனே சப்பாணி

#83

அளந்து இட்ட தூணை அவன் தட்ட ஆங்கே

வளர்ந்திட்டு வாள் உகிர் சிங்க உருவாய்

உளம் தொட்டு இரணியன் ஒண் மார்வு அகலம்

பிளந்திட்ட கைகளால் சப்பாணி பேய் முலை உண்டானே சப்பாணி

#84

அடைந்திட்டு அமரர்கள் ஆழ் கடல்-தன்னை

மிடைந்திட்டு மந்தரம் மத்தாக நாட்டி

வடம் சுற்றி வாசுகி வன் கயிறு ஆக

கடைந்திட்ட கைகளால் சப்பாணி கார் முகில் வண்ணனே சப்பாணி

#85

ஆட்கொள்ள தோன்றிய ஆயர்-தம் கோவினை

நாள் கமழ் பூம் பொழில் வில்லிபுத்தூர் பட்டன்

வேட்கையால் சொன்ன சப்பாணி ஈரைந்தும்

வேட்கையினால் சொல்லுவார் வினை போமே

#86

தொடர் சங்கிலி கை சலார்பிலார் என்ன தூங்கு பொன் மணி ஒலிப்ப

படு மும்மத புனல் சோர வாரணம் பைய நின்று ஊர்வது போல்

உடன் கூடி கிண்கிணி ஆரவாரிப்ப உடை மணி பறை கறங்க

தடம் தாள் இணை கொண்டு சார்ங்கபாணி தளர் நடை நடவானோ

#87

செக்கரிடை நுனி கொம்பில் தோன்றும் சிறு பிறை முளை போல

நக்க செம் துவர் வாய் திண்ணை மீதே நளிர் வெண் பல் முளை இலக

அக்கு வடம் உடுத்து ஆமை தாலி பூண்ட அனந்தசயனன்

தக்க மா மணி வண்ணன் வாசுதேவன் தளர் நடை நடவானோ

#88

மின்னு கொடியும் ஓர் வெண் திங்களும் சூழ் பரிவேடமுமாய்

பின்னல் துலங்கும் அரசிலையும் பீதக சிற்றாடையொடும்

மின்னில் பொலிந்த ஓர் கார் முகில் போல கழுத்தினில் காறையொடும்

தன்னில் பொலிந்த இருடீகேசன் தளர் நடை நடவானோ

#89

கன்னல் குடம் திறந்தால் ஒத்து ஊறி கணகண சிரித்து உவந்து

முன் வந்து நின்று முத்தம் தரும் என் முகில் வண்ணன் திருமார்வன்

தன்னை பெற்றேற்கு தன் வாய் அமுதம் தந்து என்னை தளிர்ப்பிக்கின்றான்

தன் ஏற்று மாற்றலர் தலைகள் மீதே தளர் நடை நடவானோ

#90

முன் நல் ஓர் வெள்ளி பெரு மலை குட்டன் மொடுமொடு விரைந்து ஓட

பின்னை தொடர்ந்து ஓர் கரு மலை குட்டன் பெயர்ந்து அடியிடுவது போல்

பன்னி உலகம் பரவி ஓவா புகழ் பலதேவன் என்னும்

தன் நம்பி ஓட பின் கூட செல்வான் தளர் நடை நடவானோ

#91

ஒரு காலில் சங்கு ஒரு காலில் சக்கரம் உள்ளடி பொறித்து அமைந்த

இரு காலும் கொண்டு அங்கங்கு எழுதினால் போல் இலச்சினைபட நடந்து

பெருகாநின்ற இன்ப வெள்ளத்தின் மேல் பின்னையும் பெய்துபெய்து

கரு கார் கடல் வண்ணன் காமர் தாதை தளர் நடை நடவானோ

#92

படர் பங்கைய மலர் வாய் நெகிழ பனி படு சிறு துளி போல்

இடம் கொண்ட செ வாய் ஊறிஊறி இற்று இற்று வீழ நின்று

கடும் சே கழுத்தின் மணி குரல் போல் உடை மணி கணகணென

தடம் தாளினை கொண்டு சார்ங்கபாணி தளர் நடை நடவானோ

#93

பக்கம் கரும் சிறு பாறை மீதே அருவிகள் பகர்ந்து அனைய

அக்கு வடம் இழிந்து ஏறி தாழ அணி அல்குல் புடைபெயர

மக்கள் உலகினில் பெய்து அறியா மணி குழவி உருவின்

தக்க மா மணி வண்ணன் வாசுதேவன் தளர் நடை நடவானோ

#94

வெண் புழுதி மேல் பெய்துகொண்டு அளைந்தது ஓர் வேழத்தின் கரும் கன்று போல்

தெண் புழுதி ஆடி திரிவிக்கிரமன் சிறு புகர்பட வியர்த்து

ஒண் போது அலர் கமல சிறு கால் உறைத்து ஒன்றும் நோவாமே

தண் போது கொண்ட தவிசின் மீதே தளர் நடை நடவானோ

#95

திரை நீர் சந்திர மண்டலம் போல செங்கண்மால் கேசவன்-தன்

திரு நீர் முகத்து துலங்கு சுட்டி திகழ்ந்து எங்கும் புடைபெயர

பெரு நீர் திரை எழு கங்கையிலும் பெரியது ஓர் தீர்த்த பலம்

தரு நீர் சிறு சண்ணம் துள்ளம் சோர தளர் நடை நடவானோ

#96

ஆயர் குலத்தினில் வந்து தோன்றிய அஞ்சன வண்ணன்-தன்னை

தாயர் மகிழ ஒன்னார் தளர தளர் நடை நடந்ததனை

வேயர் புகழ் விட்டுசித்தன் சீரால் விரித்தன உரைக்க வல்லார்

மாயன் மணி வண்ணன் தாள் பணியும் மக்களை பெறுவார்களே

#97

பொன் இயல் கிண்கிணி சுட்டி புறம் கட்டி

தன் இயல் ஓசை சலன்சலன் என்றிட

மின் இயல் மேகம் விரைந்து எதிர்வந்தால் போல்

என் இடைக்கு ஒட்டரா அச்சோஅச்சோ எம்பெருமான் வாராய் அச்சோஅச்சோ

#98

செங்கமல பூவில் தேன் உண்ணும் வண்டேபோல்

பங்கிகள் வந்து உன் பவள வாய் மொய்ப்ப

சங்கு வில் வாள் தண்டு சக்கரம் ஏந்திய

அங்கைகளாலே வந்து அச்சோஅச்சோ ஆர தழுவாய் வந்து அச்சோஅச்சோ

#99

பஞ்சவர் தூதனாய் பாரதம் கைசெய்து

நஞ்சு உமிழ் நாகம் கிடந்த நல் பொய்கை புக்கு

அஞ்ச பணத்தின் மேல் பாய்ந்திட்டு அருள்செய்த

அஞ்சன வண்ணனே அச்சோஅச்சோ ஆயர் பெருமானே அச்சோஅச்சோ

#100

நாறிய சாந்தம் நமக்கு இறை நல்கு என்ன

தேறி அவளும் திருவுடம்பில் பூச

ஊறிய கூனினை உள்ளே ஒடுங்க அன்று

ஏற உருவினாய் அச்சோஅச்சோ எம்பெருமான் வாராய்
அச்சோஅச்சோ

#101

கழல் மன்னர் சூழ கதிர் போல் விளங்கி

எழலுற்று மீண்டே இருந்து உன்னை நோக்கும்

சுழலை பெரிது உடை துச்சோதனனை

அழல விழித்தானே அச்சோஅச்சோ ஆழி அங்கையனே
அச்சோஅச்சோ

#102

போர் ஒக்க பண்ணி இ பூமி பொறை தீர்ப்பான்

தேர் ஒக்க ஊர்ந்தாய் செழும் தார் விசயற்காய்

கார் ஒக்கும் மேனி கரும் பெரும் கண்ணனே

ஆர தழுவாய் வந்து அச்சோஅச்சோ ஆயர்கள் போர் ஏறே
அச்சோஅச்சோ

#103

மிக்க பெரும் புகழ் மாவலி வேள்வியில்

தக்கது இது அன்று என்று தானம் விலக்கிய

சுக்கிரன் கண்ணை துரும்பால் கிளறிய

சக்கர கையனே அச்சோஅச்சோ சங்கம் இடத்தானே அச்சோஅச்சோ

#104

என் இது மாயம் என் அப்பன் அறிந்திலன்

முன்னை வண்ணமே கொண்டு அளவாய் என்ன

மன்னு நமுசியை வானில் சுழற்றிய

மின்னு முடியனே அச்சோஅச்சோ வேங்கட வாணனே அச்சோஅச்சோ

#105

கண்ட கடலும் மலையும் உலகு ஏழும்

முண்டத்துக்கு ஆற்றா முகில் வண்ணா ஓ என்று

இண்டை சடைமுடி ஈசன் இரக்கொள்ள

மண்டை நிறைத்தானே அச்சோஅச்சோ மார்வில் மறுவனே அச்சோஅச்சோ

#106

துன்னிய பேர் இருள் சூழ்ந்து உலகை மூட

மன்னிய நான்மறை முற்றும் மறைந்திட

பின் இ உலகினில் பேர் இருள் நீங்க அன்று

அன்னம்-அது ஆனானே அச்சோஅச்சோ அரு மறை தந்தானே அச்சோஅச்சோ

#107

நச்சுவார் முன் நிற்கும் நாராயணன்-தன்னை

அச்சோ வருக என்று ஆய்ச்சி உரைத்தன

மச்சு அணி மாட புதுவை கோன் பட்டன் சொல்

நிச்சலும் பாடுவார் நீள் விசும்பு ஆள்வரே

#108

வட்டு நடுவே வளர்கின்ற மாணிக்க

மொட்டு நுனியில் முளைக்கின்ற முத்தே போல்

சொட்டுச்சொட்டு என்ன துளிக்கத்துளிக்க என்

குட்டன் வந்து என்னை புறம்புல்குவான் கோவிந்தன் என்னை புறம்புல்குவான்

#109

கிண்கிணி கட்டி கிறி கட்டி கையினில்

கங்கணம் இட்டு கழுத்தில் தொடர் கட்டி

தன் கணத்தாலே சதிரா நடந்து வந்து

என் கண்ணன் என்னை புறம்புல்குவான் எம்பிரான் என்னை புறம்புல்குவான்

#110

கத்த கதித்து கிடந்த பெரும் செல்வம்

ஒத்து பொருந்திக்கொண்டு உண்ணாது மண் ஆள்வான்

கொத்து தலைவன் குடி கெட தோன்றிய

அத்தன் வந்து என்னை புறம்புல்குவான் ஆயர்கள் ஏறு என் புறம்புல்குவான்

#111

நாந்தகம் ஏந்திய நம்பி சரண் என்று

தாழ்ந்த தனஞ்சயற்கு ஆகி தரணியில்

வேந்தர்கள் உட்க விசயன் மணி திண் தேர்

ஊர்ந்தவன் என்னை புறம்புல்குவான் உம்பர் கோன் என்னை புறம்புல்குவான்

#112

வெண்கல பத்திரம் கட்டி விளையாடி

கண் பல செய்த கரும் தழை காவின் கீழ்

பண் பல பாடி பல்லாண்டு இசைப்ப பண்டு

மண் பல கொண்டான் புறம்புல்குவான் வாமனன் என்னை புறம்புல்குவான்

#113

சத்திரம் ஏந்தி தனி ஒரு மாணியாய்

உத்தர வேதியில் நின்ற ஒருவனை

கத்திரியர் காண காணி முற்றும் கொண்ட

பத்திரகாரன் புறம்புல்குவான் பார் அளந்தான் என் புறம்புல்குவான்

#114

பொத்த உரலை கவிழ்த்து அதன் மேல் ஏறி

தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும்

மெத்த திருவயிறு ஆர விழுங்கிய

அத்தன் வந்து என்னை புறம்புல்குவான் ஆழியான் என்னை புறம்புல்குவான்

#115

மூத்தவை காண முது மணல் குன்று ஏறி

கூத்து உவந்து ஆடி குழலால் இசை பாடி

வாய்த்த மறையோர் வணங்க இமையவர்

ஏத்த வந்து என்னை புறம்புல்குவான் எம்பிரான் என்னை புறம்புல்குவான்

#116

கற்பக காவு கருதிய காதலிக்கு

இப்பொழுது ஈவன் என்று இந்திரன் காவினில்

நிற்பன செய்து நிலா திகழ் முற்றத்துள்

உய்த்தவன் என்னை புறம்புல்குவான் உம்பர் கோன் என்னை புறம்புல்குவான்

#117

ஆய்ச்சி அன்று ஆழி பிரான் புறம்புல்கிய

வேய் தடம் தோளி சொல் விட்டுசித்தன் மகிழ்ந்து

ஈத்த தமிழ் இவை ஈரைந்தும் வல்லவர்

வாய்த்த நல் மக்களை பெற்று மகிழ்வரே

#118

மெச்சு ஊது சங்கம் இடத்தான் நல் வேய் ஊதி

பொய் சூதில் தோற்ற பொறை உடை மன்னர்க்காய்

பத்து ஊர் பெறாது அன்று பாரதம் கைசெய்த

அ தூதன் அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#119

மலை புரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும்

பலர் குலைய நூற்றுவரும் பட்டு அழிய பார்த்தன்

சிலை வளைய திண் தேர் மேல் முன் நின்ற செம் கண்

அலவலை வந்து அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#120

காயும் நீர் புக்கு கடம்பு ஏறி காளியன்

தீய பணத்தில் சிலம்பு ஆர்க்க பாய்ந்து ஆடி

வேயின் குழல் ஊதி வித்தகனாய் நின்ற

ஆயன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#121

இருட்டில் பிறந்து போய் ஏழை வல் ஆயர்

மருட்டை தவிர்ப்பித்து வன் கஞ்சன் மாள

புரட்டி அந்நாள் எங்கள் பூம் பட்டு கொண்ட

அரட்டன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#122

சேப்பூண்ட சாடு சிதறி திருடி நெய்க்கு

ஆப்பூண்டு நந்தன் மனைவி கடை தாம்பால்

சோப்பூண்டு துள்ளி துடிக்கத்துடிக்க அன்று

ஆப்பூண்டான் அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#123

செப்பு இள மென் முலை தேவகி நங்கைக்கு

சொப்பட தோன்றி தொறுப்பாடியோம் வைத்த

துப்பமும் பாலும் தயிரும் விழுங்கிய

அப்பன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#124

தத்துக்கொண்டாள்-கொலோ தானே பெற்றாள்-கொலோ

சித்தம் அணையாள் அசோதை இளம் சிங்கம்

கொத்து ஆர் கரும் குழல் கோபால கோளரி

அத்தன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#125

கொங்கை வன் கூனி சொல் கொண்டு குவலய

துங்க கரியும் பரியும் இராச்சியமும்

எங்கும் பரதற்கு அருளி வன் கான் அடை

அம் கண்ணன் அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#126

பதக முதலை வாய் பட்ட களிறு

கதறி கைகூப்பி என் கண்ணா கண்ணா என்ன

உதவ புள் ஊர்ந்து அங்கு உறு துயர் தீர்த்த

அதகன் வந்து அப்பூச்சி காட்டுகின்றான் அம்மனே அப்பூச்சி காட்டுகின்றான்

#127

வல்லாள் இலங்கை மலங்க சரம் துரந்த

வில்லாளனை விட்டுசித்தன் விரித்த

சொல் ஆர்ந்த அப்பூச்சி பாடல் இவை பத்தும்

வல்லார் போய் வைகுந்தம் மன்னி இருப்பரே

#128

அரவு அணையாய் ஆயர் ஏறே அம்மம் உண்ண துயிலெழாயே

இரவும் உண்ணாது உறங்கி நீ போய் இன்றும் உச்சி கொண்டதாலோ

வரவும் காணேன் வயிறு அசைந்தாய் வன முலைகள் சோர்ந்து பாய

திரு உடைய வாய் மடுத்து திளைத்து உதைத்து பருகிடாயே

#129

வைத்த நெய்யும் காய்ந்த பாலும் வடி தயிரும் நறு வெண்ணெயும்

இத்தனையும் பெற்று அறியேன் எம்பிரான் நீ பிறந்த பின்னை

எத்தனையும் செய்யப்பெற்றாய் ஏதும் செய்யேன் கதம் படாதே

முத்து அனைய முறுவல் செய்து மூக்கு உறுஞ்சி முலை உணாயே

#130

தம்தம் மக்கள் அழுது சென்றால் தாய்மார் ஆவார் தரிக்ககில்லார்

வந்து நின் மேல் பூசல் செய்ய வாழ வல்ல வாசுதேவா

உந்தையர் உன் திறத்தர் அல்லர் உன்னை நான் ஒன்று உரப்பமாட்டேன்

நந்தகோபன் அணி சிறுவா நான் சுரந்த முலை உணாயே

#131

கஞ்சன்-தன்னால் புணர்க்கப்பட்ட கள்ள சகடு கலக்கு அழிய

பஞ்சி அன்ன மெல் அடியால் பாய்ந்த போது நொந்திடும் என்று

அஞ்சினேன் காண் அமரர் கோவே ஆயர் கூட்டத்து அளவன்றாலோ

கஞ்சனை உன் வஞ்சனையால் வலைப்படுத்தாய் முலை உணாயே

#132

தீய புந்தி கஞ்சன் உன் மேல் சினம் உடையன் சோர்வு பார்த்து

மாயம்-தன்னால் வலைப்படுக்கில் வாழகில்லேன் வாசுதேவா

தாயர் வாய் சொல் கருமம் கண்டாய் சாற்றி சொன்னேன் போகவேண்டா

ஆயர்பாடிக்கு அணி விளக்கே அமர்ந்து வந்து என் முலை உணாயே

#133

மின் அனைய நுண் இடையார் விரி குழல் மேல் நுழைந்த வண்டு

இன் இசைக்கும் வில்லிபுத்தூர் இனிது அமர்ந்தாய் உன்னை கண்டார்

என்ன நோன்பு நோற்றாள்-கொலோ இவனை பெற்ற வயிறு உடையாள்

என்னும் வார்த்தை எய்துவித்த இருடீகேசா முலை உணாயே

#134

பெண்டிர் வாழ்வார் நின் ஒப்பாரை பெறுதும் என்னும் ஆசையாலே

கண்டவர்கள் போக்கு ஒழிந்தார் கண் இணையால் கலக்க நோக்கி

வண்டு உலாம் பூம் குழலினார் உன் வாய் அமுதம் உண்ண வேண்டி

கொண்டு போவான் வந்து நின்றார் கோவிந்தா நீ முலை உணாயே

#135

இரு மலை போல் எதிர்ந்த மல்லர் இருவர் அங்கம் எரிசெய்தாய் உன்

திரு மலிந்து திகழு மார்வு தேக்க வந்து என் அல்குல் ஏறி

ஒரு முலையை வாய்மடுத்து ஒரு முலையை நெருடிக்கொண்டு

இரு முலையும் முறைமுறையாய் ஏங்கிஏங்கி இருந்து உணாயே

#136

அம் கமல போதகத்தில் அணி கொள் முத்தம் சிந்தினால் போல்

செங்கமல முகம் வியர்ப்ப தீமை செய்து இ முற்றத்தூடே

அங்கம் எல்லாம் புழுதியாக அளைய வேண்டா அம்ம விம்ம

அங்கு அமரர்க்கு அமுது அளித்த அமரர் கோவே முலை உணாயே

#137

ஓடஓட கிண்கிணிகள் ஒலிக்கும் ஓசை பாணியாலே

பாடிப்பாடி வருகின்றாயை பற்பநாபன் என்று இருந்தேன்

ஆடிஆடி அசைந்துஅசைந்திட்டு அதனுக்கு ஏற்ற கூத்தை ஆடி

ஓடிஓடி போய்விடாதே உத்தமா நீ முலை உணாயே

#138

வார் அணிந்த கொங்கை ஆய்ச்சி மாதவா உண் என்ற மாற்றம்

நீர் அணிந்த குவளை வாசம் நிகழ நாறும் வில்லிபுத்தூர்

பார் அணிந்த தொல் புகழான் பட்டர்பிரான் பாடல் வல்லார்

சீர் அணிந்த செங்கண்மால் மேல் சென்ற சிந்தை பெறுவார் தாமே

#139

போய்ப்பாடு உடைய நின் தந்தையும் தாழ்த்தான் பொரு திறல் கஞ்சன் கடியன்

காப்பாரும் இல்லை கடல் வண்ணா உன்னை தனியே போய் எங்கும் திரிதி

பேய்ப்பால் முலை உண்ட பித்தனே கேசவநம்பீ உன்னை காதுகுத்த

ஆய் பாலர் பெண்டுகள் எல்லாரும் வந்தார் அடைக்காய் திருத்தி நான் வைத்தேன்

#140

வண்ண பவளம் மருங்கினில் சாத்தி மலர் பாத கிண்கிணி ஆர்ப்ப

நண்ணி தொழும் அவர் சிந்தை பிரியாத நாராயணா இங்கே வாராய்

எண்ணற்கு அரிய பிரானே திரியை எரியாமே காதுக்கு இடுவன்

கண்ணுக்கு நன்றும் அழகும் உடைய கனக கடிப்பும் இவையாம்

#141

வையம் எல்லாம் பெறும் வார் கடல் வாழும் மகர குழை கொண்டு வைத்தேன்

வெய்யவே காதில் திரியை இடுவன் நீ வேண்டியது எல்லாம் தருவன்

உய்ய இ ஆயர் குலத்தினில் தோன்றிய ஒண் சுடர் ஆயர் கொழுந்தே

மையன்மை செய்து இள ஆய்ச்சியர் உள்ளத்து மாதவனே இங்கே வாராய்

#142

வணம் நன்று உடைய வயிர கடிப்பு இட்டு வார் காது தாழ பெருக்கி

குணம் நன்று உடையர் இ கோபால பிள்ளைகள் கோவிந்தா நீ சொல்லு கொள்ளாய்

இணை நன்று அழகிய இக்கடிப்பு இட்டால் இனிய பலா பழம் தந்து

சுணம் நன்று அணி முலை உண்ண தருவன் நான் சோத்தம் பிரான் இங்கே வாராய்

#143

சோத்தம் பிரான் என்று இரந்தாலும் கொள்ளாய் சுரி குழலாரொடு நீ போய்

கோத்து குரவை பிணைந்து இங்கு வந்தால் குணங்கொண்டு இடுவனோ நம்பீ

பேர்த்தும் பெரியன அப்பம் தருவன் பிரானே திரியிட ஒட்டில்

வேய் தடம் தோளார் விரும்பும் கரும் குழல் விட்டுவே நீ இங்கே வாராய்

#144

விண் எல்லாம் கேட்க அழுதிட்டாய் உன் வாயில் விரும்பி அதனை நான் நோக்கி

மண் எல்லாம் கண்டு என் மனத்துள்ளே அஞ்சி மதுசூதனே என்று இருந்தேன்

புண் ஏதும் இல்லை உன் காது மறியும் பொறுத்து இறைப்போது இரு நம்பீ

கண்ணா என் கார் முகிலே கடல் வண்ணா காவலனே முலை உணாயே

#145

முலை ஏதும் வேண்டேன் என்று ஓடி நின் காதில் கடிப்பை பறித்து எறிந்திட்டு

மலையை எடுத்து மகிழ்ந்து கல்மாரி காத்து பசுநிரை மேய்த்தாய்

சிலை ஒன்று இறுத்தாய் திரிவிக்கிரமா திரு ஆயர்பாடி பிரானே

தலை நிலா-போதே உன் காதை பெருக்காதே விட்டிட்டேன்

குற்றமே அன்றே

#146

என் குற்றமே என்று சொல்லவும் வேண்டா காண் என்னை நான்

மண் உண்டேனாக

அன்புற்று நோக்கி அடித்தும் பிடித்தும் அனைவர்க்கும்

காட்டிற்றிலையே

வன் புற்று அரவின் பகை கொடி வாமன நம்பீ உன் காதுகள் தூரும்

துன்புற்றன எல்லாம் தீர்ப்பாய் பிரானே திரியிட்டு சொல்லுகேன்

மெய்யே

#147

மெய் என்று சொல்லுவார் சொல்லை கருதி தொடுப்புண்டாய்

வெண்ணெயை என்று

கையை பிடித்து கரை உரலோடு என்னை காணவே

கட்டிற்றிலையே

செய்தன சொல்லி சிரித்து அங்கு இருக்கில் சிரீதரா உன் காது

தூரும்

கையில் திரியை இடுகிடாய் இ நின்ற காரிகையார் சிரியாமே

#148

காரிகையார்க்கும் உனக்கும் இழுக்குற்று என் காதுகள் வீங்கி எறியில்

தாரியாதாகில் தலை நொந்திடும் என்று விட்டிட்டேன் குற்றமே அன்றே

சேரியில் பிள்ளைகள் எல்லாரும் காதுபெருக்கி திரியவும் காண்டி

ஏர் விடைசெற்று இளம் கன்று எறிந்திட்ட இருடீகேசா என்தன் கண்ணே

#149

கண்ணை குளிர கலந்து எங்கும் நோக்கி கடி கமழ் பூம் குழலார்கள்

எண்ணத்துள் என்றும் இருந்து தித்திக்கும் பெருமானே எங்கள் அமுதே

உண்ண கனிகள் தருவன் கடிப்பு ஒன்றும் நோவாமே காதுக்கு இடுவன்

பண்ணை கிழிய சகடம் உதைத்திட்ட பற்பநாபா இங்கே வாராய்

#150

வா என்று சொல்லி என் கையை பிடித்து வலியவே காதில் கடிப்பை

நோவ திரிக்கில் உனக்கு இங்கு இழுக்குற்று என் காதுகள் நொந்திடும் கில்லேன்

நாவற்பழம் கொண்டு வைத்தேன் இவை காணாய் நம்பீ முன் வஞ்ச மகளை

சாவ பால் உண்டு சகடு இற பாய்ந்திட்ட தாமோதரா இங்கே வாராய்

#151

வார் காது தாழ பெருக்கி அமைத்து மகர குழை இட வேண்டி

சீரால் அசோதை திருமாலை சொன்ன சொல் சிந்தையுள் நின்று திகழ

பார் ஆர் தொல் புகழான் புதுவை மன்னன் பன்னிரு நாமத்தால் சொன்ன

ஆராத அந்தாதி பன்னிரண்டும் வல்லார் அச்சுதனுக்கு அடியாரே

#152

வெண்ணெய் அளைந்த குணுங்கும் விளையாடு புழுதியும் கொண்டு

திண்ணெனெ இ இரா உன்னை தேய்த்து கிடக்க நான் ஒட்டேன்

எண்ணெய் புளிப்பழம் கொண்டு இங்கு எத்தனை போதும் இருந்தேன்

நண்ணல் அரிய பிரானே நாரணா நீராட வாராய்

#153

கன்றுகள் ஓட செவியில் கட்டெறும்பு பிடித்து இட்டால்

தென்றி கெடுமாகில் வெண்ணெய் திரட்டி விழுங்குமா காண்பன்

நின்ற மராமரம் சாய்த்தாய் நீ பிறந்த திருவோணம்

இன்று நீ நீராட வேண்டும் எம்பிரான் ஓடாதே வாராய்

#154

பேய்ச்சி முலை உண்ண கண்டு பின்னையும் நில்லாது என் நெஞ்சம்

ஆய்ச்சியர் எல்லாம் கூடி அழைக்கவும் நான் முலை தந்தேன்

காய்ச்சின நீரொடு நெல்லி கடாரத்தில் பூரித்து வைத்தேன்

வாய்த்த புகழ் மணி வண்ணா மஞ்சனமாட நீ வாராய்

#155

கஞ்சன் புணர்ப்பினில் வந்த கடிய சகடம் உதைத்து

வஞ்சக பேய் மகள் துஞ்ச வாய் முலை வைத்த பிரானே

மஞ்சளும் செங்கழுநீரின் வாசிகையும் நாறு சாந்தும்

அஞ்சனமும் கொண்டு வைத்தேன் அழகனே நீராட வாராய்

#156

அப்பம் கலந்த சிற்றுண்டி அக்காரம் பாலில் கலந்து

சொப்பட நான் சுட்டு வைத்தேன் தின்னல் உறுதியேல் நம்பீ

செப்பு இள மென் முலையார்கள் சிறுபுறம் பேசி சிரிப்பர்

சொப்பட நீராட வேண்டும் சோத்தம் பிரான் இங்கே வாராய்

#157

எண்ணெய் குடத்தை உருட்டி இளம்பிள்ளை கிள்ளி எழுப்பி

கண்ணை புரட்டி விழித்து கழகண்டு செய்யும் பிரானே

உண்ண கனிகள் தருவன் ஒலி கடல் ஓத நீர் போலே

வண்ணம் அழகிய நம்பீ மஞ்சனமாட நீ வாராய்

#158

கறந்த நல் பாலும் தயிரும் கடைந்து உறி மேல் வைத்த வெண்ணெய்

பிறந்ததுவே முதலாக பெற்றறியேன் எம்பிரானே

சிறந்த நற்றாய் அலர் தூற்றும் என்பதனால் பிறர் முன்னே

மறந்தும் உரையாடமாட்டேன் மஞ்சனமாட நீ வாராய்

#159

கன்றினை வால் ஓலை கட்டி கனிகள் உதிர எறிந்து

பின்தொடர்ந்து ஓடி ஓர் பாம்பை பிடித்துக்கொண்டு ஆட்டினாய் போலும்

நின் திறத்தேன் அல்லேன் நம்பீ நீ பிறந்த திரு நல் நாள்

நன்று நீ நீராட வேண்டும் நாரணா ஓடாதே வாராய்

#160

பூணி தொழுவினில் புக்கு புழுதி அளைந்த பொன் மேனி

காண பெரிதும் உகப்பன் ஆகிலும் கண்டார் பழிப்பர்

நாண் இத்தனையும் இலாதாய் நப்பின்னை காணில் சிரிக்கும்

மாணிக்கமே என் மணியே மஞ்சனமாட நீ வாராய்

#161

கார் மலி மேனி நிறத்து கண்ணபிரானை உகந்து

வார் மலி கொங்கை யசோதை மஞ்சனமாட்டிய ஆற்றை

பார் மலி தொல் புதுவை கோன் பட்டர்பிரான் சொன்ன பாடல்

சீர் மலி செந்தமிழ் வல்லார் தீவினை யாதும் இலரே

#162

பின்னை மணாளனை பேரில் கிடந்தானை

முன்னை அமரர் முதல் தனி வித்தினை

என்னையும் எங்கள் குடி முழுது ஆட்கொண்ட

மன்னனை வந்து குழல்வாராய் அக்காக்காய் மாதவன்-தன் குழல்வாராய் அக்காக்காய்

#163

பேயின் முலை உண்ட பிள்ளை இவன் முன்னம்

மாய சகடும் மருதும் இறுத்தவன்

காயாமலர் வண்ணன் கண்ணன் கரும் குழல்

தூய்தாக வந்து குழல்வாராய் அக்காக்காய் தூ மணி வண்ணன் குழல்வாராய் அக்காக்காய்

#164

திண்ண கலத்தில் திரை உறி மேல் வைத்த

வெண்ணெய் விழுங்கி விரைய உறங்கிடும்

அண்ணல் அமரர் பெருமானை ஆயர்-தம்

கண்ணனை வந்து குழல்வாராய் அக்காக்காய் கார் முகில் வண்ணன் குழல்வாராய் அக்காக்காய்

#165

பள்ளத்தில் மேயும் பறவை உரு கொண்டு

கள்ள அசுரன் வருவானை தான் கண்டு

புள் இது என்று பொதுக்கோ வாய் கீண்டிட்ட

பிள்ளையை வந்து குழல்வாராய் அக்காக்காய் பேய் முலை உண்டான் குழல்வாராய் அக்காக்காய்

#166

கற்று இனம் மேய்த்து கனிக்கு ஒரு கன்றினை

பற்றி எறிந்த பரமன் திருமுடி

உற்றன பேசி நீ ஓடி திரியாதே

அற்றைக்கும் வந்து குழல்வாராய் அக்காக்காய் ஆழியான்-தன் குழல்வாராய் அக்காக்காய்

#167

கிழக்கில் குடி மன்னர் கேடிலாதாரை

அழிப்பான் நினைந்திட்டு அ ஆழி-அதனால்

விழிக்கும் அளவிலே வேரறுத்தானை

குழற்கு அணியாக குழல்வாராய் அக்காக்காய் கோவிந்தன்-தன் குழல்வாராய் அக்காக்காய்

#168

பிண்ட திரளையும் பேய்க்கு இட்ட நீர் சோறும்

உண்டற்கு வேண்டி நீ ஓடி திரியாதே

அண்டத்து அமரர் பெருமான் அழகு அமர்

வண்டு ஒத்து இருண்ட குழல்வாராய் அக்காக்காய் மாயவன்-தன்
குழல்வாராய் அக்காக்காய்

#169

உந்தி எழுந்த உருவ மலர்-தன்னில்

சந்த சதுமுகன்-தன்னை படைத்தவன்

கொந்த குழலை குறந்து புளி அட்டி

தந்தத்தின் சீப்பால் குழல்வாராய் அக்காக்காய் தாமோதரன்-தன்
குழல்வாராய் அக்காக்காய்

#170

மன்னன்-தன் தேவிமார் கண்டு மகிழ்வு எய்த

முன் இ உலகினை முற்றும் அளந்தவன்

பொன்னின் முடியினை பூ அணை மேல் வைத்து

பின்னே இருந்து குழல்வாராய் அக்காக்காய் பேர் ஆயிரத்தான்
குழல்வாராய் அக்காக்காய்

#171

கண்டார் பழியாமே அக்காக்காய் கார் வண்ணன்

வண்டு ஆர் குழல்வார வா என்ற ஆய்ச்சி சொல்

விண் தோய் மதிள் வில்லிபுத்தூர் கோன் பட்டன் சொல்

கொண்டாடி பாட குறுகா வினை-தாமே

#172

வேலி கோல் வெட்டி விளையாடு வில் ஏற்றி

தாலி கொழுந்தை தடம் கழுத்தில் பூண்டு

பீலி தழையை பிணைத்து பிறகிட்டு

காலி பின் போவாற்கு ஓர் கோல் கொண்டுவா கடல் நிற வண்ணற்கு ஓர் கோல் கொண்டுவா

#173

கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும்

எங்கும் திரிந்து விளையாடும் என் மகன்

சங்கம் பிடிக்கும் தட கைக்கு தக்க நல்

அங்கம் உடையது ஓர் கோல் கொண்டுவா அரக்கு வழித்தது ஓர் கோல் கொண்டுவா

#174

கறுத்திட்டு எதிர்நின்ற கஞ்சனை கொன்றான்

பொறுத்திட்டு எதிர்வந்த புள்ளின் வாய் கீண்டான்

நெறித்த குழல்களை நீங்க முன் ஓடி

சிறு கன்று மேய்ப்பாற்கு ஓர் கோல் கொண்டுவா தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டுவா

#175

ஒன்றே உரைப்பான் ஒரு சொல்லே சொல்லுவன்

துன்று முடியான் துரியோதனன் பக்கல்

சென்று அங்கு பாரதம் கையெறிந்தானுக்கு

கன்றுகள் மேய்ப்பது ஓர் கோல் கொண்டுவா கடல் நிற வண்ணர்க்கு ஓர் கோல் கொண்டுவா

#176

சீர் ஒன்று தூதாய் துரியோதனன் பக்கல்

ஊர் ஒன்று வேண்டி பெறாத உரோடத்தால்

பார் ஒன்றி பாரதம் கைசெய்து பார்த்தற்கு

தேர் ஒன்றை ஊர்ந்தாற்கு ஓர் கோல் கொண்டுவா தேவபிரானுக்கு ஓர் கோல் கொண்டுவா

#177

ஆலத்து இலையான் அரவின் அணை மேலான்

நீல கடலுள் நெடும் காலம் கண்வளர்ந்தான்

பால பிராயத்தே பார்த்தர்க்கு அருள்செய்த

கோல பிரானுக்கு ஓர் கோல் கொண்டுவா குடந்தை கிடந்தார்க்கு ஓர் கோல் கொண்டுவா

#178

பொன் திகழ் சித்திரகூட பொருப்பினில்

உற்ற வடிவில் ஒரு கண்ணும் கொண்ட அ

கற்றை குழலன் கடியன் விரைந்து உன்னை

மற்றை கண் கொள்ளாமே கோல் கொண்டுவா மணி வண்ண நம்பிக்கு ஓர் கோல் கொண்டுவா

#179

மின் இடை சீதை பொருட்டா இலங்கையர்

மன்னன் மணி முடி பத்தும் உடன் வீழ

தன் நிகர் ஒன்று இல்லா சிலை கால் வளைத்து இட்ட

மின்னு முடியற்கு ஓர் கோல் கொண்டுவா வேலை அடைத்தாற்கு ஓர் கோல் கொண்டுவா

#180

தென் இலங்கை மன்னன் சிரம் தோள் துணிசெய்து

மின் இலங்கு பூண் விபீடண நம்பிக்கு

என் இலங்கு நாமத்து அளவும் அரசு என்ற

மின் அலங்காரற்கு ஓர் கோல் கொண்டுவா வேங்கட வாணர்க்கு ஓர் கோல் கொண்டுவா

#181

அக்காக்காய் நம்பிக்கு கோல் கொண்டுவா என்று

மிக்காள் உரைத்த சொல் வில்லிபுத்தூர் பட்டன்

ஒக்க உரைத்த தமிழ் பத்தும் வல்லவர்

மக்களை பெற்று மகிழ்வர் இ வையத்தே

#182

ஆன் நிரை மேய்க்க நீ போதி அரு மருந்து ஆவது அறியாய்

கானகம் எல்லாம் திரிந்து உன் கரிய திருமேனி வாட

பானையில் பாலை பருகி பற்றாதார் எல்லாம் சிரிப்ப

தேனில் இனிய பிரானே செண்பகப்பூ சூட்ட வாராய்

#183

கரு உடை மேகங்கள் கண்டால் உன்னை கண்டால் ஒக்கும் கண்கள்

உரு உடையாய் உலகு ஏழும் உண்டாக வந்து பிறந்தாய்

திரு உடையாள் மணவாளா திருவரங்கத்தே கிடந்தாய்

மருவி மணம் கமழ்கின்ற மல்லிகைப்பூ சூட்ட வாராய்

#184

மச்சொடு மாளிகை ஏறி மாதர்கள்-தம் இடம் புக்கு

கச்சொடு பட்டை கிழித்து காம்பு துகில் அவை கீறி

நிச்சலும் தீமைகள் செய்வாய் நீள் திருவேங்கடத்து எந்தாய்

பச்சை தமனகத்தோடு பாதிரிப்பூ சூட்ட வாராய்

#185

தெருவின்-கண் நின்று இள ஆய்ச்சிமார்களை தீமைசெய்யாதே

மருவும் தமனகமும் சீர் மாலை மணம் கமழ்கின்ற

புருவம் கரும் குழல் நெற்றி பொலிந்த முகில் கன்று போலே

உருவம் அழகிய நம்பீ உகந்து இவை சூட்ட நீ வாராய்

#186

புள்ளினை வாய் பிளந்திட்டாய் பொரு கரியின் கொம்பு ஒசித்தாய்

கள்ள அரக்கியை மூக்கொடு காவலனை தலை கொண்டாய்

அள்ளி நீ வெண்ணெய் விழுங்க அஞ்சாது அடியேன் அடித்தேன்

தெள்ளிய நீரில் எழுந்த செங்கழுநீர் சூட்ட வாராய்

#187

எருதுகளோடு பொருதி ஏதும் உலோபாய் காண் நம்பீ

கருதிய தீமைகள் செய்து கஞ்சனை கால்கொடு பாய்ந்தாய்

தெருவின்-கண் தீமைகள் செய்து சிக்கென மல்லர்களோடு

பொருது வருகின்ற பொன்னே புன்னைப்பூ சூட்ட வாராய்

#188

குடங்கள் எடுத்து ஏறவிட்டு கூத்தாட வல்ல எம் கோவே

மடம் கொள் மதி முகத்தாரை மால்செய்ய வல்ல என் மைந்தா

இடந்திட்டு இரணியன் நெஞ்சை இரு பிளவு ஆக முன் கீண்டாய்

குடந்தை கிடந்த எம் கோவே குருக்கத்திப்பூ சூட்ட வாராய்

#189

சீமாலிகன்-அவனோடு தோழமை கொள்ளவும் வல்லாய்

சாமாறு அவனை நீ எண்ணி சக்கரத்தால் தலை கொண்டாய்

ஆமாறு அறியும் பிரானே அணி அரங்கத்தே கிடந்தாய்

ஏமாற்றம் என்னை தவிர்த்தாய் இருவாட்சிப்பூ சூட்ட வாராய்

#190

அண்டத்து அமரர்கள் சூழ அத்தாணியுள் அங்கு இருந்தாய்

தொண்டர்கள் நெஞ்சில் உறைவாய் தூ மலராள் மணவாளா

உண்டிட்டு உலகினை ஏழும் ஓர் ஆலிலையில் துயில்கொண்டாய்

கண்டு நான் உன்னை உகக்க கருமுகைப்பூ சூட்ட வாராய்

#191

செண்பக மல்லிகையோடு செங்கழுநீர் இருவாட்சி

எண் பகர் பூவும் கொணர்ந்தேன் இன்று இவை சூட்ட வா என்று

மண் பகர் கொண்டானை ஆய்ச்சி மகிழ்ந்து உரை செய்த இ மாலை

பண் பகர் வில்லிபுத்தூர் கோன் பட்டர்பிரான் சொன்ன பத்தே

#192

இந்திரனோடு பிரமன் ஈசன் இமையவர் எல்லாம்

மந்திர மா மலர் கொண்டு மறைந்து உவராய் வந்து நின்றார்

சந்திரன் மாளிகை சேரும் சதிரர்கள் வெள்ளறை நின்றாய்

அந்தியம் போது இது ஆகும் அழகனே காப்பிட வாராய்

#193

கன்றுகள் இல்லம் புகுந்து கதறுகின்ற பசு எல்லாம்

நின்று ஒழிந்தேன் உன்னை கூவி நேசமேல் ஒன்றும் இலாதாய்

மன்றில் நில்லேல் அந்தி போது மதில் திருவெள்ளறை நின்றாய்

நன்று கண்டாய் என்தன் சொல்லு நான் உன்னை காப்பிட வாராய்

#194

செப்பு ஓது மென் முலையார்கள் சிறுசோறும் இல்லும் சிதைத்திட்டு

அப்போது நான் உரப்ப போய் அடிசிலும் உண்டிலை ஆள்வாய்

மு போதும் வானவர் ஏத்தும் முனிவர்கள் வெள்ளறை நின்றாய்

இப்போது நான் ஒன்றும் செய்யேன் எம்பிரான் காப்பிட வாராய்

#195

கண்ணில் மணல் கொடு தூவி காலினால் பாய்ந்தனை என்றுஎன்று

எண் அரும் பிள்ளைகள் வந்திட்டு இவரால் முறைப்படுகின்றார்

கண்ணனே வெள்ளறை நின்றாய் கண்டாரோடே தீமை செய்வாய்

வண்ணமே வேலை-அது ஒப்பாய் வள்ளலே காப்பிட வாராய்

#196

பல்லாயிரவர் இ ஊரில் பிள்ளைகள் தீமைகள் செய்வார்

எல்லாம் உன் மேல் அன்றி போகாது எம்பிரான் நீ இங்கே வாராய்

நல்லார்கள் வெள்ளறை நின்றாய் ஞான சுடரே உன் மேனி

சொல் ஆர வாழ்த்தி நின்று ஏத்தி சொப்பட காப்பிட வாராய்

#197

கஞ்சன் கறுக்கொண்டு நின் மேல் கரு நிற செம் மயிர் பேயை

வஞ்சிப்பதற்கு விடுத்தான் என்பது ஓர் வார்த்தையும் உண்டு

மஞ்சு தவழ் மணி மாட மதில் திருவெள்ளறை நின்றாய்

அஞ்சுவன் நீ அங்கு நிற்க அழகனே காப்பிட வாராய்

#198

கள்ள சகடும் மருதும் கலக்கு அழிய உதைசெய்த

பிள்ளை அரசே நீ பேயை பிடித்து முலையுண்ட பின்னை

உள்ளவாறு ஒன்றும் அறியேன் ஒளி உடை வெள்ளறை நின்றாய்

பள்ளிகொள் போது இது ஆகும் பரமனே காப்பிட வாராய்

#199

இன்பம்-அதனை உயர்த்தாய் இமையவர்க்கு என்றும் அரியாய்

கும்ப களிறு அட்ட கோவே கொடும் கஞ்சன் நெஞ்சினில் கூற்றே

செம்பொன் மதில் வெள்ளறையாய் செல்வத்தினால் வளர் பிள்ளாய்

கம்ப கபாலி காண் அங்கு கடிது ஓடி காப்பிட வாராய்

#200

இருக்கொடு நீர் சங்கில் கொண்டிட்டு எழில் மறையோர் வந்து நின்றார்

தருக்கேல் நம்பி சந்தி நின்று தாய் சொல்லும் கொள்ளாய் சில நாள்

திருக்காப்பு நான் உன்னை சாத்த தேசு உடை வெள்ளறை நின்றாய்

உரு காட்டும் அந்தி விளக்கு இன்று ஒளி கொள்ள ஏற்றுகேன் வாராய்

#201

போது அமர் செல்வ கொழுந்து புணர் திருவெள்ளறையானை

மாதர்க்கு உயர்ந்த அசோதை மகன்-தன்னை காப்பிட்ட மாற்றம்

வேத பயன் கொள்ள வல்ல விட்டுசித்தன் சொன்ன மாலை

பாத பயன் கொள்ள வல்ல பத்தர் உள்ளார் வினை போமே

#202

வெண்ணெய் விழுங்கி வெறும் கலத்தை வெற்பிடை இட்டு அதன் ஓசை கேட்கும்

கண்ணபிரான் கற்ற கல்வி-தன்னை காக்ககில்லோம் உன் மகனை காவாய்

புண்ணில் புளி பெய்தால் ஒக்கும் தீமை புரை புரையால் இவை செய்ய வல்ல

அண்ணல் கண்ணான் ஓர் மகனை பெற்ற அசோதை நங்காய் உன் மகனை கூவாய்

#203

வருக வருக வருக இங்கே வாமன நம்பீ வருக இங்கே

கரிய குழல் செய்ய வாய் முகத்து எம் காகுத்த நம்பீ வருக இங்கே

அரியன் இவன் எனக்கு இன்று நங்காய் அஞ்சன வண்ணா அசல் அகத்தார்

பரிபவம் பேச தரிக்ககில்லேன் பாவியேனுக்கு இங்கே போதராயே

#204

திரு உடை பிள்ளைதான் தீயவாறு தேக்கம் ஒன்றும் இலன் தேசு உடையன்

உருக வைத்த குடத்தொடு வெண்ணெய் உறிஞ்சி உடைத்திட்டு போந்து நின்றான்

அருகிருந்தார் தம்மை அநியாயம் செய்வதுதான் வழக்கோ அசோதாய்

வருக என்று உன் மகன்-தன்னை கூவாய் வாழ ஒட்டான்
மதுசூதனனே

#205

கொண்டல் வண்ணா இங்கே போதராயே கோயிற்பிள்ளாய்
இங்கே போதராயே

தெண் திரை சூழ் திருப்பேர் கிடந்த திருநாரணா இங்கே
போதராயே

உண்டு வந்தேன் அம்மம் என்று சொல்லி ஓடி அகம் புக ஆய்ச்சி-
தானும்

கண்டு எதிரே சென்று எடுத்துக்கொள்ள கண்ணபிரான் கற்ற
கல்வி தானே

#206

பாலை கறந்து அடுப்பு ஏற வைத்து பல் வளையாள் என் மகள்
இருப்ப

மேலை அகத்தே நெருப்பு வேண்டி சென்று இறைப்பொழுது
அங்கே பேசி நின்றேன்

சாளக்கிராமம் உடைய நம்பி சாய்த்து பருகிட்டு போந்து நின்றான்

ஆலை கரும்பின் மொழி அனைய அசோதை நங்காய் உன்
மகனை கூவாய்

#207

போதர் கண்டாய் இங்கே போதர் கண்டாய் போதரேன் என்னாதே போதர் கண்டாய்

ஏதேனும் சொல்லி அசல் அகத்தார் ஏதேனும் பேச நான் கேட்கமாட்டேன்

கோதுகலம் உடை குட்டனே ஒ குன்று எடுத்தாய் குடம் ஆடு கூத்தா

வேத பொருளே என் வேங்கடவா வித்தகனே இங்கே போதராயே

#208

செந்நெல் அரிசி சிறுபருப்பு செய்த அக்காரம் நறு நெய் பாலால்

பன்னிரண்டு திருவோணம் அட்டேன் பண்டும் இ பிள்ளை பரிசு அறிவன்

இன்னம் உகப்பன் நான் என்று சொல்லி எல்லாம் விழுங்கிட்டு போந்து நின்றான்

உன் மகன்-தன்னை யசோதை நங்காய் கூவி கொள்ளாய் இவையும் சிலவே

#209

கேசவனே இங்கே போதராயே கில்லேன் என்னாது இங்கே போதராயே

நேசமிலாதார் அகத்து இருந்து நீ விளையாடாதே போதராயே

தூசனம் சொல்லும் தொழுத்தைமாரும் தொண்டரும் நின்ற இடத்தில் நின்று

தாய் சொல்லு கொள்வது தன்மம் கண்டாய் தாமோதரா இங்கே போதராயே

#210

கன்னல் இலட்டுவத்தோடு சீடை கார் எள்ளின் உண்டை கலத்தில் இட்டு

என் அகம் என்று நான் வைத்து போந்தேன் இவன் புக்கு அவற்றை பெறுத்தி போந்தான்

பின்னும் அகம் புக்கு உறியை நோக்கி பிறங்கு ஒளி வெண்ணெயும் சோதிக்கின்றான்

உன் மகன்-தன்னை யசோதை நங்காய் கூவி கொள்ளாய் இவையும் சிலவே

#211

சொல்லில் அரசி படுதி நங்காய் சூழல் உடையன் உன் பிள்ளைதானே

இல்லம் புகுந்து என் மகளை கூவி கையில் வளையை கழற்றிக்கொண்டு

கொல்லையில் நின்றும் கொணர்ந்து விற்ற அங்கு ஒருத்திக்கு அவளை கொடுத்து

நல்லன நாவற்பழங்கள் கொண்டு நான் அல்லேன் என்று சிரிக்கின்றானே

#212

வண்டு களித்து இரைக்கும் பொழில் சூழ் வரு புனல் காவிரி தென் அரங்கன்

பண்டு அவன் செய்த கிரீடை எல்லாம் பட்டர்பிரான் விட்டுசித்தன் பாடல்

கொண்டு இவை பாடி குனிக்க வல்லார் கோவிந்தன்-தன் அடியார்கள் ஆகி

எண் திசைக்கும் விளக்கு ஆகி நிற்பார் இணையடி என் தலை மேலனவே

#213

ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை

சேற்றால் எறிந்து வளை துகில் கைக்கொண்டு

காற்றின் கடியனாய் ஓடி அகம் புக்கு

மாற்றமும் தாரானால் இன்று முற்றும் வளை திறம் பேசானால் இன்று முற்றும்

#214

குண்டலம் தாழ குழல் தாழ நாண் தாழ

எண் திசையோரும் இறைஞ்சி தொழுது ஏத்த

வண்டு அமர் பூம் குழலார் துகில் கைக்கொண்டு

விண் தோய் மரத்தானால் இன்று முற்றும் வேண்டவும் தாரானால் இன்று முற்றும்

#215

தடம் படு தாமரை பொய்கை கலக்கி

விடம் படு நாகத்தை வால் பற்றி ஈர்த்து

படம் படு பைம் தலை மேல் எழ பாய்ந்திட்டு

உடம்பை அசைத்தானால் இன்று முற்றும் உச்சியில் நின்றானால் இன்று முற்றும்

#216

தேனுகன் ஆவி செகுத்து பனம் கனி

தான் எறிந்திட்ட தடம் பெரும் தோளினால்

வானவர் கோன் விட வந்த மழை தடுத்து

ஆன் நிரை காத்தானால் இன்று முற்றும் அவை உய்ய கொண்டானால் இன்று முற்றும்

#217

ஆய்ச்சியர் சேரி அளை தயிர் பால் உண்டு

பேர்த்து அவர் கண்டு பிடிக்க பிடியுண்டு

வேய் தடம் தோளினார் வெண்ணெய் கொள் மாட்டாது அங்கு

ஆப்புண்டு இருந்தானால் இன்று முற்றும் அடியுண்டு அழுதானால் இன்று முற்றும்

#218

தள்ளி தளிர் நடையிட்டு இளம் பிள்ளையாய்

உள்ளத்தின் உள்ளே அவளை உற நோக்கி

கள்ளத்தினால் வந்த பேய்ச்சி முலை உயிர்

துள்ள சுவைத்தானால் இன்று முற்றும் துவக்கு அற உண்டானால் இன்று முற்றும்

#219

மாவலி வேள்வியில் மாண் உருவாய் சென்று

மூ அடி தா என்று இரந்த இ மண்ணினை

ஓர் அடியிட்டு இரண்டாம் அடி-தன்னிலே

தாவடி இட்டானால் இன்று முற்றும் தரணி அளந்தானால் இன்று முற்றும்

#220

தாழை தண் ஆம்பல் தடம் பெரும் பொய்கைவாய்

வாழும் முதலை வலைப்பட்டு வாதிப்பு உண்

வேழம் துயர் கெட விண்ணோர் பெருமானாய்

ஆழி பணி கொண்டானால் இன்று முற்றும் அதற்கு அருள்செய்தானால் இன்று முற்றும்

#221

வானத்து எழுந்த மழை முகில் போல் எங்கும்

கானத்து மேய்ந்து களித்து விளையாடி

ஏனத்து உருவாய் இடந்த இ மண்ணினை

தானத்தே வைத்தானால் இன்று முற்றும் தரணி இடந்தானால் இன்று முற்றும்

#222

அம் கமல கண்ணன்-தன்னை அசோதைக்கு

மங்கை நல்லார்கள் தாம் வந்து முறைப்பட்ட

அங்கு அவர் சொல்லை புதுவை கோன் பட்டன் சொல்

இங்கு இவை வல்லவர்க்கு ஏதம் ஒன்று இல்லையே

#223

தன் நேர் ஆயிரம் பிள்ளைகளோடு தளர் நடையிட்டு வருவான்

பொன் ஏய் நெய்யொடு பால் அமுது உண்டு ஒரு புள்ளுவன்
பொய்யே தவழும்

மின் நேர் நுண் இடை வஞ்ச மகள் கொங்கை துஞ்ச வாய்வைத்த
பிரானே

அன்னே உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன்
அம்மம் தரவே

#224

பொன் போல் மஞ்சனமாட்டி அமுது ஊட்டி போனேன் வருமளவு
இப்பால்

வன் பார சகடம் இற சாடி வடக்கில் அகம் புக்கு இருந்து

மின் போல் நுண் இடையாள் ஒரு கன்னியை வேற்று உருவம்
செய்து வைத்த

அன்பா உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன்
அம்மம் தரவே

#225

கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கி குட தயிர் சாய்த்து பருகி

பொய் மாய மருது ஆன அசுரரை பொன்றுவித்து இன்று நீ வந்தாய்

இ மாயம் வல்ல பிள்ளை நம்பீ உன்னை என் மகனே என்பர் நின்றார்

அம்மா உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன் அம்மம் தரவே

#226

மை ஆர் கண்ட மட ஆய்ச்சியர் மக்களை மையன்மை செய்து அவர் பின் போய்

கொய் ஆர் பூம் துகில் பற்றி தனி நின்று குற்றம் பலபல செய்தாய்

பொய்யா உன்னை புறம் பல பேசுவ புத்தகத்துக்கு உள கேட்டேன்

ஐயா உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன் அம்மம் தரவே

#227

மு போதும் கடைந்து ஈண்டிய வெண்ணெயினோடு தயிரும் விழுங்கி

கப்பால் ஆயர்கள் காவில் கொணர்ந்த கலத்தொடு சாய்த்து பருகி

மெய்ப்பால் உண்டு அழு பிள்ளைகள் போல நீ விம்மிவிம்மி அழுகின்ற

அப்பா உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன் அம்மம் தரவே

#228

கரும்பு ஆர் நீள் வயல் காய் கதிர் செந்நெலை கற்று ஆநிரை மண்டி தின்ன

விரும்பா கன்று ஒன்று கொண்டு விளங்கனி வீழ எறிந்த பிரானே

சுரும்பு ஆர் மென் குழல் கன்னி ஒருத்திக்கு சூழ் வலை வைத்து திரியும்

அரம்பா உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன் அம்மம் தரவே

#229

மருட்டார் மென் குழல் கொண்டு பொழில் புக்கு வாய்வைத்து அ ஆயர்-தம் பாடி

சுருட்டு ஆர் மென் குழல் கன்னியர் வந்து உன்னை சுற்றும் தொழ நின்ற சோதி

பொருள் தாயம் இலேன் எம்பெருமான் உன்னை பெற்ற குற்றம் அல்லால் மற்று இங்கு

அரட்டா உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன் அம்மம் தரவே

#230

வாளாவாகிலும் காணகில்லார் பிறர் மக்களை மையன்மை செய்து

தோளால் இட்டு அவரோடு திளைத்து நீ சொல்லப்படாதன செய்தாய்

கேளார் ஆயர் குலத்தவர் இ பழி கெட்டேன் வாழ்வு இல்லை நந்தன்

காளாய் உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன் அம்மம் தரவே

#231

தாய்மார் மோர் விற்க போவர் தமப்பன்மார் கற்று ஆநிரை பின்பு போவர்

நீ ஆய்ப்பாடி இளம் கன்னிமார்களை நேர்படவே கொண்டு போதி

காய்வார்க்கு என்றும் உகப்பனவே செய்து கண்டார் கழற திரியும்

ஆயா உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன் அம்மம் தரவே

#232

தொத்தார் பூம் குழல் கன்னி ஒருத்தியை சோலை தடம் கொண்டு புக்கு

முத்து ஆர் கொங்கை புணர்ந்து இரா நாழிகை மூ ஏழு சென்ற பின் வந்தாய்

ஒத்தார்க்கு ஒத்தன பேசுவர் உன்னை உரப்பவே நான் ஒன்றும் மாட்டேன்

அத்தா உன்னை அறிந்துகொண்டேன் உனக்கு அஞ்சுவன் அம்மம் தரவே

#233

கார் ஆர் மேனி நிறத்து எம்பிரானை கடி கமழ் பூம் குழல் ஆய்ச்சி

ஆரா இன் அமுது உண்ண தருவன் நான் அம்மம் தாரேன் என்ற மாற்றம்

பாரார் தொல் புகழான் புதுவை மன்னன் பட்டர்பிரான் சொன்ன பாடல்

ஏரார் இன்னிசை மாலை வல்லார் இருடீகேசன் அடியாரே

#234

அஞ்சன வண்ணனை ஆயர் குல கொழுந்தினை

மஞ்சனமாட்டி மனைகள்-தோறும் திரியாமே

கஞ்சனை காய்ந்த கழல் அடி நோவ கன்றின் பின்

என் செய பிள்ளையை போக்கினேன் எல்லே பாவமே

#235

பற்று மஞ்சள் பூசி பாவைமாரொடு பாடியில்

சிற்றில் சிதைத்து எங்கும் தீமை செய்து திரியாமே

கற்று தூளி உடை வேடர் கானிடை கன்றின் பின்

எற்றுக்கு என் பிள்ளையை போக்கினேன் எல்லே பாவமே

#236

நன் மணி மேகலை நங்கைமாரொடு நாள்-தொறும்

பொன் மணி மேனி புழுதி ஆடி திரியாமே

கல் மணி நின்று அதிர் கான் அதரிடை கன்றின் பின்

என் மணி வண்ணனை போக்கினேன் எல்லே பாவமே

#237

வண்ண கரும் குழல் மாதர் வந்து அலர் தூற்றிட

பண்ணி பல செய்து இ பாடி எங்கும் திரியாமே

கண்ணுக்கு இனியானை கான் அதரிடை கன்றின் பின்

எண்ணற்கு அரியானை போக்கினேன் எல்லே பாவமே

#238

அவ்வவ் இடம் புக்கு அ ஆயர் பெண்டிர்க்கு அணுக்கனாய்

கொவ்வை கனி வாய் கொடுத்து கூழைமை செய்யாமே

எவ்வும் சிலை உடை வேடர் கானிடை கன்றின் பின்

தெய்வ தலைவனை போக்கினேன் எல்லே பாவமே

#239

மிடறு மெழுமெழுத்து ஓட வெண்ணெய் விழுங்கி போய்

படிறு பல செய்து இ பாடி எங்கும் திரியாமே

கடிறு பல திரி கான் அதரிடை கன்றின் பின்

இடற என் பிள்ளையை போக்கினேன் எல்லே பாவமே

#240

வள்ளி நுடங்கு இடை மாதர் வந்து அலர் தூற்றிட

துள்ளி விளையாடி தோழரோடு திரியாமே

கள்ளி உணங்கு வெம் கான் அதரிடை கன்றின் பின்

புள்ளின் தலைவனை போக்கினேன் எல்லே பாவமே

#241

பன்னிரு திங்கள் வயிற்றில் கொண்ட அ பாங்கினால்

என் இளம் கொங்கை அமுதம் ஊட்டி எடுத்து யான்

பொன் அடி நோவ புலரியே கானில் கன்றின் பின்

என் இளம் சிங்கத்தை போக்கினேன் எல்லே பாவமே

#242

குடையும் செருப்பும் கொடாதே தாமோதரனை நான்

உடையும் கடியன ஊன்று வெம் பரற்கள் உடை

கடிய வெம் கானிடை காலடி நோவ கன்றின் பின்

கொடியேன் என் பிள்ளையை போக்கினேன் எல்லே பாவமே

#243

என்றும் எனக்கு இனியானை என் மணி வண்ணனை

கன்றின் பின் போக்கினேன் என்று அசோதை கழறிய

பொன் திகழ் மாட புதுவையர் கோன் பட்டன் சொல்

இன் தமிழ் மாலைகள் வல்லவர்க்கு இடர் இல்லையே

#244

சீலை குதம்பை ஒரு காது ஒரு காது செம் நிற மேல் தோன்றிப்பூ

கோல பணை கச்சும் கூறை உடையும் குளிர் முத்தின் கோடாலமும்

காலி பின்னே வருகின்ற கடல் வண்ணன் வேடத்தை வந்து காணீர்

ஞாலத்து புத்திரனை பெற்றார் நங்கைமீர் நானோ மற்று ஆரும் இல்லை

#245

கன்னி நன் மா மதில் சூழ்தரு பூம் பொழில் காவிரி தென் அரங்கம்

மன்னிய சீர் மதுசூதனா கேசவா பாவியேன் வாழ்வு உகந்து

உன்னை இளம் கன்று மேய்க்க சிறுகாலே ஊட்டி ஒருப்படுத்தேன்

என்னின் மனம் வலியாள் ஒரு பெண் இல்லை என் குட்டனே முத்தம் தா

#246

காடுகள் ஊடுபோய் கன்றுகள் மேய்த்து மறியோடி கார் கோடல்பூ

சூடி வருகின்ற தாமோதரா கற்று தூளி காண் உன் உடம்பு

பேடை மயில் சாயல் பின்னை மணாளா நீராட்டு அமைத்து வைத்தேன்

ஆடி அமுதுசெய் அப்பனும் உண்டிலன் உன்னோடு உடனே உண்பான்

#247

கடி ஆர் பொழில் அணி வேங்கடவா கரும் போர் ஏறே நீ உகக்கும்

குடையும் செருப்பும் குழலும் தருவிக்க கொள்ளாதே போனாய் மாலே

கடிய வெம் கானிடை கன்றின் பின் போன சிறுக்குட்ட செங்கமல

அடியும் வெதும்பி உன் கண்கள் சிவந்தாய் அசைந்திட்டாய் நீ எம்பிரான்

#248

பற்றார் நடுங்க முன் பாஞ்சசன்னியத்தை வாய்வைத்த போர் ஏறே என்

சிற்றாயர் சிங்கமே சீதை மணாளா சிறுக்குட்ட செங்கண்மாலே

சிற்றாடையும் சிறுப்பத்திரமும் இவை கட்டிலின் மேல் வைத்து போய்

கற்றாயரோடு நீ கன்றுகள் மேய்த்து கலந்து உடன் வந்தாய் போலும்

#249

அம் சுடர் ஆழி உன் கையகத்து ஏந்தும் அழகா நீ பொய்கை புக்கு

நஞ்சு உமிழ் நாகத்தினோடு பிணங்கவும் நான் உயிர் வாழ்ந்திருந்தேன்

என் செய்ய என்னை வயிறு மறுக்கினாய் ஏதும் ஓர் அச்சம் இல்லை

கஞ்சன் மனத்துக்கு உகப்பனவே செய்தாய் காயாம்பூ வண்ணம் கொண்டாய்

#250

பன்றியும் ஆமையும் மீனமும் ஆகிய பாற்கடல் வண்ணா உன் மேல்

கன்றின் உருவாகி மேய்புலத்தே வந்த கள்ள அசுரன்-தன்னை

சென்று பிடித்து சிறு கைகளாலே விளங்காய் எறிந்தாய் போலும்

என்றும் என் பிள்ளைக்கு தீமைகள் செய்வார்கள் அங்கனம் ஆவார்களே

#251

கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா கோவலர் இந்திரற்கு

காட்டிய சோறும் கறியும் தயிரும் கலந்து உடன் உண்டாய் போலும்

ஊட்ட முதல் இலேன் உன்தன்னை கொண்டு ஒருபோதும் எனக்கு அரிது

வாட்டம் இலா புகழ் வாசுதேவா உன்னை அஞ்சுவன் இன்று-தொட்டும்

#252

திண் ஆர் வெண் சங்கு உடையாய் திருநாள் திருவோணம் இன்று ஏழு நாள் முன்

பண் நேர் மொழியாரை கூவி முளை அட்டி பல்லாண்டு கூறுவித்தேன்

கண்ணாலம் செய்ய கறியும் கலத்து அரிசியும் ஆக்கி வைத்தேன்

கண்ணா நீ நாளை-தொட்டு கன்றின் பின் போகேல் கோலம் செய்து இங்கு இரு

#253

புற்று அரவு அல்குல் அசோதை நல் ஆய்ச்சி தன் புத்திரன் கோவிந்தனை

கற்று இனம் மேய்த்து வர கண்டு உகந்து அவள் கற்பித்த மாற்றம் எல்லாம்

செற்றம் இலாதவர் வாழ்தரு தென் புதுவை விட்டுசித்தன் சொல்

கற்று இவை பாட வல்லார் கடல் வண்ணன் கழல் இணை காண்பார்களே

#254

தழைகளும் தொங்கலும் ததும்பி எங்கும் தண்ணுமை எக்கம் மத்தளி தாழ் பீலி

குழல்களும் கீதமும் ஆகி எங்கும் கோவிந்தன் வருகின்ற கூட்டம் கண்டு

மழை-கொலோ வருகின்றது என்று சொல்லி மங்கைமார் சாலக வாசல் பற்றி

நுழைவனர் நிற்பனர் ஆகி எங்கும் உள்ளம் விட்டு ஊண் மறந்து ஒழிந்தனரே

#255

வல்லி நுண் இதழ் அன்ன ஆடை கொண்டு வசை அற திருவரை விரித்து உடுத்து

பல்லி நுண் பற்றாக உடைவாள் சாத்தி பணை கச்சு உந்தி பல தழை நடுவே

முல்லை நல் நறு மலர் வேங்கை மலர் அணிந்து பல் ஆயர் குழாம் நடுவே

எல்லி அம் போதாக பிள்ளை வரும் எதிர்நின்று அங்கு இன வளை இழவேன்-மினே

#256

சுரிகையும் தெறி வில்லும் செண்டு கோலும் மேலாடையும் தோழன்மார் கொண்டு ஓட

ஒரு கையால் ஒருவன்-தன் தோளை ஊன்றி ஆநிரை இனம் மீள குறித்த சங்கம்

வருகையில் வாடிய பிள்ளை கண்ணன் மஞ்சளும் மேனியும் வடிவும் கண்டாள்

அருகே நின்றாள் என் பெண் நோக்கி கண்டாள் அது கண்டு இ ஊர் ஒன்று புணர்க்கின்றதே

#257

குன்று எடுத்து ஆநிரை காத்த பிரான் கோவலனாய் குழல் ஊதிஊதி

கன்றுகள் மேய்த்து தன் தோழரோடு கலந்து உடன் வருவானை தெருவில் கண்டு

என்றும் இவனை ஒப்பாரை நங்காய் கண்டறியேன் ஏடி வந்து காணாய்

ஒன்றும் நில்லா வளை கழன்று துகில் ஏந்து இள முலையும் என் வசம் அலவே

#258

சுற்றி நின்று ஆயர் தழைகள் இட சுருள் பங்கி நேத்திரத்தால் அணிந்து

பற்றி நின்று ஆயர் கடைத்தலையே பாடவும் ஆட கண்டேன் அன்றி பின்

மற்று ஒருவர்க்கு என்னை பேசல் ஒட்டேன் மாலிருஞ்சோலை எம் மாயற்கு அல்லால்

கொற்றவனுக்கு இவள் ஆம் என்று எண்ணி கொடு-மின்கள் கொடீராகில் கோழம்பமே

#259

சிந்துரம் இலங்க தன் திருநெற்றி மேல் திருத்திய கோறம்பும் திருக்குழலும்

அந்தரம் முழவ தண் தழை காவின் கீழ் வரும் ஆயரோடு உடன் வளை கோல் வீச

அந்தம் ஒன்று இல்லாத ஆய பிள்ளை அறிந்தறிந்து இ வீதி போதுமாகில்

பந்து கொண்டான் என்று வளைத்துவைத்து பவள வாய் முறுவலும் காண்போம் தோழீ

#260

சால பல் நிரை பின்னே தழை காவின் கீழ் தன் திருமேனி நின்று ஒளி திகழ

நீல நல் நறும் குஞ்சி நேத்திரத்தால் அணிந்து பல் ஆயர் குழாம் நடுவே

கோல செந்தாமரை கண் மிளிர குழல் ஊதி இசை பாடி குனித்து ஆயரோடு

ஆலித்து வருகின்ற ஆய பிள்ளை அழகு கண்டு என் மகள் அயர்க்கின்றதே

#261

சிந்துர பொடி கொண்டு சென்னி அப்பி திருநாமம் இட்டு அங்கு ஓர் இலையம்-தன்னால்

அந்தரம் இன்றி தன் நெறி பங்கியை அழகிய நேத்திரத்தால் அணிந்து

இந்திரன் போல் வரும் ஆய பிள்ளை எதிர்நின்று அங்கு இன வளை இழவேல் என்ன

சந்தியில் நின்று கண்டீர் நங்கை-தன் துகிலொடு சரி வளை கழல்கின்றதே

#262

வலம் காதின் மேல் தோன்றிப்பூ அணிந்து மல்லிகை வன மாலை மௌவல் மாலை

சிலிங்காரத்தால் குழல் தாழ விட்டு தீம் குழல் வாய்மடுத்து ஊதிஊதி

அலங்காரத்தால் வரும் ஆய பிள்ளை அழகு கண்டு என் மகள் ஆசைப்பட்டு

விலங்கி நில்லாது எதிர்நின்று கண்டீர் வெள் வளை கழன்று மெய் மெலிகின்றதே

#263

விண்ணின் மீது அமரர்கள் விரும்பி தொழ மிறைத்து ஆயர்பாடியில் வீதியூடே

கண்ணன் காலி பின்னே எழுந்தருள கண்டு இள ஆய் கன்னிமார் காமுற்ற

வண்ணம் வண்டு அமர் பொழில் புதுவையர் கோன் விட்டுசித்தன் சொன்ன மாலை பத்தும்

பண் இன்பம் வர பாடும் பத்தர் உள்ளார் பரமான வைகுந்தம் நண்ணுவரே

#264

அட்டு குவி சோற்று பருப்பதமும் தயிர் வாவியும் நெய் அளறும் அடங்க

பொட்ட துற்றி மாரி பகை புணர்த்த பொரு மா கடல் வண்ணன் பொறுத்த மலை

வட்ட தடம் கண் மட மான் கன்றினை வலைவாய் பற்றிக்கொண்டு குறமகளிர்

கொட்டை தலை பால் கொடுத்து வளர்க்கும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#265

வழு ஒன்றும் இலா செய்கை வானவர் கோன் வலிப்பட்டு முனிந்து விடுக்கப்பட்ட

மழை வந்து எழு நாள் பெய்து மா தடுப்ப மதுசூதன் எடுத்து மறித்த மலை

இழவு தரியாதது ஓர் ஈற்று பிடி இளம் சீயம் தொடர்ந்து முடுகுதலும்

குழவியிடை கால் இட்டு எதிர்ந்து பொரும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#266

அம்மை தடம் கண் மட ஆய்ச்சியரும் ஆன் ஆயரும் ஆநிரையும் அலறி

எம்மை சரண் ஏன்றுகொள் என்று இரப்ப இலங்கு ஆழி கை எந்தை எடுத்த மலை

தம்மை சரண் என்ற தம் பாவையரை புனம் மேய்கின்ற மான் இனம் காண்-மின் என்று

கொம்மை புய குன்றர் சிலை குனிக்கும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#267

கடு வாய் சின வெம் கண் களிற்றினுக்கு கவளம் எடுத்து கொடுப்பான் அவன் போல்

அடிவாய் உற கையிட்டு எழ பறித்திட்டு அமரர் பெருமான் கொண்டு நின்ற மலை

கடல்வாய் சென்று மேகம் கவிழ்ந்து இறங்கி கதுவாய்ப்பட நீர் முகந்து ஏறி எங்கும்

குடவாய் பட நின்று மழை பொழியும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#268

வானத்தில் உள்ளீர் வலியீர் உள்ளீரேல் அறையோ வந்து வாங்கு-மின் என்பவன் போல்

ஏனத்து உரு ஆகிய ஈசன் எந்தை இடவன் எழ வாங்கி எடுத்த மலை

கான களி யானை தன் கொம்பு இழந்து கதுவாய் மதம் சோர தன் கை எடுத்து

கூனல் பிறை வேண்டி அண்ணாந்து நிற்கும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#269

செப்பாடு உடைய திருமால் அவன்-தன் செந்தாமரை கைவிரல் ஐந்தினையும்

கப்பாக மடுத்து மணி நெடும் தோள் காம்பாக கொடுத்து கவித்த மலை

எப்பாடும் பரந்து இழி தெள் அருவி இலங்கு மணி முத்து வடம் பிறழ

குப்பாயம் என நின்று காட்சிதரும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#270

படங்கள் பலவும் உடை பாம்பு அரையன் படர் பூமியை தாங்கி கிடப்பவன் போல்

தடம் கை விரல் ஐந்தும் மலர வைத்து தாமோதரன் தாங்கு தட வரைதான்

அடங்க சென்று இலங்கையை ஈடழித்த அனுமன் புகழ் பாடி தம் குட்டன்களை

குடம் கை கொண்டு மந்திகள் கண்வளர்த்தும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#271

சல மா முகில் பல் கண போர்க்களத்து சரமாரி பொழிந்து எங்கும் பூசலிட்டு

நலிவான் உற கேடகம் கோப்பவன் போல் நாராயணன் முன் முகம் காத்த மலை

இலை வேய் குரம்பை தவ மா முனிவர் இருந்தார் நடுவே சென்று அணார் சொறிய

கொலை வாய் சின வேங்கைகள் நின்று உறங்கும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#272

வன் பேய் முலை உண்டது ஓர் வாய் உடையன் வன் தூண் என நின்றது ஓர் வன் பரத்தை

தன் பேரிட்டுக்கொண்டு தரணி-தன்னில் தாமோதரன் தாங்கு தட வரைதான்

முன்பே வழி காட்ட முசு கணங்கள் முதுகில் பெய்து தம்முடை குட்டன்களை

கொம்பு ஏற்றி இருந்து குதி பயிற்றும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#273

கொடி ஏறு செந்தாமரை கைவிரல்கள் கோலமும் அழிந்தில வாடிற்றில

வடிவு ஏறு திருவுகிர் நொந்துமில மணி வண்ணன் மலையும் ஓர் சம்பிரதம்

முடி ஏறிய மா முகில் பல் கணங்கள் முன் நெற்றி நரைத்தன போல எங்கும்

குடியேறி இருந்து மழை பொழியும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடையே

#274

அரவில் பள்ளிகொண்டு அரவம் துரந்திட்டு அரவ பகை ஊர்தி அவனுடைய

குரவில் கொடி முல்லைகள் நின்று உறங்கும் கோவர்த்தனம் என்னும் கொற்ற குடை மேல்

திருவில் பொலி மறைவாணர் புத்தூர் திகழ் பட்டர்பிரான் சொன்ன மாலை பத்தும்

பரவு மனம் நன்கு உடை பத்தர் உள்ளார் பரமான வைகுந்தம் நண்ணுவரே

#275

நாவலம் பெரிய தீவினில் வாழும் நங்கைமீர்காள் இது ஓர் அற்புதம் கேளீர்

தூ வலம்புரி உடைய திருமால் தூய வாயில் குழல் ஓசை வழியே

கோவலர் சிறுமியர் இளம் கொங்கை குதுகலிப்ப உடல் உள் அவிழ்ந்து எங்கும்

காவலும் கடந்து கயிறு மாலை ஆகி வந்து கவிழ்ந்து நின்றனரே

#276

இட அணரை இட தோளொடு சாய்த்து இரு கை கூட புருவம் நெரிந்து ஏற

குட வயிறுபட வாய் கடைகூட கோவிந்தன் குழல் கொடு ஊதின-போது

மட மயில்களொடு மான் பிணை போலே மங்கைமார்கள் மலர் கூந்தல் அவிழ

உடை நெகிழ ஓர் கையால் துகில் பற்றி ஒல்கி ஓடு அரி கண் ஓட நின்றனரே

#277

வான் இளவரசு வைகுந்த குட்டன் வாசுதேவன் மதுரை மன்னன் நந்த

கோன் இளவரசு கோவலர் குட்டன் கோவிந்தன் குழல் கொடு ஊதின-போது

வான் இளம்படியர் வந்துவந்து ஈண்டி மனமுருகி மலர் கண்கள் பனிப்ப

தேன் அளவு செறி கூந்தல் அவிழ சென்னி வேர்ப்ப செவி சேர்த்து நின்றனரே

#278

தேனுகன் பிலம்பன் காளியன் என்னும் தீப்ப பூடுகள் அடங்க உழக்கி

கானகம் படி உலாவிஉலாவி கரும் சிறுக்கன் குழல் ஊதின-போது

மேனகையொடு திலோத்தமை அரம்பை உருப்பசியர் அவர்
வெள்கி மயங்கி

வானகம் படியில் வாய் திறப்பு இன்றி ஆடல் பாடல் அவை
மாறினர் தாமே

#279

முன் நரசிங்கம்-அது ஆகி அவுணன் முக்கியத்தை முடிப்பான் மூ
உலகில்

மன்னர் அஞ்சும் மதுசூதனன் வாயில் குழலின் ஓசை செவியை
பற்றி வாங்க

நன் நரம்பு உடைய தும்புருவோடு நாரதனும் தம்தம் வீணை
மறந்து

கின்னர மிதுனங்களும் தம்தம் கின்னரம் தொடுகிலோம்
என்றனரே

#280

செம் பெரும் தடம் கண்ணன் திரள் தோளன் தேவகி சிறுவன்
தேவர்கள் சிங்கம்

நம் பரமன் இ நாள் குழல் ஊத கேட்டவர்கள் இடருற்றன கேளீர்

அம்பரம் திரியும் காந்தப்பர் எல்லாம் அமுத கீத வலையால்
சுருக்குண்டு

நம் பரம் அன்று என்று நாணி மயங்கி நைந்து சோர்ந்து கைம்மறித்து நின்றனரே

#281

புவியுள் நான் கண்டது ஓர் அற்புதம் கேளீர் பூணி மேய்க்கும் இளம் கோவலர் கூட்டத்து

அவையுள் நாகத்து அணையான் குழல் ஊத அமரலோகத்து அளவும் சென்று இசைப்ப

அவியுணா மறந்து வானவர் எல்லாம் ஆயர்பாடி நிறைய புகுந்து ஈண்டி

செவியுள் நாவின் சுவை கொண்டு மகிழ்ந்து கோவிந்தனை தொடர்ந்து என்றும் விடாரே

#282

சிறு விரல்கள் தடவி பரிமாற செம் கண் கோட செய்ய வாய் கொப்பளிக்க

குறு வெயர் புருவம் கூடலிப்ப கோவிந்தன் குழல் கொடு ஊதின-போது

பறவையின் கணங்கள் கூடு துறந்து வந்து சூழ்ந்து படு காடு கிடப்ப

கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டு கவிழ்ந்து இறங்கி செவி ஆட்டகில்லாவே

#283

திரண்டு எழு தழை மழை முகில் வண்ணன் செங்கமல மலர் சூழ் வண்டு இனம் போலே

சுருண்டு இருண்ட குழல் தாழ்ந்த முகத்தான் ஊதுகின்ற குழல் ஓசை வழியே

மருண்டு மான் கணங்கள் மேய்கை மறந்து மேய்ந்த புல்லும் கடைவாய் வழி சோர

இரண்டு பாடும் துலங்கா புடைபெயரா எழுது சித்திரங்கள் போல நின்றனவே

#284

கரும் கண் தோகை மயில் பீலி அணிந்து கட்டி நன்கு உடுத்த பீதக ஆடை

அரும் கல உருவின் ஆயர் பெருமான் அவன் ஒருவன் குழல் ஊதின-போது

மரங்கள் நின்று மது தாரைகள் பாயும் மலர்கள் வீழும் வளர் கொம்புகள் தாழும்

இரங்கும் கூம்பும் திருமால் நின்றநின்ற பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே

#285

குழல் இருண்டு சுருண்டு ஏறிய குஞ்சி கோவிந்தனுடைய கோமள வாயில்

குழல் முழைஞ்சுகளின் ஊடு குமிழ்த்து கொழித்து இழிந்த அமுத புனல்-தன்னை

குழல் முழவம் விளம்பும் புதுவை கோன் விட்டுசித்தன் விரித்த தமிழ் வல்லார்

குழலை வென்ற குளிர் வாயினர் ஆகி சாது கோட்டியுள் கொள்ளப்படுவாரே

#286

ஐய புழுதி உடம்பு அளைந்து இவள் பேச்சும் அலந்தலையாய்

செய்ய நூலின் சிற்றாடை செப்பன் உடுக்கவும் வல்லள் அல்லள்

கையினில் சிறு தூதையோடு இவள் முற்றில் பிரிந்துமிலள்

பை அரவு அணை பள்ளியானோடு கைவைத்து இவள் வருமே

#287

வாயில் பல்லும் எழுந்தில மயிரும் முடி கூடிற்றில

சாய்வு இலாத குறும் தலை சில பிள்ளைகளோடு இணங்கி

தீ இணக்கு இணங்கு ஆடி வந்து இவள் தன் அன்ன செம்மை சொல்லி

மாயன் மா மணி வண்ணன் மேல் இவள் மாலுறுகின்றாளே

#288

பொங்கு வெண் மணல் கொண்டு சிற்றிலும் முற்றத்து இழைக்கலுறில்

சங்கு சக்கரம் தண்டு வாள் வில்லும் அல்லது இழைக்கலுறாள்

கொங்கை இன்னம் குவிந்து எழுந்தில கோவிந்தனோடு இவளை

சங்கை ஆகி என் உள்ளம் நாள்-தொறும் தட்டுளுப்பாகின்றதே

#289

ஏழை பேதை ஓர் பாலகன் வந்து என் பெண்மகளை எள்கி

தோழிமார் பலர் கொண்டுபோய் செய்த சூழ்ச்சியை யார்க்கு உரைக்கேன்

ஆழியான் என்னும் ஆழ மோழையில் பாய்ச்சி அகப்படுத்தி

மூழை உப்பு அறியாது என்னும் மூதுரையும் இலளே

#290

நாடும் ஊரும் அறியவே போய் நல்ல துழாய் அலங்கல்

சூடி நாரணன் போம் இடம் எல்லாம் சோதித்து உழிதருகின்றாள்

கேடு வேண்டுகின்றார் பலர் உளர் கேசவனோடு இவளை

பாடி காவல் இடு-மின் என்றுஎன்று பார் தடுமாறினதே

#291

பட்டம் கட்டி பொன் தோடு பெய்து இவள் பாடகமும் சிலம்பும்

இட்டமாக வளர்த்து எடுத்தேனுக்கு என்னோடு இருக்கலுறாள்

பொட்ட போய் புறப்பட்டு நின்று இவள் பூவை பூவண்ணா என்னும்

வட்ட வார் குழல் மங்கைமீர் இவள் மாலுறுகின்றாளே

#292

பேசவும் தரியாத பெண்மையின் பேதையேன் பேதை இவள்

கூசம் இன்றி நின்றார்கள் தம் எதிர் கோல் கழிந்தான் மூழையாய்

கேசவா என்றும் கேடிலீ என்றும் கிஞ்சுக வாய் மொழியாள்

வாச வார் குழல் மங்கைமீர் இவள் மாலுறுகின்றாளே

#293

காறை பூணும் கண்ணாடி காணும் தன் கையில் வளை குலுக்கும்

கூறை உடுக்கும் அயர்க்கும் தன் கொவ்வை செ வாய் திருத்தும்

தேறித்தேறி நின்று ஆயிரம் பேர் தேவன் திறம் பிதற்றும்

மாறு இல் மா மணி வண்ணன் மேல் இவள் மாலுறுகின்றாளே

#294

கைத்தலத்து உள்ள மாடு அழிய கண்ணாலங்கள் செய்து இவளை

வைத்துவைத்துக்கொண்டு என்ன வாணிபம் நம்மை வடுப்படுத்தும்

செய் தலை எழு நாற்று போல் அவன் செய்வன செய்துகொள்ள

மை தட முகில் வண்ணன் பக்கல் வளரவிடு-மின்களே

#295

பெரு பெருத்த கண்ணாலங்கள் செய்து பேணி நம் இல்லத்துள்ளே

இருத்துவான் எண்ணி நாம் இருக்க இவளும் ஒன்று எண்ணுகின்றாள்

மருத்துவ பதம் நீங்கினாள் என்னும் வார்த்தை படுவதன் முன்

ஒருப்படுத்து இடு-மின் இவளை உலகளந்தான்-இடைக்கே

#296

ஞாலம் முற்றும் உண்டு ஆலிலை துயில் நாராயணனுக்கு இவள்

மாலதாகி மகிழ்ந்தனள் என்று தாய் உரை செய்ததனை

கோலம் ஆர் பொழில் சூழ் புதுவையர் கோன் விட்டுசித்தன் சொன்ன

மாலை பத்தும் வல்லவர்கட்கு இல்லை வரு துயரே

#297

நல்லது ஓர் தாமரை பொய்கை நாள்மலர் மேல் பனி சோர

அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு அழகு அழிந்தால் ஒத்ததாலோ

இல்லம் வெறியோடிற்றாலோ என் மகளை எங்கும் காணேன்

மல்லரை அட்டவன் பின் போய் மதுரை புறம் புக்காள்-கொலோ

#298

ஒன்றும் அறிவு ஒன்று இல்லாத உருவறை கோபாலர் தங்கள்

கன்று கால் மாறுமா போலே கன்னி இருந்தாளை கொண்டு

நன்றும் கிறி செய்து போனான் நாராயணன் செய்த தீமை

என்றும் எமர்கள் குடிக்கு ஓர் ஏச்சு-கொல் ஆயிடும்-கொலோ

#299

குமரி மணம் செய்துகொண்டு கோலம் செய்து இல்லத்து இருத்தி

தமரும் பிறரும் அறிய தாமோதரற்கு என்று சாற்றி

அமரர் பதி உடை தேவி அரசாணியை வழிபட்டு

துமிலம் எழ பறை கொட்டி தோரணம் நாட்டிடும்-கொலோ

#300

ஒரு மகள்-தன்னை உடையேன் உலகம் நிறைந்த புகழால்

திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான் கொண்டுபோனான்

பெரு மகளாய் குடி வாழ்ந்து பெரும் பிள்ளை பெற்ற அசோதை

மருமகளை கண்டு உகந்து மணாட்டு புறம் செய்யும்-கொலோ

#301

தம் மாமன் நந்தகோபாலன் தழீஇ கொண்டு என் மகள்-தன்னை

செம்மாந்திரே என்று சொல்லி செழும் கயல் கண்ணும் செ வாயும்

கொம்மை முலையும் இடையும் கொழும் பணை தோள்களும் கண்டிட்டு

இ மகளை பெற்ற தாயர் இனி தரியார் என்னும்-கொலோ

#302

வேடர் மற குலம் போலே வேண்டிற்று செய்து என் மகளை

கூடிய கூட்டமே ஆக கொண்டு குடி வாழும்-கொலோ

நாடும் நகரும் அறிய நல்லது ஓர் கண்ணாலம் செய்து

சாடு இற பாய்ந்த பெருமான் தக்கவா கைப்பற்றும்-கொலோ

#303

அண்டத்து அமரர் பெருமான் ஆழியான் இன்று என் மகளை

பண்ட பழிப்புக்கள் சொல்லி பரிசு அற ஆண்டிடும்-கொலோ

கொண்டு குடி வாழ்க்கை வாழ்ந்து கோவல பட்டம் கவித்து

பண்டை மணாட்டிமார் முன்னே பாதுகாவல் வைக்கும்-கொலோ

#304

குடியில் பிறந்தவர் செய்யும் குணம் ஒன்றும் செய்திலன் அந்தோ

நடை ஒன்றும் செய்திலன் நங்காய் நந்தகோபன் மகன் கண்ணன்

இடை இருபாலும் வணங்க இளைத்துஇளைத்து என் மகள் ஏங்கி

கடை கயிறே பற்றி வாங்கி கை தழும்பு ஏறிடும்-கொலோ

#305

வெள் நிற தோய் தயிர்-தன்னை வெள் வரைப்பின் முன் எழுந்து

கண் உறங்காதே இருந்து கடையவும்தான் வல்லள்-கொலோ

ஒள் நிற தாமரை செம் கண் உலகளந்தான் என் மகளை

பண் அறையா பணிகொண்டு பரிசு அற ஆண்டிடும்-கொலோ

#306

மாயவன் பின்வழி சென்று வழியிடை மாற்றங்கள் கேட்டு

ஆயர்கள் சேரியிலும் புக்கு அங்குத்தை மாற்றமும் எல்லாம்

தாய் அவள் சொல்லிய சொல்லை தண் புதுவை பட்டன் சொன்ன

தூய தமிழ் பத்தும் வல்லார் தூ மணி வண்ணனுக்கு ஆளரே

#307

என் நாதன் தேவிக்கு அன்று இன்பப்பூ ஈயாதாள்

தன் நாதன் காணவே தண் பூ மரத்தினை

வன் நாத புள்ளால் வலிய பறித்திட்ட

என் நாதன் வன்மையை பாடி பற எம்பிரான் வன்மையை பாடி பற

#308

என் வில் வலி கண்டு போ என்று எதிர்வந்தான்

தன் வில்லினோடும் தவத்தை எதிர்வாங்கி

முன் வில் வலித்து முதுபெண் உயிருண்டான்

தன் வில்லின் வன்மையை பாடி பற தாசரதி தன்மையை பாடி பற

#309

உருப்பிணி நங்கையை தேர் ஏற்றிக்கொண்டு

விருப்புற்று அங்கு ஏக விரைந்து எதிர்வந்து

செருக்குற்றான் வீரம் சிதைய தலையை

சிரைத்திட்டான் வன்மையை பாடி பற தேவகி சிங்கத்தை பாடி பற

#310

மாற்றுத்தாய் சென்று வனம் போகே என்றிட

ஈற்றுத்தாய் பின்தொடர்ந்து எம்பிரான் என்று அழ

கூற்று தாய் சொல்ல கொடிய வனம் போன

சீற்றமிலாதானை பாடி பற சீதை மணாளனை பாடி பற

#311

பஞ்சவர் தூதனாய் பாரதம் கைசெய்து

நஞ்சு உமிழ் நாகம் கிடந்த நல் பொய்கை புக்கு

அஞ்ச பணத்தின் மேல் பாய்ந்திட்டு அருள்செய்த

அஞ்சன வண்ணனை பாடி பற அசோதை-தன் சிங்கத்தை பாடி பற

#312

முடி ஒன்றி மூ உலகங்களும் ஆண்டு உன்

அடியேற்கு அருள் என்று அவன் பின்தொடர்ந்த

படியில் குணத்து பரத நம்பிக்கு அன்று

அடிநிலை ஈந்தானை பாடி பற அயோத்தியர் கோமானை பாடி பற

#313

காளியன் பொய்கை கலங்க பாய்ந்திட்டு அவன்

நீள் முடி ஐந்திலும் நின்று நடம்செய்து

மீள அவனுக்கு அருள்செய்த வித்தகன்

தோள் வலி வீரமே பாடி பற தூ மணி வண்ணனை பாடி பற

#314

தார்க்கு இளம் தம்பிக்கு அரசு இந்து தண்டகம்

நூற்றவள் சொல்கொண்டு போகி நுடங்கு இடை

சூர்ப்பணகாவை செவியொடு மூக்கு அவள்

ஆர்க்க அரிந்தானை பாடி பற அயோத்திக்கு அரசனை பாடி பற

#315

மாய சகடம் உதைத்து மருது இறுத்து

ஆயர்களோடு போய் ஆநிரை காத்து அணி

வேயின் குழல் ஊதி வித்தகனாய் நின்ற

ஆயர்கள் ஏற்றினை பாடி பற ஆநிரை மேய்த்தானை பாடி பற

#316

கார் ஆர் கடலை அடைத்திட்டு இலங்கை புக்கு

ஓராதான் பொன் முடி ஒன்பதோடு ஒன்றையும்

நேரா அவன் தம்பிக்கே நீள் அரசு ஈத்த

ஆராவமுதனை பாடி பற அயோத்தியர் வேந்தனை பாடி பற

#317

நந்தன் மதலையை காகுத்தனை நவின்று

உந்தி பறந்த ஒளி இழையார்கள் சொல்

செந்தமிழ் தென் புதுவை விட்டுசித்தன் சொல்

ஐந்தினோடு ஐந்தும் வல்லார்க்கு அல்லல் இல்லையே

#318

நெறிந்த கரும் குழல் மடவாய் நின் அடியேன் விண்ணப்பம்

செறிந்த மணி முடி சனகன் சிலை இறுத்து நினை கொணர்ந்தது

அறிந்து அரசு களைகட்ட அரும் தவத்தோன் இடை விலங்க

செறிந்த சிலை கொடு தவத்தை சிதைத்ததும் ஓர் அடையாளம்

#319

அல்லி அம் பூ மலர் கோதாய் அடிபணிந்தேன் விண்ணப்பம்

சொல்லுகேன் கேட்டருளாய் துணை மலர் கண் மட மானே

எல்லி அம் போது இனிதிருத்தல் இருந்தது ஓர் இடவகையில்

மல்லிகை மா மாலை கொண்டு அங்கு ஆர்த்ததும் ஓர் அடையாளம்

#320

கலக்கிய மா மனத்தனளாய் கைகேசி வரம் வேண்ட

மலக்கிய மா மனத்தனனாய் மன்னவனும் மறாது ஒழிய

குல குமரா காடு உறைய போ என்று விடைகொடுப்ப

இலக்குமணன்-தன்னொடும் அங்கு ஏகியது ஓர் அடையாளம்

#321

வார் அணிந்த முலை மடவாய் வைதேவீ விண்ணப்பம்

தேர் அணிந்த அயோத்தியர் கோன் பெருந்தேவீ கேட்டருளாய்

கூர் அணிந்த வேல் வலவன் குகனோடும் கங்கை-தன்னில்

சீர் அணிந்து தோழமை கொண்டதும் ஓர் அடையாளம்

#322

மாம் அமரும் மெல் நோக்கி வைதேவீ விண்ணப்பம்

கான் அமரும் கல் அதர் போய் காடு உறைந்த காலத்து

தேன் அமரும் பொழில் சாரல் சித்திரகூடத்து இருப்ப

பால் மொழியாய் பரத நம்பி பணிந்ததும் ஓர் அடையாளம்

#323

சித்திரகூடத்து இருப்ப சிறு காக்கை முலை தீண்ட

அத்திரமே கொண்டு எறிய அனைத்து உலகும் திரிந்து ஓடி

வித்தகனே இராமாவோ நின் அபயம் என்று அழைப்ப

அத்திரமே அதன் கண்ணை அறுத்ததும் ஓர் அடையாளம்

#324

மின் ஒத்த நுண் இடையாய் மெய் அடியேன் விண்ணப்பம்

பொன் ஒத்த மான் ஒன்று புகுந்து இனிது விளையாட

நின் அன்பின் வழிநின்று சிலை பிடித்து எம்பிரான் ஏக

பின்னே அங்கு இலக்குமணன் பிரிந்ததும் ஓர் அடையாளம்

#325

மை தகு மா மலர் குழலாய் வைதேவீ விண்ணப்பம்

ஒத்த புகழ் வானர கோன் உடன் இருந்து நினை தேட

அத்தகு சீர் அயோத்தியர் கோன் அடையாளம் இவை மொழிந்தான்

இத்தகையால் அடையாளம் ஈது அவன் கை மோதிரமே

#326

திக்கு நிறை புகழாளன் தீ வேள்வி சென்ற நாள்

மிக்க பெரும் சபை நடுவே வில் இறுத்தான் மோதிரம் கண்டு

ஒக்குமால் அடையாளம் அனுமான் என்று உச்சி மேல்

வைத்துக்கொண்டு உகந்தனளால் மலர் குழலாள் சீதையுமே

#327

வார் ஆரும் முலை மடவாள் வைதேவி-தனை கண்டு

சீர் ஆரும் திறல் அனுமன் தெரிந்து உரைத்த அடையாளம்

பார் ஆரும் புகழ் புதுவை பட்டர்பிரான் பாடல் வல்லார்

ஏர் ஆரும் வைகுந்தத்து இமையவரோடு இருப்பாரே

#328

கதிர் ஆயிரம் இரவி கலந்து எறித்தால் ஒத்த நீள் முடியன்

எதிர் இல் பெருமை இராமனை இருக்கும் இடம் நாடுதிரேல்

அதிரும் கழல் பொரு தோள் இரணியன் ஆகம் பிளந்து அரியாய்

உதிரம் அளைந்த கையோடு இருந்தானை உள்ளவா கண்டார் உளர்

#329

நாந்தகம் சங்கு தண்டு நாண் ஒலி சார்ங்கம் திருச்சக்கரம்

ஏந்து பெருமை இராமனை இருக்கும் இடம் நாடுதிரேல்

காந்தள் முகிழ் விரல் சீதைக்கு ஆகி கடும் சிலை சென்று இறுக்க

வேந்தர் தலைவன் சனகராசன்-தன் வேள்வியில் கண்டார் உளர்

#330

கொலை யானை கொம்பு பறித்து கூடலர் சேனை பொருது அழிய

சிலையால் மராமரம் எய்த தேவனை சிக்கென நாடுதிரேல்

தலையால் குரக்கு இனம் தாங்கி சென்று தட வரை கொண்டு அடைப்ப

அலை ஆர் கடற்கரை வீற்றிருந்தானை அங்குத்தை கண்டார் உளர்

#331

தோயம் பரந்த நடுவு சூழலில் தொல்லை வடிவு கொண்ட

மாய குழவி-அதனை நாடுறில் வம்-மின் சுவடு உரைக்கேன்

ஆயர் மட மகள் பின்னைக்கு ஆகி அடல் விடை ஏழினையும்

வீய பொருது வியர்த்து நின்றானை மெய்ம்மையே கண்டார் உளர்

#332

நீர் ஏறு செம் சடை நீலகண்டனும் நான்முகனும் முறையால்

சீர் ஏறு வாசகம் செய்ய நின்ற திருமாலை நாடுதிரேல்

வார் ஏறு கொங்கை உருப்பிணியை வலிய பிடித்துக்கொண்டு

தேர் ஏற்றி சேனை நடுவு போர்செய்ய சிக்கென கண்டார் உளர்

#333

பொல்லா வடிவு உடை பேய்ச்சி துஞ்ச புணர் முலை வாய் மடுக்க

வல்லானை மா மணி வண்ணனை மருவும் இடம் நாடுதிரேல்

பல்லாயிரம் பெரும் தேவிமாரொடு பௌவம் ஏறி துவரை

எல்லாரும் சூழ சிங்காசனத்தே இருந்தானை கண்டார் உளர்

#334

வெள்ளை விளி சங்கு வெம் சுடர் திருச்சக்கரம் ஏந்து கையன்

உள்ள இடம் வினவில் உமக்கு இறை வம்-மின் சுவடு உரைக்கேன்

வெள்ளை புரவி குரக்கு வெல் கொடி தேர் மிசை முன்பு நின்று

கள்ள படை துணை ஆகி பாரதம் கைசெய்ய கண்டார் உளர்

#335

நாழிகை கூறு இட்டு காத்து நின்ற அரசர்கள்-தம் முகப்பே

நாழிகை போக படை பொருதவன் தேவகி-தன் சிறுவன்

ஆழி கொண்டு அன்று இரவி மறைப்ப சயத்திரதன் தலையை

பாழில் உருள படை பொருதவன் பக்கமே கண்டார் உளர்

#336

மண்ணும் மலையும் மறி கடல்களும் மற்றும் யாவும் எல்லாம்

திண்ணம் விழுங்கி உமிழ்ந்த தேவனை சிக்கென நாடுதிரேல்

எண்ணற்கு அரியது ஓர் ஏனம் ஆகி இரு நிலம் புக்கு இடந்து

வண்ண கரும் குழல் மாதரோடு மணந்தானை கண்டார் உளர்

#337

கரிய முகில் புரை மேனி மாயனை கண்ட சுவடு உரைத்து

புரவி முகம்செய்து செந்நெல் ஓங்கி விளை கழனி புதுவை

திருவில் பொலி மறைவாணன் பட்டர்பிரான் சொன்ன மாலை பத்தும்

பரவும் மனம் உடை பத்தர் உள்ளார் பரமன் அடி சேர்வர்களே

#338

அலம்பா வெருட்டா கொன்று திரியும் அரக்கரை

குலம் பாழ்படுத்து குலவிளக்காய் நின்ற கோன் மலை

சிலம்பு ஆர்க்க வந்து தெய்வ மகளிர்கள் ஆடும் சீர்

சிலம்பாறு பாயும் தென் திருமாலிருஞ்சோலையே

#339

வல்லாளன் தோளும் வாள் அரக்கன் முடியும் தங்கை

பொல்லாத மூக்கும் போக்குவித்தான் பொருந்தும் மலை

எல்லா இடத்திலும் எங்கும் பரந்து பல்லாண்டு ஒலி

செல்லாநிற்கும் சீர் தென் திருமாலிருஞ்சோலையே

#340

தக்கார் மிக்கார்களை சஞ்சலம் செய்யும் சலவரை

தெக்கு ஆம் நெறியே போக்குவிக்கும் செல்வன் பொன் மலை

எக்காலமும் சென்று சேவித்திருக்கும் அடியரை

அ கான் நெறியை மாற்றும் தண் திருமாலிருஞ்சோலையே

#341

ஆன் ஆயர் கூடி அமைத்த விழவை அமரர்-தம்

கோனார்க்கு ஒழிய கோவர்த்தனத்து செய்தான் மலை

வான் நாட்டில்-நின்று மா மலர் கற்பக தொத்து இழி

தேனாறு பாயும் தென் திருமாலிருஞ்சோலையே

#342

ஒரு வாரணம் பணிகொண்டவன் பொய்கையில் கஞ்சன்-தன்

ஒரு வாரணம் உயிர் உண்டவன் சென்று உறையும் மலை

கரு வாரணம் தன் பிடி துறந்து ஓட கடல் வண்ணன்

திருவாணை கூற திரியும் தண் திருமாலிருஞ்சோலையே

#343

ஏவிற்று செய்வான் என்று எதிர்ந்துவந்த மல்லரை

சாவ தகர்த்த சாந்து அணி தோள் சதுரன் மலை

ஆவத்தனம் என்று அமரர்களும் நன் முனிவரும்

சேவித்திருக்கும் தென் திருமாலிருஞ்சோலையே

#344

மன்னர் மறுக மைத்துனன்மார்க்கு ஒரு தேரின் மேல்

முன் அங்கு நின்று மோழை எழுவித்தவன் மலை

கொல் நவில் கூர் வேல் கோன் நெடுமாறன் தென்கூடல் கோன்

தென்னன் கொண்டாடும் தென் திருமாலிருஞ்சோலையே

#345

குறுகாத மன்னரை கூடு கலக்கி வெம் கானிடை

சிறு கால் நெறியே போக்குவிக்கும் செல்வன் பொன் மலை

அறு கால் வரி வண்டுகள் ஆயிர நாமம் சொல்லி

சிறு காலை பாடும் தென் திருமாலிருஞ்சோலையே

#346

சிந்த புடைத்து செம் குருதி கொண்டு பூதங்கள்

அந்தி பலிகொடுத்து ஆவத்தனம் செய் அப்பன் மலை

இந்திரகோபங்கள் எம்பெருமான் கனி வாய் ஒப்பான்

சிந்தும் புறவில் தென் திருமாலிருஞ்சோலையே

#347

எட்டு திசையும் எண் இறந்த பெரும் தேவிமார்

விட்டு விளங்க வீற்றிருந்த விமலன் மலை

பட்டி பிடிகள் பகடு உரிஞ்சி சென்று மாலைவாய்

தெட்டி திளைக்கும் தென் திருமாலிருஞ்சோலையே

#348

மருத பொழில் அணி மாலிருஞ்சோலை மலை-தன்னை

கருதி உறைகின்ற கார் கடல் வண்ணன் அம்மான்-தன்னை

விரதம் கொண்டு ஏத்தும் வில்லிபுத்தூர் விட்டுசித்தன் சொல்

கருதி உரைப்பவர் கண்ணன் கழல் இணை காண்பார்களே

#349

உருப்பிணி நங்கை-தன்னை மீட்பான் தொடர்ந்து ஓடி சென்ற

உருப்பனை ஓட்டி கொண்டிட்டு உறைத்திட்ட உறைப்பன் மலை

பொருப்பிடை கொன்றை நின்று முறி ஆழியும் காசும் கொண்டு

விருப்பொடு பொன் வழங்கும் வியன் மாலிருஞ்சோலை அதே

#350

கஞ்சனும் காளியனும் களிறும் மருதும் எருதும்

வஞ்சனையில் மடிய வளர்ந்த மணி வண்ணன் மலை

நஞ்சு உமிழ் நாகம் எழுந்து அணவி நளிர் மா மதியை

செம் சுடர் நா வளைக்கும் திருமாலிருஞ்சோலை அதே

#351

மன்னு நரகன்-தன்னை சூழ் போகி வளைத்து எறிந்து

கன்னி மகளிர்-தம்மை கவர்ந்த கடல் வண்ணன் மலை

புன்னை செருந்தியொடு புன வேங்கையும் கோங்கும் நின்று

பொன்னரி மாலைகள் சூழ் பொழில் மாலிருஞ்சோலை அதே

#352

மாவலி-தன்னுடைய மகன் வாணன் மகள் இருந்த

காவலை கட்டழித்த தனி காளை கருதும் மலை

கோவலர் கோவிந்தனை குறமாதர்கள் பண் குறிஞ்சி

பா ஒலி பாடி நடம் பயில் மாலிருஞ்சோலை அதே

#353

பலபல நாழம் சொல்லி பழித்த சிசுபாலன்-தன்னை

அலைவலைமை தவிர்த்த அழகன் அலங்காரன் மலை

குல மலை கோல மலை குளிர் மா மலை கொற்ற மலை

நில மலை நீண்ட மலை திருமாலிருஞ்சோலை அதே

#354

பாண்டவர்-தம்முடைய பாஞ்சாலி மறுக்கம் எல்லாம்

ஆண்டு அங்கு நூற்றுவர்-தம் பெண்டிர் மேல் வைத்த அப்பன் மலை

பாண் தகு வண்டு இனங்கள் பண்கள் பாடி மது பருக

தோண்டல் உடைய மலை தொல்லை மாலிருஞ்சோலை அதே

#355

கனம் குழையாள் பொருட்டா கணை பாரித்து அரக்கர்-தங்கள்

இனம் கழு ஏற்றுவித்த எழில் தோள் எம் இராமன் மலை

கனம் கொழி தெள் அருவி வந்து சூழ்ந்து அகல் ஞாலம் எல்லாம்

இனம் குழு ஆடும் மலை எழில் மாலிருஞ்சோலை அதே

#356

எரி சிதறும் சரத்தால் இலங்கையினை தன்னுடைய

வரி சிலை வாயில் பெய்து வாய் கோட்டம் தவிர்த்து உகந்த

அரையன் அமரும் மலை அமரரொடு கோனும் சென்று

திரி சுடர் சூழும் மலை திருமாலிருஞ்சோலை அதே

#357

கோட்டு மண் கொண்டு இடந்து குடங்கையில் மண் கொண்டு அளந்து

மீட்டும் அது உண்டு உமிழ்ந்து விளையாடு விமலன் மலை

ஈட்டிய பல் பொருள்கள் எம்பிரானுக்கு அடியுறை என்று

ஓட்டரும் தண் சிலம்பாறு உடை மாலிருஞ்சோலை அதே

#358

ஆயிரம் தோள் பரப்பி முடி ஆயிரம் மின் இலக

ஆயிரம் பைம் தலைய அனந்தசயனன் ஆளும் மலை

ஆயிரம் ஆறுகளும் சுனைகள் பல ஆயிரமும்

ஆயிரம் பூம் பொழிலும் உடை மாலிருஞ்சோலை அதே

#359

மாலிருஞ்சோலை என்னும் மலையை உடைய மலையை

நாலிரு மூர்த்தி-தன்னை நால்வேத கடல் அமுதை

மேல் இரும் கற்பகத்தை வேதாந்த விழு பொருளின்

மேல் இருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனனே

#360

நா அகாரியம் சொல் இலாதவர் நாள்-தொறும் விருந்தோம்புவார்

தேவகாரியம் செய்து வேதம் பயின்று வாழ் திருக்கோட்டியூர்

மூவர் காரியமும் திருத்தும் முதல்வனை சிந்தியாத அ

பாவகாரிகளை படைத்தவன் எங்ஙனம் படைத்தான்-கொலோ

#361

குற்றம் இன்றி குணம் பெருக்கி குருக்களுக்கு அனுகூலராய்

செற்றம் ஒன்றும் இலாத வண்கையினார்கள் வாழ் திருக்கோட்டியூர்

துற்றி ஏழ் உலகு உண்ட தூ மணி வண்ணன்-தன்னை தொழாதவர்

பெற்ற தாயர் வயிற்றினை பெருநோய் செய்வான் பிறந்தார்களே

#362

வண்ண நல் மணியும் மரகதமும் அழுத்தி நிழல் எழும்

திண்ணை சூழ் திருக்கோட்டியூர் திருமாலவன் திருநாமங்கள்

எண்ண கண்ட விரல்களால் இறைப்போதும் எண்ணகிலாது போய்

உண்ண கண்ட தம் ஊத்தை வாய்க்கு கவளம் உந்துகின்றார்களே

#363

உரக மெல் அணையான் கையில் உறை சங்கம் போல் மட அன்னங்கள்

நிரை கணம் பரந்து ஏறும் செங்கமல வயல் திருக்கோட்டியூர்

நரக நாசனை நாவில் கொண்டு அழையாத மானிட சாதியர்

பருகு நீரும் உடுக்கும் கூறையும் பாவம் செய்தனதாம்-கொலோ

#364

ஆமையின் முதுகத்திடை குதிகொண்டு தூ மலர் சாடி போய்

தீமை செய்து இள வாளைகள் விளையாடு நீர் திருக்கோட்டியூர்

நேமி சேர் தடம் கையினானை நினைப்பு இலா வலி நெஞ்சு உடை

பூமி பாரங்கள் உண்ணும் சோற்றினை வாங்கி புல்லைத் திணி-
மினே

#365

பூதம் ஐந்தொடு வேள்வி ஐந்து புலன்கள் ஐந்து பொறிகளால்

ஏதம் ஒன்றும் இலாத வண்கையினார்கள் வாழ் திருக்கோட்டியூர்

நாதனை நரசிங்கனை நவின்று ஏத்துவார்கள் உழக்கிய

பாத தூளி படுதலால் இ உலகம் பாக்கியம் செய்ததே

#366

குருந்தம் ஒன்று ஒசித்தானொடும் சென்று கூடி ஆடி
விழாச்செய்து

திருந்து நான்மறையோர் இராப்பகல் ஏத்தி வாழ் திருக்கோட்டியூர்

கரும் தட முகில் வண்ணனை கடைக்கொண்டு கைதொழும்
பத்தர்கள்

இருந்த ஊரில் இருக்கும் மானிடர் எ தவங்கள் செய்தார்-கொலோ

#367

நளிர்ந்த சீலன் நயாசலன் அபிமானதுங்கனை நாள்-தொறும்

தெளிந்த செல்வனை சேவகங்கொண்ட செங்கண்மால்
திருக்கோட்டியூர்

குளிர்ந்து உறைகின்ற கோவிந்தன் குணம் பாடுவார் உள்ள நாட்டினுள்

விளைந்த தானியமும் இராக்கதர் மீது கொள்ளகிலார்களே

#368

கொம்பின் ஆர் பொழில்வாய் குயில் இனம் கோவிந்தன் குணம் பாடு சீர்

செம்பொன் ஆர் மதில் சூழ் செழும் கழனி உடை திருக்கோட்டியூர்

நம்பனை நரசிங்கனை நவின்று ஏத்துவார்களை கண்ட-கால்

எம்பிரான்-தன் சின்னங்கள் இவர்இவர் என்று ஆசைகள் தீர்வனே

#369

காசின் வாய் கரம் விற்கிலும் கரவாது மாற்று இலி சோறு இட்டு

தேச வார்த்தை படைக்கும் வண்கையினார்கள் வாழ் திருக்கோட்டியூர்

கேசவா புருடோத்தமா கிளர் சோதியாய் குறளா என்று

பேசுவார் அடியார்கள் எம்-தம்மை விற்கவும் பெறுவார்களே

#370

சீத நீர் புடை சூழ் செழும் கழனி உடை திருக்கோட்டியூர்

ஆதியான் அடியாரையும் அடிமை இன்றி திரிவாரையும்

கோது இல் பட்டர்பிரான் குளிர் புதுவை மன் விட்டுசித்தன் சொல்

ஏதம் இன்றி உரைப்பவர்கள் இருடீகேசனுக்கு ஆளரே

#371

ஆசைவாய் சென்ற சிந்தையர் ஆகி அன்னை அத்தன் என் புத்திரர் பூமி

வாச வார் குழலாள் என்று மயங்கி மாளும் எல்லை-கண் வாய் திறவாதே

கேசவா புருடோத்தமா என்றும் கேழல் ஆகிய கேடிலீ என்றும்

பேசுவார் அவர் எய்தும் பெருமை பேசுவான் புகில் நம் பரம் அன்றே

#372

சீயினால் செறிந்து ஏறிய புண் மேல் செற்றல் ஏறி குழம்பு இருந்து எங்கும்

ஈயினால் அரிப்புண்டு மயங்கி எல்லைவாய் சென்று சேர்வதன் முன்னம்

வாயினால் நமோ நாரணா என்று மத்தகத்திடை கைகளை கூப்பி

போயினால் பின்னை இ திசைக்கு என்றும் பிணை கொடுக்கிலும் போக ஒட்டாரே

#373

சோர்வினால் பொருள் வைத்தது உண்டாகில் சொல்லு சொல் என்று சுற்றும் இருந்து

ஆர் வினவிலும் வாய் திறவாதே அந்த காலம் அடைவதன் முன்னம்

மார்வம் என்பது ஓர் கோயில் அமைத்து மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி

ஆர்வம் என்பது ஓர் பூ இட வல்லார்க்கு அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே

#374

மேல் எழுந்தது ஓர் வாயு கிளர்ந்து மேல் மிடற்றினை உள் எழ வாங்கி

காலும் கையும் விதிர்விதிர்த்து ஏறி கண் உறக்கம்-அது ஆவதன் முன்னம்

மூலம் ஆகிய ஒற்றை எழுத்தை மூன்று மாத்திரை உள் எழ வாங்கி

வேலை வண்ணனை மேவுதிராகில் விண்ணகத்தினில் மேவலும் ஆமே

#375

மடி வழி வந்து நீர் புலன் சோர வாயில் அட்டிய கஞ்சியும் மீண்டே

கடைவழி வார கண்டம் அடைப்ப கண் உறக்கம்-அது ஆவதன் முன்னம்

தொடைவழி உம்மை நாய்கள் கவரா சூலத்தால் உம்மை பாய்வதும் செய்யார்

இடைவழியில் நீர் கூறையும் இழவீர் இருடீகேசன் என்று ஏத்த வல்லீரே

#376

அங்கம் விட்டு அவை ஐந்தும் அகற்றி ஆவி மூக்கினில் சோதித்த பின்னை

சங்கம் விட்டு அவர் கையை மறித்து பையவே தலை சாய்ப்பதன் முன்னம்

வங்கம் விட்டு உலவும் கடல் பள்ளி மாயனை மதுசூதனனை மார்பில்

தங்க விட்டுவைத்து ஆவதோர் கருமம் சாதிப்பார்க்கு என்றும் சாதிக்கலாமே

#377

தென்னவன் தமர் செப்பம் இலாதார் சே அதக்குவார் போல புகுந்து

பின்னும் வன் கயிற்றால் பிணித்து எற்றி பின்முன்னாக இழுப்பதன் முன்னம்

இன்னவன் இனையான் என்று சொல்லி எண்ணி உள்ளத்து இருள் அற நோக்கி

மன்னவன் மதுசூதனன் என்பார் வானகத்து மன்றாடிகள் தாமே

#378

கூடிக்கூடி உற்றார்கள் இருந்து குற்றம் நிற்க நற்றங்கள் பறைந்து

பாடிப்பாடி ஓர் பாடையில் இட்டு நரி படைக்கு ஒரு பாகுடம் போலே

கோடி மூடி எடுப்பதன் முன்னம் கௌத்துவம் உடை கோவிந்தனோடு

கூடியாடிய உள்ளத்தர் ஆனால் குறிப்பிடம் கடந்து உய்யலும் ஆமே

#379

வாய் ஒரு பக்கம் வாங்கி வலிப்ப வார்ந்த நீர் குழி கண்கள் மிழற்ற

தாய் ஒரு பக்கம் தந்தை ஒரு பக்கம் தாரமும் ஒரு பக்கம் அலற்ற

தீ ஒரு பக்கம் சேர்வதன் முன்னம் செங்கண்மாலொடும் சிக்கென சுற்ற

மாய் ஒரு பக்கம் நிற்க வல்லார்க்கு அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே

#380

செத்துப்போவது ஓர் போது நினைந்து செய்யும் செய்கைகள் தேவபிரான் மேல்

பத்தராய் இறந்தார் பெறும் பேற்றை பாழி தோள் விட்டுசித்தன் புத்தூர் கோன்

சித்தம் நன்கு ஒருங்கி திருமாலை செய்த மாலை இவை பத்தும் வல்லார்

சித்தம் நன்கு ஒருங்கி திருமால் மேல் சென்ற சிந்தை பெறுவர்கள் தாமே

#381

காசும் கறை உடை கூறைக்கும் அங்கு ஓர் கற்றைக்கும்

ஆசையினால் அங்கு அவத்த பேரிடும் ஆதர்காள்

கேசவன் பேரிட்டு நீங்கள் தேனித்து இரு-மினோ

நாயகன் நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#382

அங்கு ஒரு கூறை அரைக்கு உடுப்பதன் ஆசையால்

மங்கிய மானிட சாதியின் பேரிடும் ஆதர்காள்

செங்கண் நெடுமால் சிரீதரா என்று அழைத்த-கால்

நங்கைகாள் நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#383

உச்சியில் எண்ணெயும் சுட்டியும் வளையும் உகந்து

எச்சம் பொலிந்தீர்காள் என் செய்வான் பிறர் பேரிட்டீர்

பிச்சை புக்காகிலும் எம்பிரான் திருநாமமே

நச்சு-மின் நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#384

மானிட சாதியில் தோன்றிற்று ஓர் மானிட சாதியை

மானிட சாதியின் பேரிட்டால் மறுமைக்கு இல்லை

வான் உடை மாதவா கோவிந்தா என்று அழைத்த-கால்

நான் உடை நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#385

மலம் உடை ஊத்தையில் தோன்றிற்று ஓர் மல ஊத்தையை

மலம் உடை ஊத்தையின் பேரிட்டால் மறுமைக்கு இல்லை

குலம் உடை கோவிந்தா கோவிந்தா என்று அழைத்த-கால்

நலம் உடை நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#386

நாடும் நகரும் அறிய மானிடப் பேரிட்டு

கூடி அழுங்கி குழியில் வீழ்ந்து வழுக்கதே

சாடு இற பாய்ந்த தலைவா தாமோதரா என்று

நாடு-மின் நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#387

மண்ணில் பிறந்து மண் ஆகும் மானிட பேரிட்டு அங்கு

எண்ணம் ஒன்று இன்றி இருக்கும் ஏழை மனிசர்காள்

கண்ணுக்கு இனிய கரு முகில் வண்ணன் நாமமே

நண்ணு-மின் நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#388

நம்பி பிம்பி என்று நாட்டு மானிட பேரிட்டால்

நம்பும் பிம்பும் எல்லாம் நாலு நாளில் அழுங்கிப்போம்

செம் பெரும் தாமரை கண்ணன் பேரிட்டு அழைத்த-கால்

நம்பிகாள் நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#389

ஊத்தை குழியில் அமுதம் பாய்வது போல் உங்கள்

மூத்திர பிள்ளையை என் முகில் வண்ணன் பேரிட்டு

கோத்து குழைத்து குணாலம் ஆடி திரி-மினோ

நா தகு நாரணன் தம் அன்னை நரகம் புகாள்

#390

சீர் அணி மால் திருநாமமே இட தேற்றிய

வீர் அணி தொல் புகழ் விட்டுசித்தன் விரித்த சொல்

ஓர் அணி ஒண் தமிழ் ஒன்பதோடு ஒன்றும் வல்லவர்

பேர் அணி வைகுந்தத்து என்றும் பேணி இருப்பரே

#391

தங்கையை மூக்கும் தமையனை தலையும் தடிந்த எம் தாசரதி போய்

எங்கும் தன் புகழா இருந்து அரசாண்ட எம் புருடோத்தமன் இருக்கை

கங்கை கங்கை என்ற வாசகத்தாலே கடு வினை களைந்திடுகிற்கும்

கங்கையின் கரை மேல் கைதொழ நின்ற கண்டம் என்னும் கடி நகரே

#392

சலம் பொதி உடம்பின் தழல் உமிழ் பேழ் வாய் சந்திரன் வெம் கதிர் அஞ்ச

மலர்ந்து எழுந்து அணவும் மணி வண்ண உருவின் மால் புருடோத்தமன் வாழ்வு

நலம் திகழ் சடையான் முடி கொன்றை மலரும் நாரணன் பாத துழாயும்

கலந்து இழி புனலால் புகர் படு கங்கை கண்டம் என்னும் கடி நகரே

#393

அதிர் முகம் உடைய வலம்புரி குமிழ்த்தி அழல் உமிழ் ஆழி கொண்டு எறிந்து அங்கு

எதிர் முக அசுரர் தலைகளை இடறும் எம் புருடோத்தமன் இருக்கை

சதுமுகன் கையில் சதுப்புயன் தாளில் சங்கரன் சடையினில் தங்கி

கதிர் முக மணி கொண்டு இழி புனல் கங்கை கண்டம் என்னும் கடி நகரே

#394

இமையவர் இறுமாந்து இருந்து அரசாள ஏற்று வந்து எதிர் பொரு சேனை

நமபுரம் நணுக நாந்தகம் விசிறும் நம் புருடோத்தமன் நகர்தான்

இமவந்தம் தொடங்கி இரும் கடல் அளவும் இரு கரை உலகு இரைத்து ஆட

சுமை உடை பெருமை கங்கையின் கரை மேல் கண்டம் என்னும் கடி நகரே

#395

உழுவது ஓர் படையும் உலக்கையும் வில்லும் ஒண் சுடர் ஆழியும் சங்கும்

மழுவொடு வாளும் படைக்கலம் உடைய மால் புருடோத்தமன் வாழ்வு

எழுமையும் கூடி ஈண்டிய பாவம் இறைப்பொழுது அளவினில் எல்லாம்

கழுவிடும் பெருமை கங்கையின் கரை மேல் கண்டம் என்னும் கடி நகரே

#396

தலைப்பெய்து குமுறி சலம் பொதி மேகம் சலசல பொழிந்திட கண்டு

மலை பெரும் குடையால் மறைத்தவன் மதுரை மால் புருடோத்தமன் வாழ்வு

அலைப்பு உடை திரைவாய் அரும் தவ முனிவர் அவபிரதம் குடைந்து ஆட

கலப்பைகள் கொழிக்கும் கங்கையின் கரை மேல் கண்டம் என்னும் கடி நகரே

#397

வில் பிடித்து இறுத்து வேழத்தை முறுக்கி மேலிருந்தவன் தலை சாடி

மல் பொருது எழ பாய்ந்து அரையனை உதைத்த மால் புருடோத்தமன் வாழ்வு

அற்புதம் உடைய ஐராவத மதமும் அவர் இளம்படியர் ஒண் சாந்தும்

கற்பக மலரும் கலந்து இழி கங்கை கண்டம் என்னும் கடி நகரே

#398

திரை பொரு கடல் சூழ் திண் மதில் துவரை வேந்து தன் மைத்துனன்மார்க்காய்

அரசினை அவிய அரசினை அருளும் அரி புருடோத்தமன் அமர்வு

நிரைநிரையாக நெடியன யூபம் நிரந்தரம் ஒழுக்குவிட்டு இரண்டு

கரை புரை வேள்வி புகை கமழ் கங்கை கண்டம் என்னும் கடி நகரே

#399

வட திசை மதுரை சாளக்கிராமம் வைகுந்தம் துவரை அயோத்தி

இடம் உடை வதரி இட வகை உடைய எம் புருடோத்தமன் இருக்கை

தட வரை அதிர தரணி விண்டு இடிய தலைப்பற்றி கரை மரம் சாடி

கடலினை கலங்க கடுத்து இழி கங்கை கண்டம் என்னும் கடி நகரே

#400

மூன்றெழுத்து-அதனை மூன்றெழுத்து-அதனால் மூன்றெழுத்து ஆக்கி மூன்றெழுத்தை

ஏன்று கொண்டிருப்பார்க்கு இரக்கம் நன்கு உடைய எம் புருடோத்தமன் இருக்கை

மூன்று அடி நிமிர்த்து மூன்றினில் தோன்றி மூன்றினில் மூன்று உரு ஆனான்

கான் தடம் பொழில் சூழ் கங்கையின் கரை மேல் கண்டம் என்னும் கடி நகரே

#401

பொங்கு ஒலி கங்கை கரை மலி கண்டத்து உறை புருடோத்தமன் அடி மேல்

வெங்கலி நலியா வில்லிபுத்தூர் கோன் விட்டுசித்தன் விருப்புற்று

தங்கிய அன்பால் செய் தமிழ் மாலை தங்கிய நா உடையார்க்கு

கங்கையில் திருமால் கழல் இணை கீழே குளித்திருந்த கணக்கு ஆமே

#402

மா தவத்தோன் புத்திரன் போய் மறி கடல்வாய் மாண்டானை

ஓதுவித்த தக்கணையா உருவுருவே கொடுத்தான் ஊர்

தோதவத்தி தூய் மறையோர் துறை படிய துளும்பி எங்கும்

போதில் வைத்த தேன் சொரியும் புனல் அரங்கம் என்பதுவே

#403

பிறப்பகத்தே மாண்டு ஒழிந்த பிள்ளைகளை நால்வரையும்

இறைப்பொழுதில் கொணர்ந்து கொடுத்து ஒருப்படித்த உறைப்பன் ஊர்

மறை பெரும் தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை அளித்திருப்பார்

சிறப்பு உடைய மறையவர் வாழ் திருவரங்கம் என்பதுவே

#404

மருமகன்-தன் சந்ததியை உயிர்மீட்டு மைத்துனன்மார்

உருமகத்தே வீழாமே குருமுகமாய் காத்தான் ஊர்

திருமுகமாய் செங்கமலம் திரு நிறமாய் கருங்குவளை

பொரு முகமாய் நின்று அலரும் புனல் அரங்கம் என்பதுவே

#405

கூன் தொழுத்தை சிதகு உரைப்ப கொடியவள் வாய் கடிய சொல் கேட்டு

ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமும் ஆங்கு ஒழிய

கான் தொடுத்த நெறி போகி கண்டகரை களைந்தான் ஊர்

தேன் தொடுத்த மலர் சோலை திருவரங்கம் என்பதுவே

#406

பெரு வரங்கள் அவை பற்றி பிழக்கு உடைய இராவணனை

உரு அரங்க பொருது அழித்து இ உலகினை கண்பெறுத்தான் ஊர்

குருவு அரும்ப கோங்கு அலர குயில் கூவும் குளிர் பொழில் சூழ்

திருவரங்கம் என்பதுவே என் திருமால் சேர்விடமே

#407

கீழ் உலகில் அசுரர்களை கிழங்கிருந்து கிளராமே

ஆழி விடுத்து அவருடைய கரு அழித்த அழிப்பன் ஊர்

தாழை மடல் ஊடு உரிஞ்சி தவள வண்ண பொடி அணிந்து

யாழின் இசை வண்டு இனங்கள் ஆளம் வைக்கும் அரங்கமே

#408

கொழுப்பு உடைய செழும் குருதி கொழித்து இழிந்து குமிழ்த்து எறிய

பிழக்கு உடைய அசுரர்களை பிணம்படுத்த பெருமான் ஊர்

தழுப்பு அரிய சந்தனங்கள் தட வரைவாய் ஈர்த்துக்கொண்டு

தெழிப்பு உடைய காவிரி வந்து அடி தொழும் சீர் அரங்கமே

#409

வல் எயிற்று கேழலுமாய் வாள் எயிற்று சீயமுமாய்

எல்லை இல்லா தரணியையும் அவுணனையும் இடந்தான் ஊர்

எல்லி அம் போது இரும் சிறை வண்டு எம்பெருமான் குணம் பாடி

மல்லிகை வெண் சங்கு ஊதும் மதில் அரங்கம் என்பதுவே

#410

குன்று ஆடு கொழு முகில் போல் குவளைகள் போல் குரை கடல் போல்

நின்று ஆடு கண மயில் போல் நிறம் உடைய நெடுமால் ஊர்

குன்று ஊடு பொழில் நுழைந்து கொடி இடையார் முலை அணவி

மன்று ஊடு தென்றல் உலாம் மதில் அரங்கம் என்பதுவே

#411

பரு வரங்கள் அவை பற்றி படை ஆலித்து எழுந்தானை

செரு அரங்க பொருது அழித்த திருவாளன் திரு பதி மேல்

திருவரங்க தமிழ் மாலை விட்டுசித்தன் விரித்தன கொண்டு

இருவர் அங்கம் எரித்தானை ஏத்த வல்லார் அடியோமே

#412

மரவடியை தம்பிக்கு வான் பணையம் வைத்துப்போய் வானோர் வாழ

செரு உடைய திசை கருமம் திருத்தி வந்து உலகு ஆண்ட திருமால் கோயில்

திருவடி-தன் திருவுருவும் திருமங்கை மலர் கண்ணும் காட்டி நின்று

உரு உடைய மலர் நீலம் காற்று ஆட்ட ஓசலிக்கும் ஒளி அரங்கமே

#413

தன் அடியார் திறத்தகத்து தாமரையாளாகிலும் சிதகு உரைக்குமேல்

என் அடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்

மன் உடைய விபீடணற்கா மதில் இலங்கை திசை நோக்கி மலர் கண் வைத்த

என்னுடைய திருவரங்கற்கன்றியும் மற்றொருவர்க்கு ஆள் ஆவரே

#414

கருள் உடைய பொழில் மருதும் கத களிறும் பிலம்பனையும் கடிய மாவும்

உருள் உடைய சகடரையும் மல்லரையும் உடையவிட்டு ஓசை கேட்டான்

இருள் அகற்றும் எறி கதிரோன் மண்டலத்து ஊடு ஏற்றிவைத்து ஏணி வாங்கி

அருள் கொடுத்திட்டு அடியவரை ஆட்கொள்வான் அமரும் ஊர் அணி அரங்கமே

#415

பதினாறாமாயிரவர் தேவிமார் பணிசெய்ய துவரை என்னும்

அதில் நாயகர் ஆகி வீற்றிருந்த மணவாளர் மன்னு கோயில்

புது நாள்மலர் கமலம் எம்பெருமான் பொன் வயிற்றில் பூவே போல்வான்

பொது நாயகம் பாவித்து இறுமாந்து பொன் சாய்க்கும் புனல் அரங்கமே

#416

ஆமையாய் கங்கையாய் ஆழ் கடலாய் அவனியாய் அரு வரைகளாய்

நான்முகனாய் நான்மறையாய் வேள்வியாய் தக்கணையாய் தானும் ஆனான்

சேமம் உடை நாரதனார் சென்றுசென்று துதித்து இறைஞ்ச கிடந்தான் கோயில்

பூ மருவி புள் இனங்கள் புள் அரையன் புகழ் குழறும் புனல் அரங்கமே

#417

மைத்துனன்மார் காதலியை மயிர் முடிப்பித்து அவர்களையே மன்னர் ஆக்கி

உத்தரை-தன் சிறுவனையும் உயக்கொண்ட உயிராளன் உறையும் கோயில்

பத்தர்களும் பகவர்களும் பழமொழி வாய் முனிவர்களும் பரந்த நாடும்

சித்தர்களும் தொழுது இறைஞ்ச திசை விளக்காய் நிற்கின்ற திருவரங்கமே

#418

குறள் பிரமசாரியாய் மாவலியை குறும்பு அதக்கி அரசு வாங்கி

இறைப்பொழுதில் பாதாளம் கலவிருக்கை கொடுத்து உகந்த எம்மான் கோயில்

எறிப்பு உடைய மணி வரை மேல் இளஞாயிறு எழுந்தால் போல் அரவணையின்வாய்

சிறப்பு உடைய பணங்கள் மிசை செழு மணிகள் விட்டு எறிக்கும் திருவரங்கமே

#419

உரம் பற்றி இரணியனை உகிர் நுதியால் ஒள்ளிய மார்வு உறைக்க ஊன்றி

சிரம் பற்றி முடி இடிய கண் பிதுங்க வாய் அலர தெழித்தான் கோயில்

உரம் பெற்ற மலர் கமலம் உலகு அளந்த சேவடி போல் உயர்ந்து காட்ட

வரம்புற்ற கதிர் செந்நெல் தாள் சாய்த்து தலைவணக்கும் தண் அரங்கமே

#420

தேவு உடைய மீனமாய் ஆமையாய் ஏனமாய் அரியாய் குறளாய்

மூ உருவில் இராமனாய் கண்ணனாய் கற்கியாய் முடிப்பான் கோயில்

சேவலொடு பெடை அன்னம் செங்கமல மலர் ஏறி ஊசலாடி

பூ அணை மேல் துதைந்து எழு செம்பொடி ஆடி விளையாடும் புனல் அரங்கமே

#421

செரு ஆளும் புள்ளாளன் மண்ணாளன் செரு செய்யும் நாந்தகம் என்னும்

ஒரு வாளன் மறையாளன் ஓடாத படையாளன் விழு கையாளன்

இரவு ஆளன் பகல் ஆளன் என்னை ஆளன் ஏழ் உலக பெரும் புரவாளன்

திருவாளன் இனிதாக திருக்கண்கள் வளர்கின்ற திருவரங்கமே

#422

கைந்நாகத்து இடர் கடிந்த கனல் ஆழி படை உடையான் கருதும் கோயில்

தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கம் திருப்பதியின் மேல்

மெய்ந்நாவன் மெய்யடியான் விட்டுசித்தன் விரித்த தமிழ் உரைக்க வல்லார்

எஞ்ஞான்றும் எம்பெருமானின் இணையடி கீழ் இணைபிரியாது இருப்பர் தாமே

#423

துப்புடையாரை அடைவது எல்லாம் சோர்விடத்து துணை ஆவர் என்றே

ஒப்பிலேனாகிலும் நின் அடைந்தேன் ஆனைக்கு நீ அருள்செய்தமையால்

எய்ப்பு என்னை வந்து நலியும்போது அங்கு ஏதும் நான் உன்னை நினைக்கமாட்டேன்

அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#424

சாம் இடத்து என்னை குறிக்கொள் கண்டாய் சங்கொடு சக்கரம் ஏந்தினானே

நா மடித்து என்னை அனேக தண்டம் செய்வதா நிற்பர் நமன் தமர்கள்

போம் இடத்து உன் திறத்து எத்தனையும் புகா வண்ணம் நிற்பது ஓர் மாயை வல்லை

ஆம் இடத்தே உன்னை சொல்லிவைத்தேன் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#425

எல்லையில் வாசல் குறுக சென்றால் எற்றி நமன் தமர் பற்றும்-போது

நில்லு-மின் என்னும் உபாயம் இல்லை நேமியும் சங்கமும் ஏந்தினானே

சொல்லலாம்-போதே உன் நாமம் எல்லாம் சொல்லினேன் என்னை குறிக்கொண்டு என்றும்

அல்லல்படா வண்ணம் காக்க வேண்டும் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#426

ஒற்றை விடையனும் நான்முகனும் உன்னை அறியா பெருமையோனே

முற்ற உலகு எல்லாம் நீயே ஆகி மூன்றெழுத்து ஆய முதல்வனே ஓ

அற்றது வாழ்நாள் இவற்கு என்று எண்ணி அஞ்ச நமன் தமர் பற்றலுற்ற

அற்றைக்கு நீ என்னை காக்கவேண்டும் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#427

பை அரவின் அணை பாற்கடலுள் பள்ளிகொள்கின்ற பரமமூர்த்தி

உய்ய உலகு படைக்க வேண்டி உந்தியில் தோற்றினாய் நான்முகனை

வைய மனிசரை பொய் என்று எண்ணி காலனையும் உடனே படைத்தாய்

ஐய இனி என்னை காக்கவேண்டும் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#428

தண்ணென இல்லை நமன் தமர்கள் சால கொடுமைகள் செய்யாநிற்பர்

மண்ணொடு நீரும் எரியும் காலும் மற்றும் ஆகாசமும் ஆகி நின்றாய்

எண்ணலாம்-போதே உன் நாமம் எல்லாம் எண்ணினேன் என்னை குறிக்கொண்டு என்றும்

அண்ணலே நீ என்னை காக்கவேண்டும் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#429

செஞ்சொல் மறைப்பொருள் ஆகிநின்ற தேவர்கள் நாயகனே எம்மானே

எஞ்சலில் என்னுடை இன் அமுதே ஏழ் உலகும் உடையாய் என் அப்பா

வஞ்ச உருவின் நமன் தமர்கள் வலிந்து நலிந்து என்னை பற்றும்-போது

அஞ்சலை என்று என்னை காக்கவேண்டும் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#430

நான் ஏதும் உன் மாயம் ஒன்று அறியேன் நமன் தமர் பற்றி நலிந்திட்டு இந்த

ஊனே புகே என்று மோதும்-போது அங்கு ஏதும் நான் உன்னை நினைக்கமாட்டேன்

வான் ஏய் வானவர்-தங்கள் ஈசா மதுரை பிறந்த மா மாயனே என்

ஆனாய் நீ என்னை காக்கவேண்டும் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#431

குன்று எடுத்து ஆநிரை காத்த ஆயா கோ நிரை மேய்த்தவனே எம்மானே

அன்று முதல் இன்று அறுதியா ஆதி அம் சோதி மறந்து அறியேன்

நன்றும் கொடிய நமன் தமர்கள் நலிந்து வலிந்து என்னை பற்றும்-போது

அன்று அங்கு நீ என்னை காக்கவேண்டும் அரங்கத்து அரவு அணை பள்ளியானே

#432

மாயவனை மதுசூதனனை மாதவனை மறையோர்கள் ஏத்தும்

ஆயர்கள் ஏற்றினை அச்சுதனை அரங்கத்து அரவு அணை பள்ளியானை

வேயர் புகழ் வில்லிபுத்தூர் மன் விட்டுசித்தன் சொன்ன மாலை பத்தும்

தூய மனத்தனர் ஆகி வல்லார் தூ மணி வண்ணனுக்கு ஆளர் தாமே

#433

வாக்கு தூய்மை இலாமையினாலே மாதவா உன்னை வாய்க்கொள்ள மாட்டேன்

நாக்கு நின்னை அல்லால் அறியாது நான் அது அஞ்சுவன் என் வசம் அன்று

மூர்க்கு பேசுகின்றான் இவன் என்று முனிவாயேலும் என் நாவினுக்கு ஆற்றேன்

காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர் காரணா கருள கொடியானே

#434

சழக்கு நாக்கொடு புன் கவி சொன்னேன் சங்கு சக்கரம் ஏந்து கையனே

பிழைப்பராகிலும் தம் அடியார் சொல் பொறுப்பது பெரியோர் கடன் அன்றே

விழிக்கும் கண்ணிலேன் நின் கண் மற்று அல்லால் வேறொருவரோடு என் மனம் பற்றாது

உழைக்கு ஓர் புள்ளி மிகை அன்று கண்டாய் ஊழி ஏழ் உலகு உண்டு உமிழ்ந்தானே

#435

நன்மை தீமைகள் ஒன்றும் அறியேன் நாரணா என்னும் இத்தனை அல்லால்

புன்மையால் உன்னை புள்ளுவம் பேசி புகழ்வான் அன்று கண்டாய் திருமாலே

உன்னுமாறு உன்னை ஒன்றும் அறியேன் ஓவாதே நமோ நாரணா என்பன்

வன்மை யாவது உன் கோயிலில் வாழும் வைட்டணவன் என்னும் வன்மை கண்டாயே

#436

நெடுமையால் உலகு ஏழும் அளந்தாய் நின்மலா நெடியாய் அடியேனை

குடிமை கொள்வதற்கு ஐயுற வேண்டா கூறை சோறு இவை வேண்டுவது இல்லை

அடிமை என்னும் அ கோயின்மையாலே அங்கங்கே அவை போதரும் கண்டாய்

கொடுமை கஞ்சனை கொன்று நின் தாதை கோத்தவன் தளை கோள் விடுத்தானே

#437

தோட்டம் இல்லவள் ஆ தொழு ஓடை துடவையும் கிணறும் இவை எல்லாம்

வாட்டம் இன்றி உன் பொன் அடி கீழே வளைப்பகம் வகுத்துக்கொண்டிருந்தேன்

நாட்டு மானிடத்தோடு எனக்கு அரிது நச்சுவார் பலர் கேழல் ஒன்று ஆகி

கோட்டு மண் கொண்ட கொள்கையினானே குஞ்சரம் வீழ கொம்பு ஒசித்தானே

#438

கண்ணா நான்முகனை படைத்தானே காரணா கரியாய் அடியேன் நான்

உண்ணா நாள் பசி ஆவது ஒன்று இல்லை ஓவாதே நமோ நாரணா என்று

எண்ணா நாளும் இருக்கு எசு சாம வேத நாள்மலர் கொண்டு உன் பாதம்

நண்ணா நாள் அவை தத்துறுமாகில் அன்று எனக்கு அவை பட்டினி நாளே

#439

வெள்ளை வெள்ளத்தின் மேல் ஒரு பாம்பை மெத்தையாக விரித்து அதன் மேலே

கள்ள நித்திரை கொள்கின்ற மார்க்கம் காணலாம்-கொல் என்று ஆசையினாலே

உள்ளம் சோர உகந்து எதிர் விம்மி உரோம கூபங்களாய் கண்ண நீர்கள்

துள்ளம் சோர துயில் அணை கொள்ளேன் சொல்லாய் யான் உன்னை தத்துறுமாறே

#440

வண்ண மால் வரையே குடையாக மாரி காத்தவனே மதுசூதா

கண்ணனே கரி கோள் விடுத்தானே காரணா களிறு அட்ட பிரானே

எண்ணுவார் இடரை களைவானே ஏத்தரும் பெரும் கீர்த்தியினானே

நண்ணி நான் உன்னை நாள்-தொறும் ஏத்தும் நன்மையே அருள்செய் எம்பிரானே

#441

நம்பனே நவின்று ஏத்த வல்லார்கள் நாதனே நரசிங்கம்-அது ஆனாய்

உம்பர் கோன் உலகு ஏழும் அளந்தாய் ஊழி ஆயினாய் ஆழி முன் ஏந்தி

கம்ப மா கரி கோள் விடுத்தானே காரணா கடலை கடைந்தானே

எம்பிரான் என்னை ஆள் உடை தேனே ஏழையேன் இடரை களையாயே

#442

காமர் தாதை கருதலர் சிங்கம் காண இனிய கரும் குழல் குட்டன்

வாமனன் என் மரகத வண்ணன் மாதவன் மதுசூதனன்-தன்னை

சேம நன்கு அமரும் புதுவையர் கோன் விட்டுசித்தன் வியன் தமிழ் பத்தும்

நாமம் என்று நவின்று உரைப்பார்கள் நண்ணுவார் ஒல்லை நாரணன் உலகே

#443

நெய் குடத்தை பற்றி ஏறும் எறும்புகள் போல் நிரந்து எங்கும்

கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள் காலம் பெற உய்ய போ-மின்

மெய்க்கொண்டு வந்து புகுந்து வேத பிரானார் கிடந்தார்

பை கொண்ட பாம்பு அணையோடும் பண்டு அன்று பட்டினம் காப்பே

#444

சித்திரகுத்தன் எழுத்தால் தென்புல கோன் பொறி ஒற்றி

வைத்த இலச்சினை மாற்றி தூதுவர் ஓடி ஒளித்தார்

முத்து திரை கடல் சேர்ப்பன் மூதறிவாளர் முதல்வன்

பத்தர்க்கு அமுதன் அடியேன் பண்டு அன்று பட்டினம் காப்பே

#445

வயிற்றில் தொழுவை பிரித்து வன் புல சேவை அதக்கி

கயிற்றும் அக்கு ஆணி கழித்து காலிடை பாசம் கழற்றி

எயிற்றிடை மண் கொண்ட எந்தை இராப்பகல் ஓதுவித்து என்னை

பயிற்றி பணிசெய்ய கொண்டான் பண்டு அன்று பட்டினம் காப்பே

#446

மங்கிய வல்வினை நோய்காள் உமக்கும் ஓர் வல்வினை கண்டீர்

இங்கு புகேன்-மின் புகேன்-மின் எளிது அன்று கண்டீர் புகேன்-மின்

சிங்கப்பிரான் அவன் எம்மான் சேரும் திருக்கோயில் கண்டீர்

பங்கப்படாது உய்ய போ-மின் பண்டு அன்று பட்டினம் காப்பே

#447

மாணி குறள் உரு ஆய மாயனை என் மனத்துள்ளே

பேணி கொணர்ந்து புகுத வைத்துக்கொண்டேன் பிறிது இன்றி

மாணிக்க பண்டாரம் கண்டீர் வலி வன் குறும்பர்கள் உள்ளீர்

பாணிக்க வேண்டா நட-மின் பண்டு அன்று பட்டினம் காப்பே

#448

உற்ற உறு பிணி நோய்காள் உமக்கு ஒன்று சொல்லுகேன் கேண்-மின்

பெற்றங்கள் மேய்க்கும் பிரானார் பேணும் திருக்கோயில் கண்டீர்

அற்றம் உரைக்கின்றேன் இன்னம் ஆழ் வினைகாள் உமக்கு இங்கு ஓர்

பற்று இல்லை கண்டீர் நட-மின் பண்டு அன்று பட்டினம் காப்பே

#449

கொங்கை சிறு வரை என்னும் பொதும்பினில் வீழ்ந்து வழுக்கி

அங்கு ஓர் முழையினில் புக்கிட்டு அழுந்தி கிடந்து உழல்வேனை

வங்க கடல் வண்ணன் அம்மான் வல்வினை ஆயின மாற்றி

பங்கப்படா வண்ணம் செய்தான் பண்டு அன்று பட்டினம் காப்பே

#450

ஏதங்கள் ஆயின எல்லாம் இறங்கல் இடுவித்து என்னுள்ளே

பீதக ஆடை பிரானார் பிரம குரு ஆகி வந்து

போது இல் கமலவன் நெஞ்சம் புகுந்தும் என் சென்னி திடரில்

பாத இலச்சினை வைத்தார் பண்டு அன்று பட்டினம் காப்பே

#451

உறகல் உறகல் உறகல் ஒண் சுடர் ஆழியே சங்கே

அற எறி நாந்தக வாளே அழகிய சார்ங்கமே தண்டே

இறவு படாமல் இருந்த எண்மர் உலோகபாலீர்காள்

பறவை அரையா உறகல் பள்ளியறை குறிக்கொள்-மின்

#452

அரவத்து அமளியினோடும் அழகிய பாற்கடலோடும்

அரவிந்த பாவையும் தானும் அகம்படி வந்து புகுந்து

பரவை திரை பல மோத பள்ளி கொள்கின்ற பிரானை

பரவுகின்றான் விட்டுசித்தன் பட்டினம் காவல் பொருட்டே

#453

துக்க சுழலையை சூழ்ந்து கிடந்த வலையை அற பறித்து

புக்கினில் புக்கு உன்னை கண்டுகொண்டேன் இனி போக விடுவதுண்டோ

மக்கள் அறுவரை கல்லிடைமோத இழந்தவள்-தன் வயிற்றில்

சிக்கென வந்து பிறந்து நின்றாய் திருமாலிருஞ்சோலை எந்தாய்

#454

வளைத்து வைத்தேன் இனி போகல் ஒட்டேன் உந்தன் இந்திரஞாலங்களால்

ஒளித்திடில் நின் திருவாணை கண்டாய் நீ ஒருவர்க்கும் மெய்யன் அல்லை

அளித்து எங்கும் நாடும் நகரமும் தம்முடை தீவினை தீர்க்கலுற்று

தெளித்து வலஞ்செய்யும் தீர்த்தம் உடை திருமாலிருஞ்சோலை எந்தாய்

#455

உனக்கு பணிசெய்திருக்கும் தவம் உடையேன் இனி போய் ஒருவன்

தனக்கு பணிந்து கடைத்தலை நிற்கை நின் சாயை அழிவு கண்டாய்

புன தினை கிள்ளி புது அவி காட்டி உன் பொன் அடி வாழ்க என்று

இன குறவர் புதியது உண்ணும் எழில் திருமாலிருஞ்சோலை எந்தாய்

#456

காதம் பலவும் திரிந்து உழன்றேற்கு அங்கு ஓர் நிழல் இல்லை நீர் இல்லை உன்

பாத நிழல் அல்லால் மற்றோர் உயிர்ப்பிடம் நான் எங்கும் காண்கின்றிலேன்

தூது சென்றாய் குரு பாண்டவர்க்காய் அங்கு ஓர் பொய் சுற்றம் பேசி சென்று

பேதம் செய்து எங்கும் பிணம் படைத்தாய் திருமாலிருஞ்சோலை எந்தாய்

#457

காலும் எழா கண்ண நீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கி குரல்

மேலும் எழா மயிர் கூச்சும் அறா என தோள்களும் வீழ்வு ஒழியா

மால் உகளாநிற்கும் என் மனனே உன்னை வாழ தலைப்பெய்திட்டேன்

சேல் உகளாநிற்கும் நீள் சுனை சூழ் திருமாலிருஞ்சோலை எந்தாய்

#458

எருத்து கொடி உடையானும் பிரமனும் இந்திரனும் மற்றும்

ஒருத்தரும் இ பிறவி என்னும் நோய்க்கு மருந்து அறிவாரும் இல்லை

மருத்துவனாய் நின்ற மா மணி வண்ணா மறுபிறவி தவிர

திருத்தி உன் கோயில் கடை புக பெய் திருமாலிருஞ்சோலை எந்தாய்

#459

அக்கரை என்னும் அனத்த கடலுள் அழுந்தி உன் பேர் அருளால்

இ கரை ஏறி இளைத்திருந்தேனை அஞ்சல் என்று கைகவியாய்

சக்கரமும் தட கைகளும் கண்களும் பீதக ஆடையொடும்

செக்கர் நிறத்து சிவப்பு உடையாய் திருமாலிருஞ்சோலை எந்தாய்

#460

எத்தனை காலமும் எத்தனை ஊழியும் இன்றொடு நாளை என்றே

இத்தனை காலமும் போய் கிறிப்பட்டேன் இனி உன்னை போகல் ஒட்டேன்

மைத்துனன்மார்களை வாழ்வித்து மாற்றலர் நூற்றுவரை கெடுத்தாய்

சித்தம் நின்-பாலது அறிதி அன்றே திருமாலிருஞ்சோலை எந்தாய்

#461

அன்று வயிற்றில் கிடந்திருந்தே அடிமைசெய்யலுற்றிருப்பன்

இன்று வந்து இங்கு உன்னை கண்டுகொண்டேன் இனி போகவிடுவதுண்டே

சென்று அங்கு வாணனை ஆயிரம் தோளும் திருச்சக்கரம்-அதனால்

தென்றி திசைதிசை வீழ செற்றாய் திருமாலிருஞ்சோலை எந்தாய்

#462

சென்று உலகம் குடைந்தாடும் சுனை திருமாலிருஞ்சோலை-தன்னுள்

நின்ற பிரான் அடி மேல் அடிமை திறம் நேர்பட விண்ணப்பம்செய்

பொன் திகழ் மாடம் பொலிந்து தோன்றும் புதுவை கோன் விட்டுசித்தன்

ஒன்றினோடு ஒன்பதும் பாட வல்லார் உலகம் அளந்தான் தமரே

#463

சென்னி ஓங்கு தண் திருவேங்கடம் உடையாய் உலகு

தன்னை வாழ நின்ற நம்பீ தாமோதரா சதிரா

என்னையும் என் உடைமையையும் உன் சக்கரப்பொறி ஒற்றிக்கொண்டு

நின் அருளே புரிந்திருந்தேன் இனி என் திருக்குறிப்பே

#464

பறவை ஏறு பரம்புருடா நீ என்னை கைக்கொண்ட பின்

பிறவி என்னும் கடலும் வற்றி பெரும்பதம் ஆகின்றதால்

இறவு செய்யும் பாவ காடு தீ கொளீஇ வேகின்றதால்

அறிவை என்னும் அமுத ஆறு தலைப்பற்றி வாய்க்கொண்டதே

#465

எம்மனா என் குலதெய்வமே என்னுடைய நாயகனே

நின்னுளேனாய் பெற்ற நன்மை இ உலகினில் ஆர் பெறுவார்

நம்மன் போலே வீழ்த்து அமுக்கும் நாட்டில் உள்ள பாவம் எல்லாம்

சும்மெனாதே கைவிட்டு ஓடி தூறுகள் பாய்ந்தனவே

#466

கடல் கடைந்து அமுதம் கொண்டு கலசத்தை நிறைத்தால் போல்

உடல் உருகி வாய் திறந்து மடுத்து உன்னை நிறைத்துக்கொண்டேன்

கொடுமை செய்யும் கூற்றமும் என் கோல் ஆடி குறுகப்பெறா

தட வரை தோள் சக்கரபாணீ சார்ங்க வில் சேவகனே

#467

பொன்னை கொண்டு உரைகல் மீதே நிறம் எழ உரைத்தால் போல்

உன்னை கொண்டு என் நாவகம்பால் மாற்று இன்றி உரைத்துக்கொண்டேன்

உன்னை கொண்டு என்னுள் வைத்தேன் என்னையும் உன்னில் இட்டேன்

என் அப்பா என் இருடீகேசா என் உயிர் காவலனே

#468

உன்னுடைய விக்கிரமம் ஒன்று ஒழியாமல் எல்லாம்

என்னுடைய நெஞ்சகம்-பால் சுவர் வழி எழுதிக்கொண்டேன்

மன் அடங்க மழு வலங்கை கொண்ட இராம நம்பீ

என்னிடைவந்து எம்பெருமான் இனி எங்கு போகின்றதே

#469

பருப்பதத்து கயல் பொறித்த பாண்டியர் குல பதி போல்

திரு பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்

மருப்பு ஒசித்தாய் மல் அடர்த்தாய் என்றுஎன்று உன் வாசகமே

உரு பொலிந்த நாவினேனை உனக்கு உரித்தாக்கினையே

#470

அனந்தன்-பாலும் கருடன்-பாலும் ஐது நொய்தாக வைத்து என்

மனம்-தன் உள்ளே வந்து வைகி வாழச்செய்தாய் எம்பிரான்

நினைந்து என்னுள்ளே நின்று நெக்கு கண்கள் அசும்பு ஒழுக

நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன் நேமி நெடியவனே

#471

பனி கடலில் பள்ளி கோளை பழகவிட்டு ஓடிவந்து என்

மன கடலில் வாழ வல்ல மாய மணாள நம்பீ

தனி கடலே தனி சுடரே தனி உலகே என்றுஎன்று

உனக்கு இடமாய் இருக்க என்னை உனக்கு உரித்தாக்கினையே

#472

தட வரைவாய் மிளிர்ந்து மின்னும் தவள நெடும் கொடி போல்

சுடர் ஒளியாய் நெஞ்சின் உள்ளே தோன்றும் என் சோதி நம்பி

வட தடமும் வைகுந்தமும் மதில் துவராபதியும்

இட வகைகள் இகழ்ந்திட்டு என்பால் இட வகை கொண்டனையே

#473

வேயர்-தங்கள் குலத்து உதித்த விட்டுசித்தன் மனத்தே

கோயில்கொண்ட கோவலனை கொழும் குளிர் முகில் வண்ணனை

ஆயர் ஏற்றை அமரர் கோவை அந்தணர்-தம் அமுதத்தினை

சாயை போல பாட வல்லார் தாமும் அணுக்கர்களே

ஆண்டாள் - திருப்பாவை

#474

மார்கழி திங்கள் மதி நிறைந்த நன்னாளால்

நீராட போதுவீர் போது-மினோ நேர் இழையீர்

சீர் மல்கும் ஆய்ப்பாடி செல்வ சிறுமீர்காள்

கூர் வேல் கொடும் தொழிலன் நந்தகோபன் குமரன்

ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை இளம் சிங்கம்

கார் மேனி செம் கண் கதிர் மதியம் போல் முகத்தான்

நாராயணனே நமக்கே பறை தருவான்

பாரோர் புகழ படிந்து ஏலோர் எம்பாவாய்

#475

வையத்து வாழ்வீர்காள் நாமும் நம் பாவைக்கு

செய்யும் கிரிசைகள் கேளீரோ பாற்கடலுள்

பையில் துயின்ற பரமன் அடி பாடி

நெய் உண்ணோம் பால் உண்ணோம் நாட்காலே நீராடி

மையிட்டு எழுதோம் மலர் இட்டு நாம் முடியோம்

செய்யாதன செய்யோம் தீக்குறளை சென்று ஓதோம்

ஐயமும் பிச்சையும் ஆம்தனையும் கைகாட்டி

உய்யுமாறு எண்ணி உகந்து ஏலோர் எம்பாவாய்

#476

ஓங்கி உலகு அளந்த உத்தமன் பேர் பாடி

நாங்கள் நம் பாவைக்கு சாற்றி நீராடினால்

தீங்கு இன்றி நாடு எல்லாம் திங்கள் மும்மாரி பெய்து

ஓங்கு பெரும் செந்நெலூடு கயல் உகள

பூம் குவளை போதில் பொறி வண்டு கண்படுப்ப

தேங்காதே புக்கு இருந்து சீர்த்த முலை பற்றி

வாங்க குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்

நீங்காத செல்வம் நிறைந்து ஏலோர் எம்பாவாய்

#477

ஆழி மழை கண்ணா ஒன்று நீ கை கரவேல்

ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்து ஏறி

ஊழி முதல்வன் உருவம் போல் மெய் கறுத்து

பாழியம் தோள் உடை பற்பநாபன் கையில்

ஆழி போல் மின்னி வலம்புரி போல் நின்று அதிர்ந்து

தாழாதே சார்ங்கம் உதைத்த சர மழை போல்

வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்

மார்கழி நீர் ஆட மகிழ்ந்து ஏலோர் எம்பாவாய்

#478

மாயனை மன்னு வடமதுரை மைந்தனை

தூய பெரு நீர் யமுனை துறைவனை

ஆயர் குலத்தினில் தோன்றும் அணி விளக்கை

தாயை குடல் விளக்கம் செய்த தாமோதரனை

தூயோமாய் வந்து நாம் தூ மலர் தூவி தொழுது

வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க

போய பிழையும் புகுதருவான் நின்றனவும்

தீயினில் தூசு ஆகும் செப்பு ஏலோர் எம்பாவாய்

#479

புள்ளும் சிலம்பின காண் புள் அரையன் கோயிலில்

வெள்ளை விளி சங்கின் பேர் அரவம் கேட்டிலையோ

பிள்ளாய் எழுந்திராய் பேய் முலை நஞ்சு உண்டு

கள்ள சகடம் கலக்கு அழிய கால் ஓச்சி

வெள்ளத்து அரவில் துயில் அமர்ந்த வித்தினை

உள்ளத்து கொண்டு முனிவர்களும் யோகிகளும்

மெள்ள எழுந்து அரி என்ற பேர் அரவம்

உள்ளம் புகுந்து குளிர்ந்து ஏலோர் எம்பாவாய்

#480

கீசுகீசு என்று எங்கும் ஆனைச்சாத்தன் கலந்து

பேசின பேச்சு அரவம் கேட்டிலையோ பேய் பெண்ணே

காசும் பிறப்பும் கலகலப்ப கைபேர்த்து

வாச நறும் குழல் ஆய்ச்சியர் மத்தினால்

ஓசை படுத்த தயிர் அரவம் கேட்டிலையோ

நாயக பெண்பிள்ளாய் நாராயணன் மூர்த்தி

கேசவனை பாடவும் நீ கேட்டே கிடத்தியோ

தேசம் உடையாய் திற ஏலோர் எம்பாவாய்

#481

கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறு வீடு

மேய்வான் பரந்தன காண் மிக்கு உள்ள பிள்ளைகளும்

போவான் போகின்றாரை போகாமல் காத்து உன்னை

கூவுவான் வந்து நின்றோம் கோதுகலம் உடைய

பாவாய் எழுந்திராய் பாடி பறை கொண்டு

மா வாய் பிளந்தானை மல்லரை மாட்டிய

தேவாதிதேவனை சென்று நாம் சேவித்தால்

ஆவா என்று ஆராய்ந்து அருள் ஏலோர் எம்பாவாய்

#482

தூமணி மாடத்து சுற்றும் விளக்கு எரிய

தூமம் கமழ துயில் அணை மேல் கண்வளரும்

மாமான் மகளே மணி கதவம் தாள் திறவாய்

மாமீர் அவளை எழுப்பீரோ உன் மகள் தான்

ஊமையோ அன்றி செவிடோ அனந்தலோ

ஏம பெரும் துயில் மந்திர பட்டாளோ

மா மாயன் மாதவன் வைகுந்தன் என்று என்று

நாமம் பலவும் நவின்று ஏலோர் எம்பாவாய்

#483

நோற்று சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்

மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்

நாற்ற துழாய் முடி நாராயணன் நம்மால்

போற்ற பறை தரும் புண்ணியனால் பண்டு ஒரு நாள்

கூற்றத்தின்வாய் வீழ்ந்த கும்பகருணனும்

தோற்றும் உனக்கே பெரும் துயில்தான் தந்தானோ

ஆற்ற அனந்தல் உடையாய் அரும் கலமே

தேற்றமாய் வந்து திற ஏலோர் எம்பாவாய்

#484

கற்று கறவை கணங்கள் பல கறந்து

செற்றார் திறல் அழிய சென்று செரு செய்யும்

குற்றம் ஒன்று இல்லாத கோவலர்-தம் பொன் கொடியே

புற்றரவு அல்குல் புன மயிலே போதராய்

சுற்றத்து தோழிமார் எல்லாரும் வந்து நின்

முற்றம் புகுந்து முகில் வண்ணன் பேர் பாட

சிற்றாதே பேசாதே செல்வ பெண்டாட்டி நீ

எற்றுக்கு உறங்கும் பொருள் ஏலோர் எம்பாவாய்

#485

கனைத்து இளம் கற்று எருமை கன்றுக்கு இரங்கி

நினைத்து முலை வழியே நின்று பால் சோர

நனைத்து இல்லம் சேறு ஆக்கும் நல் செல்வன் தங்காய்

பனி தலை வீழ நின் வாசல் கடை பற்றி

சினத்தினால் தென் இலங்கை கோமானை செற்ற

மனத்துக்கு இனியானை பாடவும் நீ வாய் திறவாய்

இனி தான் எழுந்திராய் ஈது என்ன பேர் உறக்கம்

அனைத்து இல்லத்தாரும் அறிந்து ஏலோர் எம்பாவாய்

#486

புள்ளின் வாய் கீண்டானை பொல்லா அரக்கனை

கிள்ளி களைந்தானை கீர்த்திமை பாடி போய்

பிள்ளைகள் எல்லாரும் பாவை களம் புக்கார்

வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று

புள்ளும் சிலம்பின காண் போது அரி கண்ணினாய்

குள்ள குளிர குடைந்து நீராடாதே

பள்ளி கிடத்தியோ பாவாய் நீ நன்னாளால்

கள்ளம் தவிர்ந்து கலந்து ஏலோர் எம்பாவாய்

#487

உங்கள் புழைக்கடை தோட்டத்து வாவியுள்

செங்கழுநீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பின காண்

செங்கற்பொடி கூறை வெண் பல் தவத்தவர்

தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்

எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும்

நங்காய் எழுந்திராய் நாணாதாய் நாவுடையாய்

சங்கொடு சக்கரம் ஏந்தும் தட கையன்

பங்கய கண்ணானை பாடு ஏலோர் எம்பாவாய்

#488

எல்லே இளம் கிளியே இன்னம் உறங்குதியோ

சில் என்று அழையேன்-மின் நங்கைமீர் போதர்கின்றேன்

வல்லை உன் கட்டுரைகள் பண்டே உன் வாய் அறிதும்

வல்லீர்கள் நீங்களே நானே தான் ஆயிடுக

ஒல்லை நீ போதாய் உனக்கு என்ன வேறு உடையை

எல்லாரும் போந்தாரோ போந்தார் போந்து எண்ணிக்கொள்

வல் ஆனை கொன்றானை மாற்றாரை மாற்று அழிக்க

வல்லானை மாயனை பாடு ஏலோர் எம்பாவாய்

#489

நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய

கோயில் காப்பானே கொடி தோன்றும் தோரண

வாயில் காப்பானே மணி கதவம் தாள் திறவாய்

ஆயர் சிறுமியரோமுக்கு அறை பறை

மாயன் மணி வண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்

தூயோமாய் வந்தோம் துயிலெழ பாடுவான்

வாயால் முன்னமுன்னம் மாற்றாதே அம்மா நீ

நேய நிலை கதவம் நீக்கு ஏலோர் எம்பாவாய்

#490

அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும்

எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்

கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தே குலவிளக்கே

எம்பெருமாட்டி யசோதாய் அறிவுறாய்

அம்பரம் ஊடு அறுத்து ஓங்கி உலகு அளந்த

உம்பர் கோமானே உறங்காது எழுந்திராய்

செம்பொன் கழல் அடி செல்வா பலதேவா

உம்பியும் நீயும் உகந்து ஏலோர் எம்பாவாய்

#491

உந்து மத களிற்றன் ஓடாத தோள் வலியன்

நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்

கந்தம் கமழும் குழலீ கடை திறவாய்

வந்து எங்கும் கோழி அழைத்தன காண் மாதவி

பந்தர் மேல் பல்-கால் குயில் இனங்கள் கூவின காண்

பந்தார் விரலி உன் மைத்துனன் பேர் பாட

செந்தாமரை கையால் சீர் ஆர் வளை ஒலிப்ப

வந்து திறவாய் மகிழ்ந்து ஏலோர் எம்பாவாய்

#492

குத்துவிளக்கு எரிய கோட்டு கால் கட்டில் மேல்

மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேல் ஏறி

கொத்து அலர் பூம் குழல் நப்பின்னை கொங்கை மேல்

வைத்து கிடந்த மலர் மார்பா வாய் திறவாய்

மை தடம் கண்ணினாய் நீ உன் மணாளனை

எத்தனை போதும் துயில் எழ ஒட்டாய் காண்

எத்தனையேலும் பிரிவு ஆற்றகில்லாயால்

தத்துவம் அன்று தகவு ஏலோர் எம்பாவாய்

#493

முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று

கப்பம் தவிர்க்கும் கலியே துயில் எழாய்

செப்பம் உடையாய் திறல் உடையாய் செற்றார்க்கு

வெப்பம் கொடுக்கும் விமலா துயில் எழாய்

செப்பு அன்ன மென் முலை செ வாய் சிறு மருங்குல்

நப்பின்னை நங்காய் திருவே துயில் எழாய்

உக்கமும் தட்டொளியும் தந்து உன் மணாளனை

இப்போதே எம்மை நீர் ஆட்டு ஏலோர் எம்பாவாய்

#494

ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீது அளிப்ப

மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்

ஆற்ற படைத்தான் மகனே அறிவுறாய்

ஊற்றம் உடையாய் பெரியாய் உலகினில்

தோற்றமாய் நின்ற சுடரே துயில் எழாய்

மாற்றார் உனக்கு வலி தொலைந்து உன் வாசல்-கண்

ஆற்றாது வந்து உன் அடிபணியுமா போலே

போற்றி யாம் வந்தோம் புகழ்ந்து ஏலோர் எம்பாவாய்

#495

அம் கண் மா ஞாலத்து அரசர் அபிமான

பங்கமாய் வந்து நின் பள்ளி கட்டில் கீழே

சங்கம் இருப்பார் போல் வந்து தலைப்பெய்தோம்

கிங்கிணிவாய் செய்த தாமரை பூ போலே

செம் கண் சிறு சிறிதே எம் மேல் விழியாவோ

திங்களும் ஆதித்தியனும் எழுந்தால் போல்

அம் கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல் நோக்குதியேல்

எங்கள் மேல் சாபம் இழிந்து ஏலோர் எம்பாவாய்

#496

மாரி மலை முழைஞ்சில் மன்னி கிடந்து உறங்கும்

சீரிய சிங்கம் அறிவுற்று தீ விழித்து

வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி

மூரி நிமிர்ந்து முழங்கி புறப்பட்டு

போதருமா போலே நீ பூவை பூ வண்ணா உன்

கோயில் நின்று இங்ஙனே போந்தருளி கோப்பு உடைய

சீரிய சிங்காசனத்து இருந்து யாம் வந்த

காரியம் ஆராய்ந்து அருள் ஏலோர் எம்பாவாய்

#497

அன்று இ உலகம் அளந்தாய் அடி போற்றி

சென்று அங்கு தென் இலங்கை செற்றாய் திறல் போற்றி

பொன்ற சகடம் உதைத்தாய் புகழ் போற்றி

கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி

குன்று குடையா எடுத்தாய் குணம் போற்றி

வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி

என்றுஎன்று உன் சேவகமே ஏத்தி பறை கொள்வான்

இன்று யாம் வந்தோம் இரங்கு ஏலோர் எம்பாவாய்

#498

ஒருத்தி மகனாய் பிறந்து ஓர் இரவில்

ஒருத்தி மகனாய் ஒளித்து வளர

தரிக்கிலான் ஆகி தான் தீங்கு நினைந்த

கருத்தை பிழைப்பித்து கஞ்சன் வயிற்றில்

நெருப்பு என்ன நின்ற நெடுமாலே உன்னை

அருத்தித்து வந்தோம் பறை தருதியாகில்

திரு தக்க செல்வமும் சேவகமும் யாம் பாடி

வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து ஏலோர் எம்பாவாய்

#499

மாலே மணி வண்ணா மார்கழி நீர் ஆடுவான்

மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்

ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன

பால் அன்ன வண்ணத்து உன் பாஞ்சசன்னியமே

போல்வன சங்கங்கள் போய்ப்பாடு உடையனவே

சால பெரும் பறையே பல்லாண்டு இசைப்பாரே

கோல விளக்கே கொடியே விதானமே

ஆலின் இலையாய் அருள் ஏலோர் எம்பாவாய்

#500

கூடாரை வெல்லும் சீர் கோவிந்தா உன்தன்னை

பாடி பறைகொண்டு யாம் பெறு சம்மானம்

நாடு புகழும் பரிசினால் நன்றாக

சூடகமே தோள் வளையே தோடே செவி பூவே

பாடகமே என்று அனைய பல் கலனும் யாம் அணிவோம்

ஆடை உடுப்போம் அதன் பின்னே பால் சோறு

மூட நெய் பெய்து முழங்கை வழிவார

கூடியிருந்து குளிர்ந்து ஏலோர் எம்பாவாய்

#501

கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்போம்

அறிவு ஒன்றும் இல்லாத ஆய் குலத்து உன்தன்னை

பிறவி பெறுந்தனை புண்ணியம் யாம் உடையோம்

குறைவு ஒன்றும் இல்லாத கோவிந்தா உன்தன்னோடு

உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது

அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னை

சிறுபேர் அழைத்தனவும் சீறியருளாதே

இறைவா நீ தாராய் பறை ஏலோர் எம்பாவாய்

#502

சிற்றம் சிறுகாலே வந்து உன்னை சேவித்து உன்

பொற்றாமரை அடியே போற்றும் பொருள் கேளாய்

பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்து நீ

குற்றேவல் எங்களை கொள்ளாமல் போகாது

இற்றை பறைகொள்வான் அன்று காண் கோவிந்தா

எற்றைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் உன்தன்னோடு

உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்

மற்றை நம் காமங்கள் மாற்று ஏலோர் எம்பாவாய்

#503

வங்க கடல் கடைந்த மாதவனை கேசவனை

திங்கள் திருமுகத்து சே இழையார் சென்று இறைஞ்சி

அங்கு பறைகொண்ட ஆற்றை அணி புதுவை

பைம் கமல தண் தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன

சங்க தமிழ் மாலை முப்பதும் தப்பாமே

இங்கு இ பரிசு உரைப்பார் ஈரிரண்டு மால் வரை தோள்

செம் கண் திருமுகத்து செல்வ திருமாலால்

எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர் எம்பாவாய்

ஆண்டாள் - நாச்சியார் திருமொழி

#504

தை ஒரு திங்களும் தரை விளக்கி தண் மண்டலம் இட்டு மாசி முன்னாள்

ஐய நுண் மணல் கொண்டு தெரு அணிந்து அழகினுக்கு அலங்கரித்து அனங்கதேவா

உய்யவும் ஆம்-கொலோ என்று சொல்லி உன்னையும் உம்பியையும் தொழுதேன்

வெய்யது ஓர் தழல் உமிழ் சக்கர கை வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே

#505

வெள்ளை நுண் மணல் கொண்டு தெரு அணிந்து வெள்வரைப்பதன் முன்னம் துறை படிந்து

முள்ளும் இல்லா சுள்ளி எரி மடுத்து முயன்று உன்னை நோற்கின்றேன் காமதேவா

கள் அவிழ் பூம் கணை தொடுத்துக்கொண்டு கடல் வண்ணன் என்பது ஓர் பேர் எழுதி

புள்ளினை வாய் பிளந்தான் என்பது ஓர் இலக்கினில் புக என்னை எய்கிற்றியே

#506

மத்த நன் நறு மலர் முருக்க மலர் கொண்டு முப்போதும் உன் அடி வணங்கி

தத்துவம் இலி என்று நெஞ்சு எரிந்து வாசகத்து அழித்து உன்னை வைதிடாமே

கொத்து அலர் பூம் கணை தொடுத்துக்கொண்டு கோவிந்தன் என்பது ஓர் பேர் எழுதி

வித்தகன் வேங்கட வாணன் என்னும் விளக்கினில் புக என்னை விதிக்கிற்றியே

#507

சுவரில் புராண நின் பேர் எழுதி சுறவ நல் கொடிக்களும் துரங்கங்களும்

கவரி பிணாக்களும் கருப்பு வில்லும் காட்டி தந்தேன் கண்டாய் காமதேவா

அவரை பிராயம் தொடங்கி என்றும் ஆதரித்து எழுந்த என் தட முலைகள்

துவரை பிரானுக்கே சங்கற்பித்து தொழுது வைத்தேன் ஒல்லை விதிக்கிற்றியே

#508

வானிடை வாழும் அ வானவர்க்கு மறையவர் வேள்வியில் வகுத்த அவி

கானிடை திரிவது ஓர் நரி புகுந்து கடப்பதும் மோப்பதும் செய்வது ஒப்ப

ஊனிடை ஆழி சங்கு உத்தமர்க்கு என்று உன்னித்து எழுந்த என் தட முலைகள்

மானிடவர்க்கு என்று பேச்சு படில் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே

#509

உருவு உடையார் இளையார்கள் நல்லார் ஓத்து வல்லார்களை கொண்டு வைகல்

தெருவிடை எதிர்கொண்டு பங்குனி நாள் திருந்தவே நோற்கின்றேன் காமதேவா

கரு உடை முகில் வண்ணன் காயா வண்ணன் கருவிளை போல் வண்ணன் கமல வண்ண

திரு உடை முகத்தினில் திருக்கண்களால் திருந்தவே நோக்கு எனக்கு அருளு கண்டாய்

#510

காய் உடை நெல்லொடு கரும்பு அமைத்து கட்டி அரிசி அவல் அமைத்து

வாய் உடை மறையவர் மந்திரத்தால் மன்மதனே உன்னை வணங்குகின்றேன்

தேயம் முன் அளந்தவன் திரிவிக்கிரமன் திருக்கைகளால் என்னை தீண்டும் வண்ணம்

சாய் உடை வயிறும் என் தட முலையும் தரணியில் தலை புகழ் தரக்கிற்றியே

#511

மாசு உடை உடம்பொடு தலை உலறி வாய்ப்புறம் வெளுத்து ஒருபோதும் உண்டு

தேசு உடை திறல் உடை காமதேவா நோற்கின்ற நோன்பினை குறிக்கொள் கண்டாய்

பேசுவது ஒன்று உண்டு இங்கு எம்பெருமான் பெண்மையை தலை உடைத்து ஆக்கும் வண்ணம்

கேசவ நம்பியை கால் பிடிப்பாள் என்னும் இ பேறு எனக்கு அருளு கண்டாய்

#512

தொழுது முப்போதும் உன் அடி வணங்கி தூ மலர் தூய் தொழுது ஏத்துகின்றேன்

பழுது இன்றி பாற்கடல் வண்ணனுக்கே பணி செய்து வாழ பெறாவிடில் நான்

அழுதுஅழுது அலமந்து அம்மா வழங்க ஆற்றவும் அது உனக்கு உறைக்கும் கண்டாய்

உழுவது ஓர் எருத்தினை நுகங்கொடு பாய்ந்து ஊட்டம் இன்றி துரந்தால் ஒக்குமே

#513

கருப்பு வில் மலர் கணை காமவேளை கழல் இணை பணிந்து அங்கு ஓர் கரி அலற

மருப்பினை ஒசித்து புள் வாய்பிளந்த மணி வண்ணற்கு என்னை வகுத்திடு என்று

பொருப்பு அன்ன மாடம் பொலிந்து தோன்றும் புதுவையர் கோன் விட்டுசித்தன் கோதை

விருப்பு உடை இன் தமிழ் மாலை வல்லார் விண்ணவர் கோன் அடி நண்ணுவரே

#514

நாமம் ஆயிரம் ஏத்த நின்ற நாராயணா நரனே உன்னை

மாமி தன் மகன் ஆக பெற்றால் எமக்கு வாதை தவிருமே

காமன் போதரு காலம் என்று பங்குனி நாள் கடை பாரித்தோம்

தீமை செய்யும் சிரீதரா எங்கள் சிற்றில் வந்து சிதையேலே

#515

இன்று முற்றும் முதுகு நோவ இருந்து இழைத்த இ சிற்றிலை

நன்றும் கண்ணுற நோக்கி நாம் கொளும் ஆர்வம்-தன்னை தணிகிடாய்

அன்று பாலகன் ஆகி ஆலிலை மேல் துயின்ற எம் ஆதியாய்

என்றும் உன்தனக்கு எங்கள் மேல் இரக்கம் எழாதது எம் பாவமே

#516

குண்டு நீர் உறை கோளரீ மத யானை கோள் விடுத்தாய் உன்னை

கண்டு மால் உறுவோங்களை கடைக்கண்களால் இட்டு வாதியேல்

வண்டல் நுண் மணல் தெள்ளி யாம் வளை கைகளால் சிரமப்பட்டோம்

தெண் திரை கடல் பள்ளியாய் எங்கள் சிற்றில் வந்து சிதையேலே

#517

பெய்யு மா முகில் போல் வண்ணா உன்தன் பேச்சும் செய்கையும் எங்களை

மையல் ஏற்றி மயக்க உன் முகம் மாய மந்திரம்தான்-கொலோ

நொய்யர் பிள்ளைகள் என்பதற்கு உன்னை நோவ நாங்கள் உரைக்கிலோம்

செய்ய தாமரை கண்ணினாய் எங்கள் சிற்றில் வந்து சிதையேலே

#518

வெள்ளை நுண் மணல் கொண்டு சிற்றில் விசித்திரப்பட வீதி வாய்

தெள்ளி நாங்கள் இழைத்த கோலம் அழித்தியாகிலும் உன்தன் மேல்

உள்ளம் ஓடி உருகல் அல்லால் உரோடம் ஒன்றும் இலோம் கண்டாய்

கள்ள மாதவா கேசவா உன் முகத்தன கண்கள் அல்லவே

#519

முற்று இலாத பிள்ளைகளோம் முலை போந்திலாதோமை நாள்-தொறும்

சிற்றில் மேல் இட்டு கொண்டு நீ சிறிது உண்டு திண் என நாம் அது

கற்றிலோம் கடலை அடைத்து அரக்கர் குலங்களை முற்றவும்

செற்று இலங்கையை பூசல் ஆக்கிய சேவகா எம்மை வாதியேல்

#520

பேதம் நன்கு அறிவார்களோடு இவை பேசினால் பெரிது இன் சுவை

யாதும் ஒன்று அறியாத பிள்ளைகளோமை நீ நலிந்து என் பயன்

ஓத மா கடல் வண்ணா உன் மணவாட்டிமாரொடு சூழறும்

சேது பந்தம் திருத்தினாய் எங்கள் சிற்றில் வந்து சிதையேலே

#521

வட்ட வாய் சிறு தூதையோடு சிறு சுளகும் மணலும் கொண்டு

இட்டமா விளையாடுவோங்களை சிற்றில் ஈடழித்து என் பயன்

தொட்டு உதைத்து நலியேல் கண்டாய் சுடர் சக்கரம் கையில் ஏந்தினாய்

கட்டியும் கைத்தால் இன்னாமை அறிதியே கடல் வண்ணனே

#522

முற்றத்து ஊடு புகுந்து நின் முகம் காட்டி புன்முறுவல் செய்து

சிற்றிலோடு எங்கள் சிந்தையும் சிதைக்கக்கடவையோ கோவிந்தா

முற்ற மண்ணிடம் தாவி விண்ணுற நீண்டு அளந்து கொண்டாய் எம்மை

பற்றி மெய் பிணக்கு இட்டக்கால் இந்த பக்கம் நின்றவர் என் சொல்லார்

#523

சீதை வாய் அமுதம் உண்டாய் எங்கள் சிற்றில் நீ சிதையேல் என்று

வீதிவாய் விளையாடும் ஆயர் சிறுமியர் மழலை சொல்லை

வேத வாய் தொழிலார்கள் வாழ் வில்லிபுத்தூர் மன் விட்டுசித்தன்-தன்

கோதை வாய் தமிழ் வல்லவர் குறைவு இன்றி வைகுந்தம் சேர்வரே

#524

கோழி அழைப்பதன் முன்னம் குடைந்து நீராடுவான் போந்தோம்

ஆழியம் செல்வன் எழுந்தான் அரவு அணை மேல் பள்ளி கொண்டாய்

ஏழைமை ஆற்றவும் பட்டோம் இனி என்றும் பொய்கைக்கு வாரோம்

தோழியும் நானும் தொழுதோம் துகிலை பணித்தருளாயே

#525

இது என் புகுந்தது இங்கு அந்தோ இ பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்

மதுவின் துழாய் முடி மாலே மாயனே எங்கள் அமுதே

விதி இன்மையால் அது மாட்டோம் வித்தக பிள்ளாய் விரையேல்

குதிகொண்டு அரவில் நடித்தாய் குருந்திடை கூறை பணியாய்

#526

எல்லே ஈது என்ன இளமை எம் அனைமார் காணில் ஒட்டார்

பொல்லாங்கு ஈது என்று கருதாய் பூம் குருந்து ஏறி இருத்தி

வில்லால் இலங்கை அழித்தாய் வேண்டியது எல்லாம் தருவோம்

பல்லாரும் காணாமே போவோம் பட்டை பணித்தருளாயே

#527

பரக்க விழித்து எங்கும் நோக்கி பலர் குடைந்து ஆடும் சுனையில்

அரக்க நில்லா கண்ண நீர்கள் அலமருகின்றவா பாராய்

இரக்கமேல் ஒன்றும் இலாதாய் இலங்கை அழித்த பிரானே

குரக்கு அரசு ஆவது அறிந்தோம் குருந்திடை கூறை பணியாய்

#528

காலை கதுவிடுகின்ற கயலொடு வாளை விரவி

வேலை பிடித்து என்னைமார்கள் ஓட்டில் என்ன விளையாட்டோ

கோல சிற்றாடை பலவும் கொண்டு நீ ஏறியிராதே

கோலம் கரிய பிரானே குருந்திடை கூறை பணியாய்

#529

தடத்து அவிழ் தாமரை பொய்கை தாள்கள் எம் காலை கதுவ

விட தேள் எறிந்தாலே போல வேதனை ஆற்றவும் பட்டோம்

குடத்தை எடுத்து ஏறவிட்டு கூத்தாட வல்ல எம் கோவே

படிற்றை எல்லாம் தவிர்ந்து எங்கள் பட்டை பணித்தருளாயே

#530

நீரிலே நின்று அயர்க்கின்றோம் நீதி அல்லாதன செய்தாய்

ஊரகம் சாலவும் சேய்த்தால் ஊழி எல்லாம் உணர்வானே

ஆர்வம் உனக்கே உடையோம் அம்மனைமார் காணில் ஒட்டார்

போர விடாய் எங்கள் பட்டை பூம் குருந்து ஏறியிராதே

#531

மாமிமார் மக்களே அல்லோம் மற்றும் இங்கு எல்லாரும் போந்தார்

தூ மலர் கண்கள் வளர தொல்லை இரா துயில்வானே

சேமமேல் அன்று இது சால சிக்கென நாம் இது சொன்னோம்

கோமள ஆயர் கொழுந்தே குருந்திடை கூறை பணியாய்

#532

கஞ்சன் வலைவைத்த அன்று கார் இருள் எல்லில் பிழைத்து

நெஞ்சு துக்கம் செய்ய போந்தாய் நின்ற இ கன்னியரோமை

அஞ்ச உரப்பாள் அசோதை ஆணாட விட்டிட்டு இருக்கும்

வஞ்சக பேய்ச்சி-பால் உண்ட மசிமையிலீ கூறை தாராய்

#533

கன்னியரோடு எங்கள் நம்பி கரிய பிரான் விளையாட்டை

பொன் இயல் மாடங்கள் சூழ்ந்த புதுவையர் கோன் பட்டன்

கோதை

இன்னிசையால் சொன்ன மாலை ஈரைந்தும் வல்லவர் தாம் போய்

மன்னிய மாதவனோடு வைகுந்தம் புக்கு இருப்பாரே

#534

தெள்ளியார் பலர் கைதொழும் தேவனார்

வள்ளல் மாலிருஞ்சோலை மணாளனார்

பள்ளி கொள்ளும் இடத்து அடி கொட்டிட

கொள்ளுமாகில் நீ கூடிடு கூடலே

#535

காட்டில் வேங்கடம் கண்ணபுர நகர்

வாட்டம் இன்றி மகிழ்ந்து உறை வாமனன்

ஓட்டரா வந்து என் கை பற்றி தன்னொடும்

கூட்டு மாகில் நீ கூடிடு கூடலே

#536

பூ மகன் புகழ் வானவர் போற்றுதற்கு

ஆ மகன் அணி வாள் நுதல் தேவகி

மா மகன் மிகு சீர் வசுதேவர்-தம்

கோமகன் வரில் கூடிடு கூடலே

#537

ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிட

பூத்த நீள் கடம்பு ஏறி புக பாய்ந்து

வாய்த்த காளியன் மேல் நடம் ஆடிய

கூத்தனார் வரில் கூடிடு கூடலே

#538

மாட மாளிகை சூழ் மதுரை பதி

நாடி நம் தெருவின் நடுவே வந்திட்டு

ஓடை மா மத யானை உதைத்தவன்

கூடுமாகில் நீ கூடிடு கூடலே

#539

அற்றவன் மருதம் முறிய நடை

கற்றவன் கஞ்சனை வஞ்சனையில்

செற்றவன் திகழும் மதுரை பதி

கொற்றவன் வரில் கூடிடு கூடலே

#540

அன்று இன்னாதன செய் சிசுபாலனும்

நின்ற நீள் மருதும் எருதும் புள்ளும்

வென்றி வேல் விறல் கஞ்சனும் வீழ முன்

கொன்றவன் வரில் கூடிடு கூடலே

#541

ஆவல் அன்பு உடையார் தம் மனத்து அன்றி

மேவலன் விரை சூழ் துவராபதி

காவலன் கன்று மேய்த்து விளையாடும்

கோவலன் வரில் கூடிடு கூடலே

#542

கொண்ட கோல குறள் உருவாய் சென்று

பண்டு மாவலி-தன் பெரு வேள்வியில்

அண்டமும் நிலனும் அடி ஒன்றினால்

கொண்டவன் வரில் கூடிடு கூடலே

#543

பழகு நான்மறையின் பொருளாய் மதம்

ஒழுகு வாரணம் உய்ய அளித்த எம்

அழகனார் அணி ஆய்ச்சியர் சிந்தையுள்

குழகனார் வரில் கூடிடு கூடலே

#544

ஊடல் கூடல் உணர்தல் புணர்தலை

நீடு நின்ற நிறை புகழ் ஆய்ச்சியர்

கூடலை குழல் கோதை முன் கூறிய

பாடல் பத்தும் வல்லார்க்கு இல்லை பாவமே

#545

மன்னு பெரும் புகழ் மாதவன் மா மணி வண்ணன் மணி முடி மைந்தன்

தன்னை உகந்தது காரணமாக என் சங்கு இழக்கும் வழக்கு உண்டே

புன்னை குருக்கத்தி ஞாழல் செருந்தி பொதும்பினில் வாழும் குயிலே

பன்னி எப்போதும் இருந்து விரைந்து என் பவள வாயன் வர கூவாய்

#546

வெள்ளை விளி சங்கு இடம் கையில் கொண்ட விமலன் எனக்கு உரு காட்டான்

உள்ளம் புகுந்து என்னை நைவித்து நாளும் உயிர்ப்பெய்து கூத்தாட்டு காணும்

கள் அவிழ் செண்பகப்பூ மலர் கோதி களித்து இசை பாடும் குயிலே

மெள்ள இருந்து மிழற்றி மிழற்றாது என் வேங்கடவன் வர கூவாய்

#547

மாதலி தேர் முன்பு கோல்கொள்ள மாயன் இராவணன் மேல் சர மாரி

தாய் தலை அற்று அற்று வீழ தொடுத்த தலைவன் வர எங்கும் காணேன்

போது அலர் காவில் புது மணம் நாற பொறி வண்டின் காமரம் கேட்டு உன்

காதலியோடு உடன் வாழ் குயிலே என் கருமாணிக்கம் வர கூவாய்

#548

என்பு உருகி இன வேல் நெடும் கண்கள் இமை பொருந்தா பல நாளும்

துன்ப கடல் புக்கு வைகுந்தன் என்பது ஓர் தோணி பெறாது உழல்கின்றேன்

அன்பு உடையாரை பிரிவுறு நோயது நீயும் அறிதி குயிலே

பொன் புரை மேனி கருள கொடி உடை புண்ணியனை வர கூவாய்

#549

மெல் நடை அன்னம் பரந்து விளையாடும் வில்லிபுத்தூர் உறைவான் தன்

பொன்னடி காண்பது ஓர் ஆசையினால் என் பொரு கயல் கண் இணை துஞ்சா

இன் அடிசிலொடு பால் அமுது ஊட்டி எடுத்த என் கோல கிளியை

உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே உலகு அளந்தான் வர கூவாய்

#550

எ திசையும் அமரர் பணிந்து ஏத்தும் இருடீகேசன் வலி செய்ய

முத்து அன்ன வெண் முறுவல் செய்ய வாயும் முலையும் அழகு அழிந்தேன் நான்

கொத்து அலர் காவில் மணி தடம் கண்படை கொள்ளும் இளம் குயிலே என்

தத்துவனை வர கூகிற்றியாகில் தலை அல்லால் கைம்மாறு இலேனே

#551

பொங்கிய பாற்கடல் பள்ளிகொள்வானை புணர்வது ஓர் ஆசையினால் என்

கொங்கை கிளர்ந்து குமைத்து குதுகலித்து ஆவியை ஆகுலம் செய்யும்

அம் குயிலே உனக்கு என்ன மறைந்து உறைவு ஆழியும் சங்கும் ஒண் தண்டும்

தங்கிய கையவனை வர கூவில் நீ சால தருமம் பெறுதி

#552

சார்ங்கம் வளைய வலிக்கும் தட கை சதுரன் பொருத்தம் உடையன்

நாங்கள் எம் இல்லிருந்து ஒட்டிய கச்சங்கம் நானும் அவனும் அறிதும்

தேம் கனி மாம் பொழில் செம் தளிர் கோதும் சிறு குயிலே திருமாலை

ஆங்கு விரைந்து ஒல்லை கூகிற்றியாகில் அவனை நான் செய்வன காணே

#553

பைங்கிளி வண்ணன் சிரீதரன் என்பது ஓர் பாசத்து அகப்பட்டிருந்தேன்

பொங்கு ஒளி வண்டு இரைக்கும் பொழில் வாழ் குயிலே குறிக்கொண்டு இது நீ கேள்

சங்கொடு சக்கரத்தான் வர கூவுதல் பொன் வளை கொண்டு தருதல்

இங்கு உள்ள காவினில் வாழ கருதில் இரண்டத்து ஒன்றேல் திண்ணம் வேண்டும்

#554

அன்று உலகம் அளந்தானை உகந்து அடிமை-கண் அவன் வலி செய்ய

தென்றலும் திங்களும் ஊடறுத்து என்னை நலியும் முறைமை அறியேன்

என்றும் இ காவில் இருந்திருந்து என்னை ததைத்தாதே நீயும் குயிலே

இன்று நாராயணனை வர கூவாயேல் இங்குத்தை நின்றும் துரப்பன்

#555

விண்ணுற நீண்டு அடி தாவிய மைந்தனை வேல் கண் மடந்தை விரும்பி

கண்ணுற என் கடல் வண்ணனை கூவு கரும் குயிலே என்ற மாற்றம்

பண்ணுறு நான்மறையோர் புதுவை மன்னன் பட்டர்பிரான் கோதை சொன்ன

நண்ணுறு வாசக மாலை வல்லார் நமோ நாராயணாய என்பாரே

#556

வாரணம் ஆயிரம் சூழ வலஞ்செய்து

நாரணன் நம்பி நடக்கின்றான் என்று எதிர்

பூரண பொன் குடம் வைத்து புறம் எங்கும்

தோரணம் நாட்ட கனா கண்டேன் தோழீ நான்

#557

நாளை வதுவை மணம் என்று நாள் இட்டு

பாளை கமுகு பரிசு உடை பந்தல் கீழ்

கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர்

காளை புகுத கனா கண்டேன் தோழீ நான்

#558

இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் எல்லாம்

வந்திருந்து என்னை மகள்பேசி மந்திரித்து

மந்திர கோடி உடுத்தி மண மாலை

அந்தரி சூட்ட கனா கண்டேன் தோழீ நான்

#559

நால் திசை தீர்த்தம் கொணர்ந்து நனி நல்கி

பார்ப்பன சிட்டர்கள் பல்லார் எடுத்து ஏத்தி

பூ புனை கண்ணி புனிதனோடு என்தன்னை

காப்பு நாண் கட்ட கனா கண்டேன் தோழீ நான்

#560

கதிர் ஒளி தீபம் கலசம் உடன் ஏந்தி

சதிர் இள மங்கையர் தாம் வந்து எதிர்கொள்ள

மதுரையார் மன்னன் அடிநிலை தொட்டு எங்கும்

அதிர புகுத கனா கண்டேன் தோழீ நான்

#561

மத்தளம் கொட்ட வரி சங்கம் நின்று ஊத

முத்து உடை தாமம் நிரை தாழ்ந்த பந்தல் கீழ்

மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து என்னை

கைத்தலம் பற்ற கனா கண்டேன் தோழீ நான்

#562

வாய் நல்லார் நல்ல மறை ஓதி மந்திரத்தால்

பாசிலை நாணல் படுத்து பரிதி வைத்து

காய் சின மா களிறு அன்னான் என் கைப்பற்றி

தீ வலம் செய்ய கனா கண்டேன் தோழீ நான்

#563

இம்மைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் பற்று ஆவான்

நம்மை உடையவன் நாராயணன் நம்பி

செம்மை உடைய திருக்கையால் தாள் பற்றி

அம்மி மிதிக்க கனா கண்டேன் தோழீ நான்

#564

வரி சிலை வாள் முகத்து என்னைமார் தாம் வந்திட்டு

எரி முகம் பாரித்து என்னை முன்னே நிறுத்தி

அரி முகன் அச்சுதன் கை மேல் என் கை வைத்து

பொரி முகந்து அட்ட கனா கண்டேன் தோழீ நான்

#565

குங்குமம் அப்பி குளிர் சாந்தம் மட்டித்து

மங்கல வீதி வலம் செய்து மா மண நீர்

அங்கு அவனோடும் உடன் சென்று அங்கு ஆனை மேல்

மஞ்சனமாட்ட கனா கண்டேன் தோழீ நான்

#566

ஆயனுக்காக தான் கண்ட கனாவினை

வேயர் புகழ் வில்லிபுத்தூர் கோன் கோதை சொல்

தூய தமிழ் மாலை ஈரைந்தும் வல்லவர்

வாயும் நன் மக்களை பெற்று மகிழ்வரே

#567

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ

திரு பவள செ வாய்தான் தித்தித்திருக்குமோ

மருப்பு ஒசித்த மாதவன்-தன் வாய் சுவையும் நாற்றமும்

விருப்புற்று கேட்கின்றேன் சொல் ஆழி வெண் சங்கே

#568

கடலில் பிறந்து கருதாது பஞ்சசனன்

உடலில் வளர்ந்துபோய் ஊழியான் கைத்தல

திடரில் குடியேறி தீய அசுரர்

நடலை பட முழங்கும் தோற்றத்தாய் நல் சங்கே

#569

தட வரையின் மீதே சரற்கால சந்திரன்

இடை உவாவில் வந்து எழுந்தாலே போல் நீயும்

வடமதுரையார் மன்னன் வாசுதேவன் கையில்

குடியேறி வீற்றிருந்தாய் கோல பெரும் சங்கே

#570

சந்திர மண்டலம் போல் தாமோதரன் கையில்

அந்தரம் ஒன்று இன்றி ஏறி அவன் செவியில்

மந்திரம் கொள்வாயே போலும் வலம்புரியே

இந்திரனும் உன்னோடு செல்வத்துக்கு ஏலானே

#571

உன்னோடு உடனே ஒரு கடலில் வாழ்வாரை

இன்னார் இனையார் என்று எண்ணுவார் இல்லை காண்

மன் ஆகி நின்ற மதுசூதன் வாய் அமுதம்

பன்னாளும் உண்கின்றாய் பாஞ்சசன்னியமே

#572

போய் தீர்த்தம் ஆடாதே நின்ற புணர் மருதம்

சாய்த்து ஈர்த்தான் கைத்தலத்தே ஏறி குடிகொண்டு

சேய் தீர்த்தமாய் நின்ற செங்கண்மால்-தன்னுடைய

வாய் தீர்த்தம் பாய்ந்து ஆட வல்லாய் வலம்புரியே

#573

செங்கமல நாள்மலர் மேல் தேன் நுகரும் அன்னம் போல்

செம் கண் கரு மேனி வாசுதேவனுடைய

அங்கை தலம் ஏறி அன்ன வசம் செய்யும்

சங்கு அரையா உன் செல்வம் சால அழகியதே

#574

உண்பது சொல்லில் உலகளந்தான் வாய் அமுதம்

கண்படை கொள்ளில் கடல் வண்ணன் கைத்தலத்தே

பெண் படையார் உன் மேல் பெரும் பூசல் சாற்றுகின்றார்

பண் பல செய்கின்றாய் பாஞ்சசன்னியமே

#575

பதினாறாம் ஆயிரவர் தேவிமார் பார்த்திருப்ப

மது வாயில் கொண்டால் போல் மாதவன்-தன் வாய் அமுதம்

பொதுவாக உண்பதனை புக்கு நீ உண்ட-கால்

சிதையாரோ உன்னோடு செல்வ பெரும் சங்கே

#576

பாஞ்சசன்னியத்தை பற்பநாபனோடும்

வாய்ந்த பெரும் சுற்றம் ஆக்கிய வண் புதுவை

ஏய்ந்த புகழ் பட்டர்பிரான் கோதை தமிழ் ஈரைந்தும்

ஆய்ந்து ஏத்த வல்லார் அவரும் அணுக்கரே

#577

விண் நீல மேலாப்பு விரித்தால் போல் மேகங்காள்

தெண் நீர் பாய் வேங்கடத்து என் திருமாலும் போந்தானே

கண்ணீர்கள் முலை குவட்டில் துளி சோர சோர்வேனை

பெண் நீர்மை ஈடழிக்கும் இது தமக்கு ஓர் பெருமையே

#578

மா முத்த நிதி சொரியும் மா முகில்காள் வேங்கடத்து

சாமத்தின் நிறம் கொண்ட தாளாளன் வார்த்தை என்னே

காம தீ உள்புகுந்து கதுவப்பட்டு இடை கங்குல்

ஏமத்து ஓர் தென்றலுக்கு இங்கு இலக்காய் நான் இருப்பேனே

#579

ஒளி வண்ணம் வளை சிந்தை உறக்கத்தோடு இவை எல்லாம்

எளிமையால் இட்டு என்னை ஈடழிய போயினவால்

குளிர் அருவி வேங்கடத்து என் கோவிந்தன் குணம் பாடி

அளியத்த மேகங்காள் ஆவி காத்து இருப்பேனே

#580

மின் ஆகத்து எழுகின்ற மேகங்காள் வேங்கடத்து

தன் ஆக திருமங்கை தங்கிய சீர் மார்வற்கு

என் ஆகத்து இளம் கொங்கை விரும்பி தாம் நாள்-தோறும்

பொன் ஆகம் புல்குதற்கு என் புரிவுடைமை செப்பு-மினே

#581

வான் கொண்டு கிளர்ந்து எழுந்த மா முகில்காள் வேங்கடத்து

தேன் கொண்ட மலர் சிதற திரண்டு ஏறி பொழிவீர்காள்

ஊன் கொண்ட வள் உகிரால் இரணியனை உடல் இடந்தான்

தான் கொண்ட சரி வளைகள் தருமாகில் சாற்று-மினே

#582

சலம் கொண்டு கிளர்ந்து எழுந்த தண் முகில்காள் மாவலியை

நிலம் கொண்டான் வேங்கடத்தே நிரந்து ஏறி பொழிவீர்காள்

உலங்கு உண்ட விளங்கனி போல் உள் மெலிய புகுந்து என்னை

நலம் கொண்ட நாரணற்கு என் நடலை நோய் செப்பு-மினே

#583

சங்க மா கடல் கடைந்தான் தண் முகில்காள் வேங்கடத்து

செங்கண்மால் சேவடி கீழ் அடி வீழ்ச்சி விண்ணப்பம்

கொங்கை மேல் குங்குமத்தின் குழம்பு அழிய புகுந்து ஒரு நாள்

தங்குமேல் என் ஆவி தங்கும் என்று உரையீரே

#584

கார் காலத்து எழுகின்ற கார் முகில்காள் வேங்கடத்து

போர் காலத்து எழுந்தருளி பொருதவனார் பேர் சொல்லி

நீர் காலத்து எருக்கின் அம் பழ இலை போல் வீழ்வேனை

வார் காலத்து ஒரு நாள் தம் வாசகம் தந்தருளாரே

#585

மத யானை போல் எழுந்த மா முகில்காள் வேங்கடத்தை

பதியாக வாழ்வீர்காள் பாம்பு அணையான் வார்த்தை என்னே

கதி என்றும் தான் ஆவான் கருதாது ஓர் பெண் கொடியை

வதை செய்தான் என்னும் சொல் வையகத்தார் மதியாரே

#586

நாகத்தின் அணையானை நல் நுதலாள் நயந்து உரை செய்

மேகத்தை வேங்கட கோன் விடு தூதில் விண்ணப்பம்

போகத்தில் வழுவாத புதுவையர் கோன் கோதை தமிழ்

ஆகத்து வைத்து உரைப்பார் அவர் அடியார் ஆகுவரே

#587

சிந்துர செம் பொடி போல் திருமாலிருஞ்சோலை எங்கும்

இந்திரகோபங்களே எழுந்தும் பரந்திட்டனவால்

மந்தரம் நாட்டி அன்று மதுர கொழும் சாறு கொண்ட

சுந்தர தோளுடையான் சுழலையின்-நின்று உய்தும்-கொலோ

#588

போர் களிறு பொரும் மாலிருஞ்சோலை அம் பூம் புறவில்

தார் கொடி முல்லைகளும் தவள நகை காட்டுகின்ற

கார் கொள் பிடாக்கள் நின்று கழறி சிரிக்க தரியேன்

ஆர்க்கு இடுகோ தோழீ அவன் தார் செய்த பூசலையே

#589

கருவிளை ஒண் மலர்காள் காயா மலர்காள் திருமால்

உரு ஒளி காட்டுகின்றீர் எனக்கு உய் வழக்கு ஒன்று உரையீர்

திரு விளையாடு திண் தோள் திருமாலிருஞ்சோலை நம்பி

வரி வளை இல் புகுந்து வந்தி பற்றும் வழக்கு உளதே

#590

பைம் பொழில் வாழ் குயில்காள் மயில்காள் ஒண் கருவிளைகாள்

வம்ப களங்கனிகாள் வண்ண பூவை நறு மலர்காள்

ஐம் பெரும் பாதகர்காள் அணி மாலிருஞ்சோலை நின்ற

எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கு என் செய்வதே

#591

துங்க மலர் பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை நின்ற

செம் கண் கரு முகிலின் திருவுரு போல் மலர் மேல்

தொங்கிய வண்டு இனங்காள் தொகு பூம் சுனைகாள் சுனையில்

தங்கு செந்தாமரைகாள் எனக்கு ஓர் சரண் சாற்று-மினே

#592

நாறு நறும் பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு நான்

நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன்

நூறு தடா நிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்

ஏறு திருவுடையான் இன்று வந்து இவை கொள்ளும்-கொலோ

#593

இன்று வந்து இத்தனையும் அமுதுசெய்திடப்பெறில் நான்

ஒன்று நூறாயிரமா கொடுத்து பின்னும் ஆளும் செய்வன்

தென்றல் மணம் கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள்

நின்ற பிரான் அடியேன் மனத்தே வந்து நேர்படிலே

#594

காலை எழுந்திருந்து கரிய குருவி கணங்கள்

மாலின் வரவு சொல்லி மருள் பாடுதல் மெய்ம்மை-கொலோ

சோலைமலை பெருமான் துவாராபதி எம்பெருமான்

ஆலின் இலை பெருமான் அவன் வார்த்தை உரைக்கின்றதே

#595

கோங்கு அலரும் பொழில் மாலிருஞ்சோலையில் கொன்றைகள் மேல்

தூங்கு பொன் மாலைகளோடு உடனாய் நின்று தூங்குகின்றேன்

பூம் கொள் திருமுகத்து மடுத்து ஊதிய சங்கு ஒலியும்

சார்ங்க வில் நாண் ஒலியும் தலைப்பெய்வது எஞ்ஞான்று-
கொலோ

#596

சந்தொடு கார் அகிலும் சுமந்து தடங்கள் பொருது

வந்து இழியும் சிலம்பாறு உடை மாலிருஞ்சோலை நின்ற

சுந்தரனை சுரும்பு ஆர் குழல் கோதை தொகுத்து உரைத்த

செந்தமிழ் பத்தும் வல்லார் திருமால் அடி சேர்வர்களே

#597

கார் கோடல் பூக்காள் கார் கடல் வண்ணன் என் மேல் உம்மை

போர் கோலம் செய்து போர விடுத்தவன் எங்கு உற்றான்

ஆர்க்கோ இனி நாம் பூசல் இடுவது அணி துழாய்

தார்க்கு ஓடும் நெஞ்சம் தன்னை படைக்க வல்லேன் அந்தோ

#598

மேல் தோன்றி பூக்காள் மேல் உலகங்களின் மீது போய்

மேல் தோன்றும் சோதி வேத முதல்வர் வலம் கையில்

மேல் தோன்றும் ஆழியின் வெம் சுடர் போல சுடாது எம்மை

மாற்றோலை பட்டவர் கூட்டத்து வைத்துக்கொள்கிற்றிரே

#599

கோவை மணாட்டி நீ உன் கொழும் கனி கொண்டு எம்மை

ஆவி தொலைவியேல் வாயழகர்-தம்மை அஞ்சுதும்

பாவியேன் தோன்றி பாம்பு அணையார்க்கும் தம் பாம்பு போல்

நாவும் இரண்டு உள ஆய்த்து நாணிலியேனுக்கே

#600

முல்லை பிராட்டி நீ உன் முறுவல்கள் கொண்டு எம்மை

அல்லல் விளைவியேல் ஆழி நங்காய் உன் அடைக்கலம்

கொல்லை அரக்கியை மூக்கு அரிந்திட்ட குமரனார்

சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய் அன்றே

#601

பாடும் குயில்காள் ஈது என்ன பாடல் நல் வேங்கட

நாடர் நமக்கு ஒரு வாழ்வு தந்தால் வந்து பாடு-மின்

ஆடும் கருள கொடி உடையார் வந்து அருள்செய்து

கூடுவராயிடில் கூவி நும் பாட்டுக்கள் கேட்டுமே

#602

கண மா மயில்காள் கண்ணபிரான் திருக்கோலம் போன்று

அணி மா நடம் பயின்று ஆடுகின்றீர்க்கு அடி வீழ்கின்றேன்

பணம் ஆடு அரவணை பற்பல காலமும் பள்ளிகொள்

மணவாளர் நம்மை வைத்த பரிசு இது காண்-மினே

#603

நடம் ஆடி தோகை விரிக்கின்ற மா மயில்காள் உம்மை

நடம் ஆட்டம் காண பாவியேன் நான் ஓர் முதல் இலேன்

குடம் ஆடு கூத்தன் கோவிந்தன் கோ மிறை செய்து எம்மை

உடை மாடு கொண்டான் உங்களுக்கு இனி ஒன்று போதுமே

#604

மழையே மழையே மண் புறம் பூசி உள்ளாய் நின்று

மெழுகு ஊற்றினால் போல் ஊற்று நல் வேங்கடத்து உள் நின்ற

அழக பிரானார் தம்மை என் நெஞ்சத்து அகப்பட

தழுவ நின்று என்னை ததைத்துக்கொண்டு ஊற்றவும்

வல்லையே

#605

கடலே கடலே உன்னை கடைந்து கலக்கு உறுத்து

உடலுள் புகுந்துநின்ற ஊறல் அறுத்தவற்கு என்னையும்

உடலுள் புகுந்துநின்று ஊறல் அறுக்கின்ற மாயற்கு என்

நடலைகள் எல்லாம் நாக அணைக்கே சென்று உரைத்தியே

#606

நல்ல என் தோழி நாக அணை மிசை நம்பரர்

செல்வர் பெரியர் சிறு மானிடவர் நாம் செய்வது என்

வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை

வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே

#607

தாம் உகக்கும் தம் கையில் சங்கமே போலாவோ

யாம் உகக்கும் எம் கையில் சங்கமும் ஏந்து இழையீர்

தீ முகத்து நாக அணை மேல் சேரும் திருவரங்கர்

ஆ முகத்தை நோக்காரால் அம்மனே அம்மனே

#608

எழில் உடைய அம்மனைமீர் என் அரங்கத்து இன் அமுதர்

குழல் அழகர் வாய் அழகர் கண் அழகர் கொப்பூழில்

எழு கமல பூ அழகர் எம்மானார் என்னுடைய

கழல் வளையை தாமும் கழல் வளையே ஆக்கினரே

#609

பொங்கு ஓதம் சூழ்ந்த புவனியும் விண் உலகும்

அங்கு ஆதும் சோராமே ஆள்கின்ற எம்பெருமான்

செங்கோல் உடைய திருவரங்க செல்வனார்

எம் கோல் வளையால் இடர் தீர்வர் ஆகாதே

#610

மச்சு அணி மாட மதில் அரங்கர் வாமனனார்

பச்சை பசும் தேவர் தாம் பண்டு நீர் ஏற்ற

பிச்சை குறையாகி என்னுடைய பெய் வளை மேல்

இச்சை உடையரேல் இ தெருவே போதாரே

#611

பொல்லா குறள் உருவாய் பொன் கையில் நீர் ஏற்று

எல்லா உலகும் அளந்து கொண்ட எம்பெருமான்

நல்லார்கள் வாழும் நளிர் அரங்க நாக அணையான்

இல்லாதோம் கைப்பொருளும் எய்துவான் ஒத்து உளனே

#612

கை பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரி நீர்

செய் புரள ஓடும் திருவரங்க செல்வனார்

எ பொருட்கும் நின்று ஆர்க்கும் எய்தாது நான்மறையின்

சொற்பொருளாய் நின்றார் என் மெய்ப்பொருளும் கொண்டாரே

#613

உண்ணாது உறங்காது ஒலி கடலை ஊடறுத்து

பெண் ஆக்கை யாப்புண்டு தாம் உற்ற பேது எல்லாம்

திண்ணார் மதில் சூழ் திருவரங்க செல்வனார்

எண்ணாதே தம்முடைய நன்மைகளே எண்ணுவரே

#614

பாசி தூர்த்த கிடந்த பார் மகட்கு பண்டு ஒரு நாள்

மாசு உடம்பில் சீர் வாரா மானம் இலா பன்றி ஆம்

தேசு உடைய தேவர் திருவரங்க செல்வனார்

பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே

#615

கண்ணாலம் கோடித்து கன்னி-தன்னை கைப்பிடிப்பான்

திண் ஆர்ந்து இருந்த சிசுபாலன் தேசு அழிந்து

அண்ணாந்து இருக்கவே ஆங்கு அவளை கைப்பிடித்த

பெண்ணாளன் பேணும் ஊர் பேரும் அரங்கமே

#616

செம்மை உடைய திருவரங்கர் தாம் பணித்த

மெய்ம்மை பெரு வார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்

தம்மை உகப்பாரை தாம் உகப்பர் என்னும் சொல்

தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆர் இனியே

#617

மற்று இருந்தீர்கட்கு அறியலாகா மாதவன் என்பது ஓர் அன்பு-தன்னை

உற்று இருந்தேனுக்கு உரைப்பது எல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தை

பெற்றிருந்தாளை ஒழியவே போய் பேர்த்து ஒரு தாய் இல் வளர்ந்த நம்பி

மல் பொருந்தாமல் களம் அடைந்த மதுரை புறத்து என்னை உய்த்திடு-மின்

#618

நாணி இனி ஓர் கருமம் இல்லை நால் அயலாரும் அறிந்து ஒழிந்தார்

பாணியாது என்னை மருந்து செய்து பண்டு பண்டு ஆக்க உறுதிராகில்

மாணி உருவாய் உலகு அளந்த மாயனை காணில் தலைமறியும்

ஆணையால் நீர் என்னை காக்க வேண்டில் ஆய்ப்பாடிக்கே என்னை உய்த்திடு-மின்

#619

தந்தையும் தாயும் உற்றாரும் நிற்க தனிவழி போயினாள் என்னும் சொல்லு

வந்த பின்னை பழி காப்பு அரிது மாயவன் வந்து உரு காட்டுகின்றான்

கொந்தளம் ஆக்கி பரக்கழித்து குறும்பு செய்வான் ஓர் மகனை பெற்ற

நந்தகோபாலன் கடைத்தலைக்கே நள்ளிருள்-கண் என்னை உய்த்திடு-மின்

#620

அங்கை தலத்திடை ஆழி கொண்டான் அவன் முகத்து அன்றி விழியேன் என்று

செம் கச்சு கொண்டு கண் ஆடை ஆர்த்து சிறு மானிடவரை காணில் நாணும்

கொங்கை தலம் இவை நோக்கி காணீர் கோவிந்தனுக்கு அல்லால் வாயில் போகா

இங்குத்தை வாழ்வை ஒழியவே போய் யமுனை கரைக்கு என்னை உய்த்திடு-மின்

#621

ஆர்க்கும் என் நோய் இது அறியலாகாது அம்மனைமீர் துழதி படாதே

கார் கடல் வண்ணன் என்பான் ஒருவன் கைகண்ட யோகம் தடவ தீரும்

நீர் கரை நின்ற கடம்பை ஏறி காளியன் உச்சியில் நட்டம் பாய்ந்து

போர்க்களமாக நிருத்தம் செய்த பொய்கை கரைக்கு என்னை உய்த்திடு-மின்

#622

கார் தண் முகிலும் கருவிளையும் காயா மலரும் கமலப்பூவும்

ஈர்த்திடுகின்றன என்னை வந்திட்டு இருடீகேசன் பக்கல் போகே என்று

வேர்த்து பசித்து வயிறு அசைந்து வேண்டு அடிசில் உண்ணும்-போது ஈது என்று

பார்த்திருந்து நெடு நோக்கு கொள்ளும் பத்தவிலோசனத்து உய்த்திடு-மின்

#623

வண்ணம் திரிவும் மனம் குழைவும் மானம் இலாமையும் வாய் வெளுப்பும்

உண்ணலுறாமையும் உள் மெலிவும் ஓத நீர் வண்ணன் என்பான் ஒருவன்

தண் அம் துழாய் என்னும் மாலை கொண்டு சூட்ட தணியும் பிலம்பன்-தன்னை

பண் அழிய பலதேவன் வென்ற பாண்டிவடத்து என்னை உய்த்திடு-மின்

#624

கற்று இனம் மேய்க்கிலும் மேய்க்க பெற்றான் காடு வாழ் சாதியும் ஆக பெற்றான்

பற்றி உரலிடை யாப்பும் உண்டான் பாவிகாள் உங்களுக்கு ஏச்சு-கொலோ

கற்றன பேசி வசவு உணாதே காலிகள் உய்ய மழை தடுத்து

கொற்ற குடையாக ஏந்தி நின்ற கோவர்த்தனத்து என்னை உய்த்திடு-மின்

#625

கூட்டில் இருந்து கிளி எப்போதும் கோவிந்தா கோவிந்தா என்று அழைக்கும்

ஊட்ட கொடாது செறுப்பனாகில் உலகு அளந்தான் என்று உயர கூவும்

நாட்டில் தலைப்பழி எய்தி உங்கள் நன்மை இழந்து தலையிடாதே

சூட்டு உயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதிக்கு என்னை உய்த்திடு-மின்

#626

மன்னு மதுரை தொடக்கமாக வண் துவராபதி-தன் அளவும்

தன்னை தமர் உய்த்து பெய்ய வேண்டி தாழ் குழலாள் துணிந்த துணிவை

பொன் இயல் மாடம் பொலிந்து தோன்றும் புதுவையர் கோன் விட்டுசித்தன் கோதை

இன்னிசையால் சொன்ன செம் சொல் மாலை ஏத்த வல்லார்க்கு இடம் வைகுந்தமே

#627

கண்ணன் என்னும் கரும் தெய்வம் காட்சி பழகி கிடப்பேனை

புண்ணில் புளி பெய்தால் போல புறம் நின்று அழகு பேசாதே

பெண்ணின் வருத்தம் அறியாத பெருமான் அரையில் பீதக

வண்ண ஆடை கொண்டு என்னை வாட்டம் தணிய வீசீரே

#628

பால் ஆலிலையில் துயில் கொண்ட பரமன் வலைப்பட்டு இருந்தேனை

வேலால் துன்னம் பெய்தால் போல் வேண்டிற்று எல்லாம் பேசாதே

கோலால் நிரை மேய்த்து ஆயனாய் குடந்தை கிடந்த குடம் ஆடி

நீலார் தண் அம் துழாய் கொண்டு என் நெறி மென் குழல் மேல் சூட்டிரே

#629

கஞ்சை காய்ந்த கரு வில்லி கடைக்கண் என்னும் சிறை கோலால்

நெஞ்சு ஊடுருவ வேவுண்டு நிலையும் தளர்ந்து நைவேனை

அஞ்சேல் என்னான் அவன் ஒருவன் அவன் மார்வு அணிந்த வன மாலை

வஞ்சியாதே தருமாகில் மார்வில் கொணர்ந்து புரட்டீரே

#630

ஆரே உலகத்து ஆற்றுவார் ஆயர்பாடி கவர்ந்து உண்ணும்

கார் ஏறு உழக்க உழக்குண்டு தளர்ந்தும் முறிந்தும் கிடப்பேனை

ஆராவமுதம் அனையான் தன் அமுத வாயில் ஊறிய

நீர்தான் கொணர்ந்து புலராமே பருக்கி இளைப்பை நீக்கீரே

#631

அழிலும் தொழிலும் உரு காட்டான் அஞ்சேல் என்னான் அவன் ஒருவன்

தழுவி முழுசி புகுந்து என்னை சுற்றி சுழன்று போகானால்

தழையின் பொழில்வாய் நிரை பின்னே நெடுமால் ஊதி வருகின்ற

குழலின் தொளைவாய் நீர் கொண்டு குளிர முகத்து தடவீரே

#632

நடை ஒன்று இல்லா உலகத்து நந்தகோபன் மகன் என்னும்

கொடிய கடிய திருமாலால் குளப்புக்கூறு கொளப்பட்டு

புடையும் பெயரகில்லேன் நான் போழ்க்கன் மிதித்த அடிப்பாட்டில்

பொடித்தான் கொணர்ந்து பூசீர்கள் போகா உயிர் என் உடம்பையே

#633

வெற்றி கருள கொடியான்-தன் மீமீது ஆடா உலகத்து

வெற்ற வெறிதே பெற்ற தாய் வேம்பே ஆக வளர்த்தாளே

குற்றம் அற்ற முலை-தன்னை குமரன் கோல பணை தோளோடு

அற்ற குற்றம் அவை தீர அணைய அமுக்கி கட்டீரே

#634

உள்ளே உருகி நைவேனை உளளோ இலளோ என்னாத

கொள்ளை கொள்ளி குறும்பனை கோவர்த்தனனை கண்ட-கால்

கொள்ளும் பயன் ஒன்று இல்லாத கொங்கை-தன்னை கிழங்கோடும்

அள்ளி பறித்திட்டு அவன் மார்வில் எறிந்து என் அழலை தீர்வேனே

#635

கொம்மை முலைகள் இடர் தீர கோவிந்தற்கு ஓர் குற்றேவல்

இம்மை பிறவி செய்யாதே இனி போய் செய்யும் தவம்தான் என்

செம்மை உடைய திருமார்வில் சேர்த்தானேனும் ஒரு ஞான்று

மெய்ம்மை சொல்லி முகம் நோக்கி விடைதான் தருமேல் மிக நன்றே

#636

அல்லல் விளைத்த பெருமானை ஆயர்பாடிக்கு அணி விளக்கை

வில்லி புதுவை நகர் நம்பி விட்டுசித்தன் வியன் கோதை

வில்லை தொலைத்த புருவத்தாள் வேட்கையுற்று மிக விரும்பும்

சொல்லை துதிக்க வல்லார்கள் துன்ப கடலுள் துவளாரே

#637

பட்டி மேய்ந்து ஓர் கார் ஏறு பலதேவற்கு ஓர் கீழ் கன்றாய்

இட்டீறு இட்டு விளையாடி இங்கே போத கண்டீரே

இட்டமான பசுக்களை இனிது மறித்து நீர் ஊட்டி

விட்டு கொண்டு விளையாட விருந்தாவனத்தே கண்டோமே

#638

அனுங்க என்னை பிரிவு செய்து ஆயர்பாடி கவர்ந்து உண்ணும்

குணுங்கு நாறி குட்டேற்றை கோவர்த்தனனை கண்டீரே

கணங்களோடு மின் மேகம் கலந்தால் போல வன மாலை

மினுங்க நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே

#639

மாலாய் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை

ஏலா பொய்கள் உரைப்பானை இங்கே போத கண்டீரே

மேலால் பரந்த வெயில் காப்பான் வினதை சிறுவன் சிறகு என்னும்

மேலாப்பின் கீழ் வருவானை விருந்தாவனத்தே கண்டோமே

#640

கார் தண் கமல கண் என்னும் நெடும் கயிறு படுத்தி என்னை

ஈர்த்து கொண்டு விளையாடும் ஈசன்-தன்னை கண்டீரே

போர்த்த முத்தின் குப்பாய புகர் மால் யானை கன்றே போல்

வேர்த்து நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே

#641

மாதவன் என் மணியினை வலையில் பிழைத்த பன்றி போல்

ஏதும் ஒன்றும் கொள தாரா ஈசன்-தன்னை கண்டீரே

பீதக ஆடை உடை தாழ பெரும் கார் மேக கன்றே போல்

வீதி ஆர வருவானை விருந்தாவனத்தே கண்டோமே

#642

தருமம் அறியா குறும்பனை தன் கை சார்ங்கம் அதுவே போல்

புருவ வட்டம் அழகிய பொருத்தம் இலியை கண்டீரே

உருவு கரிதாய் முகம் சேய்தாய் உதய பருப்பதத்தின் மேல்

விரியும் கதிரே போல்வானை விருந்தாவனத்தே கண்டோமே

#643

பொருத்தம் உடைய நம்பியை புறம் போல் உள்ளும் கரியானை

கருத்தை பிழைத்து நின்ற அ கரு மா முகிலை கண்டீரே

அருத்தி தாரா கணங்களால் ஆர பெருகு வானம் போல்

விருத்தம் பெரிதாய் வருவானை விருந்தாவனத்தே கண்டோமே

#644

வெளிய சங்கு ஒன்று உடையானை பீதக ஆடை உடையானை

அளி நன்கு உடைய திருமாலை ஆழியானை கண்டீரே

களி வண்டு எங்கும் கலந்தால் போல் கமழ் பூம் குழல்கள் தடம் தோள் மேல்

மிளிர நின்று விளையாட விருந்தாவனத்தே கண்டோமே

#645

நாட்டை படை என்று அயன் முதலா தந்த நளிர் மா மலர் உந்தி

வீட்டை பண்ணி விளையாடும் விமலன்-தன்னை கண்டீரே

காட்டை நாடி தேனுகனும் களிறும் புள்ளும் உடன் மடிய

வேட்டையாடி வருவானை விருந்தாவனத்தே கண்டோமே

#646

பரும் தாள் களிற்றுக்கு அருள்செய்த பரமன்-தன்னை பாரின் மேல்

விருந்தாவனத்தே கண்டமை விட்டுசித்தன் கோதை சொல்

மருந்தாம் என்று தம் மனத்தே வைத்து கொண்டு வாழ்வார்கள்

பெரும் தாள் உடைய பிரான் அடி கீழ் பிரியாது என்றும் இருப்பாரே

குலசேகர ஆழ்வார் - பெருமாள் திருமொழி

#647

இருள் இரிய சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி இன துத்தி அணி பணம் ஆயிரங்கள் ஆர்ந்த

அரவு அரச பெரும் சோதி அனந்தன் என்னும் அணி விளங்கும் உயர் வெள்ளை அணையை மேவி

திருவரங்க பெரு நகருள் தெண் நீர் பொன்னி திரை கையால் அடி வருட பள்ளிகொள்ளும்

கரு மணியை கோமளத்தை கண்டுகொண்டு என் கண்

இணைகள் என்று-கொலோ களிக்கும் நாளே

#648

வாய் ஓர் ஈரைஞ்ஞூறு துதங்கள் ஆர்ந்த வளை உடம்பின் அழல்

நாகம் உமிழ்ந்த செம் தீ

வீயாத மலர் சென்னி விதானமே போல் மேன்மேலும் மிக எங்கும்

பரந்ததன் கீழ்

காயாம்பூ மலர் பிறங்கல் அன்ன மாலை கடி அரங்கத்து

அரவணையில் பள்ளிகொள்ளும்

மாயோனை மணத்தூணே பற்றி நின்று என் வாயார என்று-

கொலோ வாழ்த்தும் நாளே

#649

எம் மாண்பின் அயன் நான்கு நாவினாலும் எடுத்து ஏத்தி

ஈரிரண்டு முகமும் கொண்டு

எம்மாடும் எழில் கண்கள் எட்டினோடும் தொழுது ஏத்தி இனிது

இறைஞ்ச நின்ற செம்பொன்

அம்மான்-தன் மலர் கமல கொப்பூழ் தோன்ற அணி அரங்கத்து

அரவணையில் பள்ளிகொள்ளும்

அம்மான்-தன் அடி இணை கீழ் அலர்கள் இட்டு அங்கு

அடியவரோடு என்று-கொலோ அணுகும் நாளே

#650

மாவினை வாய் பிளந்து உகந்த மாலை வேலை வண்ணனை என் கண்ணனை வன் குன்றம் ஏந்தி

ஆவினை அன்று உய கொண்ட ஆயர் ஏற்றை அமரர்கள் தம் தலைவனை அ தமிழின் இன்ப

பாவினை அ வடமொழியை பற்று அற்றார்கள் பயில் அரங்கத்து அரவணையில் பள்ளிகொள்ளும்

கோவினை நாவுற வழுத்தி என்தன் கைகள் கொய் மலர் தூய் என்று-கொலோ கூப்பும் நாளே

#651

இணையில்லா இன்னிசை யாழ் கெழுமி இன்ப தும்புருவும் நாரதனும் இறைஞ்சி ஏத்த

துணையில்லா தொல் மறை நூல் தோத்திரத்தால் தொல் மலர்-கண் அயன் வணங்கி ஓவாது ஏத்த

மணி மாட மாளிகைகள் மல்கு செல்வ மதில் அரங்கத்து அரவணையில் பள்ளிகொள்ளும்

மணி வண்ணன் அம்மானை கண்டுகொண்டு என் மலர் சென்னி என்று-கொலோ வணங்கும் நாளே

#652

அளி மலர் மேல் அயன் அரன் இந்திரனோடு ஏனை அமரர்கள்-தம் குழுவும் அரம்பையரும் மற்றும்

தெளி மதி சேர் முனிவர்கள்-தம் குழுவும் உந்தி திசை திசையில் மலர் தூவி சென்று சேரும்

களி மலர் சேர் பொழில் அரங்கத்து உரகம் ஏறி கண்வளரும் கடல் வண்ணர் கமல கண்ணும்

ஒளி மதி சேர் திருமுகமும் கண்டுகொண்டு என் உள்ளம் மிக என்று-கொலோ உருகும் நாளே

#653

மறம் திகழும் மனம் ஒழித்து வஞ்சம் மாற்றி வன் புலன்கள் அடக்கி இடர் பார துன்பம்

துறந்து இரு முப்பொழுது ஏத்தி எல்லை இல்லா தொல் நெறி-கண் நிலைநின்ற தொண்டரான

அறம் திகழும் மனத்தவர்-தம் கதியை பொன்னி அணி அரங்கத்து அரவணையில் பள்ளிகொள்ளும்

நிறம் திகழும் மாயோனை கண்டு என் கண்கள் நீர் மல்க என்று-கொலோ நிற்கும் நாளே

#654

கோல் ஆர்ந்த நெடும் சார்ங்கம் கூனல் சங்கம் கொலை ஆழி கொடும் தண்டு கொற்ற ஒள் வாள்

கால் ஆர்ந்த கதி கருடன் என்னும் வென்றி கடும் பறவை இவை அனைத்தும் புறம் சூழ் காப்ப

சேல் ஆர்ந்த நெடும் கழனி சோலை சூழ்ந்த திருவரங்கத்து அரவணையில் பள்ளிகொள்ளும்

மாலோனை கண்டு இன்ப கலவி எய்தி வல்வினையேன் என்று-கொலோ வாழும் நாளே

#655

தூராத மன காதல் தொண்டர் தங்கள் குழாம் குழுமி திருப்புகழ்கள் பலவும் பாடி

ஆராத மன களிப்போடு அழுத கண்ணீர் மழை சோர நினைந்து உருகி ஏத்தி நாளும்

சீர் ஆர்ந்த முழவு ஓசை பரவை காட்டும் திருவரங்கத்து அரவணையில் பள்ளிகொள்ளும்

போர் ஆழி அம்மானை கண்டு துள்ளி பூதலத்தில் என்று-கொலோ புரளும் நாளே

#656

வன் பெரு வானகம் உய்ய அமரர் உய்ய மண் உய்ய மண் உலகில் மனிசர் உய்ய

துன்பம் மிகு துயர் அகல அயர்வு ஒன்று இல்லா சுகம் வளர அகம் மகிழும் தொண்டர் வாழ

அன்பொடு தென் திசை நோக்கி பள்ளிகொள்ளும் அணி அரங்கன் திருமுற்றத்து அடியார் தங்கள்

இன்ப மிகு பெரும் குழுவு கண்டு யானும் இசைந்து உடனே என்று-கொலோ இருக்கும் நாளே

#657

திடர் விளங்கு கரை பொன்னி நடுவுபாட்டு திருவரங்கத்து அரவணையில் பள்ளிகொள்ளும்

கடல் விளங்கு கரு மேனி அம்மான்-தன்னை கண்ணார கண்டு உகக்கும் காதல்-தன்னால்

குடை விளங்கு விறல் தானை கொற்ற ஒள் வாள் கூடலர் கோன் கொடை குலசேகரன் சொல் செய்த

நடை விளங்கு தமிழ் மாலை பத்தும் வல்லார் நலம் திகழ் நாரணன் அடி கீழ் நண்ணுவாரே

#658

தேட்டு அரும் திறல் தேனினை தென் அரங்கனை திருமாது வாழ்

வாட்டம் இல் வன மாலை மார்வனை வாழ்த்தி மால் கொள் சிந்தையராய்

ஆட்டம் மேவி அலந்து அழைத்து அயர்வு எய்தும் மெய்யடியார்கள்-தம்

ஈட்டம் கண்டிட கூடுமேல் அது காணும் கண் பயன் ஆவதே

#659

தோடு உலா மலர் மங்கை தோள் இணை தோய்ந்ததும் சுடர் வாளியால்

நீடு மா மரம் செற்றதும் நிரை மேய்த்ததும் இவையே நினைந்து

ஆடி பாடி அரங்க ஓ என்று அழைக்கும் தொண்டரடிப்பொடி

ஆட நாம் பெறில் கங்கை நீர் குடைந்து ஆடும் வேட்கை என் ஆவதே

#660

ஏறு அடர்த்ததும் ஏனமாய் நிலம் கீண்டதும் முன் இராமனாய்

மாறு அடர்த்ததும் மண் அளந்ததும் சொல்லி பாடி வண் பொன்னி பேர்

ஆறு போல் வரும் கண்ண நீர் கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம்

சேறு செய் தொண்டர் சேவடி செழும் சேறு என் சென்னிக்கு அணிவனே

#661

தோய்த்த தண் தயிர் வெண்ணெய் பாலுடன் உண்டலும் உடன்று ஆய்ச்சி கண்டு

ஆர்த்த தோள் உடை எம்பிரான் என் அரங்கனுக்கு அடியார்களாய்

நா தழும்பு எழ நாரணா என்று அழைத்து மெய் தழும்ப தொழுது

ஏத்தி இன்புறும் தொண்டர் சேவடி ஏத்தி வாழ்த்தும் என் நெஞ்சமே

#662

பொய் சிலை குரல் ஏற்று எருத்தம் இறுத்த போர் அரவு ஈர்த்த கோன்

செய் சிலை சுடர் சூழ் ஒளி திண்ண மா மதில் தென் அரங்கனாம்

மெய் சிலை கரு மேகம் ஒன்று தம் நெஞ்சில் நின்று திகழ போய்

மெய் சிலிர்ப்பவர் தம்மையே நினைந்து என் மனம் மெய் சிலிர்க்குமே

#663

ஆதி அந்தம் அனந்தம் அற்புதம் ஆன வானவர் தம்பிரான்

பாத மா மலர் சூடும் பத்தி இலாத பாவிகள் உய்ந்திட

தீது இல் நன்னெறி காட்டி எங்கும் திரிந்து அரங்கன் எம்மானுக்கே

காதல்செய் தொண்டர்க்கு எ பிறப்பிலும் காதல்செய்யும் என் நெஞ்சமே

#664

கார் இனம் புரை மேனி நல் கதிர் முத்த வெண் நகை செய்ய வாய்

ஆர மார்வன் அரங்கன் என்னும் அரும் பெரும் சுடர் ஒன்றினை

சேரும் நெஞ்சினர் ஆகி சேர்ந்து கசிந்து இழிந்த கண்ணீர்களால்

வார நிற்பவர் தாள் இணைக்கு ஒரு வாரம் ஆகும் என் நெஞ்சமே

#665

மாலை உற்ற கடல் கிடந்தவன் வண்டு கிண்டு நறும் துழாய்

மாலை உற்ற வரை பெரும் திருமார்வனை மலர் கண்ணனை

மாலை உற்று எழுந்து ஆடிப்பாடி திரிந்து அரங்கன் எம்மானுக்கே

மாலை உற்றிடும் தொண்டர் வாழ்வுக்கு மாலை உற்றது என் நெஞ்சமே

#666

மொய்த்து கண் பனி சோர மெய்கள் சிலிர்ப்ப ஏங்கி இளைத்து நின்று

எய்த்து கும்பிடு நட்டம் இட்டு எழுந்து ஆடி பாடி இறைஞ்சி என்

அத்தன் அச்சன் அரங்கனுக்கு அடியார்கள் ஆகி அவனுக்கே

பித்தராம் அவர் பித்தர் அல்லர்கள் மற்றையார் முற்றும் பித்தரே

#667

அல்லி மா மலர் மங்கை நாதன் அரங்கன் மெய்யடியார்கள்-தம்

எல்லை இல் அடிமை திறத்தினில் என்றும் மேவு மனத்தனாம்

கொல்லி காவலன் கூடல் நாயகன் கோழி கோன் குலசேகரன்

சொல்லின் இன் தமிழ் மாலை வல்லவர் தொண்டர் தொண்டர்கள் ஆவரே

#668

மெய் இல் வாழ்க்கையை மெய் என கொள்ளும் இ

வையம்-தன்னொடும் கூடுவது இல்லை யான்

ஐயனே அரங்கா என்று அழைக்கின்றேன்

மையல் கொண்டு ஒழிந்தேன் என்தன் மாலுக்கே

#669

நூலின் நேர் இடையார் திறத்தே நிற்கும்

ஞாலம் தன்னொடும் கூடுவது இல்லை யான்

ஆலியா அழையா அரங்கா என்று

மால் எழுந்து ஒழிந்தேன் என்தன் மாலுக்கே

#670

மாரனார் வரி வெம் சிலைக்கு ஆட்செய்யும்

பாரினாரொடும் கூடுவது இல்லை யான்

ஆர மார்வன் அரங்கன் அனந்தன் நல்

நாரணன் நரகாந்தகன் பித்தனே

#671

உண்டியே உடையே உகந்து ஓடும் இ

மண்டலத்தொடும் கூடுவது இல்லை யான்

அண்டவாணன் அரங்கன் வன் பேய் முலை

உண்ட வாயன்-தன் உன்மத்தன் காண்-மினே

#672

தீது இல் நல் நெறி நிற்க அல்லாது செய்

நீதியாரொடும் கூடுவது இல்லை யான்

ஆதி ஆயன் அரங்கன் அ தாமரை

பேதை மா மணவாளன்-தன் பித்தனே

#673

எம் பரத்தர் அல்லாரொடும் கூடலன்

உம்பர் வாழ்வை ஒன்றாக கருதலன்

தம்பிரான் அமரர்க்கு அரங்க நகர்

எம்பிரானுக்கு எழுமையும் பித்தனே

#674

எ திறத்திலும் யாரொடும் கூடும் அ

சித்தம்-தன்னை தவிர்த்தனன் செங்கண்மால்

அத்தனே அரங்கா என்று அழைக்கின்றேன்

பித்தனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே

#675

பேயரே எனக்கு யாவரும் யானும் ஓர்

பேயனே எவர்க்கும் இது பேசி என்

ஆயனே அரங்கா என்று அழைக்கின்றேன்

பேயனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே

#676

அங்கை ஆழி அரங்கன் அடி இணை

தங்கு சிந்தை தனி பெரும் பித்தனாய்

கொங்கர் கோன் குலசேகரன் சொன்ன சொல்

இங்கு வல்லவர்க்கு ஏதம் ஒன்று இல்லையே

#677

ஊன் ஏறு செல்வத்து உடல் பிறவி யான் வேண்டேன்

ஆன் ஏறு ஏழ் வென்றான் அடிமை திறம் அல்லால்

கூன் ஏறு சங்கம் இடத்தான் தன் வேங்கடத்து

கோனேரி வாழும் குருகாய் பிறப்பேனே

#678

ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தன் சூழ

வான் ஆளும் செல்வமும் மண் அரசும் யான் வேண்டேன்

தேன் ஆர் பூம் சோலை திருவேங்கட சுனையில்

மீனாய் பிறக்கும் விதி உடையேன் ஆவேனே

#679

பின் இட்ட சடையானும் பிரமனும் இந்திரனும்

துன்னிட்டு புகல் அரிய வைகுந்த நீள் வாசல்

மின் வட்ட சுடர் ஆழி வேங்கட கோன் தான் உமிழும்

பொன் வட்டில் பிடித்து உடனே புக பெறுவேன் ஆவேனே

#680

ஒண் பவள வேலை உலவு தன் பாற்கடலுள்

கண் துயிலும் மாயோன் கழல் இணைகள் காண்பதற்கு

பண் பகரும் வண்டு இனங்கள் பண் பாடும் வேங்கடத்து

செண்பகமாய் நிற்கும் திரு உடையேன் ஆவேனே

#681

கம்ப மத யானை கழுத்தகத்தின் மேல் இருந்து

இன்பு அமரும் செல்வமும் இ அரசும் யான் வேண்டேன்

எம்பெருமான் ஈசன் எழில் வேங்கட மலை மேல்

தம்பகமாய் நிற்கும் தவம் உடையேன் ஆவேனே

#682

மின் அனைய நுண் இடையார் உருப்பசியும் மேனகையும்

அன்னவர்-தம் பாடலொடும் ஆடல் அவை ஆதரியேன்

தென்ன என வண்டு இனங்கள் பண் பாடும் வேங்கடத்துள்

அன்னனைய பொன் குவடு ஆம் அரும் தவத்தேன் ஆவேனே

#683

வான் ஆளும் மா மதி போல் வெண்குடை கீழ் மன்னவர்-தம்

கோன் ஆகி வீற்றிருந்து கொண்டாடும் செலவு அறியேன்

தேன் ஆர் பூம் சோலை திருவேங்கட மலை மேல்

கான் ஆறாய் பாயும் கருத்து உடையேன் ஆவேனே

#684

பிறை ஏறு சடையானும் பிரமனும் இந்திரனும்

முறையாய பெரு வேள்வி குறை முடிப்பான் மறை ஆனான்

வெறியார் தண் சோலை திருவேங்கட மலை மேல்

நெறியாய் கிடக்கும் நிலை உடையேன் ஆவேனே

#685

செடி ஆய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே

நெடியானே வேங்கடவா நின் கோயிலின் வாசல்

அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்து இயங்கும்

படியாய் கிடந்து உன் பவள வாய் காண்பேனே

#686

உம்பர் உலகு ஆண்டு ஒரு குடை கீழ் உருப்பசி-தன்

அம் பொன் கலை அல்குல் பெற்றாலும் ஆதரியேன்

செம் பவள வாயான் திருவேங்கடம் என்னும்

எம்பெருமான் பொன் மலை மேல் ஏதேனும் ஆவேனே

#687

மன்னிய தண் சாரல் வடவேங்கடத்தான்-தன்

பொன் இயலும் சேவடிகள் காண்பான் புரிந்து இறைஞ்சி

கொல் நவிலும் கூர் வேல் குலசேகரன் சொன்ன

பன்னிய நூல் தமிழ் வல்லார் பாங்காய பத்தர்களே

#688

தரு துயரம் தடாயேல் உன் சரண் அல்லால் சரண் இல்லை

விரை குழுவும் மலர் பொழில் சூழ் வித்துவக்கோட்டு அம்மானே

அரி சினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்று அவள்-தன்

அருள் நினைந்தே அழும் குழவி அதுவே போன்று இருந்தேனே

#689

கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும்

கொண்டானை அல்லால் அறியா குலமகள் போல்

விண் தோய் மதில் புடை சூழ் வித்துவக்கோட்டு அம்மா நீ

கொண்டாளாயாகிலும் உன் குரை கழலே கூறுவனே

#690

மீன் நோக்கும் நீள் வயல் சூழ் வித்துவக்கோட்டு அம்மா என்

பால் நோக்காயாகிலும் உன் பற்று அல்லால் பற்று இலேன்

தான் நோக்காது எத்துயரம் செய்திடினும் தார் வேந்தன்

கோல் நோக்கி வாழும் குடி போன்று இருந்தேனே

#691

வாளால் அறுத்து சுடினும் மருத்துவன்-பால்

மாளாத காதல் நோயாளன் போல் மாயத்தால்

மீளா துயர் தரினும் வித்துவக்கோட்டு அம்மா நீ

ஆளா உனது அருளே பார்ப்பன் அடியேனே

#692

வெம் கண் திண் களிறு அடர்த்தாய் வித்துவக்கோட்டு அம்மானே

எங்கு போய் உய்கேன் உன் இணை அடியே அடையல் அல்லால்

எங்கும் போய் கரை காணாது எறி கடல்வாய் மீண்டு ஏயும்

வங்கத்தின் கூம்பு ஏறும் மா பறவை போன்றேனே

#693

செம் தழலே வந்து அழலை செய்திடினும் செங்கமலம்

அந்தரம் சேர் வெம் கதிரோற்கு அல்லால் அலராவால்

வெம் துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டு அம்மா உன்

அந்தம் இல் சீர்க்கு அல்லால் அகம் குழையமாட்டேனே

#694

எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள்

மைத்து எழுந்த மா முகிலே பார்த்திருக்கும் மற்று அவை போல்

மெய் துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டு அம்மா என்

சித்தம் மிக உன்-பாலே வைப்பன் அடியேனே

#695

தொக்கு இலங்கி யாறு எல்லாம் பரந்து ஓடி தொடு கடலே

புக்கு அன்றி புறம் நிற்க மாட்டாத மற்று அவை போல்

மிக்கு இலங்கு முகில் நிறத்தாய் வித்துவக்கோட்டு அம்மா உன்

புக்கு இலங்கு சீர் அல்லால் புக்கிலன் காண் புண்ணியனே

#696

நின்னையே தான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான்

தன்னையே தான் வேண்டும் செல்வம் போல் மாயத்தால்

மின்னையே சேர் திகிரி வித்துவக்கோட்டு அம்மானே

நின்னையே தான் வேண்டி நிற்பன் அடியேனே

#697

வித்துவக்கோட்டு அம்மா நீ வேண்டாயே ஆயிடினும்

மற்று ஆரும் பற்று இலேன் என்று அவனை தாள் நயந்து

கொற்ற வேல் தானை குலசேகரன் சொன்ன

நல் தமிழ் பத்தும் வல்லார் நண்ணார் நரகமே

#698

ஏர் மலர் பூம் குழல் ஆயர் மாதர் எனை பலர் உள்ள இ ஊரில் உன்தன்

மார்வு தழுவுதற்கு ஆசையின்மை அறிந்தறிந்தே உன்தன் பொய்யை கேட்டு

கூர் மழை போல் பனி கூதல் எய்தி கூசி நடுங்கி யமுனை யாற்றில்

வார் மணல் குன்றில் புலர நின்றேன் வாசுதேவா உன் வரவு பார்த்தே

#699

கெண்டை ஒண் கண் மடவாள் ஒருத்தி கீழை அகத்து தயிர் கடைய

கண்டு ஒல்லை நானும் கடைவன் என்று கள்ள விழியை விழித்து புக்கு

வண்டு அமர் பூம் குழல் தாழ்ந்து உலாவ வாள் முகம் வேர்ப்ப செ வாய் துடிப்ப

தண் தயிர் நீ கடைந்திட்ட வண்ணம் தாமோதரா மெய் அறிவன் நானே

#700

கரு மலர் கூந்தல் ஒருத்தி-தன்னை கடைக்கணித்து ஆங்கே ஒருத்தி-தன்-பால்

மருவி மனம் வைத்து மற்றொருத்திக்கு உரைத்து ஒரு பேதைக்கு பொய் குறித்து

புரி குழல் மங்கை ஒருத்தி-தன்னை புணர்தி அவளுக்கும் மெய்யன் அல்லை

மருது இறுத்தாய் உன் வளர்த்தியூடே வளர்கின்றதால் உன்தன் மாயைதானே

#701

தாய் முலை பாலில் அமுது இருக்க தவழ்ந்து தளர் நடையிட்டு சென்று

பேய் முலை வாய் வைத்து நஞ்சை உண்டு பித்தன் என்றே பிறர் ஏச நின்றாய்

ஆய் மிகு காதலோடு யான் இருப்ப யான் விட வந்த என் தூதியோடே

நீ மிகு போகத்தை நன்கு உகந்தாய் அதுவும் உன் கோரம்புக்கு ஏற்கும் அன்றே

#702

மின் ஒத்த நுண் இடையாளை கொண்டு வீங்கு இருள்வாய் என்தன் வீதியூடே

பொன் ஒத்த ஆடை குக்கூடலிட்டு போகின்ற-போது நான் கண்டு நின்றேன்

கண்ணுற்றவளை நீ கண்ணாலிட்டு கை விளிக்கின்றதும் கண்டே நின்றேன்

என்னுக்கு அவளை விட்டு இங்கு வந்தாய் இன்னம் அங்கே நட நம்பி நீயே

#703

மல் பொரு தோள் உடை வாசுதேவா வல்வினையேன் துயில் கொண்டவாறே

இற்றை இரவிடை ஏமத்து என்னை இன் அணை மேல் இட்டு அகன்று நீ போய்

அற்றை இரவும் ஓர் பிற்றை நாளும் அரிவையரோடும் அணைந்து வந்தாய்

எற்றுக்கு நீ என் மருங்கில் வந்தாய் எம்பெருமான் நீ எழுந்தருளே

#704

பை அரவின் அணை பள்ளியினாய் பண்டையோம் அல்லோம் நாம் நீ உகக்கும்

மை அரி ஒண் கண்ணினாரும் அல்லோம் வைகி எம் சேரி வரவு ஒழி நீ

செய்ய உடையும் திருமுகமும் செங்கனி வாயும் குழலும் கண்டு

பொய் ஒரு நாள் பட்டதே அமையும் புள்ளுவம் பேசாதே போகு நம்பீ

#705

என்னை வருக என குறித்திட்டு இன மலர் முல்லையின் பந்தர் நீழல்

மன்னி அவளை புணர புக்கு மற்று என்னை கண்டு உழறா நெகிழ்ந்தாய்

பொன் நிற ஆடையை கையில் தாங்கி பொய் அச்சம் காட்டி நீ போதியேலும்

இன்னம் என் கையகத்து ஈங்கு ஒரு நாள் வருதியேல் என் சினம் தீர்வன் நானே

#706

மங்கல நல் வன மாலை மார்வில் இலங்க மயில் தழை பீலி சூடி

பொங்கு இள ஆடை அரையில் சாத்தி பூம் கொத்து காதில் புணர பெய்து

கொங்கு நறும் குழலார்களோடு குழைந்து குழல் இனிது ஊதி வந்தாய்

எங்களுக்கே ஒரு நாள் வந்து ஊத உன் குழலின் இசை போதராதே

#707

அல்லி மலர் திருமங்கை கேள்வன் தன்னை நயந்து இள ஆய்ச்சிமார்கள்

எல்லி பொழுதினில் ஏமத்து ஊடி எள்கி உரைத்த உரை-அதனை

கொல்லி நகர்க்கு இறை கூடல் கோமான் குலசேகரன் இன்னிசையில் மேவி

சொல்லிய இன் தமிழ் மாலை பத்தும் சொல்ல வல்லார்க்கு இல்லை துன்பம் தானே

#708

ஆலை நீள் கரும்பு அன்னவன் தாலோ அம்புய தடம் கண்ணினன் தாலோ

வேலை நீர் நிறத்து அன்னவன் தாலோ வேழ போதகம் அன்னவன் தாலோ

ஏல வார் குழல் என் மகன் தாலோ என்றுஎன்று உன்னை என் வாயிடை நிறைய

தால் ஒலித்திடும் திருவினை இல்லா தாயரில் கடை ஆயின தாயே

#709

வடி கொள் அஞ்சனம் எழுது செம் மலர் கண் மருவி மேல் இனிது ஒன்றினை நோக்கி

முடக்கி சேவடி மலர் சிறு கரும் தாள் பொலியும் நீர் முகில் குழவியே போல

அடக்கியார செம் சிறு விரல் அனைத்தும் அங்கையோடு அணைந்து ஆணையில் கிடந்த

கிடக்கை கண்டிட பெற்றிலன் அந்தோ கேசவா கெடுவேன் கெடுவேனே

#710

முந்தை நன்முறை அன்பு உடை மகளிர் முறைமுறை தம் தம் குறங்கிடை இருத்தி

எந்தையே என்தன் குல பெரும் சுடரே எழு முகில் கணத்து எழில் கவர் ஏறே

உந்தை யாவன் என்று உரைப்ப நின் செம் கேழ் விரலினும் கடைக்கண்ணினும் காட்ட

நந்தன் பெற்றனன் நல்வினை இல்லா நங்கள் கோன் வசுதேவன் பெற்றிலனே

#711

களி நிலா எழில் மதி புரை முகமும் கண்ணனே திண் கை மார்வும் திண் தோளும்

தளிர் மலர் கரும் குழல் பிறை-அதுவும் தடம் கொள் தாமரை கண்களும் பொலிந்த

இளமை இன்பத்தை இன்று என்தன் கண்ணால் பருகுவேற்கு இவள் தாய் என நினைந்த

அளவில் பிள்ளைமை இன்பத்தை இழந்த பாவியேன் எனது ஆவி நில்லாதே

#712

மருவும் நின் திருநெற்றியில் சுட்டி அசைதர மணி வாயிடை முத்தம்

தருதலும் உன்தன் தாதையை போலும் வடிவு கண்டுகொண்டு உள்ளம் உள் குளிர

விரலை செம் சிறு வாயிடை சேர்த்து வெகுளியாய் நின்று உரைக்கும் அ உரையும்

திரு இலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே

#713

தண் அம் தாமரை கண்ணனே கண்ணா தவழ்ந்து தளர்ந்தது ஓர் நடையால்

மண்ணில் செம் பொடி ஆடி வந்து என்தன் மார்வில் மன்னிட பெற்றிலேன் அந்தோ

வண்ண செம் சிறு கைவிரல் அனைத்தும் வாரி வாய்க்கொண்ட அடிசிலின் மிச்சில்

உண்ண பெற்றிலேன் ஓ கொடு வினையேன் என்னை என் செய்ய பெற்றது எம் மோயே

#714

குழகனே என்தன் கோமள பிள்ளாய் கோவிந்தா என் குடங்கையில் மன்னி

ஒழுகு பேர் எழில் இளம் சிறு தளிர் போல் ஒரு கையால் ஒரு முலை முகம் நெருடா

மழலை மென் நகை இடையிடை அருளா வாயிலே முலை இருக்க என் முகத்தே

எழில் கொள் நின் திருக்கண்ணினை நோக்கம் தன்னையும் இழந்தேன் இழந்தேனே

#715

முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டு உண்ணும் முகிழ் இளம் சிறு தாமரை கையும்

எழில் கொள் தாம்பு கொண்டு அடிப்பதற்கு எள்கு நிலையும் வெண் தயிர் தோய்ந்த செ வாயும்

அழுகையும் அஞ்சி நோக்கும் அ நோக்கும் அணி கொள் செம் சிறுவாய் நெளிப்பதுவும்

தொழுகையும் இவை கண்ட அசோதை தொல்லை இன்பத்து இறுதி கண்டாளே

#716

குன்றினால் குடை கவித்ததும் கோல குரவை கோத்ததுவும் குடம் ஆட்டும்

கன்றினால் விளவு எறிந்ததும் காலால் காளியன் தலை மிதித்ததும் முதலா

வென்றி சேர் பிள்ளை நல் விளையாட்டம் அனைத்திலும் அங்கு என் உள்ளம் உள் குளிர

ஒன்றும் கண்டிடப்பெற்றிலேன் அடியேன் காணுமாறு இனி உண்டு எனில் அருளே

#717

வஞ்சம் மேவிய நெஞ்சு உடை பேய்ச்சி வரண்டு நார் நரம்பு எழ கரிந்து உக்க

நஞ்சம் ஆர்தரு சுழி முலை அந்தோ சுவைத்து நீ அருள்செய்து வளர்ந்தாய்

கஞ்சன் நாள் கவர் கரு முகில் எந்தாய் கடைப்பட்டேன் வறிதே முலை சுமந்து

தஞ்ச மேல் ஒன்றிலேன் உய்ந்திருந்தேன் தக்கதே நல்ல தாயை பெற்றாயே

#718

மல்லை மாநகர்க்கு இறையவன்-தன்னை வான் செலுத்தி வந்து ஈங்கு அணை மாயத்து

எல்லையில் பிள்ளை செய்வன காணா தெய்வ தேவகி புலம்பிய புலம்பல்

கொல்லி காவலன் மால் அடி முடி மேல் கோலமாம் குலசேகரன் சொன்ன

நல் இசை தமிழ் மாலை வல்லார்கள் நண்ணுவார் ஒல்லை நாரணன் உலகே

#719

மன்னு புகழ் கௌசலை-தன் மணி வயிறு வாய்த்தவனே

தென் இலங்கை கோன் முடிகள் சிந்துவித்தாய் செம்பொன் சேர்

கன்னி நன் மா மதில் புடை சூழ் கணபுரத்து என் கரு மணியே

என்னுடைய இன் அமுதே இராகவனே தாலேலோ

#720

புண்டரிக மலர்-அதன் மேல் புவனி எல்லாம் படைத்தவனே

திண் திறலாள் தாடகை-தன் உரம் உருவ சிலை வளைத்தாய்

கண்டவர்-தம் மனம் வழங்கும் கணபுரத்து என் கரு மணியே

எண் திசையும் ஆளுடையாய் இராகவனே தாலேலோ

#721

கொங்கு மலி கரும் குழலாள் கௌசலை-தன் குல மதலாய்

தங்கு பெரும் புகழ் சனகன் திரு மருகா தாசரதீ

கங்கையிலும் தீர்த்த மலி கணபுரத்து என் கரு மணியே

எங்கள் குலத்து இன் அமுதே இராகவனே தாலேலோ

#722

தாமரை மேல் அயன்-அவனை படைத்தவனே தயரதன்-தன்

மா மதலாய் மைதிலி-தன் மணவாளா வண்டு இனங்கள்

காமரங்கள் இசைபாடும் கணபுரத்து என் கரு மணியே

ஏமருவும் சிலை வலவா இராகவனே தாலேலோ

#723

பார் ஆளும் படர் செல்வம் பரத நம்பிக்கே அருளி

ஆரா அன்பு இளையவனோடு அரும் கானம் அடைந்தவனே

சீர் ஆளும் வரை மார்பா திருக்கண்ணபுரத்து அரசே

தார் ஆரும் நீண் முடி என் தாசரதீ தாலேலோ

#724

சுற்றம் எல்லாம் பின்தொடர தொல் கானம் அடைந்தவனே

அற்றவர்கட்கு அரு மருந்தே அயோத்தி நகர்க்கு அதிபதியே

கற்றவர்கள் தாம் வாழும் கணபுரத்து என் கரு மணியே

சிற்றவை-தன் சொல் கொண்ட சீராமா தாலேலோ

#725

ஆலின் இலை பாலகனாய் அன்று உலகம் உண்டவனே

வாலியை கொன்று அரசு இளைய வானரத்துக்கு அளித்தவனே

காலின் மணி கரை அலைக்கும் கணபுரத்து என் கரு மணியே

ஆலி நகர்க்கு அதிபதியே அயோத்தி மனே தாலேலோ

#726

மலை-அதனால் அணை கட்டி மதில் இலங்கை அழித்தவனே

அலை கடலை கடைந்து அமரர்க்கு அமுது அருளி செய்தவனே

கலை வலவர் தாம் வாழும் கணபுரத்து என் கரு மணியே

சிலை வலவா சேவகனே சீராமா தாலேலோ

#727

தளை அவிழும் நறும் குஞ்சி தயரதன்-தன் குல மதலாய்

வளைய ஒரு சிலை-அதனால் மதில் இலங்கை அழித்தவனே

களை கழுநீர் மருங்கு அலரும் கணபுரத்து என் கரு மணியே

இளையவர்கட்கு அருள் உடையாய் இராகவனே தாலேலோ

#728

தேவரையும் அசுரரையும் திசைகளையும் படைத்தவனே

யாவரும் வந்து அடி வணங்க அரங்க நகர் துயின்றவனே

காவிரி நல் நதி பாயும் கணபுரத்து என் கரு மணியே

ஏ வரி வெம் சிலை வலவா இராகவனே தாலேலோ

#729

கன்னி நன் மா மதில் புடை சூழ் கணபுரத்து என் காகுத்தன்

தன் அடி மேல் தாலேலோ என்று உரைத்த தமிழ் மாலை

கொல் நவிலும் வேல் வலவன் குடை குலசேகரன் சொன்ன

பன்னிய நூல் பத்தும் வல்லார் பாங்காய பத்தர்களே

#730

வன் தாளின் இணை வணங்கி வள நகரம் தொழுது ஏத்த மன்னன் ஆவான்

நின்றாயை அரியணை மேல் இருந்தாயை நெடும் கானம் படர போகு

என்றாள் எம் இராமாவோ உனை பயந்த கைகேசி தன் சொல் கேட்டு

நன்றாக நானிலத்தை ஆள்வித்தேன் நன் மகனே உன்னை நானே

#731

வெவ்வாயேன் வெவ் உரை கேட்டு இரு நிலத்தை வேண்டாதே விரைந்து வென்றி

மை வாய களிறு ஒழிந்து தேர் ஒழிந்து மா ஒழிந்து வனமே மேவி

நெய் வாய வேல் நெடும் கண் நேர் இழையும் இளங்கோவும் பின்பு போக

எவ்வாறு நடந்தனை எம் இராமாவோ எம்பெருமான் என் செய்கேனே

#732

கொல் அணை வேல் வரி நெடும் கண் கௌசலை-தன் குல மதலாய் குனி வில் ஏந்தும்

மல் அணைந்த வரை தோளா வல்வினையேன் மனம் உருக்கும் வகையே கற்றாய்

மெல் அணை மேல் முன் துயின்றாய் இன்று இனிப்போய் வியன் கான மரத்தின் நீழல்

கல் அணை மேல் கண் துயில கற்றனையோ காகுத்தா கரிய கோவே

#733

வா போகு வா இன்னம் வந்து ஒருகால் கண்டுபோ மலராள் கூந்தல்

வேய் போலும் எழில் தோளி தன்பொருட்டா விடையோன்-தன் வில்லை செற்றாய்

மா போகு நெடும் கானம் வல்வினையேன் மனம் உருக்கும் மகனே இன்று

நீ போக என் நெஞ்சம் இரு பிளவாய் போகாதே நிற்குமாறே

#734

பொருந்தார் கை வேல் நுதி போல் பரல் பாய மெல் அடிகள் குருதி சோர

விரும்பாத கான் விரும்பி வெயில் உறைப்ப வெம் பசி நோய் கூர இன்று

பெரும் பாவியேன் மகனே போகின்றாய் கேகயர் கோன் மகளாய் பெற்ற

அரும் பாவி சொல் கேட்ட அருவினையேன் என் செய்கேன் அந்தோ யானே

#735

அம்மா என்று உகந்து அழைக்கும் ஆர்வ சொல் கேளாதே அணி சேர் மார்வம்

என் மார்வத்திடை அழுந்த தழுவாதே முழுசாதே மோவாது உச்சி

கைம்மாவின் நடை அன்ன மெல் நடையும் கமலம் போல் முகமும் காணாது

எம்மானை என் மகனை இழந்திட்ட இழிதகையேன் இருக்கின்றேனே

#736

பூ மருவு நறும் குஞ்சி புன் சடையா புனைந்து பூம் துகில் சேர் அல்குல்

காமர் எழில் விழல் உடுத்து கலன் அணியாது அங்கங்கள் அழகு மாறி

ஏமரு தோள் என் புதல்வன் யான் இன்று செல தக்க வனம் தான் சேர்தல்

தூ மறையீர் இது தகவோ சுமந்திரனே வசிட்டனே சொல்லீர் நீரே

#737

பொன் பெற்றார் எழில் வேத புதல்வனையும் தம்பியையும் பூவை போலும்

மின் பற்றா நுண் மருங்குல் மெல் இயல் என் மருகியையும் வனத்தில் போக்கி

நின் பற்றா நின் மகன் மேல் பழி விளைத்திட்டு என்னையும் நீள் வானில் போக்க

என் பெற்றாய் கைகேசி இரு நிலத்தில் இனிதாக இருக்கின்றாயே

#738

முன் ஒரு நாள் மழுவாளி சிலை வாங்கி அவன் தவத்தை முற்றும் செற்றாய்

உன்னையும் உன் அருமையையும் உன் மோயின் வருத்தமும் ஒன்றாக கொள்ளாது

என்னையும் என் மெய்யுரையும் மெய்யாக கொண்டு வனம் புக்க எந்தாய்

நின்னையே மகனாக பெற பெறுவேன் ஏழ் பிறப்பும் நெடும் தோள் வேந்தே

#739

தேன் நகு மா மலர் கூந்தல் கௌசலையும் சுமித்திரையும் சிந்தை நோவ

கூன் உருவின் கொடும் தொழுத்தை சொல் கேட்ட கொடியவள்-தன் சொற்கொண்டு இன்று

கானகமே மிக விரும்பி நீ துறந்த வள நகரை துறந்து நானும்

வானகமே மிக விரும்பி போகின்றேன் மனு குலத்தார் தங்கள் கோவே

#740

ஏர் ஆர்ந்த கரு நெடுமால் இராமனாய் வனம் புக்க அதனுக்கு ஆற்றா

தார் ஆர்ந்த தட வரை தோள் தயரதன் தான் புலம்பிய அ புலம்பல்-தன்னை

கூர் ஆர்ந்த வேல் வலவன் கோழியர் கோன் குடை குலசேகரன் சொல் செய்த

சீர் ஆர்ந்த தமிழ் மாலை இவை வல்லார் தீ நெறி-கண் செல்லார் தாமே

#741

அம் கண் நெடு மதில் புடை சூழ் அயோத்தி என்னும் அணி நகரத்து உலகு அனைத்தும் விளக்கும் சோதி

வெம் கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய் தோன்றி விண் முழுதும் உய கொண்ட வீரன்-தன்னை

செம் கண் நெடும் கரு முகிலை இராமன்-தன்னை தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

எங்கள் தனிமுதல்வனை எம்பெருமான்-தன்னை என்று-கொலோ கண் குளிர காணும் நாளே

#742

வந்து எதிர்ந்த தாடகை-தன் உரத்தை கீறி வரு குருதி பொழிதர வன் கணை ஒன்று ஏவி

மந்திரம் கொள் மறை முனிவன் வேள்வி காத்து வல் அரக்கர் உயிர் உண்ட மைந்தன் காண்-மின்

செம் தளிர் வாய் மலர் நகை சேர் செழும் தண் சோலை தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

அந்தணர்கள் ஒரு மூவாயிரவர் ஏத்த அணி மணி ஆசனத்து இருந்த அம்மான் தானே

#743

செ அரி நல் கரு நெடும் கண் சீதைக்கு ஆகி சின விடையோன் சிலை இறுத்து மழுவாள் ஏந்தி

வெவ் வரி நல் சிலை வாங்கி வென்றி கொண்டு வேல் வேந்தர் பகை தடிந்த வீரன்-தன்னை

தெவ்வர் அஞ்சு நெடும் புரிசை உயர்ந்த பாங்கர் தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

எவ்வரி வெம் சிலை தடக்கை இராமன் தன்னை இறைஞ்சுவார் இணை அடியே இறைஞ்சினேனே

#744

தொத்து அலர் பூம் சுரி குழல் கைகேசி சொல்லால் தொல் நகரம் துறந்து துறை கங்கை-தன்னை

பத்தி உடை குகன் கடத்த வனம் போய் புக்கு பரதனுக்கு பாதுகமும் அரசும் ஈந்து

சித்திரகூடத்து இருந்தான்-தன்னை இன்று தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

எத்தனையும் கண் குளிர காண பெற்ற இரு நிலத்தார்க்கு இமையவர் நேர் ஒவ்வார்தாமே

#745

வலி வணக்கு வரை நெடும் தோள் விராதை கொன்று வண் தமிழ் மா முனி கொடுத்த வரி வில் வாங்கி

கலை வணக்கு நோக்கு அரக்கி மூக்கை நீக்கி கரனோடு தூடணன்-தன் உயிரை வாங்கி

சிலை வணக்கி மான் மறிய எய்தான்-தன்னை தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

தலை வணக்கி கைகூப்பி ஏத்தவல்லார் திரிதலால் தவம் உடைத்து தரணிதானே

#746

தனம் மருவு வைதேகி பிரியலுற்று தளர்வு எய்தி சடாயுவை வைகுந்தத்து ஏற்றி

வனம் மருவு கவி அரசன் காதல் கொண்டு வாலியை கொன்று இலங்கை நகர் அரக்கர் கோமான்

சினம் அடங்க மாருதியால் சுடுவித்தானை தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

இனிது அமர்ந்த அம்மானை இராமன்-தன்னை ஏத்துவார் இணை அடியே ஏத்தினேனே

#747

குரை கடலை அடல் அம்பால் மறுக எய்து குலை கட்டி மறுகரையை அதனால் ஏறி

எரி நெடு வேல் அரக்கரொடும் இலங்கை வேந்தன் இன் உயிர் கொண்டு அவன் தம்பிக்கு அரசும் ஈந்து

திருமகளோடு இனிது அமர்ந்த செல்வன்-தன்னை தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

அரசு அமர்ந்தான் அடி சூடும் அரசை அல்லால் அரசு ஆக எண்ணேன் மற்று அரசு தானே

#748

அம் பொன் நெடு மணி மாட அயோத்தி எய்தி அரசு எய்தி அகத்தியன்வாய் தான் முன் கொன்றான்

தன் பெரும் தொல் கதை கேட்டு மிதிலை செல்வி உலகு உய்ய திருவயிறு வாய்த்த மக்கள்

செம் பவள திரள் வாய் தன் சரிதை கேட்டான் தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

எம்பெருமான்-தன் சரிதை செவியால் கண்ணால் பருகுவோம் இன் அமுதம் மதியோம் ஒன்றே

#749

செறி தவ சம்புகன்-தன்னை சென்று கொன்று செழு மறையோன் உயிர் மீட்டு தவத்தோன் ஈந்த

நிறை மணி பூண் அணியும் கொண்டு இலவணன்-தன்னை தம்பியால் வான் ஏற்றி முனிவன் வேண்ட

திறல் விளங்கும் இலக்குமனை பிரிந்தான்-தன்னை தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

உறைவானை மறவாத உள்ளம்-தன்னை உடையோம் மற்று உறு துயரம் அடையோம் அன்றே

#750

அன்று சராசரங்களை வைகுந்தத்து ஏற்றி அடல் அரவ பகை ஏறி அசுரர்-தம்மை

வென்று இலங்கு மணி நெடும் தோள் நான்கும் தோன்ற விண் முழுதும் எதிர்வர தன் தாமம் மேவி

சென்று இனிது வீற்றிருந்த அம்மான்-தன்னை தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள்

என்றும் நின்றான் அவன் இவன் என்று ஏத்தி நாளும் இறைஞ்சு-மினோ எப்பொழுதும் தொண்டீர் நீரே

#751

தில்லைநகர் திருச்சித்ரகூடம்-தன்னுள் திறல் விளங்கு மாருதியோடு அமர்ந்தான்-தன்னை

எல்லை இல் சீர் தயரதன்-தன் மகனாய் தோன்றிற்று அது முதலா தன் உலகம் புக்கது ஈறா

கொல் இயலும் படை தானை கொற்ற ஒள் வாள் கோழியர் கோன் குடை குலசேகரன் சொல் செய்த

நல் இயல் இன் தமிழ் மாலை பத்தும் வல்லார் நலம் திகழ் நாரணன் அடி கீழ் நண்ணுவாரே

#752

பூ நிலாய ஐந்துமாய் புனல்-கண் நின்ற நான்குமாய்

தீ நிலாய மூன்றுமாய் சிறந்த கால் இரண்டுமாய்

மீ நிலாயது ஒன்றும் ஆகி வேறு வேறு தன்மையாய்

நீ நிலாய வண்ணம் நின்னை யார் நினைக்க வல்லரே

#753

ஆறும் ஆறும் ஆறுமாய் ஓர் ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய்

ஏறு சீர் இரண்டும் மூன்றும் ஏழும் ஆறும் எட்டுமாய்

வேறு வேறு ஞானம் ஆகி மெய்யினோடு பொய்யுமாய்

ஊறொடு ஓசை ஆய ஐந்தும் ஆய ஆய மாயனே

#754

ஐந்தும் ஐந்தும் ஐந்தும் ஆகி அல்லவற்று உளாயுமாய்

ஐந்து மூன்றும் ஒன்றும் ஆகி நின்ற ஆதி தேவனே

ஐந்தும் ஐந்தும் ஐந்தும் ஆகி அந்தரத்து அணைந்து நின்று

ஐந்தும் ஐந்தும் ஆய நின்னை யாவர் காண வல்லரே

#755

மூன்று முப்பது ஆறினோடு ஓர் ஐந்தும் ஐந்தும் ஐந்துமாய்

மூன்று மூர்த்தி ஆகி மூன்று மூன்று மூன்று மூன்றுமாய்

தோன்று சோதி மூன்றுமாய் துளக்கம் இல் விளக்கமாய்

ஏன்று என் ஆவியுள் புகுந்தது என்-கொலோ எம் ஈசனே

#756

நின்று இயங்கும் ஒன்று அலா உருக்கள்-தோறும் ஆவியாய்

ஒன்றி உள் கலந்து நின்ற நின்ன தன்மை இன்னது என்று

என்றும் யார்க்கும் எண் இறந்த ஆதியாய் நின் உந்திவாய்

அன்று நான்முகன் பயந்த ஆதி தேவன் அல்லையே

#757

நாகம் ஏந்து மேரு வெற்பை நாகம் ஏந்து மண்ணினை

நாகம் ஏந்தும் ஆக மாகம் மாகம் ஏந்து வார் புனல்

மாகம் ஏந்து மங்குல் தீ ஓர் வாயு ஐந்து அமைந்து காத்து

ஏகம் ஏந்தி நின்ற நீர்மை நின்-கணே இயன்றதே

#758

ஒன்று இரண்டு மூர்த்தியாய் உறக்கமோடு உணர்ச்சியாய்

ஒன்று இரண்டு காலம் ஆகி வேலை ஞாலம் ஆயினாய்

ஒன்று இரண்டு தீயும் ஆகி ஆயன் ஆய மாயனே

ஒன்று இரண்டு கண்ணினானும் உன்னை ஏத்த வல்லனே

#759

ஆதி ஆன வானவர்க்கும் அண்டம் ஆய அப்புறத்து

ஆதி ஆன வானவர்க்கும் ஆதி ஆன ஆதி நீ

ஆதி ஆன வான வாணர் அந்த காலம் நீ உரைத்தி

ஆதி ஆன காலம் நின்னை யாவர் காண வல்லரே

#760

தாது உலாவு கொன்றை மாலை துன்னு செம் சடை சிவன்

நீதியால் வணங்கு பாத நின்மலா நிலாய சீர்

வேத வாணர் கீத வேள்வி நீதியான கேள்வியார்

நீதியால் வணங்குகின்ற நீர்மை நின்-கண் நின்றதே

#761

தன்னுளே திரைத்து எழும் தரங்க வெண் தடம் கடல்

தன்னுளே திரைத்து எழுந்து அடங்குகின்ற தன்மை போல்

நின்னுளே பிறந்து இறந்து நிற்பவும் திரிபவும்

நின்னுளே அடங்குகின்ற நீர்மை நின்-கண் நின்றதே

#762

சொல்லினால் தொடர்ச்சி நீ சொலப்படும் பொருளும் நீ

சொல்லினால் சொலப்படாது தோன்றுகின்ற சோதி நீ

சொல்லினால் படைக்க நீ படைக்க வந்து தோன்றினார்

சொல்லினால் சுருங்க நின் குணங்கள் சொல்ல வல்லரே

#763

உலகு-தன்னை நீ படைத்தி உள் ஒடுக்கி வைத்தி மீண்டு

உலகு-தன்னுளே பிறத்தி ஓரிடத்தை அல்லையால்

உலகு நின்னொடு ஒன்றி நிற்க வேறு நிற்றி ஆதலால்

உலகில் நின்னை உள்ள சூழல் யாவர் உள்ள வல்லரே

#764

இன்னை என்று சொல்லல் ஆவது இல்லை யாதும் இட்டிடை

பின்னை கேள்வன் என்பர் உன் பிணக்கு உணர்ந்த பெற்றியோர்

பின்னை ஆய கோலமோடு பேரும் ஊரும் ஆதியும்

நின்னை யார் நினைக்க வல்லர் நீர்மையால் நினைக்கிலே

#765

தூய்மை யோகம் ஆயினாய் துழாய் அலங்கல் மாலையாய்

ஆமை ஆகி ஆழ் கடல் துயின்ற ஆதி தேவ நின்

நாமதேயம் இன்னது என்ன வல்லம் அல்ல ஆகிலும்

சாம வேத கீதனாய சக்ரபாணி அல்லையே

#766

அங்கம் ஆறும் வேதம் நான்கும் ஆகி நின்று அவற்றுளே

தங்குகின்ற தன்மையாய் தடம் கடல் பணத்தலை

செம் கண் நாக அணை கிடந்த செல்வம் மல்கு சீரினாய்

சங்க வண்ணம் அன்ன மேனி சார்ங்கபாணி அல்லையே

#767

தலை கணம் துகள் குழம்பு சாதி சோதி தோற்றமாய்

நிலை கணங்கள் காண வந்து நிற்றியேலும் நீடு இரும்

கலை கணங்கள் சொல் பொருள் கருத்தினால் நினைக்கொணா

மலை கணங்கள் போல் உணர்த்தும் மாட்சி நின்-தன் மாட்சியே

#768

ஏக மூர்த்தி மூன்று மூர்த்தி நாலு மூர்த்தி நன்மை சேர்

போக மூர்த்தி புண்ணியத்தின் மூர்த்தி எண் இல் மூர்த்தியாய்

நாக மூர்த்தி சயனமாய் நலம் கடல் கிடந்து மேல்

ஆக மூர்த்தி ஆய வண்ணம் என்-கொல் ஆதி தேவனே

#769

விடத்த வாய் ஒர் ஆயிரம் இராயிரம் கண் வெம் தழல்

விடுத்து வீழ்வு இலாத போகம் மிக்க சோதி தொக்க சீர்

தொடுத்து மேல் விதானமாய பௌவ நீர் அரா அணை

படுத்த பாயல் பள்ளிகொள்வது என்-கொல் வேலை வண்ணனே

#770

புள்ளது ஆகி வேதம் நான்கும் ஓதினாய் அது அன்றியும்

புள்ளின்வாய் பிளந்து புள் கொடி பிடித்த பின்னரும்

புள்ளை ஊர்தி ஆதலால் அது என்-கொல் மின் கொள் நேமியாய்

புள்ளின் மெய் பகை கடல் கிடத்தல் காதலித்ததே

#771

கூசம் ஒன்றும் இன்றி மாசுணம் படுத்து வேலை நீர்

பேச நின்ற தேவர் வந்து பாட முன் கிடந்ததும்

பாசம் நின்ற நீரில் வாழும் ஆமையான கேசவா

ஏச அன்று நீ கிடந்தவாறு கூறு தேறவே

#772

அரங்கனே தரங்க நீர் கலங்க அன்று குன்று சூழ்

மரங்கள் தேய மாநிலம் குலுங்க மாசுணம் சுலாய்

நெருங்க நீ கடைந்த-போது நின்ற சூரர் என் செய்தார்

குரங்கை ஆள் உகந்த எந்தை கூறு தேற வேறு இதே

#773

பண்டும் இன்றும் மேலுமாய் ஒர் பாலன் ஆகி ஞாலம் ஏழ்

உண்டு மண்டி ஆலிலை துயின்ற ஆதி தேவனே

வண்டு கிண்டு தண் துழாய் அலங்கலாய் கலந்த சீர்

புண்டரீக பாவை சேரும் மார்ப பூமிநாதனே

#774

வால் நிறத்து ஓர் சீயமாய் வளைந்த வாள் எயிற்றவன்

ஊன் நிறத்து உகிர் தலம் அழுத்தினாய் உலாய சீர்

நால் நிறத்த வேத நாவர் நல்ல யோகினால் வணங்கு

பால் நிற கடல் கிடந்த பற்பநாபன் அல்லையே

#775

கங்கை நீர் பயந்த பாத பங்கயத்து எம் அண்ணலே

அங்கை ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்தினாய்

சிங்கமாய தேவதேவ தேன் உலாவு மென் மலர்

மங்கை மன்னி வாழும் மார்ப ஆழி மேனி மாயனே

#776

வரத்தினில் சிரத்தை மிக்க வாள் எயிற்று மற்றவன்

உரத்தினில் கரத்தை வைத்து உகிர் தலத்தை ஊன்றினாய்

இரத்தி நீ இது என்ன பொய் இரந்த மண் வயிற்றுளே

கரத்தி உன் கருத்தை யாவர் காண வல்லர் கண்ணனே

#777

ஆணினோடு பெண்ணும் ஆகி அல்லவோடு நல்லவாய்

ஊணொடு ஓசை ஊறும் ஆகி ஒன்று அலாத மாயையாய்

பூணி பேணும் ஆயன் ஆகி பொய்யினோடு மெய்யுமாய்

காணி பேணும் மாணியாய் கரந்து சென்ற கள்வனே

#778

விண் கடந்த சோதியாய் விளங்கு ஞான மூர்த்தியாய்

பண் கடந்த தேசம் மேவு பாவ நாச நாதனே

எண் கடந்த யோகினோடு இரந்து சென்று மாணியாய்

மண் கடந்த வண்ணம் நின்னை யார் மதிக்க வல்லரே

#779

படைத்த பார் இடந்து அளந்து அது உண்டு உமிழ்ந்து பௌவ நீர்

படைத்து அடைத்து அதில் கிடந்து முன் கடைந்த பெற்றியோய்

மிடைத்த மாலி மாலிமான் விலங்கு காலன் ஊர் புக

படைக்கலம் விடுத்த பல் படை தடக்கை மாயனே

#780

பரத்திலும் பரத்தை ஆதி பௌவ நீர் அணை கிடந்து

உரத்திலும் ஒருத்தி-தன்னை வைத்து உகந்து அது அன்றியும்

நரத்திலும் பிறத்தி நாத ஞானமூர்த்தி ஆயினாய்

ஒருத்தரும் நினாது தன்மை இன்னது என்ன வல்லரே

#781

வானகமும் மண்ணகமும் வெற்பும் ஏழ் கடல்களும்

போனகம் செய்து ஆலிலை துயின்ற புண்டரீகனே

தேன் அகஞ்செய் தண் நறும் மலர் துழாய் நன் மாலையாய்

கூன் அகம் புக தெறித்த கொற்ற வில்லி அல்லையே

#782

கால நேமி காலனே கணக்கு இலாத கீர்த்தியாய்

ஞாலம் ஏழும் உண்டு பண்டு ஓர் பாலன் ஆய பண்பனே

வேலை வேவ வில் வளைத்த வெல் சினத்த வீர நின்

பாலர் ஆய பத்தர் சித்தம் முத்தி செய்யும் மூர்த்தியே

#783

குரக்கின படை கொடு குரை கடலின் மீது போய்

அரக்கர் அங்கு அரங்க வெம் சரம் துரந்த ஆதி நீ

இரக்க மண் கொடுத்தவற்கு இரக்கம் ஒன்றும் இன்றியே

பரக்க வைத்து அளந்து கொண்ட பற்பபாதன் அல்லையே

#784

மின் நிறத்து எயிற்று அரக்கன் வீழ வெம் சரம் துரந்து

பின்னவற்கு அருள் புரிந்து அரசு அளித்த பெற்றியோய்

நல் நிறத்து ஒர் இன் சொல் ஏழை பின்னை கேள்வ மன்னு சீர்

பொன் நிறத்த வண்ணன் ஆய புண்டரீகன் அல்லையே

#785

ஆதி ஆதி ஆதி நீ ஒர் அண்டம் ஆதி ஆதலால்

சோதியாத சோதி நீ அது உண்மையில் விளங்கினாய்

வேதம் ஆகி வேள்வி ஆகி விண்ணினோடு மண்ணுமாய்

ஆதி ஆகி ஆயன் ஆய மாயம் என்ன மாயமே

#786

அம்பு உலாவு மீனும் ஆகி ஆமை ஆகி ஆழியார்

தம்பிரானும் ஆகி மிக்கது அன்பு மிக்கு அது அன்றியும்

கொம்பு அராவு நுண் மருங்குல் ஆயர் மாதர் பிள்ளையாய்

எம்பிரானும் ஆய வண்ணம் என்-கொலோ எம் ஈசனே

#787

ஆடகத்த பூண் முலை யசோதை ஆய்ச்சி பிள்ளையாய்

சாடு உதைத்து ஓர் புள்ளது ஆவி கள்ள தாய பேய் மகள்

வீட வைத்த வெய்ய கொங்கை ஐய பால் அமுதுசெய்து

ஆடக கை மாதர் வாய் அமுதம் உண்டது என்-கொலோ

#788

காய்த்த நீள் விளங்கனி உதிர்த்து எதிர்ந்த பூம் குருந்தம்

சாய்த்து மா பிளந்த கை தலத்த கண்ணன் என்பரால்

ஆய்ச்சி பாலை உண்டு மண்ணை உண்டு வெண்ணெய் உண்டு பின்

பேய்ச்சி பாலை உண்டு பண்டு ஓர் ஏனம் ஆய வாமனா

#789

கடம் கலந்த வன் கரி மருப்பு ஒசித்து ஓர் பொய்கைவாய்

விடம் கலந்த பாம்பின் மேல் நடம் பயின்ற நாதனே

குடம் கலந்த கூத்தன் ஆய கொண்டல் வண்ண தண் துழாய்

வடம் கலந்த மாலை மார்ப கால நேமி காலனே

#790

வெற்பு எடுத்து வேலை நீர் கலக்கினாய் அது அன்றியும்

வெற்பு எடுத்து வேலை நீர் வரம்பு கட்டி வேலை சூழ்

வெற்பு எடுத்த இஞ்சி சூழ் இலங்கை கட்டு அழித்த நீ

வெற்பு எடுத்து மாரி காத்த மேக வண்ணன் அல்லையே

#791

ஆனை காத்து ஓர் ஆனை கொன்று அது அன்றி ஆயர் பிள்ளையாய்

ஆனை மேய்த்தி ஆன் நெய் உண்டி அன்று குன்றம் ஒன்றினால்

ஆனை காத்து மை அரி கண் மாதரார் திறத்து முன்

ஆனை அன்று சென்று அடர்த்த மாயம் என்ன மாயமே

#792

ஆயன் ஆகி ஆயர் மங்கை வேய தோள் விரும்பினாய்

ஆய நின்னை யாவர் வல்லர் அம்பரத்தொடு இம்பராய்

மாய மாய மாயை-கொல் அது அன்றி நீ வகுத்தலும்

மாய மாயம் ஆக்கினாய் உன் மாயம் முற்றும் மாயமே

#793

வேறு இசைந்த செக்கர் மேனி நீறு அணிந்த புன் சடை

கீறு திங்கள் வைத்தவன் கை வைத்த வன் கபால் மிசை

ஊறு செம் குருதியால் நிறைத்த காரணம்-தனை

ஏறு சென்று அடர்த்த ஈச பேசு கூசம் இன்றியே

#794

வெம் சினத்த வேழ வெண் மருப்பு ஒசித்து உருத்த மா

கஞ்சனை கடிந்து மண் அளந்துகொண்ட காலனே

வஞ்சனத்து வந்த பேய்ச்சி ஆவி பாலுள் வாங்கினாய்

அஞ்சனத்த வண்ணன் ஆய ஆதி தேவன் அல்லையே

#795

பாலின் நீர்மை செம்பொன் நீர்மை பாசியின் பசும் புறம்

போலும் நீர்மை பொற்பு உடை தடத்து வண்டு விண்டு உலாம்

நீல நீர்மை என்று இவை நிறைந்த காலம் நான்குமாய்

மாலின் நீர்மை வையகம் மறைத்தது என்ன நீர்மையே

#796

மண் உளாய்-கொல் விண் உளாய்-கொல் மண்ணுளே மயங்கி நின்று

எண்ணும் எண் அகப்படாய்-கொல் என்ன மாயை நின் தமர்

கண் உளாய்-கொல் சேயை-கொல் அனந்தன் மேல் கிடந்த எம்

புண்ணியா புனம் துழாய் அலங்கல் அம் புனிதனே

#797

தோடு பெற்ற தண் துழாய் அலங்கல் ஆடு சென்னியாய்

கோடு பற்றி ஆழி ஏந்தி அம் சிறை புள் ஊர்தியால்

நாடு பெற்ற நன்மை நண்ணம் இல்லையேனும் நாயினேன்

வீடு பெற்று இறப்பொடும் பிறப்பு அறுக்குமோ சொலே

#798

காரொடு ஒத்த மேனி நங்கள் கண்ண விண்ணின் நாதனே

நீர் இடத்து அரா அணை கிடத்தி என்பர் அன்றியும்

ஓர் இடத்தை அல்லை எல்லை இல்லை என்பர் ஆதலால்

சேர்வு இடத்தை நாயினேன் தெரிந்து இறைஞ்சுமா சொலே

#799

குன்றில் நின்று வான் இருந்து நீள் கடல் கிடந்து மண்

ஒன்று சென்று அது ஒன்றை உண்டு அது ஒன்று இடந்து பன்றியாய்

நன்று சென்ற நாள்-அவற்றுள் நல் உயிர் படைத்து அவர்க்கு

அன்று தேவு அமைத்து அளித்த ஆதி தேவன் அல்லையே

#800

கொண்டை கொண்ட கோதை மீது தேன் உலாவு கூனி கூன்

உண்டை கொண்டு அரங்க ஓட்டி உள் மகிழ்ந்த நாதன் ஊர்

நண்டை உண்டு நாரை பேர வாளை பாய நீலமே

அண்டை கொண்டு கெண்டை மேயும் அ தண் நீர் அரங்கமே

#801

வெண் திரை கரும் கடல் சிவந்து வேவ முன் ஒர் நாள்

திண் திறல் சிலை கை வாளி விட்ட வீரர் சேரும் ஊர்

எண் திசை கணங்களும் இறைஞ்சி ஆடு தீர்த்த நீர்

வண்டு இரைத்த சோலை வேலி மன்னு சீர் அரங்கமே

#802

சரங்களை துரந்து வில் வளைத்து இலங்கை மன்னவன்

சிரங்கள் பத்து அறுத்து உதிர்த்த செல்வர் மன்னு பொன் இடம்

பரந்து பொன் நிரந்து நுந்தி வந்து அலைக்கும் வார் புனல்

அரங்கம் என்பர் நான்முகத்து அயன் பணிந்த கோயிலே

#803

பொற்றை உற்ற முற்றல் யானை போர் எதிர்ந்து வந்ததை

பற்றி உற்று மற்று அதன் மருப்பு ஒசித்த பாகன் ஊர்

சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்று தண்டர் ஒன்றினர்

அற்ற பற்றர் சுற்றி வாழும் அம் தண் நீர் அரங்கமே

#804

மோடியோடு இலச்சையாய சாபம் எய்தி முக்கணான்

கூடு சேனை மக்களோடு கொண்டு மண்டி வெம் சமத்து

ஓட வாணன் ஆயிரம் கரம் கழித்த ஆதி மால்

பீடு கோயில் கூடு நீர் அரங்கம் என்ற பேரதே

#805

இலை தலை சரம் துரந்து இலங்கை கட்டு அழித்தவன்

மலை தலை பிறந்து இழிந்து வந்து நுந்து சந்தனம்

குலைத்து அலைத்து இறுத்து எறிந்த குங்கும குழம்பினோடு

அலைத்து ஒழுகு காவிரி அரங்கம் மேய அண்ணலே

#806

மன்னு மா மலர் கிழத்தி வைய மங்கை மைந்தனாய்

பின்னும் ஆயர் பின்னை தோள் மணம் புணர்ந்து அது அன்றியும்

உன்ன பாதம் என்ன சிந்தை மன்ன வைத்து நல்கினாய்

பொன்னி சூழ் அரங்கம் மேய புண்டரீகன் அல்லையே

#807

இலங்கை மன்னன் ஐந்தொடு ஐந்து பைம் தலை நிலத்து உக

கலங்க அன்று சென்று கொன்று வென்றி கொண்ட வீரனே

விலங்கு நூலர் வேத நாவர் நீதியான கேள்வியார்

வலம் கொள குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே

#808

சங்கு தங்கு முன் கை நங்கை கொங்கை தங்கல் உற்றவன்

அங்கம் மங்க அன்று சென்று அடர்த்து எறிந்த ஆழியான்

கொங்கு தங்கு வார் குழல் மடந்தைமார் குடைந்த நீர்

பொங்கு தண் குடந்தையுள் கிடந்த புண்டரீகனே

#809

மரம் கெட நடந்து அடர்த்து மத்த யானை மத்தகத்து

உரம் கெட புடைத்து ஒர் கொம்பு ஒசித்து உகந்த உத்தமா

துரங்கம் வாய் பிளந்து மண் அளந்த பாத வேதியர்

வரம் கொள குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே

#810

சாலி வேலி தண் வயல் தடம் கிடங்கு பூம் பொழில்

கோல மாடம் நீடு தண் குடந்தை மேய கோவலா

கால நேமி வக்கரன் கரன் முரன் சிரம் அவை

காலனோடு கூட வில் குனித்த வில் கை வீரனே

#811

செழும் கொழும் பெரும் பனி பொழிந்திட உயர்ந்த வேய்

விழுந்து உலர்ந்து எழுந்து விண் புடைக்கும் வேங்கடத்துள் நின்று

எழுந்திருந்து தேன் பொருந்து பூம் பொழில் தழை கொழும்

செழும் தடம் குடந்தையுள் கிடந்த மாலும் அல்லையே

#812

நடந்த கால்கள் நொந்தவோ நடுங்க ஞாலம் ஏனமாய்

இடந்த மெய் குலுங்கவோ இலங்கு மால் வரை சுரம்

கடந்த கால் பரந்த காவிரி கரை குடந்தையுள்

கிடந்தவாறு எழுந்திருந்து பேசு வாழி கேசனே

#813

கரண்டம் ஆடு பொய்கையுள் கரும் பனை பெரும் பழம்

புரண்டு வீழ வாளை பாய் குறும் கொடி நெடும் தகாய்

திரண்ட தோள் இரணியன் சினம் கொள் ஆகம் ஒன்றையும்

இரண்டு கூறு செய்து உகந்த சிங்கம் என்பது உன்னையே

#814

நன்று இருந்து யோக நீதி நண்ணுவார்கள் சிந்தையுள்

சென்று இருந்து தீவினைகள் தீர்த்த தேவதேவனே

குன்று இருந்த மாடம் நீடு பாடகத்தும் ஊரகத்தும்

நின்று இருந்து வெஃகணை கிடந்தது என்ன நீர்மையே

#815

நின்றது எந்தை ஊரகத்து இருந்தது எந்தை பாடகத்து

அன்று வெஃகணை கிடந்தது என் இலாத முன் எலாம்

அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன்

நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே

#816

நிற்பதும் ஒர் வெற்பகத்து இருப்பும் விண் கிடப்பதும்

நல் பெரும் திரை கடலுள் நான் இலாத முன் எலாம்

அற்புதன் அனந்த சயனன் ஆதி பூதன் மாதவன்

நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என் நெஞ்சுளே

#817

இன்று சாதல் நின்று சாதல் அன்றி யாரும் வையகத்து

ஒன்றி நின்று வாழ்தல் இன்மை கண்டும் நீசர் என்-கொலோ

அன்று பார் அளந்த பாத போதை உன்னி வானின் மேல்

சென்று சென்று தேவராய் இருக்கிலாத வண்ணமே

#818

சண்ட மண்டலத்தின் ஊடு சென்று வீடு பெற்று மேல்

கண்டு வீடு இலாத காதல் இன்பம் நாளும் எய்துவீர்

புண்டரீக பாத புண்ய கீர்த்தி நும் செவி மடுத்து

உண்டு நும் உறு வினை துயருள் நீங்கி உய்ம்-மினோ

#819

மு திறத்து வாணியத்து இரண்டில் ஒன்றும் நீசர்கள்

மத்தராய் மயங்குகின்றது இட்டு அதில் இறந்து போந்து

எ திறத்தும் உய்வது ஓர் உபாயம் இல்லை உய்குறில்

தொத்து இறுத்த தண் துழாய் நன் மாலை வாழ்த்தி வாழ்-மினோ

#820

காணிலும் உரு பொலார் செவிக்கு இனாத கீர்த்தியார்

பேணிலும் வரந்தர மிடுக்கு இலாத தேவரை

ஆணம் என்று அடைந்து வாழும் ஆதர்காள் எம் ஆதி-பால்

பேணி நும் பிறப்பு எனும் பிணக்கு அறுக்ககிற்றிரே

#821

குந்தமோடு சூலம் வேல்கள் தோமரங்கள் தண்டு வாள்

பந்தமான தேவர்கள் பரந்து வானகம் உற

வந்த வாணன் ஈரைஞ்ஞூறு தோள்களை துணித்த நாள்

அந்த அந்த ஆகுலம் அமரரே அறிவரே

#822

வண்டு உலாவு கோதை மாதர் காரணத்தினால் வெகுண்டு

இண்ட வாணன் ஈரைஞ்னூறு தோள்களை துணித்த நாள்

முண்டன் நீறன் மக்கள் வெப்பு மோடி அங்கி ஓடிட

கண்டு நாணி வாணனுக்கு இரங்கினான் எம் மாயனே

#823

போதில் மங்கை பூதல கிழத்தி தேவி அன்றியும்

போது தங்கு நான்முகன் மகன் அவன் மகன் சொலில்

மாது தங்கு கூறன் ஏறது ஊர்தி என்று வேத நூல்

ஓதுகின்றது உண்மை அல்லது இல்லை மற்று உரைக்கிலே

#824

மரம் பொத சரம் துரந்து வாலி வீழ முன் ஓர் நாள்

உரம் பொத சரம் துரந்த உம்பர் ஆளி எம்பிரான்

வரம் குறிப்பில் வைத்தவர்க்கு அலாது வானம் ஆளிலும்

நிரம்பு நீடு போகம் எ திறத்தும் யார்க்கும் இல்லையே

#825

அறிந்துஅறிந்து வாமனன் அடி இணை வணங்கினால்

செறிந்து எழுந்த ஞானமோடு செல்வமும் சிறந்திடும்

மறிந்து எழுந்த தெண் திரையுள் மன்னு மாலை வாழ்த்தினால்

பறிந்து எழுந்து தீவினைகள் பற்று அறுதல் பான்மையே

#826

ஒன்றி நின்று நற்றவம் செய்து ஊழி ஊழி-தோறு எலாம்

நின்றுநின்று அவன் குணங்கள் உள்ளி உள்ளம் தூயராய்

சென்றுசென்று தேவதேவர் உம்பர் உம்பர் உம்பராய்

அன்றி எங்கள் செங்கண்மாலை யாவர் காண வல்லரே

#827

புன் புல வழி அடைத்து அரக்கு இலச்சினை செய்து

நன் புல வழி திறந்து ஞான நல் சுடர் கொளீஇ

என்பு இல் எள்கி நெஞ்சு உருகி உள் கனிந்து எழுந்தது ஓர்

அன்பில் அன்றி ஆழியானை யாவர் காண வல்லரே

#828

எட்டும் எட்டும் எட்டுமாய் ஒர் ஏழும் ஏழும் ஏழுமாய்

எட்டும் மூன்றும் ஒன்றும் ஆகி நின்ற ஆதி தேவனை

எட்டின் ஆய பேதமோடு இறைஞ்சி நின்று அவன் பெயர்

எட்டு எழுத்தும் ஓதுவார்கள் வல்லர் வானம் ஆளவே

#829

சோர்வு இலாத காதலால் தொடக்கு அறா மனத்தராய்

நீர் அரா அணை கிடந்த நின்மலன் நலம் கழல்

ஆர்வமோடு இறைஞ்சி நின்று அவன் பேர் எட்டு எழுத்துமே

வாரம் ஆக ஓதுவார்கள் வல்லர் வானம் ஆளவே

#830

பத்தினோடு பத்துமாய் ஓர் ஏழினோடு ஓர் ஒன்பதாய்

பத்து நால் திசை-கண் நின்ற நாடு பெற்ற நன்மையாய்

பத்தின் ஆய தோற்றமோடு ஓர் ஆற்றல் மிக்க ஆதி-பால்

பத்தராம் அவர்க்கு அலாது முத்தி முற்றல் ஆகுமே

#831

வாசி ஆகி நேசம் இன்றி வந்து எதிர்ந்த தேனுகன்

நாசம் ஆகி நாள் உலப்ப நன்மை சேர் பனங்கனிக்கு

வீசி மேல் நிமிர்ந்த தோளின் இல்லை ஆக்கினாய் கழற்கு

ஆசை ஆம் அவர்க்கு அலால் அமரர் ஆகல் ஆகுமே

#832

கடைந்த பாற்கடல் கிடந்து கால நேமியை கடிந்து

உடைந்த வாலி தன் தனக்கு உதவ வந்து இராமனாய்

மிடைந்த ஏழ் மரங்களும் அடங்க எய்து வேங்கடம்

அடைந்த மால பாதமே அடைந்து நாளும் உய்ம்-மினோ

#833

எ திறத்தும் ஒத்து நின்று உயர்ந்து உயர்ந்த பெற்றியோய்

முத்திறத்து மூரி நீர் அரா அணை துயின்ற நின்

பத்து உறுத்த சிந்தையோடு நின்று பாசம் விட்டவர்க்கு

எ திறத்தும் இன்பம் இங்கும் அங்கும் எங்கும் ஆகுமே

#834

மட்டு உலாவு தண் துழாய் அலங்கலாய் பொலன் கழல்

விட்டு வீழ்வு இலாத போகம் விண்ணில் நண்ணி ஏறினும்

எட்டினோடு இரண்டு எனும் கயிற்றினால் மனம்-தனை

கட்டி வீடு இலாது வைத்த காதல் இன்பம் ஆகுமே

#835

பின் பிறக்க வைத்தனன்-கொல் அன்றி நின்று தன் கழற்கு

அன்பு உறைக்க வைத்த நாள் அறிந்தனன்-கொல் ஆழியான்

தன் திறத்து ஒர் அன்பிலா அறிவு இலாத நாயினேன்

என் திறத்தில் என்-கொல் எம்பிரான் குறிப்பில் வைத்ததே

#836

நச்சு அரா அணை கிடந்த நாத பாத போதினில்

வைத்த சிந்தை வாங்குவித்து நீங்குவிக்க நீ இனம்

மெய்த்தன் வல்லை ஆதலால் அறிந்தனன் நின் மாயமே

உய்த்து நின் மயக்கினில் மயக்கல் என்னை மாயனே

#837

சாடு சாடு பாதனே சலம் கலந்த பொய்கைவாய்

ஆடு அராவின் வன் பிடர் நடம் பயின்ற நாதனே

கோடு நீடு கைய செய்ய பாதம் நாளும் உள்ளினால்

வீடனாக மெய் செயாத வண்ணம் என்-கொல் கண்ணனே

#838

நெற்றி பெற்ற கண்ணன் விண்ணின் நாதனோடு போதின் மேல்

நல் தவத்து நாதனோடு மற்றும் உள்ள வானவர்

கற்ற பெற்றியால் வணங்கு பாத நாத வேத நின்

பற்று அலால் ஓர் பற்று மற்றது உற்றிலேன் உரைக்கிலே

#839

வெள்ளை வேலை வெற்பு நாட்டி வெள் எயிற்று அராவு அளாய்

அள்ளலா கடைந்த அன்று அரு வரைக்கு ஓர் ஆமையாய்

உள்ள நோய்கள் தீர் மருந்து வானவர்க்கு அளித்த எம்

வள்ளலாரை அன்றி மற்று ஓர் தெய்வம் நான் மதிப்பனே

#840

பார் மிகுத்த பாரம் முன் ஒழிச்சுவான் அருச்சுனன்

தேர் மிகுத்து மாயம் ஆக்கி நின்று கொன்று வென்றி சேர்

மாரதர்க்கு வான் கொடுத்து வையம் ஐவர்-பாலதாம்

சீர் மிகுத்த நின் அலால் ஓர் தெய்வம் நான் மதிப்பனே

#841

குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்

நலங்களாய நல் கலைகள் நாலிலும் நவின்றிலேன்

புலன்கள் ஐந்தும் வென்றிலேன் பொறியிலேன் புனித நின்

இலங்கு பாதம் அன்றி மற்று ஓர் பற்று இலேன் எம் ஈசனே

#842

பண் உலாவு மென் மொழி படை தடம் கணாள் பொருட்டு

எண் இலா அரக்கரை நெருப்பினால் நெருக்கினாய்

கண் அலால் ஓர் கண் இலேன் கலந்த சுற்றம் மற்று இலேன்

எண் இலாத மாய நின்னை என்னுள் நீக்கல் என்றுமே

#843

விடை குலங்கள் ஏழ் அடர்த்து வென்றி வேல் கண் மாதரார்

கடி கலந்த தோள் புணர்ந்த காலி ஆய வேலை நீர்

படைத்து அடைத்து அதில் கிடந்து முன் கடைந்த நின்-தனக்கு

அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சல் என்ன வேண்டுமே

#844

சுரும்பு அரங்கு தண் துழாய் துதைந்து அலர்ந்த பாதமே

விரும்பி நின்று இறைஞ்சுவேற்கு இரங்கு அரங்க வாணனே

கரும்பு இருந்த கட்டியே கடல் கிடந்த கண்ணனே

இரும்பு அரங்க வெம் சரம் துரந்த வில் இராமனே

#845

ஊனில் மேய ஆவி நீ உறக்கமோடு உணர்ச்சி நீ

ஆனில் மேய ஐந்தும் நீ அவற்றுள் நின்ற தூய்மை நீ

வானினோடு மண்ணும் நீ வளம் கடல் பயனும் நீ

யானும் நீ அது அன்றி எம்பிரானும் நீ இராமனே

#846

அடக்கு அரும் புலன்கள் ஐந்து அடக்கி ஆசையாம் அவை

தொடக்கு அறுத்து வந்து நின் தொழில்-கண் நின்ற என்னை நீ

விட கருதி மெய்செயாது மிக்கு ஓர் ஆசை ஆக்கிலும்

கடல் கிடந்த நின் அலால் ஓர் கண் இலேன் எம் அண்ணலே

#847

வரம்பு இலாத மாய மாய வையம் ஏழும் மெய்ம்மையே

வரம்பு இல் ஊழி ஏத்திலும் வரம்பு இலாத கீர்த்தியாய்

வரம்பு இலாத பல் பிறப்பு அறுத்து வந்து நின் கழல்

பொருந்துமா திருந்த நீ வரம்செய் புண்டரீகனே

#848

வெய்ய ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்து சீர்

கைய செய்ய போதில் மாது சேரும் மார்ப நாதனே

ஐயில் ஆய ஆக்கை நோய் அறுத்து வந்து நின் அடைந்து

உய்வது ஓர் உபாயம் நீ எனக்கு நல்க வேண்டுமே

#849

மறம் துறந்து வஞ்சம் மாற்றி ஐம்புலன்கள் ஆசையும்

துறந்து நின்-கண் ஆசையே தொடர்ந்துநின்ற நாயினேன்

பிறந்து இறந்து பேர் இடர் சுழி-கண்-நின்று நீங்குமா

மறந்திடாது மற்று எனக்கு மாய நல்க வேண்டுமே

#850

காட்டி நான் செய் வல்வினை பயன்-தனால் மனம்-தனை

நாட்டி வைத்து நல்ல அல்ல செய்ய எண்ணினார் என

கேட்டது அன்றி என்னது ஆவி பின்னை கேள்வ நின்னொடும்

பூட்டி வைத்த என்னை நின்னுள் நீக்கல் பூவை வண்ணனே

#851

பிறப்பினோடு பேர் இடர் சுழி-கண் நின்றும் நீங்கும் அஃது

இறப்ப வைத்த ஞான நீசரை கரைக்கொடு ஏற்றுமா

பெறற்கு அரிய நின்ன பாத பத்தி ஆன பாசனம்

பெறற்கு அரிய மாயனே எனக்கு நல்க வேண்டுமே

#852

இரந்து உரைப்பது உண்டு வாழி ஏம நீர் நிறத்து அமா

வரம் தரும் திருக்குறிப்பில் வைத்தது ஆகில் மன்னு சீர்

பரந்த சிந்தை ஒன்றி நின்று நின்ன பாத பங்கயம்

நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்க வேண்டுமே

#853

விள்வு இலாத காதலால் விளங்கு பாத போதில் வைத்து

உள்ளுவேனது ஊன நோய் ஒழிக்குமா தெழிக்கு நீர்

பள்ளி மாய பன்றி ஆய வென்றி வீர குன்றினால்

துள்ளு நீர் வரம்பு செய்த தோன்றல் ஒன்று சொல்லிடே

#854

திரு கலந்து சேரும் மார்ப தேவதேவ தேவனே

இரு கலந்த வேத நீதி ஆகி நின்ற நின்மலா

கரு கலந்த காளமேக மேனி ஆய நின் பெயர்

உரு கலந்து ஒழிவு இலாது உரைக்குமாறு உரைசெயே

#855

கடும் கவந்தன் வக்கரன் கரன் முரன் சிரம் அவை

இடந்து கூறு செய்த பல் படை தட கை மாயனே

கிடந்து இருந்து நின்று இயங்கு போதும் நின்ன பொன் கழல்

தொடர்ந்து மீள்வு இலாதது ஒர் தொடர்ச்சி நல்க வேண்டுமே

#856

மண்ணை உண்டு உமிழ்ந்து பின் இரந்து கொண்டு அளந்து மண்

கண்ணுள் அல்லது இல்லை என்று வென்ற காலம் ஆயினாய்

பண்ணை வென்ற இன் சொல் மங்கை கொங்கை தங்கு பங்கய

கண்ண நின்ன வண்ணம் அல்லது இல்லை எண்ணும்
வண்ணமே

#857

கறுத்து எதிர்ந்த கால நேமி காலனோடு கூட அன்று

அறுத்த ஆழி சங்கு தண்டு வில்லும் வாளும் ஏந்தினாய்

தொறு கலந்த ஊனம் அஃது ஒழிக்க அன்று குன்றம் முன்

பொறுத்த நின் புகழ்க்கு அலால் ஒர் நேசம் இல்லை நெஞ்சமே

#858

காய் சினத்த காசி மன்னன் வக்கரன் பவுண்டிரன்

மா சினத்த மாலி மான் சுமாலி கேசி தேனுகன்

நாசம் உற்று வீழ நாள் கவர்ந்த நின் கழற்கு அலால்

நேச பாசம் எ திறத்தும் வைத்திடேன் எம் ஈசனே

#859

கேடு இல் சீர் வரத்தினாய் கெடும் வரத்து அயன் அரன்

நாடினோடு நாட்டம் ஆயிரத்தன் நாடு நண்ணினும்

வீடது ஆன போகம் எய்தி வீற்றிருந்த-போதிலும்

கூடும் ஆசை அல்லது ஒன்று கொள்வனோ குறிப்பிலே

#860

சுருக்குவாரை இன்றியே சுருங்கினாய் சுருங்கியும்

பெருக்குவாரை இன்றியே பெருக்கமெய்து பெற்றியோய்

செருக்குவார்கள் தீ குணங்கள் தீர்த்த தேவதேவன் என்று

இருக்கு வாய் முனி கணங்கள் ஏத்த யானும் ஏத்தினேன்

#861

தூயனாயும் அன்றியும் சுரும்பு உலாவு தண் துழாய்

மாய நின்னை நாயினேன் வணங்கி வாழ்த்தும் ஈது எலாம்

நீயும் நின் குறிப்பினில் பொறுத்து நல்கு வேலை நீர்

பாயலோடு பத்தர் சித்தம் மேய வேலை வண்ணனே

#862

வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும் மாறு இல் போர்

செய்து நின்ன செற்ற தீயில் வெந்தவர்க்கும் வந்து உனை

எய்தல் ஆகும் என்பர் ஆதலால் எம் மாய நாயினேன்

செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞால நாதனே

#863

வாள்கள் ஆகி நாள்கள் செல்ல நோய்மை குன்றி மூப்பு எய்தி

மாளும் நாள் அது ஆதலால் வணங்கி வாழ்த்து என் நெஞ்சமே

ஆளது ஆகும் நன்மை என்று நன்கு உணர்ந்து அது அன்றியும்

மீள்வு இலாத போகம் நல்க வேண்டும் மால பாதமே

#864

சலம் கலந்த செம் சடை கறுத்த கண்டன் வெண் தலை

புலன் கலங்க உண்ட பாதகத்தன் வன் துயர் கெட

அலங்கல் மார்வில் வாச நீர் கொடுத்தவன் அடுத்த சீர்

நலம் கொள் மாலை நண்ணும் வண்ணம் எண்ணு வாழி நெஞ்சமே

#865

ஈனமாய எட்டும் நீக்கி ஏதம் இன்றி மீது போய்

வானம் ஆள வல்லையேல் வணங்கி வாழ்த்து என் நெஞ்சமே

ஞானம் ஆகி ஞாயிறு ஆகி ஞால முற்றும் ஓர் எயிற்று

ஏனமாய் இடந்த மூர்த்தி எந்தை பாதம் எண்ணியே

#866

அத்தன் ஆகி அன்னை ஆகி ஆளும் எம் பிரானுமாய்

ஒத்து ஒவ்வாத பல் பிறப்பு ஒழித்து நம்மை ஆட்கொள்வான்

முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினர்

எத்தினால் இடர் கடல் கிடத்தி ஏழை நெஞ்சமே

#867

மாறு செய்த வாள் அரக்கன் நாள் உலப்ப அன்று இலங்கை

நீறு செய்து சென்று கொன்று வென்றி கொண்ட வீரனார்

வேறு செய்து தம்முள் என்னை வைத்திடாமையால் நமன்

கூறுசெய்து கொண்டு இறந்த குற்றம் எண்ண வல்லனே

#868

அச்சம் நோயொடு அல்லல் பல் பிறப்பு அவாய மூப்பு இவை

வைத்த சிந்தை வைத்த ஆக்கை மாற்றி வானில் ஏற்றுவான்

அச்சுதன் அனந்த கீர்த்தி ஆதி அந்தம் இல்லவன்

நச்சு நாகனை கிடந்த நாதன் வேத கீதனே

#869

சொல்லினும் தொழில்-கணும் தொடக்கு அறாத அன்பினும்

அல்லும் நன் பகலினோடும் ஆன மாலை காலையும்

அல்லி நாள்மலர் கிழத்தி நாத பாத போதினை

புல்லி உள்ளம் விள்வு இலாது பூண்டு மீண்டது இல்லையே

#870

பொன்னி சூழ் அரங்கம் மேய பூவை வண்ண மாய கேள்

என்னது ஆவி என்னும் வல்வினையினுள் கொழுந்து எழுந்து

உன்ன பாதம் என்ன நின்ற ஒண் சுடர் கொழு மலர்

மன்ன வந்து பூண்டு வாட்டம் இன்றி எங்கும் நின்றதே

#871

இயக்கு அறாத பல் பிறப்பில் என்னை மாற்றி இன்று வந்து

உயக்கொள் மேக வண்ணன் நண்ணி என்னிலாய தன்னுளே

மயக்கினான் தன் மன்னு சோதி ஆதலால் என் ஆவி தான்

இயக்கு எலாம் அறுத்து அறாத இன்ப வீடு பெற்றதே

தொண்டரடிப்பொடி ஆழ்வார் - திருமாலை

#872

காவலில் புலனை வைத்து கலி-தன்னை கடக்க பாய்ந்து

நாவலிட்டு உழிதர்கின்றோம் நமன் தமர் தலைகள் மீதே

மூ உலகு உண்டு உமிழ்ந்த முதல்வ நின் நாமம் கற்ற

ஆவலிப்பு உடைமை கண்டாய் அரங்க மாநகருளானே

#873

பச்சை மா மலை போல் மேனி பவள வாய் கமல செம் கண்

அச்சுதா அமரர் ஏறே ஆயர்-தம் கொழுந்தே என்னும்

இ சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும்

அ சுவை பெறினும் வேண்டேன் அரங்க மாநகருளானே

#874

வேத நூல் பிராயம் நூறு மனிசர் தாம் புகுவரேலும்

பாதியும் உறங்கி போகும் நின்றதில் பதினையாண்டு

பேதை பாலகன் அது ஆகும் பிணி பசி மூப்பு துன்பம்

ஆதலால் பிறவி வேண்டேன் அரங்க மாநகருளானே

#875

மொய்த்த வல்வினையுள் நின்று மூன்றெழுத்து உடைய பேரால்

கத்திரபந்தும் அன்றே பராங்கதி கண்டு கொண்டான்

இத்தனை அடியர் ஆனார்க்கு இரங்கும் நம் அரங்கன் ஆய

பித்தனை பெற்றும் அந்தோ பிறவியுள் பிணங்குமாறே

#876

பெண்டிரால் சுகங்கள் உய்ப்பான் பெரியது ஓர் இடும்பை பூண்டு

உண்டு இரா கிடக்கும் அப்போது உடலுக்கே கரைந்து நைந்து

தண் துழாய் மாலை மார்பன் தமர்களாய் பாடி ஆடி

தொண்டு பூண்டு அமுதம் உண்ணா தொழும்பர் சோறு உகக்குமாறே

#877

மறம் சுவர் மதில் எடுத்து மறுமைக்கே வெறுமை பூண்டு

புறம் சுவர் ஓட்டை மாடம் புரளும்-போது அறிய மாட்டீர்

அறம் சுவர் ஆகி நின்ற அரங்கனார்க்கு ஆட்செய்யாதே

புறம் சுவர் கோலம் செய்து புள் கௌவ கிடக்கின்றீரே

#878

புலை அறம் ஆகி நின்ற புத்தொடு சமணம் எல்லாம்

கலை அற கற்ற மாந்தர் காண்பரோ கேட்பரோ தாம்

தலை அறுப்பு உண்டும் சாவேன் சத்தியம் காண்-மின் ஐயா

சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவன் ஆவான்

#879

வெறுப்பொடு சமணர் முண்டர் விதி இல் சாக்கியர்கள் நின்-பால்

பொறுப்பு அரியனகள் பேசில் போவதே நோயது ஆகி

குறிப்பு எனக்கு அடையும் ஆகில் கூடுமேல் தலையை ஆங்கே

அறுப்பதே கருமம் கண்டாய் அரங்க மாநகருளானே

#880

மற்றும் ஓர் தெய்வம் உண்டே மதி இலா மானிடங்காள்

உற்ற-போது அன்றி நீங்கள் ஒருவன் என்று உணர மாட்டீர்

அற்றம் மேல் ஒன்று அறியீர் அவன் அல்லால் தெய்வம் இல்லை

கற்று இனம் மேய்த்த எந்தை கழல் இணை பணி-மின் நீரே

#881

நாட்டினான் தெய்வம் எங்கும் நல்லது ஓர் அருள்-தன்னாலே

காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும் வண்ணம்

கேட்டிரே நம்பிமீர்காள் கெருடவா கனனும் நிற்க

சேட்டை-தன் மடியகத்து செல்வம் பார்த்து இருக்கின்றீரே

#882

ஒரு வில்லால் ஓங்கு முந்நீர் அடைத்து உலகங்கள் உய்ய

செருவிலே அரக்கர் கோனை செற்ற நம் சேவகனார்

மருவிய பெரிய கோயில் மதில் திருவரங்கம் என்னா

கருவிலே திரு இலாதீர் காலத்தை கழிக்கின்றீரே

#883

நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க

நரகமே சுவர்க்கம் ஆகும் நாமங்கள் உடையன் நம்பி

அவனது ஊர் அரங்கம் என்னாது அயர்த்து வீழ்ந்து அளிய மாந்தர்

கவலையுள் படுகின்றார் என்று அதனுக்கே கவல்கின்றேனே

#884

எறியும் நீர் வெறி கொள் வேலை மாநிலத்து உயிர்கள் எல்லாம்

வெறி கொள் பூம் துளவ மாலை விண்ணவர் கோனை ஏத்த

அறிவு இலா மனிசர் எல்லாம் அரங்கம் என்று அழைப்பராகில்

பொறியில் வாழ் நரகம் எல்லாம் புல் எழுந்து ஒழியும் அன்றே

#885

வண்டு இனம் முரலும் சோலை மயில் இனம் ஆலும் சோலை

கொண்டல் மீது அணவும் சோலை குயில் இனம் கூவும் சோலை

அண்டர் கோன் அமரும் சோலை அணி திருவரங்கம் என்னா

மிண்டர் பாய்ந்து உண்ணும் சோற்றை விலக்கி நாய்க்கு இடு-மின் நீரே

#886

மெய்யர்க்கே மெய்யன் ஆகும் விதி இலா என்னை போல

பொய்யர்க்கே பொய்யன் ஆகும் புள் கொடி உடைய கோமான்

உய்யப்போம் உணர்வினார்கட்கு ஒருவன் என்று உணர்ந்த பின்னை

ஐயப்பாடு அறுத்து தோன்றும் அழகன் ஊர் அரங்கம் அன்றே

#887

சூதனாய் கள்வனாகி தூர்த்தரோடு இசைந்த காலம்

மாதரார் கயல் கண் என்னும் வலையுள் பட்டு அழுந்துவேனை

போதரே என்று சொல்லி புந்தியுள் புகுந்து தன்-பால்

ஆதரம் பெருக வைத்த அழகன் ஊர் அரங்கம் அன்றே

#888

விரும்பி நின்று ஏத்த மாட்டேன் விதி இலேன் மதி ஒன்று இல்லை

இரும்பு போல் வலிய நெஞ்சம் இறைஇறை உருகும் வண்ணம்

சுரும்பு அமர் சோலை சூழ்ந்த அரங்க மா கோயில் கொண்ட

கரும்பினை கண்டு கொண்டு என் கண்ணினை களிக்குமாறே

#889

இனி திரை திவலை மோத எறியும் தண் பரவை மீதே

தனி கிடந்து அரசு செய்யும் தாமரை கண்ணன் எம்மான்

கனி இருந்து அனைய செ வாய் கண்ணனை கண்ட கண்கள்

பனி அரும்பு உதிருமாலோ என் செய்கேன் பாவியேனே

#890

குட திசை முடியை வைத்து குண திசை பாதம் நீட்டி

வட திசை பின்பு காட்டி தென் திசை இலங்கை நோக்கி

கடல் நிற கடவுள் எந்தை அரவு அணை துயிலுமா கண்டு

உடல் எனக்கு உருகுமாலோ என் செய்கேன் உலகத்தீரே

#891

பாயும் நீர் அரங்கம் தன்னுள் பாம்பு அணை பள்ளிகொண்ட

மாயனார் திரு நன் மார்வும் மரகத உருவும் தோளும்

தூய தாமரை கண்களும் துவர் இதழ் பவள வாயும்

ஆய சீர் முடியும் தேசும் அடியரோர்க்கு அகலல் ஆமே

#892

பணிவினால் மனம்-அது ஒன்றி பவள வாய் அரங்கனார்க்கு

துணிவினால் வாழ மாட்டா தொல்லை நெஞ்சே நீ சொல்லாய்

அணியின் ஆர் செம்பொன் ஆய அரு வரை அனைய கோயில்

மணி அனார் கிடந்தவாற்றை மனத்தினால் நினைக்கல் ஆமே

#893

பேசிற்றே பேசல் அல்லால் பெருமை ஒன்று உணரல் ஆகாது

ஆசற்றார் தங்கட்கு அல்லால் அறியல் ஆவானும் அல்லன்

மாசற்றார் மனத்துளானை வணங்கி நாம் இருப்பது அல்லால்

பேசத்தான் ஆவது உண்டோ பேதை நெஞ்சே நீ சொல்லாய்

#894

கங்கையில் புனிதம் ஆய காவிரி நடுவுபாட்டு

பொங்கு நீர் பரந்து பாயும் பூம் பொழில் அரங்கம் தன்னுள்

எங்கள் மால் இறைவன் ஈசன் கிடந்தது ஓர் கிடக்கை கண்டும்

எங்ஙனம் மறந்து வாழ்கேன் ஏழையேன் ஏழையேனே

#895

வெள்ள நீர் பரந்து பாயும் விரி பொழில் அரங்கம் தன்னுள்

கள்வனார் கிடந்தவாறும் கமல நன் முகமும் கண்டும்

உள்ளமே வலியை போலும் ஒருவன் என்று உணர மாட்டாய்

கள்ளமே காதல்செய்து உன் கள்ளத்தே கழிக்கின்றாயே

#896

குளித்து மூன்று அனலை ஓம்பும் குறிகொள் அந்தணமை-
தன்னை

ஒளித்திட்டேன் என்-கண் இல்லை நின்-கணும் பத்தன் அல்லேன்

களிப்பது என் கொண்டு நம்பீ கடல் வண்ணா கதறுகின்றேன்

அளித்து எனக்கு அருள்செய் கண்டாய் அரங்க மாநகருளானே

#897

போது எல்லாம் போது கொண்டு உன் பொன் அடி புனைய
மாட்டேன்

தீது இலா மொழிகள் கொண்டு உன் திருக்குணம் செப்ப
மாட்டேன்

காதலால் நெஞ்சம் அன்பு கலந்திலேன் அது தன்னாலே

ஏதிலேன் அரங்கர்க்கு எல்லே என் செய்வான் தோன்றினேனே

#898

குரங்குகள் மலையை நூக்க குளித்து தாம் புரண்டிட்டு ஓடி

தரங்க நீர் அடைக்கல் உற்ற சலம் இலா அணிலும் போலேன்

மரங்கள் போல் வலிய நெஞ்ச வஞ்சனேன் நெஞ்சு தன்னால்

அரங்கனார்க்கு ஆட்செய்யாதே அளியத்தேன் அயர்க்கின்றேனே

#899

உம்பரால் அறியல் ஆகா ஒளியுளார் ஆனைக்கு ஆகி

செம் புலால் உண்டு வாழும் முதலை மேல் சீறி வந்தார்

நம் பரம் ஆயது உண்டே நாய்களோம் சிறுமை ஓரா

எம்பிராற்கு ஆட்செய்யாதே என் செய்வான் தோன்றினேனே

#900

ஊர் இலேன் காணி இல்லை உறவு மற்று ஒருவர் இல்லை

பாரில் நின் பாத மூலம் பற்றிலேன் பரமமூர்த்தி

கார் ஒளி வண்ணனே என் கண்ணனே கதறுகின்றேன்

ஆர் உளர் களைகண் அம்மா அரங்க மாநகருளானே

#901

மனத்தில் ஓர் தூய்மை இல்லை வாயில் ஓர் இன் சொல் இல்லை

சினத்தினால் செற்றம் நோக்கி தீவிளி விளிவன் வாளா

புன துழாய் மாலையானே பொன்னி சூழ் திருவரங்கா

எனக்கு இனி கதி என் சொல்லாய் என்னை ஆளுடைய கோவே

#902

தவத்துளார்-தம்மில் அல்லேன் தனம் படைத்தாரில் அல்லேன்

உவர்த்த நீர் போல என்தன் உற்றவர்க்கு ஒன்றும் அல்லேன்

துவர்த்த செ வாயினார்க்கே துவக்கு அற துரிசன் ஆனேன்

அவத்தமே பிறவி தந்தாய் அரங்க மாநகருளானே

#903

ஆர்த்து வண்டு அலம்பும் சோலை அணி திருவரங்கம்-தன்னுள்

கார் திரள் அனைய மேனி கண்ணனே உன்னை காணு

மார்க்கம் ஒன்று அறியமாட்டா மனிசரில் துரிசனாய

மூர்க்கனேன் வந்து நின்றேன் மூர்க்கனேன் மூர்க்கனேனே

#904

மெய் எல்லாம் போக விட்டு விரி குழலாரில் பட்டு

பொய் எல்லாம் பொதிந்து கொண்ட போழ்க்கனேன் வந்து நின்றேன்

ஐயனே அரங்கனே உன் அருள் என்னும் ஆசை தன்னால்

பொய்யனேன் வந்து நின்றேன் பொய்யனேன் பொய்யனேனே

#905

உள்ளத்தே உறையும் மாலை உள்ளுவான் உணர்வு ஒன்று இல்லா

கள்ளத்தேன் நானும் தொண்டாய் தொண்டுக்கே கோலம் பூண்டு

உள்ளுவார் உள்ளிற்று எல்லாம் உடன் இருந்து அறிதி என்று

வெள்கிப்போய் என்னுள்ளே நான் விலவு அற சிரித்திட்டேனே

#906

தாவி அன்று உலகம் எல்லாம் தலை விளா கொண்ட எந்தாய்

சேவியேன் உன்னை அல்லால் சிக்கென செங்கண்மாலே

ஆவியே அமுதே என்தன் ஆருயிர் அனைய எந்தாய்

பாவியேன் உன்னை அல்லால் பாவியேன் பாவியேனே

#907

மழைக்கு அன்று வரை முன் ஏந்தும் மைந்தனே மதுர ஆறே

உழை கன்றே போல நோக்கம் உடையவர் வலையுள் பட்டு

உழைக்கின்றேற்கு என்னை நோக்காது ஒழிவதே உன்னையன்றே

அழைக்கின்றேன் ஆதிமூர்த்தி அரங்க மாநகருளானே

#908

தெளிவிலா கலங்கல் நீர் சூழ் திருவரங்கத்துள் ஓங்கும்

ஒளியுளார் தாமேயன்றே தந்தையும் தாயும் ஆவார்

எளியது ஓர் அருளும் அன்றே என் திறத்து எம்பிரானார்

அளியன் நம் பையல் என்னார் அம்மவோ கொடியவாறே

#909

மேம் பொருள் போகவிட்டு மெய்ம்மையை மிக உணர்ந்து

ஆம் பரிசு அறிந்துகொண்டு ஐம்புலன் அகத்து அடக்கி

காம்பு அற தலை சிரைத்து உன் கடைத்தலை இருந்து வாழும்

சோம்பரை உகத்தி போலும் சூழ் புனல் அரங்கத்தானே

#910

அடிமையில் குடிமை இல்லா அயல் சதுப்பேதிமாரில்

குடிமையில் கடைமை பட்ட குக்கரில் பிறப்பரேலும்

முடியினில் துளபம் வைத்தாய் மொய் கழற்கு அன்பு செய்யும்

அடியரை உகத்தி போலும் அரங்க மாநகருளானே

#911

திரு மறு மார்வ நின்னை சிந்தையுள் திகழ வைத்து

மருவிய மனத்தர் ஆகில் மாநிலத்து உயிர்கள் எல்லாம்

வெருவுற கொன்று சுட்டிட்டு ஈட்டிய வினையரேலும்

அருவினை பயன்-அது உய்யார் அரங்க மாநகருளானே

#912

வானுளார் அறியல் ஆகா வானவா என்பர் ஆகில்

தேனுலாம் துளப மாலை சென்னியாய் என்பர் ஆகில்

ஊனம் ஆயினகள் செய்யும் ஊனகாரகர்களேலும்

போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதம் அன்றே

#913

பழுது இலா ஒழுகல் ஆற்று பல சதுப்பேதிமார்கள்

இழிகுலத்தவர்களேலும் எம் அடியார்கள் ஆகில்

தொழு-மின் நீர் கொடு-மின் கொண்-மின் என்று நின்னோடும் ஒக்க

வழிபட அருளினாய் போல் மதில் திருவரங்கத்தானே

#914

அமர ஓர் அங்கம் ஆறும் வேதம் ஓர் நான்கும் ஓதி

தமர்களில் தலைவராய சாதி அந்தணர்களேலும்

நுமர்களை பழிப்பர் ஆகில் நொடிப்பது ஓர் அளவில் ஆங்கே

அவர்கள்தாம் புலையர் போலும் அரங்க மாநகருளானே

#915

பெண் உலாம் சடையினானும் பிரமனும் உன்னை காண்பான்

எண் இலா ஊழிஊழி தவம் செய்தார் வெள்கி நிற்ப

விண் உளார் வியப்ப வந்து ஆனைக்கு அன்று அருளை ஈந்த

கண்ணறா உன்னை என்னோ களைகணா கருதுமாறே

#916

வள எழும் தவள மாட மதுரை மாநகரம் தன்னுள்

கவள மால் யானை கொன்ற கண்ணனை அரங்க மாலை

துளவ தொண்டு ஆய தொல் சீர் தொண்டரடிப்பொடி சொல்

இளைய புன் கவிதையேலும் எம்பிராற்கு இனியவாறே

தொண்டரடிப்பொடி ஆழ்வார் - திருப்பள்ளியெழுச்சி

#917

கதிரவன் குண திசை சிகரம் வந்து அணைந்தான் கனை இருள் அகன்றது காலை அம் பொழுதாய்

மது விரிந்து ஒழுகின மா மலர் எல்லாம் வானவர் அரசர்கள் வந்துவந்து ஈண்டி

எதிர் திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த இரும் களிற்று ஈட்டமும் பிடியொடு முரசும்

அதிர்தலில் அலை கடல் போன்று உளது எங்கும் அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே

#918

கொழும் கொடி முல்லையின் கொழு மலர் அணவி கூர்ந்தது குண திசை மாருதம் இதுவோ

எழுந்தன மலர் அணை பள்ளிகொள் அன்னம் ஈன் பணி நனைந்த தம் இரும் சிறகு உதறி

விழுங்கிய முதலையின் பிலம் புரை பேழ் வாய் வெள் எயிறுற அதன் விடத்தினுக்கு அனுங்கி

அழுங்கிய ஆனையின் அரும் துயர் கெடுத்த அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே

#919

சுடர் ஒளி பரந்தன சூழ் திசை எல்லாம் துன்னிய தாரகை மின் ஒளி சுருங்கி

படர் ஒளி பசுத்தனன் பனி மதி இவனோ பாய் இருள் அகன்றது பைம் பொழில் கமுகின்

மடலிடை கீறி வண் பாளைகள் நாற வைகறை கூர்ந்தது மாருதம் இதுவோ

அடல் ஒளி திகழ் தரு திகிரி அம் தடக்கை அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே

#920

மேட்டு இள மேதிகள் தளை விடும் ஆயர்கள் வேய் குழல் ஓசையும் விடை மணி குரலும்

ஈட்டிய இசை திசை பரந்தன வயலுள் இரிந்தன சுரும்பு இனம் இலங்கையர் குலத்தை

வாட்டிய வரி சிலை வானவர் ஏறே மா முனி வேள்வியை காத்து அவபிரதம்

ஆட்டிய அடு திறல் அயோத்தி எம் அரசே அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே

#921

புலம்பின புட்களும் பூம் பொழில்களின்வாய் போயிற்று கங்குல் புகுந்தது புலரி

கலந்தது குண திசை கனை கடல் அரவம் களி வண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த

அலங்கல் அம் தொடையல் கொண்டு அடி இணை பணிவான் அமரர்கள் புகுந்தனர் ஆதலில் அம்மா

இலங்கையர் கோன் வழிபாடு செய் கோயில் எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே

#922

இரவியர் மணி நெடும் தேரொடும் இவரோ இறையவர் பதினொரு விடையரும் இவரோ

மருவிய மயிலினன் அறுமுகன் இவனோ மருதரும் வசுக்களும் வந்துவந்து ஈண்டி

புரவியொடு ஆடலும் பாடலும் தேரும் குமர தண்டம் புகுந்து ஈண்டிய வெள்ளம்

அரு வரை அனைய நின் கோயில் முன் இவரோ அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே

#923

அந்தரத்து அமரர்கள் கூட்டங்கள் இவையோ அரும் தவ முனிவரும் மருதரும் இவரோ

இந்திரன் ஆனையும் தானும் வந்து இவனோ எம்பெருமான் உன கோயிலின் வாசல்

சுந்தரர் நெருக்க விச்சாதரர் நூக்க இயக்கரும் மயங்கினர் திருவடி தொழுவான்

அந்தரம் பார் இடம் இல்லை மற்று இதுவோ அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே

#924

வம்பு அவிழ் வானவர் வாயுறை வழங்க மா நிதி கபிலை ஒண் கண்ணாடி முதலா

எம்பெருமான் படிமக்கலம் காண்டற்கு ஏற்பன ஆயின கொண்டு நன் முனிவர்

தும்புரு நாரதர் புகுந்தனர் இவரோ தோன்றினன் இரவியும் துலங்கு ஒளி பரப்பி

அம்பர தலத்தின்-நின்று அகல்கின்றது இருள் போய்

அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே

#925

ஏதம் இல் தண்ணுமை எக்கம் மத்தளி யாழ் குழல் முழவமோடு

இசை திசை கெழுமி

கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள் கெந்தருவர் அவர்

கங்குலுள் எல்லாம்

மாதவர் வானவர் சாரணர் இயக்கர் சித்தரும் மயங்கினர் திருவடி

தொழுவான்

ஆதலில் அவர்க்கு நாள் ஓலக்கம் அருள அரங்கத்தம்மா பள்ளி

எழுந்தருளாயே

#926

கடி மலர் கமலங்கள் மலர்ந்தன இவையோ கதிரவன் கனை கடல்

முளைத்தனன் இவனோ

துடி இடையார் சுரி குழல் பிழிந்து உதறி துகில் உடுத்து ஏறினர் சூழ்

புனல் அரங்கா

தொடை ஒத்த துளவமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள்

தொண்டரடிப்பொடி என்னும்

அடியனை அளியன் என்று அருளி உன் அடியார்க்கு

ஆட்படுத்தாய் பள்ளி எழுந்தருளாயே

திருப்பாணாழ்வார் - அமலனாதிபிரான்

#927

அமலன் ஆதி பிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த

விமலன் விண்ணவர் கோன் விரையார் பொழில் வேங்கடவன்

நிமலன் நின்மலன் நீதி வானவன் நீள் மதில் அரங்கத்து அம்மான் திரு

கமல பாதம் வந்து என் கண்ணின் உள்ளன ஒக்கின்றதே

#928

உவந்த உள்ளத்தனாய் உலகம் அளந்து அண்டம் உற

நிவந்த நீள் முடியன் அன்று நேர்ந்த நிசாசரரை

கவர்ந்த வெம் கணை காகுத்தன் கடியார் பொழில் அரங்கத்து அம்மான் அரை

சிவந்த ஆடையின் மேல் சென்றது ஆம் என சிந்தனையே

#929

மந்தி பாய் வடவேங்கட மா மலை வானவர்கள்

சந்தி செய்ய நின்றான் அரங்கத்து அரவின் அணையான்

அந்தி போல் நிறத்து ஆடையும் அதன் மேல் அயனை படைத்தது ஓர் எழில்

உந்தி மேலது அன்றோ அடியேன் உள்ளத்து இன் உயிரே

#930

சதுர மா மதில் சூழ் இலங்கைக்கு இறைவன் தலை பத்து

உதிர ஓட்டி ஓர் வெம் கணை உய்த்தவன் ஓத வண்ணன்

மதுர மா வண்டு பாட மா மயில் ஆடு அரங்கத்து அம்மான் திருவயிற்று

உதர பந்தம் என் உள்ளத்துள் நின்று உலாகின்றதே

#931

பாரம் ஆய பழவினை பற்று அறுத்து என்னை தன்

வாரம் ஆக்கி வைத்தான் வைத்தது அன்றி என் உள் புகுந்தான்

கோர மாதவம் செய்தனன்-கொல் அறியேன் அரங்கத்து அம்மான் திரு

ஆர மார்வு அது அன்றோ அடியேனை ஆட்கொண்டதே

#932

துண்ட வெண் பிறையன் துயர் தீர்த்தவன் அம் சிறைய

வண்டு வாழ் பொழில் சூழ் அரங்க நகர் மேய அப்பன்

அண்டரண்ட பகிரண்டத்து ஒரு மாநிலம் எழு மால் வரை முற்றும்

உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய கொண்டதே

#933

கையின் ஆர் சுரி சங்கு அனல் ஆழியர் நீள் வரை போல்

மெய்யனார் துளப விரையார் கமழ் நீள் முடி எம்

ஐயனார் அணி அரங்கனார் அரவின் அணை மிசை மேய
மாயனார்

செய்ய வாய் ஐயோ என்னை சிந்தை கவர்ந்ததுவே

#934

பரியன் ஆகி வந்த அவுணன் உடல் கீண்ட அமரர்க்கு

அரிய ஆதி பிரான் அரங்கத்து அமலன் முகத்து

கரிய ஆகி புடை பரந்து மிளிர்ந்து செம் வரி ஓடி நீண்ட அ

பெரிய ஆய கண்கள் என்னை பேதைமை செய்தனவே

#935

ஆல மா மரத்தின் இலை மேல் ஒரு பாலகனாய்

ஞாலம் ஏழும் உண்டான் அரங்கத்து அரவின் அணையான்

கோல மா மணி ஆரமும் முத்து தாமமும் முடிவு இல்லது ஓர் எழில்

நீல மேனி ஐயோ நிறைகொண்டது என் நெஞ்சினையே

#936

கொண்டல் வண்ணனை கோவலனாய் வெண்ணெய்

உண்ட வாயன் என் உள்ளம் கவர்ந்தானை

அண்டர் கோன் அணி அரங்கன் என் அமுதினை

கண்ட கண்கள் மற்று ஒன்றினை காணாவே

மதுரகவி ஆழ்வார் - கண்ணிநுண் சிறுத்தாம்பு

#937

கண்ணி நுண் சிறு தாம்பினால் கட்டு உண்ண

பண்ணிய பெரு மாயன் என் அப்பனில்

நண்ணி தென் குருகூர் நம்பி என்ற-கால்

அண்ணிக்கும் அமுது ஊறும் என் நாவுக்கே

#938

நாவினால் நவிற்று இன்பம் எய்தினேன்

மேவினேன் அவன் பொன் அடி மெய்ம்மையே

தேவு மற்று அறியேன் குருகூர் நம்பி

பாவின் இன்னிசை பாடி திரிவனே

#939

திரிதந்து ஆகிலும் தேவபிரான் உடை

கரிய கோல திருவுரு காண்பன் நான்

பெரிய வண் குருகூர் நகர் நம்பிக்கு ஆள்

உரியனாய் அடியேன் பெற்ற நன்மையே

#940

நன்மையால் மிக்க நான்மறையாளர்கள்

புன்மை ஆக கருதுவர் ஆதலில்

அன்னையாய் அத்தனாய் என்னை ஆண்டிடும்

தன்மையான் சடகோபன் என் நம்பியே

#941

நம்பினேன் பிறர் நல் பொருள் தன்னையும்

நம்பினேன் மடவாரையும் முன் எலாம்

செம்பொன் மாட திருக்குருகூர் நம்பிக்கு

அன்பனாய் அடியேன் சதிர்த்தேன் இன்றே

#942

இன்று-தொட்டும் எழுமையும் எம்பிரான்

நின்று தன் புகழ் ஏத்த அருளினான்

குன்ற மாட திருக்குருகூர் நம்பி

என்றும் என்னை இகழ்வு இலன் காண்-மினே

#943

கண்டுகொண்டு என்னை காரிமாற பிரான்

பண்டை வல்வினை பாற்றி அருளினான்

எண் திசையும் அறிய இயம்புகேன்

ஒண் தமிழ் சடகோபன் அருளையே

#944

அருள் கொண்டாடும் அடியவர் இன்புற

அருளினான் அ அரு மறையின் பொருள்

அருள்கொண்டு ஆயிரம் இன் தமிழ் பாடினான்

அருள் கண்டீர் இ உலகினில் மிக்கதே

#945

மிக்க வேதியர் வேதத்தின் உட்பொருள்

நிற்க பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்

தக்க சீர் சடகோபன் என் நம்பிக்கு ஆள்

புக்க காதல் அடிமை பயன் அன்றே

#946

பயன் அன்று ஆகிலும் பாங்கு அலர் ஆகிலும்

செயல் நன்றாக திருத்தி பணி கொள்வான்

குயில் நின்று ஆர் பொழில் சூழ் குருகூர் நம்பி

முயல்கின்றேன் அவன் மொய் கழற்கு அன்பையே

#947

அன்பன் தன்னை அடைந்தவர்கட்கு எல்லாம்

அன்பன் தென் குருகூர் நகர் நம்பிக்கு

அன்பனாய் மதுரகவி சொன்ன சொல்

நம்புவார் பதி வைகுந்தம் காண்-மினே

2. இரண்டாம் ஆயிரம்

திருமங்கை ஆழ்வார் - பெரிய திருமொழி

#948

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால் பெரும் துயர் இடும்பையில் பிறந்து

கூடினேன் கூடி இளையவர்-தம்மோடு அவர் தரும் கலவியே கருதி

ஓடினேன் ஓடி உய்வது ஓர் பொருளால் உணர்வு எனும் பெரும் பதம் திரிந்து

நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்

#949

ஆவியே அமுதே என நினைந்து உருகி அவரவர் பணை முலை துணையா

பாவியேன் உணராது எத்தனை பகலும் பழுதுபோய் ஒழிந்தன நாள்கள்

தூவி சேர் அன்னம் துணையொடு புணரும் சூழ் புனல் குடந்தையே தொழுது என்

நாவினால் உய்ய நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்

#950

சேமமே வேண்டி தீவினை பெருக்கி தெரிவைமார் உருவமே மருவி

ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய் ஒழிந்தன கழிந்த அ நாள்கள்

காமனார் தாதை நம்முடை அடிகள் தம் அடைந்தார் மனத்து இருப்பார்

நாமம் நான் உய்ய நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்

#951

வென்றியே வேண்டி வீழ் பொருட்கு இரங்கி வேல் கணார் கலவியே கருதி

நின்றவா நில்லா நெஞ்சினை உடையேன் என் செய்கேன் நெடு விசும்பு அணவும்

பன்றி ஆய் அன்று பாரகம் கீண்ட பாழியான் ஆழியான் அருளே

நன்று நான் உய்ய நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்

#952

கள்வனேன் ஆனேன் படிறு செய்து இருப்பேன் கண்டவா திரிதந்தேனேலும்

தெள்ளியேன் ஆனேன் செல் கதிக்கு அமைந்தேன் சிக்கென திருவருள் பெற்றேன்

உள் எலாம் உருகி குரல் தழுத்து ஒழிந்தேன் உடம்பு எலாம் கண்ண நீர் சோர

நள்ளிருள் அளவும் பகலும் நான் அழைப்பன் நாராயணா என்னும் நாமம்

#953

எம்பிரான் எந்தை என்னுடை சுற்றம் எனக்கு அரசு என்னுடை வாழ்நாள்

அம்பினால் அரக்கர் வெருக்கொள நெருக்கி அவர் உயிர் செகுத்த எம் அண்ணல்

வம்பு உலாம் சோலை மா மதிள் தஞ்சை மா மணி கோயிலே வணங்கி

நம்பிகாள் உய்ய நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்

#954

இல் பிறப்பு அறியீர் இவர் அவர் என்னீர் இன்னது ஓர் தன்மை என்று உணரீர்

கற்பகம் புலவர் களைகண் என்று உலகில் கண்டவா தொண்டரை பாடும்

சொல் பொருள் ஆளீர் சொல்லுகேன் வம்-மின் சூழ் புனல் குடந்தையே தொழு-மின்

நல் பொருள் காண்-மின் பாடி நீர் உய்-மின் நாராயணா என்னும் நாமம்

#955

கற்றிலேன் கலைகள் ஐம்புலன் கருதும் கருத்துளே திருத்தினேன் மனத்தை

பெற்றிலேன் அதனால் பேதையேன் நன்மை பெரு நிலத்து ஆருயிர்க்கு எல்லாம்

செற்றமே வேண்டி திரிதர்வேன் தவிர்ந்தேன் செல் கதிக்கு உய்யும் ஆறு எண்ணி

நல் துணை ஆக பற்றினேன் அடியேன் நாராயணா என்னும் நாமம்

#956

குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார் படு துயர் ஆயின எல்லாம்

நிலம் தரம் செய்யும் நீள் விசும்பு அருளும் அருளொடு பெரு நிலம் அளிக்கும்

வலம் தரும் மற்றும் தந்திடும் பெற்ற தாயினும் ஆயின செய்யும்

நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்

#957

மஞ்சு உலாம் சோலை வண்டு அறை மா நீர் மங்கையார் வாள் கலிகன்றி

செம் சொலால் எடுத்த தெய்வ நல் மாலை இவை கொண்டு சிக்கென தொண்டீர்

துஞ்சும்-போது அழை-மின் துயர் வரில் நினை-மின் துயர் இலீர் சொல்லிலும் நன்று ஆம்

நஞ்சு தான் கண்டீர் நம்முடை வினைக்கு நாராயணா என்னும் நாமம்

#958

வாலி மா வலத்து ஒருவனது உடல் கெட வரி சிலை வளைவித்து அன்று

ஏலம் நாறு தண் தடம் பொழில் இடம்பெற இருந்த நல் இமயத்துள்

ஆலி மா முகில் அதிர்தர அரு வரை அகடு உற முகடு ஏறி

பீலி மா மயில் நடம் செயும் தடம் சுனை பிரிதி சென்று அடை நெஞ்சே

#959

கலங்க மா கடல் அரி குலம் பணிசெய அரு வரை அணை கட்டி

இலங்கை மாநகர் பொடிசெய்த அடிகள் தாம் இருந்த நல் இமயத்து

விலங்கல் போல்வன விறல் இரும் சினத்தன வேழங்கள் துயர்கூர

பிலம் கொள் வாள் எயிற்று அரி அவை திரிதரு பிரிதி சென்று அடை நெஞ்சே

#960

துடி கொள் நுண் இடை சுரி குழல் துளங்கு எயிற்று இளம் கொடி திறத்து ஆயர்

இடி கொள் வெம் குரல் இன விடை அடர்த்தவன் இருந்த நல் இமயத்து

கடி கொள் வேங்கையின் நறு மலர் அமளியின் மணி அறை மிசை வேழம்

பிடியினோடு வண்டு இசை சொல துயில்கொளும் பிரிதி சென்று அடை நெஞ்சே

#961

மறம் கொள் ஆள் அரி உரு என வெருவர ஒருவனது அகல் மார்வம்

திறந்து வானவர் மணி முடி பணிதர இருந்த நல் இமயத்துள்

இறங்கி ஏனங்கள் வளை மருப்பு இடந்திட கிடந்து அருகு எரி வீசும்

பிறங்கு மா மணி அருவியோடு இழிதரு பிரிதி சென்று அடை நெஞ்சே

#962

கரை செய் மா கடல் கிடந்தவன் கனை கழல் அமரர்கள் தொழுது ஏத்த

அரை செய் மேகலை அலர் மகள் அவளொடும் அமர்ந்த நல் இமயத்து

வரை செய் மா களிறு இள வெதிர் வளர் முளை அளை மிகு தேன் தோய்த்து

பிரச வாரி தன் இளம் பிடிக்கு அருள்செயும் பிரிதி சென்று அடை நெஞ்சே

#963

பணங்கள் ஆயிரம் உடைய நல் அரவு அணை பள்ளிகொள் பரமா என்று

இணங்கி வானவர் மணி முடி பணிதர இருந்த நல் இமயத்து

மணம் கொள் மாதவி நெடும் கொடி விசும்பு உற நிமிர்ந்து அவை முகில் பற்றி

பிணங்கு பூம் பொழில் நுழைந்து வண்டு இசை சொலும் பிரிதி சென்று அடை நெஞ்சே

#964

கார் கொள் வேங்கைகள் கன வரை தழுவிய கறி வளர் கொடி துன்னி

போர் கொள் வேங்கைகள் புன வரை தழுவிய பூம் பொழில் இமயத்துள்

ஏர் கொள் பூம் சுனை தடம் படிந்து இன மலர் எட்டும் இட்டு இமையோர்கள்

பேர்கள் ஆயிரம் பரவி நின்று அடி தொழும் பிரிதி சென்று அடை நெஞ்சே

#965

இரவு கூர்ந்து இருள் பெருகிய வரை முழை இரும் பசி அது கூர

அரவம் ஆவிக்கும் அகன் பொழில் தழுவிய அரு வரை இமயத்து

பரமன் ஆதி எம் பனி முகில் வண்ணன் என்று எண்ணி நின்று இமையோர்கள்

பிரமனோடு சென்று அடி தொழும் பெருந்தகை பிரிதி சென்று அடை நெஞ்சே

#966

ஓதி ஆயிரம் நாமங்கள் உணர்ந்தவர்க்கு உறு துயர் அடையாமல்

ஏதம் இன்றி நின்று அருளும் நம் பெருந்தகை இருந்த நல் இமயத்து

தாது மல்கிய பிண்டி விண்டு அலர்கின்ற தழல் புரை எழில் நோக்கி

பேதை வண்டுகள் எரி என வெருவரு பிரிதி சென்று அடை நெஞ்சே

#967

கரிய மா முகில் படலங்கள் கிடந்து அவை முழங்கிட களிறு என்று

பெரிய மாசுணம் வரை என பெயர்தரு பிரிதி எம் பெருமானை

வரி கொள் வண்டு அறை பைம் பொழில் மங்கையர் கலியனது ஒலி மாலை

அரிய இன் இசை பாடும் நல் அடியவர்க்கு அருவினை அடையாவே

#968

முற்ற மூத்து கோல் துணையா முன் அடி நோக்கி வளைந்து

இற்ற கால் போல் தள்ளி மெள்ள இருந்து அங்கு இளையா முன்

பெற்ற தாய் போல் வந்த பேய்ச்சி பெரு முலை ஊடு உயிரை

வற்ற வாங்கி உண்ட வாயான் வதரி வணங்குதுமே

#969

முதுகு பற்றி கைத்தலத்தால் முன் ஒரு கோல் ஊன்றி

விதிர்விதிர்த்து கண் சுழன்று மேல் கிளைகொண்டு இருமி

இது என் அப்பர் மூத்த ஆறு என்று இளையவர் ஏசா முன்

மது உண் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே

#970

உறிகள் போல் மெய் நரம்பு எழுந்து ஊன் தளர்ந்து உள்ளம் எள்கி

நெறியை நோக்கி கண் சுழன்று நின்று நடுங்கா முன்

அறிதி ஆகில் நெஞ்சம் அன்பாய் ஆயிரம் நாமம் சொலி

வெறி கொள் வண்டு பண்கள் பாடும் வதரி வணங்குதுமே

#971

பீளை சோர கண் இடுங்கி பித்து எழ மூத்து இருமி

தாள்கள் நோவ தம்மில் முட்டி தள்ளி நடவா முன்

காளை ஆகி கன்று மேய்த்து குன்று எடுத்து அன்று நின்றான்

வாளை பாயும் தண் தடம் சூழ் வதரி வணங்குதுமே

#972

பண்டு காமர் ஆன ஆறும் பாவையர் வாய் அமுதம்

உண்ட ஆறும் வாழ்ந்த ஆறும் ஒக்க உரைத்து இருமி

தண்டு காலா ஊன்றிஊன்றி தள்ளி நடவா முன்

வண்டு பாடும் தண் துழாயான் வதரி வணங்குதுமே

#973

எய்த்த சொல்லோடு ஈளை ஏங்கி இருமி இளைத்து உடலம்

பித்தர் போல சித்தம் வேறாய் பேசி அயரா முன்

அத்தன் எந்தை ஆதிமூர்த்தி ஆழ் கடலை கடைந்த

மைத்த சோதி எம்பெருமான் வதரி வணங்குதுமே

#974

பப்ப அப்பர் மூத்த ஆறு பாழ்ப்பது சீ திரளை

ஒப்ப ஐக்கள் போத உந்த உன் தமர் காண்-மின் என்று

செப்பு நேர் மென் கொங்கை நல்லார் தாம் சிரியாத முன்னம்

வைப்பும் நங்கள் வாழ்வும் ஆனான் வதரி வணங்குதுமே

#975

ஈசி போ-மின் ஈங்கு இரேல்-மின் இருமி இளைத்தீர் உள்ளம்

கூசி இட்டீர் என்று பேசும் குவளை அம் கண்ணியர்-பால்

நாசம் ஆன பாசம் விட்டு நல் நெறி நோக்கலுறில்

வாசம் மல்கு தண் துழாயான் வதரி வணங்குதுமே

#976

புலன்கள் நைய மெய்யில் மூத்து போந்து இருந்து உள்ளம் எள்கி

கலங்க ஐக்கள் போத உந்தி கண்ட பிதற்றா முன்

அலங்கல் ஆய தண் துழாய் கொண்டு ஆயிரம் நாமம் சொலி

வலம் கொள் தொண்டர் பாடி ஆடும் வதரி வணங்குதுமே

#977

வண்டு தண் தேன் உண்டு வாழும் வதரி நெடுமாலை

கண்டல் வேலி மங்கை வேந்தன் கலியன் ஒலி மாலை

கொண்டு தொண்டர் பாடி ஆட கூடிடில் நீள் விசும்பில்

அண்டம் அல்லால் மற்று அவர்க்கு ஓர் ஆட்சி அறியோமே

#978

ஏனம் முன் ஆகி இரு நிலம் இடந்து அன்று இணை அடி இமையவர் வணங்க

தானவன் ஆகம் தரணியில் புரள தடம் சிலை குனித்த என் தலைவன்

தேன் அமர் சோலை கற்பகம் பயந்த தெய்வ நல் நறு மலர் கொணர்ந்து

வானவர் வணங்கும் கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#979

கானிடை உருவை சுடு சரம் துரந்து கண்டு முன் கொடும் தொழில் உரவோன்

ஊன் உடை அகலத்து அடு கணை குளிப்ப உயிர் கவர்ந்து உகந்த எம் ஒருவன்

தேன் உடை கமலத்து அயனொடு தேவர் சென்று சென்று இறைஞ்சிட பெருகு

வானிடை முது நீர் கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#980

இலங்கையும் கடலும் அடல் அரும் துப்பின் இரு நிதிக்கு இறைவனும் அரக்கர்

குலங்களும் கெட முன் கொடும் தொழில் புரிந்த கொற்றவன் கொழும் சுடர் சுழன்ற

விலங்கலில் உரிஞ்சி மேல் நின்ற விசும்பில் வெண் துகில் கொடி என விரிந்து

வலம் தரு மணி நீர் கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#981

துணிவு இனி உனக்கு சொல்லுவன் மனமே தொழுது எழு தொண்டர்கள் தமக்கு

பிணி ஒழித்து அமரர் பெரு விசும்பு அருளும் பேர் அருளாளன் எம் பெருமான்

அணி மலர் குழலார் அரம்பையர் துகிலும் ஆரமும் வாரி வந்து அணி நீர்

மணி கொழித்து இழிந்த கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#982

பேய் இடைக்கு இருந்து வந்த மற்று அவள் தன் பெரு முலை சுவைத்திட பெற்ற

தாய் இடைக்கு இருத்தல் அஞ்சுவன் என்று தளர்ந்திட வளர்ந்த என் தலைவன்

சேய் முகட்டு உச்சி அண்டமும் சுமந்த செம்பொன் செய் விலங்கலில் இலங்கு

வாய் முகட்டு இழிந்த கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#983

தேர் அணங்கு அல்குல் செழும் கயல் கண்ணி திறத்து ஒரு மற தொழில் புரிந்து

பார் அணங்கு இமில் ஏறு ஏழும் முன் அடர்த்த பனி முகில் வண்ணன் எம்பெருமான்

காரணம் தன்னால் கடும் புனல் கயத்த கரு வரை பிளவு எழ குத்தி

வாரணம் கொணர்ந்த கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#984

வெம் திறல் களிறும் வேலைவாய் அமுதும் விண்ணொடு விண்ணவர்க்கு அரசும்

இந்திரற்கு அருளி எமக்கும் ஈந்தருளும் எந்தை எம் அடிகள் எம் பெருமான்

அந்தரத்து அமரர் அடி இணை வணங்க ஆயிரம் முகத்தினால் அருளி

மந்தரத்து இழிந்த கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#985

மான் முனிந்து ஒரு கால் வரி சிலை வளைத்த மன்னவன் பொன் நிறத்து உரவோன்

ஊன் முனிந்து அவனது உடல் இரு பிளவா உகிர் நுதி மடுத்து அயன் அரனை

தான் முனிந்து இட்ட வெம் திறல் சாபம் தவிர்த்தவன் தவம்புரிந்து உயர்ந்த

மா முனி கொணர்ந்த கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#986

கொண்டல் மாருதங்கள் குல வரை தொகு நீர் குரை கடல் உலகு உடன் அனைத்தும்

உண்ட மா வயிற்றோன் ஒண் சுடர் ஏய்ந்த உம்பரும் ஊழியும் ஆனான்

அண்டம் ஊடு அறுத்து அன்று அந்தரத்து இழிந்து அங்கு அவனியாள் அலமர பெருகும்

மண்டு மா மணி நீர் கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானே

#987

வரும் திரை மணி நீர் கங்கையின் கரை மேல் வதரி ஆச்சிரமத்து உள்ளானை

கரும் கடல் முந்நீர் வண்ணனை எண்ணி கலியன் வாய் ஒலிசெய்த பனுவல்

வரம்செய்த ஐந்தும் ஐந்தும் வல்லார்கள் வானவர் உலகு உடன் மருவி

இரும் கடல் உலகம் ஆண்டு வெண்குடை கீழ் இமையவர் ஆகுவர் தாமே

#988

கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்துபோய்

சிலையும் கணையும் துணையாக சென்றான் வென்றி செருக்களத்து

மலை கொண்டு அலை நீர் அணை கட்டி மதிள் நீர் இலங்கை வாள் அரக்கர்

தலைவன் தலை பத்து அறுத்து உகந்தான் சாளக்கிராமம் அடை நெஞ்சே

#989

கடம் சூழ் கரியும் பரிமாவும் ஒலி மா தேரும் காலாளும்

உடன் சூழ்ந்து எழுந்த கடி இலங்கை பொடியா வடி வாய் சரம் துரந்தான்

இடம் சூழ்ந்து எங்கும் இரு விசும்பில் இமையோர் வணங்க மணம் கமழும்

தடம் சூழ்ந்து எங்கும் அழகு ஆய சாளக்கிராமம் அடை நெஞ்சே

#990

உலவு திரையும் குல வரையும் ஊழி முதலா எண் திக்கும்

நிலவும் சுடரும் இருளுமாய் நின்றான் வென்றி விறல் ஆழி

வலவன் வானோர் தம் பெருமான் மருவா அரக்கர்க்கு எஞ்ஞான்றும்

சலவன் சலம் சூழ்ந்து அழகு ஆய சாளக்கிராமம் அடை நெஞ்சே

#991

ஊரான் குடந்தை உத்தமன் ஒரு கால் இரு கால் சிலை வளைய

தேரா அரக்கர் தேர் வெள்ளம் செற்றான் வற்றா வரு புனல் சூழ்

பேரான் பேர் ஆயிரம் உடையான் பிறங்கு சிறை வண்டு அறைகின்ற

தாரான் தாரா வயல் சூழ்ந்த சாளக்கிராமம் அடை நெஞ்சே

#992

அடுத்து ஆர்த்து எழுந்தாள் பில வாய் விட்டு அலற அவள் மூக்கு அயில் வாளால்

விடுத்தான் விளங்கு சுடர் ஆழி விண்ணோர் பெருமான் நண்ணார் முன்

கடுத்து ஆர்த்து எழுந்த பெரு மழையை கல் ஒன்று ஏந்தி இன நிரைக்கா

தடுத்தான் தடம் சூழ்ந்து அழகு ஆய சாளக்கிராமம் அடை நெஞ்சே

#993

தாயாய் வந்த பேய் உயிரும் தயிரும் விழுதும் உடன் உண்ட

வாயான் தூய வரி உருவின் குறளாய் சென்று மாவலியை

ஏயான் இரப்ப மூவடி மண் இன்றே தா என்று உலகு ஏழும்

தாயான் காயா மலர் வண்ணன் சாளக்கிராமம் அடை நெஞ்சே

#994

ஏனோர் அஞ்ச வெம் சமத்துள் அரியாய் பரிய இரணியனை

ஊன் ஆர் அகலம் பிளவு எடுத்த ஒருவன் தானே இரு சுடர் ஆய்

வானாய் தீயாய் மாருதமாய் மலையாய் அலை நீர் உலகு அனைத்தும்

தானாய் தானும் ஆனான் தன் சாளக்கிராமம் அடை நெஞ்சே

#995

வெந்தார் என்பும் சுடு நீறும் மெய்யில் பூசி கையகத்து ஓர்

சந்து ஆர் தலைகொண்டு உலகு ஏழும் திரியும் பெரியோன் தான் சென்று என்

எந்தாய் சாபம் தீர் என்ன இலங்கு அமுது நீர் திருமார்வில்

தந்தான் சந்து ஆர் பொழில் சூழ்ந்த சாளக்கிராமம் அடை நெஞ்சே

#996

தொண்டு ஆம் இனமும் இமையோரும் துணை நூல் மார்வின் அந்தணரும்

அண்டா எமக்கே அருளாய் என்று அணையும் கோயில் அருகு எல்லாம்

வண்டு ஆர் பொழிலின் பழனத்து வயலின் அயலே கயல் பாய

தண் தாமரைகள் முகம் அலர்த்தும் சாளக்கிராமம் அடை நெஞ்சே

#997

தாரா ஆரும் வயல் சூழ்ந்த சாளக்கிராமத்து அடிகளை

கார் ஆர் புறவின் மங்கை வேந்தன் கலியன் ஒலிசெய் தமிழ் மாலை

ஆர்ஆர் உலகத்து அறிவு உடையார் அமரர் நல் நாட்டு அரசு ஆள

பேர் ஆயிரமும் ஓது-மின்கள் அன்றி இவையே பிதற்று-மினே

#998

வாள் நிலா முறுவல் சிறு நுதல் பெரும் தோள் மாதரார் வன முலை பயனே

பேணினேன் அதனை பிழை என கருதி பேதையேன் பிறவி நோய் அறுப்பான்

ஏண் இலேன் இருந்தேன் எண்ணினேன் எண்ணி இளையவர் கலவியின் திறத்தை

நாணினேன் வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்

#999

சிலம்பு அடி உருவின் கரு நெடும் கண்ணார் திறத்தனாய் அறத்தையே மறந்து

புலன் படிந்து உண்ணும் போகமே பெருக்கி போக்கினேன் பொழுதினை வாளா

அலம் புரி தடக்கை ஆயனே மாயா வானவர்க்கு அரசனே வானோர்

நலம் புரிந்து இறைஞ்சும் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்

#1000

சூதினை பெருக்கி களவினை துணிந்து சுரி குழல் மடந்தையர் திறத்து

காதலே மிகுத்து கண்டவா திரிந்த தொண்டனேன் நமன் தமர் செய்யும்

வேதனைக்கு ஒடுங்கி நடுங்கினேன் வேலை வெண் திரை அலமர கடைந்த

நாதனே வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்

#1001

வம்பு உலாம் கூந்தல் மனைவியை துறந்து பிறர் பொருள் தாரம் என்று இவற்றை

நம்பினார் இறந்தால் நமன் தமர் பற்றி எற்றி வைத்து எரி எழுகின்ற

செம்பினால் இயன்ற பாவையை பாவீ தழுவு என மொழிவதற்கு அஞ்சி

நம்பனே வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்

#1002

இடும்பையால் அடர்ப்புண்டு இடு-மினோ துற்று என்று இரந்தவர்க்கு இல்லையே என்று

நெடும் சொலால் மறுத்த நீசனேன் அந்தோ நினைக்கிலேன் வினை பயன்-தன்னை

கடும் சொலார் கடியார் காலனார் தமரால் படுவது ஓர் கொடு மிறைக்கு அஞ்சி

நடுங்கி நான் வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்

#1003

கொடிய மனத்தால் சின தொழில் புரிந்து திரிந்து நாய்
இனத்தொடும் திளைத்திட்டு

ஓடியும் உழன்றும் உயிர்களே கொன்றேன் உணர்விலேன்
ஆதலால் நமனார்

பாடியை பெரிதும் பரிசு அழித்திட்டேன் பரமனே பாற்கடல்
கிடந்தாய்

நாடி நான் வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள்
எந்தாய்

#1004

நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும் நீதி
அல்லாதன செய்தும்

துஞ்சினார் செல்லும் தொல் நெறி கேட்டே துளங்கினேன்
விளங்கனி முனிந்தாய்

வஞ்சனேன் அடியேன் நெஞ்சினில் பிரியா வானவா தானவர்க்கு
என்றும்

நஞ்சனே வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள்
எந்தாய்

#1005

ஏவினார் கலியார் நலிக என்று என் மேல் எங்ஙனே வாழும் ஆறு ஐவர்

கோவினார் செய்யும் கொடுமையை மடித்தேன் குறுங்குடி நெடும் கடல் வண்ணா

பாவின் ஆர் இன் சொல் பல் மலர் கொண்டு உன் பாதமே பரவி நான் பணிந்து என்

நாவினால் வந்து உன் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்

#1006

ஊன் இடை சுவர் வைத்து என்பு தூண் நாட்டி உரோமம் வேய்ந்து ஒன்பது வாசல்

தான் உடை குரம்பை பிரியும்-போது உன்தன் சரணமே சரணம் என்று இருந்தேன்

தேன் உடை கமல திருவினுக்கு அரசே திரை கொள் மா நெடும் கடல் கிடந்தாய்

நான் உடை தவத்தால் திருவடி அடைந்தேன் நைமிசாரணியத்துள் எந்தாய்

#1007

ஏதம் வந்து அணுகா வண்ணம் நாம் எண்ணி எழு-மினோ தொழுதும் என்று இமையோர்

நாதன் வந்து இறைஞ்சும் நைமிசாரணியத்து எந்தையை சிந்தையுள் வைத்து

காதலே மிகுத்த கலியன் வாய் ஒலிசெய் மாலை தான் கற்று வல்லார்கள்

ஓத நீர் வையம் ஆண்டு வெண்குடை கீழ் உம்பரும் ஆகுவர் தாமே

#1008

அம் கண் ஞாலம் அஞ்ச அங்கு ஓர் ஆள் அரியாய் அவுணன்

பொங்க ஆகம் வள் உகிரால் போழ்ந்த புனிதன் இடம்

பைம் கண் ஆனை கொம்பு கொண்டு பத்திமையால் அடி கீழ்

செம் கண் ஆளி இட்டு இறைஞ்சும் சிங்கவேள்குன்றமே

#1009

அலைத்த பேழ் வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய் அவுணன்

கொலை கையாளன் நெஞ்சு இடந்த கூர் உகிராளன் இடம்

மலைத்த செல் சாத்து எறிந்த பூசல் வன் துடி வாய் கடுப்ப

சிலை கை வேடர் தெழிப்பு அறாத சிங்கவேள்குன்றமே

#1010

ஏய்ந்த பேழ் வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய் அவுணன்

வாய்ந்த ஆகம் வள் உகிரால் வகிர்ந்த அம்மானது இடம்

ஒய்ந்த மாவும் உடைந்த குன்றும் அன்றியும் நின்று அழலால்

தேய்ந்த வேயும் அல்லது இல்லா சிங்கவேள்குன்றமே

#1011

எவ்வம் வெவ் வேல் பொன் பெயரோன் ஏதலன் இன் உயிரை

வவ்வி ஆகம் வள் உகிரால் வகிர்ந்த அம்மானது இடம்

கவ்வும் நாயும் கழுகும் உச்சி போதொடு கால் சுழன்று

தெய்வம் அல்லால் செல்ல ஒண்ணா சிங்கவேள்குன்றமே

#1012

மென்ற பேழ் வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய் அவுணன்

பொன்ற ஆகம் வள் உகிரால் போழ்ந்த புனிதன் இடம்

நின்ற செம் தீ மொண்டு சூறை நீள் விசும்பூடு இரிய

சென்று காண்டற்கு அரிய கோயில் சிங்கவேள்குன்றமே

#1013

எரிந்த பைம் கண் இலங்கு பேழ் வாய் எயிற்றொடு இது எ உரு என்று

இரிந்து வானோர் கலங்கி ஓட இருந்த அம்மானது இடம்

நெரிந்த வேயின் முழையுள் நின்று நீள் நெறிவாய் உழுவை

திரிந்த ஆனை சுவடு பார்க்கும் சிங்கவேள்குன்றமே

#1014

முனைத்த சீற்றம் விண் சுட போய் மூ உலகும் பிறவும்

அனைத்தும் அஞ்ச ஆள் அரியாய் இருந்த அம்மானது இடம்

கனைத்த தீயும் கல்லும் அல்லா வில் உடை வேடரும் ஆய்

தினைத்தனையும் செல்ல ஒண்ணா சிங்கவேள்குன்றமே

#1015

நா தழும்ப நான்முகனும் ஈசனுமாய் முறையால்

ஏத்த அங்கு ஓர் ஆள் அரியாய் இருந்த அம்மானது இடம்

காய்த்த வாகை நெற்று ஒலிப்ப கல் அதர் வேய் கழை போய்

தேய்த்த தீயால் விண் சிவக்கும் சிங்கவேள்குன்றமே

#1016

நல்லை நெஞ்சே நாம் தொழுதும் நம்முடை நம் பெருமான்

அல்லி மாதர் புல்க நின்ற ஆயிரம் தோளன் இடம்

நெல்லி மல்கி கல் உடைப்ப புல் இலை ஆர்த்து அதர்வாய்

சில்லி சில் என்று ஒல் அறாத சிங்கவேள்குன்றமே

#1017

செம் கண் ஆளி இட்டு இறைஞ்சும் சிங்கவேள்குன்று உடைய

எங்கள் ஈசன் எம் பிரானை இரும் தமிழ் நூல் புலவன்

மங்கை ஆளன் மன்னு தொல் சீர் வண்டு அரை தார் கலியன்

செங்கையாளன் செம் சொல் மாலை வல்லவர் தீது இலரே

#1018

கொங்கு அலர்ந்த மலர் குருந்தம் ஒசித்த கோவலன் எம் பிரான்

சங்கு தங்கு தடம் கடல் துயில் கொண்ட தாமரை கண்ணினன்

பொங்கு புள்ளினை வாய் பிளந்த புராணர் தம் இடம் பொங்கு நீர்

செம் கயல் திளைக்கும் சுனை திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1019

பள்ளி ஆவது பாற்கடல் அரங்கம் இரங்க வன் பேய் முலை

பிள்ளையாய் உயிர் உண்ட எந்தை பிரான் அவன் பெருகும் இடம்

வெள்ளியான் கரியான் மணி நிற வண்ணன் என்று எண்ணி
நாள்-தொறும்

தெள்ளியார் வணங்கும் மலை திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1020

நின்ற மா மருது இற்று வீழ நடந்த நின்மலன் நேமியான்

என்றும் வானவர் கைதொழும் இணை தாமரை அடி எம் பிரான்

கன்றி மாரி பொழிந்திட கடிது ஆநிரைக்கு இடர் நீக்குவான்

சென்று குன்றம் எடுத்தவன் திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1021

பார்த்தற்காய் அன்று பாரதம் கைசெய் திட்டு வென்ற பரஞ்சுடர்

கோத்து அங்கு ஆயர் தம் பாடியில் குரவை பிணைந்த எம் கோவலன்

ஏத்துவார் தம் மனத்து உள்ளான் இடவெந்தை மேவிய எம் பிரான்

தீர்த்த நீர் தடம் சோலை சூழ் திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1022

வண் கையான் அவுணர்க்கு நாயகன் வேள்வியில் சென்று மாணியாய்

மண் கையால் இரந்தான் மராமரம் ஏழும் எய்த வலத்தினான்

எண் கையான் இமயத்து உள்ளான் இரும் சோலை மேவிய எம் பிரான்

திண் கை மா துயர் தீர்த்தவன் திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1023

எண் திசைகளும் ஏழ் உலகமும் வாங்கி பொன் வயிற்றில் பெய்து

பண்டு ஓர் ஆலிலை பள்ளி கொண்டவன் பால்மதிக்கு இடர் தீர்த்தவன்

ஒண் திறல் அவுணன் உரத்து உகிர் வைத்தவன் ஒள் எயிற்றொடு

திண் திறல் அரியாயவன் திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1024

பாரும் நீர் எரி காற்றினோடு ஆகாசமும் இவை ஆயினான்

பேரும் ஆயிரம் பேச நின்ற பிறப்பிலி பெருகும் இடம்

காரும் வார் பனி நீள் விசும்பிடை சோரும் மா முகில் தோய்தர

சேரும் வார் பொழில் சூழ் எழில் திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1025

அம்பரம் அனல் கால் நிலம் சலம் ஆகி நின்ற அமரர் கோன்

வம்பு உலாம் மலர் மேல் மலி மட மங்கை-தன் கொழுநன் அவன்

கொம்பின் அன்ன இடை மட குறமாதர் நீள் இதணம்-தொறும்

செம் புனம் அவை காவல் கொள் திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1026

பேசும் இன் திருநாமம் எட்டுஎழுத்தும் சொலி நின்று பின்னரும்

பேசுவார் தமை உய்ய வாங்கி பிறப்பு அறுக்கும் பிரான் இடம்

வாச மா மலர் நாறு வார் பொழில் சூழ் தரும் உலகுக்கு எலாம்

தேசமாய் திகழும் மலை திருவேங்கடம் அடை நெஞ்சமே

#1027

செம் கயல் திளைக்கும் சுனை திருவேங்கடத்து உறை செல்வனை

மங்கையர் தலைவன் கலிகன்றி வண் தமிழ் செம் சொல் மாலைகள்

சங்கை இன்றி தரித்து உரைக்க வல்லார்கள் தஞ்சமதாகவே

வங்க மா கடல் வையம் காவலர் ஆகி வான் உலகு ஆள்வரே

#1028

தாயே தந்தை என்றும் தாரமே கிளை மக்கள் என்றும்

நோயே பட்டொழிந்தேன் நுன்னை காண்பது ஓர் ஆசையினால்

வேய் ஏய் பூம் பொழில் சூழ் விரை ஆர் திருவேங்கடவா

நாயேன் வந்து அடைந்தேன் நல்கி ஆள் என்னை கொண்டருளே

#1029

மான் ஏய் கண் மடவார் மயக்கில் பட்டு மாநிலத்து

நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்

தேன் ஏய் பூம் பொழில் சூழ் திருவேங்கட மா மலை என்

ஆனாய் வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

#1030

கொன்றேன் பல் உயிரை குறிக்கோள் ஒன்று இலாமையினால்

என்றேனும் இரந்தார்க்கு இனிது ஆக உரைத்து அறியேன்

குன்று ஏய் மேகம் அதிர் குளிர் மா மலை வேங்கடவா

அன்றே வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

#1031

குலம் தான் எத்தனையும் பிறந்தே இறந்து எய்த்து ஒழிந்தேன்

நலம் தான் ஒன்றும் இலேன் நல்லது ஓர் அறம் செய்தும் இலேன்

நிலம் தோய் நீள் முகில் சேர் நெறி ஆர் திருவேங்கடவா

அலந்தேன் வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

#1032

எ பாவம் பலவும் இவையே செய்து இளைத்து ஒழிந்தேன்

துப்பா நின் அடியே தொடர்ந்து ஏத்தவும் கிற்கின்றிலேன்

செப்பு ஆர் திண் வரை சூழ் திருவேங்கட மா மலை என்

அப்பா வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

#1033

மண்ணாய் நீர் எரி கால் மஞ்சு உலாவும் ஆகாசமும் ஆம்

புண் ஆர் ஆக்கை தன்னுள் புலம்பி தளர்ந்து எய்த்து ஒழிந்தேன்

விண் ஆர் நீள் சிகர விரை ஆர் திருவேங்கடவா

அண்ணா வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

#1034

தெரியேன் பாலகனாய் பல தீமைகள் செய்துமிட்டேன்

பெரியேன் ஆயின பின் பிறர்க்கே உழைத்து ஏழை ஆனேன்

கரி சேர் பூம் பொழில் சூழ் கன மா மலை வேங்கடவா

அரியே வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

#1035

நோற்றேன் பல் பிறவி நுன்னை காண்பது ஓர் ஆசையினால்

ஏற்றேன் இ பிறப்பே இடர் உற்றனன் எம் பெருமான்

கோல் தேன் பாய்ந்து ஒழுகும் குளிர் சோலை சூழ் வேங்கடவா

ஆற்றேன் வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

#1036

பற்றேல் ஒன்றும் இலேன் பாவமே செய்து பாவி ஆனேன்

மற்றேல் ஒன்று அறியேன் மாயனே எங்கள் மாதவனே

கல் தேன் பாய்ந்து ஒழுகும் கமல சுனை வேங்கடவா

அற்றேன் வந்து அடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே

#1037

கண்ணாய் ஏழ் உலகுக்கு உயிர் ஆய எம் கார் வண்ணனை

விண்ணோர் தாம் பரவும் பொழில் வேங்கட வேதியனை

திண் ஆர் மாடங்கள் சூழ் திருமங்கையர் கோன் கலியன்

பண் ஆர் பாடல் பத்தும் பயில்வார்க்கு இல்லை பாவங்களே

#1038

கண் ஆர் கடல் சூழ் இலங்கைக்கு இறைவன்-தன்

திண் ஆகம் பிளக்க சரம் செல உய்த்தாய்

விண்ணோர் தொழும் வேங்கட மா மலை மேய

அண்ணா அடியேன் இடரை களையாயே

#1039

இலங்கை பதிக்கு அன்று இறையாய அரக்கர்

குலம் கெட்டு அவர் மாள கொடி புள் திரித்தாய்

விலங்கல் குடுமி திருவேங்கடம் மேய

அலங்கல் துளப முடியாய் அருளாயே

#1040

நீர் ஆர் கடலும் நிலனும் முழுது உண்டு

ஏர் ஆலம் இளம் தளிர் மேல் துயில் எந்தாய்

சீர் ஆர் திருவேங்கட மா மலை மேய

ஆரா அமுதே அடியேற்கு அருளாயே

#1041

உண்டாய் உறி மேல் நறு நெய் அமுதாக

கொண்டாய் குறளாய் நிலம் ஈர் அடியாலே

விண் தோய் சிகர திருவேங்கடம் மேய

அண்டா அடியேனுக்கு அருள்புரியாயே

#1042

தூணாய் அதனூடு அரியாய் வந்து தோன்றி

பேணா அவுணன் உடலம் பிளந்திட்டாய்

சேண் ஆர் திருவேங்கட மா மலை மேய

கோள் நாக அணையாய் குறிக்கொள் எனை நீயே

#1043

மன்னா இ மனிச பிறவியை நீக்கி

தன் ஆக்கி தன் இன் அருள்செய்யும் தலைவன்

மின் ஆர் முகில் சேர் திருவேங்கடம் மேய

என் ஆனை என் அப்பன் என் நெஞ்சில் உளானே

#1044

மான் ஏய் மட நோக்கி திறத்து எதிர்வந்த

ஆன் ஏழ் விடை செற்ற அணி வரை தோளா

தேனே திருவேங்கட மா மலை மேய

கோனே என் மனம் குடிகொண்டு இருந்தாயே

#1045

சேயன் அணியன் என சிந்தையுள் நின்ற

மாயன் மணி வாள் ஒளி வெண் தரளங்கள்

வேய் விண்டு உதிர் வேங்கட மா மலை மேய

ஆயன் அடி அல்லது மற்று அறியேனே

#1046

வந்தாய் என் மனம் புகுந்தாய் மன்னி நின்றாய்

நந்தாத கொழும் சுடரே எங்கள் நம்பீ

சிந்தாமணியே திருவேங்கடம் மேய

எந்தாய் இனி யான் உனை என்றும் விடேனே

#1047

வில்லார் மலி வேங்கட மா மலை மேய

மல் ஆர் திரள் தோள் மணி வண்ணன் அம்மானை

கல் ஆர் திரள் தோள் கலியன் சொன்ன மாலை

வல்லார் அவர் வானவர் ஆகுவர் தாமே

#1048

வானவர் தங்கள் சிந்தை போல என் நெஞ்சமே இனிது உவந்து மா தவ

மானவர் தங்கள் சிந்தை அமர்ந்து உறைகின்ற எந்தை

கானவர் இடு கார் அகில் புகை ஓங்கு வேங்கடம் மேவி மாண் குறள்

ஆன அந்தணற்கு இன்று அடிமை தொழில் பூண்டாயே

#1049

உறவு சுற்றம் என்று ஒன்று இலா ஒருவன் உகந்தவர் தம்மை மண் மிசை

பிறவியே கெடுப்பான் அது கண்டு என் நெஞ்சம் என்பாய்

குறவர் மாதர்களோடு வண்டு குறிஞ்சி மருள் இசை பாடும் வேங்கடத்து

அறவன் நாயகற்கு இன்று அடிமை தொழில் பூண்டாயே

#1050

இண்டை ஆயின கொண்டு தொண்டர்கள் ஏத்துவார் உறவோடும் வானிடை

கொண்டு போய் இடவும் அது கண்டு என் நெஞ்சம் என்பாய்

வண்டு வாழ் வடவேங்கட மலை கோயில் கொண்டு அதனோடும் மீமிசை

அண்டம் ஆண்டு இருப்பாற்கு அடிமை தொழில் பூண்டாயே

#1051

பாவியாது செய்தாய் என் நெஞ்சமே பண்டு தொண்டு செய்தாரை மண் மிசை

மேவி ஆட்கொண்டு போய் விசும்பு ஏற வைக்கும் எந்தை

கோவி நாயகன் கொண்டல் உந்து உயர் வேங்கட மலை ஆண்டு வானவர்

ஆவியாய் இருப்பாற்கு அடிமை தொழில் பூண்டாயே

#1052

பொங்கு போதியும் பிண்டியும் உடை புத்தர் நோன்பியர் பள்ளியுள் உறை

தங்கள் தேவரும் தாங்களுமே ஆக என் நெஞ்சம் என்பாய்

எங்கும் வானவர் தானவர் நிறைந்து ஏத்தும் வேங்கடம் மேவி நின்று அருள்

அம் கண் நாயகற்கு இன்று அடிமை தொழில் பூண்டாயே

#1053

துவரி ஆடையர் மட்டையர் சமண் தொண்டர்கள் மண்டி உண்டு பின்னரும்

தமரும் தாங்களுமே தடிக்க என் நெஞ்சம் என்பாய்

கவரி மா கணம் சேரும் வேங்கடம் கோயில் கொண்ட கண் ஆர் விசும்பிடை

அமர நாயகற்கு இன்று அடிமை தொழில் பூண்டாயே

#1054

தருக்கினால் சமண் செய்து சோறு தண் தயிரினால் திரளை மிடற்றிடை

நெருக்குவார் அலக்கண்-அது கண்டு என் நெஞ்சம் என்பாய்

மருள்கள் வண்டுகள் பாடும் வேங்கடம் கோயில் கொண்டு அதனோடும் வானிடை

அருக்கன் மேவி நிற்பாற்கு அடிமை தொழில் பூண்டாயே

#1055

சேயன் அணியன் சிறியன் பெரியன் என்பதும் சிலர் பேச கேட்டிரும்

தே என் நெஞ்சம் என்பாய் எனக்கு ஒன்று சொல்லாதே

வேய்கள் நின்று வெண் முத்தமே சொரி வேங்கட மலை கோயில் மேவிய

ஆயர் நாயகற்கு இன்று அடிமை தொழில் பூண்டாயே

#1056

கூடி ஆடி உரைத்ததே உரை தாய் என் நெஞ்சம் என்பாய் துணிந்து கேள்

பாடி ஆடி பலரும் பணிந்து ஏத்தி காண்கிலார்

ஆடு தாமரையோனும் ஈசனும் அமரர் கோனும் நின்று ஏத்தும் வேங்கடத்து

ஆடு கூத்தனுக்கு இன்று அடிமை தொழில் பூண்டாயே

#1057

மின்னு மா முகில் மேவு தண் திருவேங்கட மலை கோயில் மேவிய

அன்னமாய் நிகழ்ந்த அமரர் பெருமானை

கன்னி மா மதிள் மங்கையர் கலி கன்றி இன் தமிழால் உரைத்த இ

மன்னு பாடல் வல்லார்க்கு இடம் ஆகும் வான் உலகே

#1058

காசை ஆடை மூடி ஓடி காதல்செய் தானவன் ஊர்

நாசம் ஆக நம்ப வல்ல நம்பி நம் பெருமான்

வேயின் அன்ன தோள் மடவார் வெண்ணெய் உண்டான் இவன் என்று

ஏச நின்ற எம் பெருமான் எவ்வுள் கிடந்தானே

#1059

தையலாள் மேல் காதல்செய்த தானவன் வாள் அரக்கன்

பொய் இலாத பொன் முடிகள் ஒன்பதோடு ஒன்றும் அன்று

செய்த வெம் போர்-தன்னில் அங்கு ஓர் செம் சரத்தால் உருள

எய்த எந்தை எம்பெருமான் எவ்வுள் கிடந்தானே

#1060

முன் ஓர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து அரக்கன்

மன் ஊர் தன்னை வாளியினால் மாள முனிந்து அவனே

பின் ஓர் தூது ஆதி மன்னர்க்கு ஆகி பெருநிலத்தார்

இன்னார் தூதன் என நின்றான் எவ்வுள் கிடந்தானே

#1061

பந்து அணைந்த மெல் விரலாள் பாவை-தன் காரணத்தால்

வெம் திறல் ஏறு ஏழும் வென்ற வேந்தன் விரி புகழ் சேர்

நந்தன் மைந்தன் ஆக ஆகும் நம்பி நம் பெருமான்

எந்தை தந்தை தம் பெருமான் எவ்வுள் கிடந்தானே

#1062

பாலன் ஆகி ஞாலம் ஏழும் உண்டு பண்டு ஆலிலை மேல்

சால நாளும் பள்ளி கொள்ளும் தாமரை கண்ணன் எண்ணில்

நீலம் ஆர் வண்டு உண்டு வாழும் நெய்தல் அம் தண் கழனி

ஏலம் நாறும் பைம் புறவின் எவ்வுள் கிடந்தானே

#1063

சோத்தம் நம்பி என்று தொண்டர் மிண்டி தொடர்ந்து அழைக்கும்

ஆத்தன் நம்பி செங்கண்நம்பி ஆகிலும் தேவர்க்கு எல்லாம்

மூத்த நம்பி முக்கண் நம்பி என்று முனிவர் தொழுது

ஏத்தும் நம்பி எம் பெருமான் எவ்வுள் கிடந்தானே

#1064

திங்கள் அப்பு வான் எரி கால் ஆகி திசைமுகனார்

தங்கள் அப்பன் சாமி அப்பன் பாகத்து இருந்த வண்டு உண்

தொங்கல் அப்பு நீள் முடியான் சூழ் கழல் சூட நின்ற

எங்கள் அப்பன் எம் பெருமான் எவ்வுள் கிடந்தானே

#1065

முனிவன் மூர்த்தி மூவர் ஆகி வேதம் விரித்து உரைத்த

புனிதன் பூவை வண்ணன் அண்ணல் புண்ணியன் விண்ணவர் கோன்

தனியன் சேயன் தான் ஒருவன் ஆகிலும் தன் அடியார்க்கு

இனியன் எந்தை எம் பெருமான் எவ்வுள் கிடந்தானே

#1066

பந்து இருக்கும் மெல் விரலாள் பாவை பனி மலராள்

வந்து இருக்கும் மார்வன் நீல மேனி மணி வண்ணன்

அந்தரத்தில் வாழும் வானோர் நாயகனாய் அமைந்த

இந்திரற்கும் தம் பெருமான் எவ்வுள் கிடந்தானே

#1067

இண்டை கொண்டு தொண்டர் ஏத்த எவ்வுள் கிடந்தானை

வண்டு பாடும் பைம் புறவின் மங்கையர் கோன் கலியன்

கொண்ட சீரால் தண் தமிழ் செய் மாலை ஈரைந்தும் வல்லார்

அண்டம் ஆள்வது ஆணை அன்றேல் ஆள்வர் அமர் உலகே

#1068

வில் பெரு விழவும் கஞ்சனும் மல்லும் வேழமும் பாகனும் வீழ

செற்றவன்-தன்னை புரம் எரி செய்த சிவன் உறு துயர் களை தேவை

பற்றலர் வீய கோல் கையில் கொண்டு பார்த்தன் தன் தேர் முன் நின்றானை

சிற்றவை பணியால் முடி துறந்தானை திருவல்லிக்கேணி கண்டேனே

#1069

வேதத்தை வேதத்தின் சுவை பயனை விழுமிய முனிவரர் விழுங்கும்

கோது இல் இன் கனியை நந்தனார் களிற்றை குவலயத்தோர் தொழுது ஏத்தும்

ஆதியை அமுதை என்னை ஆள் உடை அப்பனை ஒப்பவர் இல்லா

மாதர்கள் வாழும் மாட மா மயிலை திருவல்லிக்கேணி கண்டேனே

#1070

வஞ்சனை செய்ய தாய் உரு ஆகி வந்த பேய் அலறி மண் சேர

நஞ்சு அமர் முலையூடு உயிர் செக உண்ட நாதனை தானவர் கூற்றை

விஞ்சை வானவர் சாரணர் சித்தர் வியந்துதி செய்ய பெண் உரு ஆகி

அம் சுவை அமுதம் அன்று அளித்தானை திருவல்லிக்கேணி கண்டேனே

#1071

இந்திரனுக்கு என்று ஆயர்கள் எடுத்த எழில் விழவில் பழ நடைசெய்

மந்திர விதியில் பூசனை பெறாது மழை பொழிந்திட தளர்ந்து ஆயர்

எம்-தம்மோடு இன ஆநிரை தளராமல் எம் பெருமான் அருள் என்ன

அந்தம் இல் வரையால் மழை தடுத்தானை திருவல்லிக்கேணி கண்டேனே

#1072

இன் துணை பதுமத்து அலர் மகள்-தனக்கும் இன்பன் நல் புவி தனக்கு இறைவன்

தன் துணை ஆயர் பாவை நப்பின்னை-தனக்கு இறை மற்றையோர்க்கு எல்லாம்

வன் துணை பஞ்ச பாண்டவர்க்கு ஆகி வாய் உரை தூது சென்று இயங்கும்

என் துணை எந்தை தந்தை தம்மானை திருவல்லிக்கேணி கண்டேனே

#1073

அந்தகன் சிறுவன் அரசர்-தம் அரசற்கு இளையவன் அணி இழையை சென்று

எம்-தமக்கு உரிமை செய் என தரியாது எம் பெருமான் அருள் என்ன

சந்தம் அல் குழலாள் அலக்கண் நூற்றுவர் தம் பெண்டிரும் எய்தி நூல் இழப்ப

இந்திரன் சிறுவன் தேர் முன் நின்றானை திருவல்லிக்கேணி கண்டேனே

#1074

பரதனும் தம்பி சத்துருக்கனனும் இலக்குமனோடு மைதிலியும்

இரவும் நன் பகலும் துதி செய்ய நின்ற இராவணாந்தகனை எம்மானை

குரவமே கமழும் குளிர் பொழிலூடு குயிலொடு மயில்கள் நின்று ஆல

இரவியின் கதிர்கள் நுழைதல் செய்து அறியா திருவல்லிக்கேணி கண்டேனே

#1075

பள்ளியில் ஓதி வந்த தன் சிறுவன் வாயில் ஓர் ஆயிரம் நாமம்

ஒள்ளிய ஆகி போத ஆங்கு அதனுக்கு ஒன்றும் ஓர் பொறுப்பு இலனாகி

பிள்ளையை சீறி வெகுண்டு தூண் புடைப்ப பிறை எயிற்று அனல் விழி பேழ் வாய்

தெள்ளிய சிங்கம் ஆகிய தேவை திருவல்லிக்கேணி கண்டேனே

#1076

மீன் அமர் பொய்கை நாள்மலர் கொய்வான் வேட்கையினோடு சென்று இழிந்த

கான் அமர் வேழம் கைஎடுத்து அலற கரா அதன் காலினை கதுவ

ஆனையின் துயரம் தீர புள் ஊர்ந்து சென்று நின்று ஆழிதொட்டானை

தேன் அமர் சோலை மாட மா மயிலை திருவல்லிக்கேணி கண்டேனே

#1077

மன்னு தண் பொழிலும் வாவியும் மதிளும் மாட மாளிகையும் மண்டபமும்

தென்னன் தொண்டையர் கோன் செய்த நல் மயிலை திருவல்லிக்கேணி நின்றானை

கன்னி நல் மாட மங்கையர் தலைவன் காமரு சீர் கலிகன்றி

சொன்ன சொல் மாலை பத்து உடன் வல்லார் சுகம் இனிது ஆள்வர் வான் உலகே

#1078

அன்று ஆயர் குல கொடியோடு அணி மா மலர் மங்கையொடு அன்பு அளவி அவுணர்க்கு

என்றானும் இரக்கம் இலாதவனுக்கு உறையும் இடம் ஆவது இரும் பொழில் சூழ்

நன்று ஆய புனல் நறையூர் திருவாலி குடந்தை தடம் திகழ் கோவல்நகர்

நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தாற்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1079

காண்டாவனம் என்பது ஓர் காடு அமரர்க்கு அரையன்னது கண்டு அவன் நிற்க முனே

மூண்டு ஆர் அழல் உண்ண முனிந்ததுவும் அது அன்றியும் முன் உலகம் பொறை தீர்த்து

ஆண்டான் அவுணன் அவன் மார்வு அகலம் உகிரால் வகிர் ஆக முனிந்து அரியாய்

நீண்டான் குறள் ஆகி நிமிர்ந்தவனுக்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1080

அலம் மன்னும் அடல் சுரி சங்கம் எடுத்து அடல் ஆழியினால் அணி ஆர் உருவில்

புலம் மன்னும் வடம் புனை கொங்கையினாள் பொறை தீர முன் ஆள் அடு வாள் அமரில்

பல மன்னர் பட சுடர் ஆழியினை பகலோன் மறைய பணிகொண்டு அணி சேர்

நில மன்னனுமாய் உலகு ஆண்டவனுக்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1081

தாங்காதது ஓர் ஆள் அரியாய் அவுணன்-தனை வீட முனிந்து அவனால் அமரும்

பூம் கோதையர் பொங்கு எரி மூழ்க விளைத்து அது அன்றியும் வென்றி கொள் வாள் அமரில்

பாங்கு ஆக முன் ஐவரொடு அன்பு அளவி பதிற்றைந்து இரட்டி படை வேந்தர் பட

நீங்கா செருவில் நிறை காத்தவனுக்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1082

மாலும் கடல் ஆர மலை குவடு இட்டு அணை கட்டி வரம்பு உருவ மதி சேர்

கோல மதிள் ஆய இலங்கை கெட படை தொட்டு ஒருகால் அமரில் அதிர

காலம் இது என்று அயன் வாளியினால் கதிர் நீள் முடி பத்தும் அறுத்து அமரும்

நீல முகில் வண்ணன் எமக்கு இறைவற்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1083

பார் ஆர் உலகும் பனி மால் வரையும் கடலும் சுடரும் இவை உண்டும் எனக்கு

ஆராது என நின்றவன் எம் பெருமான் அலை நீர் உலகுக்கு அரசு ஆகிய அ

பேரானை முனிந்த முனிக்கு அரையன் பிறர் இல்லை நுனக்கு எனும் எல்லையினான்

நீர் ஆர் பெயரான் நெடுமால் அவனுக்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1084

புகர் ஆர் உரு ஆகி முனிந்தவனை புகழ் வீட முனிந்து உயிர் உண்டு அசுரன்

நகர் ஆயின பாழ்பட நாமம் எறிந்து அது அன்றியும் வென்றி கொள் வாள் அவுணன்

பகராதவன் ஆயிரம் நாமம் அடிபணியாதவனை பணியால் அமரில்

நிகர் ஆயவன் நெஞ்சு இடந்தான் அவனுக்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1085

பிச்ச சிறு பீலி பிடித்து உலகில் பிணம் தின் மடவார்-அவர் போல் அங்ஙனே

அச்சம் இலர் நாண் இலர் ஆதன்மையால் அவர் செய்கை வெறுத்து அணி மா மலர் தூய்

நச்சி நமனார் அடையாமை நமக்கு அருள்செய் என உள் குழைந்து ஆர்வமொடு

நிச்சம் நினைவார்க்கு அருள்செய்யும் அவற்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1086

பேசும் அளவு அன்று இது வம்-மின் நமர் பிறர் கேட்பதன் முன் பணிவார் வினைகள்

நாசம் அது செய்திடும் ஆதன்மையால் அதுவே நமது உய்விடம் நாள்மலர் மேல்

வாசம் அணி வண்டு அறை பைம் புறவின் மனம் ஐந்தொடு நைந்து உழல்வார் மதி இல்

நீசர் அவர் சென்று அடையாதவனுக்கு இடம் மா மலை ஆவது நீர்மலையே

#1087

நெடுமால் அவன் மேவிய நீர்மலை மேல் நிலவும் புகழ் மங்கையர் கோன் அமரில்

கட மா களி யானை வல்லான் கலியன் ஒலிசெய் தமிழ் மாலை வல்லார்க்கு உடனே

விடும் மால் வினை வேண்டிடில் மேல் உலகும் எளிது ஆயிடும் அன்றி இலங்கு ஒலி சேர்

கொடு மா கடல் வையகம் ஆண்டு மதி குடை மன்னவராய் அடி கூடுவரே

#1088

பார் ஆயது உண்டு உமிழ்ந்த பவள தூணை படு கடலில் அமுதத்தை பரி வாய் கீண்ட

சீரானை எம்மானை தொண்டர் தங்கள் சிந்தையுள்ளே முளைத்து எழுந்த தீம் கரும்பினை

போர் ஆனை கொம்பு ஒசித்த போர் ஏற்றினை புணர் மருதம் இற நடந்த பொன் குன்றினை

கார் ஆனை இடர் கடிந்த கற்பகத்தை கண்டது நான் கடல்மல்லை தலசயனத்தே

#1089

பூண்டு அவத்தம் பிறர்க்கு அடைந்து தொண்டு பட்டு பொய் நூலை மெய் நூல் என்று என்றும் ஓதி

மாண்டு அவத்தம் போகாதே வம்-மின் எந்தை என்
வணங்கப்படுவானை கணங்கள் ஏத்தும்

நீண்ட அத்தை கரு முகிலை எம்மான்-தன்னை நின்றவூர்
நித்திலத்தை தொத்து ஆர் சோலை

காண்டவத்தை கனல் எரிவாய் பெய்வித்தானை கண்டது நான்
கடல்மல்லை தலசயனத்தே

#1090

உடம்பு உருவில் மூன்று ஒன்றாய் மூர்த்தி வேறாய் உலகு உய்ய
நின்றானை அன்று பேய்ச்சி

விடம் பருகு வித்தகனை கன்று மேய்த்து விளையாட வல்லானை
வரை மீ கானில்

தடம் பருகு கரு முகிலை தஞ்சை கோயில் தவ நெறிக்கு ஓர்
பெரு நெறியை வையம் காக்கும்

கடும் பரி மேல் கற்கியை நான் கண்டுகொண்டேன் கடி பொழில்
சூழ் கடல்மல்லை தலசயனத்தே

#1091

பேய் தாயை முலை உண்ட பிள்ளை-தன்னை பிணை மருப்பின்
கரும் களிற்றை பிணை மான் நோக்கின்

ஆய் தாயர் தயிர் வெண்ணெய் அமர்ந்த கோவை அந்தணர் தம்
அமுதத்தை குரவை முன்னே

கோத்தானை குடம் ஆடு கூத்தன்-தன்னை கோகுலங்கள் தளராமல் குன்றம் ஏந்தி

காத்தானை எம்மானை கண்டுகொண்டேன் கடி பொழில் சூழ் கடல்மல்லை தலசயனத்தே

#1092

பாய்ந்தானை திரி சகடம் பாறி வீழ பாலகனாய் ஆலிலையில் பள்ளி இன்பம்

ஏய்ந்தானை இலங்கு ஒளி சேர் மணி குன்று அன்ன ஈரிரண்டு மால் வரை தோள் எம்மான்-தன்னை

தோய்ந்தானை நில மகள் தோள் தூதில் சென்று அ பொய் அறைவாய் புக பெய்த மல்லர் மங்க

காய்ந்தானை எம்மானை கண்டுகொண்டேன் கடி பொழில் சூழ் கடல்மல்லை தலசயனத்தே

#1093

கிடந்தானை தடம் கடலுள் பணங்கள் மேவி கிளர் பொறிய மறி திரிய அதனின் பின்னே

படர்ந்தானை படு மதத்த களிற்றின் கொம்பு பறித்தானை பார் இடத்தை எயிறு கீற

இடந்தானை வளை மருப்பின் ஏனம் ஆகி இரு நிலனும் பெரு விசும்பும் எய்தா வண்ணம்

கடந்தானை எம்மானை கண்டுகொண்டேன் கடி பொழில் சூழ் கடல்மல்லை தலசயனத்தே

#1094

பேணாத வலி அரக்கர் மெலிய அன்று பெரு வரை தோள் இற நெரித்து அன்று அவுணர் கோனை

பூண் ஆகம் பிளவு எடுத்த போர் வல்லோனை பொரு கடலுள் துயில் அமர்ந்த புள் ஊர்தியை

ஊண் ஆக பேய் முலை நஞ்சு உண்டான் தன்னை உள்ளுவார் உள்ளத்தே உறைகின்றானை

காணாது திரிதருவேன் கண்டுகொண்டேன் கடி பொழில் சூழ் கடல்மல்லை தலசயனத்தே

#1095

பெண் ஆகி இன் அமுதம் வஞ்சித்தானை பிறை எயிற்று அன்று அடல் அரியாய் பெருகினானை

தண் ஆர்ந்த வார் புனல் சூழ் மெய்யம் என்னும் தட வரை மேல் கிடந்தானை பணங்கள் மேவி

எண்ணானை எண் இறந்த புகழினானை இலங்கு ஒளி சேர் அரவிந்தம் போன்று நீண்ட

கண்ணானை கண் ஆர கண்டுகொண்டேன் கடி பொழில் சூழ் கடல்மல்லை தலசயனத்தே

#1096

தொண்டு ஆயார் தாம் பரவும் அடியினானை படி கடந்த தாளாளற்கு ஆளாய் உய்தல்

விண்டானை தென் இலங்கை அரக்கர் வேந்தை விலங்கு உண்ண வலம் கைவாய் சரங்கள் ஆண்டு

பண்டு ஆய வேதங்கள் நான்கும் ஐந்து வேள்விகளும் கேள்வியோடு அங்கம் ஆறும்

கண்டானை தொண்டனேன் கண்டுகொண்டேன் கடி பொழில் சூழ் கடல்மல்லை தலசயனத்தே

#1097

பட நாகத்து அணை கிடந்து அன்று அவுணர் கோனை பட வெகுண்டு மருது இடை போய் பழன வேலி

தடம் ஆர்ந்த கடல்மல்லை தலசயனத்து தாமரை-கண் துயில் அமர்ந்த தலைவன்-தன்னை

கடம் ஆரும் கரும் களிறு வல்லான் வெல் போர் கலிகன்றி ஒலிசெய்த இன்ப பாடல்

திடம் ஆக இவை ஐந்தும் ஐந்தும் வல்லார் தீவினையை முதல் அரிய வல்லார் தாமே

#1098

நண்ணாத வாள் அவுணர் இடை புக்கு வானவரை

பெண் ஆகி அமுது ஊட்டும் பெருமானார் மருவினிய

தண் ஆர்ந்த கடல்மல்லை தலசயனத்து உறைவாரை

எண்ணாதே இருப்பாரை இறைப்பொழுதும் எண்ணோமே

#1099

பார் வண்ண மட மங்கை பனி நல் மா மலர் கிழத்தி

நீர் வண்ணன் மார்வத்தில் இருக்கையை முன் நினைந்து அவன் ஊர்

கார் வண்ண முது முந்நீர் கடல்மல்லை தலசயனம்

ஆர் எண்ணும் நெஞ்சு உடையார் அவர் எம்மை ஆள்வாரே

#1100

ஏனத்தின் உருவு ஆகி நில மங்கை எழில் கொண்டான்

வானத்தில் அவர் முறையால் மகிழ்ந்து ஏத்தி வலம் கொள்ள

கானத்தின் கடல்மல்லை தலசயனத்து உறைகின்ற

ஞானத்தின் ஒளி உருவை நினைவார் என் நாயகரே

#1101

விண்டாரை வென்று ஆவி விலங்கு உண்ண மெல் இயலார்

கொண்டாடும் மல் அகலம் அழல் ஏற வெம் சமத்து

கண்டாரை கடல்மல்லை தலசயனத்து உறைவாரை

கொண்டாடும் நெஞ்சு உடையார் அவர் எங்கள் குலதெய்வமே

#1102

பிச்ச சிறு பீலி சமண் குண்டர் முதலாயோர்

விச்சைக்கு இறை என்னும் அ இறையை பணியாதே

கச்சி கிடந்தவன் ஊர் கடல்மல்லை தலசயனம்

நச்சி தொழுவாரை நச்சு என்தன் நல் நெஞ்சே

#1103

புலன் கொள் நிதி குவையோடு புழை கை மா களிற்று இனமும்

நலம் கொள் நவமணி குவையும் சுமந்து எங்கும் நான்று ஒசிந்து

கலங்கள் இயங்கும் மல்லை கடல்மல்லை தலசயனம்

வலங்கொள் மனத்தார் அவரை வலங்கொள் என் மட நெஞ்சே

#1104

பஞ்சி சிறு கூழை உரு ஆகி மருவாத

வஞ்ச பெண் நஞ்சு உண்ட அண்ணல் முன் நண்ணா

கஞ்சை கடந்தவன் ஊர் கடல்மல்லை தலசயனம்

நெஞ்சில் தொழுவாரை தொழுவாய் என் தூய் நெஞ்சே

#1105

செழு நீர் மலர் கமலம் திரை உந்து வன் பகட்டால்

உழும் நீர் வயல் உழவர் உழ பின் முன் பிழைத்து எழுந்த

கழு நீர் கடி கமழும் கடல்மல்லை தலசயனம்

தொழும் நீர் மனத்தவரை தொழுவாய் என் தூய் நெஞ்சே

#1106

பிணங்கள் இடு காடு-அதனுள் நடம் ஆடு பிஞ்ஞகனோடு

இணங்கு திருச்சக்கரத்து எம் பெருமானார்க்கு இடம் விசும்பில்

கணங்கள் இயங்கும் மல்லை கடல்மல்லை தலசயனம்

வணங்கும் மனத்தார் அவரை வணங்கு என்தன் மட நெஞ்சே

#1107

கடி கமழும் நெடு மறுகின் கடல்மல்லை தலசயனத்து

அடிகள் அடியே நினையும் அடியவர்கள்-தம் அடியான்

வடி கொள் நெடு வேல் வலவன் கலிகன்றி ஒலி வல்லார்

முடி கொள் நெடு மன்னவர் தம் முதல்வர் ஆவாரே

#1108

திவளும் வெண் மதி போல் திருமுகத்து அரிவை செழும் கடல் அமுதினில் பிறந்த

அவளும் நின் ஆகத்து இருப்பதும் அறிந்தும் ஆகிலும் ஆசை விடாளால்

குவளை அம் கண்ணி கொல்லி அம் பாவை சொல்லு நின் தாள் நயந்திருந்த

இவளை உன் மனத்தால் என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1109

துளம் படு முறுவல் தோழியர்க்கு அருளாள் துணை முலை சாந்து கொண்டு அணியாள்

குளம் படு குவளை கண் இணை எழுதாள் கோல நல் மலர் குழற்கு அணியாள்

வளம் படு முந்நீர் வையம் முன் அளந்த மால் என்னும் மால் இன மொழியாள்

இளம் படி இவளுக்கு என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1110

சாந்தமும் பூணும் சந்தன குழம்பும் தட முலைக்கு அணியிலும் தழல் ஆம்

போந்த வெண் திங்கள் கதிர் சுட மெலியும் பொரு கடல் புலம்பிலும் புலம்பும்

மாம் தளிர் மேனி வண்ணமும் பொன் ஆம் வளைகளும் இறை நில்லா என்தன்

ஏந்து இழை இவளுக்கு என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1111

ஊழியின் பெரிதால் நாழிகை என்னும் ஒண் சுடர் துயின்றதால் என்னும்

ஆழியும் புலம்பும் அன்றிலும் உறங்கா தென்றலும் தீயினில் கொடிது ஆம்

தோழி ஓ என்னும் துணை முலை அரக்கும் சொல்லு-மின் என் செய்கேன் என்னும்

ஏழை என் பொன்னுக்கு என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1112

ஓதிலும் உன் பேர் அன்றி மற்று ஓதாள் உருகும் நின் திருவுரு நினைந்து

காதன்மை பெரிது கையறவு உடையள் கயல் நெடும் கண் துயில் மறந்தாள்

பேதையேன் பேதை பிள்ளைமை பெரிது தெள்ளியள் வள்ளி நுண் மருங்குல்

ஏதலர் முன்னா என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1113

தன் குடிக்கு ஏதும் தக்கவா நினையாள் தடம் கடல் நுடங்கு எயில் இலங்கை

வன் குடி மடங்க வாள் அமர் தொலைத்த வார்த்தை கேட்டு இன்புறும் மயங்கும்

மின் கொடி மருங்குல் சுருங்க மேல் நெருங்கி மென் முலை பொன் பயந்திருந்த

என் கொடி இவளுக்கு என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1114

உளம் கனிந்து இருக்கும் உன்னையே பிதற்றும் உனக்கு அன்றி எனக்கு அன்பு ஒன்று இலளால்

வளம் கனி பொழில் சூழ் மாலிருஞ்சோலை மாயனே என்று வாய் வெருவும்

களங்கனி முறுவல் காரிகை பெரிது கவலையோடு அவலம் சேர்ந்திருந்த

இளம் கனி இவளுக்கு என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1115

அலம் கெழு தடக்கை ஆயன் வாய் ஆம்பற்கு அழியுமால் என் உள்ளம் என்னும்

புலம் கெழு பொரு நீர் புட்குழி பாடும் போதுமோ நீர்மலைக்கு என்னும்

குலம் கெழு கொல்லி கோமளவல்லி கொடி இடை நெடு மழை கண்ணி

இலங்கு எழில் தோளிக்கு என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1116

பொன் குலாம் பயலை பூத்தன மென் தோள் பொரு கயல் கண் துயில் மறந்தாள்

அன்பினால் உன் மேல் ஆதரம் பெரிது இ அணங்கினுக்கு உற்ற நோய் அறியேன்

மின் குலாம் மருங்குல் சுருங்க மேல் நெருங்கி வீங்கிய வன முலையாளுக்கு

என்-கொல் ஆம் குறிப்பில் என் நினைந்து இருந்தாய் இடவெந்தை எந்தை பிரானே

#1117

அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆய எம் மாயனே அருளாய்

என்னும் இன் தொண்டர்க்கு இன் அருள் புரியும் இடவெந்தை எந்தை பிரானை

மன்னு மா மாட மங்கையர் தலைவன் மானவேல் கலியன் வாய் ஒலிகள்

பன்னிய பனுவல் பாடுவார் நாளும் பழவினை பற்று அறுப்பாரே

#1118

திரிபுரம் மூன்று எரித்தானும் மற்றை மலர் மிசை மேல் அயனும் வியப்ப

முரி திரை மா கடல் போல் முழங்கி மூ உலகும் முறையால் வணங்க

எரி அன கேசர வாள் எயிற்றோடு இரணியன் ஆகம் இரண்டு கூறா

அரி உரு ஆம் இவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தேன் என்றாரே

#1119

வெம் திறல் வீரரில் வீரர் ஒப்பார் வேதம் உரைத்து இமையோர் வணங்கும்

செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர் இவர்-கொல் தெரிக்கமாட்டேன்

வந்து குறள் உருவாய் நிமிர்ந்து மாவலி வேள்வியில் மண் அளந்த

அந்தணர் போன்றிவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தேன் என்றாரே

#1120

செம்பொன் இலங்கு வலங்கை வாளி திண் சிலை தண்டொடு சங்கம் ஒள் வாள்

உம்பர் இரு சுடர் ஆழியோடு கேடகம் ஒண் மலர் பற்றி எற்றே

வெம்பு சினத்து அடல் வேழம் வீழ வெண் மருப்பு ஒன்று பறித்து இருண்ட

அம்புதம் போன்றிவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தேன் என்றாரே

#1121

மஞ்சு உயர் மா மணி குன்றம் ஏந்தி மா மழை காத்து ஒரு மாய ஆனை

அஞ்ச அதன் மருப்பு ஒன்று வாங்கும் ஆயர்-கொல் மாயம் அறியமாட்டேன்

வெம் சுடர் ஆழியும் சங்கும் ஏந்தி வேதம் முன் ஓதுவர் நீதி வானத்து

அம் சுடர் போன்றிவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தேன் என்றாரே

#1122

கலைகளும் வேதமும் நீதி நூலும் கற்பமும் சொல் பொருள் தானும் மற்றை

நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினால் அருள்செய்து நீண்ட

மலைகளும் மா மணியும் மலர் மேல் மங்கையும் சங்கமும் தங்குகின்ற

அலை கடல் போன்று இவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தேன் என்றாரே

#1123

எங்ஙனும் நாம் இவர் வண்ணம் எண்ணில் ஏதும் அறிகிலம் ஏந்து இழையார்

சங்கும் மனமும் நிறையும் எல்லாம் தம்மன ஆக புகுந்து தாமும்

பொங்கு கரும் கடல் பூவை காயா போது அவிழ் நீலம் புனைந்த மேகம்

அங்ஙனம் போன்றிவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தேன் என்றாரே

#1124

முழுசி வண்டு ஆடிய தண் துழாயின் மொய் மலர் கண்ணியும் மேனி அம் சாந்து

இழுசிய கோலம் இருந்தவாறும் எங்ஙனம் சொல்லுகேன் ஓவி நல்லார்

எழுதிய தாமரை அன்ன கண்ணும் ஏந்து எழில் ஆகமும் தோளும் வாயும்

அழகியதாம் இவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தேன் என்றாரே

#1125

மேவி எப்பாலும் விண்ணோர் வணங்க வேதம் உரைப்பர் முந்நீர் மடந்தை

தேவி அப்பால் அதிர் சங்கம் இப்பால் சக்கரம் மற்று இவர் வண்ணம் எண்ணில்

காவி ஒப்பார் கடலேயும் ஒப்பார் கண்ணும் வடிவும் நெடியராய் என்

ஆவி ஒப்பார் இவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தே என்றாரே

#1126

தஞ்சம் இவர்க்கு என் வளையும் நில்லா நெஞ்சமும் தம்மதே சிந்தித்தேற்கு

வஞ்சி மருங்குல் நெருங்க நோக்கி வாய் திறந்து ஒன்று பணித்தது உண்டு

நஞ்சம் உடைத்து இவர் நோக்கும் நோக்கம் நான் இவர் தம்மை அறியமாட்டேன்

அஞ்சுவன் மற்று இவர் ஆர்-கொல் என்ன அட்டபுயகரத்தேன் என்றாரே

#1127

மன்னவன் தொண்டையர் கோன் வணங்கும் நீள் முடி மாலை வயிரமேகன்

தன் வலி தன் புகழ் சூழ்ந்த கச்சி அட்டபுயகரத்து ஆதி-தன்னை

கன்னி நல் மா மதிள் மங்கை வேந்தன் காமரு சீர் கலிகன்றி குன்றா

இன் இசையால் சொன்ன செம் சொல் மாலை ஏத்த வல்லார்க்கு இடம் வைகுந்தமே

#1128

சொல்லு வன் சொல் பொருள் தான் அவையாய் சுவை ஊறு ஒலி நாற்றமும் தோற்றமுமாய்

நல் அரன் நாரணன் நான்முகனுக்கு இடம் தான் தடம் சூழ்ந்து அழகாய கச்சி

பல்லவன் வில்லவன் என்று உலகில் பலராய் பல வேந்தர் வணங்கு கழல்

பல்லவன் மல்லையர் கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1129

கார் மன்னு நீள் விசும்பும் கடலும் சுடரும் நிலனும் மலையும் தன் உந்தி

தார் மன்னு தாமரை கண்ணன் இடம் தடம் மா மதிள் சூழ்ந்து அழகாய கச்சி

தேர் மன்னு தென்னவனை முனையில் செருவில் திறல் வாட்டிய திண் சிலையோன்

பார் மன்னு பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1130

உரம் தரு மெல் அணை பள்ளி கொண்டான் ஒருகால் முன்னம் மா உருவாய் கடலுள்

வரம் தரு மா மணி வண்ணன் இடம் மணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி

நிரந்தவர் மண்ணையில் புண் நுகர் வேல் நெடு வாயில் உக செருவில் முன நாள்

பரந்தவன் பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1131

அண்டமும் எண் திசையும் நிலனும் அலை நீரொடு வான் எரி கால் முதலா

உண்டவன் எந்தை பிரானது இடம் ஒளி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி

விண்டவர் இண்டை குழாமுடனே விரைந்தார் இரிய செருவில் முனிந்து

பண்டு ஒருகால் வளைத்தான் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1132

தூம்பு உடை திண் கை வன் தாள் களிற்றின் துயர் தீர்த்து அரவம் வெருவ முன நாள்

பூம் புனல் பொய்கை புக்கான் அவனுக்கு இடம் தான் தடம் சூழ்ந்து அழகாய கச்சி

தேம் பொழில் குன்று எயில் தென்னவனை திசைப்ப செரு மேல் வியந்து அன்று சென்ற

பாம்பு உடை பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1133

திண் படை கோளரியின் உருவாய் திறலோன் அகலம் செருவில் முன நாள்

புண் பட போழ்ந்த பிரானது இடம் பொரு மாடங்கள் சூழ்ந்து அழகு ஆய கச்சி

வெண்குடை நீழல் செங்கோல் நடப்ப விடை வெல் கொடி வேல் படை முன் உயர்த்த

பண்பு உடை பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1134

இலகிய நீள் முடி மாவலி தன் பெரு வேள்வியில் மாண் உருவாய் முன நாள்

சலமொடு மாநிலம் கொண்டவனுக்கு இடம் தான் தடம் சூழ்ந்து அழகாய கச்சி

உலகு உடை மன்னவன் தென்னவனை கன்னி மா மதிள் சூழ் கருவூர் வெருவ

பல படை சாய வென்றான் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1135

குடை திறல் மன்னவனாய் ஒருகால் குரங்கை படையா மலையால் கடலை

அடைத்தவன் எந்தை பிரானது இடம் அணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி

விடை திறல் வில்லவன் நென்மெலியில் வெருவ செரு வேல் வலம் கை பிடித்த

படை திறல் பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1136

பிறை உடை வாள் நுதல் பின்னை திறத்து முன்னே ஒருகால் செருவில் உருமின்

மறை உடை மால் விடை ஏழ் அடர்த்தாற்கு இடம் தான் தடம் சூழ்ந்து அழகாய கச்சி

கறை உடை வாள் மற மன்னர் கெட கடல் போல முழங்கும் குரல் கடுவாய்

பறை உடை பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகரம் அதுவே

#1137

பார் மன்னு தொல் புகழ் பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுரவிண்ணகர் மேல்

கார் மன்னு நீள் வயல் மங்கையர்-தம் தலைவன் கலிகன்றி குன்றாது உரைத்த

சீர் மன்னு செந்தமிழ் மாலை வல்லார் திரு மா மகள் தன் அருளால் உலகில்

தேர் மன்னராய் ஒலி மா கடல் சூழ் செழு நீர் உலகு ஆண்டு திகழ்வர்களே

#1138

மஞ்சு ஆடு வரை ஏழும் கடல்கள் ஏழும் வானகமும் மண்ணகமும் மற்றும் எல்லாம்

எஞ்சாமல் வயிற்று அடக்கி ஆலின் மேல் ஓர் இளம் தளிரில் கண்வளர்ந்த ஈசன்-தன்னை

துஞ்சா நீர் வளம் சுரக்கும் பெண்ணை தென்-பால் தூய நான்மறையாளர் சோமு செய்ய

செஞ்சாலி விளை வயலுள் திகழ்ந்து தோன்றும் திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1139

கொந்து அலர்ந்த நறும் துழாய் சாந்தம் தூபம் தீபம் கொண்டு அமரர் தொழ பணம் கொள் பாம்பில்

சந்து அணி மென் முலை மலராள் தரணி மங்கை தாம் இருவர் அடி வருடும் தன்மையானை

வந்தனை செய்து இசை ஏழ் ஆறு அங்கம் ஐந்து வளர் வேள்வி நான்மறைகள் மூன்று தீயும்

சிந்தனை செய்து இரு பொழுதும் ஒன்றும் செல்வ திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1140

கொழுந்து அலரும் மலர் சோலை குழாம்கொள் பொய்கை கோள் முதலை வாள் எயிற்று கொண்டற்கு எள்கி

அழுந்திய மா களிற்றினுக்கு அன்று ஆழி ஏந்தி அந்தரமே வர தோன்றி அருள்செய்தானை

எழுந்த மலர் கரு நீலம் இருந்தில் காட்ட இரும் புன்னை முத்து அரும்பி செம்பொன் காட்ட

செழும் தட நீர் கமலம் தீவிகை போல் காட்டும் திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1141

தாங்கு அரும் போர் மாலி பட பறவை ஊர்ந்து தராதலத்தோர் குறை முடித்த தன்மையானை

ஆங்கு அரும்பி கண் நீர் சோர்ந்து அன்பு கூரும் அடியவர்கட்கு ஆர் அமுதம் ஆனான்-தன்னை

கோங்கு அரும்பு சுரபுன்னை குரவு ஆர் சோலை குழாம் வரி வண்டு இசை பாடும் பாடல் கேட்டு

தீம் கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1142

கறை வளர் வேல் கரன் முதலா கவந்தன் வாலி கணை ஒன்றினால் மடிய இலங்கை-தன்னுள்

பிறை எயிற்று வாள் அரக்கர் சேனை எல்லாம் பெருந்தகையோடு உடன் துணித்த பெம்மான் தன்னை

மறை வளர புகழ் வளர மாடம்-தோறும் மண்டபம் ஒண் தொளி அனைத்தும் வாரம் ஓத

சிறை அணைந்த பொழில் அணைந்த தென்றல் வீசும் திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1143

உறி ஆர்ந்த நறு வெண்ணெய் ஒளியால் சென்று அங்கு உண்டானை கண்டு ஆய்ச்சி உரலோடு ஆர்க்க

தறி ஆர்ந்த கரும் களிறே போல நின்று தடம் கண்கள் பனி மல்கும் தன்மையானை

வெறி ஆர்ந்த மலர் மகள் நா மங்கையோடு வியன் கலை எண் தோளினாள் விளங்கு செல்வ

செறி ஆர்ந்த மணி மாடம் திகழ்ந்து தோன்றும் திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1144

இரும் கை மா கரி முனிந்து பரியை கீறி இன விடைகள் ஏழ் அடர்த்து மருதம் சாய்த்து

வரும் சகடம் இற உதைத்து மல்லை அட்டு வஞ்சம் செய் கஞ்சனுக்கு நஞ்சு ஆனானை

கரும் கமுகு பசும் பாளை வெண் முத்து ஈன்று காய் எல்லாம் மரகதமாய் பவளம் காட்ட

செருந்தி மிக மொட்டு அலர்த்தும் தேன் கொள் சோலை திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1145

பார் ஏறு பெரும் பாரம் தீர பண்டு பாரதத்து தூது இயங்கி பார்த்தன் செல்வ

தேர் ஏறு சாரதியாய் எதிர்ந்தார் சேனை செருக்களத்து திறல் அழிய செற்றான்-தன்னை

போர் ஏறு ஒன்று உடையானும் அளகை கோனும் புரந்தரனும் நான்முகனும் பொருந்தும் ஊர் போல்

சீர் ஏறு மறையாளர் நிறைந்த செல்வ திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1146

தூ வடிவின் பார் மகள் பூ மங்கையோடு சுடர் ஆழி சங்கு இரு-பால் பொலிந்து தோன்ற

காவடிவின் கற்பகமே போல நின்று கலந்தவர்கட்கு அருள்புரியும் கருத்தினானை

சேவடி கை திருவாய் கண் சிவந்த ஆடை செம்பொன் செய் திரு உருவம் ஆனான்-தன்னை

தீ வடிவின் சிவன் அயனே போல்வார் மன்னு திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் நானே

#1147

வாரணம் கொள் இடர் கடிந்த மாலை நீல மரகதத்தை மழை முகிலே போல்வான்-தன்னை

சீர் அணங்கு மறையாளர் நிறைந்த செல்வ திருக்கோவலூர்-அதனுள் கண்டேன் என்று

வார் அணங்கு முலை மடவார் மங்கை வேந்தன் வாள் கலியன் ஒலி ஐந்தும் ஐந்தும் வல்லார

காரணங்களால் உலகம் கலந்து அங்கு ஏத்த கரந்து எங்கும் பரந்தானை காண்பர் தாமே

#1148

இரும் தண் மாநிலம் ஏனம் அதுவாய் வளை மருப்பினில் அகத்து ஒடுக்கி

கரும் தண் மா கடல் கண் துயின்றவன் இடம் கமல நல் மலர் தேறல்

அருந்தி இன் இசை முரன்று எழும் அளி குலம் பொதுளி அம் பொழிலூடே

செருந்தி நாள்மலர் சென்று அணைந்து உழிதரு திருவயிந்திரபுரமே

#1149

மின்னும் ஆழி அங்கை-அவன் செய்யவள் உறை தரு திருமார்பன்

பன்னு நான்மறை பல் பொருள் ஆகிய பரன் இடம் வரை சாரல்

பின்னும் மாதவி பந்தலில் பெடை வர பிணி அவிழ் கமலத்து

தென்ன என்று வண்டு இன் இசை முரல்தரு திருவயிந்திரபுரமே

#1150

வையம் ஏழும் உண்டு ஆலிலை வைகிய மாயவன் அடியவர்க்கு

மெய்யன் ஆகிய தெய்வநாயகன் இடம் மெய்தகு வரை சாரல்

மொய் கொள் மாதவி சண்பகம் முயங்கிய முல்லை அம் கொடி ஆட

செய்ய தாமரை செழும் பணை திகழ்தரு திருவயிந்திரபுரமே

#1151

மாறு கொண்டு உடன்று எதிர்ந்த வல் அவுணன் தன் மார்பு அகம் இரு பிளவா

கூறு கொண்டு அவன் குலமகற்கு இன் அருள் கொடுத்தவன் இடம் மிடைந்து

சாறு கொண்ட மென் கரும்பு இளம் கழை தகை விசும்பு உற மணி நீழல்

சேறு கொண்ட தண் பழனம் அது எழில் திகழ் திருவயிந்திரபுரமே

#1152

ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று அகல் இடம் அளந்து ஆயர்

பூம் கொடிக்கு இன விடை பொருதவன் இடம் பொன் மலர் திகழ் வேங்கை

கோங்கு செண்பக கொம்பினில் குதி கொடு குரக்கினம் இரைத்து ஓடி

தேன் கலந்த தண் பலங்கனி நுகர்தரு திருவயிந்திரபுரமே

#1153

கூன் உலாவிய மடந்தை தன் கொடும் சொலின் திறத்து இளம் கொடியோடும்

கான் உலாவிய கரு முகில் திரு நிறத்தவன் இடம் கவின் ஆரும்

வான் உலாவிய மதி தவழ் மால் வரை மா மதிள் புடை சூழ

தேன் உலாவிய செழும் பொழில் தழுவிய திருவயிந்திரபுரமே

#1154

மின்னின் நுண் இடை மட கொடி காரணம் விலங்கலின் மிசை இலங்கை

மன்னன் நீள் முடி பொடிசெய்த மைந்தனது இடம் மணி வரை நீழல்

அன்னம் மா மலர் அரவிந்தத்து அமளியில் பெடையொடும் இனிது அமர

செந்நெல் ஆர் கவரி குலை வீசு தண் திருவயிந்திரபுரமே

#1155

விரை கமழ்ந்த மென் கரும் குழல் காரணம் வில் இறுத்து அடல் மழைக்கு

நிரை கலங்கிட வரை குடை எடுத்தவன் நிலவிய இடம் தடம் ஆர்

வரை வளம் திகழ் மத கரி மருப்பொடு மலை வளர் அகில் உந்தி

திரை கொணர்ந்து அணை செழு நதி வயல் புகு திருவயிந்திரபுரமே

#1156

வேல் கொள் கை தலத்து அரசர் வெம் போரினில் விசயனுக்காய் மணி தேர்

கோல் கொள் கை தலத்து எந்தை பெம்மான் இடம் குலவு தண் வரை சாரல்

கால் கொள் கண் கொடி கைஎழ கமுகு இளம் பாளைகள் கமழ் சாரல்

சேல்கள் பாய்தரு செழு நதி வயல் புகு திருவயிந்திரபுரமே

#1157

மூவர் ஆகிய ஒருவனை மூ உலகு உண்டு உமிழ்ந்து அளந்தானை

தேவர் தானவர் சென்றுசென்று இறைஞ்ச தண் திருவயிந்திரபுரத்து

மேவு சோதியை வேல் வலவன் கலிகன்றி விரித்து உரைத்த

பாவு தண் தமிழ் பத்து இவை பாடிட பாவங்கள் பயிலாவே

#1158

ஊன் வாட உண்ணாது உயிர் காவல் இட்டு உடலில் பிரியா புலன் ஐந்தும் நொந்து

தாம் வாட வாட தவம் செய்ய வேண்டா தமதா இமையோர் உலகு ஆளகிற்பீர்

கான் ஆட மஞ்ஞை கணம் ஆட மாடே கயல் ஆடு கால் நீர் பழனம் புடைபோய்

தேன் ஆட மாட கொடி ஆடு தில்லை திருச்சித்ரகூடம் சென்று சேர்-மின்களே

#1159

காயோடு நீடு கனி உண்டு வீசு கடும் கால் நுகர்ந்து நெடும் காலம் ஐந்து

தீயோடு நின்று தவம் செய்ய வேண்டா திருமார்பனை சிந்தையுள் வைத்தும் என்பீர்

வாய் ஓது வேதம் மலிகின்ற தொல்சீர் மறையாளர் நாளும் முறையால் வளர்த்த

தீ ஓங்க ஓங்க புகழ் ஓங்கு தில்லை திருச்சித்ரகூடம் சென்று சேர்-மின்களே

#1160

வெம்பும் சினத்து புன கேழல் ஒன்றாய் விரி நீர் முது வெள்ளம் உள்புக்கு அழுந்த

வம்பு உண் பொழில் சூழ் உலகு அன்று எடுத்தான் அடிப்போது அணைவான் விருப்போடு இருப்பீர்

பைம்பொன்னும் முத்தும் மணியும் கொணர்ந்து படை மன்னவன் பல்லவர் கோன் பணிந்த

செம்பொன் மணி மாடங்கள் சூழ்ந்த தில்லை திருச்சித்ரகூடம் சென்று சேர்-மின்களே

#1161

அரு மாநிலம் அன்று அளப்பான் குறளாய் அவுணன் பெரு வேள்வியில் சென்று இரந்த

பெருமான் திருநாமம் பிதற்றி நும்தம் பிறவி துயர் நீங்குதும் என்னகிற்பீர்

கரு மா கடலுள் கிடந்தான் உவந்து கவை நா அரவின் அணை பள்ளியின் மேல்

திருமால் திருமங்கையொடு ஆடு தில்லை திருச்சித்ரகூடம் சென்று சேர்-மின்களே

#1162

கோ மங்க வங்க கடல் வையம் உய்ய குல மன்னர் அங்கம் மழுவில் துணிய

தாம் அங்கு அமருள் படை தொட்ட வென்றி தவ மா முனியை தமக்கு ஆக்ககிற்பீர்

பூ மங்கை தங்கி புல மங்கை மன்னி புகழ் மங்கை எங்கும் திகழ
புகழ் சேர்

சேமம் கொள் பைம் பூம் பொழில் சூழ்ந்த தில்லை
திருச்சித்ரகூடம் சென்று சேர்-மின்களே

#1163

நெய் வாய் அழல் அம்பு துரந்து முந்நீர் துணிய பணிகொண்டு
அணி ஆர்ந்து இலங்கு

மை ஆர் மணி வண்ணனை எண்ணி நும்தம் மனத்தே
இருத்தும்படி வாழ வல்லீர்

அம் வாய் இள மங்கையர் பேசவும் தான் அரு மா மறை அந்தணர்
சிந்தை புக

செ வாய் கிளி நான்மறை பாடு தில்லை திருச்சித்ரகூடம் சென்று
சேர்-மின்களே

#1164

மௌவல் குழல் ஆய்ச்சி மென் தோள் நயந்து மகரம் சுழல சுழல்
நீர் பயந்த

தெய்வ திரு மா மலர் மங்கை தங்கு திருமார்பனை சிந்தையுள்
வைத்தும் என்பீர்

கௌவை களிற்றின் மருப்பும் பொருப்பில் கமழ் சந்தும் உந்தி
நிவா வலம் கொள்

தெய்வ புனல் சூழ்ந்து அழகு ஆய தில்லை திருச்சித்ரகூடம் சென்று சேர்-மின்களே

#1165

மா வாயின் அங்கம் மதியாது கீறி மழை மா முது குன்று எடுத்து ஆயர்-தங்கள்

கோவாய் நிரை மேய்த்து உலகு உண்ட மாயன் குரை மா கழல் கூடும் குறிப்பு உடையீர்

மூவாயிரம் நான்மறையாளர் நாளும் முறையால் வணங்க அணங்காய சோதி

தேவாதிதேவன் திகழ்கின்ற தில்லை திருச்சித்ரகூடம் சென்று சேர்-மின்களே

#1166

செரு நீல வேல் கண் மடவார் திறத்து சினத்தோடு நின்று மனத்தால் வளர்க்கும்

அரு நீல பாவம் அகல புகழ் சேர் அமரர்க்கும் எய்தாத அண்டத்து இருப்பீர்

பெரு நீர் நிவா உந்தி முத்தம் கொணர்ந்து எங்கும் வித்தும் வயலுள் கயல் பாய்ந்து உகள

திரு நீலம் நின்று திகழ்கின்ற தில்லை திருச்சித்ரகூடம் சென்று சேர்-மின்களே

#1167

சீர் ஆர் பொழில் சூழ்ந்து அழகாய தில்லை திருச்சித்ரகூடத்து உறை செங்கண்மாலுக்கு

ஆராத உள்ளத்தவர் கேட்டு உவப்ப அலை நீர் உலகுக்கு அருளே புரியும்

கார் ஆர் புயல் கை கலிகன்றி குன்றா ஒலி மாலை ஓர் ஒன்பதோடு ஒன்றும் வல்லார்

பார் ஆர் உலகம் அளந்தான் அடி கீழ் பல காலம் நிற்கும்படி வாழ்வர் தாமே

#1168

வாட மருது இடை போகி மல்லரை கொன்று ஒக்கலித்திட்டு

ஆடல் நல் மா உடைத்து ஆயர் ஆநிரைக்கு அன்று இடர் தீர்ப்பான்

கூடிய மா மழை காத்த கூத்தன் என வருகின்றான்

சேடு உயர் பூம் பொழில் தில்லை சித்திரகூடத்து உள்ளானே

#1169

பேய் மகள் கொங்கை நஞ்சு உண்ட பிள்ளை பரிசு இது என்றால்

மாநில மா மகள் மாதர் கேள்வன் இவன் என்றும் வண்டு உண்

பூ மகள் நாயகன் என்றும் புலன் கெழு கோவியர் பாடி

தே மலர் தூவ வருவான் சித்திரகூடத்து உள்ளானே

#1170

பண்டு இவன் வெண்ணெய் உண்டான் என்று ஆய்ச்சியர் கூடி இழிப்ப

எண் திசையோரும் வணங்க இணை மருது ஊடு நடந்திட்டு

அண்டரும் வானத்தவரும் ஆயிரம் நாமங்களோடு

திண் திறல் பாட வருவான் சித்திரகூடத்து உள்ளானே

#1171

வளை கை நெடும் கண் மடவார் ஆய்ச்சியர் அஞ்சி அழைப்ப

தளைத்து அவிழ் தாமரை பொய்கை தண் தடம் புக்கு அண்டர் காண

முளைத்த எயிற்று அழல் நாகத்து உச்சியில் நின்று அது வாட

திளைத்து அமர் செய்து வருவான் சித்திரகூடத்து உள்ளானே

#1172

பருவ கரு முகில் ஒத்து முத்து உடை மா கடல் ஒத்து

அருவி திரள் திகழ்கின்ற ஆயிரம் பொன் மலை ஒத்து

உருவ கரும் குழல் ஆய்ச்சி திறத்து இன மால் விடை செற்று

தெருவில் திளைத்து வருவான் சித்திரகூடத்து உள்ளானே

#1173

எய்ய சிதைந்தது இலங்கை மலங்க வரு மழை காப்பான்

உய்ய பரு வரை தாங்கி ஆநிரை காத்தான் என்று ஏத்தி

வையத்து எவரும் வணங்க அணங்கு எழு மா மலை போல

தெய்வ புள் ஏறி வருவான் சித்திரகூடத்து உள்ளானே

#1174

ஆவர் இவை செய்து அறிவார் அஞ்சன மா மலை போல

மேவு சினத்து அடல் வேழம் வீழ முனிந்து அழகாய

காவி மலர் நெடும் கண்ணார் கைதொழ வீதி வருவான்

தேவர் வணங்கு தண் தில்லை சித்திரகூடத்து உள்ளானே

#1175

பொங்கி அமரில் ஒருகால் பொன் பெயரோனை வெருவ

அங்கு அவன் ஆகம் அளைந்திட்டு ஆயிரம் தோள் எழுந்து ஆட

பைம் கண் இரண்டு எரி கான்ற நீண்ட எயிற்றொடு பேழ் வாய்

சிங்க உருவின் வருவான் சித்திரகூடத்து உள்ளானே

#1176

கரு முகில் போல்வது ஓர் மேனி கையன ஆழியும் சங்கும்

பெரு விறல் வானவர் சூழ ஏழ் உலகும் தொழுது ஏத்த

ஒரு மகள் ஆயர் மடந்தை ஒருத்தி நில மகள் மற்றை

திருமகளோடும் வருவான் சித்திரகூடத்து உள்ளானே

#1177

தேன் அமர் பூம் பொழில் தில்லை சித்திரகூடம் அமர்ந்த

வானவர்-தங்கள் பிரானை மங்கையர் கோன் மருவார்

ஊன் அமர் வேல் கலிகன்றி ஒண் தமிழ் ஒன்பதோடு ஒன்றும்

தான் இவை கற்று வல்லார் மேல் சாரா தீவினை தானே

#1178

ஒரு குறளாய் இரு நிலம் மூவடி மண் வேண்டி உலகு அனைத்தும் ஈர் அடியால் ஒடுக்கி ஒன்றும்

தருக எனா மாவலியை சிறையில் வைத்த தாடாளன் தாள் அணைவீர் தக்க கீர்த்தி

அரு மறையின் திரள் நான்கும் வேள்வி ஐந்தும் அங்கங்கள் அவை ஆறும் இசைகள் ஏழும்

தெருவில் மலி விழா வளமும் சிறக்கும் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1179

நான்முகன் நாள் மிகை தருக்கை இருக்கு வாய்மை நலம் மிகு சீர் உரோமசனால் நவிற்றி நக்கன்

ஊன் முகம் ஆர் தலை ஓட்டு ஊண் ஒழித்த எந்தை ஒளி மலர் சேவடி அணைவீர் உழு சே ஓட

சூல் முகம் ஆர் வளை அளைவாய் உகுத்த முத்தை தொல் குருகு சினை என சூழ்ந்து இயங்க எங்கும்

தேன் முகம் ஆர் கமல வயல் சேல் பாய் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1180

வை அணைந்த நுதி கோட்டு வராகம் ஒன்றாய் மண் எல்லாம் இடந்து எடுத்து மதங்கள் செய்து

நெய் அணைந்த திகிரியினால் வாணன் திண் தோள் நேர்த்தவன் தாள் அணைகிற்பீர் நெய்தலோடு

மை அணைந்த குவளைகள் தம் கண்கள் என்றும் மலர் குமுதம் வாய் என்றும் கடைசிமார்கள்

செய் அணைந்து களை களையாது ஏறும் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1181

பஞ்சிய மெல் அடி பின்னை திறத்து முன் நாள் பாய் விடைகள் ஏழ் அடர்த்து பொன்னன் பைம் பூண்

நெஞ்சு இடந்து குருதி உக உகிர் வேல் ஆண்ட நின்மலன் தாள் அணைகிற்பீர் நீலம் மாலை

தஞ்சு உடைய இருள் தழைப்ப தரளம் ஆங்கே தண் மதியின் நிலா காட்ட பவளம்-தன்னால்

செம் சுடர் வெயில் விரிக்கும் அழகு ஆர் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1182

தெவ் ஆய மற மன்னர் குருதி கொண்டு திருக்குலத்தில் இறந்தோர்க்கு திருத்திசெய்து

வெவ் வாய மா கீண்டு வேழம் அட்ட விண்ணவர் கோன் தாள் அணைவீர் விகிர்த மாதர்

அ ஆய வாள் நெடும் கண் குவளை காட்ட அரவிந்தம் முகம் காட்ட அருகே ஆம்பல்

செ வாயின் திரள் காட்டும் வயல் சூழ் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1183

பைம் கண் விறல் செம் முகத்து வாலி மாள படர் வனத்து கவந்தனொடும் படை ஆர் திண் கை

வெம் கண் விறல் விராதன் உக வில் குனித்த விண்ணவர் கோன் தாள் அணைவீர் வெற்பு போலும்

துங்க முக மாளிகை மேல் ஆயம் கூறும் துடி இடையார் முக கமல சோதி-தன்னால்

திங்கள் முகம் பனி படைக்கும் அழகு ஆர் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1184

பொரு இல் வலம் புரி அரக்கன் முடிகள் பத்தும் புற்று மறிந்தன போல புவி மேல் சிந்த

செருவில் வலம் புரி சிலை கை மலை தோள் வேந்தன் திருவடி சேர்ந்து உய்கிற்பீர் திரை நீர் தெள்கி

மருவி வலம்புரி கைதை கழி ஊடு ஆடி வயல் நண்ணி மழை தரு நீர் தவழ் கால் மன்னி

தெருவில் வலம்புரி தரளம் ஈனும் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1185

பட்டு அரவு ஏர் அகல் அல்குல் பவள செ வாய் பணை நெடும் தோள் பிணை நெடும் கண் பால் ஆம் இன் சொல்

மட்டு அவிழும் குழலிக்கா வானோர் காவின் மரம் கொணர்ந்தான் அடி அணைவீர் அணில்கள் தாவ

நெட்டு இலைய கரும் கமுகின் செம் காய் வீழ நீள் பலவின் தாழ் சினையில் நெருங்கு பீன

தெட்ட பழம் சிதைந்து மது சொரியும் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1186

பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து பிரமனை தன் உந்தியிலே தோற்றுவித்து

கறை தங்கு வேல் தடம் கண் திருவை மார்பில் கலந்தவன் தாள் அணைகிற்பீர் கழுநீர் கூடி

துறை தங்கு கமலத்து துயின்று கைதை தோடு ஆரும் பொதி சோற்று சுண்ணம் நண்ணி

சிறை வண்டு களி பாடும் வயல் சூழ் காழி சீராமவிண்ணகரே சேர்-மின் நீரே

#1187

செங்கமலத்து அயன் அனைய மறையோர் காழி சீராமவிண்ணகர் என் செங்கண்மாலை

அம் கமல தட வயல் சூழ் ஆலி நாடன் அருள் மாரி அரட்டு அமுக்கி அடையார் சீயம்

கொங்கு மலர் குழலியர் வேள் மங்கை வேந்தன் கொற்ற வேல் பரகாலன் கலியன் சொன்ன

சங்க முக தமிழ் மாலை பத்தும் வல்லார் தடம் கடல் சூழ் உலகுக்கு தலைவர் தாமே

#1188

வந்து உனது அடியேன் மனம் புகுந்தாய் புகுந்ததன் பின் வணங்கும் என்

சிந்தனைக்கு இனியாய் திருவே என் ஆருயிரே

அம் தளிர் அணி ஆர் அசோகின் இளம் தளிர்கள் கலந்து அவை எங்கும்

செம் தழல் புரையும் திருவாலி அம்மானே

#1189

நீல தட வரை மா மணி நிகழ கிடந்தது போல் அரவு அணை

வேலைத்தலை கிடந்தாய் அடியேன் மனத்து இருந்தாய்

சோலைத்தலை கண மா மயில் நடம் ஆட மழை முகில் போன்று எழுந்து எங்கும்

ஆலை புகை கமழும் அணி ஆலி அம்மானே

#1190

நென்னல் போய் வரும் என்றுஎன்று எண்ணி இராமை என் மனத்தே புகுந்தது

இம்மைக்கு என்று இருந்தேன் எறி நீர் வளம் செறுவில்

செந்நெல் கூழை வரம்பு ஒரீஇ அரிவார் முகத்து எழு வாளை
போய் கரும்பு

அ நல் நாடு அணையும் அணி ஆலி அம்மானே

#1191

மின்னின் மன்னும் நுடங்கு இடை மடவார் தம் சிந்தை மறந்து
வந்து நின்

மன்னு சேவடிக்கே மறவாமை வைத்தாயால்

புன்னை மன்னு செருந்தி வண் பொழில் வாய் அகன் பணைகள்
கலந்து எங்கும்

அன்னம் மன்னும் வயல் அணி ஆலி அம்மானே

#1192

நீடு பல் மலர் மாலை இட்டு நின் இணை அடி தொழுது ஏத்தும்
என் மனம்

வாட நீ நினையேல் மரம் எய்த மா முனிவா

பாடல் இன் ஒலி சங்கின் ஓசை பரந்து பல் பணையால் மலிந்து
எங்கும்

ஆடல் ஓசை அறா அணி ஆலி அம்மானே

#1193

கந்த மா மலர் எட்டும் இட்டு நின் காமர் சேவடி கைதொழுது எழும்

புந்தியேன் மனத்தே புகுந்தாயை போகல் ஒட்டேன்

சந்தி வேள்வி சடங்கு நான்மறை ஓதி ஓதுவித்து ஆதியாய் வரும்

அந்தணாளர் அறா அணி ஆலி அம்மானே

#1194

உலவு திரை கடல் பள்ளிகொண்டு வந்து உன் அடியேன் மனம் புகுந்த அ

புலவ புண்ணியனே புகுந்தாயை போகல் ஒட்டேன்

நிலவு மலர் புன்னை நாழல் நீழல் தண் தாமரை மலரின் மிசை மலி

அலவன் கண்படுக்கும் அணி ஆலி அம்மானே

#1195

சங்கு தங்கு தடம் கடல் கடல் மல்லையுள் கிடந்தாய் அருள்புரிந்து

இங்கு என்னுள் புகுந்தாய் இனி போயினால் அறையோ

கொங்கு செண்பகம் மல்லிகை மலர் புல்கி இன் இள வண்டு போய் இளம்

தெங்கின் தாது அளையும் திருவாலி அம்மானே

#1196

ஓதி ஆயிரம் நாமமும் பணிந்து ஏத்தி நின் அடைந்தேற்கு ஒரு பொருள்

வேதியா அரையா உரையாய் ஒரு மாற்றம் எந்தாய்

நீதி ஆகிய வேத மா முனியாளர் தோற்றம் உரைத்து மற்றவர்க்கு

ஆதியாய் இருந்தாய் அணி ஆலி அம்மானே

#1197

புல்லி வண்டு அறையும் பொழில் புடை சூழ் தென் ஆலி இருந்த மாயனை

கல்லின் மன்னு திண் தோள் கலியன் ஒலிசெய்த

நல்ல இன் இசை மாலை நாலும் ஓர் ஐந்தும் ஒன்றும் நவின்று தாம் உடன்

வல்லராய் உரைப்பார்க்கு இடம் ஆகும் வான் உலகே

#1198

தூ விரிய மலர் உழக்கி துணையோடும் பிரியாதே

பூ விரிய மது நுகரும் பொறி வரிய சிறு வண்டே

தீ விரிய மறை வளர்க்கும் புகழ் ஆளர் திருவாலி

ஏ வரி வெம் சிலையானுக்கு என் நிலைமை உரையாயே

#1199

பிணி அவிழு நறு நீல மலர் கிழிய பெடையோடும்

அணி மலர் மேல் மது நுகரும் அறு கால சிறு வண்டே

மணி கழுநீர் மருங்கு அலரும் வயல் ஆலி மணவாளன்

பணி அறியேன் நீ சென்று என் பயலை நோய் உரையாயே

#1200

நீர் வானம் மண் எரி காலாய் நின்ற நெடுமால்-தன்

தார் ஆய நறும் துளவம் பெறும் தகையேற்கு அருளானே

சீர் ஆரும் வளர் பொழில் சூழ் திருவாலி வயல் வாழும்

கூர் வாய சிறு குருகே குறிப்பு அறிந்து கூறாயே

#1201

தானாக நினையானேல் தன் நினைந்து நைவேற்கு ஓர்

மீன் ஆய கொடி நெடுவேள் வலி செய்ய மெலிவேனோ

தேன் வாய வரி வண்டே திருவாலி நகர் ஆளும்

ஆன் ஆயற்கு என் உறு நோய் அறிய சென்று உரையாயே

#1202

வாள் ஆய கண் பனிப்ப மென் முலைகள் பொன் அரும்ப

நாள் நாளும் நின் நினைந்து நைவேற்கு ஓ மண் அளந்த

தாளாளா தண் குடந்தை நகராளா வரை எடுத்த

தோளாளா என்தனக்கு ஓர் துணையாளன் ஆகாயே

#1203

தார் ஆய தன் துளவம் வண்டு உழுத வரை மார்பன்

போர் ஆனை கொம்பு ஒசித்த புள் பாகன் என் அம்மான்

தேர் ஆரும் நெடு வீதி திருவாலி நகர் ஆளும்

கார் ஆயன் என்னுடைய கன வளையும் கவர்வானோ

#1204

கொண்டு அரவ திரை உலவு குரை கடல் மேல் குலவரை போல்

பண்டு அரவின் அணை கிடந்து பார் அளந்த பண்பாளா

வண்டு அமரும் வளர் பொழில் சூழ் வயல் ஆலி மைந்தா என்

கண் துயில் நீ கொண்டாய்க்கு என் கன வளையும் கடவேனோ

#1205

குயில் ஆலும் வளர் பொழில் சூழ் தண் குடந்தை குடம் ஆடி

துயிலாத கண் இணையேன் நின் நினைந்து துயர்வேனோ

முயல் ஆலும் இள மதிக்கே வளை இழந்தேற்கு இது நடுவே

வயல் ஆலி மணவாளா கொள்வாயோ மணி நிறமே

#1206

நிலை ஆளா நின் வணங்க வேண்டாயே ஆகிலும் என்

முலை ஆள ஒரு நாள் உன் அகலத்தால் ஆளாயே

சிலையாளா மரம் எய்த திறல் ஆளா திருமெய்ய

மலையாளா நீ ஆள வளை ஆள மாட்டோமே

#1207

மை இலங்கு கரும் குவளை மருங்கு அலரும் வயல் ஆலி

நெய் இலங்கு சுடர் ஆழி படையானை நெடுமாலை

கை இலங்கு வேல் கலியன் கண்டு உரைத்த தமிழ் மாலை

ஐ இரண்டும் இவை வல்லார்க்கு அருவினைகள் அடையாவே

#1208

கள்வன்-கொல் யான் அறியேன் கரியான் ஒரு காளை வந்து

வள்ளி மருங்குல் என்தன் மட மானினை போத என்று

வெள்ளி வளை கை பற்ற பெற்ற தாயரை விட்டு அகன்று

அள்ளல் அம் பூம் கழனி அணி ஆலி புகுவர்-கொலோ

#1209

பண்டு இவன் ஆயன் நங்காய் படிறன் புகுந்து என் மகள்-தன்

தொண்டை அம் செம் கனி வாய் நுகர்ந்தானை உகந்து அவன் பின்

கெண்டை ஒண் கண் மிளிர கிளி போல் மிழற்றி நடந்து

வண்டு அமர் கானல் மல்கும் வயல் ஆலி புகுவர்-கொலோ

#1210

அஞ்சுவன் வெம் சொல் நங்காய் அரக்கர் குல பாவை-தன்னை

வெம் சின மூக்கு அரிந்த விறலோன் திறம் கேட்கில் மெய்யே

பஞ்சிய மெல் அடி எம் பணை தோளி பரக்கழிந்து

வஞ்சி அம் தண் பணை சூழ் வயல் ஆலி புகுவர்-கொலோ

#1211

ஏது அவன் தொல் பிறப்பு இளையவன் வளை ஊதி மன்னர்

தூதுவன் ஆயவன் ஊர் சொல்வீர்கள் சொலீர் அறியேன்

மாதவன் தன் துணையா நடந்தாள் தடம் சூழ் புறவில்

போது வண்டு ஆடு செம்மல் புனல் ஆலி புகுவர்-கொலோ

#1212

தாய் எனை என்று இரங்காள் தடம் தோளி தனக்கு அமைந்த

மாயனை மாதவனை மதித்து என்னை அகன்ற இவள்

வேய் அன தோள் விசிறி பெடை அன்னம் என நடந்து

போயின பூம் கொடியாள் புனல் ஆலி புகுவர்-கொலோ

#1213

என் துணை என்று எடுத்தேற்கு இறையேனும் இரங்கிற்றிலள்

தன் துணை ஆய என்தன் தனிமைக்கும் இரங்கிற்றிலள்

வன் துணை வானவர்க்காய் வரம் செற்று அரங்கத்து உறையும்

இன் துணைவனொடும் போய் எழில் ஆலி புகுவர்-கொலோ

#1214

அன்னையும் அத்தனும் என்று அடியோமுக்கு இரங்கிற்றிலள்

பின்னை தன் காதலன் தன் பெரும் தோள் நலம் பேணினளால்

மின்னையும் வஞ்சியையும் வென்று இலங்கும் இடையாள்
நடந்து

புன்னையும் அன்னமும் சூழ் புனல் ஆலி புகுவர்-கொலோ

#1215

முற்றிலும் பைங்கிளியும் பந்தும் ஊசலும் பேசுகின்ற

சிற்றில் மென் பூவையும் விட்டு அகன்ற செழும் கோதை-தன்னை

பெற்றிலேன் முற்று இழையை பிறப்பிலி பின்னே நடந்து

மற்று எல்லாம் கைதொழ போய் வயல் ஆலி புகுவர்-கொலோ

#1216

காவி அம் கண்ணி எண்ணில் கடி மா மலர் பாவை ஒப்பாள்

பாவியேன் பெற்றமையால் பணை தோளி பரக்கழிந்து

தூவி சேர் அன்னம் அன்ன நடையாள் நெடுமாலொடும் போய்

வாவி அம் தண் பணை சூழ் வயல் ஆலி புகுவர்-கொலோ

#1217

தாய் மனம் நின்று இரங்க தனியே நெடுமால் துணையா

போயின பூம் கொடியாள் புனல் ஆலி புகுவர் என்று

காய் சின வேல் கலியன் ஒலிசெய் தமிழ் மாலை பத்தும்

மேவிய நெஞ்சு உடையார் தஞ்சம் ஆவது விண் உலகே

#1218

நந்தா விளக்கே அளத்தற்கு அரியாய் நர நாரணனே கரு மா முகில் போல்

எந்தாய் எமக்கே அருளாய் என நின்று இமையோர் பரவும் இடம் எ திசையும்

கந்தாரம் அம் தேன் இசை பாட மாடே களி வண்டு மிழற்ற நிழல் துதைந்து

மந்தாரம் நின்று மணம் மல்கும் நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கு என் மனனே

#1219

முதலை தனி மா முரண் தீர அன்று முது நீர் தட செம் கண் வேழம் உய்ய

விதலைத்தலை சென்று அதற்கே உதவி வினை தீர்த்த அம்மான் இடம் விண் அணவும்

பதலை கபோதத்து ஒளி மாட நெற்றி பவள கொழும் கால பைம் கால் புறவம்

மதலை தலை மென் பெடை கூடும் நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கு என் மனனே

#1220

கொலை புண் தலை குன்றம் ஒன்று உய்ய அன்று கொடு மா முதலைக்கு இடர்செய்து கொங்கு ஆர்

இலை புண்டரீகத்தவள் இன்பம் அன்போடு அணைந்திட்ட அம்மான் இடம் ஆள் அரியால்

அலைப்புண்ட யானை மருப்பும் அகிலும் அணி முத்தும் வெண் சாமரையோடு பொன்னி

மலை பண்டம் அண்ட திரை உந்தும் நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கு என் மனனே

#1221

சிறை ஆர் உவண புள் ஒன்று ஏறி அன்று திசை நான்கும் நான்கும் இரிய செருவில்

கறை ஆர் நெடு வேல் அரக்கர் மடிய கடல் சூழ் இலங்கை கடந்தான் இடம் தான்

முறையால் வளர்க்கின்ற முத்தீயர் நால் வேதர் ஐ வேள்வி ஆறு அங்கர் ஏழின் இசையோர்

மறையோர் வணங்க புகழ் எய்தும் நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கு என் மனனே

#1222

இழை ஆடு கொங்கை தலை நஞ்சம் உண்டிட்டு இளம் கன்று கொண்டு விளங்காய் எறிந்து

தழை வாட வன் தாள் குருந்தம் ஒசித்து தடம் தாமரை பொய்கை புக்கான் இடம் தான்

குழை ஆட வல்லி குலம் ஆட மாடே குயில் கூவ நீடு கொடி மாடம் மல்கு

மழை ஆடு சோலை மயில் ஆலும் நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கு என் மனனே

#1223

பண் நேர் மொழி ஆய்ச்சியர் அஞ்ச வஞ்ச பகு வாய் கழுதுக்கு இரங்காது அவள்-தன்

உண்ணா முலை மற்று அவள் ஆவியோடும் உடனே சுவைத்தான் இடம் ஓங்கு பைம் தாள்

கண் ஆர் கரும்பின் கழை தின்று வைகி கழுநீரில் மூழ்கி செழு நீர் தடத்து

மண் ஏந்து இள மேதிகள் வைகும் நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கு என் மனனே

#1224

தளை கட்டு அவிழ் தாமரை வைகு பொய்கை தடம் புக்கு அடங்கா விடம் கால் அரவம்

இளைக்க திளைத்திட்டு அதன் உச்சி-தன் மேல் அடி வைத்த அம்மான் இடம் மா மதியம்

திளைக்கும் கொடி மாளிகை சூழ் தெருவில் செழு முத்து வெண்ணெற்கு என சென்று முன்றில்

வளை கை நுளை பாவையர் மாறும் நாங்கூர் மணிமாடக்கோயில் வணங்கு என் மனனே

#1225

துளை ஆர் கரு மென் குழல் ஆய்ச்சியர் தம் துகில் வாரியும்
சிற்றில் சிதைத்தும் முற்றா

இளையார் விளையாட்டொடு காதல் வெள்ளம் விளைவித்த
அம்மான் இடம் வேல் நெடும் கண்

முளை வாள் எயிற்று மடவார் பயிற்று மொழி கேட்டிருந்து
முதிராத இன் சொல்

வளை வாய கிள்ளை மறை பாடும் நாங்கூர் மணிமாடக்கோயில்
வணங்கு என் மனனே

#1226

விடை ஓட வென்று ஆய்ச்சி மென் தோள் நயந்த விகிர்தா
விளங்கு சுடர் ஆழி என்னும்

படையோடு சங்கு ஒன்று உடையாய் என நின்று இமையோர்
பரவும் இடம் பைம் தடத்து

பெடையோடு செம் கால அன்னம் துகைப்ப தொகை
புண்டரீகத்திடை செங்கழுநீர்

மடை ஓட நின்று மது விம்மும் நாங்கூர் மணிமாடக்கோயில்
வணங்கு என் மனனே

#1227

வண்டு ஆர் பொழில் சூழ்ந்து அழகு ஆய நாங்கூர்
மணிமாடக்கோயில் நெடுமாலுக்கு என்றும்

தொண்டு ஆய தொல் சீர் வயல் மங்கையர் கோன் கலியன் ஒலிசெய் தமிழ் மாலை வல்லார்

கண்டார் வணங்க களி யானை மீதே கடல் சூழ் உலகுக்கு ஒரு காவலர் ஆய்

விண் தோய் நெடு வெண்குடை நீழலின் கீழ் விரி நீர் உலகு ஆண்டு விரும்புவரே

#1228

சலம் கொண்ட இரணியனது அகல் மார்வம் கீண்டு தடம் கடலை கடைந்து அமுதம் கொண்டு உகந்த காளை

நலம் கொண்ட கரு முகில் போல் திருமேனி அம்மான் நாள்-தோறும் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்

சலம் கொண்டு மலர் சொரியும் மல்லிகை ஒண் செருந்தி செண்பகங்கள் மணம் நாறும் வண் பொழிலினூடே

வலம் கொண்டு கயல் ஓடி விளையாடும் நாங்கூர் வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1229

திண்ணியது ஓர் அரி உருவாய் திசை அனைத்தும் நடுங்க தேவரொடு தானவர்கள் திசைப்ப இரணியனை

நண்ணி அவன் மார்வு அகலத்து உகிர் மடுத்த நாதன் நாள்-தோறும் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்

எண் இல் மிகு பெரும் செல்வத்து எழில் விளங்கு மறையும் ஏழ்
இசையும் கேள்விகளும் இயன்ற பெரும் குணத்தோர்

மண்ணில் மிகு மறையவர்கள் மலிவு எய்தும் நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1230

அண்டமும் இ அலை கடலும் அவனிகளும் எல்லாம் அமுதுசெய்த
திருவயிற்றன் அரன் கொண்டு திரியும்

முண்டம் அது நிறைத்து அவன்-கண் சாபம் அது நீக்கும்
முதல்வன் அவன் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்

எண் திசையும் பெரும் செந்நெல் இளம் தெங்கு கதலி இலை
கொடி ஒண் குலை கமுகோடு இசலி வளம் சொரிய

வண்டு பல இசை பாட மயில் ஆலும் நாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1231

கலை இலங்கும் அகல் அல்குல் அரக்கர் குலக்கொடியை
காதொடு மூக்கு உடன் அரிய கதறி அவள் ஓடி

தலையில் அம் கை வைத்து மலை இலங்கை புக செய்த தடம்
தோளன் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்

சிலை இலங்கு மணி மாடத்து உச்சி மிசை சூலம் செழும்
கொண்டல் அகடு இரிய சொரிந்த செழு முத்தம்

மலை இலங்கு மாளிகை மேல் மலிவு எய்தும் நாங்கூர்

வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1232

மின் அனைய நுண் மருங்குல் மெல்லியற்கா இலங்கை வேந்தன் முடி ஒரு பதும் தோள் இருபதும் போய் உதிர

தன் நிகர் இல் சிலை வளைத்து அன்று இலங்கை பொடிசெய்த

தடம் தோளன் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்

செந்நெலொடு செங்கமலம் சேல் கயல்கள் வாளை

செங்கழுநீரொடு மிடைந்து கழனி திகழ்ந்து எங்கும்

மன்னு புகழ் வேதியர்கள் மலிவு எய்தும் நாங்கூர்

வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1233

பெண்மை மிகு வடிவு கொடு வந்தவளை பெரிய பேயினது உருவு கொடு மாள உயிர் உண்டு

திண்மை மிகு மருதொடு நல் சகடம் இறுத்தருளும் தேவன்-அவன் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்

உண்மை மிகு மறையொடு நல் கலைகள் நிறை பொறைகள்

உதவு கொடை என்று இவற்றின் ஒழிவு இல்லா பெரிய

வண்மை மிகு மறையவர்கள் மலிவு எய்தும் நாங்கூர்

வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1234

விளங்கனியை இளம் கன்று கொண்டு உதிர எறிந்து வேல் நெடும் கண் ஆய்ச்சியர்கள் வைத்த தயிர் வெண்ணெய்

உளம் குளிர அமுதுசெய்து இ உலகு உண்ட காளை உகந்து இனிது நாள்-தோறும் மருவி உறை கோயில்

இளம்படி நல் கமுகு குலை தெங்கு கொடி செந்நெல் ஈன் கரும்பு கண்வளர கால் தடவும் புனலால்

வளம் கொண்ட பெரும் செல்வம் வளரும் அணி நாங்கூர் வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1235

ஆறாத சினத்தின் மிகு நரகன் உரம் அழித்த அடல் ஆழி தட கையன் அலர் மகட்கும் அரற்கும்

கூறாக கொடுத்தருளும் திரு உடம்பன் இமையோர் குல முதல்வன் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்

மாறாத மலர் கமலம் செங்கழுநீர் ததும்பி மது வெள்ளம் ஒழுக வயல் உழவர் மடை அடைப்ப

மாறாத பெரும் செல்வம் வளரும் அணி நாங்கூர் வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1236

வங்கம் மலி தடம் கடலுள் வானவர்களோடு மா முனிவர் பலர் கூடி மா மலர்கள் தூவி

எங்கள் தனி நாயகனே எமக்கு அருளாய் என்னும் ஈசன் அவன் மகிழ்ந்து இனிது மருவி உறை கோயில்

செம் கயலும் வாளைகளும் செந்நெலிடை குதிப்ப சேல் உகளும் செழும் பணை சூழ் வீதி-தொறும் மிடைந்து

மங்குல் மதி அகடு உரிஞ்சும் மணி மாட நாங்கூர் வைகுந்தவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1237

சங்கு மலி தண்டு முதல் சக்கரம் முன் ஏந்தும் தாமரை கண் நெடிய பிரான் தான் அமரும் கோயில்

வங்கம் மலி கடல் உலகில் மலிவு எய்தும் நாங்கூர் வைகுந்தவிண்ணகர் மேல் வண்டு அறையும் பொழில் சூழ்

மங்கையர்-தம் தலைவன் மருவலர் தம் உடல் துணிய வாள் வீசும் பரகாலன் கலிகன்றி சொன்ன

சங்கம் மலி தமிழ் மாலை பத்து இவை வல்லார்கள் தரணியொடு விசும்பு ஆளும் தன்மை பெறுவாரே

#1238

திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ தீவினைகள் போய் அகல அடியவர்கட்கு என்றும்

அருள் நடந்து இ ஏழ் உலகத்தவர் பணிய வானோர் அமர்ந்து ஏத்த இருந்த இடம் பெரும் புகழ் வேதியர் வாழ்

தரும் இடங்கள் மலர்கள் மிகு கைதைகள் செங்கழுநீர் தாமரைகள் தடங்கள்-தொறும் இடங்கள்-தொறும் திகழ

அரு இடங்கள் பொழில் தழுவி எழில் திகழும் நாங்கூர் அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1239

வென்றி மிகு நரகன் உரம் அது அழிய விசிறும் விறல் ஆழி தட கையன் விண்ணவர்கட்கு அன்று

குன்று கொடு குரை கடலை கடைந்து அமுதம் அளிக்கும் குருமணி என் ஆர் அமுதம் குலவி உறை கோயில்

என்றும் மிகு பெரும் செல்வத்து எழில் விளங்கு மறையோர் ஏழ் இசையும் கேள்விகளும் இயன்ற பெரும் குணத்தோர்

அன்று உலகம் படைத்தவனை அனையவர்கள் நாங்கூர் அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1240

உம்பரும் இ ஏழ் உலகும் ஏழ் கடலும் எல்லாம் உண்ட பிரான் அண்டர்கள் முன் கண்டு மகிழ்வு எய்த

கும்பம் மிகு மத யானை மருப்பு ஒசித்து கஞ்சன் குஞ்சி பிடித்து அடித்த பிரான் கோயில் மருங்கு எங்கும்

பைம் பொனொடு வெண் முத்தம் பல புன்னை காட்ட
பலங்கனிகள் தேன் காட்ட பட அரவு ஏர் அல்குல்

அம்பு அனைய கண் மடவார் மகிழ்வு எய்தும் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1241

ஓடாத ஆள் அரியின் உருவம்-அது கொண்டு அன்று உலப்பில்
மிகு பெரு வரத்த இரணியனை பற்றி

வாடாத வள் உகிரால் பிளந்து அவன்-தன் மகனுக்கு
அருள்செய்தான் வாழும் இடம் மல்லிகை செங்கழுநீர்

சேடு ஏறு மலர் செருந்தி செழும் கமுகம் பாளை செண்பகங்கள்
மணம் நாறும் வண் பொழிலின் ஊடே

ஆடு ஏறு வயல் ஆலை புகை கமழும் நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1242

கண்டவர் தம் மனம் மகிழ மாவலி தன் வேள்வி களவு இல் மிகு
சிறு குறளாய் மூவடி என்று இரந்திட்டு

அண்டமும் இ அலை கடலும் அவனிகளும் எல்லாம் அளந்த
பிரான் அமரும் இடம் வளம் கொள் பொழில் அயலே

அண்டம் உறு முழவு ஒலியும் வண்டு இனங்கள் ஒலியும் அரு
மறையின் ஒலியும் மடவார் சிலம்பின் ஒலியும்

அண்டம் உறும் அலை கடலின் ஒலி திகழும் நாங்கூர்

அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1243

வாள் நெடும் கண் மலர் கூந்தல் மைதிலிக்கா இலங்கை மன்னன்

முடி ஒரு பதும் தோள் இருபதும் போய் உதிர

தாள் நெடும் திண் சிலை வளைத்த தயரதன் சேய் என்தன் தனி

சரண் வானவர்க்கு அரசு கருதும் இடம் தடம் ஆர்

சேண் இடம் கொள் மலர் கமலம் சேல் கயல்கள் வாளை

செந்நெலொடும் அடுத்து அரிய உதிர்ந்த செழு முத்தம்

வாள் நெடும் கண் கடைசியர்கள் வாரும் அணி நாங்கூர்

அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1244

தீ மனத்தான் கஞ்சனது வஞ்சனையில் திரியும் தேனுகனும்

பூதனை தன் ஆருயிரும் செகுத்தான்

காமனைத்தான் பயந்த கரு மேனி உடை அம்மான் கருதும் இடம்

பொருது புனல் துறை துறை முத்து உந்தி

நா மனத்தால் மந்திரங்கள் நால் வேதம் ஐந்து வேள்வியோடு

ஆறு அங்கம் நவின்று கலை பயின்று அங்கு

ஆம் மனத்து மறையவர்கள் பயிலும் அணி நாங்கூர்

அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1245

கன்று-அதனால் விளவு எறிந்து கனி உதிர்த்த காளை காமரு சீர் முகில் வண்ணன் காலிகள் முன் காப்பான்

குன்று-அதனால் மழை தடுத்து குடம் ஆடு கூத்தன் குலவும் இடம் கொடி மதிள்கள் மாளிகை கோபுரங்கள்

துன்று மணி மண்டபங்கள் சாலைகள் தூ மறையோர் தொக்கு ஈண்டி தொழுதியொடு மிக பயிலும் சோலை

அன்று அலர் வாய் மது உண்டு அங்கு அளி முரலும் நாங்கூர் அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1246

வஞ்சனையால் வந்தவள் தன் உயிர் உண்டு வாய்த்த தயிர் உண்டு வெண்ணெய் அமுது உண்டு வலி மிக்க

கஞ்சன் உயிர் அது உண்டு இ உலகு உண்ட காளை கருதும் இடம் காவிரி சந்து அகில் கனகம் உந்தி

மஞ்சு உலவு பொழிலூடும் வயலூடும் வந்து வளம் கொடுப்ப மா மறையோர் மா மலர்கள் தூவி

அஞ்சலித்து அங்கு அரி சரண் என்று இறைஞ்சும் அணி நாங்கூர் அரிமேயவிண்ணகரம் வணங்கு மட நெஞ்சே

#1247

சென்று சின விடை ஏழும் பட அடர்ந்து பின்னை செவ்வி தோள் புணர்ந்து உகந்த திருமால்-தன் கோயில்

அன்று அயனும் அரன் சேயும் அனையவர்கள் நாங்கூர் அரிமேயவிண்ணகரம் அமர்ந்த செழும் குன்றை

கன்றி நெடு வேல் வலவன் மங்கையர்-தம் கோமான் கலிகன்றி ஒலி மாலை ஐந்தினொடு மூன்றும்

ஒன்றினொடும் ஒன்றும் இவை கற்று வல்லார் உலகத்து உத்தமர்கட்கு உத்தமராய் உம்பரும் ஆவர்களே

#1248

போது அலர்ந்த பொழில் சோலை புறம் எங்கும் பொரு திரைகள்

தாது உதிர வந்து அலைக்கும் தட மண்ணி தென் கரை மேல்

மாதவன் தான் உறையும் இடம் வயல் நாங்கை வரி வண்டு

தேதென என்று இசை பாடும் திருத்தேவனார்தொகையே

#1249

யாவருமாய் யாவையுமாய் எழில் வேத பொருள்களுமாய்

மூவருமாய் முதல் ஆய மூர்த்தி அமர்ந்து உறையும் இடம்

மா வரும் திண் படை மன்னை வென்றி கொள்வார் மன்னு நாங்கை

தேவரும் சென்று இறைஞ்சு பொழில் திருத்தேவனார்தொகையே

#1250

வான் நாடும் மண் நாடும் மற்று உள்ள பல் உயிரும்

தான் ஆய எம் பெருமான் தலைவன் அமர்ந்து உறையும் இடம்

ஆனாத பெரும் செல்வத்து அரு மறையோர் நாங்கை-தன்னுள்

தேன் ஆரும் மலர் பொழில் சூழ் திருத்தேவனார்தொகையே

#1251

இந்திரனும் இமையவரும் முனிவர்களும் எழில் அமைந்த

சந்த மலர் சதுமுகனும் கதிரவனும் சந்திரனும்

எந்தை எமக்கு அருள் என நின்றருளும் இடம் எழில் நாங்கை

சுந்தர நல் பொழில் புடை சூழ் திருத்தேவனார்தொகையே

#1252

அண்டமும் இ அலை கடலும் அவனிகளும் குல வரையும்

உண்ட பிரான் உறையும் இடம் ஒளி மணி சந்து அகில் கனகம்

தெண் திரைகள் வர திரட்டும் திகழ் மண்ணி தென் கரை மேல்

திண் திறலார் பயில் நாங்கை திருத்தேவனார்தொகையே

#1253

ஞாலம் எல்லாம் அமுதுசெய்து நான்மறையும் தொடராத

பாலகனாய் ஆலிலையில் பள்ளிகொள்ளும் பரமன் இடம்

சாலி வளம் பெருகி வரும் தட மண்ணி தென் கரை மேல்

சேல் உகளும் வயல் நாங்கை திருத்தேவனார்தொகையே

#1254

ஓடாத ஆளரியின் உரு ஆகி இரணியனை

வாடாத வள் உகிரால் பிளந்து அளைந்த மாலது இடம்

ஏடு ஏறு பெரும் செல்வத்து எழில் மறையோர் நாங்கை-தன்னுள்

சேடு ஏறு பொழில் தழுவு திருத்தேவனார்தொகையே

#1255

வார் ஆரும் இளம் கொங்கை மைதிலியை மணம் புணர்வான்

கார் ஆர் திண் சிலை இறுத்த தனி காளை கருதும் இடம்

ஏர் ஆரும் பெரும் செல்வத்து எழில் மறையோர் நாங்கை-தன்னுள்

சீர் ஆரும் மலர் பொழில் சூழ் திருத்தேவனார்தொகையே

#1256

கும்பம் மிகு மத யானை பாகனொடும் குலைந்து வீழ

கொம்பு-அதனை பறித்து எறிந்த கூத்தன் அமர்ந்து உறையும் இடம்

வம்பு அவிழும் செண்பகத்து மணம் கமழும் நாங்கை-தன்னுள்

செம்பொன் மதிள் பொழில் புடை சூழ்
திருத்தேவனார்தொகையே

#1257

கார் ஆர்ந்த திருமேனி கண்ணன் அமர்ந்து உறையும் இடம்

சீர் ஆர்ந்த பொழில் நாங்கை திருத்தேவனார்தொகை மேல்

கூர் ஆர்ந்த வேல் கலியன் கூறு தமிழ் பத்தும் வல்லார்

ஏர் ஆர்ந்த வைகுந்தத்து இமையவரோடு இருப்பாரே

#1258

கம்ப மா கடல் அடைத்து இலங்கைக்கு மன் கதிர் முடி அவை பத்தும்

அம்பினால் அறுத்து அரசு அவன் தம்பிக்கு அளித்தவன் உறை கோயில்

செம் பலா நிரை செண்பகம் மாதவி சூதகம் வாழைகள் சூழ்

வம்பு உலாம் கமுகு ஓங்கிய நாங்கூர வண்புருடோத்தமமே

#1259

பல்லவம் திகழ் பூம் கடம்பு ஏறி அ காளியன் பண அரங்கில்

ஒல்லை வந்து உற பாய்ந்து அரு நடம்செய்த உம்பர் கோன் உறை கோயில்

நல்ல வெம் தழல் மூன்று நால் வேதம் ஐ வேள்வியோடு ஆறு அங்கம்

வல்ல அந்தணர் மல்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே

#1260

அண்டர் ஆனவர் வானவர் கோனுக்கு என்று அமைத்த சோறு-அது எல்லாம்

உண்டு கோ நிரை மேய்த்து அவை காத்தவன் உகந்து இனிது உறை கோயில்

கொண்டல் ஆர் முழவின் குளிர் வார் பொழில் குல மயில் நடம் ஆட

வண்டு தான் இசை பாடிடும் நாங்கூர் வண்புருடோத்தமமே

#1261

பரும் கை யானையின் கொம்பினை பறித்து அதன் பாகனை சாடி புக்கு

ஒருங்க மல்லரை கொன்று பின் கஞ்சனை உதைத்தவன் உறை கோயில்

கரும்பினூடு உயர் சாலிகள் விளைதரு கழனியில் மலி வாவி

மருங்கு எலாம் பொழில் ஓங்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே

#1262

சாடு போய் விழ தாள் நிமிர்ந்து ஈசன் தன் படையொடும் கிளையோடும்

ஓட வாணனை ஆயிரம் தோள்களும் துணித்தவன் உறை கோயில்

ஆடு வான் கொடி அகல் விசும்பு அணவி போய் பகலவன் ஒளி மறைக்கும்

மாட மாளிகை சூழ்தரு நாங்கூர் வண்புருடோத்தமமே

#1263

அம் கையால் அடி மூன்று நீர் ஏற்று அயன் அலர் கொடு தொழுது ஏத்த

கங்கை போதர கால் நிமிர்த்தருளிய கண்ணன் வந்து உறை கோயில்

கொங்கை கோங்கு அவை காட்ட வாய் குமுதங்கள் காட்ட மா பதுமங்கள்

மங்கைமார் முகம் காட்டிடும் நாங்கூர் வண்புருடோத்தமமே

#1264

உளைய ஒண் திறல் பொன் பெயரோன் தனது உரம் பிளந்து
உதிரத்தை

அளையும் வெம் சினத்து அரி பரி கீறிய அப்பன் வந்து உறை
கோயில்

இளைய மங்கையர் இணை அடி சிலம்பினோடு எழில் கொள்
பந்து அடிப்போர் கை

வளையின் நின்று ஒலி மல்கிய நாங்கூர் வண்புருடோத்தமமே

#1265

வாளை ஆர் தடம் கண் உமை பங்கன் வன் சாபம் மற்று அது நீங்க

மூளை ஆர் சிரத்து ஐயம் முன் அளித்த எம் முகில் வண்ணன்
உறை கோயில்

பாளை வான் கமுகு ஊடு உயர் தெங்கின் வண் பழம் விழ
வெருவி போய்

வாளை பாய் தடம் சூழ்தரு நாங்கூர் வண்புருடோத்தமமே

#1266

இந்து வார் சடை ஈசனை பயந்த நான்முகனை தன் எழில் ஆரும்

உந்தி மா மலர் மீமிசை படைத்தவன் உகந்து இனிது உறை
கோயில்

குந்தி வாழையின் கொழும் கனி நுகர்ந்து தன் குருளையை தழுவி போய்

மந்தி மாம்பணை மேல் வைகும் நாங்கூர் வண்புருடோத்தமமே

#1267

மண்ணுளார் புகழ் வேதியர் நாங்கூர் வண்புருடோத்தமத்துள்

அண்ணல் சேவடி கீழ் அடைந்து உய்ந்தவன் ஆலி மன் அருள் மாரி

பண்ணுள் ஆர்தர பாடிய பாடல் இ பத்தும் வல்லார் உலகில்

எண் இலாத பேர் இன்பம் உற்று இமையவரோடும் கூடுவரே

#1268

பேர் அணிந்து உலகத்தவர் தொழுது ஏத்தும் பேர் அருளாளன் எம் பிரானை

வார் அணி முலையாள் மலர் மகளோடு மண் மகளும் உடன் நிற்ப

சீர் அணி மாட நாங்கை நல் நடுவுள் செம்பொன்செய்கோயிலின் உள்ளே

கார் அணி மேகம் நின்றது ஒப்பானை கண்டுகொண்டு உய்ந்து ஒழிந்தேனே

#1269

பிறப்பொடு மூப்பு ஒன்று இல்லவன் தன்னை பேதியா இன்ப வெள்ளத்தை

இறப்பு எதிர் காலம் கழிவும் ஆனானை ஏழ் இசையின் சுவை-தன்னை

சிறப்பு உடை மறையோர் நாங்கை நல் நடுவுள் செம்பொன்செய்கோயிலின் உள்ளே

மறை பெரும் பொருளை வானவர் கோனை கண்டு நான் வாழ்ந்து ஒழிந்தேனே

#1270

திட விசும்பு எரி நீர் திங்களும் சுடரும் செழு நிலத்து உயிர்களும் மற்றும்

படர் பொருள்களுமாய் நின்றவன் தன்னை பங்கயத்து அயன் அவன் அனைய

திட மொழி மறையோர் நாங்கை நல் நடுவுள் செம்பொன்செய்கோயிலின் உள்ளே

கடல் நிற வண்ணன் தன்னை நான் அடியேன் கண்டுகொண்டு உய்ந்து ஒழிந்தேனே

#1271

வசை அறு குறளாய் மாவலி வேள்வி மண் அளவிட்டவன்-தன்னை

அசைவு அறும் அமரர் அடி இணை வணங்க அலை கடல் துயின்ற அம்மானை

திசைமுகன் அனையோர் நாங்கை நல் நடுவுள் செம்பொன்செய்கோயிலின் உள்ளே

உயர் மணி மகுடம் சூடி நின்றானை கண்டுகொண்டு உய்ந்து ஒழிந்தேனே

#1272

தீ மனத்து அரக்கர் திறல் அழித்தவனே என்று சென்று அடைந்தவர்-தமக்கு

தாய் மனத்து இரங்கி அருளினை கொடுக்கும் தயரதன் மதலையை சயமே

தே மலர் பொழில் சூழ் நாங்கை நல் நடுவுள் செம்பொன்செய்கோயிலின் உள்ளே

காமனை பயந்தான்-தன்னை நான் அடியேன் கண்டுகொண்டு உய்ந்து ஒழிந்தேனே

#1273

மல்லை மா முந்நீர் அதர்பட மலையால் அணைசெய்து மகிழ்ந்தவன்-தன்னை

கல்லின் மீது இயன்ற கடி மதிள் இலங்கை கலங்க ஓர் வாளி தொட்டானை

செல்வ நான்மறையோர் நாங்கை நல் நடுவுள்

செம்பொன்செய்கோயிலின் உள்ளே

அல்லி மா மலராள் தன்னொடும் அடியேன் கண்டுகொண்டு

அல்லல் தீர்ந்தேனே

#1274

வெம் சின களிறும் வில்லொடு மல்லும் வெகுண்டு இறுத்து

அடர்த்தவன்-தன்னை

கஞ்சனை காய்ந்த காளை அம்மானை கரு முகில் திரு

நிறத்தவனை

செம் சொல் நான்மறையோர் நாங்கை நல் நடுவுள்

செம்பொன்செய்கோயிலின் உள்ளே

அஞ்சன குன்றம் நின்றது ஒப்பானை கண்டுகொண்டு அல்லல்

தீர்ந்தேனே

#1275

அன்றிய வாணன் ஆயிரம் தோளும் துணிய அன்று ஆழி

தொட்டானை

மின் திகழ் குடுமி வேங்கட மலை மேல் மேவிய வேத நல்

விளக்கை

தென் திசை திலதம் அனையவர் நாங்கை

செம்பொன்செய்கோயிலின் உள்ளே

மன்று அது பொலிய மகிழ்ந்து நின்றானை வணங்கி நான் வாழ்ந்து ஒழிந்தேனே

#1276

களங்கனி வண்ணா கண்ணனே என்தன் கார் முகிலே என நினைந்திட்டு

உளம் கனிந்திருக்கும் அடியவர் தங்கள் உள்ளத்துள் ஊறிய தேனை

தெளிந்த நான்மறையோர் நாங்கை நல் நடுவுள் செம்பொன்செய்கோயிலின் உள்ளே

வளம் கொள் பேர் இன்பம் மன்னி நின்றானை வணங்கி நான் வாழ்ந்து ஒழிந்தேனே

#1277

தேன் அமர் சோலை நாங்கை நல் நடுவுள் செம்பொன்செய்கோயிலின் உள்ளே

வானவர் கோனை கண்டமை சொல்லும் மங்கையார் வாள் கலிகன்றி

ஊனம் இல் பாடல் ஒன்பதோடு ஒன்றும் ஒழிவு இன்றி கற்று வல்லார்கள்

மான வெண்குடை கீழ் வையகம் ஆண்டு வானவர் ஆகுவர் மகிழ்ந்தே

#1278

மாற்றரசர் மணி முடியும் திறலும் தேசும் மற்று அவர் தம் காதலிமார் குழையும் தந்தை

கால் தளையும் உடன் கழல வந்து தோன்றி கத நாகம் காத்து அளித்த கண்ணர் கண்டீர்

நூற்றிதழ் கொள் அரவிந்தம் நுழைந்த பள்ளத்து இளம் கமுகின் முது பாளை பகு வாய் நண்டின்

சேற்று அளையில் வெண் முத்தம் சிந்தும் நாங்கூர் திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1279

பொன் தொடி தோள் மட மகள் தன் வடிவு கொண்ட பொல்லாத வன் பேய்ச்சி கொங்கை வாங்கி

பெற்றெடுத்த தாய் போல மடுப்ப ஆரும் பேணா நஞ்சு உண்டு உகந்த பிள்ளை கண்டீர்

நெல் தொடுத்த மலர் நீலம் நிறைந்த சூழல் இரும் சிறைய வண்டு ஒலியும் நெடும் கணார்-தம்

சிற்றடி மேல் சிலம்பு ஒலியும் மிழற்றும் நாங்கூர் திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1280

படல் அடைத்த சிறு குரம்பை நுழைந்து புக்கு பசு வெண்ணெய் பதம் ஆர பண்ணை முற்றும்

அடல் அடர்த்த வேல் கணார் தோக்கை பற்றி அலந்தலைமை செய்து உழலும் ஐயன் கண்டீர்

மடல் எடுத்த நெடும் தெங்கின் பழங்கள் வீழ மாங்கனிகள் திரட்டு உருட்டாவரு நீர் பொன்னி

திடல் எடுத்து மலர் சுமந்து அங்கு இழியும் நாங்கூர் திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1281

வார் ஆரும் முலை மடவாள் பின்னைக்கு ஆகி வளை மருப்பின் கடும் சினத்து வன் தாள் ஆர்ந்த

கார் ஆர் திண் விடை அடர்த்து வதுவை ஆண்ட கரு முகில் போல் திரு நிறத்து என் கண்ணர் கண்டீர்

ஏர் ஆரும் மலர் பொழில்கள் தழுவி எங்கும் எழில் மதியை கால் தொடர விளங்கு சோதி

சீர் ஆரும் மணி மாடம் திகழும் நாங்கூர் திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1282

கலை இலங்கும் அகல் அல்குல் கமல பாவை கதிர் முத்த வெண் நகையாள் கரும் கண் ஆய்ச்சி

முலை இலங்கும் ஒளி மணி பூண் வடமும் தேய்ப்ப மூவாத வரை நெடும் தோள் மூர்த்தி கண்டீர்

மலை இலங்கு நிரை சந்தி மாட வீதி ஆடவரை மட மொழியார் முகத்து இரண்டு

சிலை விலங்கி மனம் சிறை கொண்டு இருக்கும் நாங்கூர் திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1283

தான் போலும் ஏன்று எழுந்தான் தரணியாளன் அது கண்டு தரித்திருப்பான் அரக்கர்-தங்கள்

கோன் போலும் ஏன்று எழுந்தான் குன்றம் அன்ன இருபது தோள் உடன் துணித்த ஒருவன் கண்டீர்

மான் போலும் மென் நோக்கின் செய்ய வாயார் மரகதம் போல் மட கிளியை கை மேல் கொண்டு

தேன் போலும் மென் மழலை பயிற்றும் நாங்கூர் திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1284

பொங்கு இலங்கு புரி நூலும் தோலும் தாழ பொல்லாத குறள் உருவாய் பொருந்தா வாணன்

மங்கலம் சேர் மறை வேள்வி-அதனுள் புக்கு மண் அகலம் குறை இரந்த மைந்தன் கண்டீர்

கொங்கு அலர்ந்த மலர் குழலார் கொங்கை தோய்ந்த

குங்குமத்தின் குழம்பு அளைந்த கோலம்-தன்னால்

செம் கலங்கல் வெண் மணல் மேல் தவழும் நாங்கூர்

திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1285

சிலம்பினிடை சிறு பரல் போல் பெரிய மேரு திரு குளம்பில்

கணகணப்ப திரு ஆகாரம்

குலுங்க நில மடந்தை-தனை இடந்து புல்கி கோட்டிடை

வைத்தருளிய எம் கோமான் கண்டீர்

இலங்கிய நால் மறை அனைத்தும் அங்கம் ஆறும் ஏழ் இசையும்

கேள்விகளும் எண் திக்கு எங்கும்

சிலம்பிய நல் பெரும் செல்வம் திகழும் நாங்கூர்

திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1286

ஏழ் உலகும் தாழ் வரையும் எங்கும் மூடி எண் திசையும்

மண்டலமும் மண்டி அண்டம்

மோழை எழுந்து ஆழி மிகும் ஊழி வெள்ளம் முன் அகட்டில்

ஒடுக்கிய எம் மூர்த்தி கண்டீர்

ஊழி-தொறும் ஊழி-தொறும் உயர்ந்த செல்வத்து ஓங்கிய நால்

மறை அனைத்தும் தாங்கும் நாவர்

சேழ் உயர்ந்த மணி மாடம் திகழும் நாங்கூர்

திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலே

#1287

சீர் அணிந்த மணி மாடம் திகழும் நாங்கூர்

திருத்தெற்றியம்பலத்து என் செங்கண்மாலை

கூர் அணிந்த வேல் வலவன் ஆலி நாடன் கொடி மாட மங்கையர்

கோன் குறையல் ஆளி

பார் அணிந்த தொல் புகழான் கலியன் சொன்ன பா மாலை

இவை ஐந்தும் ஐந்தும் வல்லார்

சீர் அணிந்த உலகத்து மன்னர் ஆகி சேண் விசும்பில் வானவராய்

திகழ்வர் தாமே

#1288

தூம்பு உடை பனை கை வேழம் துயர் கெடுத்தருளி மன்னும்

காம்பு உடை குன்றம் ஏந்தி கடு மழை காத்த எந்தை

பூம் புனல் பொன்னி முற்றும் புகுந்து பொன் வரன்ற எங்கும்

தேம் பொழில் கமழும் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1289

கவ்வை வாள் எயிற்று வன் பேய் கதிர் முலை சுவைத்து இலங்கை

வவ்விய இடும்பை தீர கடும் கணை துரந்த எந்தை

கொவ்வை வாய் மகளிர் கொங்கை குங்குமம் கழுவி போந்த

தெய்வ நீர் கமழும் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1290

மா தொழில் மடங்க செற்று மருது இற நடந்து வன் தாள்

சே தொழில் சிதைத்து பின்னை செவ்வி தோள் புணர்ந்த எந்தை

நா தொழில் மறை வல்லார்கள் நயந்து அறம் பயந்த வண் கை

தீ தொழில் பயிலும் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1291

தாங்கு அரும் சினத்து வன் தாள் தட கை மா மருப்பு வாங்கி

பூம் குருந்து ஒசித்து புள் வாய் பிளந்து எருது அடர்த்த எந்தை

மாங்கனி நுகர்ந்த மந்தி வந்து வண்டு இரிய வாழை

தீம் கனி நுகரும் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1292

கரு மகள் இலங்கையாட்டி பிலம் கொள் வாய் திறந்து தன் மேல்

வரும் அவள் செவியும் மூக்கும் வாளினால் தடிந்த எந்தை

பெரு மகள் பேதை மங்கை-தன்னொடும் பிரிவு இலாத

திருமகள் மருவும் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1293

கெண்டையும் குறளும் புள்ளும் கேழலும் அரியும் மாவும்

அண்டமும் சுடரும் அல்லா ஆற்றலும் ஆய எந்தை

ஒண் திறல் தென்னன் ஓட வட அரசு ஓட்டம் கண்ட

திண் திறலாளர் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1294

குன்றமும் வானும் மண்ணும் குளிர் புனல் திங்களோடு

நின்ற வெம் சுடரும் அல்லா நிலைகளும் ஆய எந்தை

மன்றமும் வயலும் காவும் மாடமும் மணம் கொண்டு எங்கும்

தென்றல் வந்து உலவும் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1295

சங்கையும் துணிவும் பொய்யும் மெய்யும் இ தரணி ஓம்பும்

பொங்கிய முகிலும் அல்லா பொருள்களும் ஆய எந்தை

பங்கயம் உகுத்த தேறல் பருகிய வாளை பாய

செம் கயல் உகளும் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1296

பாவமும் அறமும் வீடும் இன்பமும் துன்பம்-தானும்

கோவமும் அருளும் அல்லா குணங்களும் ஆய எந்தை

மூவரில் எங்கள் மூர்த்தி இவன் என முனிவரோடு

தேவர் வந்து இறைஞ்சும் நாங்கூர் திருமணிக்கூடத்தானே

#1297

திங்கள் தோய் மாட நாங்கூர் திருமணிக்கூடத்தானை

மங்கையர் தலைவன் வண் தார் கலியன் வாய் ஒலிகள் வல்லார்

பொங்கு நீர் உலகம் ஆண்டு பொன் உலகு ஆண்டு பின்னும்

வெம் கதிர் பரிதி வட்டத்து ஊடு போய் விளங்குவாரே

#1298

தா அளந்து உலகம் முற்றும் தட மலர் பொய்கை புக்கு

நா வளம் நவின்று அங்கு ஏத்த நாகத்தின் நடுக்கம் தீர்த்தாய்

மா வளம் பெருகி மன்னும் மறையவர் வாழும் நாங்கை

காவளம்பாடி மேய கண்ணனே களைகண் நீயே

#1299

மண் இடந்து ஏனம் ஆகி மாவலி வலி தொலைப்பான்

விண்ணவர் வேண்ட சென்று வேள்வியில் குறை இரந்தாய்

துண் என மாற்றார் தம்மை தொலைத்தவர் நாங்கை மேய

கண்ணனே காவளம் தண் பாடியாய் களைகண் நீயே

#1300

உருத்து எழு வாலி மார்வில் ஒரு கணை உருவ ஓட்டி

கருத்து உடை தம்பிக்கு இன்ப கதிர் முடி அரசு அளித்தாய்

பருத்து எழு பலவும் மாவும் பழம் விழுந்து ஒழுகும் நாங்கை

கருத்தனே காவளம் தண் பாடியாய் களைகண் நீயே

#1301

முனைமுகத்து அரக்கன் மாள முடிகள் பத்து அறுத்து வீழ்த்து ஆங்கு

அனையவற்கு இளையவற்கே அரசு அளித்து அருளினானே

சுனைகளில் கயல்கள் பாய சுரும்பு தேன் நுகரும் நாங்கை

கனை கழல் காவளம் தண் பாடியாய் களைகண் நீயே

#1302

பட அரவு உச்சி-தன் மேல் பாய்ந்து பல் நடங்கள் செய்து

மடவரல் மங்கை-தன்னை மார்வகத்து இருத்தினானே

தட வரை தங்கு மாட தகு புகழ் நாங்கை மேய

கடவுளே காவளம் தண் பாடியாய் களைகண் நீயே

#1303

மல்லரை அட்டு மாள கஞ்சனை மலைந்து கொன்று

பல் அரசு அவிந்து வீழ பாரத போர் முடித்தாய்

நல் அரண் காவின் நீழல் நறை கமழ் நாங்கை மேய

கல் அரண் காவளம் தண் பாடியாய் களைகண் நீயே

#1304

மூத்தவற்கு அரசு வேண்டி முன்பு தூது எழுந்தருளி

மாத்து அமர் பாகன் வீழ மத கரி மருப்பு ஒசித்தாய்

பூத்து அமர் சோலை ஓங்கி புனல் பரந்து ஒழுகும் நாங்கை

காத்தனே காவளம் தண் பாடியாய் களைகண் நீயே

#1305

ஏவு இளம் கன்னிக்கு ஆகி இமையவர் கோனை செற்று

கா வளம் கடிது இறுத்து கற்பகம் கொண்டு போந்தாய்

பூ வளம் பொழில்கள் சூழ்ந்த புரந்தரன் செய்த நாங்கை

காவளம்பாடி மேய கண்ணனே களைகண் நீயே

#1306

சந்தமாய் சமயம் ஆகி சமய ஐம் பூதம் ஆகி

அந்தமாய் ஆதி ஆகி அரு மறை அவையும் ஆனாய்

மந்தம் ஆர் பொழில்கள்-தோறும் மட மயில் ஆலும் நாங்கை

கந்தம் ஆர் காவளம் தண் பாடியாய் களைகண் நீயே

#1307

மா வளம் பெருகி மன்னும் மறையவர் வாழும் நாங்கை

காவளம்பாடி மேய கண்ணனை கலியன் சொன்ன

பா வளம் பத்தும் வல்லார் பார் மிசை அரசர் ஆகி

கோ இள மன்னர் தாழ குடை நிழல் பொலிவர் தாமே

#1308

கண் ஆர் கடல் போல் திருமேனி கரியாய்

நண்ணார் முனை வென்றி கொள்வார் மன்னும் நாங்கூர்

திண் ஆர் மதிள் சூழ் திருவெள்ளக்குளத்துள்

அண்ணா அடியேன் இடரை களையாயே

#1309

கொந்து ஆர் துளவ மலர் கொண்டு அணிவானே

நந்தாத பெரும் புகழ் வேதியர் நாங்கூர்

செந்தாமரை நீர் திருவெள்ளக்குளத்துள்

எந்தாய் அடியேன் இடரை களையாயே

#1310

குன்றால் குளிர் மாரி தடுத்து உகந்தானே

நன்று ஆய பெரும் புகழ் வேதியர் நாங்கூர்

சென்றார் வணங்கும் திருவெள்ளக்குளத்துள்

நின்றாய் நெடியாய் அடியேன் இடர் நீக்கே

#1311

கான் ஆர் கரி கொம்பு அது ஒசித்த களிறே

நானாவகை நல்லவர் மன்னிய நாங்கூர்

தேன் ஆர் பொழில் சூழ் திருவெள்ளக்குளத்துள்

ஆனாய் அடியேனுக்கு அருள்புரியாயே

#1312

வேடு ஆர் திருவேங்கடம் மேய விளக்கே

நாடு ஆர் புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்

சேடு ஆர் பொழில் சூழ் திருவெள்ளக்குளத்தாய்

பாடா வருவேன் வினை ஆயின-பாற்றே

#1313

கல்லால் கடலை அணை கட்டி உகந்தாய்

நல்லார் பலர் வேதியர் மன்னிய நாங்கூர்

செல்வா திருவெள்ளக்குளத்து உறைவானே

எல்லா இடரும் கெடுமாறு அருளாயே

#1314

கோலால் நிரை மேய்த்த எம் கோவலர் கோவே

நால் ஆகிய வேதியர் மன்னிய நாங்கூர்

சேல் ஆர் வயல் சூழ் திருவெள்ளக்குளத்துள்

மாலே என வல்வினை தீர்த்தருளாயே

#1315

வாராகம் அது ஆகி இ மண்ணை இடந்தாய்

நாராயணனே நல்ல வேதியர் நாங்கூர்

சீர் ஆர் பொழில் சூழ் திருவெள்ளக்குளத்துள்

ஆராஅமுதே அடியேற்கு அருளாயே

#1316

பூ ஆர் திரு மா மகள் புல்கிய மார்பா

நா ஆர் புகழ் வேதியர் மன்னிய நாங்கூர்

தேவா திருவெள்ளக்குளத்து உறைவானே

ஆஆ அடியான் இவன் என்று அருளாயே

#1317

நல் அன்பு உடை வேதியர் மன்னிய நாங்கூர்

செல்வன் திருவெள்ளக்குளத்து உறைவானை

கல்லின் மலி தோள் கலியன் சொன்ன மாலை

வல்லர் என வல்லவர் வானவர் தாமே

#1318

கவள யானை கொம்பு ஒசித்த கண்ணன் என்றும் காமரு சீர்

குவளை மேகம் அன்ன மேனி கொண்ட கோன் என் ஆனை என்றும்

தவள மாடம் நீடு நாங்கை தாமரையாள் கேள்வன் என்றும்

பவள வாயாள் என் மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1319

கஞ்சன் விட்ட வெம் சினத்த களிறு அடர்த்த காளை என்றும்

வஞ்சம் மேவி வந்த பேயின் உயிரை உண்ட மாயன் என்றும்

செம் சொலாளர் நீடு நாங்கை தேவதேவன் என்றுஎன்று ஓதி

பஞ்சி அன்ன மெல் அடியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1320

அண்டர் கோன் என் ஆனை என்றும் ஆயர் மாதர் கொங்கை புல்கு

செண்டன் என்றும் நான்மறைகள் தேடி ஓடும் செல்வன் என்றும்

வண்டு உலாவு பொழில் கொள் நாங்கை மன்னும் மாயன் என்றுஎன்று ஓதி

பண்டு போல் அன்று என் மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1321

கொல்லை ஆனாள் பரிசு அழிந்தாள் கோல் வளையார் தம் முகப்பே

மல்லை முந்நீர் தட்டு இலங்கை கட்டு அழித்த மாயன் என்றும்

செல்வம் மல்கு மறையோர் நாங்கை தேவதேவன் என்றுஎன்று ஓதி

பல் வளையாள் என் மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1322

அரக்கர் ஆவி மாள அன்று ஆழ் கடல் சூழ் இலங்கை செற்ற

குரக்கு அரசன் என்றும் கோல வில்லி என்றும் மா மதியை

நெருக்கும் மாடம் நீடு நாங்கை நின்மலன் தான் என்றுஎன்று ஓதி

பரக்கழிந்தாள் என் மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1323

ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த நாதன் என்றும் நானிலம் சூழ்

வேலை அன்ன கோல மேனி வண்ணன் என்றும் மேல் எழுந்து

சேல் உகளும் வயல் கொள் நாங்கை தேவதேவன் என்றுஎன்று ஓதி

பாலின் நல்ல மென் மொழியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1324

நாடி என்தன் உள்ளம் கொண்ட நாதன் என்றும் நான்மறைகள்

தேடி என்றும் காண மாட்டா செல்வன் என்றும் சிறை கொள் வண்டு

சேடு உலவு பொழில் கொள் நாங்கை தேவதேவன் என்றுஎன்று ஓதி

பாடகம் சேர் மெல் அடியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1325

உலகம் ஏத்தும் ஒருவன் என்றும் ஒண் சுடரோடு உம்பர் எய்தா

நிலவும் ஆழி படையன் என்றும் நேசன் என்றும் தென் திசைக்கு

திலதம் அன்ன மறையோர் நாங்கை தேவதேவன் என்றுஎன்று ஓதி

பலரும் ஏச என் மடந்தை பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1326

கண்ணன் என்றும் வானவர்கள் காதலித்து மலர்கள் தூவும்

எண்ணன் என்றும் இன்பன் என்றும் ஏழ் உலகுக்கு ஆதி என்றும்

திண்ண மாடம் நீடு நாங்கை தேவதேவன் என்றுஎன்று ஓதி

பண்ணின் அன்ன மென் மொழியாள் பார்த்தன்பள்ளி பாடுவாளே

#1327

பாருள் நல்ல மறையோர் நாங்கை பார்த்தன்பள்ளி செங்கண்மாலை

வார் கொள் நல்ல முலை மடவாள் பாடலை தாய் மொழிந்த மாற்றம்

கூர் கொள் நல்ல வேல் கலியன் கூறு தமிழ் பத்தும் வல்லார்

ஏர் கொள் நல்ல வைகுந்தத்துள் இன்பம் நாளும் எய்துவாரே

#1328

நும்மை தொழுதோம் நும்தம் பணிசெய்து இருக்கும் நும் அடியோம்

இம்மைக்கு இன்பம் பெற்றோம் எந்தாய் இந்தளூரீரே

எம்மை கடிதா கருமம் அருளி ஆஆ என்று இரங்கி

நம்மை ஒருகால் காட்டி நடந்தால் நாங்கள் உய்யோமே

#1329

சிந்தை தன்னுள் நீங்காது இருந்த திருவே மருவினிய

மைந்தா அம் தண் ஆலி மாலே சோலை மழ களிறே

நந்தா விளக்கின் சுடரே நறையூர் நின்ற நம்பீ என்

எந்தாய் இந்தளூராய் அடியேற்கு இறையும் இரங்காயே

#1330

பேசுகின்றது இதுவே வையம் ஈர் அடியால் அளந்த

மூசி வண்டு முரலும் கண்ணி முடியீர் உம்மை காணும்

ஆசை என்னும் கடலில் வீழ்ந்து இங்கு அயர்த்தோம் அயலாரும்

ஏசுகின்றது இதுவே காணும் இந்தளூரீரே

#1331

ஆசை வழுவாது ஏத்தும் எமக்கு இங்கு இழுக்காய்த்து அடியோர்க்கு

தேசம் அறிய உமக்கே ஆளாய் திரிகின்றோமுக்கு

காசின் ஒளியில் திகழும் வண்ணம் காட்டீர் எம் பெருமான்

வாசி வல்லீர் இந்தளூரீர் வாழ்ந்தே போம் நீரே

#1332

தீ எம் பெருமான் நீர் எம் பெருமான் திசையும் இரு நிலனும்

ஆய் எம் பெருமான் ஆகி நின்றால் அடியோம் காணோமால்

தாய் எம் பெருமான் தந்தைதந்தை ஆவீர் அடியோமுக்

கே எம் பெருமான் அல்லீரோ நீர் இந்தளூரீரே

#1333

சொல்லாது ஒழியகில்லேன் அறிந்த சொல்லில் நும் அடியார்

எல்லாரோடும் ஒக்க எண்ணியிருந்தீர் அடியேனை

நல்லார் அறிவீர் தீயார் அறிவீர் நமக்கு இ உலகத்தில்

எல்லாம் அறிவீர் ஈதே அறியீர் இந்தளூரீரே

#1334

மாட்டீர் ஆனீர் பணி நீர் கொள்ள எம்மை பணி அறியா

வீட்டீர் இதனை வேறே சொன்னோம் இந்தளூரீரே

காட்டீர் ஆனீர் நும்தம் அடிக்கள் காட்டில் உமக்கு இந்த

நாட்டே வந்து தொண்டர் ஆன நாங்கள் உய்யோமே

#1335

முன்னை வண்ணம் பாலின் வண்ணம் முழுதும் நிலைநின்ற

பின்னை வண்ணம் கொண்டல் வண்ணம் வண்ணம் எண்ணுங்கால்

பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம் புரையும் திருமேனி

இன்ன வண்ணம் என்று காட்டீர் இந்தளூரீரே

#1336

எந்தை தந்தை தம்மான் என்றுஎன்று எமர் ஏழ் அளவும்

வந்து நின்ற தொண்டரோர்க்கே வாசி வல்லீரால்

சிந்தை-தன்னுள் முந்தி நிற்றிர் சிறிதும் திருமேனி

இந்த வண்ணம் என்று காட்டீர் இந்தளூரீரே

#1337

ஏர் ஆர் பொழில் சூழ் இந்தளூரில் எந்தை பெருமானை

கார் ஆர் புறவின் மங்கை வேந்தன் கலியன் ஒலிசெய்த

சீர் ஆர் இன் சொல் மாலை கற்று திரிவார் உலகத்தில்

ஆர்ஆர் அவரே அமரர்க்கு என்றும் அமரர் ஆவாரே

#1338

ஆய்ச்சியர் அழைப்ப வெண்ணெய் உண்டு ஒருகால் ஆலிலை வளர்ந்த எம் பெருமான்

பேய்ச்சியை முலை உண்டு இணை மருது இறுத்து பெரு நிலம் அளந்தவன் கோயில்

காய்த்த நீள் கமுகும் கதலியும் தெங்கும் எங்கும் ஆம் பொழில்களின் நடுவே

வாய்த்த நீர் பாயும் மண்ணியின் தென்-பால் திருவெள்ளியங்குடி அதுவே

#1339

ஆநிரை மேய்த்து அன்று அலை கடல் அடைத்திட்டு அரக்கர்-தம் சிரங்களை உருட்டி

கார் நிறை மேகம் கலந்தது ஓர் உருவ கண்ணனார் கருதிய கோயில்

பூ நிரை செருந்தி புன்னை முத்து அரும்பி பொதும்பிடை வரி வண்டு மிண்டி

தேன் இரைத்து உண்டு அங்கு இன் இசை முரலும் திருவெள்ளியங்குடி அதுவே

#1340

கடு விடம் உடைய காளியன் தடத்தை கலக்கி முன் அலக்கழித்து அவன்-தன்

படம் இற பாய்ந்து பல் மணி சிந்த பல் நடம் பயின்றவன் கோயில்

பட அரவு அல்குல் பாவை நல்லார்கள் பயிற்றிய நாடகத்து ஒலி போய்

அடை புடை தழுவி அண்டம் நின்று அதிரும் திருவெள்ளியங்குடி அதுவே

#1341

கறவை முன் காத்து கஞ்சனை காய்ந்த காளமேக திரு உருவன்

பறவை முன் உயர்த்து பாற்கடல் துயின்ற பரமனார் பள்ளிகொள் கோயில்

துறைதுறை-தோறும் பொன் மணி சிதறும் தொகு திரை மண்ணியின் தென்-பால்

செறி மணி மாட கொடி கதிர் அணவும் திருவெள்ளியங்குடி அதுவே

#1342

பாரினை உண்டு பாரினை உமிழ்ந்து பாரதம் கையெறிந்து ஒருகால்

தேரினை ஊர்ந்து தேரினை துரந்த செங்கண்மால் சென்று உறை கோயில்

ஏர் நிரை வயலுள் வாளைகள் மறுகி எமக்கு இடம் அன்று இது என்று எண்ணி

சீர் மலி பொய்கை சென்று அணைகின்ற திருவெள்ளியங்குடி அதுவே

#1343

காற்றிடை பூளை கரந்தென அரந்தை உற கடல் அரக்கர் தம் சேனை

கூற்றிடை செல்ல கொடும் கணை துரந்த கோல வில் இராமன்-தன் கோயில்

ஊற்றிடை நின்ற வாழையின் கனிகள் ஊழ்த்து வீழ்ந்தன உண்டு மண்டி

சேற்றிடை கயல்கள் உகள் திகழ் வயல் சூழ் திருவெள்ளியங்குடி அதுவே

#1344

ஒள்ளிய கருமம் செய்வன் என்று உணர்ந்த மாவலி வேள்வியில் புக்கு

தெள்ளிய குறளாய் மூவடி கொண்டு திக்கு உற வளர்ந்தவன் கோயில்

அள்ளி அம் பொழில்வாய் இருந்து வாழ் குயில்கள் அரிஅரி என்று அவை அழைப்ப

வெள்ளியார் வணங்க விரைந்து அருள்செய்வான் திருவெள்ளியங்குடி அதுவே

#1345

முடி உடை அமரர்க்கு இடர் செய்யும் அசுரர்-தம் பெருமானை அன்று அரி ஆய்

மடியிடை வைத்து மார்வம் முன் கீண்ட மாயனார் மன்னிய கோயில்

படியிடை மாடத்து அடியிடை தூணில் பதித்த பல் மணிகளின் ஒளியால்

விடி பகல் இரவு என்று அறிவு அரிது ஆய திருவெள்ளியங்குடி அதுவே

#1346

குடி குடி ஆக கூடி நின்று அமரர் குணங்களே பிதற்றி நின்று ஏத்த

அடியவர்க்கு அருளி அரவு அணை துயின்ற ஆழியான் அமர்ந்து உறை கோயில்

கடி உடை கமலம் அடியிடை மலர கரும்பொடு பெரும் செந்நெல் அசைய

வடிவு உடை அன்னம் பெடையொடும் சேரும் வயல் வெள்ளியங்குடி அதுவே

#1347

பண்டு முன் ஏனம் ஆகி அன்று ஒருகால் பார் இடந்து எயிற்றினில் கொண்டு

தெண் திரை வருட பாற்கடல் துயின்ற திருவெள்ளியங்குடியானை

வண்டு அறை சோலை மங்கையர் தலைவன் மான வேல் கலியன் வாய் ஒலிகள்

கொண்டு இவை பாடும் தவம் உடையார்கள் ஆள்வர் இ குரை கடல் உலகே

#1348

அறிவது அறியான் அனைத்து உலகும் உடையான் என்னை ஆள் உடையான்

குறிய மாணி உரு ஆய கூத்தன் மன்னி அமரும் இடம்

நறிய மலர் மேல் சுரும்பு ஆர்க்க எழில் ஆர் மஞ்ஞை நடம் ஆட

பொறி கொள் சிறை வண்டு இசை பாடும் புள்ளம்பூதங்குடி தானே

#1349

கள்ள குறளாய் மாவலியை வஞ்சித்து உலகம் கைப்படுத்து

பொள்ளை கரத்த போதகத்தின் துன்பம் தவிர்த்த புனிதன் இடம்

பள்ள செறுவில் கயல் உகள பழன கழனி அதனுள் போய்

புள்ளு பிள்ளைக்கு இரை தேடும் புள்ளம்பூதங்குடி தானே

#1350

மேவா அரக்கர் தென் இலங்கை வேந்தன் வீய சரம் துரந்து

மா வாய் பிளந்து மல் அடர்த்து மருதம் சாய்த்த மாலது இடம்

கா ஆர் தெங்கின் பழம் வீழ கயல்கள் பாய குருகு இரியும்

பூ ஆர் கழனி எழில் ஆரும் புள்ளம்பூதங்குடி தானே

#1351

வெற்பால் மாரி பழுது ஆக்கி விறல் வாள் அரக்கர் தலைவன்-தன்

வற்பு ஆர் திரள் தோள் ஐநான்கும் துணித்த வல் வில் இராமன் இடம்

கற்பு ஆர் புரிசைசெய் குன்றம் கவின் ஆர் கூடம் மாளிகைகள்

பொற்பு ஆர் மாடம் எழில் ஆரும் புள்ளம்பூதங்குடி தானே

#1352

மை ஆர் தடம் கண் கரும் கூந்தல் ஆய்ச்சி மறைய வைத்த தயிர்

நெய் ஆர் பாலோடு அமுதுசெய்த நேமி அம் கை மாயன் இடம்

செய் ஆர் ஆரல் இரை கருதி செம் கால் நாரை சென்று அணையும்

பொய்யா நாவின் மறையாளர் புள்ளம்பூதங்குடி தானே

#1353

மின்னின் அன்ன நுண் மருங்குல் வேய் ஏய் தடம் தோள் மெல்லியற்கா

மன்னு சினத்த மழ விடைகள் ஏழ் அன்று அடர்த்த மாலது இடம்

மன்னும் முது நீர் அரவிந்த மலர் மேல் வரி வண்டு இசை பாட

புன்னை பொன் ஏய் தாது உதிர்க்கும் புள்ளம்பூதங்குடி தானே

#1354

குடையா விலங்கல் கொண்டு ஏந்தி மாரி பழுதா நிரை காத்து

சடையான் ஓட அடல் வாணன் தடம் தோள் துணித்த தலைவன் இடம்

குடியா வண்டு கள் உண்ண கோல நீலம் மட்டு உகுக்கும

புடை ஆர் கழனி எழில் ஆரும் புள்ளம்பூதங்குடி தானே

#1355

கறை ஆர் நெடு வேல் மற மன்னர் வீய விசயன் தேர் கடவி

இறையான் கையில் நிறையாத முண்டம் நிறைத்த எந்தை இடம்

மறையால் முத்தீ அவை வளர்க்கும் மன்னு புகழால் வண்மையால்

பொறையால் மிக்க அந்தணர் வாழ் புள்ளம்பூதங்குடி தானே

#1356

துன்னி மண்ணும் விண் நாடும் தோன்றாது இருளாய் மூடிய நாள்

அன்னம் ஆகி அரு மறைகள் அருளிச்செய்த அமலன் இடம்

மின்னு சோதி நவமணியும் வேயின் முத்தும் சாமரையும்

பொன்னும் பொன்னி கொணர்ந்து அலைக்கும் புள்ளம்பூதங்குடி தானே

#1357

கற்றா மறித்து காளியன் தன் சென்னி நடுங்க நடம்பயின்ற

பொன் தாமரையாள் தன் கேள்வன் புள்ளம்பூதங்குடி தன்மேல்

கற்றார் பரவும் மங்கையர் கோன் கார் ஆர் புயல் கை கலிகன்றி

சொல் தான் ஈரைந்து இவை பாட சோர நில்லா துயர் தாமே

#1358

தாம் தம் பெருமை அறியார் தூது

வேந்தர்க்கு ஆய வேந்தர் ஊர் போல்

காந்தள் விரல் மென் கலை நல் மடவார்

கூந்தல் கமழும் கூடலூரே

#1359

செறும் திண் திமில் ஏறு உடைய பின்னை

பெறும் தண் கோலம் பெற்றார் ஊர் போல்

நறும் தண் தீம் தேன் உண்ட வண்டு

குறிஞ்சி பாடும் கூடலூரே

#1360

பிள்ளை உருவாய் தயிர் உண்டு அடியேன்

உள்ளம் புகுந்த ஒருவர் ஊர் போல்

கள்ள நாரை வயலுள் கயல் மீன்

கொள்ளை கொள்ளும் கூடலூரே

#1361

கூற்று ஏர் உருவின் குறளாய் நிலம் நீர்

ஏற்றான் எந்தை பெருமான் ஊர் போல்

சேற்று ஏர் உழவர் கோதை போது ஊண்

கோல் தேன் முரலும் கூடலூரே

#1362

தொண்டர் பரவ சுடர் சென்று அணவ

அண்டத்து அமரும் அடிகள் ஊர் போல்

வண்டல் அலையுள் கெண்டை மிளிர

கொண்டல் அதிரும் கூடலூரே

#1363

தக்கன் வேள்வி தகர்த்த தலைவன்

துக்கம் துடைத்த துணைவர் ஊர் போல்

எக்கல் இடு நுண் மணல் மேல் எங்கும்

கொக்கின் பழம் வீழ் கூடலூரே

#1364

கரும் தண் கடலும் மலையும் உலகும்

அருந்தும் அடிகள் அமரும் ஊர் போல

பெரும் தண் முல்லைப்பிள்ளை ஓடி

குருந்தம் தழுவும் கூடலூரே

#1365

கலை வாழ் பிணையோடு அணையும் திருநீர்

மலை வாழ் எந்தை மருவும் ஊர் போல்

இலை தாழ் தெங்கின் மேல் நின்று இளநீர்

குலை தாழ் கிடங்கின் கூடலூரே

#1366

பெருகு காதல் அடியேன் உள்ளம்

உருக புகுந்த ஒருவர் ஊர் போல்

அருகு கைதை மலர கெண்டை

குருகு என்று அஞ்சும் கூடலூரே

#1367

காவி பெருநீர் வண்ணன் கண்ணன்

மேவி திகழும் கூடலூர் மேல்

கோவை தமிழால் கலியன் சொன்ன

பாவை பாட பாவம் போமே

#1368

வென்றி மா மழு ஏந்தி முன் மண் மிசை மன்னரை மூவெழுகால்

கொன்ற தேவ நின் குரை கழல் தொழுவது ஓர் வகை எனக்கு அருள்புரியே

மன்றில் மாம் பொழில் நுழைதந்து மல்லிகை மௌவலின் போது அலர்த்தி

தென்றல் மா மணம் கமழ்தர வரு திருவெள்ளறை நின்றானே

#1369

வசை இல் நான்மறை கெடுத்த அம் மலர் அயற்கு அருளி முன் பரி முகமாய்

இசை கொள் வேத நூல் என்று இவை பயந்தவனே எனக்கு அருள்புரியே

உயர் கொள் மாதவி போதொடு உலாவிய மாருதம் வீதியின்வாய்

திசை எலாம் கமழும் பொழில் சூழ் திருவெள்ளறை நின்றானே

#1370

வெய்யனாய் உலகு ஏழ் உடன் நலிந்தவன் உடலகம் இரு பிளவா

கையில் நீள் உகிர் படை அது வாய்த்தவனே எனக்கு அருள்புரியே

மையின் ஆர்தரு வரால் இனம் பாய வண் தடத்திடை கமலங்கள்

தெய்வம் நாறும் ஒண் பொய்கைகள் சூழ் திருவெள்ளறை நின்றானே

#1371

வாம் பரி உக மன்னர் தம் உயிர் செக ஐவர்கட்கு அரசு அளித்த

காம்பின் ஆர் திருவேங்கட பொருப்ப நின் காதலை அருள் எனக்கு

மாம் பொழில் தளிர் கோதிய மட குயில் வாய் அது துவர்ப்பு எய்த

தீம் பலங்கனி தேன் அது நுகர் திருவெள்ளறை நின்றானே

#1372

மான வேல் ஒண் கண் மடவரல் மண் மகள் அழுங்க முந்நீர் பரப்பில்

ஏனம் ஆகி அன்று இரு நிலம் இடந்தவனே எனக்கு அருள்புரியே

கான மா முல்லை கழை கரும்பு ஏறி வெண் முறுவல் செய்து அலர்கின்ற

தேனின் வாய் மலர் முருகு உகுக்கும் திருவெள்ளறை நின்றானே

#1373

பொங்கு நீள் முடி அமரர்கள் தொழுது எழ அமுதினை கொடுத்தளிப்பான்

அங்கு ஓர் ஆமை அது ஆகிய ஆதி நின் அடிமையை அருள் எனக்கு

தங்கு பேடையோடு ஊடிய மதுகரம் தையலார் குழல் அணைவான்

திங்கள் தோய் சென்னி மாடம் சென்று அணை திருவெள்ளறை நின்றானே

#1374

ஆறினோடு ஒரு நான்கு உடை நெடு முடி அரக்கன் தன் சிரம் எல்லாம்

வேறுவேறு உக வில் அது வளைத்தவனே எனக்கு அருள்புரியே

மாறு இல் சோதிய மரகத பாசடை தாமரை மலர் வார்ந்த

தேறல் மாந்தி வண்டு இன் இசை முரல் திருவெள்ளறை நின்றானே

#1375

முன் இ ஏழ் உலகு உணர்வு இன்றி இருள் மிக உம்பர்கள் தொழுது ஏத்த

அன்னம் ஆகி அன்று அரு மறை பயந்தவனே எனக்கு அருள்புரியே

மன்னு கேதகை சூதகம் என்று இவை வனத்திடை சுரும்பு இனங்கள்

தென்ன என்ன வண்டு இன் இசை முரல் திருவெள்ளறை நின்றானே

#1376

ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து சென்று அகல் இடம் முழுதினையும்

பாங்கினால் கொண்ட பரம நின் பணிந்து எழுவேன் எனக்கு அருள்புரியே

ஓங்கு பிண்டியின் செம் மலர் ஏறி வண்டு உழிதர மா ஏறி

தீம் குயில் மிழற்றும் படப்பை திருவெள்ளறை நின்றானே

#1377

மஞ்சு உலாம் மணி மாடங்கள் சூழ் திருவெள்ளறை-அதன் மேய

அஞ்சனம் புரையும் திரு உருவனை ஆதியை அமுதத்தை

நஞ்சு உலாவிய வேல் வலவன் கலி கன்றி சொல் ஐயிரண்டும்

எஞ்சல் இன்றி நின்று ஏத்த வல்லார் இமையோர்க்கு அரசு ஆவர்களே

#1378

உந்தி மேல் நான்முகனை படைத்தான் உலகு உண்டவன்

எந்தை பெம்மான் இமையோர்கள் தாதைக்கு இடம் என்பரால்

சந்தினோடு மணியும் கொழிக்கும் புனல் காவிரி

அந்தி போலும் நிறத்து ஆர் வயல் சூழ் தென் அரங்கமே

#1379

வையம் உண்டு ஆலிலை மேவும் மாயன் மணி நீள் முடி

பை கொள் நாகத்து அணையான் பயிலும் இடம் என்பரால்

தையல் நல்லார் குழல் மாலையும் மற்று அவர் தட முலை

செய்ய சாந்தும் கலந்து இழி புனல் சூழ் தென் அரங்கமே

#1380

பண்டு இ வையம் அளப்பான் சென்று மாவலி கையில் நீர்

கொண்ட ஆழி தட கை குறளன் இடம் என்பரால்

வண்டு பாடும் மது வார் புனல் வந்து இழி காவிரி

அண்டம் நாறும் பொழில் சூழ்ந்து அழகு ஆர் தென் அரங்கமே

#1381

விளைத்த வெம் போர் விறல் வாள் அரக்கன் நகர் பாழ்பட

வளைத்த வல் வில் தடக்கை-அவனுக்கு இடம் என்பரால்

துளை கை யானை மருப்பும் அகிலும் கொணர்ந்து உந்தி முன்

திளைக்கும் செல்வ புனல் காவிரி சூழ் தென் அரங்கமே

#1382

வம்பு உலாம் கூந்தல் மண்டோதரி காதலன் வான் புக

அம்பு தன்னால் முனிந்த அழகன் இடம் என்பரால்

உம்பர் கோனும் உலகு ஏழும் வந்து ஈண்டி வணங்கும் நல்

செம்பொன் ஆரும் மதிள் சூழ்ந்து அழகு ஆர் தென் அரங்கமே

#1383

கலை உடுத்த அகல் அல்குல் வன் பேய் மகள் தாய் என

முலை கொடுத்தாள் உயிர் உண்டவன் வாழ் இடம் என்பரால்

குலை எடுத்த கதலி பொழிலூடும் வந்து உந்தி முன்

அலை எடுக்கும் புனல் காவிரி சூழ் தென் அரங்கமே

#1384

கஞ்சன் நெஞ்சும் கடு மல்லரும் சகடமும் காலினால்

துஞ்ச வென்ற சுடர் ஆழியான் வாழ் இடம் என்பரால்

மஞ்சு சேர் மாளிகை நீடு அகில் புகையும் மா மறையோர்

செம் சொல் வேள்வி புகையும் கமழும் தென் அரங்கமே

#1385

ஏனம் மீன் ஆமையோடு அரியும் சிறு குறளும் ஆய

தானும் ஆய தரணி தலைவன் இடம் என்பரால்

வானும் மண்ணும் நிறைய புகுந்து ஈண்டி வணங்கும் நல்

தேனும் பாலும் கலந்து அன்னவர் சேர் தென் அரங்கமே

#1386

சேயன் என்றும் மிக பெரியன் நுண் நேர்மையன் ஆய இ

மாயை ஆரும் அறியா வகையான் இடம் என்பரால்

வேயின் முத்தும் மணியும் கொணர்ந்து ஆர் புனல் காவிரி

ஆய பொன் மா மதிள் சூழ்ந்து அழகு ஆர் தென் அரங்கமே

#1387

அல்லி மாதர் அமரும் திருமார்வன் அரங்கத்தை

கல்லின் மன்னு மதிள் மங்கையர் கோன் கலிகன்றி சொல்

நல் இசை மாலைகள் நால் இரண்டும் இரண்டும் உடன்

வல்லவர் தாம் உலகு ஆண்டு பின் வான் உலகு ஆள்வரே

#1388

வெருவாதாள் வாய் வெருவி வேங்கடமே வேங்கடமே என்கின்றாளால்

மருவாளால் என் குடங்கால் வாள் நெடும் கண் துயில் மறந்தாள் வண்டு ஆர் கொண்டல்

உருவாளன் வானவர்-தம் உயிராளன் ஒலி திரை நீர் பௌவம் கொண்ட

திருவாளன் என் மகளை செய்தனகள் எங்ஙனம் நான் சிந்திக்கேனே

#1389

கலை ஆளா அகல் அல்குல் கன வளையும் கை ஆளா என் செய்கேன் நான்

விலை ஆளா அடியேனை வேண்டுதியோ வேண்டாயோ என்னும் மெய்ய

மலையாளன் வானவர்-தம் தலையாளன் மராமரம் ஏழ் எய்த வென்றி

சிலையாளன் என் மகளை செய்தனகள் எங்ஙனம் நான் சிந்திக்கேனே

#1390

மான் ஆய மென் நோக்கி வாள் நெடும் கண் நீர் மல்கும் வளையும் சோரும்

தேன் ஆய நறும் துழாய் அலங்கலின் திறம் பேசி உறங்காள் காண்-மின்

கான் ஆயன் கடி மனையில் தயிர் உண்டு நெய் பருக நந்தன் பெற்ற

ஆன் ஆயன் என் மகளை செய்தனகள் அ மனைமீர் அறிகிலேனே

#1391

தாய் வாயில் சொல் கேளாள் தன் ஆயத்தோடு அணையாள் தட மென் கொங்கை

யே ஆர சாந்து அணியாள் எம்பெருமான் திருவரங்கம் எங்கே என்னும்

பேய் மாய முலை உண்டு இ உலகு உண்ட பெரு வயிற்றன் பேசில் நங்காய்

மா மாயன் என் மகளை செய்தனகள் மங்கைமீர் மதிக்கிலேனே

#1392

பூண் முலை மேல் சாந்து அணியாள் பொரு கயல் கண் மை எழுதாள் பூவை பேணாள்

ஏண் அறியாள் எத்தனையும் எம்பெருமான் திருவரங்கம் எங்கே என்னும்

நாள்மலராள் நாயகனாய் நாம் அறிய ஆய்ப்பாடி வளர்ந்த நம்பி

ஆண் மகனாய் என் மகளை செய்தனகள் அ மனைமீர்

#1393

தாது ஆடு வன மாலை தாரானோ என்று என்றே தளர்ந்தாள்
காண்-மின்

யாதானும் ஒன்று உரைக்கில் எம் பெருமான் திருவரங்கம்
என்னும் பூ மேல்

மாது ஆளன் குடம் ஆடி மதுசூதன் மன்னர்க்காய் முன்னம் சென்ற

தூதாளன் என் மகளை செய்தனகள் எங்ஙனம் நான்
சொல்லுகேனே

#1394

வார் ஆளும் இளம் கொங்கை வண்ணம் வேறு ஆயினவாறு
எண்ணாள் எண்ணில்

பேராளன் பேர் அல்லால் பேசாள் இ பெண் பெற்றேன் என்
செய்கேன் நான்

தாராளன் தண் குடந்தை நகர் ஆளன் ஐவர்க்காய் அமரில் உய்த்த

தேராளன் என் மகளை செய்தனகள் எங்ஙனம் நான் செப்புகேனே

#1395

உறவு ஆதும் இலள் என்று என்று ஒழியாது பலர் ஏசும் அலர்
ஆயிற்றால்

மறவாதே எப்பொழுதும் மாயவனே மாதவனே என்கின்றாளால்

பிறவாத பேராளன் பெண்ணாளன் மண்ணாளன் விண்ணோர்-தங்கள்

அறவாளன் என் மகளை செய்தனகள் அ மனைமீர் அறிகிலேனே

#1396

பந்தோடு கழல் மருவாள் பைங்கிளியும் பால் ஊட்டாள் பாவை பேணாள்

வந்தானோ திருவரங்கன் வாரானோ என்று என்றே வளையும் சோரும்

சந்தோகன் பௌழியன் ஐம் தழல் ஓம்பு தைத்திரியன் சாமவேதி

அந்தோ வந்து என் மகளை செய்தனகள் அ மனைமீர் அறிகிலேனே

#1397

சேல் உகளும் வயல் புடை சூழ் திருவரங்கத்து அம்மானை சிந்தைசெய்த

நீல மலர் கண் மடவாள் நிறை அழிவை தாய் மொழிந்த அதனை நேரார்

கால வேல் பரகாலன் கலிகன்றி ஒலி மாலை கற்று வல்லார்

மாலை சேர் வெண்குடை கீழ் மன்னவராய் பொன் உலகில் வாழ்வர் தாமே

#1398

கைம் மான மழ களிற்றை கடல் கிடந்த கரு மணியை

மைம் மான மரகதத்தை மறை உரைத்த திருமாலை

எம்மானை எனக்கு என்றும் இனியானை பனி காத்த

அம்மானை யான் கண்டது அணி நீர் தென் அரங்கத்தே

#1399

பேரானை குறுங்குடி எம் பெருமானை திருத்தண்கால்

ஊரானை கரம்பனூர் உத்தமனை முத்து இலங்கு

கார் ஆர் திண் கடல் ஏழும் மலை ஏழ் இ உலகு ஏழ் உண்டு

ஆராது என்று இருந்தானை கண்டது தென் அரங்கத்தே

#1400

ஏன் ஆகி உலகு இடந்து அன்று இரு நிலனும் பெரு விசும்பும்

தான் ஆய பெருமானை தன் அடியார் மனத்து என்றும்

தேன் ஆகி அமுது ஆகி திகழ்ந்தானை மகிழ்ந்து ஒருகால்

ஆன் ஆயன் ஆனானை கண்டது தென் அரங்கத்தே

#1401

வளர்ந்தவனை தடம் கடலுள் வலி உருவில் திரி சகடம்

தளர்ந்து உதிர உதைத்தவனை தரியாது அன்று இரணியனை

பிளந்தவனை பெரு நிலம் ஈர் அடி நீட்டி பண்டு ஒரு நாள்

அளந்தவனை யான் கண்டது அணி நீர் தென் அரங்கத்தே

#1402

நீர் அழலாய் நெடு நிலனாய் நின்றானை அன்று அரக்கன்

ஊர் அழலால் உண்டானை கண்டார் பின் காணாமே

பேர் அழலாய் பெரு விசும்பாய் பின் மறையோர் மந்திரத்தின்

ஆர் அழலால் உண்டானை கண்டது தென் அரங்கத்தே

#1403

தம் சினத்தை தவிர்த்து அடைந்தார் தவ நெறியை தரியாது

கஞ்சனை கொன்று அன்று உலகம் உண்டு உமிழ்ந்த கற்பகத்தை

வெம் சினத்த கொடும் தொழிலோன் விசை உருவை அசைவித்த

அம் சிறை புள் பாகனை யான் கண்டது தென் அரங்கத்தே

#1404

சிந்தனையை தவ நெறியை திருமாலை பிரியாது

வந்து எனது மனத்து இருந்த வடமலையை வரி வண்டு ஆர்

கொந்து அணைந்த பொழில் கோவல் உலகு அளப்பான் அடி நிமிர்த்த

அந்தணனை யான் கண்டது அணி நீர் தென் அரங்கத்தே

#1405

துவரித்த உடையவர்க்கும் தூய்மை இல்லா சமணர்க்கும்

அவர்கட்கு அங்கு அருள் இல்லா அருளானை தன் அடைந்த

எமர்கட்கும் அடியேற்கும் எம்மாற்கும் எம் அனைக்கும்

அமரர்க்கும் பிரானாரை கண்டது தென் அரங்கத்தே

#1406

பொய் வண்ணம் மனத்து அகற்றி புலன் ஐந்தும் செல வைத்து

மெய் வண்ணம் நினைந்தவர்க்கு மெய்ந்நின்ற வித்தகனை

மை வண்ணம் கரு முகில் போல் திகழ் வண்ணம் மரகதத்தின்

அ வண்ண வண்ணனை யான் கண்டது தென் அரங்கத்தே

#1407

ஆ மருவி நிரை மேய்த்த அணி அரங்கத்து அம்மானை

காமரு சீர் கலிகன்றி ஒலிசெய்த மலி புகழ் சேர்

நா மருவு தமிழ் மாலை நால் இரண்டோடு இரண்டினையும்

தாம் மருவி வல்லார் மேல் சாரா தீவினை தாமே

#1408

பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்வி பதங்களும் பதங்களின் பொருளும்

பிண்டமாய் விரிந்த பிறங்கு ஒளி அனலும் பெருகிய புனலொடு நிலனும்

கொண்டல் மாருதமும் குரை கடல் ஏழும் ஏழு மா மலைகளும் விசும்பும்

அண்டமும் தானாய் நின்ற எம்பெருமான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1409

இந்திரன் பிரமன் ஈசன் என்று இவர்கள் எண் இல் பல் குணங்களே இயற்ற

தந்தையும் தாயும் மக்களும் மிக்க சுற்றமும் சுற்றி நின்று அகலா

பந்தமும் பந்தம் அறுப்பது ஓர் மருந்தும் பான்மையும் பல் உயிர்க்கு எல்லாம்

அந்தமும் வாழ்வும் ஆய எம்பெருமான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1410

மன்னு மாநிலனும் மலைகளும் கடலும் வானமும் தானவர் உலகும்

துன்னு மா இருளாய் துலங்கு ஒளி சுருங்கி தொல்லை நான்மறைகளும் மறைய

பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கி பிறங்கு இருள் நிறம் கெட ஒரு நாள்

அன்னமாய் அன்று அங்கு அரு மறை பயந்தான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1411

மா இரும் குன்றம் ஒன்று மத்து ஆக மாசுணம்-அதனொடும் அளவி

பா இரும் பௌவம் பகடு விண்டு அலற படு திரை விசும்பிடை படர

சேய் இரு விசும்பும் திங்களும் சுடரும் தேவரும் தாம் உடன் திசைப்ப

ஆயிரம் தோளால் அலை கடல் கடைந்தான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1412

எங்ஙனே உய்வர் தானவர் நினைந்தால் இரணியன் இலங்கு பூண் அகலம்

பொங்கு வெம் குருதி பொன் மலை பிளந்து பொழிதரும் அருவி ஒத்து இழிய

வெம் கண் வாள் எயிற்று ஓர் வெள்ளி மா விலங்கல் விண் உற கனல் விழித்து எழுந்தது

அங்ஙனே ஒக்க அரி உரு ஆனான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1413

ஆயிரம் குன்றம் சென்று தொக்கு அனைய அடல் புரை எழில் திகழ் திரள் தோள்

ஆயிரம் துணிய அடல் மழு பற்றி மற்று அவன் அகல் விசும்பு அணைய

ஆயிரம் பெயரால் அமரர் சென்று இறைஞ்ச அறிதுயில் அலை கடல் நடுவே

ஆயிரம் சுடர் வாய் அரவு அணை துயின்றான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1414

சுரி குழல் கனி வாய் திருவினை பிரித்த கொடுமையின் கடு விசை அரக்கன்

எரிவிழித்து இலங்கும் மணி முடி பொடிசெய்து இலங்கை பாழ்படுப்பதற்கு எண்ணி

வரி சிலை வளைய அடு சரம் துரந்து மறி கடல் நெறிபட மலையால்

அரி குலம் பணிகொண்டு அலை கடல் அடைத்தான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1415

ஊழியாய் ஓமத்து உச்சியாய் ஒருகால் உடைய தேர் ஒருவனாய் உலகில்

சூழி மால் யானை துயர் கெடுத்து இலங்கை மலங்க அன்று அடு சரம் துரந்து

பாழியால் மிக்க பார்த்தனுக்கு அருளி பகலவன் ஒளி கெட பகலே

ஆழியால் அன்று அங்கு ஆழியை மறைத்தான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1416

பேயினார் முலை ஊண் பிள்ளையாய் ஒருகால் பெரு நிலம் விழுங்கி அது உமிழ்ந்த

வாயனாய் மாலாய் ஆலிலை வளர்ந்து மணி முடி வானவர் தமக்கு

சேயனாய் அடியோர்க்கு அணியனாய் வந்து என் சிந்தையுள் வெம் துயர் அறுக்கும்

ஆயனாய் அன்று குன்றம் ஒன்று எடுத்தான் அரங்க மாநகர் அமர்ந்தானே

#1417

பொன்னும் மா மணியும் முத்தமும் சுமந்து பொரு திரை மா நதி புடை சூழ்ந்து

அன்னம் மாடு உலவும் அலை புனல் சூழ்ந்த அரங்க மாநகர் அமர்ந்தானை

மன்னு மா மாட மங்கையர் தலைவன் மான வேல் கலியன் வாய் ஒலிகள்

பன்னிய பனுவல் பாடுவார் நாளும் பழவினை பற்று அறுப்பாரே

#1418

ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாது இரங்கி மற்று அவற்கு இன் அருள் சுரந்து

மாழை மான் மட நோக்கி உன் தோழி உம்பி எம்பி என்று ஒழிந்திலை உகந்து

தோழன் நீ எனக்கு இங்கு ஒழி என்ற சொற்கள் வந்து அடியேன் மனத்து இருந்திட

ஆழி வண்ண நின் அடி இணை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1419

வாத மா மகன் மர்க்கடம் விலங்கு மற்று ஓர் சாதி என்று ஒழிந்திலை உகந்து

காதல் ஆதரம் கடலினும் பெருக செய் தகவினுக்கு இல்லை கைம்மாறு என்று

கோது இல் வாய்மையினாயொடும் உடனே உண்பன் நான் என்ற ஒண் பொருள் எனக்கும்

ஆதல் வேண்டும் என்று அடி இணை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1420

கடி கொள் பூம் பொழில் காமரு பொய்கை வைகு தாமரை வாங்கிய வேழம்

முடியும் வண்ணம் ஓர் முழு வலி முதலை பற்ற மற்று அது நின் சரண் நினைப்ப

கொடிய வாய் விலங்கின் உயிர் மலங்க கொண்ட சீற்றம் ஒன்று உண்டு உளது அறிந்து உன்

அடியனேனும் வந்து அடி இணை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1421

நஞ்சு சோர்வது ஓர் வெம் சின அரவம் வெருவி வந்து நின் சரண் என சரண் ஆய்

நெஞ்சில் கொண்டு நின் அம் சிறை பறவைக்கு அடைக்கலம் கொடுத்து அருள்செய்தது அறிந்து

வெம் சொலாளர்கள் நமன் தமர் கடியர் கொடிய செய்வன உள அதற்கு அடியேன்

அஞ்சி வந்து நின் அடி இணை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1422

மாகம் மாநிலம் முழுதும் வந்து இறைஞ்சும் மலர் அடி கண்ட மா மறையாளன்

தோகை மா மயில் அன்னவர் இன்பம் துற்றிலாமையில் அத்த இங்கு ஒழிந்து

போகம் நீ எய்தி பின்னும் நம் இடைக்கே போதுவாய் என்ற பொன் அருள் எனக்கும்

ஆக வேண்டும் என்று அடி இணை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1423

மன்னு நான்மறை மா முனி பெற்ற மைந்தனை மதியாத வெம் கூற்றம்

தன்னை அஞ்சி நின் சரண் என சரணாய் தகவு இல் காலனை உக முனிந்து ஒழியா

பின்னை என்றும் நின் திருவடி பிரியா வண்ணம் எண்ணிய பேர் அருள் எனக்கும்

அன்னது ஆகும் என்று அடி இணை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1424

ஓது வாய்மையும் உவனிய பிறப்பும் உனக்கு முன் தந்த அந்தணன் ஒருவன்

காதல் என் மகன் புகல் இடம் காணேன் கண்டு நீ தருவாய் எனக்கு என்று

கோது இல் வாய்மையினான் உனை வேண்டிய குறை முடித்து அவன் சிறுவனை கொடுத்தாய்

ஆதலால் வந்து உன் அடி இணை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1425

வேத வாய்மொழி அந்தணன் ஒருவன் எந்தை நின் சரண் என்னுடை மனைவி

காதல் மக்களை பயத்தலும் காணாள் கடியது ஓர் தெய்வம் கொண்டு ஒளிக்கும் என்று அழைப்ப

ஏதலார் முன்னே இன் அருள் அவற்கு செய்து உன் மக்கள் மற்று இவர் என்று கொடுத்தாய்

ஆதலால் வந்து உன் அடி இணை அடைந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1426

துளங்கு நீள் முடி அரசர்-தம் குரிசில் தொண்டை மன்னவன் திண் திறல் ஒருவற்கு

உளம் கொள் அன்பினோடு இன் அருள் சுரந்து அங்கு ஓடு நாழிகை ஏழ் உடன் இருப்ப

வளம் கொள் மந்திரம் மற்று அவற்கு அருளிச்செய்த ஆறு அடியேன் அறிந்து உலகம்

அளந்த பொன் அடியே அடைந்து உய்ந்தேன் அணி பொழில் திருவரங்கத்து அம்மானே

#1427

மாட மாளிகை சூழ் திருமங்கை மன்னன் ஒன்னலர்-தங்களை வெல்லும்

ஆடல் மா வலவன் கலிகன்றி அணி பொழில் திருவரங்கத்து அம்மானை

நீடு தொல் புகழ் ஆழி வல்லானை எந்தையை நெடுமாலை நினைந்த

பாடல் பத்து இவை பாடு-மின் தொண்டீர் பாட நும்மிடை பாவம் நில்லாவே

#1428

கை இலங்கு ஆழி சங்கன் கரு முகில் திரு நிறத்தன்

பொய் இலன் மெய்யன் தன் தாள் அடைவரேல் அடிமை ஆக்கும்

செய் அலர் கமலம் ஓங்கு செறி பொழில் தென் திருப்பேர்

பை அரவு அணையான் நாமம் பரவி நான் உய்ந்த ஆறே

#1429

வங்கம் ஆர் கடல்கள் ஏழும் மலையும் வானகமும் மற்றும்

அம் கண் மா ஞாலம் எல்லாம் அமுதுசெய்து உமிழ்ந்த எந்தை

திங்கள் மா முகில் அணவு செறி பொழில் தென் திருப்பேர்

எங்கள் மால் இறைவன் நாமம் ஏத்தி நான் உய்ந்த ஆறே

#1430

ஒருவனை உந்தி பூ மேல் ஓங்குவித்து ஆகம் தன்னால்

ஒருவனை சாபம் நீக்கி உம்பர் ஆள் என்று விட்டான்

பெரு வரை மதிள்கள் சூழ்ந்த பெரு நகர் அரவு அணை மேல்

கருவரை வண்ணன் தன் பேர் கருதி நான் உய்ந்த ஆறே

#1431

ஊன் அமர் தலை ஒன்று ஏந்தி உலகு எலாம் திரியும் ஈசன்

ஈன் அமர் சாபம் நீக்காய் என்ன ஒண் புனலை ஈந்தான்

தேன் அமர் பொழில்கள் சூழ்ந்த செறி வயல் தென் திருப்பேர்

வானவர் தலைவன் நாமம் வாழ்த்தி நான் உய்ந்த ஆறே

#1432

வக்கரன் வாய் முன் கீண்ட மாயனே என்று வானோர்

புக்கு அரண் தந்தருளாய் என்ன பொன் ஆகத்தானை

நக்கு அரி உருவம் ஆகி நகம் கிளர்ந்து இடந்து உகந்த

சக்கர செல்வன் தென்பேர் தலைவன் தாள் அடைந்து
உய்ந்தேனே

#1433

விலங்கலால் கடல் அடைத்து விளங்கு இழை பொருட்டு
வில்லால்

இலங்கை மாநகர்க்கு இறைவன் இருபது புயம் துணித்தான்

நலம் கொள் நான்மறை வல்லார்கள் ஓத்து ஒலி ஏத்த கேட்டு

மலங்கு பாய் வயல் திருப்பேர் மருவி நான் வாழ்ந்த ஆறே

#1434

வெண்ணெய் தான் அமுதுசெய்ய வெகுண்டு மத்து ஆய்ச்சி ஓச்சி

கண்ணி ஆர் குறும் கயிற்றால் கட்ட வெட்டென்று இருந்தான்

திண்ண மா மதிள்கள் சூழ்ந்த தென் திருப்பேருள் வேலை

வண்ணனார் நாமம் நாளும் வாய் மொழிந்து உய்ந்த ஆறே

#1435

அம் பொன் ஆர் உலகம் ஏழும் அறிய ஆய்ப்பாடி-தன்னுள்

கொம்பு அனார் பின்னை கோலம் கூடுதற்கு ஏறு கொன்றான்

செம்பொன் ஆர் மதிள்கள் சூழ்ந்த தென் திருப்பேருள் மேவும்

எம்பிரான் நாமம் நாளும் ஏத்தி நான் உய்ந்த ஆறே

#1436

நால் வகை வேதம் ஐந்து வேள்வி ஆறு அங்கம் வல்லார்

மேலை வானவரின் மிக்க வேதியர் ஆதி காலம்

சேல் உகள் வயல் திருப்பேர் செங்கண்மாலோடும் வாழ்வார்

சீல மா தவத்தர் சிந்தை ஆளி என் சிந்தையானே

#1437

வண்டு அறை பொழில் திருப்பேர் வரி அரவு அணையில் பள்ளி

கொண்டு உறைகின்ற மாலை கொடி மதிள் மாட மங்கை

திண் திறல் தோள் கலியன் செம் சொலால் மொழிந்த மாலை

கொண்டு இவை பாடி ஆட கூடுவர் நீள் விசும்பே

#1438

தீது அறு நிலத்தொடு எரி காலினொடு நீர் கெழு விசும்பும் அவையாய்

மாசு அறு மனத்தினொடு உறக்கமொடு இறக்கை அவை ஆய பெருமான்

தாய் செற உளைந்து தயிர் உண்டு குடம் ஆடு தட மார்வர் தகை சேர்

நாதன் உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே

#1439

உய்யும் வகை உண்டு சொன செய்யில் உலகு ஏழும் ஒழியாமை முன நாள்

மெய்யின் அளவே அமுதுசெய்ய வல ஐயன் அவன் மேவும் நகர் தான்

மைய வரி வண்டு மது உண்டு கிளையோடு மலர் கிண்டி அதன் மேல்

நைவளம் நவிற்று பொழில் நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே

#1440

உம்பர் உலகு ஏழு கடல் ஏழு மலை ஏழும் ஒழியாமை முன நாள்

தம் பொன் வயிறு ஆர் அளவும் உண்டு அவை உமிழ்ந்த தட மார்வர் தகை சேர்

வம்பு மலர்கின்ற பொழில் பைம்பொன் வரு தும்பி மணி கங்குல் வயல் சூழ்

நம்பன் உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே

#1441

பிறையின் ஒளி எயிறு இலக முறுகி எதிர் பொருதும் என வந்த அசுரர்

இறைகள் அவை நெறுநெறு என எறிய அவர் வயிறு அழல நின்ற பெருமான்

சிறை கொள் மயில் குயில் பயில மலர்கள் உக அளி முரல
அடிகொள் நெடு மா

நறைசெய் பொழில் மழை தவழும் நந்திபுரவிண்ணகரம் நண்ணு
மனமே

#1442

மூள எரி சிந்தி முனிவு எய்தி அமர் செய்தும் என வந்த அசுரர்

தோளும் அவர் தாளும் முடியோடு பொடி ஆக நொடி ஆம் அளவு
எய்தான்

வாளும் வரி வில்லும் வளை ஆழி கதை சங்கம் இவை அம் கை
உடையான்

நாளும் உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே

#1443

தம்பியொடு தாம் ஒருவர் தன் துணைவி காதல் துணை ஆக முன
நாள்

வெம்பி எரி கானகம் உலாவும் அவர் தாம் இனிது மேவும் நகர் தான்

கொம்பு குதி கொண்டு குயில் கூவ மயில் ஆலும் எழில் ஆர் புறவு
சேர்

நம்பி உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே

#1444

தந்தை மனம் உந்து துயர் நந்த இருள் வந்த விறல் நந்தன் மதலை

எந்தை இவன் என்று அமரர் கந்த மலர் கொண்டு தொழ நின்ற நகர் தான்

மந்த முழவு ஓசை மழையாக எழு கார் மயில்கள் ஆடு பொழில் சூழ்

நந்தி பணிசெய்த நகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே

#1445

எண்ணில் நினைவு எய்தி இனி இல்லை இறை என்று முனியாளர் திரு ஆர்

பண்ணில் மலி கீதமொடு பாடி அவர் ஆடலொடு கூட எழில் ஆர்

மண்ணில் இது போல நகர் இல்லை என வானவர்கள் தாம் மலர்கள் தூய்

நண்ணி உறைகின்ற நகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே

#1446

வங்கம் மலி பௌவம் அது மா முகடின் உச்சி புக மிக்க பெருநீர்

அங்கம் அழியார் அவனது ஆணை தலை சூடும் அடியார் அறிதியேல்

பொங்கு புனல் உந்து மணி கங்குல் இருள் சீறும் ஒளி எங்கும் உளதால்

நங்கள் பெருமான் உறையும் நந்திபுரவிண்ணகரம் நண்ணு மனமே

#1447

நறை செய் பொழில் மழை தவழும் நந்திபுரவிண்ணகரம் நண்ணி உறையும்

உறை கொள் புகர் ஆழி சுரி சங்கம் அவை அம் கை உடையானை ஒளி சேர்

கறை வளரும் வேல் வல்ல கலியன் ஒலி மாலை இவை ஐந்தும் ஐந்தும்

முறையின் இவை பயில வல அடியவர்கள் கொடுவினைகள் முழுது அகலுமே

#1448

வண்டு உணும் நறு மலர் இண்டை கொண்டு

பண்டை நம் வினை கெட என்று அடி மேல்

தொண்டரும் அமரரும் பணிய நின்று அங்கு

அண்டமொடு அகல் இடம் அளந்தவனே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1449

அண்ணல் செய்து அலை கடல் கடைந்து அதனுள்

கண் நுதல் நஞ்சு உண்ண கண்டவனே

விண்ணவர் அமுது உண அமுதில் வரும்

பெண் அமுது உண்ட எம் பெருமானே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1450

குழல் நிற வண்ண நின் கூறு கொண்ட

தழல் நிற வண்ணன் நண்ணார் நகரம்

விழ நனி மலை சிலை வளைவு செய்து

அங்கு அழல் நிற அம்பு அதுஆனவனே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1451

நிலவொடு வெயில் நிலவு இரு சுடரும்

உலகமும் உயிர்களும் உண்டு ஒருகால்

கலை தரு குழவியின் உருவினையாய்

அலை கடல் ஆலிலை வளர்ந்தவனே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1452

பார் எழு கடல் எழு மலை எழுமாய்

சீர் கெழும் இ உலகு ஏழும் எல்லாம்

ஆர் கெழு வயிற்றினில் அடக்கி நின்று அங்கு

ஓரெழுத்து ஓர் உரு ஆனவனே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1453

கார் கெழு கடல்களும் மலைகளுமாய்

ஏர் கெழும் உலகமும் ஆகி முத

லார்களும் அறிவு அரும் நிலையினையாய்

சீர் கெழு நான்மறை ஆனவனே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1454

உருக்கு உறு நறு நெய் கொண்டு ஆர் அழலில்

இருக்கு உறும் அந்தணர் சந்தியின்வாய்

பெருக்கமொடு அமரர்கள் அமர நல்கும்

இருக்கினில் இன் இசை ஆனவனே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1455

காதல்செய்து இளையவர் கலவி தரும்

வேதனை வினை அது வெருவுதல் ஆம்

ஆதலின் உனது அடி அணுகுவன் நான்

போது அலர் நெடுமுடி புண்ணியனே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1456

சாதலும் பிறத்தலும் என்று இவற்றை

காதல்செய்யாது உன கழல் அடைந்தேன்

ஓதல் செய் நான்மறை ஆகி உம்பர்

ஆதல் செய் மூவுரு ஆனவனே

ஆண்டாய் உனை காண்பது ஓர் அருள் எனக்கு அருளுதியேல்

வேண்டேன் மனைவாழ்க்கையை விண்ணகர் மேயவனே

#1457

பூ மரு பொழில் அணி விண்ணகர் மேல்

காமரு சீர் கலிகன்றி சொன்ன

பா மரு தமிழ் இவை பாட வல்லார்

வாமனன் அடி இணை மருவுவரே

#1458

பொறுத்தேன் புன்சொல் நெஞ்சில் பொருள் இன்பம் என இரண்டும்

இறுத்தேன் ஐம்புலன்கள் கடன் ஆயின வாயில் ஒட்டி

அறுத்தேன் ஆர்வ செற்றம் அவை தம்மை மனத்து அகற்றி

வெறுத்தேன் நின் அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே

#1459

மறந்தேன் உன்னை முன்னம் மறந்த மதி இல் மனத்தால்

இறந்தேன் எத்தனையும் அதனால் இடும்பை குழியில்

பிறந்தே எய்த்து ஒழிந்தேன் பெருமான் திரு மார்பா

சிறந்தேன் நின் அடிக்கே திருவிண்ணகர் மேயவனே

#1460

மான் ஏய் நோக்கியர் தம் வயிற்று குழியில் உழைக்கும்

ஊன் ஏய் ஆக்கை தன்னை உதவாமை உணர்ந்துஉணர்ந்து

வானே மாநிலமே வந்துவந்து என் மனத்து இருந்த

தேனே நின் அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே

#1461

பிறிந்தேன் பெற்ற மக்கள் பெண்டிர் என்று இவர் பின் உதவாது

அறிந்தேன் நீ பணித்த அருள் என்னும் ஒள் வாள் உருவி

எறிந்தேன் ஐம்புலன்கள் இடர் தீர எறிந்து வந்து

செறிந்தேன் நின் அடிக்கே திருவிண்ணகர் மேயவனே

#1462

பாண் தேன் வண்டு அறையும் குழலார்கள் பல்லாண்டு இசைப்ப

ஆண்டார் வையம் எல்லாம் அரசு ஆகி முன் ஆண்டவரே

மாண்டார் என்று வந்தார் அந்தோ மனைவாழ்க்கை தன்னை

வேண்டேன் நின் அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே

#1463

கல்லா ஐம்புலன்கள் அவை கண்டவாறு செய்யகில்லேன்

மல்லா மல் அமருள் மல்லர் மாள மல் அடர்த்த

மல்லா மல்லல் அம் சீர் மதிள் நீர் இலங்கை அழித்த

வில்லா நின் அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே

#1464

வேறா யான் இரந்தேன் வெகுளாது மனக்கொள் எந்தாய்

ஆறா வெம் நரகத்து அடியேனை இட கருதி

கூறா ஐவர் வந்து குமைக்க குடிவிட்டவரை

தேறாது உன் அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே

#1465

தீ வாய் வல்வினையார் உடன் நின்று சிறந்தவர் போல்

மேவா வெம் நரகத்து இட உற்று விரைந்து வந்தார்

மூவா வானவர் தம் முதல்வா மதி கோள் விடுத்த

தேவா நின் அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே

#1466

போது ஆர் தாமரையாள் புலவி குல வானவர்-தம்

கோதா கோது இல் செங்கோல் குடை மன்னர் இடை நடந்த

தூதா தூ மொழியாய் சுடர் போல் என் மனத்து இருந்த

வேதா நின் அடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே

#1467

தேன் ஆர் பூம் புறவில் திருவிண்ணகர் மேயவனை

வான் ஆரும் மதிள் சூழ் வயல் மங்கையர் கோன் மருவார்

ஊன் ஆர் வேல் கலியன் ஒலிசெய் தமிழ் மாலை வல்லார்

கோனாய் வானவர்-தம் கொடி மாநகர் கூடுவரே

#1468

துறப்பேன் அல்லேன் இன்பம் துறவாது நின் உருவம்

மறப்பேன் அல்லேன் என்றும் மறவாது யான் உலகில்

பிறப்பேன் ஆக எண்ணேன் பிறவாமை பெற்றது நின்

திறத்தேன் ஆதன்மையால் திருவிண்ணகரானே

#1469

துறந்தேன் ஆர்வ செற்ற சுற்றம் துறந்தமையால்

சிறந்தேன் நின் அடிக்கே அடிமை திருமாலே

அறம் தானாய் திரிவாய் உன்னை என் மனத்து அகத்தே

திறம்பாமல் கொண்டேன் திருவிண்ணகரானே

#1470

மான் ஏய் நோக்கு நல்லார் மதி போல் முகத்து உலவும்

ஊன் ஏய் கண் வாளிக்கு உடைந்து ஓட்டந்து உன் அடைந்தேன்

கோனே குறுங்குடியுள் குழகா திருநறையூர்

தேனே வரு புனல் சூழ் திருவிண்ணகரானே

#1471

சாந்து ஏந்து மென் முலையார் தடம் தோள் புணர் இன்ப வெள்ளத்து

ஆழ்ந்தேன் அரு நரகத்து அழுந்தும் பயன் படைத்தேன்

போந்தேன் புண்ணியனே உன்னை எய்தி என் தீவினைகள்

தீர்ந்தேன் நின் அடைந்தேன் திருவிண்ணகரானே

#1472

மற்று ஓர் தெய்வம் எண்ணேன் உன்னை என் மனத்து வைத்து

பெற்றேன் பெற்றதுவும் பிறவாமை எம் பெருமான்

வற்றா நீள் கடல் சூழ் இலங்கை இராவணனை

செற்றாய் கொற்றவனே திருவிண்ணகரானே

#1473

மை ஒண் கரும் கடலும் நிலனும் மணி வரையும்

செய்ய சுடர் இரண்டும் இவை ஆய நின்னை நெஞ்சில்

உய்யும் வகை உணர்ந்தேன் உண்மையால் இனி யாதும் மற்று ஓர்

தெய்வம் பிறிது அறியேன் திருவிண்ணகரானே

#1474

வேறே கூறுவது உண்டு அடியேன் விரித்து உரைக்கும்

ஆறே நீ பணியாது அடை நின் திருமனத்து

கூறேன் நெஞ்சு-தன்னால் குணம் கொண்டு மற்று ஓர் தெய்வம்

தேறேன் உன்னை அல்லால் திருவிண்ணகரானே

#1475

முளிந்தீந்த வெம் கடத்து மூரி பெரும் களிற்றால்

விளிந்தீந்த மா மரம் போல் வீழ்ந்தாரை நினையாதே

அளிந்து ஓர்ந்த சிந்தை நின்-பால் அடியேற்கு வான் உலகம்

தெளிந்தே என்று எய்துவது திருவிண்ணகரானே

#1476

சொல்லாய் திருமார்வா உனக்கு ஆகி தொண்டு பட்ட

நல்லேனை வினைகள் நலியாமை நம்பு நம்பீ

மல்லா குடம் ஆடீ மதுசூதனே உலகில்

செல்லா நல் இசையாய் திருவிண்ணகரானே

#1477

தார் ஆர் மலர் கமல தடம் சூழ்ந்த தண் புறவில்

சீர் ஆர் நெடு மறுகின் திருவிண்ணகரானை

கார் ஆர் புயல் தட கை கலியன் ஒலி மாலை

ஆர்ஆர் இவை வல்லார் அவர்க்கு அல்லல் நில்லாவே

#1478

கண்ணும் சுழன்று பீளையோடு ஈளை வந்து ஏங்கினால்

பண் இன் மொழியார் பைய நட-மின் என்னாத முன்

விண்ணும் மலையும் வேதமும் வேள்வியும் ஆயினான்

நண்ணும் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1479

கொங்கு உண் குழலார் கூடி இருந்து சிரித்து நீர்

இங்கு என் இருமி எம்-பால் வந்தது என்று இகழாத முன்

திங்கள் எரி கால் செம் சுடர் ஆயவன் தேசு உடை

நங்கள் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1480

கொங்கு ஆர் குழலார் கூடி இருந்து சிரித்து எம்மை

எம் கோலம் ஐயா என் இனி காண்பது என்னாத முன்

செங்கோல் வலவன் தாள் பணிந்து ஏத்தி திகழும் ஊர்

நம் கோன் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1481

கொம்பும் அரவமும் வல்லியும் வென்ற நுண் ஏர் இடை

வம்பு உண் குழலார் வாசல் அடைத்து இகழாத முன்

செம்பொன் கமுகு இனம் தான் கனியும் செழும் சோலை சூழ்

நம்பன் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1482

விலங்கும் கயலும் வேலும் ஒண் காவியும் வென்ற கண்

சலம் கொண்ட சொல்லார் தாங்கள் சிரித்து இகழாத முன்

மலங்கும் வராலும் வாளையும் பாய் வயல் சூழ்தரு

நலம் கொள் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1483

மின் நேர் இடையார் வேட்கையை மாற்றியிருந்து

என் நீர் இருமி எம்-பால் வந்தது என்று இகழாத முன்

தொல் நீர் இலங்கை மலங்க விலங்கு எரி ஊட்டினான்

நல் நீர் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1484

வில் ஏர் நுதலார் வேட்கையை மாற்றி சிரித்து இவன்

பொல்லான் திரைந்தான் என்னும் புறன் உரை கேட்பதன் முன்

சொல் ஆர் மறை நான்கு ஓதி உலகில் நிலாயவர்

நல்லார் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1485

வாள் ஒண் கண் நல்லார் தாங்கள் மதனன் என்றார்-தம்மை

கேள்-மின்கள் ஈளையோடு ஏங்கு கிழவன் என்னாத முன்

வேள்வும் விழவும் வீதியில் என்றும் அறாத ஊர்

நாளும் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1486

கனி சேர்ந்து இலங்கு நல் வாயவர் காதன்மை விட்டிட

குனி சேர்ந்து உடலம் கோலில் தளர்ந்து இளையாத முன்

பனி சேர் விசும்பில் பால்மதி கோள் விடுத்தான் இடம்

நனி சேர் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே

#1487

பிறை சேர் நுதலார் பேணுதல் நம்மை இலாத முன்

நறை சேர் பொழில் சூழ் நறையூர் தொழு நெஞ்சமே என்ற

கறை ஆர் நெடு வேல் மங்கையர் கோன் கலிகன்றி சொல்

மறவாது உரைப்பவர் வானவர்க்கு இன் அரசு ஆவரே

#1488

கலங்க முந்நீர் கடைந்து அமுதம் கொண்டு இமையோர்

துளங்கல் தீர நல்கு சோதி சுடர் ஆய

வலங்கை ஆழி இடங்கை சங்கம் உடையான் ஊர்

நலம் கொள் வாய்மை அந்தணர் வாழும் நறையூரே

#1489

முனை ஆர் சீயம் ஆகி அவுணன் முரண் மார்வம்

புனை வாள் உகிரால் போழ்பட ஈர்ந்த புனிதன் ஊர்

சினை ஆர் தேமாம் செம் தளிர் கோதி குயில் கூவும்

நனை ஆர் சோலை சூழ்ந்து அழகு ஆய நறையூரே

#1490

ஆனை புரவி தேரொடு காலாள் அணிகொண்ட

சேனை தொகையை சாடி இலங்கை செற்றான் ஊர்

மீனை தழுவி வீழ்ந்து எழும் மள்ளர்க்கு அலமந்து

நான புதலில் ஆமை ஒளிக்கும் நறையூரே

#1491

உறி ஆர் வெண்ணெய் உண்டு உரலோடும் கட்டுண்டு

வெறி ஆர் கூந்தல் பின்னை பொருட்டு ஆன் வென்றான் ஊர்

பொறி ஆர் மஞ்ஞை பூம் பொழில்-தோறும் நடம் ஆட

நறு நாள்மலர் மேல் வண்டு இசை பாடும் நறையூரே

#1492

விடை ஏழ் வென்று மென் தோள் ஆய்ச்சிக்கு அன்பனாய்

நடையால் நின்ற மருதம் சாய்த்த நாதன் ஊர்

பெடையோடு அன்னம் பெய் வளையார் தம் பின் சென்று

நடையோடு இயலி நாணி ஒளிக்கும் நறையூரே

#1493

பகு வாய் வன் பேய் கொங்கை சுவைத்து ஆருயிர் உண்டு

புகு வாய் நின்ற போதகம் வீழ பொருதான் ஊர்

நெகு வாய் நெய்தல் பூ மது மாந்தி கமலத்தின்

நகு வாய் மலர் மேல் அன்னம் உறங்கும் நறையூரே

#1494

முந்து நூலும் முப்புரி நூலும் முன் ஈந்த

அந்தணாளன் பிள்ளையை அஞ்ஞான்று அளித்தான் ஊர்

பொந்தில் வாழும் பிள்ளைக்கு ஆகி புள் ஓடி

நந்து வாரும் பைம் புனல் வாவி நறையூரே

#1495

வெள்ளை புரவி தேர் விசயற்காய் விறல் வியூகம்

விள்ள சிந்து கோன் விழ ஊர்ந்த விமலன் ஊர்

கொள்ளை கொழு மீன் உண் குருகு ஓடி பெடையோடும்

நள்ள கமல தேறல் உகுக்கும் நறையூரே

#1496

பாரை ஊரும் பாரம் தீர பார்த்தன்-தன்

தேரை ஊரும் தேவதேவன் சேறும் ஊர்

தாரை ஊரும் தண் தளிர் வேலி புடை சூழ

நாரை ஊரும் நல் வயல் சூழ்ந்த நறையூரே

#1497

தாம துளப நீள் முடி மாயன் தான் நின்ற

நாம திரள் மா மாளிகை சூழ்ந்த நறையூர் மேல்

காம கதிர் வேல் வல்லான் கலியன் ஒலி மாலை

சேம துணை ஆம் செப்பும் அவர்க்கு திருமாலே

#1498

அம்பரமும் பெரு நிலனும் திசைகள் எட்டும் அலை கடலும் குல வரையும் உண்ட கண்டன்

கொம்பு அமரும் வட மரத்தின் இலை மேல் பள்ளி கூடினான் திருவடியே கூடகிற்பீர்

வம்பு அவிழும் செண்பகத்தின் வாசம் உண்டு மணி வண்டு வகுளத்தின் மலர் மேல் வைகும்

செம்பியன் கோ செங்கணான் சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம் சேர்-மின்களே

#1499

கொழும் கயலாய் நெடு வெள்ளம் கொண்ட காலம் குல வரையின் மீது ஓடி அண்டத்து அப்பால்

எழுந்து இனிது விளையாடும் ஈசன் எந்தை இணை அடி கீழ் இனிது இருப்பீர் இன வண்டு ஆலும்

உழும் செறுவில் மணி கொணர்ந்து கரை மேல் சிந்தி உலகு எல்லாம் சந்தனமும் அகிலும் கொள்ள

செழும் பொன்னி வளம் கொடுக்கும் சோழன் சேர்ந்த திருநறையூர் மணிமாடம் சேர்-மின்களே

#1500

பவ்வ நீர் உடை ஆடையாக சுற்றி பார் அகலம் திருவடியா பவனம் மெய்யா

செவ்வி மாதிரம் எட்டும் தோளா அண்டம் திருமுடியா நின்றான்-பால் செல்லகிற்பீர்

கவ்வை மா களிறு உந்தி வெண்ணி ஏற்ற கழல் மன்னர் மணி முடி மேல் காகம் ஏற

தெய்வ வாள் வலம் கொண்ட சோழன் சேர்ந்த திருநறையூர் மணிமாடம் சேர்-மின்களே

#1501

பைம் கண் ஆள் அரி உருவாய் வெருவ நோக்கி பரு வர தோள் இரணியனை பற்றி வாங்கி

அம் கை வாள் உகிர் நுதியால் அவனது ஆகம் அம் குருதி பொங்குவித்தான் அடி கீழ் நிற்பீர்

வெம் கண் மா களிறு உந்தி வெண்ணி ஏற்ற விறல் மன்னர் திறல் அழிய வெம் மா உய்த்த

செங்கணான் கோ சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர் மணிமாடம் சேர்-மின்களே

#1502

அன்று உலகம் மூன்றினையும் அளந்து வேறு ஓர் அரி உருவாய் இரணியனது ஆகம் கீண்டு

வென்று அவனை விண் உலகில் செல உய்த்தாற்கு விருந்து ஆவீர் மேல் எழுந்து விலங்கல் பாய்ந்து

பொன் சிதறி மணி கொணர்ந்து கரை மேல் சிந்தி புலம் பரந்து நிலம் பரக்கும் பொன்னி நாடன்

தென் தமிழன் வடபுலக்கோன் சோழன் சேர்ந்த திருநறையூர் மணிமாடம் சேர்-மின்களே

#1503

தன்னாலே தன் உருவம் பயந்த தானாய் தயங்கு ஒளி சேர் மூ உலகும் தானாய் வானாய்

தன்னாலே தன் உருவின் மூர்த்தி மூன்றாய் தான் ஆயன்
ஆயினான் சரண் என்று உய்வீர்

மின் ஆடு வேல் ஏந்து விளைந்த வேளை விண் ஏற தனி வேல்
உய்த்து உலகம் ஆண்ட

தென் நாடன் குட கொங்கன் சோழன் சேர்ந்த திருநறையூர்
மணிமாடம் சேர்-மின்களே

#1504

முலை தடத்த நஞ்சு உண்டு துஞ்ச பேய்ச்சி முது துவரை
குலபதியாய் காலி பின்னே

இலை தடத்த குழல் ஊதி ஆயர் மாதர் இன வளை கொண்டான்
அடி கீழ் எய்தகிற்பீர்

மலை தடத்த மணி கொணர்ந்து வையம் உய்ய வளம் கொடுக்கும்
வரு புனல் அம் பொன்னி நாடன்

சிலை தட கை குல சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர்
மணிமாடம் சேர்-மின்களே

#1505

முருக்கு இலங்கு கனி துவர் வாய் பின்னை கேள்வன் மன்
எல்லாம் முன் அவிய சென்று வென்றி

செருக்களத்து திறல் அழிய செற்ற வேந்தன் சிரம் துணித்தான்
திருவடி நும் சென்னி வைப்பீர்

இருக்கு இலங்கு திருமொழி வாய் எண் தோள் ஈசற்கு எழில்
மாடம் எழுபது செய்து உலகம் ஆண்ட

திருக்குலத்து வள சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர்
மணிமாடம் சேர்-மின்களே

#1506

தாராளன் தண் அரங்க ஆளன் பூ மேல் தனியாளன் முனியாளர்
ஏத்த நின்ற

பேராளன் ஆயிரம் பேர் உடைய ஆளன் பின்னைக்கு மணவாளன்
பெருமை கேட்பீர்

பார் ஆளர் அவர் இவர் என்று அழுந்தை ஏற்ற படை மன்னர் உடல்
துணிய பரிமா உய்த்த

தேராளன் கோ சோழன் சேர்ந்த கோயில் திருநறையூர்
மணிமாடம் சேர்-மின்களே

#1507

செம் மொழி வாய் நால் வேத வாணர் வாழும் திருநறையூர்
மணிமாட செங்கண்மாலை

பொய் மொழி ஒன்று இல்லாத மெய்ம்மையாளன் புல மங்கை
குல வேந்தன் புலமை ஆர்ந்த

அம் மொழி வாய் கலிகன்றி இன்ப பாடல் பாடுவார் வியன்
உலகில் நமனார் பாடி

வெம் மொழி கேட்டு அஞ்சாதே மெய்ம்மை சொல்லில்

விண்ணவர்க்கு விருந்து ஆகும் பெரும் தக்கோரே

#1508

ஆளும் பணியும் அடியேனை கொண்டான் விண்ட நிசாசரரை

தோளும் தலையும் துணிவு எய்த சுடு வெம் சிலைவாய் சரம் துரந்தான்

வேளும் சேயும் அனையாரும் வேல் கணாரும் பயில் வீதி

நாளும் விழவின் ஒலி ஓவா நறையூர் நின்ற நம்பியே

#1509

முனியாய் வந்து மூவெழுகால் முடி சேர் மன்னர் உடல் துணிய

தனி வாய் மழுவின் படை ஆண்ட தார் ஆர் தோளான் வார் புறவில்

பனி சேர் முல்லை பல் அரும்ப பானல் ஒரு-பால் கண் காட்ட

நனி சேர் வயலுள் முத்து அலைக்கும் நறையூர் நின்ற நம்பியே

#1510

தெள் ஆர் கடல்வாய் விட வாய சின வாள் அரவில் துயில் அமர்ந்து

துள்ளா வரு மான் விழ வாளி துரந்தான் இரந்தான் மாவலி மண்

புள் ஆர் புறவில் பூம் காவி பொலன் கொள் மாதர் கண் காட்ட

நள் ஆர் கமலம் முகம் காட்டும் நறையூர் நின்ற நம்பியே

#1511

ஒளியா வெண்ணெய் உண்டான் என்று உரலோடு ஆய்ச்சி ஒண் கயிற்றால்

விளியா ஆர்க்க ஆப்புண்டு விம்மி அழுதான் மென் மலர் மேல்

களியா வண்டு கள் உண்ண காமர் தென்றல் அலர் தூற்ற

நளிர் வாய் முல்லை முறுவலிக்கும் நறையூர் நின்ற நம்பியே

#1512

வில் ஆர் விழவில் வடமதுரை விரும்பி விரும்பா மல் அடர்த்து

கல் ஆர் திரள் தோள் கஞ்சனை காய்ந்தான் பாய்ந்தான் காளியன் மேல்

சொல் ஆர் சுருதி முறை ஓதி சோமு செய்யும் தொழிலினோர்

நல்லார் மறையோர் பலர் வாழும் நறையூர் நின்ற நம்பியே

#1513

வள்ளி கொழுநன் முதலாய மக்களோடு முக்கணான்

வெள்கி ஓட விறல் வாணன் வியன் தோள் வனத்தை துணித்து உகந்தான்

பள்ளி கமலத்திடை பட்ட பகு வாய் அலவன் முகம் நோக்கி

நள்ளி ஊடும் வயல் சூழ்ந்த நறையூர் நின்ற நம்பியே

#1514

மிடையா வந்த வேல் மன்னர் வீய விசயன் தேர் கடவி

குடையா வரை ஒன்று எடுத்து ஆயர் கோவாய் நின்றான் கூர் ஆழி

படையான் வேதம் நான்கு ஐந்து வேள்வி அங்கம் ஆறு இசை ஏழ்

நடையா வல்ல அந்தணர் வாழ் நறையூர் நின்ற நம்பியே

#1515

பந்து ஆர் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்க பாரதத்து

கந்து ஆர் களிற்று கழல் மன்னர் கலங்க சங்கம் வாய் வைத்தான்

செந்தாமரை மேல் அயனோடு சிவனும் அனைய பெருமையோர்

நந்தா வண் கை மறையோர் வாழ் நறையூர் நின்ற நம்பியே

#1516

ஆறும் பிறையும் அரவமும் அடம்பும் சடை மேல் அணிந்து உடலம்

நீறும் பூசி ஏறு ஊரும் இறையோன் சென்று குறை இரப்ப

மாறு ஒன்று இல்லா வாச நீர் வரை மார்வு அகலத்து அளித்து உகந்தான்

நாறும் பொழில் சூழ்ந்து அழகு ஆய நறையூர் நின்ற நம்பியே

#1517

நன்மை உடைய மறையோர் வாழ் நறையூர் நின்ற நம்பியை

கன்னி மதிள் சூழ் வயல் மங்கை கலியன் ஒலிசெய் தமிழ் மாலை

பன்னி உலகில் பாடுவார் பாடு சாரா பழவினைகள்

மன்னி உலகம் ஆண்டு போய் வானோர் வணங்க வாழ்வாரே

#1518

மான் கொண்ட தோல் மார்வின் மாணியாய் மாவலி மண்

தான் கொண்டு தாளால் அளந்த பெருமானை

தேன் கொண்ட சாரல் திருவேங்கடத்தானை

நான் சென்று நாடி நறையூரில் கண்டேனே

#1519

முந்நீரை முன் நாள் கடைந்தானை மூழ்த்த நாள்

அ நீரை மீனாய் அமைத்த பெருமானை

தென் ஆலி மேய திருமாலை எம்மானை

நல் நீர் சூழ் நறையூரில் கண்டேனே

#1520

தூ வாய புள் ஊர்ந்து வந்து துறை வேழம்

மூவாமை நல்கி முதலை துணித்தானை

தேவாதிதேவனை செம் கமல கண்ணானை

நாவாய் உளானை நறையூரில் கண்டேனே

#1521

ஓடா அரியாய் இரணியனை ஊன் இடந்த

சேடு ஆர் பொழில் சூழ் திருநீர்மலையானை

வாடா மலர் துழாய் மாலை முடியானை

நாள்-தோறும் நாடி நறையூரில் கண்டேனே

#1522

கல் ஆர் மதிள் சூழ் கதி இலங்கை கார் அரக்கன்

வல் ஆகம் கீள வரி வெம் சரம் துரந்த

வில்லானை செல்வ விபீடணற்கு வேறாக

நல்லானை நாடி நறையூரில் கண்டேனே

#1523

உம்பர் உலகோடு உயிர் எல்லாம் உந்தியில்

வம்பு மலர் மேல் படைத்தானை மாயோனை

அம்பு அன்ன கண்ணாள் அசோதை தன் சிங்கத்தை

நம்பனை நாடி நறையூரில் கண்டேனே

#1524

கட்டு ஏறு நீள் சோலை காண்டவத்தை தீ மூட்டி

விட்டானை மெய்யம் அமர்ந்த பெருமானை

மட்டு ஏறு கற்பகத்தை மாதர்க்காய் வண் துவரை

நட்டானை நாடி நறையூரில் கண்டேனே

#1525

மண்ணின் மீ பாரம் கெடுப்பான் மற மன்னர்

பண்ணின் மேல் வந்த படை எல்லாம் பாரதத்து

விண்ணின் மீது ஏற விசயன் தேர் ஊர்ந்தானை

நண்ணி நான் நாடி நறையூரில் கண்டேனே

#1526

பொங்கு ஏறு நீள் சோதி பொன் ஆழி-தன்னோடும்

சங்கு ஏறு கோல தட கை பெருமானை

கொங்கு ஏறு சோலை குடந்தை கிடந்தானை

நம் கோனை நாடி நறையூரில் கண்டேனே

#1527

மன்னும் மதுரை வசுதேவர் வாழ் முதலை

நல் நறையூர் நின்ற நம்பியை வம்பு அவிழ் தார்

கல் நவிலும் தோளான் கலியன் ஒலி வல்லார்

பொன் உலகில் வானவர்க்கு புத்தேளிர் ஆகுவரே

#1528

பெடை அடர்த்த மட அன்னம் பிரியாது மலர் கமல

மடல் எடுத்து மது நுகரும் வயல் உடுத்த திருநறையூர்

முடை அடர்த்த சிரம் ஏந்தி மூ உலகும் பலி திரிவோன்

இடர் கெடுத்த திருவாளன் இணை அடியே அடை நெஞ்சே

#1529

கழி ஆரும் கன சங்கம் கலந்து எங்கும் நிறைந்து ஏறி

வழி ஆர முத்து ஈன்று வளம் கொடுக்கும் திருநறையூர்

பழி ஆரும் விறல் அரக்கன் பரு முடிகள் அவை சிதற

அழல் ஆரும் சரம் துரந்தான் அடி இணையே அடை நெஞ்சே

#1530

சுளை கொண்ட பலங்கனிகள் தேன் பாய கதலிகளின்

திளை கொண்ட பழம் கெழுமி திகழ் சோலை திருநறையூர்

வளை கொண்ட வண்ணத்தன் பின் தோன்றல் மூ உலகோடு

அளை வெண்ணெய் உண்டான்-தன் அடி இணையே அடை நெஞ்சே

#1531

துன்று ஒளி துகில் படலம் துன்னி எங்கும் மாளிகை மேல்

நின்று ஆர வான் மூடும் நீள் செல்வ திருநறையூர்

மன்று ஆர குடம் ஆடி வரை எடுத்து மழை தடுத்த

குன்று ஆரும் திரள் தோளன் குரை கழலே அடை நெஞ்சே

#1532

அகில் குறடும் சந்தனமும் அம் பொன்னும் அணி முத்தும்

மிக கொணர்ந்து திரை உந்தும் வியன் பொன்னி திருநறையூர்

பகல் கரந்த சுடர் ஆழி படையான் இ உலகு ஏழும்

புக கரந்த திருவயிற்றன் பொன் அடியே அடை நெஞ்சே

#1533

பொன் முத்தும் அரி உகிரும் புழை கை மா கரி கோடும்

மின்ன தண் திரை உந்தும் வியன் பொன்னி திருநறையூர்

மின் ஒத்த நுண் மருங்குல் மெல் இயலை திருமார்வில்

மன்ன தான் வைத்து உகந்தான் மலர் அடியே அடை நெஞ்சே

#1534

சீர் தழைத்த கதிர் செந்நெல் செங்கமலத்து இடையிடையில்

பார் தழைத்து கரும்பு ஓங்கி பயன் விளைக்கும் திருநறையூர்

கார் தழைத்த திரு உருவன் கண்ணபிரான் விண்ணவர் கோன்

தார் தழைத்த துழாய் முடியன் தளிர் அடியே அடை நெஞ்சே

#1535

குலை ஆர்ந்த பழு காயும் பசும் காயும் பாளை முத்தும்

தலை ஆர்ந்த இளம் கமுகின் தடம் சோலை திருநறையூர்

மலை ஆர்ந்த கோலம் சேர் மணி மாடம் மிக மன்னி

நிலை ஆர நின்றான்-தன் நீள் கழலே அடை நெஞ்சே

#1536

மறை ஆரும் பெரு வேள்வி கொழும் புகை போய் வளர்ந்து எங்கும்

நிறை ஆர வான் மூடும் நீள் செல்வ திருநறையூர்

பிறை ஆரும் சடையானும் பிரமனும் முன் தொழுது ஏத்த

இறை ஆகி நின்றான்-தன் இணை அடியே அடை நெஞ்சே

#1537

திண் களக மதிள் புடை சூழ் திருநறையூர் நின்றானை

வண் களகம் நிலவு எறிக்கும் வயல் மங்கை நகராளன்

பண்கள் அகம் பயின்ற சீர் பாடல் இவை பத்தும் வல்லார்

விண்கள் அகத்து இமையவராய் வீற்றிருந்து வாழ்வாரே

#1538

கிடந்த நம்பி குடந்தை மேவி கேழலாய் உலகை

இடந்த நம்பி எங்கள் நம்பி எறிஞர் அரண் அழிய

கடந்த நம்பி கடி ஆர் இலங்கை உலகை ஈர் அடியால்

நடந்த நம்பி நாமம் சொல்லில் நமோ நாராயணமே

#1539

விடம் தான் உடைய அரவம் வெருவ செருவில் முன நாள் முன்

தடம் தாமரை நீர் பொய்கை புக்கு மிக்க தாள் ஆளன்

இடந்தான் வையம் கேழல் ஆகி உலகை ஈர் அடியால்

நடந்தானுடைய நாமம் சொல்லில் நமோ நாராயணமே

#1540

பூணாது அனலும் தறுகண் வேழம் மறுக வளை மருப்பை

பேணான் வாங்கி அமுதம் கொண்ட பெருமான் திருமார்வன்

பாணா வண்டு முரலும் கூந்தல் ஆய்ச்சி தயிர் வெண்ணெய்

நாணாது உண்டான் நாமம் சொல்லில் நமோ நாராயணமே

#1541

கல் ஆர் மதிள் சூழ் கச்சி நகருள் நச்சி பாடகத்துள்

எல்லா உலகும் வணங்க இருந்த அம்மான் இலங்கை கோன்

வல் ஆள் ஆகம் வில்லால் முனிந்த எந்தை விபீடணற்கு

நல்லானுடைய நாமம் சொல்லில் நமோ நாராயணமே

#1542

குடையா வரையால் நிரை முன் காத்த பெருமான் மருவாத

விடை தான் ஏழும் வென்றான் கோவல் நின்றான் தென் இலங்கை

அடையா அரக்கர் வீய பொருது மேவி வெம் கூற்றம்

நடையா உண்ண கண்டான் நாமம் நமோ நாராயணமே

#1543

கான எண்கும் குரங்கும் முசுவும் படையா அடல் அரக்கர்

மானம் அழித்து நின்ற வென்றி அம்மான் எனக்கு என்றும்

தேனும் பாலும் அமுதும் ஆய திருமால் திருநாமம்

நானும் சொன்னேன் நமரும் உரை-மின் நமோ நாராயணமே

#1544

நின்ற வரையும் கிடந்த கடலும் திசையும் இரு நிலனும்

ஒன்றும் ஒழியா வண்ணம் எண்ணி நின்ற அம்மானார்

குன்று குடையா எடுத்த அடிகளுடைய திருநாமம்

நன்று காண்-மின் தொண்டீர் சொன்னேன் நமோ நாராயணமே

#1545

கடும் கால் மாரி கல்லே பொழிய அல்லே எமக்கு என்று

படுங்கால் நீயே சரண் என்று ஆயர் அஞ்ச அஞ்சா முன்

நெடுங்கால் குன்றம் குடை ஒன்று ஏந்தி நிரையை சிரமத்தால்

நடுங்கா வண்ணம் காத்தான் நாமம் நமோ நாராயணமே

#1546

பொங்கு புணரி கடல் சூழ் ஆடை நில மா மகள் மலர் மா

மங்கை பிரமன் சிவன் இந்திரன் வானவர் நாயகர் ஆய

எங்கள் அடிகள் இமையோர் தலைவருடைய திருநாமம்

நங்கள் வினைகள் தவிர உரை-மின் நமோ நாராயணமே

#1547

வாவி தடம் சூழ் மணி முத்து ஆற்று நறையூர் நெடுமாலை

நாவில் பரவி நெஞ்சில் கொண்டு நம்பி நாமத்தை

காவி தடம் கண் மடவார் கேள்வன் கலியன் ஒலி மாலை

மேவி சொல்ல வல்லார் பாவம் நில்லா வீயுமே

#1548

கறவா மட நாகு-தன் கன்று உள்ளினால் போல்

மறவாது அடியேன் உன்னையே அழைக்கின்றேன்

நறவு ஆர் பொழில் சூழ் நறையூர் நின்ற நம்பி

பிறவாமை எனை பணி எந்தை பிரானே

#1549

வற்றா முதுநீரொடு மால் வரை ஏழும்

துற்று ஆக முன் துற்றிய தொல் புகழோனே

அற்றேன் அடியேன் உன்னையே அழைக்கின்றேன்

பெற்றேன் அருள் தந்திடு என் எந்தை பிரானே

#1550

தாரேன் பிறர்க்கு உன் அருள் என்னிடை வைத்தாய்

ஆரேன் அதுவே பருகி களிக்கின்றேன்

கார் ஏய் கடலே மலையே திருக்கோட்டி

ஊரே உகந்தாயை உகந்து அடியேனே

#1551

புள் வாய் பிளந்த புனிதா என்று அழைக்க

உள்ளே நின்று என் உள்ளம் குளிரும் ஒருவா

கள்வா கடல்மல்லை கிடந்த கரும்பே

வள்ளால் உன்னை எங்ஙனம் நான் மறக்கேனே

#1552

வில் ஏர் நுதல் நெடும் கண்ணியும் நீயும்

கல் ஆர் கடும் கானம் திரிந்த களிறே

நல்லாய் நர நாரணனே எங்கள் நம்பி

சொல்லாய் உன்னை யான் வணங்கி தொழும் ஆறே

#1553

பனி ஏய் பரம் குன்றின் பவள திரளே

முனியே திருமூழிக்களத்து விளக்கே

இனியாய் தொண்டரோம் பருகும் இன் அமுது ஆய

கனியே உன்னை கண்டுகொண்டு உய்ந்து ஒழிந்தேனே

#1554

கதியேல் இல்லை நின் அருள் அல்லது எனக்கு

நிதியே திருநீர்மலை நித்தில தொத்தே

பதியே பரவி தொழும் தொண்டர் தமக்கு

கதியே உன்னை கண்டுகொண்டு உய்ந்து ஒழிந்தேனே

#1555

அத்தா அரியே என்று உன்னை அழைக்க

பித்தா என்று பேசுகின்றார் பிறர் என்னை

முத்தே மணி மாணிக்கமே முளைக்கின்ற

வித்தே உன்னை எங்ஙனம் நான் விடுகேனே

#1556

தூயாய் சுடர் மா மதி போல் உயிர்க்கு எல்லாம்

தாயாய் அளிக்கின்ற தண் தாமரை கண்ணா

ஆயா அலை நீர் உலகு ஏழும் முன் உண்ட

வாயா உன்னை எங்ஙனம் நான் மறக்கேனே

#1557

வண்டு ஆர் பொழில் சூழ் நறையூர் நம்பிக்கு என்றும்

தொண்டாய் கலியன் ஒலிசெய் தமிழ் மாலை

தொண்டீர் இவை பாடு-மின் பாடி நின்று ஆட

உண்டே விசும்பு உம்-தமக்கு இல்லை துயரே

#1558

புள்ளாய் ஏனமுமாய் புகுந்து என்னை உள்ளம் கொண்ட

கள்வா என்றலும் என் கண்கள் நீர்கள் சோர்தருமால்

உள்ளே நின்று உருகி நெஞ்சம் உன்னை உள்ளிய-கால்

நள்ளேன் உன்னை அல்லால் நறையூர் நின்ற நம்பீயோ

#1559

ஓடா ஆள் அரியின் உருவாய் மருவி என்தன்

மாடே வந்து அடியேன் மனம் கொள்ள வல்ல மைந்தா

பாடேன் தொண்டர் தம்மை கவிதை பனுவல் கொண்டு

நாடேன் உன்னை அல்லால் நறையூர் நின்ற நம்பீயோ

#1560

எம்மானும் எம் அனையும் என்னை பெற்று ஒழிந்ததன் பின்

அம்மானும் அம்மனையும் அடியேனுக்கு ஆகி நின்ற

நல் மான ஒண் சுடரே நறையூர் நின்ற நம்பீ உன்

மைம் மான வண்ணம் அல்லால் மகிழ்ந்து ஏத்தமாட்டேனே

#1561

சிறியாய் ஓர் பிள்ளையுமாய் உலகு உண்டு ஓர் ஆலிலை மேல்

உறைவாய் என் நெஞ்சின் உள்ளே உறைவாய் உறைந்தது தான்

அறியாது இருந்தறியேன் அடியேன் அணி வண்டு கிண்டும்

நறை வாரும் பொழில் சூழ் நறையூர் நின்ற நம்பீயோ

#1562

நீண்டாயை வானவர்கள் நினைந்து ஏத்தி காண்பு அரிதால்

ஆண்டாய் என்று ஆதரிக்கப்படுவாய்க்கு நான் அடிமை

பூண்டேன் என் நெஞ்சின் உள்ளே புகுந்தாயை போகல் ஒட்டேன்

நான் தான் உனக்கு ஒழிந்தேன் நறையூர் நின்ற நம்பீயோ

#1563

எம் தாதை தாதை அப்பால் எழுவர் பழ அடிமை

வந்தார் என் நெஞ்சின் உள்ளே வந்தாயை போகல் ஒட்டேன்

அந்தோ என் ஆருயிரே அரசே அருள் எனக்கு

நந்தாமல் தந்த எந்தாய் நறையூர் நின்ற நம்பீயோ

#1564

மன் அஞ்ச ஆயிரம் தோள் மழுவில் துணித்த மைந்தா

என் நெஞ்சத்துள் இருந்து இங்கு இனி போய் பிறர் ஒருவர்

வல் நெஞ்சம் புக்கு இருக்க ஒட்டேன் வளைத்து வைத்தேன்

நல் நெஞ்ச அன்னம் மன்னும் நறையூர் நின்ற நம்பீயோ

#1565

எப்போதும் பொன் மலர் இட்டு இமையோர் தொழுது தங்கள்

கைப்போது கொண்டு இறைஞ்சி கழல் மேல் வணங்க நின்றாய்

இப்போது என் நெஞ்சின் உள்ளே புகுந்தாயை போகல் ஒட்டேன்

நல் போது வண்டு கிண்டும் நறையூர் நின்ற நம்பீயோ

#1566

ஊன் நேர் ஆக்கை தன்னை உழந்து ஓம்பி வைத்தமையால்

யானாய் என்தனக்காய் அடியேன் மனம் புகுந்த

தேனே தீம் கரும்பின் தெளிவே என் சிந்தை-தன்னால்

நானே எய்த பெற்றேன் நறையூர் நின்ற நம்பீயோ

#1567

நல் நீர் வயல் புடை சூழ் நறையூர் நின்ற நம்பியை

கல் நீர மால் வரை தோள் கலிகன்றி மங்கையர் கோன்

சொல் நீர சொல் மாலை சொல்லுவார்கள் சூழ் விசும்பில்

நல் நீர்மையால் மகிழ்ந்து நெடும் காலம் வாழ்வாரே

#1568

சின வில் செம் கண் அரக்கர் உயிர் மாள செற்ற வில்லி என்று கற்றவர் தம்தம்

மனமுள் கொண்டு என்றும் எப்போதும் நின்று ஏத்தும் மா முனியை மரம் ஏழ் எய்த மைந்தனை

நனவில் சென்று ஆர்க்கும் நண்ணற்கு அரியானை நான் அடியேன் நறையூர் நின்ற நம்பியை

கனவில் கண்டேன் இன்று கண்டமையால் என் கண் இணைகள் களிப்ப களித்தேனே

#1569

தாய் நினைந்த கன்றே ஒக்க என்னையும் தன்னையே நினைக்க செய்து தான் எனக்கு

ஆய் நினைந்து அருள்செய்யும் அப்பனை அன்று இ வையகம் உண்டு உமிழ்ந்திட்ட

வாயனை மகர குழை காதனை மைந்தனை மதிள் கோவல் இடைகழி

ஆயனை அமரர்க்கு அரி ஏற்றை என் அன்பனை அன்றி ஆதரியேனே

#1570

வந்த நாள் வந்து என் நெஞ்சு இடம் கொண்டான் மற்று ஓர் நெஞ்சு அறியான் அடியேனுடை

சிந்தையாய் வந்து தென்புலர்க்கு என்னை சேர்கொடான் இது சிக்கென பெற்றேன்

கொந்து உலாம் பொழில் சூழ் குடந்தை தலை கோவினை குடம் ஆடிய கூத்தனை

எந்தையை எந்தை தந்தை தம்மானை எம்பிரானை எத்தால் மறக்கேனே

#1571

உரங்களால் இயன்ற மன்னர் மாள பாரதத்து ஒரு தேர் ஐவர்க்காய் சென்று

இரங்கி ஊர்ந்து அவர்க்கு இன் அருள்செய்யும் எம்பிரானை வம்பு ஆர் புனல் காவிரி

அரங்கம் ஆளி என் ஆளி விண் ஆளி ஆழி சூழ் இலங்கை மலங்க சென்று

சரங்கள் ஆண்ட தன் தாமரை கண்ணனுக்கு அன்றி என் மனம் தாழ்ந்து நில்லாதே

#1572

ஆங்கு வெம் நரகத்து அழுந்தும்-போது அஞ்சேல் என்று அடியேனை அங்கே வந்து

தாங்கு தாமரை அன்ன பொன் ஆர் அடி எம்பிரானை உம்பர்க்கு அணியாய் நின்ற

வேங்கடத்து அரியை பரி கீறியை வெண்ணெய் உண்டு உரலினிடை ஆப்புண்ட

தீம் கரும்பினை தேனை நன் பாலினை அன்றி என் மனம் சிந்தைசெய்யாதே

#1573

எள்தனை பொழுதாகிலும் என்றும் என் மனத்து அகலாது இருக்கும் புகழ்

தட்டு அலர்த்த பொன்னே அலர் கோங்கின் தாழ் பொழில் திருமாலிருஞ்சோலை அம்

கட்டியை கரும்பு ஈன்ற இன் சாற்றை காதலால் மறை நான்கும் முன் ஓதிய

பட்டனை பரவை துயில் ஏற்றை என் பண்பனை அன்றி பாடல்

செய்யேனே

#1574

பண்ணின் இன் மொழி யாழ் நரம்பில் பெற்ற பாலை ஆகி இங்கே

புகுந்து என்

கண்ணும் நெஞ்சும் வாயும் இடம் கொண்டான் கொண்ட பின்

மறையோர் மனம் தன் உள்

விண் உளார் பெருமானை எம்மானை வீங்கு நீர் மகரம்

திளைக்கும் கடல்

வண்ணன் மா மணி வண்ணன் எம் அண்ணல் வண்ணமே

அன்றி வாய் உரையாதே

#1575

இனி எ பாவம் வந்து எய்தும் சொல்லீர் எமக்கு இம்மையே

அருள்பெற்றமையால் அடும்

துனியை தீர்த்து இன்பமே தருகின்றது ஓர் தோற்ற தொல்

நெறியை வையம் தொழப்படும்

முனியை வானவரால் வணங்கப்படும் முத்தினை பத்தர் தாம்

நுகர்கின்றது ஓர்

கனியை காதல்செய்து என் உள்ளம் கொண்ட கள்வனை இன்று

கண்டுகொண்டேனே

#1576

என் செய்கேன் அடியேன் உரையீர் இதற்கு என்றும் என் மனத்தே இருக்கும் புகழ்

தஞ்சை ஆளியை பொன் பெயரோன் நெஞ்சம் அன்று இடந்தவனை தழலே புரை

மின் செய் வாள் அரக்கன் நகர் பாழ்பட சூழ் கடல் சிறை வைத்து இமையோர் தொழும்

பொன் செய் மால் வரையை மணி குன்றினை அன்றி என் மனம் போற்றி என்னாதே

#1577

தோடு விண்டு அலர் பூம் பொழில் மங்கையர் தோன்றல் வாள் கலியன் திரு ஆலி

நாடன் நல் நறையூர் நின்ற நம்பி தன் நல்ல மா மலர் சேவடி சென்னியில்

சூடியும் தொழுதும் எழுந்து ஆடியும் தொண்டர்கட்கு அவன் சொன்ன சொல் மாலை

பாடல் பத்து இவை பாடு-மின் தொண்டீர் பாட நும்மிடை பாவம் நில்லாவே

#1578

கண் சோர வெம் குருதி வந்து இழிய வெம் தழல் போல் கூந்தலாளை

மண் சேர முலை உண்ட மா மதலாய் வானவர்-தம் கோவே என்று

விண் சேரும் இளம் திங்கள் அகடு உரிஞ்சு மணி மாடம் மல்கு செல்வ

தண் சேறை எம் பெருமான் தாள் தொழுவார் காண்-மின் என் தலைமேலாரே

#1579

அம் புருவ வரி நெடும் கண் அலர் மகளை வரை அகலத்து அமர்ந்து மல்லல்

கொம்பு உருவ விளங்கனி மேல் இளம் கன்று கொண்டு எறிந்த கூத்தர் போலாம்

வம்பு அலரும் தண் சோலை வண் சேறை வான் உந்து கோயில் மேய

எம்பெருமான் தாள் தொழுவார் எப்பொழுதும் என் மனத்தே இருக்கின்றாரே

#1580

மீது ஓடி வாள் எயிறு மின் இலக முன் விலகும் உருவினாளை

காதோடு கொடி மூக்கு அன்று உடன் அறுத்த கைத்தலத்தா என்று நின்று

தாதோடு வண்டு அலம்பும் தண் சேறை எம்பெருமான் தாளை ஏத்தி

போதோடு புனல் தூவும் புண்ணியரே விண்ணவரின் பொலிகின்றாரே

#1581

தேர் ஆளும் வாள் அரக்கன் தென் இலங்கை வெம் சமத்து பொன்றி வீழ

போர் ஆளும் சிலை அதனால் பொரு கணைகள் போக்குவித்தாய் என்று நாளும்

தார் ஆளும் வரை மார்பன் தண் சேறை எம் பெருமான் உம்பர் ஆளும்

பேராளன் பேர் ஓதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே

#1582

வந்திக்கும் மற்றவர்க்கும் மாசு உடம்பின் வல் அமணர் தமக்கும் அல்லேன்

முந்தி சென்று அரி உருவாய் இரணியனை முரண் அழித்த முதல்வர்க்கு அல்லால்

சந்த பூ மலர் சோலை தண் சேறை எம் பெருமான் தாளை நாளும்

சிந்திப்பார்க்கு என் உள்ளம் தேன் ஊறி எப்பொழுதும் தித்திக்குமே

#1583

பண்டு ஏனமாய் உலகை அன்று இடந்த பண்பாளா என்று நின்று

தொண்டு ஆனேன் திருவடியே துணை அல்லால் துணை இலேன் சொல்லுகின்றேன்

வண்டு ஏந்தும் மலர் புறவின் வண் சேறை எம் பெருமான் அடியார்-தம்மை

கண்டேனுக்கு இது காணீர் என் நெஞ்சும் கண் இணையும் களிக்கும் ஆறே

#1584

பை விரியும் வரி அரவில் படு கடலுள் துயில் அமர்ந்த பண்பா என்றும்

மை விரியும் மணி வரை போல் மாயவனே என்றென்றும் வண்டு ஆர் நீலம்

செய் விரியும் தண் சேறை எம்பெருமான் திருவடிவை சிந்தித்தேற்கு என்

ஐ அறிவும் கொண்டானுக்கு ஆள் ஆனார்க்கு ஆள் ஆம் என் அன்பு தானே

#1585

உண்ணாது வெம் கூற்றம் ஓவாத பாவங்கள் சேரா மேலை

விண்ணோரும் மண்ணோரும் வந்து இறைஞ்சும் மென் தளிர் போல் அடியினானை

பண் ஆர வண்டு இயம்பும் பைம் பொழில் சூழ் தண் சேறை அம்மான்-தன்னை

கண்ணார கண்டு உருகி கையார தொழுவாரை கருதும்-காலே

#1586

கள்ளத்தேன் பொய் அகத்தேன் ஆதலால் போது ஒருகால் கவலை என்னும்

வெள்ளத்தேற்கு என்-கொலோ விளை வயலுள் கரு நீலம் களைஞர் தாளால்

தள்ள தேன் மணம் நாறும் தண் சேறை எம்பெருமான் தாளை நாளும்

உள்ளத்தே வைப்பாருக்கு இது காணீர் என் உள்ளம் உருகும் ஆறே

#1587

பூ மாண் சேர் கரும் குழலார் போல் நடந்து வயல் நின்ற பெடையோடு அன்னம்

தேமாவின் இன் நிழலில் கண் துயிலும் தண் சேறை அம்மான்-தன்னை

வா மான் தேர் பரகாலன் கலிகன்றி ஒலி மாலை கொண்டு தொண்டீர்

தூ மாண் சேர் பொன் அடி மேல் சூட்டு-மின் நும் துணை கையால் தொழுது நின்றே

#1588

தந்தை காலில் பெரு விலங்கு தாள் அவிழ நள்ளிருள்-கண்

வந்த எந்தை பெருமானார் மருவி நின்ற ஊர் போலும்

முந்தி வானம் மழை பொழியும் மூவா உருவின் மறையாளர்

அந்தி மூன்றும் அனல் ஓம்பும் அணி ஆர் வீதி அழுந்தூரே

#1589

பாரித்து எழுந்த படை மன்னர் தம்மை மாள பாரதத்து

தேரில் பாகனாய் ஊர்ந்த தேவதேவன் ஊர் போலும்

நீரில் பணைத்த நெடு வாளைக்கு அஞ்சி போன குருகு இனங்கள்

ஆரல் கவுளோடு அருகு அணையும் அணி ஆர் வயல் சூழ் அழுந்தூரே

#1590

செம்பொன் மதிள் சூழ் தென் இலங்கைக்கு இறைவன் சிரங்கள் ஐயிரண்டும்

உம்பர் வாளிக்கு இலக்கு ஆக உதிர்த்த உரவோன் ஊர் போலும்

கொம்பில் ஆர்ந்த மாதவி மேல் கோதி மேய்ந்த வண்டு இனங்கள்

அம்பு அராவும் கண் மடவார் ஐம்பால் அணையும் அழுந்தூரே

#1591

வெள்ளத்துள் ஓர் ஆலிலை மேல் மேவி அடியேன் மனம் புகுந்து என்

உள்ளத்து உள்ளும் கண் உள்ளும் நின்றார் நின்ற ஊர் போலும்

புள்ளு பிள்ளைக்கு இரை தேடி போன காதல் பெடையோடும்

அள்ளல் செறுவில் கயல் நாடும் அணி ஆர் வயல் சூழ் அழுந்தூரே

#1592

பகலும் இரவும் தானேயாய் பாரும் விண்ணும் தானேயாய்

நிகர் இல் சுடராய் இருள் ஆகி நின்றார் நின்ற ஊர் போலும்

துகிலின் கொடியும் தேர் துகளும் துன்னி மாதர் கூந்தல்வாய்

அகிலின் புகையால் முகில் ஏய்க்கும் அணி ஆர் வீதி அழுந்தூரே

#1593

ஏடு இலங்கு தாமரை போல் செ வாய் முறுவல் செய்தருளி

மாடு வந்து என் மனம் புகுந்து நின்றார் நின்ற ஊர் போலும்

நீடு மாட தனி சூலம் போழ கொண்டல் துளி தூவ

ஆடல் அரவத்து ஆர்ப்பு ஓவா அணி ஆர் வீதி அழுந்தூரே

#1594

மாலை புகுந்து மலர் அணை மேல் வைகி அடியேன் மனம் புகுந்து என்

நீல கண்கள் பனி மல்க நின்றார் நின்ற ஊர் போலும்

வேலை கடல் போல் நெடு வீதி விண் தோய் சுதை வெண் மணி மாடத்து

ஆலை புகையால் அழல் கதிரை மறைக்கும் வீதி அழுந்தூரே

#1595

வஞ்சி மருங்குல் இடை நோவ மணந்து நின்ற கனவகத்து என்

நெஞ்சு நிறைய கைகூப்பி நின்றார் நின்ற ஊர் போலும்

பஞ்சி அன்ன மெல் அடி நல் பாவைமார்கள் ஆடகத்தின்

அம் சிலம்பின் ஆர்ப்பு ஓவா அணி ஆர் வீதி அழுந்தூரே

#1596

என் ஐம்புலனும் எழிலும் கொண்டு இங்கே நெருநல் எழுந்தருளி

பொன் அம் கலைகள் மெலிவு எய்த போன புனிதர் ஊர் போலும்

மன்னும் முது நீர் அரவிந்த மலர் மேல் வரி வண்டு இசை பாட

அன்னம் பெடையோடு உடன் ஆடும் அணி ஆர் வயல் சூழ் அழுந்தூரே

#1597

நெல்லில் குவளை கண் காட்ட நீரில் குமுதம் வாய் காட்ட

அல்லி கமலம் முகம் காட்டும் கழனி அழுந்தூர் நின்றானை

வல்லி பொதும்பில் குயில் கூவும் மங்கை வேந்தன் பரகாலன்

சொல்லில் பொலிந்த தமிழ் மாலை சொல்ல பாவம் நில்லாவே

#1598

சிங்கம்-அதுவாய் அவுணன் திறல் ஆகம் முன் கீண்டு உகந்த

சங்கம் இடத்தானை தழல் ஆழி வலத்தானை

செங்கமலத்து அயன் அனையார் தென் அழுந்தையில் மன்னி நின்ற

அம் கமல கண்ணனை அடியேன் கண்டுகொண்டேனே

#1599

கோ ஆனார் மடிய கொலை ஆர் மழு கொண்டருளும்

மூவா வானவனை முழுநீர் வண்ணனை அடியார்க்கு

ஆஆ என்று இரங்கி தென் அழுந்தையில் மன்னி நின்ற

தேவாதிதேவனை யான் கண்டுகொண்டு திளைத்தேனே

#1600

உடையானை ஒலி நீர் உலகங்கள் படைத்தானை

விடையான் ஓட அன்று விறல் ஆழி விசைத்தானை

அடையார் தென் இலங்கை அழித்தானை அணி அழுந்தூர்

உடையானை அடியேன் அடைந்து உய்ந்துபோனேனே

#1601

குன்றால் மாரி தடுத்தவனை குல வேழம் அன்று

பொன்றாமை அதனுக்கு அருள்செய்த போர் ஏற்றை

அன்று ஆவின் நறு நெய் அமர்ந்து உண்ட அணி அழுந்தூர்

நின்றானை அடியேன் கண்டுகொண்டு நிறைந்தேனே

#1602

கஞ்சனை காய்ந்தானை கண்ணமங்கையுள் நின்றானை

வஞ்சன பேய் முலையூடு உயிர் வாய் மடுத்து உண்டானை

செம் சொல் நான்மறையோர் தென் அழுந்தையில் மன்னி நின்ற

அஞ்சன குன்றம்-தன்னை அடியேன் கண்டுகொண்டேனே

#1603

பெரியானை அமரர் தலைவற்கும் பிரமனுக்கும்

உரி யானை உகந்தான் அவனுக்கும் உணர்வதனுக்கு

அரியானை அழுந்தூர் மறையோர்கள் அடிபணியும்

கரியானை அடியேன் கண்டுகொண்டு களித்தேனே

#1604

திரு வாழ் மார்வன்-தன்னை திசை மண் நீர் எரி முதலா

உருவாய் நின்றவனை ஒலி சேரும் மாருதத்தை

அருவாய் நின்றவனை தென் அழுந்தையில் மன்னி நின்ற

கரு ஆர் கற்பகத்தை கண்டுகொண்டு களித்தேனே

#1605

நிலை ஆள் ஆக என்னை உகந்தானை நில மகள்-தன்

முலை ஆள் வித்தகனை முது நான்மறை வீதி-தொறும்

அலை ஆர் கடல் போல் முழங்கும் தென் அழுந்தையில் மன்னிநின்ற

கலை ஆர் சொற்பொருளை கண்டுகொண்டு களித்தேனே

#1606

பேரானை குடந்தை பெருமானை இலங்கு ஒளி சேர்

வார் ஆர் வன முலையாள் மலர் மங்கை நாயகனை

ஆரா இன் அமுதை தென் அழுந்தையில் மன்னி நின்ற

கார் ஆர் கரு முகிலை கண்டுகொண்டு களித்தேனே

#1607

திறல் முருகன் அனையார் தென் அழுந்தையில் மன்னி நின்ற

அற முதல்வன் அவனை அணி ஆலியர் கோன் மருவார்

கறை நெடு வேல் வலவன் கலிகன்றி சொல் ஐயிரண்டும்

முறை வழுவாமை வல்லார் முழுது ஆள்வர் வான் உலகே

#1608

திருவுக்கும் திரு ஆகிய செல்வா தெய்வத்துக்கு அரசே செய்ய கண்ணா

உருவ செம் சுடர் ஆழி வல்லானே உலகு உண்ட ஒருவா திருமார்பா

ஒருவற்கு ஆற்றி உய்யும் வகை இன்றால் உடன் நின்று ஐவர் என்னுள் புகுந்து ஒழியாது

அருவி தின்றிட அஞ்சி நின் அடைந்தேன் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1609

பந்து ஆர் மெல் விரல் நல் வளை தோளி பாவை பூ மகள் தன்னொடும் உடனே

வந்தாய் என் மனத்தே மன்னி நின்றாய் மால் வண்ணா மழை போல் ஒளி வண்ணா

சந்தோகா பௌழியா தைத்திரியா சாம வேதியனே நெடுமாலே

அந்தோ நின் அடி அன்றி மற்று அறியேன் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1610

நெய் ஆர் ஆழியும் சங்கமும் ஏந்தும் நீண்ட தோள் உடையாய் அடியேனை

செய்யாத உலகத்திடை செய்தாய் சிறுமைக்கும் பெருமைக்கும் உள் புகுந்து

பொய்யால் ஐவர் என் மெய் குடியேறி போற்றி வாழ்வதற்கு அஞ்சி நின் அடைந்தேன்

ஐயா நின் அடி அன்றி மற்று அறியேன் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1611

பரனே பஞ்சவன் பூழியன் சோழன் பார் மன்னர்மன்னர் தாம் பணிந்து ஏத்தும்

வரனே மாதவனே மதுசூதா மற்று ஓர் நல் துணை நின் அலால் இலேன் காண்

நரனே நாரணனே திருநறையூர் நம்பீ எம்பெருமான் உம்பர் ஆளும்

அரனே ஆதிவராகம் முன் ஆனாய் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1612

விண்டான் விண் புக வெம் சமத்து அரியாய் பரியோன் மார்வகம் பற்றி பிளந்து

பண்டு ஆன் உய்ய ஓர் மால் வரை ஏந்தும் பண்பாளா பரனே பவித்திரனே

கண்டேன் நான் கலியுகத்ததன் தன்மை கருமம் ஆவதும் என்தனக்கு அறிந்தேன்

அண்டா நின் அடி அன்றி மற்று அறியேன் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1613

தோயா இன் தயிர் நெய் அமுது உண்ண சொன்னார் சொல்லி நகும் பரிசே பெற்ற

தாயால் ஆப்புண்டு இருந்து அழுது ஏங்கும் தாடாளா தரையோர்க்கும் விண்ணோர்க்கும்

சேயாய் கிரேத திரேத துவாபர கலியுகம் இவை நான்கும் முன் ஆனாய்

ஆயா நின் அடி அன்றி மற்று அறியேன் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1614

கறுத்து கஞ்சனை அஞ்ச முனிந்தாய் கார் வண்ணா கடல் போல் ஒளி வண்ணா

இறுத்திட்டு ஆன் விடை ஏழும் முன் வென்றாய் எந்தாய் அந்தரம் ஏழும் முன் ஆனாய்

பொறுத்துக்கொண்டிருந்தால் பொறுக்கொணா போகமே நுகர்வான் புகுந்து ஐவர்

அறுத்து தின்றிட அஞ்சி நின் அடைந்தேன் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1615

நெடியானே கடி ஆர்கலி நம்பீ நின்னையே நினைந்து இங்கு இருப்பேனை

கடி ஆர் காளையர் ஐவர் புகுந்து காவல் செய்த அ காவலை பிழைத்து

குடிபோந்து உன் அடி கீழ் வந்து புகுந்தேன் கூறை சோறு இவை தந்து எனக்கு அருளி

அடியேனை பணி ஆண்டுகொள் எந்தாய் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1616

கோவாய் ஐவர் என் மெய் குடியேறி கூறை சோறு இவை தா என்று குமைத்து

போகார் நான் அவரை பொறுக்ககிலேன் புனிதா புள் கொடியாய் நெடுமாலே

தீ வாய் நாக அணையில் துயில்வானே திருமாலே இனி செய்வது ஒன்று அறியேன்

ஆஆ என்று அடியேற்கு இறை இரங்காய் அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே

#1617

அன்னம் மன்னு பைம் பூம் பொழில் சூழ்ந்த அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானை

கன்னி மன்னு திண் தோள் கலிகன்றி ஆலி நாடன் மங்கை குல வேந்தன்

சொன்ன இன் தமிழ் நல் மணி கோவை தூய மாலை இவை பத்தும் வல்லார்

மன்னி மன்னவராய் உலகு ஆண்டு மான வெண்குடை கீழ் மகிழ்வாரே

#1618

செங்கமல திருமகளும் புவியும் செம்பொன் திருவடியின் இணை வருட முனிவர் ஏத்த

வங்கம் மலி தடம் கடலுள் அநந்தன் என்னும் வரி அரவின் அணை துயின்ற மாயோன் காண்-மின்

எங்கும் மலி நிறை புகழ் நால் வேதம் ஐந்து வேள்விகளும் கேள்விகளும் இயன்ற தன்மை

அம் கமலத்து அயன் அனையார் பயிலும் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1619

முன் இ உலகு ஏழும் இருள் மண்டி உண்ண முனிவரொடு தானவர்கள் திசைப்ப வந்து

பன்னு கலை நால் வேத பொருளை எல்லாம் பரி முகமாய் அருளிய எம் பரமன் காண்-மின்

செந்நெல் மலி கதிர் கவரி வீச சங்கம் அவை முரல செங்கமல மலரை ஏறி

அன்னம் மலி பெடையோடும் அமரும் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1620

குல தலைய மத வேழம் பொய்கை புக்கு கோள் முதலை பிடிக்க அதற்கு அனுங்கி நின்று

நில திகழும் மலர் சுடர் ஏய் சோதீ என்ன நெஞ்சு இடர் தீர்த்தருளிய என் நிமலன் காண்-மின்

மலை திகழ் சந்து அகில் கனகம் மணியும் கொண்டு வந்து உந்தி வயல்கள்-தொறும் மடைகள் பாய

அலைத்து வரும் பொன்னி வளம் பெருகும் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1621

சிலம்பு முதல் கலன் அணிந்து ஓர் செங்கல் குன்றம் திகழ்ந்தது என திருவுருவம் பன்றி ஆகி

இலங்கு புவி மடந்தை-தனை இடந்து புல்கி எயிற்றிடை வைத்தருளிய எம் ஈசன் காண்-மின்

புலம்பு சிறை வண்டு ஒலிப்ப பூகம் தொக்க பொழில்கள்-தொறும் குயில் கூவ மயில்கள் ஆல

அலம்பு திரை புனல் புடை சூழ்ந்து அழகு ஆர் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1622

சினம் மேவும் அடல் அரியின் உருவம் ஆகி திறல் மேவும் இரணியனது ஆகம் கீண்டு

மனம் மேவு வஞ்சனையால் வந்த பேய்ச்சி மாள உயிர் வவ்விய எம் மாயோன் காண்-மின்

இனம் மேவு வரி வளை கை ஏந்தும் கோவை ஏய் வாய மரகதம் போல் கிளியின் இன் சொல்

அனம் மேவு நடை மடவார் பயிலும் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1623

வானவர்-தம் துயர் தீர வந்து தோன்றி மாண் உருவாய் மூவடி மாவலியை வேண்டி

தான் அமர ஏழ் உலகும் அளந்த வென்றி தனிமுதல் சக்கர படை என் தலைவன் காண்-மின்

தேன் அமரும் பொழில் தழுவும் எழில் கொள் வீதி செழு மாட மாளிகைகள் கூடம்-தோறும்

ஆன தொல் சீர் மறையாளர் பயிலும் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1624

பந்து அணைந்த மெல் விரலாள் சீதைக்கு ஆகி பகலவன் மீது இயங்காத இலங்கை வேந்தன்

அந்தம் இல் திண் கரம் சிரங்கள் புரண்டு வீழ அடு கணையால் எய்து உகந்த அம்மான் காண்-மின்

செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர் திசைமுகனை அனையவர்கள் செம்மை மிக்க

அந்தணர்-தம் ஆகுதியின் புகை ஆர் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1625

கும்பம் மிகு மத வேழம் குலைய கொம்பு பறித்து மழ விடை அடர்த்து குரவை கோத்து

வம்பு அவிழும் மலர் குழலாள் ஆய்ச்சி வைத்த தயிர் வெண்ணெய் உண்டு உகந்த மாயோன் காண்-மின்

செம் பவளம் மரகதம் நல் முத்தம் காட்ட திகழ் பூகம் கதலி பல வளம் மிக்கு எங்கும்

அம் பொன் மதிள் பொழில் புடை சூழ்ந்து அழகு ஆர் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1626

ஊடு ஏறு கஞ்சனொடு மல்லும் வில்லும் ஒண் கரியும் உருள் சகடும் உடைய செற்ற

நீடு ஏறு பெரு வலி தோள் உடைய வென்றி நிலவு புகழ் நேமி அங்கை நெடியோன் காண்-மின்

சேடு ஏறு பொழில் தழுவும் எழில் கொள் வீதி திருவிழவில் மணி அணிந்த திண்ணை-தோறும்

ஆடு ஏறு மலர் குழலார் பயிலும் செல்வத்து அணி அழுந்தூர் நின்று உகந்த அமரர் கோவே

#1627

பன்றியாய் மீன் ஆகி அரியாய் பாரை படைத்து காத்து உண்டு உமிழ்ந்த பரமன்-தன்னை

அன்று அமரர்க்கு அதிபதியும் அயனும் சேயும் அடிபணிய அணி அழுந்தூர் நின்ற கோவை

கன்றி நெடு வேல் வலவன் ஆலி நாடன் கலிகன்றி ஒலிசெய்த இன்ப பாடல்

ஒன்றினொடு நான்கும் ஓர் ஐந்தும் வல்லார் ஒலி கடல் சூழ் உலகு ஆளும் உம்பர் தாமே

#1628

கள்ளம் மனம் விள்ளும் வகை கருதி கழல் தொழுவீர்

வெள்ளம் முது பரவை திரை விரிய கரை எங்கும்

தெள்ளும் மணி திகழும் சிறுபுலியூர் சலசயனத்து

உள்ளும் எனது உள்ளத்துளும் உறைவாரை உள்ளீரே

#1629

தெருவில் திரி சிறு நோன்பியர் செம் சோற்றொடு கஞ்சி

மருவி பிரிந்தவர் வாய்மொழி மதியாது வந்து அடைவீர்

திருவில் பொலி மறையோர் சிறுபுலியூர் சலசயனத்து

உருவ குறள் அடிகள் அடி உணர்-மின் உணர்வீரே

#1630

பறையும் வினை தொழுது உய்-மின் நீர் பணியும் சிறு தொண்டீர்

அறையும் புனல் ஒரு-பால் வயல் ஒரு-பால் பொழில் ஒரு-பால்

சிறை வண்டு இனம் அறையும் சிறுபுலியூர் சலசயனத்து

உறையும் இறை அடி அல்லது ஒன்று இறையும் அறியேனே

#1631

வான் ஆர் மதி பொதியும் சடை மழுவாளியொடு ஒரு-பால்

தான் ஆகிய தலைவன் அவன் அமரர்க்கு அதிபதி ஆம்

தேன் ஆர் பொழில் தழுவும் சிறுபுலியூர் சலசயனத்து

ஆன் ஆயனது அடி அல்லது ஒன்று அறியேன் அடியேனே

#1632

நந்தா நெடு நரகத்திடை நணுகாவகை நாளும்

எந்தாய் என இமையோர் தொழுது ஏத்தும் இடம் எறி நீர்

செந்தாமரை மலரும் சிறுபுலியூர் சலசயனத்து

அம் தாமரை அடியாய் உனது அடியேற்கு அருள்புரியே

#1633

முழு நீலமும் மலர் ஆம்பலும் அரவிந்தமும் விரவி

கழுநீரொடு மடவார் அவர் கண் வாய் முகம் மலரும்

செழு நீர் வயல் தழுவும் சிறுபுலியூர் சலசயனம்

தொழும் நீர்மை அது உடையார் அடி தொழுவார் துயர் இலரே

#1634

சேய் ஓங்கு தண் திருமாலிருஞ்சோலை மலை உறையும்

மாயா எனக்கு உரையாய் இது மறை நான்கின் உளாயோ

தீ ஓம்புகை மறையோர் சிறுபுலியூர் சலசயன

தாயோ உனது அடியார் மனத்தாயோ அறியேனே

#1635

மை ஆர் வரி நீல மலர் கண்ணார் மனம் விட்டிட்டு

உய்வான் உன கழலே தொழுது எழுவேன் கிளி மடவார்

செ வாய் மொழி பயிலும் சிறுபுலியூர் சலசயனத்து

ஐ வாய் அரவு அணை மேல் உறை அமலா அருளாயே

#1636

கரு மா முகில் உருவா கனல் உருவா புனல் உருவா

பெரு மால் வரை உருவா பிற உருவா நினது உருவா

திரு மா மகள் மருவும் சிறுபுலியூர் சலசயனத்து

அரு மா கடல் அமுதே உனது அடியே சரண் ஆமே

#1637

சீர் ஆர் நெடு மறுகின் சிறுபுலியூர் சலசயனத்து

ஏர் ஆர் முகில் வண்ணன்-தனை இமையோர் பெருமானை

கார் ஆர் வயல் மங்கைக்கு இறை கலியன் ஒலி மாலை

பாரார் இவை பரவி தொழ பாவம் பயிலாவே

#1638

பெரும் புற கடலை அடல் ஏற்றினை பெண்ணை ஆணை எண் இல் முனிவர்க்கு அருள்

தரும் தவத்தை முத்தின் திரள் கோவையை பத்தர் ஆவியை நித்தில தொத்தினை

அரும்பினை அலரை அடியேன் மனத்து ஆசையை அமுதம் பொதி இன் சுவை

கரும்பினை கனியை சென்று நாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1639

மெய் நல தவத்தை திவத்தை தரும் மெய்யை பொய்யினை கையில் ஓர் சங்கு உடை

மை நிற கடலை கடல் வண்ணனை மாலை ஆலிலை பள்ளி கொள் மாயனை

நென்னலை பகலை இற்றை நாளினை நாளையாய் வரும் திங்களை ஆண்டினை

கன்னலை கரும்பினிடை தேறலை கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1640

எங்களுக்கு அருள்செய்கின்ற ஈசனை வாச வார் குழலாள் மலை மங்கை-தன்

பங்கனை பங்கில் வைத்து உகந்தான்-தன்னை பான்மையை பனி மா மதியம் தவழ்

மங்குலை சுடரை வடமாமலை உச்சியை நச்சி நாம் வணங்கப்படும்

கங்குலை பகலை சென்று நாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1641

பேய் முலை தலை நஞ்சு உண்ட பிள்ளையை தெள்ளியார் வணங்கப்படும் தேவனை

மாயனை மதிள் கோவல் இடைகழி மைந்தனை அன்றி அந்தணர் சிந்தையுள்

ஈசனை இலங்கும் சுடர் சோதியை எந்தையை எனக்கு எய்ப்பினில் வைப்பினை

காசினை மணியை சென்று நாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1642

ஏற்றினை இமயத்துள் எம் ஈசனை இம்மையை மறுமைக்கு மருந்தினை

ஆற்றலை அண்டத்து அப்புறத்து உய்த்திடும் ஐயனை கையில் ஆழி ஒன்று ஏந்திய

கூற்றினை குரு மா மணி குன்றினை நின்றவூர் நின்ற நித்தில தொத்தினை

காற்றினை புனலை சென்று நாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1643

துப்பனை துரங்கம் பட சீறிய தோன்றலை சுடர் வான் கலன் பெய்தது ஓர்

செப்பினை திருமங்கை மணாளனை தேவனை திகழும் பவளத்து ஒளி

ஒப்பனை உலகு ஏழினை ஊழியை ஆழி ஏந்திய கையனை அந்தணர்

கற்பினை கழுநீர் மலரும் வயல் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1644

திருத்தனை திசை நான்முகன் தந்தையை தேவதேவனை மூவரில் முன்னிய

விருத்தனை விளங்கும் சுடர் சோதியை விண்ணை மண்ணினை கண் நுதல் கூடிய

அருத்தனை அரியை பரி கீறிய அப்பனை அப்பில் ஆர் அழலாய் நின்ற

கருத்தனை களி வண்டு அறையும் பொழில் கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1645

வெம் சின களிற்றை விளங்காய் விழ கன்று வீசிய ஈசனை பேய் மகள்

துஞ்ச நஞ்சு சுவைத்து உண்ட தோன்றலை தோன்றல் வாள் அரக்கன் கெட தோன்றிய

நஞ்சினை அமுதத்தினை நாதனை நச்சுவார் உச்சி மேல் நிற்கும் நம்பியை

கஞ்சனை துஞ்ச வஞ்சித்த வஞ்சனை கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1646

பண்ணினை பண்ணில் நின்றது ஓர் பான்மையை பாலுள் நெய்யினை மால் உருவாய் நின்ற

விண்ணினை விளங்கும் சுடர் சோதியை வேள்வியை விளக்கின் ஒளி-தன்னை

மண்ணினை மலையை அலை நீரினை மாலை மா மதியை மறையோர் தங்கள்

கண்ணினை கண்கள் ஆரளவும் நின்று கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே

#1647

கண்ணமங்கையுள் கண்டுகொண்டேன் என்று காதலால் கலிகன்றி உரைசெய்த

வண்ண ஒண் தமிழ் ஒன்பதோடு ஒன்று இவை வல்லராய் உரைப்பார் மதியம் தவழ்

விண்ணில் விண்ணவராய் மகிழ்வு எய்துவர் மெய்ம்மை சொல்லில் வெண் சங்கம் ஒன்று ஏந்திய

கண்ண நின்-தனக்கும் குறிப்பு ஆகில் கற்கலாம் கவியின் பொருள் தானே

#1648

சிலை இலங்கு பொன் ஆழி திண் படை தண்டு ஒண் சங்கம் என்கின்றாளால்

மலை இலங்கு தோள் நான்கே மற்று அவனுக்கு எற்றே காண் என்கின்றாளால்

முலை இலங்கு பூம் பயலை முன்பு ஓட அன்பு ஓடி இருக்கின்றாளால்

கலை இலங்கு மொழியாளர் கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-கொலோ

#1649

செருவரை முன் ஆசு அறுத்த சிலை அன்றோ கைத்தலத்தது என்கின்றாளால்

பொரு வரை முன் போர் தொலைத்த பொன் ஆழி மற்று ஒரு கை என்கின்றாளால்

ஒருவரையும் நின் ஒப்பார் ஒப்பு இலா என் அப்பா என்கின்றாளால்

கரு வரை போல் நின்றானை கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-கொலோ

#1650

துன்னு மா மணி முடி மேல் துழாய் அலங்கல் தோன்றுமால் என்கின்றாளால்

மின்னு மா மணி மகர குண்டலங்கள் வில் வீசும் என்கின்றாளால்

பொன்னின் மா மணி ஆரம் அணி ஆகத்து இலங்குமால் என்கின்றாளால்

கன்னி மா மதிள் புடை சூழ் கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-கொலோ

#1651

தார் ஆய தண் துளப வண்டு உழுத வரை மார்பன் என்கின்றாளால்

போர் ஆனை கொம்பு ஒசித்த புள்பாகன் என் அம்மான்

என்கின்றாளால்

ஆரானும் காண்-மின்கள் அம் பவளம் வாய் அவனுக்கு

என்கின்றாளால்

கார் வானம் நின்று அதிரும் கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-

கொலோ

#1652

அடித்தலமும் தாமரையே அம் கைகளும் பங்கயமே

என்கின்றாளால்

முடித்தலமும் பொன் பூணும் என் நெஞ்சத்துள் அகலா

என்கின்றாளால்

வடி தடம் கண் மலரவளோ வரை ஆகத்துள் இருப்பாள்

என்கின்றாளால்

கடி கமலம் கள் உகுக்கும் கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-

கொலோ

#1653

பேர் ஆயிரம் உடைய பேராளன் பேராளன் என்கின்றாளால்

ஏர் ஆர் கன மகர குண்டலத்தன் எண் தோளன் என்கின்றாளால்

நீர் ஆர் மழை முகிலே நீள் வரையே ஒக்குமால் என்கின்றாளால்

கார் ஆர் வயல் மருவும் கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-கொலோ

#1654

செ அரத்த உடை ஆடை-அதன் மேல் ஓர் சிவளிகை கச்சு என்கின்றாளால்

அ அரத்த அடி இணையும் அம் கைகளும் பங்கயமே என்கின்றாளால்

மை வளர்க்கும் மணி உருவம் மரகதமோ மழை முகிலோ என்கின்றாளால்

கை வளர்க்கும் அழலாளர் கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-கொலோ

#1655

கொற்ற புள் ஒன்று ஏறி மன்றூடே வருகின்றான் என்கின்றாளால்

வெற்றி போர் இந்திரற்கும் இந்திரனே ஒக்குமால் என்கின்றாளால்

பெற்ற-கால் அவன் ஆகம் பெண் பிறந்தோம் உய்யோமோ என்கின்றாளால்

கற்ற நூல் மறையாளர் கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-கொலோ

#1656

வண்டு அமரும் வன மாலை மணி முடி மேல் மணம் நாறும் என்கின்றாளால்

உண்டு இவர்-பால் அன்பு எனக்கு என்று ஒருகாலும் பிரிகிலேன் என்கின்றாளால்

பண்டு இவரை கண்டு அறிவது எ ஊரில் யாம் என்றே பயில்கின்றாளால்

கண்டவர்-தம் மனம் வழங்கும் கண்ணபுரத்து அம்மானை கண்டாள்-கொலோ

#1657

மா வளரும் மென் நோக்கி மாதராள் மாயவனை கண்டாள் என்று

கா வளரும் கடி பொழில் சூழ் கண்ணபுரத்து அம்மானை கலியன் சொன்ன

பா வளரும் தமிழ் மாலை பன்னிய நூல் இவை ஐந்தும்ஐந்தும் வல்லார்

பூ வளரும் கற்பகம் சேர் பொன் உலகில் மன்னவராய் புகழ் தக்கோரே

#1658

தெள்ளியீர் தேவர்க்கும் தேவர் திரு தக்கீர்

வெள்ளியீர் வெய்ய விழு நிதி வண்ணர் ஓ

துள்ளு நீர் கண்ணபுரம் தொழுதாள் இவள்

கள்வியோ கை வளை கொள்வது தக்கதே

#1659

நீள் நிலா முற்றத்து நின்று இவள் நோக்கினாள்

காணுமோ கண்ணபுரம் என்று காட்டினாள்

பாணனார் திண்ணம் இருக்க இனி இவள்

நாணுமோ நன்று நன்று நறையூரர்க்கே

#1660

அருவி சோர் வேங்கடம் நீர்மலை என்று வாய்

வெருவினாள் மெய்யம் வினவி இருக்கின்றாள்

பெருகு சீர் கண்ணபுரம் என்று பேசினாள்

உருகினாள் உள்மெலிந்தாள் இது என்-கொலோ

#1661

உண்ணும் நாள் இல்லை உறக்கமும் தான் இல்லை

பெண்மையும் சால நிறைந்திலள் பேதை தான்

கண்ணன் ஊர் கண்ணபுரம் தொழும் கார் கடல்

வண்ணர் மேல் எண்ணம் இவட்கு இது என்-கொலோ

#1662

கண்ணன் ஊர் கண்ணபுரம் தொழும் காரிகை

பெண்மை என்தன்னுடை உண்மை உரைக்கின்றாள்

வெண்ணெய் உண்டு ஆப்புண்ட வண்ணம் விளம்பினால்

வண்ணமும் பொன் நிறம் ஆவது ஒழியுமே

#1663

வடவரை-நின்றும் வந்து இன்று கணபுரம்

இடவகை கொள்வது யாம் என்று பேசினாள்

மடவரல் மாதர் என் பேதை இவர்க்கு இவள்

கடவது என் கண் துயில் இன்று இவர் கொள்ளவே

#1664

தரங்க நீர் பேசினும் தண் மதி காயினும்

இரங்குமோ எத்தனை நாள் இருந்து எள்கினாள்

துரங்கம் வாய் கீண்டு உகந்தானது தொன்மை ஊர்

அரங்கமே என்பது இவள் தனக்கு ஆசையே

#1665

தொண்டு எல்லாம் நின் அடியே தொழுது உய்யுமா

கண்டு தான் கண்ணபுரம் தொழ போயினாள்

வண்டு உலாம் கோதை என் பேதை மணி நிறம்

கொண்டு தான் கோயின்மை செய்வது தக்கதே

#1666

முள் எயிறு ஏய்ந்தில கூழை முடிகொடா

தெள்ளியள் என்பது ஓர் தேசு இலள் என் செய்கேன்

கள் அவிழ் சோலை கணபுரம் கைதொழும்

பிள்ளையை பிள்ளை என்று எண்ணப்பெறுவரே

#1667

கார் மலி கண்ணபுரத்து எம் அடிகளை

பார் மலி மங்கையர் கோன் பரகாலன் சொல்

சீர் மலி பாடல் இவை பத்தும் வல்லவர்

நீர் மலி வையத்து நீடு நிற்பார்களே

#1668

கரை எடுத்த சுரி சங்கும் கன பவளத்து எழு கொடியும்

திரை எடுத்து வரு புனல் சூழ் திருக்கண்ணபுரத்து உறையும்

விரை எடுத்த துழாய் அலங்கல் விறல் வரை தோள் புடைபெயர

வரை எடுத்த பெருமானுக்கு இழந்தேன் என் வரி வளையே

#1669

அரி விரவு முகில் கணத்தால் அகில் புகையால் வரையோடும்

தெரிவு அரிய மணி மாட திருக்கண்ணபுரத்து உறையும்

வரி அரவின் அணை துயின்று மழை மதத்த சிறு தறு கண்

கரி வெருவ மருப்பு ஒசித்தாற்கு இழந்தேன் என் கன வளையே

#1670

துங்க மா மணி மாட நெடு முகட்டின் சூலிகை போம்

திங்கள் மா முகில் துணிக்கும் திருக்கண்ணபுரத்து உறையும்

பைம் கண் மால் விடை அடர்த்து பனி மதி கோள் விடுத்து உகந்த

செங்கண்மால் அம்மானுக்கு இழந்தேன் என் செறி வளையே

#1671

கணம் மருவும் மயில் அகவு கடி பொழில் சூழ் நெடு மறுகின்

திணம் மருவு கன மதிள் சூழ் திருக்கண்ணபுரத்து உறையும்

மணம் மருவு தோள் ஆய்ச்சி ஆர்க்க போய் உரலோடும்

புணர் மருதம் இற நடந்தாற்கு இழந்தேன் என் பொன் வளையே

#1672

வாய் எடுத்த மந்திரத்தால் அந்தணர்-தம் செய் தொழில்கள்

தீ எடுத்து மறை வளர்க்கும் திருக்கண்ணபுரத்து உறையும்

தாய் எடுத்த சிறு கோலுக்கு உளைந்து ஓடி தயிர் உண்ட

வாய் துடைத்த மைந்தனுக்கு இழந்தேன் என் வரி வளையே

#1673

மடல் எடுத்த நெடும் தாழை மருங்கு எல்லாம் வளர் பவளம்

திடல் எடுத்து சுடர் இமைக்கும் திருக்கண்ணபுரத்து உறையும்

அடல் அடர்த்து அன்று இரணியனை முரண் அழிய அணி உகிரால்

உடல் எடுத்த பெருமானுக்கு இழந்தேன் என் ஒளி வளையே

#1674

வண்டு அமரும் மலர் புன்னை வரி நீழல் அணி முத்தம்

தெண் திரைகள் வர திரட்டும் திருக்கண்ணபுரத்து உறையும்

எண் திசையும் எழு கடலும் இரு நிலனும் பெரு விசும்பும்

உண்டு உமிழ்ந்த பெருமானுக்கு இழந்தேன் என் ஒளி வளையே

#1675

கொங்கு மலி கரும் குவளை கண் ஆக தெண் கயங்கள்

செங்கமலம் முகம் அலர்த்தும் திருக்கண்ணபுரத்து உறையும்

வங்கம் மலி தடம் கடலுள் வரி அரவின் அணை துயின்ற

செங்கமல நாபனுக்கு இழந்தேன் என் செறி வளையே

#1676

வார் ஆளும் இளம் கொங்கை நெடும் பணை தோள் மட பாவை

சீர் ஆளும் வரை மார்வன் திருக்கண்ணபுரத்து உறையும்

பேராளன் ஆயிரம் பேர் ஆயிர வாய் அரவு அணை மேல்

பேராளர் பெருமானுக்கு இழந்தேன் என் பெய் வளையே

#1677

தே மருவு பொழில் புடை சூழ் திருக்கண்ணபுரத்து உறையும்

வாமனனை மறி கடல் சூழ் வயல் ஆலி வள நாடன்

காமரு சீர் கலிகன்றி கண்டு உரைத்த தமிழ் மாலை

நா மருவி இவை பாட வினை ஆய நண்ணாவே

#1678

விண்ணவர்-தங்கள் பெருமான் திருமார்வன்

மண்ணவர் எல்லாம் வணங்கும் மலி புகழ் சேர்

கண்ணபுரத்து எம் பெருமான் கதிர் முடி மேல்

வண்ண நறும் துழாய் வந்து ஊதாய் கோல் தும்பீ

#1679

வேத முதல்வன் விளங்கு புரி நூலன்

பாதம் பரவி பலரும் பணிந்து ஏத்தி

காதன்மை செய்யும் கண்ணபுரத்து எம்பெருமான்

தாது நறும் துழாய் தாழ்ந்து ஊதாய் கோல் தும்பீ

#1680

விண்ட மலர் எல்லாம் ஊதி நீ என் பெறுதி

அண்ட முதல்வன் அமரர்கள் எல்லாரும்

கண்டு வணங்கும் கண்ணபுரத்து எம்பெருமான்

வண்டு நறும் துழாய் வந்து ஊதாய் கோல் தும்பீ

#1681

நீர் மலிகின்றது ஓர் மீனாய் ஓர் ஆமையுமாய்

சீர் மலிகின்றது ஓர் சிங்க உரு ஆகி

கார் மலி வண்ணன் கண்ணபுரத்து எம்பெருமான்

தார் மலி தண் துழாய் தாழ்ந்து ஊதாய் கோல் தும்பீ

#1682

ஏர் ஆர் மலர் எல்லாம் ஊதி நீ என் பெறுதி

பார் ஆர் உலகம் பரவ பெரும் கடலுள்

கார் ஆமை ஆன கண்ணபுரத்து எம்பெருமான்

தார் ஆர் நறும் துழாய் தாழ்ந்து ஊதாய் கோல் தும்பீ

#1683

மார்வில் திருவன் வலன் ஏந்து சக்கரத்தன்

பாரை பிளந்த பரமன் பரஞ்சோதி

காரில் திகழ் காயா வண்ணன் கதிர் முடி மேல்

தாரில் நறும் துழாய் தாழ்ந்து ஊதாய் கோல் தும்பீ

#1684

வாமனன் கற்கி மதுசூதன் மாதவன்

தார் மன்னு தாசரதி ஆய தட மார்வன்

காமன் தன் தாதை கண்ணபுரத்து எம் பெருமான்

தாம நறும் துழாய் தாழ்ந்து ஊதாய் கோல் தும்பீ

#1685

நீல மலர்கள் நெடு நீர் வயல் மருங்கில்

சால மலர் எல்லாம் ஊதாதே வாள் அரக்கர்

காலன் கண்ணபுரத்து எம் பெருமான் கதிர் முடி மேல்

கோல நறும் துழாய் கொண்டு ஊதாய் கோல் தும்பீ

#1686

நந்தன் மதலை நில மங்கை நல் துணைவன்

அந்தம் முதல்வன் அமரர்கள்-தம் பெருமான்

கந்தம் கமழ் காயா வண்ணன் கதிர் முடி மேல்

கொந்து நறும் துழாய் கொண்டு ஊதாய் கோல் தும்பீ

#1687

வண்டு அமரும் சோலை வயல் ஆலி நல் நாடன்

கண்ட சீர் வென்றி கலியன் ஒலி மாலை

கொண்டல் நிற வண்ணன் கண்ணபுரத்தானை

தொண்டரோம் பாட நினைந்து ஊதாய் கோல் தும்பீ

#1688

தந்தை காலில் விலங்கு அற வந்து தோன்றிய தோன்றல் பின் தமியேன்-தன்

சிந்தை போயிற்று திருவருள் அவனிடை பெறும் அளவு இருந்தேனை

அந்தி காவலன் அமுது உறு பசும் கதிர் அவை சுட அதனோடும்

மந்தமாருதம் வன முலை தடவந்து வலிசெய்வது ஒழியாதே

#1689

மாரி மா கடல் வளைவணற்கு இளையவன் வரை புரை திருமார்வில்

தாரின் ஆசையில் போயின நெஞ்சமும் தாழ்ந்தது ஓர் துணை காணேன்

ஊரும் துஞ்சிற்று உலகமும் துயின்றது ஒளியவன் விசும்பு இயங்கும்

தேரும் போயிற்று திசைகளும் மறைந்தன செய்வது ஒன்று அறியேனே

#1690

ஆயன் மாயமே அன்றி மற்று என் கையில் வளைகளும் இறை நில்லா

பேயின் ஆருயிர் உண்டிடும் பிள்ளை நம் பெண் உயிர்க்கு இரங்குமோ

தூய மா மதி கதிர் சுட துணை இல்லை இணை முலை வேகின்றதால்

ஆயன் வேயினுக்கு அழிகின்றது உள்ளமும் அஞ்சேல் என்பார் இலையே

#1691

கயம் கொள் புண் தலை களிறு உந்து வெம் திறல் கழல் மன்னர் பெரும் போரில்

மயங்க வெண் சங்கம் வாய் வைத்த மைந்தனும் வந்திலன் மறி கடல் நீர்

தயங்கு வெண் திரை திவலை நுண் பனி எனும் தழல் முகந்து இள முலை மேல்

இயங்கும் மாருதம் விலங்கில் என் ஆவியை எனக்கு என பெறலாமே

#1692

ஏழு மா மரம் துளைபட சிலை வளைத்து இலங்கையை மலங்குவித்த

ஆழியான் நமக்கு அருளிய அருளொடும் பகல் எல்லை கழிகின்றதால்

தோழி நாம் இதற்கு என் செய்தும் துணை இல்லை சுடர் படு முதுநீரில்

ஆழ வாழ்கின்ற ஆவியை அடுவது ஓர் அந்தி வந்து அடைகின்றதே

#1693

முரியும் வெண் திரை முது கயம் தீப்பட முழங்கு அழல் எரி அம்பின்

வரி கொள் வெம் சிலை வளைவித்த மைந்தனும் வந்திலன் என் செய்கேன்

எரியும் வெம் கதிர் துயின்றது பாவியேன் இணை நெடும் கண் துயிலா

கரிய நாழிகை ஊழியின் பெரியன கழியும் ஆறு அறியேனே

#1694

கலங்க மா கடல் கடைந்து அடைத்து இலங்கையர் கோனது வரை ஆகம்

மலங்க வெம் சமத்து அடு சரம் துரந்த எம் அடிகளும் வாரானால்

இலங்கு வெம் கதிர் இள மதி-அதனொடும் விடை மணி அடும் ஆயன்

விலங்கல் வேயினது ஓசையுமாய் இனி விளைவது ஒன்று அறியேனே

#1695

முழுது இ வையகம் முறை கெட மறைதலும் முனிவனும் முனிவு எய்த

மழுவினால் மன்னர் ஆருயிர் வவ்விய மைந்தனும் வாரானால்

ஒழுகு நுண் பனிக்கு ஒடுங்கிய பேடையை அடங்க அம் சிறை கோலி

தழுவும் நள்ளிருள் தனிமையின் கடியது ஓர் கொடு வினை அறியேனே

#1696

கனம் செய் மா மதிள் கணபுரத்தவனொடும் கனவினில் அவன் தந்த

மனம் செய் இன்பம் வந்து உள் புக வெள்கி என் வளை நெக இருந்தேனை

சினம் செய் மால் விடை சிறு மணி ஓசை என் சிந்தையை சிந்துவிக்கும்

அனந்தல் அன்றிலின் அரி குரல் பாவியேன் ஆவியை அடுகின்றதே

#1697

வார் கொள் மென் முலை மடந்தையர் தடம் கடல் வண்ணனை தாள் நயந்து

ஆர்வத்தால் அவர் புலம்பிய புலம்பலை அறிந்து முன் உரைசெய்த

கார் கொள் பைம் பொழில் மங்கையர் காவலன் கலிகன்றி ஒலி வல்லார்

ஏர் கொள் வைகுந்த மாநகர் புக்கு இமையவரொடும் கூடுவரே

#1698

தொண்டீர் உய்யும் வகை கண்டேன் துளங்கா அரக்கர் துளங்க முன்

திண் தோள் நிமிர சிலை வளைய சிறிதே முனிந்த திருமார்வன்

வண்டு ஆர் கூந்தல் மலர் மங்கை வடி கண் மடந்தை மா நோக்கம்

கண்டான் கண்டுகொண்டு உகந்த கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1699

பொருந்தா அரக்கர் வெம் சமத்து பொன்ற அன்று புள் ஊர்ந்து

பெரும் தோள் மாலி தலை புரள பேர்ந்த அரக்கர் தென் இலங்கை

இருந்தார் தம்மை உடன்கொண்டு அங்கு எழில் ஆர் பிலத்து புக்கு ஒளிப்ப

கரும் தாள் சிலை கைக்கொண்டான் ஊர் கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1700

வல்லி இடையாள் பொருட்டாக மதிள் நீர் இலங்கையார் கோவை

அல்லல் செய்து வெம் சமத்துள் ஆற்றல் மிகுத்த ஆற்றலான்

வல் ஆள் அரக்கர் குல பாவை வாட முனி-தன் வேள்வியை

கல்வி சிலையால் காத்தான் ஊர் கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1701

மல்லை முந்நீர் அதர்பட வரி வெம் சிலை கால் வளைவித்து

கொல்லை விலங்கு பணிசெய்ய கொடியோன் இலங்கை புகலுற்று

தொல்லை மரங்கள் புக பெய்து துவலை நிமிர்ந்து வான் அணவ

கல்லால் கடலை அடைத்தான் ஊர் கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1702

ஆமை ஆகி அரி ஆகி அன்னம் ஆகி அந்தணர்-தம்

ஓமம் ஆகி ஊழி ஆகி உவரி சூழ்ந்த நெடும் புணரி

சேம மதிள் சூழ் இலங்கை கோன் சிரமும் கரமும் துணித்து முன்

காமன் பயந்தான் கருதும் ஊர் கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1703

வருந்தாது இரு நீ மட நெஞ்சே நம் மேல் வினைகள் வாரா முன்

திருந்தா அரக்கர் தென் இலங்கை செம் தீ உண்ண சிவந்து ஒரு நாள்

பெரும் தோள் வாணற்கு அருள் புரிந்து பின்னை மணாளன் ஆகி முன்

கரும் தாள் களிறு ஒன்று ஒசித்தான் ஊர் கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1704

இலை ஆர் மலர் பூம் பொய்கைவாய் முதலை தன்னால் அடர்ப்புண்டு

கொலை ஆர் வேழம் நடுக்குற்று குலைய அதனுக்கு அருள்புரிந்தான்

அலை நீர் இலங்கை தசக்கிரீவற்கு இளையோற்கு அரசை அருளி முன்

கலை மா சிலையால் எய்தான் ஊர் கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1705

மாலாய் மனமே அரும் துயரில் வருந்தாது இரு நீ வலி மிக்க

கால் ஆர் மருதும் காய் சினத்த கழுதும் கத மா கழுதையும்

மால் ஆர் விடையும் மத கரியும் மல்லர் உயிரும் மடிவித்து

காலால் சகடம் பாய்ந்தான் ஊர் கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1706

குன்றால் மாரி பழுது ஆக்கி கொடி ஏர் இடையாள் பொருட்டாக

வன் தாள் விடை ஏழ் அன்று அடர்த்த வானோர் பெருமான் மா மாயன்

சென்றான் தூது பஞ்சவர்க்காய் திரி கால் சகடம் சினம் அழித்து

கன்றால் விளங்காய் எறிந்தான் ஊர் கண்ணபுரம் நாம் தொழுதுமே

#1707

கரு மா முகில் தோய் நெடு மாட கண்ணபுரத்து எம் அடிகளை

திரு மா மகளால் அருள் மாரி செழு நீர் ஆலி வள நாடன்

மருவு ஆர் புயல் கை கலிகன்றி மங்கை வேந்தன் ஒலி வல்லார்

இரு மாநிலத்துக்கு அரசு ஆகி இமையோர் இறைஞ்ச வாழ்வாரே

#1708

வியம் உடை விடை இனம் உடைதர மட மகள்

குயம் மிடை தட வரை அகலம் அது உடையவர்

நயம் உடை நடை அனம் இளையவர் நடை பயில்

கயம் மிடை கணபுரம் அடிகள்-தம் இடமே

#1709

இணை மலி மருது இற எருதினொடு இகல் செய்து

துணை மலி முலையவள் மணம் மிகு கலவியுள்

மணம் மலி விழவினொடு அடியவர் அளவிய

கணம் மலி கணபுரம் அடிகள்-தம் இடமே

#1710

புயலுறு வரை மழை பொழிதர மணி நிரை

மயலுற வரை குடை எடுவிய நெடியவர்

முயல் துளர் மிளை முயல் துள வள விளை வயல்

கயல் துளு கணபுரம் அடிகள்-தம் இடமே

#1711

ஏதலர் நகைசெய இளையவர் அளை வெணெய்

போது செய்து அமரிய புனிதர் நல் விரை மலர்

கோதிய மதுகரம் குலவிய மலர் மகள்

காதல்செய் கணபுரம் அடிகள்-தம் இடமே

#1712

தொண்டரும் அமரரும் முனிவரும் தொழுது எழ

அண்டமொடு அகல் இடம் அளந்தவர் அமர்செய்து

விண்டவர் பட மதிள் இலங்கை முன் எரி எழ

கண்டவர் கணபுரம் அடிகள்-தம் இடமே

#1713

மழுவு இயல் படை உடையவன் இடம் மழை முகில்

தழுவிய உருவினர் திருமகள் மருவிய

கொழுவிய செழு மலர் முழுசிய பறவை பண்

எழுவிய கணபுரம் அடிகள்-தம் இடமே

#1714

பரிதியொடு அணி மதி பனி வரை திசை நிலம்

எரி தியொடு என இன இயல்வினர் செலவினர்

சுருதியொடு அரு மறை முறை சொலும் அடியவர்

கருதிய கணபுரம் அடிகள்-தம் இடமே

#1715

படி புல்கும் அடி இணை பலர் தொழ மலர் வைகு

கொடி புல்கு தட வரை அகலம் அது உடையவர்

முடி புல்கு நெடு வயல் படை செல அடி மலர்

கடி புல்கு கணபுரம் அடிகள்-தம் இடமே

#1716

புலம் மனும் மலர் மிசை மலர் மகள் புணரிய

நில மகள் என இன மகளிர்கள் இவரொடும்

வலம் மனு படை உடை மணி வணர் நிதி குவை

கலம் மனு கணபுரம் அடிகள்-தம் இடமே

#1717

மலி புகழ் கணபுரம் உடைய எம் அடிகளை

வலி கெழு மதிள் அயல் வயல் அணி மங்கையர்

கலியன் தமிழ் இவை விழுமிய இசையினொடு

ஒலி சொலும் அடியவர் உறு துயர் இலரே

#1718

வானோர் அளவும் முது முந்நீர் வளர்ந்த காலம் வலி உருவின்

மீனாய் வந்து வியந்து உய்ய கொண்ட தண் தாமரை கண்ணன்

ஆனா உருவில் ஆன் ஆயன் அவனை அம் மா விளை வயலுள்

கான் ஆர் புறவின் கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1719

மலங்கு விலங்கு நெடு வெள்ளம் மறுக அங்கு ஓர் வரை நட்டு

இலங்கு சோதி ஆர் அமுதம் எய்தும் அளவு ஓர் ஆமை ஆய்

விலங்கல் திரிய தடம் கடலுள் சுமந்து கிடந்த வித்தகனை

கலங்கல் முந்நீர் கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1720

பார் ஆர் அளவும் முது முந்நீர் பரந்த காலம் வளை மருப்பின்

ஏர் ஆர் உருவத்து ஏனமாய் எடுத்த ஆற்றல் அம்மானை

கூர் ஆர் ஆரல் இரை கருதி குருகு பாய கயல் இரியும்

கார் ஆர் புறவின் கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1721

உளைந்த அரியும் மானிடமும் உடனாய் தோன்ற ஒன்றுவித்து

விளைந்த சீற்றம் விண் வெதும்ப வேற்றோன் அகலம் வெம் சமத்து

பிளந்து வளைந்த உகிரானை பெரும் தண் செந்நெல் குலை தடிந்து

களம் செய் புறவின் கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1722

தொழும் நீர் வடிவின் குறள் உருவாய் வந்து தோன்றி மாவலி-பால்

முழுநீர் வையம் முன் கொண்ட மூவா உருவின் அம்மானை

உழும் நீர் வயலுள் பொன் கிளைப்ப ஒரு-பால் முல்லை முகையோடும்

கழுநீர் மலரும் கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1723

வடிவாய் மழுவே படை ஆக வந்து தோன்றி மூவெழுகால்

படி ஆர் அரசு களைகட்ட பாழியானை அம்மானை

குடியா வண்டு கொண்டு உண்ண கோல நீலம் மட்டு உகுக்கும்

கடி ஆர் புறவின் கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1724

வையம் எல்லாம் உடன் வணங்க வணங்கா மன்னனாய் தோன்றி

வெய்ய சீற்ற கடி இலங்கை குடிகொண்டு ஓட வெம் சமத்து

செய்த வெம் போர் நம்பரனை செழும் தண் கானல் மணம் நாறும்

கைதை வேலி கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1725

ஒற்றை குழையும் நாஞ்சிலும் ஒரு-பால் தோன்ற தான் தோன்றி

வெற்றி தொழிலார் வேல் வேந்தர் விண்-பால் செல்ல வெம் சமத்து

செற்ற கொற்ற தொழிலானை செம் தீ மூன்றும் இல் இருப்ப

கற்ற மறையோர் கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1726

துவரி கனிவாய் நில மங்கை துயர் தீர்ந்து உய்ய பாரதத்துள்

இவரித்து அரசர் தடுமாற இருள் நாள் பிறந்த அம்மானை

உவரி ஓதம் முத்து உந்த ஒரு-பால் ஒரு-பால் ஒண் செந்நெல்

கவரி வீசும் கண்ணபுரத்து அடியேன் கண்டுகொண்டேனே

#1727

மீனோடு ஆமை கேழல் அரி குறளாய் முன்னும் இராமனாய்

தானாய் பின்னும் இராமனாய் தாமோதரனாய் கற்கியும்

ஆனான் தன்னை கண்ணபுரத்து அடியன் கலியன் ஒலிசெய்த

தேன் ஆர் இன் சொல் தமிழ் மாலை செப்ப பாவம் நில்லாவே

#1728

கைம் மான மத யானை இடர் தீர்த்த கரு முகிலை

மைம் மான மணியை அணி கொள் மரகதத்தை

எம்மானை எம் பிரானை ஈசனை என் மனத்துள்

அம்மானை அடியேன் அடைந்து உய்ந்துபோனேனே

#1729

தரு மான மழை முகிலை பிரியாது தன் அடைந்தார்

வரும் மானம் தவிர்க்கும் மணியை அணி உருவின்

திருமாலை அம்மானை அமுதத்தை கடல் கிடந்த

பெருமானை அடியேன் அடைந்து உய்ந்து பிழைத்தேனே

#1730

விடை ஏழ் அன்று அடர்த்து வெகுண்டு விலங்கல் உற

படையால் ஆழி தட்ட பரமன் பரஞ்சோதி

மடை ஆர் நீலம் மல்கும் வயல் சூழ் கண்ணபுரம் ஒன்று

உடையானுக்கு அடியேன் ஒருவர்க்கு உரியேனோ

#1731

மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை என்னுள்

புக்கானை புகழ் சேர் பொலிகின்ற பொன் மலையை

தக்கானை கடிகை தடம் குன்றின் மிசை இருந்த

அக்கார கனியை அடைந்து உய்ந்துபோனேனே

#1732

வந்தாய் என் மனத்தே வந்து நீ புகுந்த பின்னை

எந்தாய் போய் அறியாய் இதுவே அமையாதோ

கொந்து ஆர் பைம் பொழில் சூழ் குடந்தை கிடந்து உகந்த

மைந்தா உன்னை என்றும் மறவாமை பெற்றேனே

#1733

எஞ்சா வெம் நரகத்து அழுந்தி நடுங்குகின்றேற்கு

அஞ்சேல் என்று அடியேனை ஆட்கொள்ள வல்லானை

நெஞ்சே நீ நினையாது இறைப்பொழுதும் இருத்தி கண்டாய்

மஞ்சு ஆர் மாளிகை சூழ் வயல் ஆலி மைந்தனையே

#1734

பெற்றார் பெற்று ஒழிந்தார் பின்னும் நின்று அடியேனுக்கு

உற்றானாய் வளர்த்து என் உயிர் ஆகி நின்றானை

முற்றா மா மதி கோள் விடுத்தானை எம்மானை

எத்தால் யான் மறக்கேன் இது சொல் என் ஏழை நெஞ்சே

#1735

கற்றார் பற்று அறுக்கும் பிறவி பெரும் கடலே

பற்றா வந்து அடியேன் பிறந்தேன் பிறந்த பின்னை

வற்றா நீர் வயல் சூழ் வயல் ஆலி அம்மானை

பெற்றேன் பெற்றதுவும் பிறவாமை பெற்றேனே

#1736

கண் ஆர் கண்ணபுரம் கடிகை கடி கமழும்

தண் ஆர் தாமரை சூழ் தலைச்சங்கம் மேல் திசையுள்

விண்ணோர் நாள்மதியை விரிகின்ற வெம் சுடரை

கண் ஆர கண்டுகொண்டு களிக்கின்றது இங்கு என்று-கொலோ

#1737

செரு நீர வேல் வலவன் கலிகன்றி மங்கையர் கோன்

கரு நீர் முகில் வண்ணன் கண்ணபுரத்தானை

இரு நீர் இன் தமிழ் இன் இசை மாலைகள் கொண்டு தொண்டீர்

வரும் நீர் வையம் உய்ய இவை பாடி ஆடு-மினே

#1738

வண்டு ஆர் பூ மா மலர் மங்கை மண நோக்கம்

உண்டானே உன்னை உகந்துஉகந்து உன்தனக்கே

தொண்டு ஆனேற்கு என் செய்கின்றாய் சொல்லு நால் வேதம்

கண்டானே கண்ணபுரத்து உறை அம்மானே

#1739

பெரு நீரும் விண்ணும் மலையும் உலகு ஏழும்

ஒரு தாரா நின்னுள் ஒடுக்கிய நின்னை அல்லால்

வரு தேவர் மற்று உளர் என்று என் மனத்து இறையும்

கருதேன் நான் கண்ணபுரத்து உறை அம்மானே

#1740

மற்றும் ஓர் தெய்வம் உளது என்று இருப்பாரோடு

உற்றிலேன் உற்றதும் உன் அடியார்க்கு அடிமை

மற்று எல்லாம் பேசிலும் நின் திரு எட்டெழுத்தும்

கற்று நான் கண்ணபுரத்து உறை அம்மானே

#1741

பெண் ஆனாள் பேர் இளம் கொங்கையின் ஆர் அழல் போல்

உண்ணா நஞ்சு உண்டு உகந்தாயை உகந்தேன் நான்

மண் ஆளா வாள் நெடும் கண்ணி மது மலராள்

கண்ணாளா கண்ணபுரத்து உறை அம்மானே

#1742

பெற்றாரும் சுற்றமும் என்று இவை பேணேன் நான்

மற்று ஆரும் பற்று இலேன் ஆதலால் நின் அடைந்தேன்

உற்றான் என்று உள்ளத்து வைத்து அருள்செய் கண்டாய்

கற்றார் சேர் கண்ணபுரத்து உறை அம்மானே

#1743

ஏத்தி உன் சேவடி எண்ணி இருப்பாரை

பார்த்திருந்து அங்கு நமன் தமர் பற்றாது

சோத்தம் நாம் அஞ்சுதும் என்று தொடாமை நீ

காத்தி போல் கண்ணபுரத்து உறை அம்மானே

#1744

வெள்ளை நீர் வெள்ளத்து அணைந்த அரவு அணை மேல்

துள்ளு நீர் மெள்ள துயின்ற பெருமானே

வள்ளலே உன் தமர்க்கு என்றும் நமன் தமர்

கள்ளர் போல் கண்ணபுரத்து உறை அம்மானே

#1745

மாண் ஆகி வையம் அளந்ததுவும் வாள் அவுணன்

பூண் ஆகம் கீண்டதுவும் ஈண்டு நினைந்து இருந்தேன்

பேணாத வல்வினையேன் இடர் எத்தனையும்

காணேன் நான் கண்ணபுரத்து உறை அம்மானே

#1746

நாட்டினாய் என்னை உனக்கு முன் தொண்டு ஆக

மாட்டினேன் அத்தனையே கொண்டு என் வல்வினையை

பாட்டினால் உன்னை என் நெஞ்சத்து இருந்தமை

காட்டினாய் கண்ணபுரத்து உறை அம்மானே

#1747

கண்ட சீர் கண்ணபுரத்து உறை அம்மானை

கொண்ட சீர் தொண்டன் கலியன் ஒலி மாலை

பண்டமாய் பாடும் அடியவர்க்கு எஞ்ஞான்றும்

அண்டம் போய் ஆட்சி அவர்க்கு அது அறிந்தோமே

#1748

வங்க மா முந்நீர் வரி நிற பெரிய வாள் அரவின் அணை மேவி

சங்கம் ஆர் அம் கை தட மலர் உந்தி சாம மா மேனி என் தலைவன்

அங்கம் ஆறு ஐந்து வேள்வி நால் வேதம் அரும் கலை பயின்று
எரி மூன்றும்

செம் கையால் வளர்க்கும் துளக்கம் இல் மனத்தோர் திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1749

கவள மா கதத்த கரி உய்ய பொய்கை கராம் கொள கலங்கி உள் நினைந்து

துவள மேல் வந்து தோன்றி வன் முதலை துணிபட சுடு படை துரந்தோன்

குவளை நீள் முளரி குமுதம் ஒண் கழுநீர் கொய்ம் மலர் நெய்தல் ஒண் கழனி

திவளும் மாளிகை சூழ் செழு மணி புரிசை திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1750

வாதை வந்து அடர வானமும் நிலனும் மலைகளும் அலை கடல் குளிப்ப

மீது கொண்டு உகளும் மீன் உரு ஆகி விரி புனல் வரி அகட்டு ஒளித்தோன்

போது அலர் புன்னை மல்லிகை மௌவல் புது விரை மது மலர் அணைந்து

சீத ஒண் தென்றல் திசை-தொறும் கமழும் திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1751

வென்றி சேர் திண்மை விலங்கல் மா மேனி வெள் எயிற்று ஒள் எரி தறு கண்

பன்றியாய் அன்று பார் மகள் பயலை தீர்த்தவன் பஞ்சவர் பாகன்

ஒன்று அலா உருவத்து உலப்பு இல் பல் காலத்து உயர் கொடி ஒளி வளர் மதியம்

சென்று சேர் சென்னி சிகர நல் மாட திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1752

மன்னவன் பெரிய வேள்வியில் குறளாய் மூவடி நீரொடும் கொண்டு

பின்னும் ஏழ் உலகும் ஈர் அடி ஆக பெரும் திசை அடங்கிட நிமிர்ந்தோன்

அன்னம் மென் கமலத்து அணி மலர் பீடத்து அலை புனல் இலை குடை நீழல்

செந்நெல் ஒண் கவரி அசைய வீற்றிருக்கும் திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1753

மழுவினால் அவனி அரசை மூவெழுகால் மணி முடி பொடிபடுத்து உதிர

குழுவு வார் புனலுள் குளித்து வெம் கோபம் தவிர்ந்தவன் குலை மலி கதலி

குழுவும் வார் கமுகும் குரவும் நல் பலவும் குளிர் தரு சூதம் மாதவியும்

செழுமை ஆர் பொழில்கள் தழுவும் நல் மாட திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1754

வான் உளார் அவரை வலிமையால் நலியும் மறி கடல் இலங்கையார் கோனை

பானு நேர் சரத்தால் பனங்கனி போல பரு முடி உதிர வில் வளைத்தோன்

கான் உலாம் மயிலின் கணங்கள் நின்று ஆட கண முகில் முரசம் நின்று அதிர

தேன் உலாம் வரி வண்டு இன் இசை முரலும் திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1755

அரவ நீள் கொடியோன் அவையுள் ஆசனத்தை அஞ்சிடாதே இட அதற்கு

பெரிய மா மேனி அண்டம் ஊடுருவ பெரும் திசை அடங்கிட நிமிர்ந்தோன்

வரையின் மா மணியும் மரகத திரளும் வயிரமும் வெதிர் உதிர் முத்தும்

திரை கொணர்ந்து உந்தி வயல்-தொறும் குவிக்கும்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1756

பன்னிய பாரம் பார் மகட்கு ஒழிய பாரத மா பெரும் போரில்

மன்னர்கள் மடிய மணி நெடும் திண் தேர் மைத்துனற்கு உய்த்த மா மாயன்

துன்னு மாதவியும் சுரபுனை பொழிலும் சூழ்ந்து எழு செண்பக மலர்வாய்

தென்ன என்று அளிகள் முரன்று இசைபாடும்
திருக்கண்ணங்குடியுள் நின்றானே

#1757

கலை உலா அல்குல் காரிகை திறத்து கடல் பெரும் படையொடும் சென்று

சிலையினால் இலங்கை தீ எழ செற்ற திருக்கண்ணங்குடியுள் நின்றானை

மலை குலாம் மாட மங்கையர் தலைவன் மான வேல் கலியன் வாய் ஒலிகள்

உலவு சொல் மாலை ஒன்பதோடு ஒன்றும் வல்லவர்க்கு இல்லை நல்குரவே

#1758

பொன் இவர் மேனி மரகதத்தின் பொங்கு இளம் சோதி அகலத்து ஆரம்

மின் இவர் வாயில் நல் வேதம் ஓதும் வேதியர் வானவர் ஆவர் தோழீ

என்னையும் நோக்கி என் அல்குல் நோக்கி ஏந்து இளம் கொங்கையும் நோக்குகின்றார்

அன்னை என் நோக்கும் என்று அஞ்சுகின்றேன் அச்சோ ஒருவர் அழகியவா

#1759

தோடு அவிழ் நீலம் மணம் கொடுக்கும் சூழ் புனல் சூழ் குடந்தை கிடந்த

சேடர்-கொல் என்று தெரிக்கமாட்டேன் செம் சுடர் ஆழியும் சங்கும் ஏந்தி

பாடக மெல் அடியார் வணங்க பல் மணி முத்தொடு இலங்கு சோதி

ஆடகம் பூண்டு ஒரு நான்கு தோளும் அச்சோ ஒருவர் அழகியவா

#1760

வேய் இரும் சோலை விலங்கல் சூழ்ந்த மெய்ய மணாளர் இ வையம் எல்லாம்

தாயின நாயகர் ஆவர் தோழீ தாமரை கண்கள் இருந்த ஆறு

சேய் இரும் குன்றம் திகழ்ந்தது ஒப்ப செவ்விய ஆகி மலர்ந்த சோதி

ஆயிரம் தோளொடு இலங்கு பூணும் அச்சோ ஒருவர் அழகியவா

#1761

வம்பு அவிழும் துழாய் மாலை தோள் மேல் கையன ஆழியும் சங்கும் ஏந்தி

நம்பர் நம் இல்லம் புகுந்து நின்றார் நாகரிகர் பெரிதும் இளையர்

செம் பவளம் இவர் வாயின் வண்ணம் தேவர் இவரது உருவம் சொல்லில்

அம் பவள திரளேயும் ஒப்பர் அச்சோ ஒருவர் அழகியவா

#1762

கோழியும் கூடலும் கோயில் கொண்ட கோவலரே ஒப்பர் குன்றம் அன்ன

பாழி அம் தோளும் ஓர் நான்கு உடையர் பண்டு இவர் தம்மையும் கண்டறியோம்

வாழியரோ இவர் வண்ணம் எண்ணில் மா கடல் போன்று உளர் கையில் வெய்ய

ஆழி ஒன்று ஏந்தி ஓர் சங்கு பற்றி அச்சோ ஒருவர் அழகியவா

#1763

வெம் சின வேழ மருப்பு ஒசித்த வேந்தர்-கொல் ஏந்து இழையார் மனத்தை

தஞ்சு உடையாளர்-கொல் யான் அறியேன் தாமரை கண்கள் இருந்த ஆறு

கஞ்சனை அஞ்ச முன் கால் விசைத்த காளையர் ஆவர் கண்டார் வணங்கும்

அஞ்சன மா மலையேயும் ஒப்பர் அச்சோ ஒருவர் அழகியவா

#1764

பிணி அவிழ் தாமரை மொட்டு அலர்த்தும் பேர் அருளாளர்-கொல் யான் அறியேன்

பணியும் என் நெஞ்சம் இது என்-கொல் தோழீ பண்டு இவர் தம்மையும் கண்டறியோம்

அணி கெழு தாமரை அன்ன கண்ணும் அம் கையும் பங்கயம் மேனி வானத்து

அணி கெழு மா முகிலேயும் ஒப்பர் அச்சோ ஒருவர் அழகியவா

#1765

மஞ்சு உயர் மா மதி தீண்ட நீண்ட மாலிருஞ்சோலை மணாளர் வந்து என்

நெஞ்சுள்ளும் கண்ணுள்ளும் நின்று நீங்கார் நீர்மலையார்-கொல் நினைக்கமாட்டேன்

மஞ்சு உயர் பொன் மலை மேல் எழுந்த மா முகில் போன்று உளர் வந்து காணீர்

அம் சிறை புள்ளும் ஒன்று ஏறி வந்தார் அச்சோ ஒருவர் அழகியவா

#1766

எண் திசையும் எறி நீர் கடலும் ஏழ் உலகும் உடனே விழுங்கி

மண்டி ஓர் ஆலிலை பள்ளிகொள்ளும் மாயர்-கொல் மாயம் அறியமாட்டேன்

கொண்டல் நல் மால்வரையேயும் ஒப்பர் கொங்கு அலர் தாமரை கண்ணும் வாயும்

அண்டத்து அமரர் பணிய நின்றார் அச்சோ ஒருவர் அழகியவா

#1767

அன்னமும் கேழலும் மீனும் ஆய ஆதியை நாகை அழகியாரை

கன்னி நல் மா மதிள் மங்கை வேந்தன் காமரு சீர் கலிகன்றி குன்றா

இன் இசையால் சொன்ன செம் சொல் மாலை ஏழும் இரண்டும் ஓர் ஒன்றும் வல்லார்

மன்னவராய் உலகு ஆண்டு மீண்டும் வானவராய் மகிழ்வு எய்துவரே

#1768

தன்னை நைவிக்கிலேன் வல்வினையேன் தொழுதும் எழு

பொன்னை நைவிக்கும் அ பூம் செருந்தி மண நீழல்வாய்

என்னை நைவித்து எழில் கொண்டு அகன்ற பெருமான் இடம்

புன்னை முத்தம் பொழில் சூழ்ந்து அழகு ஆய புல்லாணியே

#1769

உருகி நெஞ்சே நினைந்து இங்கு இருந்து என் தொழுதும் எழு

முருகு வண்டு உன் மலர் கைதையின் நீழலில் முன் ஒரு நாள்

பெருகு காதன்மை என் உள்ளம் எய்த பிரிந்தான் இடம்

பொருது முந்நீர் கரைக்கே மணி உந்து புல்லாணியே

#1770

ஏது செய்தால் மறக்கேன் மனமே தொழுதும் எழு

தாது மல்கு தடம் சூழ் பொழில் தாழ்வர் தொடர்ந்து பின்

பேதை நின்னை பிரியேன் இனி என்று அகன்றான் இடம்

போது நாளும் கமழும் பொழில் சூழ்ந்த புல்லாணியே

#1771

கொங்கு உண் வண்டே கரியாக வந்தான் கொடியேற்கு முன்

நங்கள் ஈசன் நமக்கே பணித்த மொழி செய்திலன்

மங்கை நல்லாய் தொழுதும் எழு போய் அவன் மன்னும் ஊர்

பொங்கு முந்நீர் கரைக்கே மணி உந்து புல்லாணியே

#1772

உணரில் உள்ளம் சுடுமால் வினையேன் தொழுதும் எழு

துணரி நாழல் நறும் போது நம் சூழ் குழல் பெய்து பின்

தணரில் ஆவி தளரும் என அன்பு தந்தான் இடம்

புணரி ஓதம் பணில மணி உந்து புல்லாணியே

#1773

எள்கி நெஞ்சே நினைந்து இங்கு இருந்து என் தொழுதும் எழு

வள்ளல் மாயன் மணி வண்ணன் எம்மான் மருவும் இடம்

கள் அவிழும் மலர் காவியும் தூ மடல் கைதையும்

புள்ளும் அள்ளல் பழனங்களும் சூழ்ந்த புல்லாணியே

#1774

பரவி நெஞ்சே தொழுதும் எழு போய் அவன் பாலம் ஆய்

இரவும் நாளும் இனி கண் துயிலாது இருந்து என் பயன்

விரவி முத்தம் நெடு வெண் மணல் மேல் கொண்டு வெண் திரை

புரவி என்ன புதம்செய்து வந்து உந்து புல்லாணியே

#1775

அலமும் ஆழி படையும் உடையார் நமக்கு அன்பர் ஆய்

சலம் அது ஆகி தகவு ஒன்று இலர் நாம் தொழுதும் எழு

உலவு கால் நல் கழி ஓங்கு தண் பைம் பொழிலூடு இசை

புலவு கானல் களி வண்டு இனம் பாடு புல்லாணியே

#1776

ஓதி நாமம் குளித்து உச்சி-தன்னால் ஒளி மா மலர்

பாதம் நாளும் பணிவோம் நமக்கே நலம் ஆதலின்

ஆது தாரான் எனிலும் தரும் அன்றியும் அன்பர் ஆய்

போதும் மாதே தொழுதும் அவன் மன்னு புல்லாணியே

#1777

இலங்கு முத்தும் பவள கொழுந்தும் எழில் தாமரை

புலங்கள் முற்றும் பொழில் சூழ்ந்த அழகு ஆய புல்லாணி மேல்

கலங்கல் இல்லா புகழான் கலியன் ஒலி மாலைகள்

வலம்கொள் தொண்டர்க்கு இடம் ஆவது பாடு இல் வைகுந்தமே

#1778

கா ஆர் மடல் பெண்ணை அன்றில் அரிகுரலும்

ஏ வாயினூடு இயங்கும் எஃகின் கொடிதாலோ

பூ ஆர் மணம் கமழும் புல்லாணி கைதொழுதேன்

பாவாய் இது நமக்கு ஓர் பான்மையே ஆகாதே

#1779

முன்னம் குறள் உருவாய் மூவடி மண் கொண்டு அளந்த

மன்னன் சரிதைக்கே மால் ஆகி பொன் பயந்தேன்

பொன்னம் கழி கானல் புள் இனங்காள் புல்லாணி

அன்னமாய் நூல் பயந்தாற்கு ஆங்கு இதனை செப்பு-மினே

#1780

வவ்வி துழாய் அதன் மேல் சென்ற தனி நெஞ்சம்

செவ்வி அறியாது நிற்கும்-கொல் நித்திலங்கள்

பவ்வ திரை உலவு புல்லாணி கைதொழுதேன்

தெய்வ சிலையாற்கு என் சிந்தை நோய் செப்பு-மினே

#1781

பரிய இரணியனது ஆகம் அணி உகிரால்

அரி உருவாய் கீண்டான் அருள் தந்தவா நமக்கு

பொரு திரைகள் போந்து உலவு புல்லாணி கைதொழுதேன்

அரி மலர் கண் நீர் ததும்ப அம் துகிலும் நில்லாவே

#1782

வில்லால் இலங்கை மலங்க சரம் துரந்த

வல்லாளன் பின் போன நெஞ்சம் வரும் அளவும்

எல்லாரும் என்தன்னை ஏசிலும் பேசிடினும்

புல்லாணி எம் பெருமான் பொய் கேட்டு இருந்தேனே

#1783

சுழன்று இலங்கு வெம் கதிரோன் தேரோடும் போய் மறைந்தான்

அழன்று கொடிது ஆகி அம் சுடரோன் தான் அடுமால்

செழும் தடம் பூஞ்சோலை சூழ் புல்லாணி கைதொழுதேன்

இழந்திருந்தேன் என்தன் எழில் நிறமும் சங்குமே

#1784

கனை ஆர் இடி குரலின் கார் மணியின் நா ஆடல்

தினையேனும் நில்லாது தீயில் கொடிதாலோ

புனை ஆர் மணி மாட புல்லாணி கைதொழுதேன்

வினையேன் மேல் வேலையும் வெம் தழலே வீசுமே

#1785

தூம்பு உடை கை வேழம் வெருவ மருப்பு ஒசித்த

பாம்பின் அணையான் அருள்தந்தவா நமக்கு

பூம் செருந்தி பொன் சொரியும் புல்லாணி கைதொழுதேன்

தேம்பல் இளம் பிறையும் என்தனக்கு ஓர் வெம் தழலே

#1786

வேதமும் வேள்வியும் விண்ணும் இரு சுடரும்

ஆதியும் ஆனான் அருள்தந்தவா நமக்கு

போது அலரும் புன்னை சூழ் புல்லாணி கைதொழுதேன்

ஓதமும் நானும் உறங்காது இருந்தேனே

#1787

பொன் அலரும் புன்னை சூழ் புல்லாணி அம்மானை

மின் இடையார் வேட்கை நோய் கூர இருந்ததனை

கல் நவிலும் திண் தோள் கலியன் ஒலிவல்லார்

மன்னவராய் மண் ஆண்டு வான் நாடும் முன்னுவரே

#1788

தவள இளம் பிறை துள்ளும் முந்நீர் தண் மலர் தென்றலோடு அன்றில் ஒன்றி

துவள என் நெஞ்சகம் சோர ஈரும் சூழ் பனி நாள் துயிலாதிருப்பேன்

இவளும் ஓர் பெண் கொடி என்று இரங்கார் என் நலம் ஐந்தும் முன் கொண்டு போன

குவளை மலர் நிற வண்ணர் மன்னு குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1789

தாது அவிழ் மல்லிகை புல்லி வந்த தண் மதியின் இள வாடை இன்னே

ஊதை திரிதந்து உழறி உண்ண ஓர் இரவும் உறங்கேன் உறங்கும்

பேதையர் பேதைமையால் இருந்து பேசிலும் பேசுக பெய் வளையார்

கோதை நறு மலர் மங்கை மார்வன் குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1790

காலையும் மாலை ஒத்துண்டு கங்குல் நாழிகை ஊழியில் நீண்டு உலாவும்

போல்வது ஓர் தன்மை புகுந்து நிற்கும் பொங்கு அழலே ஒக்கும் வாடை சொல்லில்

மாலவன் மா மணி வண்ணன் மாயம் மற்றும் உள அவை வந்திடா முன்

கோல மயில் பயிலும் புறவின் குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1791

கரு மணி பூண்டு வெண் நாகு அணைந்து கார் இமில் ஏற்று அணர் தாழ்ந்து உலாவும்

ஒரு மணி ஓசை என் உள்ளம் தள்ள ஓர் இரவும் உறங்காதிருப்பேன்

பெரு மணி வானவர் உச்சி வைத்த பேர் அருளாளன் பெருமை பேசி

குரு மணி நீர் கொழிக்கும் புறவின் குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1792

திண் திமில் ஏற்றின் மணியும் ஆயன் தீம் குழல் ஓசையும் தென்றலோடு

கொண்டது ஓர் மாலையும் அந்தி ஈன்ற கோல இளம்பிறையோடு கூடி

பண்டைய அல்ல இவை நமக்கு பாவியேன் ஆவியை வாட்டம் செய்யும்

கொண்டல் மணி நிற வண்ணர் மன்னு குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1793

எல்லியும் நன் பகலும் இருந்தே ஏசிலும் ஏசுக ஏந்து இழையார்

நல்லர் அவர் திறம் நாம் அறியோம் நாண் மடம் அச்சம் நமக்கு இங்கு இல்லை

வல்லன சொல்லி மகிழ்வரேலும் மா மணி வண்ணரை நாம் மறவோம்

கொல்லை வளர் இள முல்லை புல்கு குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1794

செம் கண் நெடிய கரிய மேனி தேவர் ஒருவர் இங்கே புகுந்து என்

அங்கம் மெலிய வளை கழல ஆது-கொலோ என்று சொன்ன பின்னை

ஐங்கணை வில்லி தன் ஆண்மை என்னோடு ஆடும் அதனை அறியமாட்டேன்

கொங்கு அலர் தண் பணை சூழ் புறவின் குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1795

கேவலம் அன்று கடலின் ஓசை கேள்-மின்கள் ஆயன் கை ஆம்பல் வந்து என்

ஆவி அளவும் அணைந்து நிற்கும் அன்றியும் ஐந்து கணை தெரிந்திட்டு

ஏ வலம் காட்டி இவன் ஒருவன் இப்படியே புகுந்து எய்திடா முன்

கோவலர் கூத்தன் குறிப்பு அறிந்து குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1796

சோத்து என நின்று தொழ இரங்கான் தொல் நலம் கொண்டு எனக்கு இன்று-காறும்

போர்ப்பது ஓர் பொன் படம் தந்து போனான் போயின ஊர் அறியேன் என் கொங்கை

மூத்திடுகின்றன மற்று அவன் தன் மொய் அகலம் அணையாது வாளா

கூத்தன் இமையவர் கோன் விரும்பும் குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1797

செற்றவன் தென் இலங்கை மலங்க தேவர் பிரான் திரு மா மகளை

பெற்றும் என் நெஞ்சகம் கோயில் கொண்ட பேர் அருளாளன் பெருமை பேச

கற்றவன் காமரு சீர் கலியன் கண் அகத்தும் மனத்தும் அகலா

கொற்றவன் முற்று உலகு ஆளி நின்ற குறுங்குடிக்கே என்னை உய்த்திடு-மின்

#1798

அக்கும் புலியின் அதளும் உடையார் அவர் ஒருவர்

பக்கம் நிற்க நின்ற பண்பர் ஊர் போலும்

தக்க மரத்தின் தாழ் சினை ஏறி தாய் வாயில்

கொக்கின் பிள்ளை வெள் இறவு உண்ணும் குறுங்குடியே

#1799

துங்க ஆர் அரவ திரை வந்து உலவ தொடு கடலுள்

பொங்கு ஆர் அரவில் துயிலும் புனிதர் ஊர் போலும்

செம் கால் அன்னம் திகழ் தண் பணையில் பெடையோடும்

கொங்கு ஆர் கமலத்து அலரில் சேரும் குறுங்குடியே

#1800

வாழ கண்டோம் வந்து காண்-மின் தொண்டீர்காள்

கேழல் செம் கண் மா முகில் வண்ணர் மருவும் ஊர்

ஏழை செம் கால் இன் துணை நாரைக்கு இரை தேடி

கூழை பார்வை கார் வயல் மேயும் குறுங்குடியே

#1801

சிரம் முன் ஐந்தும் ஐந்தும் சிந்த சென்று அரக்கன்

உரமும் கரமும் துணித்த உரவோன் ஊர் போலும்

இரவும் பகலும் ஈன் தேன் முரல மன்று எல்லாம்

குரவின் பூவே தான் மணம் நாறும் குறுங்குடியே

#1802

கவ்வை களிற்று மன்னர் மாள கலி மா தேர்

ஐவர்க்காய் அன்று அமரில் உய்த்தான் ஊர் போலும்

மை வைத்து இலங்கு கண்ணார் தங்கள் மொழி ஒப்பான்

கொவ்வை கனி வாய் கிள்ளை பேசும் குறுங்குடியே

#1803

தீ நீர் வண்ண மா மலர் கொண்டு விரை ஏந்தி

தூ நீர் பரவி தொழு-மின் எழு-மின் தொண்டீர்காள்

மா நீர் வண்ணர் மருவி உறையும் இடம் வானில்

கூன் நீர் மதியை மாடம் தீண்டும் குறுங்குடியே

#1804

வல்லி சிறு நுண் இடையாரிடை நீர் வைக்கின்ற

அல்லல் சிந்தை தவிர அடை-மின் அடியீர்காள்

சொல்லில் திருவே அனையார் கனி வாய் எயிறு ஒப்பான்

கொல்லை முல்லை மெல் அரும்பு ஈனும் குறுங்குடியே

#1805

நார் ஆர் இண்டை நாள்மலர் கொண்டு நம் தமர்காள்

ஆரா அன்போடு எம் பெருமான் ஊர் அடை-மின்கள்

தாரா ஆரும் வார் புனல் மேய்ந்து வயல் வாழும்

கூர் வாய் நாரை பேடையொடு ஆடும் குறுங்குடியே

#1806

நின்ற வினையும் துயரும் கெட மா மலர் ஏந்தி

சென்று பணி-மின் எழு-மின் தொழு-மின் தொண்டீர்காள்

என்றும் இரவும் பகலும் வரி வண்டு இசை பாட

குன்றின் முல்லை மன்றிடை நாறும் குறுங்குடியே

#1807

சிலையால் இலங்கை செற்றான் மற்று ஓர் சின வேழம்

கொலை ஆர் கொம்பு கொண்டான் மேய குறுங்குடி மேல்

கலை ஆர் பனுவல் வல்லான் கலியன் ஒலி மாலை

நிலை ஆர் பாடல் பாட பாவம் நில்லாவே

#1808

தந்தை தாய் மக்களே சுற்றம் என்று உற்றவர் பற்றி நின்ற

பந்தம் ஆர் வாழ்க்கையை நொந்து நீ பழி என கருதினாயேல்

அந்தமாய் ஆதியாய் ஆதிக்கும் ஆதியாய் ஆயன் ஆய

மைந்தனார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1809

மின்னும் மா வல்லியும் வஞ்சியும் வென்ற நுண் இடை நுடங்கும்

அன்ன மென் நடையினார் கலவியை அருவருத்து
அஞ்சினாயேல்

துன்னு மா மணி முடி பஞ்சவர்க்கு ஆகி முன் தூது சென்ற

மன்னனார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1810

பூண் உலாம் மென் முலை பாவைமார் பொய்யினை மெய் இது
என்று

பேணுவார் பேசும் அ பேச்சை நீ பிழை என கருதினாயேல்

நீள் நிலா வெண்குடை வாணனார் வேள்வியில் மண் இரந்த

மாணியார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1811

பண் உலாம் மென் மொழி பாவைமார் பணை முலை அணைதும்
நாம் என்று

எண்ணுவார் எண்ணம் அது ஒழித்து நீ பிழைத்து உய
கருதினாயேல்

விண் உளார் விண்ணின் மீது இயன்ற வேங்கடத்து உளார் வளம்
கொள் முந்நீர்

வண்ணனார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1812

மஞ்சு தோய் வெண்குடை மன்னராய் வாரணம் சூழ வாழ்ந்தார்

துஞ்சினார் என்பது ஓர் சொல்லை நீ துயர் என கருதினாயேல்

நஞ்சு தோய் கொங்கை மேல் அம் கை வாய் வைத்து அவள் நாளை உண்ட

மஞ்சனார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1813

உருவின் ஆர் பிறவி சேர் ஊன் பொதி நரம்பு தோல் குரம்பையுள் புக்கு

அருவி நோய் செய்து நின்று ஐவர் தாம் வாழ்வதற்கு அஞ்சினாயேல்

திருவின் ஆர் வேதம் நான்கு ஐந்து தீ வேள்வியோடு அங்கம் ஆறும்

மருவினார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1814

நோய் எலாம் பெய்தது ஓர் ஆக்கையை மெய் என கொண்டு வாளா

பேயர் தாம் பேசும் அ பேச்சை நீ பிழை என கருதினாயேல்

தீ உலாம் வெம் கதிர் திங்களாய் மங்குல் வான் ஆகி நின்ற

மாயனார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1815

மஞ்சு சேர் வான் எரி நீர் நிலம் கால் இவை மயங்கி நின்ற

அஞ்சு சேர் ஆக்கையை அரணம் அன்று என்று உய கருதினாயேல்

சந்து சேர் மென் முலை பொன் மலர் பாவையும் தாமும் நாளும்

வந்து சேர் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1816

வெள்ளியார் பிண்டியார் போதியார் என்று இவர் ஓதுகின்ற

கள்ளநூல்-தன்னையும் கருமம் அன்று என்று உய கருதினாயேல்

தெள்ளியார் கைதொழும் தேவனார் மா முநீர் அமுது தந்த

வள்ளலார் வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவு நெஞ்சே

#1817

மறைவலார் குறைவு இலார் உறையும் ஊர் வல்லவாழ் அடிகள் தம்மை

சிறை குலாம் வண்டு அறை சோலை சூழ் கோல நீள் ஆலி நாடன்

கறை உலாம் வேல் வல்ல கலியன் வாய் ஒலி இவை கற்று வல்லார்

இறைவராய் இரு நிலம் காவல் பூண்டு இன்பம் நன்கு எய்துவாரே

#1818

முந்துற உரைக்கேன் விரை குழல் மடவார் கலவியை விடு தடுமாறல்

அந்தரம் ஏழும் அலை கடல் ஏழும் ஆய எம் அடிகள்-தம் கோயில்

சந்தொடு மணியும் அணி மயில் தழையும் தழுவி வந்து அருவிகள் நிரந்து

வந்து இழி சாரல் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1819

இண்டையும் புனலும் கொண்டு இடை இன்றி எழு-மினோ தொழுதும் என்று இமையோர்

அண்டரும் பரவ அரவணை துயின்ற சுடர் முடி கடவுள்-தம் கோயில்

விண்டு அலர் தூளி வேய் வளர் புறவில் விரை மலர் குறிஞ்சியின் நறும் தேன்

வண்டு அமர் சாரல் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1820

பிணி வளர் ஆக்கை நீங்க நின்று ஏத்த பெரு நிலம் அருளின் முன் அருளி

அணி வளர் குறளாய் அகல் இடம் முழுதும் அளந்த எம் அடிகள்-தம் கோயில்

கணி வளர் வேங்கை நெடு நிலம்-அதனில் குறவர்-தம் கவணிடை துரந்த

மணி வளர் சாரல் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1821

சூர்மையில் ஆய பேய் முலை சுவைத்து சுடு சரம் அடு சிலை துரந்து

நீர்மை இலாத தாடகை மாள நினைந்தவர் மனம் கொண்ட கோயில்

கார் மலி வேங்கை கோங்கு அலர் புறவில் கடி மலர் குறிஞ்சியின் நறும் தேன்

வார் புனல் சூழ் தண் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1822

வணங்கல் இல் அரக்கன் செருக்களத்து அவிய மணி முடி ஒரு பதும் புரள

அணங்கு எழுந்து அவன் தன் கவந்தம் நின்று ஆட அமர்செய்த அடிகள்-தம் கோயில்

பிணங்கலின் நெடு வேய் நுதி முகம் கிழிப்ப பிரசம் வந்து இழிதர பெரும் தேன்

மணம் கமழ் சாரல் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1823

விடம் கலந்து அமர்ந்த அரவணை துயின்று விளங்கனிக்கு இளம் கன்று விசிறி

குடம் கலந்து ஆடி குரவை முன் கோத்த கூத்த எம் அடிகள்-தம் கோயில்

தடம் கடல் முகந்து விசும்பிடை பிளிற தட வரை களிறு என்று முனிந்து

மடங்கல் நின்று அதிரும் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1824

தேனுகன் ஆவி போய் உக அங்கு ஓர் செழும் திரள் பனங்கனி உதிர

தான் உகந்து எறிந்த தடம் கடல் வண்ணர் எண்ணி முன் இடம் கொண்ட கோயில்

வானக சோலை மரகத சாயல் மா மணி கல் அதர் நுழைந்து

மான் நுகர் சாரல் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1825

புதம் மிகு விசும்பில் புணரி சென்று அணவ பொரு கடல் அரவணை துயின்று

பதம் மிகு பரியின் மிகு சினம் தவிர்த்த பனி முகில் வண்ணர்-தம் கோயில்

கதம் மிகு சினத்த கட தட களிற்றின் கவுள் வழி களி வண்டு பருக

மதம் மிகு சாரல் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1826

புந்தி இல் சமணர் புத்தர் என்று இவர்கள் ஒத்தன பேசவும் உவந்திட்டு

எந்தை பெம்மானார் இமையவர் தலைவர் எண்ணி முன் இடம் கொண்ட கோயில்

சந்தன பொழிலின் தாழ் சினை நீழல் தாழ்வரை மகளிர்கள் நாளும்

மந்திரத்து இறைஞ்சும் மாலிருஞ்சோலை வணங்குதும் வா மட நெஞ்சே

#1827

வண்டு அமர் சாரல் மாலிருஞ்சோலை மா மணி வண்ணரை வணங்கும்

தொண்டரை பரவும் சுடர் ஒளி நெடு வேல் சூழ் வயல் ஆலி நல் நாடன்

கண்டல் நல் வேலி மங்கையர் தலைவன் கலியன் வாய் ஒலிசெய்த பனுவல்

கொண்டு இவை பாடும் தவம் உடையார்கள் ஆள்வர் இ குரை கடல் உலகே

#1828

மூவரில் முன் முதல்வன் முழங்கு ஆர் கடலுள் கிடந்து

பூ வளர் உந்தி-தன்னுள் புவனம் படைத்து உண்டு உமிழ்ந்த

தேவர்கள் நாயகனை திருமாலிருஞ்சோலை நின்ற

கோவலர் கோவிந்தனை கொடி ஏர் இடை கூடும்-கொலோ

#1829

புனை வளர் பூம் பொழில் ஆர் பொன்னி சூழ் அரங்க நகருள்

முனைவனை மூ உலகும் படைத்த முதல் மூர்த்தி-தன்னை

சினை வளர் பூம் பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை நின்றான்

கனை கழல் காணும்-கொலோ கயல் கண்ணி எம் காரிகையே

#1830

உண்டு உலகு ஏழினையும் ஒரு பாலகன் ஆலிலை மேல்

கண் துயில் கொண்டு உகந்த கருமாணிக்க மா மலையை

திண் திறல் மா கரி சேர் திருமாலிருஞ்சோலை நின்ற

அண்டர்-தம் கோவினை இன்று அணுகும்-கொல் என் ஆய் இழையே

#1831

சிங்கம்-அதுவாய் அவுணன் திறல் ஆகம் முன் கீண்டு உகந்த

பங்கய மா மலர் கண் பரனை எம் பரஞ்சுடரை

திங்கள் நல் மா முகில் சேர் திருமாலிருஞ்சோலை நின்ற

நங்கள் பிரானை இன்று நணுகும்-கொல் என் நல் நுதலே

#1832

தானவன் வேள்வி தன்னில் தனியே குறளாய் நிமிர்ந்து

வானமும் மண்ணகமும் அளந்த திரிவிக்கிரமன்

தேன் அமர் பூம் பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை நின்ற

வானவர் கோனை இன்று வணங்கி தொழ வல்லள்-கொலோ

#1833

நேசம் இலாதவர்க்கும் நினையாதவர்க்கும் அரியான்

வாச மலர் பொழில் சூழ் வடமாமதுரை பிறந்தான்

தேசம் எல்லாம் வணங்கும் திருமாலிருஞ்சோலை நின்ற

கேசவ நம்பி-தன்னை கெண்டை ஒண் கண்ணி காணும்-கொலோ

#1834

புள்ளினை வாய் பிளந்து பொரு மா கரி கொம்பு ஒசித்து

கள்ள சகடு உதைத்த கருமாணிக்க மா மலையை

தெள் அருவி கொழிக்கும் திருமாலிருஞ்சோலை நின்ற

வள்ளலை வாள் நுதலாள் வணங்கி தொழ வல்லள்-கொலோ

#1835

பார்த்தனுக்கு அன்று அருளி பாரதத்து ஒரு தேர் முன் நின்று

காத்தவன் தன்னை விண்ணோர் கருமாணிக்க மா மலையை

தீர்த்தனை பூம் பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை நின்ற

மூர்த்தியை கைதொழவும் முடியும்-கொல் என் மொய் குழற்கே

#1836

வலம்புரி ஆழியனை வரை ஆர் திரள் தோளன்-தன்னை

புலம் புரி நூலவனை பொழில் வேங்கட வேதியனை

சிலம்பு இயல் ஆறு உடைய திருமாலிருஞ்சோலை நின்ற

நலம் திகழ் நாரணனை நணுகும்-கொல் என் நல் நுதலே

#1837

தேடற்கு அரியவனை திருமாலிருஞ்சோலை நின்ற

ஆடல் பறவையனை அணியாய் இழை காணும் என்று

மாட கொடி மதிள் சூழ் மங்கையார் கலிகன்றி சொன்ன

பாடல் பனுவல் பத்தும் பயில்வார்க்கு இல்லை பாவங்களே

#1838

எங்கள் எம் இறை எம் பிரான் இமையோர்க்கு நாயகன் ஏத்து அடியவர்

தங்கள் தம் மனத்து பிரியாது அருள் புரிவான்

பொங்கு தண் அருவி புதம்செய்ய பொன்களே சிதற இலங்கு ஒளி

செங்கமலம் மலரும் திருக்கோட்டியூரானே

#1839

எவ்வ நோய் தவிர்ப்பான் எமக்கு இறை இன் நகை துவர் வாய் நில மகள்

செவ்வி தோய வல்லான் திரு மா மகட்கு இனியான்

மௌவல் மாலை வண்டு ஆடும் மல்லிகை மாலையொடும் அணைந்த மாருதம்

தெய்வம் நாற வரும் திருக்கோட்டியூரானே

#1840

வெள்ளியான் கரியான் மணி நிற வண்ணன் விண்ணவர் தமக்கு இறை எமக்கு

ஒள்ளியான் உயர்ந்தான் உலகு ஏழும் உண்டு உமிழ்ந்தான்

துள்ளு நீர் மொண்டு கொண்டு சாமரை கற்றை சந்தனம் உந்தி வந்து அசை

தெள்ளு நீர் புறவில் திருக்கோட்டியூரானே

#1841

ஏறும் ஏறி இலங்கும் ஒண் மழு பற்றும் ஈசற்கு இசைந்து உடம்பில் ஓர்

கூறு தான் கொடுத்தான் குல மா மகட்கு இனியான்

நாறு செண்பகம் மல்லிகை மலர் புல்கி இன் இள வண்டு நல் நறும்

தேறல் வாய்மடுக்கும் திருக்கோட்டியூரானே

#1842

வங்க மா கடல் வண்ணன் மா மணி வண்ணன் விண்ணவர் கோன் மது மலர்

தொங்கல் நீள் முடியான் நெடியான் படி கடந்தான்

மங்குல் தோய் மணி மாட வெண் கொடி மாகம் மீது உயர்ந்து ஏறி வான் உயர்

திங்கள் தான் அணவும் திருக்கோட்டியூரானே

#1843

காவலன் இலங்கைக்கு இறை கலங்க சரம் செல உய்த்து மற்று அவன்

ஏவலம் தவிர்த்தான் என்னை ஆளுடை எம் பிரான்

நா வலம் புவி மன்னர் வந்து வணங்க மால் உறைகின்றது இங்கு என

தேவர் வந்து இறைஞ்சும் திருக்கோட்டியூரானே

#1844

கன்று கொண்டு விளங்கனி எறிந்து ஆநிரைக்கு அழிவு என்று மா மழை

நின்று காத்து உகந்தான் நில மா மகட்கு இனியான்

குன்றின் முல்லையின் வாசமும் குளிர் மல்லிகை மணமும் அளைந்து இளம்

தென்றல் வந்து உலவும் திருக்கோட்டியூரானே

#1845

பூம் குருந்து ஒசித்து ஆனை காய்ந்து அரி மா செகுத்து அடியேனை ஆள் உகந்து

ஈங்கு என்னுள் புகுந்தான் இமையோர்கள் தம் பெருமான்

தூங்கு தண் பலவின் கனி தொகு வாழையின் கனியொடு மாங்கனி

தேங்கு தண் புனல் சூழ் திருக்கோட்டியூரானே

#1846

கோவை இன் தமிழ் பாடுவார் குடம் ஆடுவார் தட மா மலர் மிசை

மேவும் நான்முகனில் விளங்கு புரி நூலர்

மேவும் நான்மறை வாணர் ஐவகை வேள்வி ஆறு அங்கம்
வல்லவர் தொழும்

தேவதேவபிரான் திருக்கோட்டியூரானே

#1847

ஆலும் மா வலவன் கலிகன்றி மங்கையர் தலைவன் அணி
பொழில்

சேல்கள் பாய் கழனி திருக்கோட்டியூரானை

நீல மா முகில் வண்ணனை நெடுமாலை இன் தமிழால் நினைந்த
இ

நாலும் ஆறும் வல்லார்க்கு இடம் ஆகும் வான் உலகே

#1848

ஒரு நல் சுற்றம் எனக்கு உயிர் ஒண் பொருள்

வரும் நல் தொல் கதி ஆகிய மைந்தனை

நெருநல் கண்டது நீர்மலை இன்று போய்

கரு நெல் சூழ் கண்ணமங்கையுள் காண்டுமே

#1849

பொன்னை மா மணியை அணி ஆர்ந்தது ஓர்

மின்னை வேங்கடத்து உச்சியில் கண்டு போய்

என்னை ஆளுடை ஈசனை எம்பிரான்-

தன்னை யாம் சென்று காண்டும் தண்காவிலே

#1850

வேலை ஆலிலை பள்ளி விரும்பிய

பாலை ஆர் அமுதத்தினை பைம் துழாய்

மாலை ஆலியில் கண்டு மகிழ்ந்து போய்

ஞாலம் உன்னியை காண்டும் நாங்கூரிலே

#1851

துளக்கம் இல் சுடரை அவுணன் உடல்

பிளக்கும் மைந்தனை பேரில் வணங்கி போய்

அளப்பு இல் ஆர் அமுதை அமரர்க்கு அருள்

விளக்கினை சென்று வெள்ளறை காண்டுமே

#1852

சுடலையில் சுடு நீறன் அமர்ந்தது ஓர்

நடலை தீர்த்தவனை நறையூர் கண்டு என்

உடலையுள் புகுந்து உள்ளம் உருக்கி உண்

விடலையை சென்று காண்டும் மெய்யத்துள்ளே

#1853

வானை ஆர் அமுதம் தந்த வள்ளலை

தேனை நீள் வயல் சேறையில் கண்டு போய்

ஆனை வாட்டி அருளும் அமரர்-தம்

கோனை யாம் குடந்தை சென்று காண்டுமே

#1854

கூந்தலார் மகிழ் கோவலனாய் வெண்ணெய்

மாந்து அழுந்தையில் கண்டு மகிழ்ந்து போய்

பாந்தள் பாழியில் பள்ளி விரும்பிய

வேந்தனை சென்று காண்டும் வெஃகாவுளே

#1855

பத்தர் ஆவியை பால்மதியை அணி

தொத்தை மாலிருஞ்சோலை தொழுது போய்

முத்தினை மணியை மணி மாணிக்க

வித்தினை சென்று விண்ணகர் காண்டுமே

#1856

கம்ப மா களிறு அஞ்சி கலங்க ஓர்

கொம்பு கொண்ட குரை கழல் கூத்தனை

கொம்பு உலாம் பொழில் கோட்டியூர் கண்டு போய்

நம்பனை சென்று காண்டும் நாவாயுளே

#1857

பெற்ற மாளிகை பேரில் மணாளனை

கற்ற நூல் கலிகன்றி உரைசெய்த

சொல் திறம் இவை சொல்லிய தொண்டர்கட்கு

அற்றம் இல்லை அண்டம் அவர்க்கு ஆட்சியே

#1858

இரக்கம் இன்றி எம் கோன் செய்த தீமை இம்மையே எமக்கு எய்திற்று காணீர்

பரக்க யாம் இன்று உரைத்து என் இராவணன் பட்டனன் இனி யாவர்க்கு உரைக்கோம்

குரக்கு நாயகர்காள் இளங்கோவே கோல வல் வில் இராமபிரானே

அரக்கர் ஆடு அழைப்பார் இல்லை நாங்கள் அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1859

பத்து நீள் முடியும் அவற்று இரட்டி பாழி தோளும் படைத்தவன் செல்வம்

சித்தம் மங்கையர்-பால் வைத்து கெட்டான் செய்வது ஒன்று அறியா அடியோங்கள்

ஒத்த தோள் இரண்டும் ஒரு முடியும் ஒருவர் தம் திறத்தோம் அன்றி வாழ்ந்தோம்

அத்த எம் பெருமான் எம்மை கொல்லேல் அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1860

தண்டகாரணியம் புகுந்து அன்று தையலை தகவிலி எம் கோமான்

கொண்டுபோந்து கெட்டான் எமக்கு இங்கு ஓர் குற்றம் இல்லை கொல்லேல் குல வேந்தே

பெண்டிரால் கெடும் இ குடி தன்னை பேசுகின்றது என் தாசரதீ உன்

அண்டவாணர் உகப்பதே செய்தாய் அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1861

எஞ்சல் இல் இலங்கைக்கு இறை எம் கோன்-தன்னை முன் பணிந்து எங்கள் கண்முகப்பே

நஞ்சு தான் அரக்கர் குடிக்கு என்று நங்கையை அவன் தம்பியே சொன்னான்

விஞ்சை வானவர் வேண்டிற்றே பட்டோம் வேரி வார் பொழில் மா மயில் அன்ன

அஞ்சு அல் ஓதியை கொண்டு நட-மின் அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1862

செம்பொன் நீள் முடி எங்கள் இராவணன் சீதை என்பது ஓர் தெய்வம் கொணர்ந்து

வம்பு உலாம் கடி காவில் சிறையா வைத்ததே குற்றம் ஆயிற்று காணீர்

கும்பனோடு நிகும்பனும் பட்டான் கூற்றம் மானிடமாய் வந்து தோன்றி

அம்பினால் எம்மை கொன்றிடுகின்றது அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1863

ஓத மா கடலை கடந்து ஏறி உயர்கொள் மா கடி காவை இறுத்து

காதல் மக்களும் சுற்றமும் கொன்று கடி இலங்கை மலங்க எரித்து

தூது வந்த குரங்குக்கே உங்கள் தோன்றல் தேவியை விட்டு கொடாதே

ஆதர் நின்று படுகின்றது அந்தோ அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1864

தாழம் இன்றி முந்நீரை அஞ்ஞான்று தகைந்ததே கண்டு வஞ்சி நுண் மருங்குல்

மாழை மான் மட நோக்கியை விட்டு வாழகில்லா மதி இல் மனத்தானை

ஏழையை இலங்கைக்கு இறை-தன்னை எங்களை ஒழிய கொலையவனை

சூழுமா நினை மா மணி வண்ணா சொல்லினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1865

மனம் கொண்டு ஏறும் மண்டோதரி முதலா அம் கயல் கண்ணினார்கள் இருப்ப

தனம்கொள் மென் முலை நோக்கம் ஒழிந்து தஞ்சமே சில தாபதர் என்று

புனம்கொள் மென் மயிலை சிறைவைத்த புன்மையாளன் நெஞ்சில் புக எய்த

அனங்கன் அன்ன திண் தோள் எம் இராமற்கு அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1866

புரங்கள் மூன்றும் ஓர் மாத்திரை போதில் பொங்கு எரிக்கு இரை கண்டவன் அம்பின்

சரங்களே கொடிதாய் அடுகின்ற சாம்பவான் உடன் நிற்க தொழுதோம்

இரங்கு நீ எமக்கு எந்தை பிரானே இலங்கு வெம் கதிரோன் தன் சிறுவா

குரங்குகட்கு அரசே எம்மை கொல்லேல் கூறினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1867

அங்கு அ வானவர்க்கு ஆகுலம் தீர அணி இலங்கை அழித்தவன்-தன்னை

பொங்கு மா வலவன் கலிகன்றி புகன்ற பொங்கத்தம் கொண்டு இ உலகினில்

எங்கும் பாடி நின்று ஆடு-மின் தொண்டீர் இம்மையே இடர் இல்லை இறந்தால்

தங்கும் ஊர் அண்டமே கண்டு கொள்-மின் சாற்றினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ

#1868

ஏத்துகின்றோம் நா தழும்ப இராமன் திருநாமம்

சோத்தம் நம்பீ சுக்கிரீவா உம்மை தொழுகின்றோம்

வார்த்தை பேசீர் எம்மை உங்கள் வானரம் கொல்லாமே

கூத்தர் போல ஆடுகின்றோம் குழமணிதூரமே

#1869

எம்பிரானே என்னை ஆள்வாய் என்று என்று அலற்றாதே

அம்பின் வாய்ப்பட்டு ஆற்றகில்லாது இந்திரசித்து அழிந்தான்

நம்பி அநுமா சுக்கிரீவா அங்கதனே நளனே

கும்பகர்ணன் பட்டுப்போனான் குழமணிதூரமே

#1870

ஞாலம் ஆளும் உங்கள் கோமான் எங்கள் இராவணற்கு

காலன் ஆகி வந்தவா கண்டு அஞ்சி கரு முகில் போல்

நீலன் வாழ்க சுடேணன் வாழ்க அங்கதன் வாழ்க என்று

கோலம் ஆக ஆடுகின்றோம் குழமணிதூரமே

#1871

மணங்கள் நாறும் வார் குழலார் மாதர்கள் ஆதரத்தை

புணர்ந்த சிந்தை புன்மையாளன் பொன்ற வரி சிலையால்

கணங்கள் உண்ண வாளி ஆண்ட காவலனுக்கு இளையோன்

குணங்கள் பாடி ஆடுகின்றோம் குழமணிதூரமே

#1872

வென்றி தந்தோம் மானம் வேண்டோம் தானம் எமக்கு ஆக

இன்று தம்-மின் எங்கள் வாழ்நாள் எம் பெருமான் தமர்காள்

நின்று காணீர் கண்கள் ஆர நீர் எம்மை கொல்லாதே

குன்று போல ஆடுகின்றோம் குழமணிதூரமே

#1873

கல்லின் முந்நீர் மாற்றி வந்து காவல் கடந்து இலங்கை

அல்லல் செய்தான் உங்கள் கோமான் எம்மை அமர்க்களத்து

வெல்லகில்லாது அஞ்சினோம் காண் வெம் கதிரோன் சிறுவா

கொல்லவேண்டா ஆடுகின்றோம் குழமணிதூரமே

#1874

மாற்றம் ஆவது இத்தனையே வம்-மின் அரக்கர் உள்ளீர்

சீற்றம் நும் மேல் தீர வேண்டின் சேவகம் பேசாதே

ஆற்றல் சான்ற தொல் பிறப்பின் அநுமனை வாழ்க என்று

கூற்றம் அன்னார் காண ஆடீர் குழமணிதூரமே

#1875

கவள யானை பாய் புரவி தேரொடு அரக்கர் எல்லாம்

துவள வென்ற வென்றியாளன்-தன் தமர் கொல்லாமே

தவள மாடம் நீடு அயோத்தி காவலன்-தன் சிறுவன்

குவளை வண்ணன் காண ஆடீர் குழமணிதூரமே

#1876

ஏடு ஒத்து ஏந்தும் நீள் இலை வேல் எங்கள் இராவணனார்

ஓடிப்போனார் நாங்கள் எய்த்தோம் உய்வது ஓர் காரணத்தால்

சூடி போந்தோம் உங்கள் கோமான் ஆணை தொடரேல்-மின்

கூடிக்கூடி ஆடுகின்றோம் குழமணிதூரமே

#1877

வென்ற தொல் சீர் தென் இலங்கை வெம் சமத்து அன்று அரக்கர்

குன்றம் அன்னார் ஆடி உய்ந்த குழமணிதூரத்தை

கன்றி நெய் நீர் நின்ற வேல் கை கலியன் ஒலி மாலை

ஒன்றும் ஒன்றும் ஐந்தும் மூன்றும் பாடி நின்று ஆடு-மினே

#1878

சந்த மலர் குழல் தாழ தான் உகந்து ஓடி தனியே

வந்து என் முலை தடம்-தன்னை வாங்கி நின் வாயில் மடுத்து

நந்தன் பெற பெற்ற நம்பீ நான் உகந்து உண்ணும் அமுதே

எந்தை பெருமானே உண்ணாய் என் அம்மம் சேமம் உண்ணாயே

#1879

வங்க மறி கடல் வண்ணா மா முகிலே ஒக்கும் நம்பீ

செம் கண் நெடிய திருவே செங்கமலம் புரை வாயா

கொங்கை சுரந்திட உன்னை கூவியும் காணாதிருந்தேன்

எங்கு இருந்து ஆயர்களோடும் என் விளையாடுகின்றாயே

#1880

திருவில் பொலிந்த எழில் ஆர் ஆயர்-தம் பிள்ளைகளோடு

தெருவில் திளைக்கின்ற நம்பீ செய்கின்ற தீமைகள் கண்டிட்டு

உருகி என் கொங்கையின் தீம் பால் ஓட்டந்து பாய்ந்திடுகின்ற

மருவி குடங்கால் இருந்து வாய் முலை உண்ண நீ வாராய்

#1881

மக்கள் பெறு தவம் போலும் வையத்து வாழும் மடவார்

மக்கள் பிறர் கண்ணுக்கு ஒக்கும் முதல்வா மத களிறு அன்னாய்

செக்கர் இளம் பிறை-தன்னை வாங்கி நின் கையில் தருவன்

ஒக்கலை மேல் இருந்து அம்மம் உகந்து இனிது உண்ண நீ வாராய்

#1882

மைத்த கரும் குஞ்சி மைந்தா மா மருது ஊடு நடந்தாய்

வித்தகனே விரையாதே வெண்ணெய் விழுங்கும் விகிர்தா

இத்தனை போது அன்றி என்தன் கொங்கை சுரந்து இருக்ககில்லா

உத்தமனே அம்மம் உண்ணாய் உலகு அளந்தாய் அம்மம் உண்ணாய்

#1883

பிள்ளைகள் செய்வன செய்யாய் பேசின் பெரிதும் வலியை

கள்ளம் மனத்தில் உடையை காணவே தீமைகள் செய்தி

உள்ளம் உருகி என் கொங்கை ஓட்டந்து பாய்ந்திடுகின்ற

பள்ளி குறிப்பு செய்யாதே பால் அமுது உண்ண நீ வாராய்

#1884

தன் மகன் ஆக வன் பேய்ச்சி தான் முலை உண்ண கொடுக்க

வன் மகனாய் அவள் ஆவி வாங்கி முலை உண்ட நம்பீ

நன் மகள் ஆய் மகளோடு நானில மங்கை மணாளா

என் மகனே அம்மம் உண்ணாய் என் அம்மம் சேமம் உண்ணாயே

#1885

உந்தம் அடிகள் முனிவர் உன்னை நான் என் கையில் கோலால்

நொந்திட மோதவும் கில்லேன் நுங்கள் தம் ஆநிரை எல்லாம்

வந்து புகுதரும் போது வானிடை தெய்வங்கள் காண

அந்தி அம் போது அங்கு நில்லேல் ஆழி அம் கையனே வாராய்

#1886

பெற்ற தலைவன் எம் கோமான் பேர் அருளாளன் மதலாய்

சுற்ற குழாத்து இளம் கோவே தோன்றிய தொல் புகழாளா

கற்று இனம்-தோறும் மறித்து கானம் திரிந்த களிறே

எற்றுக்கு என் அம்மம் உண்ணாதே எம் பெருமான் இருந்தாயே

#1887

இம்மை இடர் கெட வேண்டி ஏந்து எழில் தோள் கலிகன்றி

செம்மை பனுவல் நூல் கொண்டு செம் கண் நெடியவன் தன்னை

அம்மம் உண் என்று உரைக்கின்ற பாடல் இவை ஐந்தும் ஐந்தும்

மெய்ம்மை மனத்து வைத்து ஏத்த விண்ணவர் ஆகலும் ஆமே

#1888

பூம் கோதை ஆய்ச்சி கடை வெண்ணெய் புக்கு உண்ண

ஆங்கு அவள் ஆர்த்து புடைக்க புடையுண்டு

ஏங்கி இருந்து சிணுங்கி விளையாடும்

ஓங்கு ஓத வண்ணனே சப்பாணி ஒளி மணி வண்ணனே சப்பாணி

#1889

தாயர் மனங்கள் தடிப்ப தயிர் நெய் உண்டு

ஏய் எம் பிராக்கள் இரு நிலத்து எங்கள்-தம்

ஆயர் அழக அடிகள் அரவிந்த

வாயவனே கொட்டாய் சப்பாணி மால் வண்ணனே கொட்டாய் சப்பாணி

#1890

தாம் மோர் உருட்டி தயிர் நெய் விழுங்கிட்டு

தாமோ தவழ்வர் என்று ஆய்ச்சியர் தாம்பினால்

தாம் மோதர கையால் ஆர்க்க தழும்பு இருந்த

தாமோதரா கொட்டாய் சப்பாணி தாமரை கண்ணனே சப்பாணி

#1891

பெற்றார் தளை கழல பேர்ந்து அங்கு அயல் இடத்து

உற்றார் ஒருவரும் இன்றி உலகினில்

மற்றாரும் அஞ்ச போய் வஞ்ச பெண் நஞ்சு உண்ட

கற்றாயனே கொட்டாய் சப்பாணி கார் வண்ணனே கொட்டாய் சப்பாணி

#1892

சோத்து என நின்னை தொழுவன் வரம் தர

பேய்ச்சி முலை உண்ட பிள்ளாய் பெரியன

ஆய்ச்சியர் அப்பம் தருவர் அவர்க்காக

சாற்றி ஓர் ஆயிரம் சப்பாணி தடம் கைகளால் கொட்டாய் சப்பாணி

#1893

கேவலம் அன்று உன் வயிறு வயிற்றுக்கு

நான் அவல் அப்பம் தருவன் கருவிளை

பூ அலர் நீள் முடி நந்தன் தன் போர் ஏறே

கோவலனே கொட்டாய் சப்பாணி குடம் ஆடீ கொட்டாய் சப்பாணி

#1894

புள்ளினை வாய் பிளந்து பூம் குருந்தம் சாய்த்து

துள்ளி விளையாடி தூங்கு உறி வெண்ணெயை

அள்ளிய கையால் அடியேன் முலை நெருடும்

பிள்ளை பிரான் கொட்டாய் சப்பாணி பேய் முலை உண்டானே சப்பாணி

#1895

யாயும் பிறரும் அறியாத யாமத்து

மாய வலவை பெண் வந்து முலை தர

பேய் என்று அவளை பிடித்து உயிர் உண்ட

வாயவனே கொட்டாய் சப்பாணி மால் வண்ணனே கொட்டாய் சப்பாணி

#1896

கள்ள குழவியாய் காலால் சகடத்தை

தள்ளி உதைத்திட்டு தாயாய் வருவாளை

மெள்ள தொடர்ந்து பிடித்து ஆருயிர் உண்ட

வள்ளலே கொட்டாய் சப்பாணி மால் வண்ணனே கொட்டாய் சப்பாணி

#1897

கார் ஆர் புயல் கை கலிகன்றி மங்கையர் கோன்

பேராளன் நெஞ்சில் பிரியாது இடம்கொண்ட

சீராளா செந்தாமரை கண்ணா தண் துழாய்

தார் ஆளா கொட்டாய் சப்பாணி தட மார்வா கொட்டாய் சப்பாணி

#1898

எங்கானும் ஈது ஒப்பது ஓர் மாயம் உண்டே நர நாரணனாய் உலகத்து அறநூல்

சிங்காமை விரித்தவன் எம் பெருமான் அது அன்றியும் செஞ்சுடரும் நிலனும்

பொங்கு ஆர் கடலும் பொருப்பும் நெருப்பும் நெருக்கி புக பொன் மிடறு அத்தனை-போது

அங்காந்தவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1899

குன்று ஒன்று மத்தா அரவம் அளவி குரை மா கடலை கடைந்திட்டு ஒருகால்

நின்று உண்டை கொண்டு ஓட்டி வன் கூன் நிமிர நினைந்த பெருமான் அது அன்றியும் முன்

நன்று உண்ட தொல் சீர் மகர கடல் ஏழ் மலை ஏழ் உலகு ஏழ் ஒழியாமை நம்பி

அன்று உண்டவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1900

உளைந்திட்டு எழுந்த மது கைடவர்கள் உலப்பு இல் வலியார் அவர்-பால் வயிரம்

விளைந்திட்டது என்று எண்ணி விண்ணோர் பரவ அவர் நாள் ஒழித்த பெருமான் முன நாள்

வளைந்திட்ட வில்லாளி வல் வாள் எயிற்று மலை போல் அவுணன் உடல் வள் உகிரால்

அளைந்திட்டவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1901

தளர்ந்திட்டு இமையோர் சரண் தா என தான் சரண் ஆய் முரண் ஆயவனை உகிரால்

பிளந்திட்டு அமரர்க்கு அருள்செய்து உகந்த பெருமான் திருமால் விரி நீர் உலகை

வளர்ந்திட்ட தொல் சீர் விறல் மாவலியை மண் கொள்ள வஞ்சித்து ஒரு மாண் குறள் ஆய்

அளந்திட்டவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1902

நீண்டான் குறளாய் நெடு வான் அளவும் அடியார் படும் ஆழ் துயர் ஆய எல்லாம்

தீண்டாமை நினைந்து இமையோர் அளவும் செல வைத்த பிரான் அது அன்றியும் முன்

வேண்டாமை நமன் தமர் என் தமரை வினவ பெறுவார் அலர் என்று உலகு ஏழ்

ஆண்டான் அவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1903

பழித்திட்ட இன்ப பயன் பற்று அறுத்து பணிந்து ஏத்த வல்லார் துயர் ஆய எல்லாம்

ஒழித்திட்டு அவரை தனக்கு ஆக்க வல்ல பெருமான் திருமால் அது அன்றியும் முன்

தெழித்திட்டு எழுந்தே எதிர் நின்ற மன்னன் சினத்தோள் அவை ஆயிரமும் மழுவால்

அழித்திட்டவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1904

படைத்திட்டு அது இ வையம் உய்ய முன நாள் பணிந்து ஏத்த வல்லார் துயர் ஆய எல்லாம்

துடைத்திட்டு அவரை தனக்கு ஆக்க என்ன தெளியா அரக்கர் திறல் போய் அவிய

மிடைத்திட்டு எழுந்த குரங்கை படையா விலங்கல் புக பாய்ச்சி விம்ம கடலை

அடைத்திட்டவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1905

நெறித்திட்ட மென் கூழை நல் நேர் இழையோடு உடன் ஆய வில் என்ன வல் ஏய் அதனை

இறுத்திட்டு அவள் இன்பம் அன்போடு அணைந்திட்டு இளம் கொற்றவனாய் துளங்காத முந்நீர்

செறித்திட்டு இலங்கை மலங்க அரக்கன் செழு நீள் முடி தோளொடு தாள் துணிய

அறுத்திட்டவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1906

சுரிந்திட்ட செம் கேழ் உளை பொங்கு அரிமா தொலைய பிரியாது சென்று எய்தி எய்தாது

இரிந்திட்டு இடங்கொண்டு அடங்காததன் வாய் இரு கூறு செய்த பெருமான் முன நாள்

வரிந்திட்ட வில்லால் மரம் ஏழும் எய்து மலை போல் உருவத்து ஓர் இராக்கதி மூக்கு

அரிந்திட்டவன் காண்-மின் இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டிருந்தவனே

#1907

நின்றார் முகப்பு சிறிதும் நினையான் வயிற்றை நிறைப்பான் உறி பால் தயிர் நெய்

அன்று ஆய்ச்சியர் வெண்ணெய் விழுங்கி உரலோடு ஆப்புண்டிருந்த பெருமான் அடி மேல்

நன்று ஆய தொல் சீர் வயல் மங்கையர் கோன் கலியன் ஒலிசெய்த தமிழ் மாலை வல்லார்

என்றானும் எய்தார் இடர் இன்பம் எய்தி இமையோர்க்கும் அப்பால் செல எய்துவாரே

#1908

மானம் உடைத்து உங்கள் ஆயர் குலம் அதனால் பிறர் மக்கள்-தம்மை

ஊனம் உடையன செய்ய பெறாய் என்று இரப்பன் உரப்பகில்லேன்

நானும் உரைத்திலேன் நந்தன் பணித்திலன் நங்கைகாள் நான் என் செய்கேன்

தானும் ஓர் கன்னியும் கீழை அகத்து தயிர் கடைகின்றான் போலும்

#1909

காலை எழுந்து கடைந்த இ மோர் விற்க போகின்றேன் கண்டே போனேன்

மாலை நறும் குஞ்சி நந்தன் மகன் அல்லால் மற்று வந்தாரும் இல்லை

மேலை அகத்து நங்காய் வந்து காண்-மின்கள் வெண்ணெயே அன்று இருந்த

பாலும் பதின் குடம் கண்டிலேன் பாவியேன் என் செய்கேன் என் செய்கேனோ

#1910

தெள்ளிய வாய் சிறியான் நங்கைகாள் உறி மேலை தடா நிறைந்த

வெள்ளி மலை இருந்தால் ஒத்த வெண்ணெயை வாரி விழுங்கியிட்டு

கள்வன் உறங்குகின்றான் வந்து காண்-மின்கள் கை எல்லாம் நெய் வயிறு

பிள்ளை பரம் அன்று இ ஏழ் உலகும் கொள்ளும் பேதையேன் என் செய்கேனோ

#1911

மைந்நம்பு வேல் கண் நல்லாள் முன்னம் பெற்ற வளை வண்ண நல் மா மேனி

தன் நம்பி நம்பியும் இங்கு வளர்ந்தது அவன் இவை செய்தறியான்

பொய் நம்பி புள்ளுவன் கள்வம் பொதி அறை போகின்றவா தவழ்ந்திட்டு

இ நம்பி நம்பியா ஆய்ச்சியர்க்கு உய்வு இல்லை என் செய்கேன் என் செய்கேனோ

#1912

தந்தை புகுந்திலன் நான் இங்கு இருந்திலேன் தோழிமார் ஆரும் இல்லை

சந்த மலர் குழலாள் தனியே விளையாடும் இடம் குறுகி

பந்து பறித்து துகில் பற்றி கீறி படிறன் படிறுசெய்யும்

நந்தன் மதலைக்கு இங்கு என் கடவோம் நங்காய் என் செய்கேன் என் செய்கேனோ

#1913

மண் மகள் கேள்வன் மலர் மங்கை நாயகன் நந்தன் பெற்ற மதலை

அண்ணல் இலை குழல் ஊதி நம் சேரிக்கே அல்லில் தான் வந்த பின்னை

கண் மலர் சோர்ந்து முலை வந்து விம்மி கமல செவ்வாய் வெளுப்ப

என் மகள் வண்ணம் இருக்கின்றவா நங்காய் என் செய்கேன் என் செய்கேனோ

#1914

ஆயிரம் கண் உடை இந்திரனாருக்கு அன்று ஆயர் விழவு எடுப்ப

பாசனம் நல்லன பண்டிகளால் புக பெய்த அதனை எல்லாம்

போயிருந்து அங்கு ஒரு பூத வடிவுகொண்டு உன் மகன் இன்று நங்காய்

மாயன் அதனை எல்லாம் முற்ற வாரி வளைத்து உண்டு இருந்தான் போலும்

#1915

தோய்த்த தயிரும் நறு நெய்யும் பாலும் ஓர் ஓர் குடம் துற்றிடும் என்று

ஆய்ச்சியர் கூடி அழைக்கவும் நான் இதற்கு எள்கி இவனை நங்காய்

சோத்தம் பிரான் இவை செய்யப்பெறாய் என்று இரப்பன் உரப்பகில்லேன்

பேய்ச்சி முலை உண்ட பின்னை இ பிள்ளையை பேசுவது அஞ்சுவனே

#1916

ஈடும் வலியும் உடைய இ நம்பி பிறந்த எழு திங்களில்

ஏடு அலர் கண்ணியினானை வளர்த்தி யமுனை நீராட போனேன்

சேடன் திருமறு மார்வன் கிடந்து திருவடியால் மலை போல்

ஓடும் சகடத்தை சாடிய பின்னை உரப்புவது அஞ்சுவனே

#1917

அஞ்சுவன் சொல்லி அழைத்திட நங்கைகாள் ஆயிரம் நாழி நெய்யை

பஞ்சிய மெல் அடி பிள்ளைகள் உண்கின்று பாகம் தான் வையார்களே

கஞ்சன் கடியன் கறவு எட்டு நாளில் என் கைவலத்து ஆதும் இல்லை

நெஞ்சத்து இருப்பன செய்துவைத்தாய் நம்பீ என் செய்கேன் என் செய்கேனோ

#1918

அங்ஙனம் தீமைகள் செய்வர்களோ நம்பீ ஆயர் மட மக்களை

பங்கய நீர் குடைந்து ஆடுகின்றார்கள் பின்னே சென்று ஒளித்திருந்து

அங்கு அவர் பூம் துகில் வாரிக்கொண்டிட்டு அரவு ஏர் இடையார் இரப்ப

மங்கை நல்லீர் வந்து கொள்-மின் என்று மரம் ஏறி இருந்தாய் போலும்

#1919

அச்சம் தினைத்தனை இல்லை இ பிள்ளைக்கு ஆண்மையும் சேவகமும்

உச்சியில் முத்தி வளர்த்து எடுத்தேனுக்கு உரைத்திலன் தான் இன்று போய்

பச்சிலை பூம் கடம்பு ஏறி விசைகொண்டு பாய்ந்து புக்கு ஆயிர வாய்

நச்சு அழல் பொய்கையில் நாகத்தினோடு பிணங்கி நீ வந்தாய் போலும்

#1920

தம்பரம் அல்லன ஆண்மைகளை தனியே நின்று தாம் செய்வரோ

எம் பெருமான் உன்னை பெற்ற வயிறு உடையேன் இனி யான் என் செய்கேன்

அம்பரம் ஏழும் அதிரும் இடி குரல் அங்கு அனல் செம் கண் உடை

வம்பு அவிழ் கானத்து மால் விடையோடு பிணங்கி நீ வந்தாய் போலும்

#1921

அன்ன நடை மட ஆய்ச்சி வயிறு அடித்து அஞ்ச அரு வரை போல்

மன்னு கரும் களிற்று ஆருயிர் வவ்விய மைந்தனை மா கடல் சூழ்

கன்னி நல் மா மதிள் மங்கையர் காவலன் காமரு சீர் கலிகன்றி

இன் இசை மாலைகள் ஈரேழும் வல்லவர்க்கு ஏதும் இடர் இல்லையே

#1922

காதில் கடிப்பு இட்டு கலிங்கம் உடுத்து

தாது நல்ல தண் அம் துழாய்கொடு அணிந்து

போது மறுத்து புறமே வந்து நின்றீர்

ஏதுக்கு இது என் இது என் இது என்னோ

#1923

துவர் ஆடை உடுத்து ஒரு செண்டு சிலுப்பி

கவர் ஆக முடித்து கலி கச்சு கட்டி

சுவர் ஆர் கதவின் புறமே வந்து நின்றீர்

இவர் ஆர் இது என் இது என் இது என்னோ

#1924

கருள கொடி ஒன்று உடையீர் தனி பாகீர்

உருள சகடம் அது உறுக்கி நிமிர்த்தீர்

மருளை கொடு பாடி வந்து இல்லம் புகுந்தீர்

இருளத்து இது என் இது என் இது என்னோ

#1925

நாமம் பலவும் உடை நாரண நம்பீ

தாம துளவம் மிக நாறிடுகின்றீர்

காமன் என பாடி வந்து இல்லம் புகுந்தீர்

ஏமத்து இது என் இது என் இது என்னோ

#1926

சுற்றும் குழல் தாழ சுரிகை அணைத்து

மற்று பல மா மணி பொன் கொடு அணிந்து

முற்றம் புகுந்து முறுவல் செய்து நின்றீர்

எற்றுக்கு இது என் இது என் இது என்னோ

#1927

ஆன் ஆயரும் ஆநிரையும் அங்கு ஒழிய

கூன் ஆயது ஓர் கொற்ற வில் ஒன்று கை ஏந்தி

போனார் இருந்தாரையும் பார்த்து புகுதீர்

ஏனோர்கள் முன் என் இது என் இது என்னோ

#1928

மல்லே பொருத திரள் தோள் மணவாளீர்

அல்லே அறிந்தோம் நும் மனத்தின் கருத்தை

சொல்லாது ஒழியீர் சொன்னபோதினால் வாரீர்

எல்லே இது என் இது என் இது என்னோ

#1929

புக்கு ஆடு அரவம் பிடித்து ஆட்டும் புனிதீர்

இ காலங்கள் யாம் உமக்கு ஏதொன்றும் அல்லோம்

தக்கார் பலர் தேவிமார் சால உடையீர்

எக்கே இது என் இது என் இது என்னோ

#1930

ஆடி அசைந்து ஆய் மடவாரொடு நீ போய்

கூடி குரவை பிணை கோமள பிள்ளாய்

தேடி திரு மா மகள் மண் மகள் நிற்ப

ஏடி இது என் இது என் இது என்னோ

#1931

அல்லி கமல கண்ணனை அங்கு ஓர் ஆய்ச்சி

எல்லி பொழுது ஊடிய ஊடல் திறத்தை

கல்லின் மலி தோள் கலியன் சொன்ன மாலை

சொல்லி துதிப்பார் அவர் துக்கம் இலரே

#1932

புள் உரு ஆகி நள்ளிருள் வந்த பூதனை மாள இலங்கை

ஒள் எரி மண்டி உண்ண பணித்த ஊக்கம் அதனை நினைந்தோ

கள் அவிழ் கோதை காதலும் எங்கள் காரிகை மாதர் கருத்தும்

பிள்ளை தன் கையில் கிண்ணமே ஒக்க பேசுவது எந்தை பிரானே

#1933

மன்றில் மலிந்து கூத்து உவந்து ஆடி மால் விடை ஏழும் அடர்த்து ஆயர்

அன்று நடுங்க ஆநிரை காத்த ஆண்மை-கொலோ அறியேன் நான்

நின்ற பிரானே நீள் கடல் வண்ணா நீ இவள் தன்னை நின் கோயில்

முன்றில் எழுந்த முருங்கையில் தேனா முன் கை வளை கவர்ந்தாயே

#1934

ஆர் மலி ஆழி சங்கொடு பற்றி ஆற்றலை ஆற்றல் மிகுத்து

கார் முகில் வண்ணா கஞ்சனை முன்னம் கடந்த நின் கடும் திறல் தானோ

நேர் இழை மாதை நித்தில தொத்தை நெடும் கடல் அமுது அனையாளை

ஆர் எழில் வண்ணா அம் கையில் வட்டு ஆம் இவள் என கருதுகின்றாயே

#1935

மல்கிய தோளும் மான் உரி அதளும் உடையவர் தமக்கும் ஓர் பாகம்

நல்கிய நலமோ நரகனை தொலைத்த கரதலத்து அமைதியின் கருத்தோ

அல்லி அம் கோதை அணி நிறம் கொண்டு வந்து முன்னே நின்று போகாய்

சொல்லி என் நம்பி இவளை நீ உங்கள் தொண்டர் கை தண்டு என்ற ஆறே

#1936

செரு அழியாத மன்னர்கள் மாள தேர் வலம் கொண்டு அவர் செல்லும்

அரு வழி வானம் அதர்பட கண்ட ஆண்மை-கொலோ அறியேன் நான்

திருமொழி எங்கள் தே மலர் கோதை சீர்மையை நினைந்திலை அந்தோ

பெரு வழி நாவல் கனியினும் எளியள் இவள் என பேசுகின்றாயே

#1937

அரக்கியர் ஆகம் புல் என வில்லால் அணி மதிள் இலங்கையார் கோனை

செருக்கு அழித்து அமரர் பணிய முன் நின்ற சேவகமோ செய்தது இன்று

முருக்கு இதழ் வாய்ச்சி முன் கை வெண் சங்கம் கொண்டு முன்னே நின்று போகாய்

எருக்கு இலைக்கு ஆக எறி மழு ஓச்சல் என் செய்வது எந்தை பிரானே

#1938

ஆழி அம் திண் தேர் அரசர் வந்து இறைஞ்ச அலை கடல் உலகம் முன் ஆண்ட

பாழி அம் தோள் ஓர் ஆயிரம் வீழ படை மழு பற்றிய வலியோ

மாழை மென் நோக்கி மணி நிறம் கொண்டு வந்து முன்னே நின்று போகாய்

கோழி வெண் முட்டைக்கு என் செய்வது எந்தாய் குறுந்தடி நெடும்

கடல் வண்ணா

#1939

பொருந்தலன் ஆகம் புள் உவந்து ஏற வள் உகிரால் பிளந்து

அன்று

பெருந்தகைக்கு இரங்கி வாலியை முனிந்த பெருமை-கொலோ

செய்தது இன்று

பெரும் தடம் கண்ணி சுரும்புறு கோதை பெருமையை

நினைந்திலை பேசில்

கரும் கடல் வண்ணா கவுள் கொண்ட நீர் ஆம் இவள் என

கருதுகின்றாயே

#1940

நீர் அழல் வானாய் நெடு நிலம் காலாய் நின்ற நின் நீர்மையை

நினைந்தோ

சீர் கெழு கோதை என் அலது இலள் என்று அன்னது ஓர்

தேற்றன்மை தானோ

பார் கெழு பவ்வத்து ஆர் அமுது அனைய பாவையை பாவம்

செய்தேனுக்கு

ஆர் அழல் ஓம்பும் அந்தணன் தோட்டம் ஆக நின் மனத்து

வைத்தாயே

#1941

வேட்டத்தை கருதாது அடி இணை வணங்கி மெய்ம்மையே நின்று எம் பெருமானை

வாள் திறல் தானை மங்கையர் தலைவன் மான வேல் கலியன் வாய் ஒலிகள்

தோட்டு அலர் பைம் தார் சுடர் முடியானை பழமொழியால் பணிந்து உரைத்த

பாட்டு இவை பாட பத்திமை பெருகி சித்தமும் திருவொடு மிகுமே

#1942

திருத்தாய் செம்போத்தே

திரு மா மகள்-தன் கணவன்

மரு தார் தொல் புகழ் மாதவனை வர

திருத்தாய் செம்போத்தே

#1943

கரையாய் காக்கை பிள்ளாய்

கரு மா முகில் போல் நிறத்தன்

உரை ஆர் தொல் புகழ் உத்தமனை வர

கரையாய் காக்கை பிள்ளாய்

#1944

கூவாய் பூம் குயிலே

குளிர் மாரி தடுத்து உகந்த

மா வாய் கீண்ட மணி வண்ணனை வர

கூவாய் பூம் குயிலே

#1945

கொட்டாய் பல்லி குட்டி

குடம் ஆடி உலகு அளந்த

மட்டு ஆர் பூம் குழல் மாதவனை வர

கொட்டாய் பல்லி குட்டி

#1946

சொல்லாய் பைங்கிளியே

சுடர் ஆழி வலன் உயர்த்த

மல் ஆர் தோள் வடவேங்கடவனை வர

சொல்லாய் பைங்கிளியே

#1947

கோழி கூ என்னுமால்

தோழி நான் என் செய்கேன்

ஆழி வண்ணர் வரும் பொழுது ஆயிற்று

கோழி கூ என்னுமால்

#1948

காமற்கு என் கடவேன்

கரு மா முகில் வண்ணற்கு அல்லால்

பூ மேல் ஐங்கணை கோத்து புகுந்து எய்ய

காமற்கு என் கடவேன்

#1949

இங்கே போதும்-கொலோ

இன வேல் நெடும் கண் களிப்ப

கொங்கு ஆர் சோலை குடந்தை கிடந்த மால்

இங்கே போதும்-கொலோ

#1950

இன்னார் என்று அறியேன்

அன்னே ஆழியொடும்

பொன் ஆர் சார்ங்கம் உடைய அடிகளை

இன்னார் என்று அறியேன்

#1951

தொண்டீர் பாடு-மினோ

சுரும்பு ஆர் பொழில் மங்கையர் கோன்

ஒண் தார் வேல் கலியன் ஒலி மாலைகள்

தொண்டீர் பாடு-மினோ

#1952

குன்றம் ஒன்று எடுத்து ஏந்தி மா மழை

அன்று காத்த அம்மான் அரக்கரை

வென்ற வில்லியார் வீரமே-கொலோ

தென்றல் வந்து தீ வீசும் என் செய்கேன்

#1953

காரும் வார் பனி கடலும் அன்னவன்

தாரும் மார்வமும் கண்ட தண்டமோ

சோரும் மா முகில் துளியினூடு வந்து

ஈர வாடை தான் ஈரும் என்னையே

#1954

சங்கும் மாமையும் தளரும் மேனி மேல்

திங்கள் வெம் கதிர் சீறும் என் செய்கேன்

பொங்கு வெண் திரை புணரி வண்ணனார்

கொங்கு அலர்ந்த தார் கூவும் என்னையே

#1955

அங்கு ஓர் ஆய் குலத்துள் வளர்ந்து சென்று

அங்கு ஓர் தாய் உரு ஆகி வந்தவள்

கொங்கை நஞ்சு உண்ட கோயின்மை-கொலோ

திங்கள் வெம் கதிர் சீறுகின்றதே

#1956

அங்கு ஓர் ஆள் அரியாய் அவுணனை

பங்கமா இரு கூறு செய்தவன்

மங்குல் மா மதி வாங்கவே-கொலோ

பொங்கு மா கடல் புலம்புகின்றதே

#1957

சென்று வார் சிலை வளைத்து இலங்கையை

வென்ற வில்லியார் வீரமே-கொலோ

முன்றில் பெண்ணை மேல் முளரி கூட்டகத்து

அன்றிலின் குரல் அடரும் என்னையே

#1958

பூவை வண்ணனார் புள்ளின் மேல் வர

மேவி நின்று நான் கண்ட தண்டமோ

வீவு இல் ஐங்கணை வில்லி அம்பு கோத்து

ஆவியே இலக்கு ஆக எய்வதே

#1959

மால் இனம் துழாய் வரும் என் நெஞ்சகம்

மாலின் அம் துழாய் வந்து என் உள் புக

கோல வாடையும் கொண்டு வந்தது ஓர்

ஆலி வந்ததால் அரிது காவலே

#1960

கெண்டை ஒண் கணும் துயிலும் என் நிறம்

பண்டுபண்டு போல் ஒக்கும் மிக்க சீர்

தொண்டர் இட்ட பூம் துளவின் வாசமே

வண்டு கொண்டுவந்து ஊதுமாகிலே

#1961

அன்று பாரதத்து ஐவர் தூதனாய்

சென்ற மாயனை செங்கண்மாலினை

மன்றில் ஆர் புகழ் மங்கை வாள் கலி

கன்றி சொல் வல்லார்க்கு அல்லல் இல்லையே

#1962

குன்றம் எடுத்து மழை தடுத்து இளையாரொடும்

மன்றில் குரவை பிணைந்த மால் என்னை மால்செய்தான்

முன்றில் தனி நின்ற பெண்ணை மேல் கிடந்து ஈர்கின்ற

அன்றிலின் கூட்டை பிரிக்ககிற்பவர் ஆர்-கொலோ

#1963

பூம் குருந்து ஒசித்து ஆனை காய்ந்து அரி மா செகுத்து

ஆங்கு வேழத்தின் கொம்பு கொண்டு வன் பேய் முலை

வாங்கி உண்ட அம் வாயன் நிற்க இ ஆயன் வாய்

ஏங்கு வேய் குழல் என்னோடு ஆடும் இளமையே

#1964

மல்லொடு கஞ்சனும் துஞ்ச வென்ற மணி வண்ணன்

அல்லி மலர் தண் துழாய் நினைந்திருந்தேனையே

எல்லியில் மாருதம் வந்து அடும் அது அன்றியும்

கொல்லை வல் ஏற்றின் மணியும் கோயின்மை செய்யுமே

#1965

பொருந்து மா மரம் ஏழும் எய்த புனிதனார்

திருந்து சேவடி என் மனத்து நினை-தொறும்

கரும் தண் மா கடல் கங்குல் ஆர்க்கும் அது அன்றியும்

வருந்த வாடை வரும் இதற்கு இனி என் செய்கேன்

#1966

அன்னை முனிவதும் அன்றிலின் குரல் ஈர்வதும்

மன்னு மறி கடல் ஆர்ப்பதும் வளை சோர்வதும்

பொன் அம் கலை அல்குல் அன்ன மென் நடை பூம் குழல்

பின்னை மணாளர் திறத்தம் ஆயின பின்னையே

#1967

ஆழியும் சங்கும் உடைய நங்கள் அடிகள் தாம்

பாழிமையான கனவில் நம்மை பகர்வித்தார்

தோழியும் நானும் ஒழிய வையம் துயின்றது

கோழியும் கூகின்றது இல்லை கூர் இருள் ஆயிற்றே

#1968

காமன் தனக்கு முறை அல்லேன் கடல் வண்ணனார்

மா மணவாளர் எனக்கு தானும் மகன் சொல்லில்

யாமங்கள்-தோறு எரி வீசும் என் இளம் கொங்கைகள்

மா மணி வண்ணர் திறத்தவாய் வளர்கின்றவே

#1969

மஞ்சுறு மாலிருஞ்சோலை நின்ற மணாளனார்

நெஞ்சம் நிறைகொண்டு போயினார் நினைகின்றிலர்

வெம் சுடர் போய் விடியாமல் எவ்விடம் புக்கதோ

நஞ்சு உடலம் துயின்றால் நமக்கு இனி நல்லதே

#1970

காமன் கணைக்கு ஓர் இலக்கமாய் நலத்தின் மிகு

பூ மரு கோலம் நம் பெண்மை சிந்தித்து இராது போய்

தூ மலர் நீர் கொடு தோழி நாம் தொழுது ஏத்தினால்

கார் முகில் வண்ணரை கண்களால் காணல் ஆம்-கொலோ

#1971

வென்றி விடை உடன் ஏழ் அடர்த்த அடிகளை

மன்றில் மலி புகழ் மங்கை மன் கலிகன்றி சொல்

ஒன்று நின்ற ஒன்பதும் உரைப்பவர் தங்கள் மேல்

என்றும் நில்லா வினை ஒன்றும் சொல்லில் உலகிலே

#1972

மன் இலங்கு பாரதத்து தேர் ஊர்ந்து மாவலியை

பொன் இலங்கு திண் விலங்கில் வைத்து பொரு கடல் சூழ்

தென் இலங்கை ஈடு அழித்த தேவர்க்கு இது காணீர்

என் இலங்கு சங்கோடு எழில் தோற்றிருந்தேனே

#1973

இருந்தான் என் உள்ளத்து இறைவன் கறை சேர்

பரும் தாள் களிற்றுக்கு அருள்செய்த செம் கண்

பெரும் தோள் நெடுமாலை பேர் பாடி ஆட

வருந்தாது என் கொங்கை ஒளி மன்னும் அன்னே

#1974

அன்னே இவரை அறிவன் மறை நான்கும்

முன்னே உரைத்த முனிவர் இவர் வந்து

பொன் ஏய் வளை கவர்ந்து போகார் மனம் புகுந்து

என்னே இவர் எண்ணும் எண்ணம் அறியோமே

#1975

அறியோமே என்று உரைக்கல் ஆமே எமக்கு

வெறி ஆர் பொழில் சூழ் வியன் குடந்தை மேவி

சிறியான் ஓர் பிள்ளையாய் மெள்ள நடந்திட்டு

உறி ஆர் நறு வெண்ணெய் உண்டு உகந்தார் தம்மையே

#1976

தம்மையே நாளும் வணங்கி தொழுவார்க்கு

தம்மையே ஒக்க அருள்செய்வர் ஆதலால்

தம்மையே நாளும் வணங்கி தொழுது இறைஞ்சி

தம்மையே பற்றா மனத்து என்றும் வைத்தோமே

#1977

வைத்தார் அடியார் மனத்தினில் வைத்து இன்பம்

உய்த்தார் ஒளி விசும்பில் ஓர் அடி வைத்து ஓர் அடிக்கும்

எய்த்தாது மண் என்று இமையோர் தொழுது ஏத்தி

கைத்தாமரை குவிக்கும் கண்ணன் என் கண்ணனையே

#1978

கண்ணன் மனத்துள்ளே நிற்கவும் கை வளைகள்

என்னோ கழன்ற இவை என்ன மாயங்கள்

பெண் ஆனோம் பெண்மையோம் நிற்க அவன் மேய

அண்ணல் மலையும் அரங்கமும் பாடோமே

#1979

பாடோமே எந்தை பெருமானை பாடிநின்று

ஆடோமே ஆயிரம் பேரானை பேர் நினைந்து

சூடோமே சூடும் துழாய் அலங்கல் சூடி நாம்

கூடோமே கூட குறிப்பு ஆகில் நல் நெஞ்சே

#1980

நல் நெஞ்சே நம் பெருமான் நாளும் இனிது அமரும்

அன்னம் சேர் கானல் அணி ஆலி கைதொழுது

முன்னம் சேர் வல்வினைகள் போக முகில் வண்ணன்

பொன்னம் சேர் சேவடி மேல் போது அணியப்பெற்றோமே

#1981

பெற்று ஆரார் ஆயிரம் பேரானை பேர் பாட

பெற்றான் கலியன் ஒலிசெய் தமிழ் மாலை

கற்றார் ஓ முற்று உலகு ஆள்வர் இவை கேட்கல்

உற்றார்க்கு உறு துயர் இல்லை உலகத்தே

#1982

நிலை இடம் எங்கும் இன்றி நெடு வெள்ளம் உம்பர் வள நாடு மூட இமையோர்

தலை இட மற்று எமக்கு ஓர் சரண் இல்லை என்ன அரண் ஆவன் என்னும் அருளால்

அலை கடல் நீர் குழம்ப அகடு ஆட ஓடி அகல் வான் உரிஞ்ச முதுகில்

மலைகளை மீதுகொண்டு வரும் மீனை மாலை மறவாது இறைஞ்சு என் மனனே

#1983

செரு மிகு வாள் எயிற்ற அரவு ஒன்று சுற்றி திசை மண்ணும் விண்ணும் உடனே

வெருவர வெள்ளை வெள்ளம் முழுதும் குழம்ப இமையோர்கள் நின்று கடைய

பரு வரை ஒன்று நின்று முதுகில் பரந்து சுழல கிடந்து துயிலும்

அரு வரை அன்ன தன்மை அடல் ஆமை ஆன திருமால் நமக்கு ஓர் அரணே

#1984

தீது அறு திங்கள் பொங்கு சுடர் உம்பர் உம்பர் உலகு ஏழினோடும் உடனே

மாதிரம் மண் சுமந்த வடகுன்றும் நின்ற மலை ஆறும் ஏழு கடலும்

பாதமர் சூழ் குளம்பின் அக மண்டலத்தின் ஒரு-பால் ஒடுங்க வளர் சேர்

ஆதி முன் ஏனம் ஆகி அரண் ஆய மூர்த்தி அது நம்மை ஆளும் அரசே

#1985

தளை அவிழ் கோதை மாலை இரு-பால் தயங்க எரி கான்று இரண்டு தறு கண்

அளவு எழ வெம்மை மிக்க அரி ஆகி அன்று பரியோன் சினங்கள் அவிழ

வளை உகிர் ஆளி மொய்ம்பின் மறவோனது ஆகம் மதியாது சென்று ஓர் உகிரால்

பிளவு எழ விட்ட குட்டம் அது வையம் மூடு பெரு நீரில் மும்மை பெரிதே

#1986

வெம் திறல் வாணன் வேள்வியிடம் எய்தி அங்கு ஓர் குறள் ஆகி மெய்ம்மை உணர

செம் தொழில் வேத நாவின் முனி ஆகி வையம் அடி மூன்று இரந்து பெறினும்

மந்தரம் மீது போகி மதி நின்று இறைஞ்ச மலரோன் வணங்க வளர் சேர்

அந்தரம் ஏழினூடு செல உய்த்த பாதம் அது நம்மை ஆளும் அரசே

#1987

இரு நில மன்னர் தம்மை இரு நாலும் எட்டும் ஒரு நாலும் ஒன்றும் உடனே

செரு நுதலூடு போகி அவர் ஆவி மங்க மழுவாளில் வென்ற திறலோன்

பெரு நில மங்கை மன்னர் மலர் மங்கை நாதர் புலமங்கை கேள்வர் புகழ் சேர்

பெரு நிலம் உண்டு உமிழ்ந்த பெரு வாயர் ஆகியவர் நம்மை ஆள்வர் பெரிதே

#1988

இலை மலி பள்ளி எய்தி இது மாயம் என்ன இனம் ஆய மான் பின் எழில் சேர்

அலை மலி வேல் கணாளை அகல்விப்பதற்கு ஓர் உரு ஆய மானை அமையா

கொலை மலி எய்துவித்த கொடியோன் இலங்கை பொடி ஆக வென்றி அமருள்

சிலை மலி செம் சரங்கள் செல உய்த்த நங்கள் திருமால் நமக்கு ஓர் அரணே

#1989

முன் உலகங்கள் ஏழும் இருள் மண்டி உண்ண முதலோடு வீடும் அறியாது

என் இது வந்தது என்ன இமையோர் திசைப்ப எழில் வேதம் இன்றி மறைய

பின்னும் வானவர்க்கும் முனிவர்க்கும் நல்கி இருள் தீர்ந்து இ வையம் மகிழ

அன்னம்-அதுவாய் இருந்து அங்கு அறநூல் உரைத்த அது நம்மை ஆளும் அரசே

#1990

துணைநிலை மற்று எமக்கு ஓர் உளது என்று இராது தொழு-மின்கள் தொண்டர் தொலைய

உண முலை முன் கொடுத்த உரவோளது ஆவி உக உண்டு வெண்ணெய் மருவி

பணை முலை ஆயர் மாதர் உரலோடு கட்ட அதனோடும் ஓடி அடல் சேர்

இணை மருது இற்று வீழ நடைகற்ற தெற்றல் வினை பற்று அறுக்கும் விதியே

#1991

கொலை கெழு செம் முகத்த களிறு ஒன்று கொன்று கொடியோன் இலங்கை பொடியா

சிலை கெழு செம் சரங்கள் செல உய்த்த நங்கள் திருமாலை வேலை புடை சூழ்

கலி கெழு மாட வீதி வயல் மங்கை மன்னு கலிகன்றி சொன்ன பனுவல்

ஒலி கெழு பாடல் பாடி உழல்கின்ற தொண்டர் அவர் ஆள்வர் உம்பர் உலகே

#1992

மான் அமரும் மென் நோக்கி வைதேவி இன் துணையா

கான் அமரும் கல் அதர் போய் காடு உறைந்தான் காண் ஏடீ

கான் அமரும் கல் அதர் போய் காடு உறைந்த பொன் அடிக்கள்

வானவர் தம் சென்னி மலர் கண்டாய் சாழலே

#1993

தந்தை தளை கழல தோன்றி போய் ஆய்ப்பாடி

நந்தன் குல மதலையாய் வளர்ந்தான் காண் ஏடீ

நந்தன் குல மதலையாய் வளர்ந்தான் நான்முகற்கு

தந்தை காண் எந்தை பெருமான் காண் சாழலே

#1994

ஆழ் கடல் சூழ் வையகத்தார் ஏச போய் ஆய்ப்பாடி

தாழ் குழலார் வைத்த தயிர் உண்டான் காண் ஏடீ

தாழ் குழலார் வைத்த தயிர் உண்ட பொன் வயிறு இ

ஏழ் உலகும் உண்டும் இடம் உடைத்தால் சாழலே

#1995

அறியாதார்க்கு ஆன் ஆயன் ஆகி போய் ஆய்ப்பாடி

உறி ஆர் நறு வெண்ணெய் உண்டு உகந்தான் காண் ஏடீ

உறி ஆர் நறு வெண்ணெய் உண்டு உகந்த பொன் வயிற்றுக்கு

எறி நீர் உலகு அனைத்தும் எய்தாதால் சாழலே

#1996

வண்ண கரும் குழல் ஆய்ச்சியால் மொத்துண்டு

கண்ணி குறும் கயிற்றால் கட்டுண்டான் காண் ஏடீ

கண்ணி குறும் கயிற்றால் கட்டுண்டான் ஆகிலும்

எண்ணற்கு அரியன் இமையோர்க்கும் சாழலே

#1997

கன்ற பறை கறங்க கண்டவர் தம் கண் களிப்ப

மன்றில் மரக்கால் கூத்து ஆடினான் காண் ஏடீ

மன்றில் மரக்கால் கூத்து ஆடினான் ஆகிலும்

என்றும் அரியன் இமையோர்க்கும் சாழலே

#1998

கோதை வேல் ஐவர்க்காய் மண் அகலம் கூறு இடுவான்

தூதன் ஆய் மன்னவனால் சொல்லுண்டான் காண் ஏடீ

தூதனாய் மன்னவனால் சொல்லுண்டான் ஆகிலும்

ஓத நீர் வையகம் முன் உண்டு உமிழ்ந்தான் சாழலே

#1999

பார் மன்னர் மங்க படைதொட்டு வெம் சமத்து

தேர் மன்னற்காய் அன்று தேர் ஊர்ந்தான் காண் ஏடீ

தேர் மன்னற்காய் அன்று தேர் ஊர்ந்தான் ஆகிலும்

தார் மன்னர் தங்கள் தலைமேலான் சாழலே

#2000

கண்டார் இரங்க கழிய குறள் உருவாய்

வண் தாரான் வேள்வியில் மண் இரந்தான் காண் ஏடீ

வண் தாரான் வேள்வியில் மண் இரந்தான் ஆகிலும்

விண்டு ஏழ் உலகுக்கும் மிக்கான் காண் சாழலே

#2001

கள்ளத்தால் மாவலியை மூவடி மண் கொண்டு அளந்தான்

வெள்ளத்தான் வேங்கடத்தான் என்பரால் காண் ஏடீ

வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் கலிகன்றி

உள்ளத்தின் உள்ளே உளன் கண்டாய் சாழலே

#2002

மை நின்ற கரும் கடல்வாய் உலகு இன்றி வானவரும் யாமும் எல்லாம்

நெய் நின்ற சக்கரத்தன் திருவயிற்றில் நெடும் காலம் கிடந்தது ஓரீர்

எ நன்றி செய்தாரா ஏதிலோர் தெய்வத்தை ஏத்துகின்றீர்

செய்ந்நன்றி குன்றேல்-மின் தொண்டர்காள் அண்டனைய ஏத்தீர்களே

#2003

நில்லாத பெரு வெள்ளம் நெடு விசும்பின் மீது ஓடி நிமிர்ந்த காலம்

மல் ஆண்ட தட கையால் பகிரண்டம் அகப்படுத்த காலத்து அன்று

எல்லாரும் அறியாரோ எம்பெருமான் உண்டு உமிழ்ந்த எச்சில் தேவர்

அல்லாதார் தாம் உளரே அவன் அருளே உலகு ஆவது அறியீர்களே

#2004

நெற்றி மேல் கண்ணானும் நிறை மொழி வாய் நான்முகனும் நீண்ட நால் வாய்

ஒற்றை கை வெண் பகட்டின் ஒருவனையும் உள்ளிட்ட அமரரோடும்

வெற்றி போர் கடல் அரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக்கொண்ட

கொற்ற போர் ஆழியான் குணம் பரவா சிறு தொண்டர் கொடிய ஆறே

#2005

பனி பரவை திரை ததும்ப பார் எல்லாம் நெடும் கடலே ஆன காலம்

இனி களைகண் இவர்க்கு இல்லை என்று உலகம் ஏழினையும் ஊழில் வாங்கி

முனி தலைவன் முழங்கு ஒளி சேர் திருவயிற்றில் வைத்து உம்மை உய்யக்கொண்ட

கனி களவ திருவுருவத்து ஒருவனையே கழல் தொழுமா கல்லீர்களே

#2006

பார் ஆரும் காணாமே பரவை மா நெடும் கடலே ஆன காலம்

ஆரானும் அவனுடைய திருவயிற்றில் நெடும் காலம் கிடந்தது உள்ளத்து

ஓராத உணர்விலீர் உணருதிரேல் உலகு அளந்த உம்பர் கோமான்

பேராளன் பேரான பேர்கள் ஆயிரங்களுமே பேசீர்களே

#2007

பேய் இருக்கும் நெடு வெள்ளம் பெரு விசும்பின் மீது ஓடி பெருகு காலம்

தாய் இருக்கும் வண்ணமே உம்மை தன் வயிற்று இருத்தி உய்யக்கொண்டான்

போய் இருக்க மற்று இங்கு ஓர் புது தெய்வம் கொண்டாடும் தொண்டீர் பெற்ற

தாய் இருக்க மணை வெந்நீர் ஆட்டுதிரோ மாட்டாத தகவு அற்றீரே

#2008

மண் நாடும் விண் நாடும் வானவரும் தானவரும் மற்றும் எல்லாம்

உண்ணாத பெரு வெள்ளம் உண்ணாமல் தான் விழுங்கி உய்யக்கொண்ட

கண்ணாளன் கண்ணமங்கை நகராளன் கழல் சூடி அவனை உள்ளத்து

எண்ணாத மானிடத்தை எண்ணாத போது எல்லாம் இனிய ஆறே

#2009

மறம் கிளர்ந்த கரும் கடல் நீர் உரம் துரந்து பரந்து ஏறி அண்டத்து அப்பால்

புறம் கிளர்ந்த காலத்து பொன் உலகம் ஏழினையும் ஊழில் வாங்கி

அறம் கிளந்த திருவயிற்றின் அகம்படியில் வைத்து உம்மை உய்யக்கொண்ட

நிறம் கிளர்ந்த கரும் சோதி நெடுந்தகையை நினையாதார் நீசர் தாமே

#2010

அண்டத்தின் முகடு அழுந்த அலை முந்நீர் திரை ததும்ப ஆஆ என்று

தொண்டர்க்கும் முனிவர்க்கும் அமரர்க்கும் தான் அருளி உலகம் ஏழும்

உண்டு ஒத்த திருவயிற்றின் அகம்படியில் வைத்து உம்மை உய்யக்கொண்ட

கொண்டல் கை மணி வண்ணன் தண் குடந்தை நகர் பாடி ஆடீர்களே

#2011

தேவரையும் அசுரரையும் திசைகளையும் கடல்களையும் மற்றும் முற்றும்

யாவரையும் ஒழியாமே எம்பெருமான் உண்டு உமிழ்ந்தது அறிந்து சொன்ன

கா வளரும் பொழில் மங்கை கலிகன்றி ஒலி மாலை கற்று வல்லார்

பூ வளரும் திருமகளால் அருள்பெற்று பொன் உலகில் பொலிவர் தாமே

#2012

நீள் நாகம் சுற்றி நெடு வரை நட்டு ஆழ் கடலை

பேணான் கடைந்து அமுதம் கொண்டு உகந்த பெம்மானை

பூண் ஆர மார்வனை புள் ஊரும் பொன் மலையை

காணாதார் கண் என்றும் கண் அல்ல கண்டாமே

#2013

நீள்வான் குறள் உருவாய் நின்று இரந்து மாவலி மண்

தாளால் அளவிட்ட தக்கணைக்கு மிக்கானை

தோளாத மா மணியை தொண்டர்க்கு இனியானை

கேளா செவிகள் செவி அல்ல கேட்டாமே

#2014

தூயானை தூய மறையானை தென் ஆலி

மேயானை மேவாள் உயிர் உண்டு அமுது உண்ட

வாயானை மாலை வணங்கி அவன் பெருமை

பேசாதார் பேச்சு என்றும் பேச்சு அல்ல கேட்டாமே

#2015

கூடா இரணியனை கூர் உகிரால் மார்வு இடந்த

ஓடா அடல் அரியை உம்பரார் கோமானை

தோடு ஆர் நறும் துழாய் மார்வனை ஆர்வத்தால்

பாடாதார் பாட்டு என்றும் பாட்டு அல்ல கேட்டாமே

#2016

மை ஆர் கடலும் மணி வரையும் மா முகிலும்

கொய் ஆர் குவளையும் காயாவும் போன்று இருண்ட

மெய்யானை மெய்ய மலையானை சங்கு ஏந்தும்

கையானை கை தொழா கை அல்ல கண்டாமே

#2017

கள் ஆர் துழாயும் கணவலரும் கூவிளையும்

முள் ஆர் முளரியும் ஆம்பலும் முன் கண்ட-கால்

புள்ளாய் ஓர் ஏனமாய் புக்கு இடந்தான் பொன் அடிக்கு என்று

உள்ளாதார் உள்ளத்தை உள்ளமா கொள்ளோமே

#2018

கனை ஆர் கடலும் கருவிளையும் காயாவும்

அனையானை அன்பினால் ஆர்வத்தால் என்றும்

சுனை ஆர் மலர் இட்டு தொண்டராய் நின்று

நினையாதார் நெஞ்சு என்றும் நெஞ்சு அல்ல கண்டாமே

#2019

வெறி ஆர் கரும் கூந்தல் ஆய்ச்சியர் வைத்த

உறி ஆர் நறு வெண்ணெய் தான் உகந்து உண்ட

சிறியானை செம் கண் நெடியானை சிந்தித்து

அறியாதார் என்றும் அறியாதார் கண்டாமே

#2020

தேனொடு வண்டு ஆலும் திருமாலிருஞ்சோலை

தான் இடமா கொண்டான் தட மலர் கண்ணிக்காய்

ஆன் விடை ஏழ் அன்று அடர்த்தாற்கு ஆள் ஆனார் அல்லாதார்

மானிடவர் அல்லர் என்று என் மனத்தே வைத்தேனே

#2021

மெய் நின்ற பாவம் அகல திருமாலை

கை நின்ற ஆழியான் சூழும் கழல் சூடி

கை நின்ற வேல் கை கலியன் ஒலி மாலை

ஐயொன்றும் ஐந்தும் இவை பாடி ஆடு-மினே

#2022

மாற்றம் உள ஆகிலும் சொல்லுவன் மக்கள்

தோற்ற குழி தோற்றுவிப்பாய்-கொல் என்று இன்னம்

ஆற்றங்கரை வாழ் மரம் போல் அஞ்சுகின்றேன்

நாற்றம் சுவை ஊறு ஒலி ஆகிய நம்பீ

#2023

சீற்றம் உள ஆகிலும் செப்புவன் மக்கள்

தோற்ற குழி தோற்றுவிப்பாய்-கொல் என்று அஞ்சி

காற்றத்து இடைப்பட்ட கலவர் மனம் போல்

ஆற்ற துளங்கா நிற்பன் ஆழி வலவா

#2024

தூங்கு ஆர் பிறவி-கண் இன்னம் புக பெய்து

வாங்காய் என்று சிந்தித்து நான் அதற்கு அஞ்சி

பாம்போடு ஒரு கூரையிலே பயின்றால் போல்

தாங்காது உள்ளம் தள்ளும் என் தாமரை கண்ணா

#2025

உரு ஆர் பிறவி-கண் இன்னம் புக பெய்து
திரிவாய் என்று சிந்தித்தி என்று அதற்கு அஞ்சி
இரு பாடு எரி கொள்ளியினுள் எறும்பே போல்
உருகாநிற்கும் என் உள்ளம் ஊழி முதல்வா

#2026

கொள்ள குறையாத இடும்பை குழியில்
தள்ளி புக பெய்தி-கொல் என்று அதற்கு அஞ்சி
வெள்ளத்து இடைப்பட்ட நரி இனம் போலே
உள்ளம் துளங்காநிற்பன் ஊழி முதல்வா

#2027

படை நின்ற பைம் தாமரையோடு அணி நீலம்
மடை நின்று அலரும் வயல் ஆலி மணாளா
இடையன் எறிந்த மரமே ஒத்து இராமே
அடைய அருளாய் எனக்கு உன்தன் அருளே

#2028

வேம்பின் புழு வேம்பு அன்றி உண்ணாது அடியேன்
நான் பின்னும் உன் சேவடி அன்றி நயவேன்

தேம்பல் இளம் திங்கள் சிறைவிடுத்து ஐவாய்

பாம்பின் அணை பள்ளிகொண்டாய் பரஞ்சோதீ

#2029

அணி ஆர் பொழில் சூழ் அரங்க நகர் அப்பா

துணியேன் இனி நின் அருள் அல்லது எனக்கு

மணியே மணி மாணிக்கமே மதுசூதா

பணியாய் எனக்கு உய்யும் வகை பரஞ்சோதீ

#2030

நந்தா நரகத்து அழுந்தா வகை நாளும்

எந்தாய் தொண்டர் ஆனவர்க்கு இன் அருள்செய்வாய்

சந்தோகா தலைவனே தாமரை கண்ணா

அந்தோ அடியேற்கு அருளாய் உன் அருளே

#2031

குன்றம் எடுத்து ஆநிரை காத்தவன்-தன்னை

மன்றில் புகழ் மங்கை மன் கலிகன்றி சொல்

ஒன்று நின்ற ஒன்பதும் வல்லவர் தம்மேல்

என்றும் வினை ஆயின சாரகில்லாவே

திருமங்கை ஆழ்வார் - திருக்குறுந்தாண்டகம்

#2032

நிதியினை பவள தூணை நெறிமையால் நினைய வல்லார்

கதியினை கஞ்சன் மாள கண்டு முன் அண்டம் ஆளும்

மதியினை மாலை வாழ்த்தி வணங்கி என் மனத்து வந்த

விதியினை கண்டு கொண்ட தொண்டனேன் விடுகிலேனே

#2033

காற்றினை புனலை தீயை கடி மதிள் இலங்கை செற்ற

ஏற்றினை இமயம் ஏய எழில் மணி திரளை இன்ப

ஆற்றினை அமுதம்-தன்னை அவுணன் ஆருயிரை உண்ட

கூற்றினை குணங்கொண்டு உள்ளம் கூறு நீ கூறுமாறே

#2034

பா இரும் பரவை தன்னுள் பரு வரை திரித்து வானோர்க்கு

ஆய் இருந்து அமுதம் கொண்ட அப்பனை எம்பிரானை

வேய் இரும் சோலை சூழ்ந்து விரி கதிர் இரிய நின்ற

மா இரும் சோலை மேய மைந்தனை வணங்கினேனே

#2035

கேட்க யான் உற்றது உண்டு கேழலாய் உலகம் கொண்ட

பூ கெழு வண்ணனாரை போதர கனவில் கண்டு

வாக்கினால் கருமம்-தன்னால் மனத்தினால் சிரத்தை-தன்னால்

வேட்கை மீதூர வாங்கி விழுங்கினேற்கு இனியவாறே

#2036

இரும்பு அனன்று உண்ட நீர் போல் எம் பெருமானுக்கு என்தன்

அரும்பெறல் அன்பு புக்கிட்டு அடிமைபூண்டு உய்ந்து போனேன்

வரும் புயல் வண்ணனாரை மருவி என் மனத்து வைத்து

கரும்பின் இன் சாறு போல பருகினேற்கு இனியவாறே

#2037

மூவரில் முதல்வன் ஆய ஒருவனை உலகம் கொண்ட

கோவினை குடந்தை மேய குரு மணி திரளை இன்ப

பாவினை பச்சை தேனை பைம்பொன்னை அமரர் சென்னி

பூவினை புகழும் தொண்டர் என் சொல்லி புகழ்வர் தாமே

#2038

இம்மையை மறுமை-தன்னை எமக்கு வீடு ஆகி நின்ற

மெய்ம்மையை விரிந்த சோலை வியன் திருவரங்கம் மேய

செம்மையை கருமை-தன்னை திருமலை ஒருமையானை

தன்மையை நினைவார் என்தன் தலை மிசை மன்னுவாரே

#2039

வானிடை புயலை மாலை வரையிடை பிரசம் ஈன்ற

தேனிடை கரும்பின் சாற்றை திருவினை மருவி வாழார்

மானிட பிறவி அந்தோ மதிக்கிலர் கொள்க தம்தம்

ஊனிடை குரம்பை வாழ்க்கைக்கு உறுதியே வேண்டினாரே

#2040

உள்ளமோ ஒன்றில் நில்லாது ஓசையில் எரி நின்று உண்ணும்

கொள்ளி மேல் எறும்பு போல குழையுமால் என்தன் உள்ளம்

தெள்ளியீர் தேவர்க்கு எல்லாம் தேவராய் உலகம் கொண்ட

ஒள்ளியீர் உம்மை அல்லால் எழுமையும் துணை இலோமே

#2041

சித்தமும் செவ்வை நில்லாது என் செய்கேன் தீவினையேன்

பத்திமைக்கு அன்பு உடையேன் ஆவதே பணியாய் எந்தாய்

முத்து ஒளி மரகதமே முழங்கு ஒளி முகில் வண்ணா என்

அத்த நின் அடிமை அல்லால் யாதும் ஒன்று அறிகிலேனே

#2042

தொண்டு எல்லாம் பரவி நின்னை தொழுது அடிபணியுமாறு

கண்டு தான் கவலை தீர்ப்பான் ஆவதே பணியாய் எந்தாய்

அண்டம் ஆய் எண் திசைக்கும் ஆதியாய் நீதி ஆன

பண்டம் ஆம் பரம சோதி நின்னையே பரவுவேனே

#2043

ஆவியை அரங்க மாலை அழுக்கு உடம்பு எச்சில் வாயால்

தூய்மை இல் தொண்டனேன் நான் சொல்லினேன் தொல்லை நாமம்

பாவியேன் பிழைத்தவாறு என்று அஞ்சினேற்கு அஞ்சல் என்று

காவி போல் வண்ணர் வந்து என் கண்ணுளே தோன்றினாரே

#2044

இரும்பு அனன்று உண்ட நீரும் போதரும் கொள்க என்தன்

அரும் பிணி பாவம் எல்லாம் அகன்றன என்னை விட்டு

சுரும்பு அமர் சோலை சூழ்ந்த அரங்க மா கோயில் கொண்ட

கரும்பினை கண்டுகொண்டு என் கண் இணை களிக்குமாறே

#2045

காவியை வென்ற கண்ணார் கலவியே கருதி நாளும்

பாவியேன் ஆக எண்ணி அதனுள்ளே பழுத்து ஒழிந்தேன்

தூவி சேர் அன்னம் மன்னும் சூழ் புனல் குடந்தையானை

பாவியேன் பாவியாது பாவியேன் ஆயினேனே

#2046

முன் பொலா இராவணன்-தன் முது மதிள் இலங்கை வேவித்து

அன்பினால் அனுமன் வந்து ஆங்கு அடி இணை பணிய நின்றார்க்கு

என்பு எலாம் உருகி உக்கிட்டு என்னுடை நெஞ்சம் என்னும்

அன்பினால் ஞான நீர் கொண்டு ஆட்டுவன் அடியனேனே

#2047

மாய மான் மாய செற்று மருது இற நடந்து வையம்

தாய் அ மா பரவை பொங்க தட வரை திரித்து வானோர்க்கு

ஈயும் மால் எம்பிரானார்க்கு என்னுடை சொற்கள் என்னும்

தூய மா மாலைகொண்டு சூட்டுவன் தொண்டனேனே

#2048

பேசினார் பிறவி நீத்தார் பேர் உளான் பெருமை பேசி

ஏசினார் உய்ந்து போனார் என்பது இ உலகின் வண்ணம்

பேசினேன் ஏச மாட்டேன் பேதையேன் பிறவி நீத்தற்கு

ஆசையோ பெரிது கொள்க அலை கடல் வண்ணர்-பாலே

#2049

இளைப்பினை இயக்கம் நீக்கி இருந்து முன் இமையை கூட்டி

அளப்பு இல் ஐம்புலன் அடக்கி அன்பு அவர்-கண்ணே வைத்து

துளக்கம் இல் சிந்தைசெய்து தோன்றலும் சுடர்விட்டு ஆங்கே

விளக்கினை விதியின் காண்பார் மெய்ம்மையை காண்கிற்பாரே

#2050

பிண்டி ஆர் மண்டை ஏந்தி பிறர் மனை திரிதந்து உண்ணும்

முண்டியான் சாபம் தீர்த்த ஒருவன் ஊர் உலகம் ஏத்தும்

கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை என்று

மண்டினார் உய்யல் அல்லால் மற்றையார்க்கு உய்யல் ஆமே

#2051

வானவர்-தங்கள் கோனும் மலர் மிசை அயனும் நாளும்

தே மலர் தூவி ஏத்தும் சேவடி செங்கண்மாலை

மான வேல் கலியன் சொன்ன வண் தமிழ் மாலை நாலைந்து

ஊனம் அது இன்றி வல்லார் ஒளி விசும்பு ஆள்வர் தாமே

திருமங்கை ஆழ்வார் - திருநெடுந்தாண்டகம்

#2052

மின் உருவாய் முன் உருவில் வேதம் நான்காய் விளக்கு ஒளியாய் முளைத்து எழுந்த திங்கள் தானாய்

பின் உருவாய் முன் உருவில் பிணி மூப்பு இல்லா பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணாது எண்ணும்

பொன் உருவாய் மணி உருவில் பூதம் ஐந்தாய் புனல் உருவாய் அனல் உருவில் திகழும் சோதி

தன் உருவாய் என் உருவில் நின்ற எந்தை தளிர் புரையும் திருவடி என் தலை மேலவே

#2053

பார் உருவி நீர் எரி கால் விசும்பும் ஆகி பல் வேறு சமயமுமாய் பரந்து நின்ற

ஏர் உருவில் மூவருமே என்ன நின்ற இமையவர்-தம் திருவுரு வேறு எண்ணும்-போது

ஓர் உருவம் பொன் உருவம் ஒன்று செம் தீ ஒன்று மா கடல் உருவம் ஒத்துநின்ற

மூவுருவும் கண்ட-போது ஒன்றாம் சோதி முகில் உருவம் எம் அடிகள் உருவம் தானே

#2054

திருவடிவில் கரு நெடுமால் சேயன் என்றும் திரேதை-கண் வளை உருவாய் திகழ்ந்தான் என்றும்

பெரு வடிவில் கடல் அமுதம் கொண்ட காலம் பெருமானை கரு நீல வண்ணன் தன்னை

ஒரு வடிவத்து ஓர் உரு என்று உணரல் ஆகாது ஊழி-தோறு ஊழி நின்று ஏத்தல் அல்லால்

கரு வடிவில் செம் கண்ண வண்ணன் தன்னை கட்டுரையே யார் ஒருவர் காண்கிற்பாரே

#2055

இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை இரு நிலம் கால் தீ நீர் விண் பூதம் ஐந்தாய்

செம் திறத்த தமிழ் ஓசை வடசொல் ஆகி திசை நான்குமாய் திங்கள் ஞாயிறு ஆகி

அந்தரத்தில் தேவர்க்கும் அறியல் ஆகா அந்தணனை அந்தணர்-மாட்டு அந்தி வைத்த

மந்திரத்தை மந்திரத்தால் மறவாது என்றும் வாழுதியே வாழலாம் மட நெஞ்சமே

#2056

ஒண் மிதியில் புனல் உருவி ஒரு கால் நிற்ப ஒரு காலும் காமரு சீர் அவுணன் உள்ளத்து

எண் மதியும் கடந்து அண்டம் மீது போகி இரு விசும்பினூடு போய் எழுந்து மேலை

தண் மதியும் கதிரவனும் தவிர ஓடி தாரகையின் புறம் தடவி அப்பால் மிக்கு

மண் முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை மலர் புரையும் திருவடியே வணங்கினேனே

#2057

அலம்புரிந்த நெடும் தட கை அமரர் வேந்தன் அம் சிறை புள் தனி பாகன் அவுணர்க்கு என்றும்

சலம்புரிந்து அங்கு அருள் இல்லா தன்மையாளன் தான் உகந்த ஊர் எல்லாம் தன் தாள் பாடி

நிலம் பரந்து வரும் கலுழி பெண்ணை ஈர்த்த நெடு வேய்கள் படு முத்தம் உந்த உந்தி

புலம் பரந்து பொன் விளைக்கும் பொய்கை வேலி பூம் கோவலூர் தொழுதும் போது நெஞ்சே

#2058

வற்பு உடைய வரை நெடும் தோள் மன்னர் மாள வடி வாய மழு ஏந்தி உலகம் ஆண்டு

வெற்பு உடைய நெடும் கடலுள் தனி வேல் உய்த்த வேள் முதலா வென்றான் ஊர் விந்தம் மேய

கற்பு உடைய மட கன்னி காவல் பூண்ட கடி பொழில் சூழ் நெடு மறுகில் கமல வேலி

பொற்பு உடைய மலை அரையன் பணிய நின்ற பூம் கோவலூர் தொழுதும் போது நெஞ்சே

#2059

நீரகத்தாய் நெடு வரையின் உச்சி மேலாய் நிலா திங்கள் துண்டத்தாய் நிறைந்த கச்சி

ஊரகத்தாய் ஒண் துறை நீர் வெஃகா உள்ளாய் உள்ளுவார் உள்ளத்தாய் உலகம் ஏத்தும்

காரகத்தாய் கார் வானத்து உள்ளாய் கள்வா காமரு பூம் காவிரியின் தென்-பால் மன்னு

பேரகத்தாய் பேராது என் நெஞ்சின் உள்ளாய் பெருமான் உன் திருவடியே பேணினேனே

#2060

வங்கத்தால் மா மணி வந்து உந்து முந்நீர் மல்லையாய் மதிள் கச்சியூராய் பேராய்

கொங்கு தார் வளம் கொன்றை அலங்கல் மார்வன் குலவரையன் மட பாவை இட-பால் கொண்டான்

பங்கத்தாய் பாற்கடலாய் பாரின் மேலாய் பனி வரையின் உச்சியாய் பவள வண்ணா

எங்கு உற்றாய் எம் பெருமான் உன்னை நாடி ஏழையேன் இங்ஙனமே உழிதர்கேனே

#2061

பொன் ஆனாய் பொழில் ஏழும் காவல் பூண்ட புகழ் ஆனாய் இகழ்வாய தொண்டனேன் நான்

என் ஆனாய் என் ஆனாய் என்னல் அல்லால் என் அறிவன் ஏழையேன் உலகம் ஏத்தும்

தென் ஆனாய் வட ஆனாய் குட-பால் ஆனாய் குண-பால மத யானாய் இமையோர்க்கு என்றும்

முன் ஆனாய் பின் ஆனார் வணங்கும் சோதி திருமூழிக்களத்து ஆனாய் முதல் ஆனாயே

#2062

பட்டு உடுக்கும் அயர்த்து இரங்கும் பாவை பேணாள் பனி நெடும் கண் நீர் ததும்ப பள்ளி கொள்ளாள்

எள் துணை போது என் குடங்கால் இருக்ககில்லாள் எம்பெருமான் திருவரங்கம் எங்கே என்னும்

மட்டு விக்கி மணி வண்டு முரலும் கூந்தல் மட மானை இது செய்தார் தம்மை மெய்யே

கட்டுவிச்சி சொல் என்ன சொன்னாள் நங்காய் கடல் வண்ணர் இது செய்தார் காப்பார் ஆரே

#2063

நெஞ்சு உருகி கண் பனிப்ப நிற்கும் சோரும் நெடிது உயிர்க்கும் உண்டு அறியாள் உறக்கம் பேணாள்

நஞ்சு அரவில் துயில் அமர்ந்த நம்பீ என்னும் வம்பு ஆர் பூ வயல் ஆலி மைந்தா என்னும்

அம் சிறைய புள் கொடியே ஆடும் பாடும் அணி அரங்கம் ஆடுதுமோ தோழீ என்னும்

என் சிறகின் கீழ் அடங்கா பெண்ணை பெற்றேன் இரு நிலத்து ஓர் பழி படைத்தேன் ஏ பாவமே

#2064

கல் எடுத்து கல் மாரி காத்தாய் என்னும் காமரு பூம் கச்சி ஊரகத்தாய் என்னும்

வில் இறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தாய் என்னும் வெஃகாவில் துயில் அமர்ந்த வேந்தே என்னும்

மல் அடர்த்து மல்லரை அன்று அட்டாய் என்னும் மா கீண்ட கைத்தலத்து என் மைந்தா என்னும்

சொல் எடுத்து தன் கிளியை சொல்லே என்று துணை முலை மேல் துளி சோர சோர்கின்றாளே

#2065

முளை கதிரை குறுங்குடியுள் முகிலை மூவா மூ உலகும் கடந்து அப்பால் முதலாய் நின்ற

அளப்பு அரிய ஆர் அமுதை அரங்கம் மேய அந்தணனை அந்தணர்-தம் சிந்தையானை

விளக்கு ஒளியை மரகதத்தை திருத்தண்காவில் வெஃகாவில் திருமாலை பாட கேட்டு

வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருக என்று மட கிளியை கைகூப்பி வணங்கினாளே

#2066

கல் உயர்ந்த நெடு மதிள் சூழ் கச்சி மேய களிறு என்றும் கடல் கிடந்த கனியே என்றும்

அல்லி அம் பூ மலர் பொய்கை பழன வேலி அணி அழுந்தூர் நின்று உகந்த அம்மான் என்றும்

சொல் உயர்ந்த நெடு வீணை முலை மேல் தாங்கி தூ முறுவல் நகை இறையே தோன்ற நக்கு

மெல் விரல்கள் சிவப்பு எய்த தடவி ஆங்கே மென் கிளி போல் மிக மிழற்றும் என் பேதையே

#2067

கன்று மேய்த்து இனிது உகந்த காளாய் என்றும் கடி பொழில் சூழ் கணபுரத்து என் கனியே என்றும்

மன்று அமர கூத்து ஆடி மகிழ்ந்தாய் என்றும் வடதிருவேங்கடம் மேய மைந்தா என்றும்

வென்று அசுரர் குலம் களைந்த வேந்தே என்றும் விரி பொழில் சூழ் திருநறையூர் நின்றாய் என்றும்

துன்று குழல் கரு நிறத்து என் துணையே என்றும் துணை முலை மேல் துளி சோர சோர்கின்றாளே

#2068

பொங்கு ஆர் மெல் இளம் கொங்கை பொன்னே பூப்ப பொரு கயல் கண் நீர் அரும்ப போந்து நின்று

செம் கால மட புறவம் பெடைக்கு பேசும் சிறு குரலுக்கு உடல் உருகி சிந்தித்து ஆங்கே

தண்காலும் தண் குடந்தை நகரும் பாடி தண் கோவலூர் பாடி ஆட கேட்டு

நங்காய் நம் குடிக்கு இதுவோ நன்மை என்ன நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே

#2069

கார் வண்ணம் திருமேனி கண்ணும் வாயும் கைத்தலமும் அடி இணையும் கமல வண்ணம்

பார் வண்ண மட மங்கை பத்தர் பித்தர் பனி மலர் மேல் பாவைக்கு பாவம் செய்தேன்

ஏர் வண்ண என் பேதை என் சொல் கேளாள் எம் பெருமான் திருவரங்கம் எங்கே என்னும்

நீர் வண்ணன் நீர்மலைக்கே போவேன் என்னும் இது அன்றோ நிறை அழிந்தார் நிற்குமாறே

#2070

முற்று ஆரா வன முலையாள் பாவை மாயன் மொய் அகலத்துள் இருப்பாள் அஃதும் கண்டும்

அற்றாள் தன் நிறை அழிந்தாள் ஆவிக்கின்றாள் அணி அரங்கம் ஆடுதுமோ தோழீ என்னும்

பெற்றேன் வாய் சொல் இறையும் பேச கேளாள் பேர் பாடி தண் குடந்தை நகரும் பாடி

பொற்றாமரை கயம் நீராட போனாள் பொரு அற்றாள் என் மகள் உம் பொன்னும் அஃதே

#2071

தேர் ஆளும் வாள் அரக்கன் செல்வம் மாள தென் இலங்கை முன் மலங்க செம் தீ ஒல்கி

போராளன் ஆயிரம் தோள் வாணன் மாள பொரு கடலை அரண் கடந்து புக்கு மிக்க

பாராளன் பார் இடந்து பாரை உண்டு பார் உமிழ்ந்து பார் அளந்து பாரை ஆண்ட

பேராளன் பேர் ஓதும் பெண்ணை மண் மேல் பெரும் தவத்தள் என்று அல்லால் பேசல் ஆமே

#2072

மை வண்ண நறும் குஞ்சி குழல் பின் தாழ மகரம் சேர் குழை இருபாடு இலங்கி ஆட

எய் வண்ண வெம் சிலையே துணையா இங்கே இருவராய் வந்தார் என் முன்னே நின்றார்

கை வண்ணம் தாமரை வாய் கமலம் போலும் கண் இணையும் அரவிந்தம் அடியும் அஃதே

அ வண்ணத்து அவர் நிலைமை கண்டும் தோழீ அவரை நாம் தேவர் என்று அஞ்சினோமே

#2073

நைவளம் ஒன்று ஆராயா நம்மை நோக்கா நாணினார் போல் இறையே நயங்கள் பின்னும்

செய்வு அளவில் என் மனமும் கண்ணும் ஓடி எம்பெருமான் திருவடி கீழ் அணைய இப்பால்

கை வளையும் மேகலையும் காணேன் கண்டேன் கன மகர குழை இரண்டும் நான்கு தோளும்

எவ்வளவு உண்டு எம் பெருமான் கோயில் என்றேற்கு இது அன்றோ எழில் ஆலி என்றார் தாமே

#2074

உள் ஊரும் சிந்தை நோய் எனக்கே தந்து என் ஒளி வளையும் மா நிறமும் கொண்டார் இங்கே

தெள் ஊரும் இளம் தெங்கின் தேறல் மாந்தி சேல் உகளும் திருவரங்கம் நம் ஊர் என்ன

கள் ஊரும் பைம் துழாய் மாலையானை கனவிடத்தில் யான் காண்பன் கண்ட-போது

புள் ஊரும் கள்வா நீ போகேல் என்பன் என்றாலும் இது நமக்கு ஓர் புலவி தானே

#2075

இரு கையில் சங்கு இவை நில்லா எல்லே பாவம் இலங்கு ஒலி நீர் பெரும் பௌவம் மண்டி உண்ட

பெரு வயிற்ற கரு முகிலே ஒப்பர் வண்ணம் பெரும் தவத்தர் அரும் தவத்து முனிவர் சூழ

ஒரு கையில் சங்கு ஒரு கை மற்று ஆழி ஏந்தி உலகு உண்ட பெரு வாயர் இங்கே வந்து என்

பொரு கயல் கண் நீர் அரும்ப புலவி தந்து புனல் அரங்கம் ஊர் என்று போயினாரே

#2076

மின் இலங்கு திருவுருவும் பெரிய தோளும் கரி முனிந்த கைத்தலமும் கண்ணும் வாயும்

தன் அலர்ந்த நறும் துழாய் மலரின் கீழே தாழ்ந்து இலங்கு மகரம் சேர் குழையும் காட்டி

என் நலனும் என் நிறையும் என் சிந்தையும் என் வளையும் கொண்டு என்னை ஆளும் கொண்டு

பொன் அலர்ந்த நறும் செருந்தி பொழிலினூடே புனல் அரங்கம் ஊர் என்று போயினாரே

#2077

தே மருவு பொழிலிடத்து மலர்ந்த போதை தேன்-அதனை வாய்மடுத்து உன் பெடையும் நீயும்

பூ மருவி இனிது அமர்ந்து பொறியில் ஆர்ந்த அறு கால சிறு வண்டே தொழுதேன் உன்னை

ஆ மருவி நிரை மேய்த்த அமரர் கோமான் அணி அழுந்தூர் நின்றானுக்கு இன்றே சென்று

நீ மருவி அஞ்சாதே நின்று ஓர் மாது நின் நயந்தாள் என்று இறையே இயம்பி காணே

#2078

செம் கால மட நாராய் இன்றே சென்று திருக்கண்ணபுரம் புக்கு என் செங்கண்மாலுக்கு

என் காதல் என் துணைவர்க்கு உரைத்தியாகில் இது ஒப்பது எமக்கு இன்பம் இல்லை நாளும்

பைம் கானம் ஈது எல்லாம் உனதே ஆக பழன மீன் கவர்ந்து உண்ண தருவன் தந்தால்

இங்கே வந்து இனிது இருந்து உன் பெடையும் நீயும் இரு நிலத்தில் இனிது இன்பம் எய்தலாமே

#2079

தென் இலங்கை அரண் சிதறி அவுணன் மாள சென்று உலகம் மூன்றினையும் திரிந்து ஓர் தேரால்

மன் இலங்கு பாரதத்தை மாள ஊர்ந்த வரை உருவின் மா களிற்றை தோழீ என்தன்

பொன் இலங்கு முலை குவட்டில் பூட்டிக்கொண்டு போகாமை வல்லேனாய் புலவி எய்தி

என்னில் அங்கம் எல்லாம் வந்து இன்பம் எய்த எப்பொழுதும் நினைந்து உருகி இருப்பன் நானே

#2080

அன்று ஆயர் குலமகளுக்கு அரையன் தன்னை அலை கடலை கடைந்து அடைத்த அம்மான் தன்னை

குன்றாத வலி அரக்கர் கோனை மாள கொடும் சிலைவாய் சரம் துரந்து குலம் களைந்து

வென்றானை குன்று எடுத்த தோளினானை விரி திரை நீர் விண்ணகரம் மருவி நாளும்

நின்றானை தண் குடந்தை கிடந்த மாலை நெடியானை அடி நாயேன் நினைந்திட்டேனே

#2081

மின்னு மா மழை தவழும் மேக வண்ணா விண்ணவர்-தம் பெருமானே அருளாய் என்று

அன்னமாய் முனிவரோடு அமரர் ஏத்த அரு மறையை வெளிப்படுத்த அம்மான்-தன்னை

மன்னு மா மணி மாட மங்கை வேந்தன் மான வேல் பரகாலன் கலியன் சொன்ன

பன்னிய நூல் தமிழ் மாலை வல்லார் தொல்லை பழவினையை முதல் அரிய வல்லார் தாமே

3. மூன்றாம் ஆயிரம்

பொய்கை ஆழ்வார் - முதல் திருவந்தாதி

#2082

வையம் தகளியா வார் கடலே நெய் ஆக

வெய்ய கதிரோன் விளக்கு ஆக செய்ய

சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினென் சொல் மாலை

இடர் ஆழி நீங்குகவே என்று

#2083

என்று கடல் கடைந்தது எ உலகம் நீர் ஏற்றது

ஒன்றும் அதனை உணரேன் நான் அன்று அது

அடைத்து உடைத்து கண்படுத்த ஆழி இது நீ

படைத்து இடந்து உண்டு உமிழ்ந்த பார்

#2084

பார் அளவும் ஓர் அடி வைத்து ஓர் அடியும் பார் உடுத்த

நீர் அளவும் செல்ல நிமிர்ந்ததே சூர் உருவின்

பேய் அளவு கண்ட பெருமான் அறிகிலேன்

நீ அளவு கண்ட நெறி

#2085

நெறி வாசல் தானேயாய் நின்றானை ஐந்து

பொறி வாசல் போர் கதவம் சாத்தி அறிவானாம்

ஆல மர நீழல் அறம் நால்வர்க்கு அன்று உரைத்த

ஆலம் அமர் கண்டத்து அரன்

#2086

அரன் நாரணன் நாமம் ஆன் விடை புள் ஊர்தி

உரை நூல் மறை உறையும் கோயில் வரை நீர்

கருமம் அழிப்பு அளிப்பு கையது வேல் நேமி

உருவம் எரி கார் மேனி ஒன்று

#2087

ஒன்றும் மறந்தறியேன் ஓத நீர் வண்ணனை நான்

இன்று மறப்பனோ ஏழைகாள் அன்று

கரு அரங்கத்துள் கிடந்து கைதொழுதேன் கண்டேன்

திருவரங்கம் மேயான் திசை

#2088

திசையும் திசை உறு தெய்வமும் தெய்வத்து

இசையும் கருமங்கள் எல்லாம் அசைவு இல் சீர்

கண்ணன் நெடுமால் கடல் கடைந்த கார் ஓத

வண்ணன் படைத்த மயக்கு

#2089

மயங்க வலம்புரி வாய் வைத்து வானத்து

இயங்கும் எறி கதிரோன்-தன்னை முயங்கு அமருள்

தேர் ஆழியால் மறைத்தது என் நீ திருமாலே

போர் ஆழி கையால் பொருது

#2090

பொரு கோட்டு ஓர் ஏனமாய் புக்கு இடந்தாய்க்கு அன்று உன்

ஒரு கோட்டின் மேல் கிடந்தது அன்றே விரி தோட்ட

சேவடியை நீட்டி திசை நடுங்க விண் துளங்க

மா வடிவின் நீ அளந்த மண்

#2091

மண்ணும் மலையும் மறி கடலும் மாருதமும்

விண்ணும் விழுங்கியது மெய் என்பர் எண்ணில்

அலகு அளவு கண்ட சீர் ஆழியாய்க்கு அன்று இ

உலகு அளவும் உண்டோ உன் வாய்

#2092

வாய் அவனை அல்லது வாழ்த்தாது கை உலகம்

தாயவனை அல்லது தாம் தொழா பேய் முலை நஞ்சு

ஊண் ஆக உண்டான் உருவொடு பேர் அல்லால்

காணா கண் கேளா செவி

#2093

செவி வாய் கண் மூக்கு உடல் என்று ஐம்புலனும் செம் தீ

புவி கால் நீர் விண் பூதம் ஐந்தும் அவியாத

ஞானமும் வேள்வியும் நல்லறமும் என்பரே

ஏனமாய் நின்றாற்கு இயல்வு

#2094

இயல்வு ஆக ஈன் துழாயான் அடிக்கே செல்ல

முயல்வார் இயல் அமரர் முன்னம் இயல்வு ஆக

நீதியால் ஓதி நியமங்களால் பரவ

ஆதியாய் நின்றார் அவர்

#2095

அவரவர் தாம்தாம் அறிந்தவாறு ஏத்தி

இவர்இவர் எம்பெருமான் என்று சுவர் மிசை

சார்த்தியும் வைத்தும் தொழுவர் உலகு அளந்த

மூர்த்தி உருவே முதல்

#2096

முதல் ஆவார் மூவரே அ மூவருள்ளும்

முதல் ஆவான் மூரி நீர் வண்ணன் முதல் ஆய

நல்லான் அருள் அல்லால் நாம நீர் வையகத்து

பல்லார் அருளும் பழுது

#2097

பழுதே பல பகலும் போயின என்று அஞ்சி

அழுதேன் அரவு அணை மேல் கண்டு தொழுதேன்

கடல் ஓதம் கால் அலைப்ப கண்வளரும் செம் கண்

அடல் ஓத வண்ணர் அடி

#2098

அடியும் படி கடப்ப தோள் திசை மேல் செல்ல

முடியும் விசும்பு அளந்தது என்பர் வடி உகிரால்

ஈர்ந்தான் இரணியனது ஆகம் இரும் சிறை புள்

ஊர்ந்தான் உலகு அளந்த நான்று

#2099

நான்ற முலைத்தலை நஞ்சு உண்டு உறி வெண்ணெய்

தோன்ற உண்டான் வென்றி சூழ் களிற்றை ஊன்றி

பொருது உடைவு கண்டானும் புள்வாய் கீண்டானும்

மருது இடை போய் மண் அளந்த மால்

#2100

மாலும் கரும் கடலே என் நோற்றாய் வையகம் உண்டு

ஆலின் இலை துயின்ற ஆழியான் கோல

கரு மேனி செங்கண்மால் கண்படையுள் என்றும்

திருமேனி நீ தீண்டப்பெற்று

#2101

பெற்றார் தளை கழல பேர்ந்து ஓர் குறள் உருவாய்

செற்றார் படி கடந்த செங்கண்மால் நல் தா

மரை மலர் சேவடியை வானவர் கை கூப்பி

நிரை மலர் கொண்டு ஏத்துவரால் நின்று

#2102

நின்று நிலம் அங்கை நீர் ஏற்று மூ அடியால்

சென்று திசை அளந்த செங்கண்மாற்கு என்றும்

படை ஆழி புள் ஊர்தி பாம்பு அணையான் பாதம்

அடை ஆழி நெஞ்சே அறி

#2103

அறியும் உலகு எல்லாம் யானேயும் அல்லேன்

பொறி கொள் சிறை உவணம் ஊர்ந்தாய் வெறி கமழும்

காம்பு ஏய் மென் தோளி கடை வெண்ணெய் உண்டாயை

தாம்பே கொண்டு ஆர்த்த தழும்பு

#2104

தழும்பு இருந்த சார்ங்க நாண் தோய்ந்தவாம் அங்கை

தழும்பு இருந்த தாள் சகடம் சாடி தழும்பு இருந்த

பூங்கோதையாள் வெருவ பொன் பெயரோன் மார்பு இடந்த

வீங்கு ஓத வண்ணர் விரல்

#2105

விரலோடு வாய் தோய்ந்த வெண்ணெய் கண்டு ஆய்ச்சி

உரலோடு உற பிணித்த நான்று குரல் ஓவாது

ஏங்கி நினைந்து அயலார் காண இருந்திலையே

ஓங்கு ஓத வண்ணா உரை

#2106

உரை மேற்கொண்டு என் உள்ளம் ஓவாது எப்போதும்

வரை மேல் மரகதமே போல திரை மேல்

கிடந்தானை கீண்டானை கேழலாய் பூமி

இடந்தானை ஏத்தி எழும்

#2107

எழுவார் விடைகொள்வார் ஈன் துழாயானை

வழுவா வகை நினைந்து வைகல் தொழுவார்

வினை சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்

மன சுடரை தூண்டும் மலை

#2108

மலையால் குடை கவித்து மா வாய் பிளந்து

சிலையால் மராமரம் ஏழ் செற்று கொலை யானை

போர் கோடு ஒசித்தனவும் பூம் குருந்தம் சாய்த்தனவும்

கார் கோடு பற்றியான் கை

#2109

கைய வலம்புரியும் நேமியும் கார் வண்ணத்து

ஐய மலர் மகள் நின் ஆகத்தாள் செய்ய

மறையான் நின் உந்தியான் மா மதிள் மூன்று எய்த

இறையான் நின் ஆகத்து இறை

#2110

இறையும் நிலனும் இரு விசும்பும் காற்றும்

அறை புனலும் செம் தீயும் ஆவான் பிறை மருப்பின்

பைம் கண் மால் யானை படு துயரம் காத்து அளித்த

செங்கண்மால் கண்டாய் தெளி

#2111

தெளிது ஆக உள்ளத்தை செந்நிறீஇ ஞானத்து

எளிது ஆக நன்கு உணர்வார் சிந்தை எளிது ஆக

தாய் நாடு கன்றே போல் தண் துழாயான் அடிக்கே

போய் நாடிக்கொள்ளும் புரிந்து

#2112

புரி ஒரு கை பற்றி ஓர் பொன் ஆழி ஏந்தி

அரி உருவும் ஆள் உருவும் ஆகி எரி உருவ

வண்ணத்தான் மார்பு இடந்த மால் அடியை அல்லால் மற்று

எண்ணத்தான் ஆமோ இமை

#2113

இமையாத கண்ணால் இருள் அகல நோக்கி

அமையா பொறி புலன்கள் ஐந்தும் நமையாமல்

ஆகத்து அணைப்பார் அணைவரே ஆயிர வாய்

நாகத்து அணையான் நகர்

#2114

நகரம் அருள்புரிந்து நான்முகற்கு பூ மேல்

பகர மறை பயந்த பண்பன் பெயரினையே

புந்தியால் சிந்தியாது ஓதி உரு எண்ணும்

அந்தியால் ஆம் பயன் அங்கு என்

#2115

என் ஒருவர் மெய் என்பர் ஏழ் உலகு உண்டு ஆலிலையில்

முன் ஒருவன் ஆய முகில் வண்ணா நின் உருகி

பேய் தாய் முலை தந்தாள் பேர்ந்திலளால் பேர் அமர் கண்

ஆய் தாய் முலை தந்த ஆறு

#2116

ஆறிய அன்பு இல் அடியார் தம் ஆர்வத்தால்

கூறிய குற்றமா கொள்ளல் நீ தேறி

நெடியோய் அடி அடைதற்கு அன்றே ஈரைந்து

முடியான் படைத்த முரண்

#2117

முரணை வலி தொலைதற்கு ஆம் என்றே முன்னம்

தரணி தனது ஆகத்தானே இரணியனை

புண் நிரந்த வள் உகிர் ஆர் பொன் ஆழி கையால் நீ

மண் இரந்து கொண்ட வகை

#2118

வகை அறு நுண் கேள்வி வாய்வார்கள் நாளும்

புகை விளக்கும் பூம் புனலும் ஏந்தி திசைதிசையின்

வேதியர்கள் சென்று இறைஞ்சும் வேங்கடமே வெண் சங்கம்

ஊதிய வாய் மால் உகந்த ஊர்

#2119

ஊரும் வரி அரவம் ஒண் குறவர் மால் யானை

பேர எறிந்த பெரு மணியை கார் உடைய

மின் என்று புற்று அடையும் வேங்கடமே மேல சுரர்

எம் என்னும் மாலது இடம்

#2120

இடந்தது பூமி எடுத்தது குன்றம்

கடந்தது கஞ்சனை முன் அஞ்ச கிடந்ததுவும்

நீர் ஓத மா கடலே நின்றதுவும் வேங்கடமே

பேர் ஓத வண்ணர் பெரிது

#2121

பெரு வில் பகழி குறவர் கை செம் தீ

வெருவி புனம் துறந்த வேழம் இரு விசும்பில்

மீன் வீழ கண்டு அஞ்சும் வேங்கடமே மேல் அசுரர்

கோன் வீழ கண்டு உகந்தான் குன்று

#2122

குன்று அனைய குற்றம் செயினும் குணம் கொள்ளும்

இன்று முதலாக என் நெஞ்சே என்றும்

புறன் உரையே ஆயினும் பொன் ஆழி கையான்

திறன் உரையே சிந்தித்திரு

#2123

திருமகளும் மண் மகளும் ஆய் மகளும் சேர்ந்தால்

திருமகட்கே தீர்ந்தவாறு என்-கொல் திருமகள் மேல்

பால் ஓதம் சிந்த பட நாக அணை கிடந்த

மால் ஓத வண்ணர் மனம்

#2124

மன மாசு தீரும் அருவினையும் சாரா

தனம் ஆய தானே கைகூடும் புனம் மேய

பூம் துழாயான் அடிக்கே போதொடு நீர் ஏந்தி

தம் தொழாநிற்பார் தமர்

#2125

தமர் உகந்தது எ உருவம் அ உருவம் தானே

தமர் உகந்தது எ பேர் மற்று அ பேர் தமர் உகந்து

எ வண்ணம் சிந்தித்து இமையாது இருப்பரே

அ வண்ணம் ஆழியான் ஆம்

#2126

ஆமே அமரர்க்கு அறிய அது நிற்க

நாமே அறிகிற்போம் நல் நெஞ்சே பூ மேய

மா தவத்தோன் தாள் பணிந்த வாள் அரக்கன் நீள் முடியை

பாதம் அத்தால் எண்ணினான் பண்பு

#2127

பண் புரிந்த நான்மறையோன் சென்னி பலி ஏற்ற

வெண் புரி நூல் மார்பன் வினை தீர புண் புரிந்த

ஆகத்தான் தாள் பணிவார் கண்டீர் அமரர் தம்

போகத்தால் பூமி ஆள்வார்

#2128

வாரி சுருக்கி மத களிறு ஐந்தினையும்

சேரி திரியாமல் செந்நிறீஇ கூரிய

மெய்ஞ்ஞானத்தால் உணர்வார் காண்பரே மேல் ஒரு நாள்

கை நாகம் காத்தான் கழல்

#2129

கழல் ஒன்று எடுத்து ஒரு கை சுற்றி ஓர் கை மேல்

சுழலும் சுராசுரர்கள் அஞ்ச அழலும்

செரு ஆழி ஏந்தினான் சேவடிக்கே செல்ல

மருவு ஆழி நெஞ்சே மகிழ்

#2130

மகிழ் அலகு ஒன்றே போல் மாறும் பல் யாக்கை

நெகிழ முயல்கிற்பார்க்கு அல்லால் முகிழ் விரிந்த

சோதி போல் தோன்றும் சுடர் பொன் நெடு முடி எம்

ஆதி காண்பார்க்கும் அரிது

#2131

அரிய புலன் ஐந்து அடக்கி ஆய் மலர் கொண்டு ஆர்வம்

புரிய பரிசினால் புல்கில் பெரியனாய்

மாற்றாது வீற்றிருந்த மாவலி-பால் வண் கை நீர்

ஏற்றானை காண்பது எளிது

#2132

எளிதில் இரண்டு அடியும் காண்பதற்கு என் உள்ளம்

தெளிய தெளிந்து ஒழியும் செவ்வே களியில்

பொருந்தாதவனை பொரல் உற்று அரியாய்

இருந்தான் திருநாமம் எண்

#2133

எண்மர் பதினொருவர் ஈராறுவர் ஓர் இருவர்

வண்ண மலர் ஏந்தி வைகலும் நண்ணி

ஒரு மாலையால் பரவி ஓவாது எப்போதும்

திருமாலை கைதொழுவர் சென்று

#2134

சென்றால் குடை ஆம் இருந்தால் சிங்காசனம் ஆம்

நின்றால் மரவடி ஆம் நீள் கடலுள் என்றும்

புணை ஆம் மணி விளக்கு ஆம் பூம் பட்டு ஆம் புல்கும்

அணை ஆம் திருமாற்கு அரவு

#2135

அரவம் அடல் வேழம் ஆன் குருந்தம் புள் வாய்

குரவை குடம் முலை மல் குன்றம் கரவு இன்றி

விட்டு இறுத்து மேய்த்து ஒசித்து கீண்டு கோத்து ஆடி உண்டு

அட்டு எடுத்த செங்கண்-அவன்

#2136

அவன் தமர் எ வினையர் ஆகிலும் எம் கோன்

அவன் தமரே என்று ஒழிவது அல்லால் நமன் தமரால்

ஆராயப்பட்டு அறியார் கண்டீர் அரவு அணை மேல்

பேர் ஆயற்கு ஆட்பட்டார் பேர்

#2137

பேரே வர பிதற்றல் அல்லால் என் பெம்மானை

ஆரே அறிவார் அது நிற்க நேரே

கடி கமலத்துள் இருந்தும் காண்கிலான் கண்ணன்

அடி கமலம் தன்னை அயன்

#2138

அயல் நின்ற வல்வினையை அஞ்சினேன் அஞ்சி

உய நின் திருவடியே சேர்வான் நயம் நின்ற

நல் மாலை கொண்டு நமோ நாரணா என்னும்

சொல் மாலை கற்றேன் தொழுது

#2139

தொழுது மலர் கொண்டு தூபம் கை ஏந்தி

எழுதும் எழு வாழி நெஞ்சே பழுது இன்றி

மந்திரங்கள் கற்பனவும் மால் அடியே கைதொழுவான்

அந்தரம் ஒன்று இல்லை அடை

#2140

அடைந்த அருவினையோடு அல்லல் நோய் பாவம்

மிடைந்தவை மீண்டு ஒழிய வேண்டில் நுடங்கு இடையை

முன் இலங்கை வைத்தான் முரண் அழிய முன் ஒரு நாள்

தன் வில் அங்கை வைத்தான் சரண்

#2141

சரணா மறை பயந்த தாமரையானோடு

மரண் ஆய மன் உயிர்கட்கு எல்லாம் அரண் ஆய

பேர் ஆழி கொண்ட பிரான் அன்றி மற்று அறியாது

ஓர் ஆழி சூழ்ந்த உலகு

#2142

உலகும் உலகு இறந்த ஊழியும் ஒண் கேழ்

விலகு கரும் கடலும் வெற்பும் உலகினில்

செம் தீயும் மாருதமும் வானும் திருமால்-தன்

புந்தியில் ஆய புணர்ப்பு

#2143

புணர் மருதின் ஊடு போய் பூம் குருந்தம் சாய்த்து

மணம் மருவ மால் விடை ஏழ் செற்று கணம் வெருவ

ஏழ் உலகும் தாயினவும் எண் திசையும் போயினவும்

சூழ் அரவ பொங்கு அணையான் தோள்

#2144

தோள் அவனை அல்லால் தொழா என் செவி இரண்டும்

கேள் அவனது இன் மொழியே கேட்டிருக்கும் நா நாளும்

கோள் நாக அணையான் குரை கழலே கூறுவதே

நாணாமை நள்ளேன் நயம்

#2145

நயவேன் பிறர் பொருளை நள்ளேன் கீழாரோடு

உயவேன் உயர்ந்தவரோடு அல்லால் வியவேன்

திருமாலை அல்லது தெய்வம் என்று ஏத்தேன்

வரும் ஆறு என் என் மேல் வினை

#2146

வினையால் அடர்ப்படார் வெம் நரகில் சேரார்

தினையேனும் தீக்கதி-கண் செல்லார் நினைதற்கு

அரியானை சேயானை ஆயிரம் பேர் செங்கண்

கரியானை கைதொழுத-கால்

#2147

காலை எழுந்து உலகம் கற்பனவும் கற்று உணர்ந்த

மேலை தலை மறையோர் வேட்பனவும் வேலை-கண்

ஓர் ஆழியான் அடியே ஓதுவதும் ஓர்ப்பனவும்

பேர் ஆழி கொண்டான் பெயர்

#2148

பெயரும் கரும் கடலே நோக்கும் ஆறு ஒண் பூ

உயரும் கதிரவனே நோக்கும் உயிரும்

தருமனையே நோக்கும் ஒண் தாமரையாள் கேள்வன்

ஒருவனையே நோக்கும் உணர்வு

#2149

உணர்வார் ஆர் உன் பெருமை ஊழி-தோறு ஊழி

உணர்வார் ஆர் உன் உருவம் தன்னை உணர்வார் ஆர்

விண்ணகத்தாய் மண்ணகத்தாய் வேங்கடத்தாய் நால் வேத

பண்ணகத்தாய் நீ கிடந்த பால்

#2150

பாலன் தனது உருவாய் ஏழ் உலகு உண்டு ஆலிலையின்

மேல் அன்று நீ வளர்ந்த மெய் என்பர் ஆல் அன்று

வேலை நீர் உள்ளதோ விண்ணதோ மண்ணதோ

சோலை சூழ் குன்று எடுத்தாய் சொல்லு

#2151

சொல்லுந்தனையும் தொழு-மின் விழும் உடம்பு

செல்லுந்தனையும் திருமாலை நல் இதழ்

தாமத்தால் வேள்வியால் தந்திரத்தால் மந்திரத்தால்

நாமத்தால் ஏத்துதிரேல் நன்று

#2152

நன்று பிணி மூப்பு கையகற்றி நான்கு ஊழி

நின்று நிலம் முழுதும் ஆண்டாலும் என்றும்

விடல் ஆழி நெஞ்சமே வேண்டினேன் கண்டாய்

அடல் ஆழி கொண்டான்-மாட்டு அன்பு

#2153

அன்பு ஆழியானை அணுகு என்னும் நா அவன்-தன்

பண்பு ஆழி தோள் பரவி ஏத்து என்னும் முன்பு ஊழி

காணானை காண் என்னும் கண் செவி கேள் என்னும்

பூண் ஆரம் பூண்டான் புகழ்

#2154

புகழ்வாய் பழிப்பாய் நீ பூம் துழாயானை

இகழ்வாய் கருதுவாய் நெஞ்சே திகழ் நீர்

கடலும் மலையும் இரு விசும்பும் காற்றும்

உடலும் உயிரும் ஏற்றான்

#2155

ஏற்றான் புள் ஊர்ந்தான் எயில் எரித்தான் மார்வு இடந்தான்

நீற்றான் நிழல் மணி வண்ணத்தான் கூற்று ஒரு-பால்

மங்கையான் பூ மகளான் வார் சடையான் நீள் முடியான்

கங்கையான் நீள் கழலான் காப்பு

#2156

காப்பு உன்னை உன்ன கழியும் அருவினைகள்

ஆப்பு உன்னை உன்ன அவிழ்ந்து ஒழியும் மூப்பு உன்னை

சிந்திப்பார்க்கு இல்லை திருமாலே நின் அடியை

வந்திப்பார் காண்பர் வழி

#2157

வழிநின்று நின்னை தொழுவார் வழுவா

மொழி நின்ற மூர்த்தியரே ஆவர் பழுது ஒன்றும்

வாராத வண்ணமே விண் கொடுக்கும் மண் அளந்த

சீரான் திருவேங்கடம்

#2158

வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத

பூம் கிடங்கின் நீள் கோவல் பொன் நகரும் நான்கு இடத்தும்

நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே

என்றால் கெடுமாம் இடர்

#2159

இடர் ஆர் படுவார் எழு நெஞ்சே வேழம்

தொடர் வான் கொடு முதலை சூழ்ந்த படம் உடைய

பை நாக பள்ளியான் பாதமே கைதொழுதும்

கொய் நாக பூம் போது கொண்டு

#2160

கொண்டானை அல்லால் கொடுத்தாரை யார் பழிப்பார்

மண் தா என இரந்து மாவலியை ஒண் தாரை

நீர் அங்கை தோய நிமிர்ந்திலையே நீள் விசும்பில்

ஆரம் கை தோய அடுத்து

#2161

அடுத்த கடும் பகைஞற்கு ஆற்றேன் என்று ஓடி

படுத்த பெரும் பாழி சூழ்ந்த விடத்து அரவை

வல்லாளன் கைக்கொடுத்த மா மேனி மாயவனுக்கு

அல்லாதும் ஆவரோ ஆள்

#2162

ஆள் அமர் வென்றி அடு களத்துள் அந்நான்று

வாள் அமர் வேண்டி வரை நட்டு நீள் அரவை

சுற்றி கடைந்தான் பெயர் அன்றே தொல் நரகை

பற்றி கடத்தும் படை

#2163

படை ஆரும் வாள் கண்ணார் பாரசி நாள் பைம் பூம்

தொடையலோடு ஏந்திய தூபம் இடை இடையில்

மீன் மாய மாசூணும் வேங்கடமே மேல் ஒரு நாள்

மான் மாய எய்தான் வரை

#2164

வரை குடை தோள் காம்பு ஆக ஆநிரை காத்து ஆயர்

நிரை விடை ஏழ் செற்ற ஆறு என்னே உரவு உடைய

நீர் ஆழியுள் கிடந்து நேர் ஆம் நிசாசரர் மேல்

பேர் ஆழி கொண்ட பிரான்

#2165

பிரான் உன் பெருமை பிறர் ஆர் அறிவார்

உராஅய் உலகு அளந்த நான்று வராகத்து

எயிற்று அளவு போதா ஆறு என்-கொலோ எந்தை

அடிக்கு அளவு போந்த படி

#2166

படி கண்டு அறிதியே பாம்பு அணையினான் புள்

கொடி கண்டு அறிதியே கூறாய் வடிவில்

பொறி ஐந்தும் உள் அடக்கி போதொடு நீர் ஏந்தி

நெறி நின்ற நெஞ்சமே நீ

#2167

நீயும் திருமகளும் நின்றாயால் குன்று எடுத்து

பாயும் பனி மறுத்த பண்பாளா வாசல்

கடை கழியா உள் புகா காமர் பூம் கோவல்

இடைகழியே பற்றி இனி

#2168

இனி யார் புகுவார் எழு நரக வாசல்

முனியாது மூரி தாள் கோ-மின் கனி சாய

கன்று எறிந்த தோளான் கனை கழலே காண்பதற்கு

நன்கு அறிந்த நாவலம் சூழ் நாடு

#2169

நாடிலும் நின் அடியே நாடுவன் நாள்-தோறும்

பாடிலும் நின் புகழே பாடுவன் சூடிலும்

பொன் ஆழி ஏந்தினான் பொன் அடியே சூடுவேற்கு

என் ஆகில் என்னே எனக்கு

#2170

எனக்கு ஆவார் ஆர் ஒருவரே எம்பெருமான்-

தனக்கு ஆவான் தானே மற்று அல்லால் புன காயாம்

பூ மேனி காண பொதி அவிழும் பூவை பூ

மா மேனி காட்டும் வரம்

#2171

வரத்தால் வலி நினைந்து மாதவ நின் பாதம்

சிரத்தால் வணங்கானாம் என்றே உரத்தினால்

ஈர் அரியாய் நேர் வலியோன் ஆய இரணியனை

ஓர் அரியாய் நீ இடந்தது ஊன்

#2172

ஊன குரம்பையின் உள் புக்கு இருள் நீக்கி

ஞான சுடர் கொளீஇ நாள்-தோறும் ஏனத்து

உருவாய் உலகு இடந்த ஊழியான் பாதம்

மருவாதார்க்கு உண்டாமோ வான்

#2173

வான் ஆகி தீயாய் மறி கடலாய் மாருதமாய்

தேன் ஆகி பால் ஆம் திருமாலே ஆன் ஆய்ச்சி

வெண்ணெய் விழுங்க நிறையுமே முன் ஒரு நாள்

மண்ணை உமிழ்ந்த வயிறு

#2174

வயிறு அழல வாள் உருவி வந்தானை அஞ்ச

எயிறு இலக வாய் மடுத்தது என் நீ பொறி உகிரால்

பூ வடிவை ஈடு அழித்த பொன் ஆழி கையா நின்

சேவடி-மேல் ஈடு அழிய செற்று

#2175

செற்று எழுந்து தீவிழித்து சென்ற இந்த ஏழ் உலகும்

மற்று இவை ஆ என்று வாய் அங்காந்து முற்றும்

மறையவற்கு காட்டிய மாயவனை அல்லால்

இறையேனும் ஏத்தாது என் நா

#2176

நா வாயில் உண்டே நமோ நாரணா என்று

ஓவாது உரைக்கும் உரை உண்டே மூவாத

மா கதி-கண் செல்லும் வகை உண்டே என் ஒருவர்

தீக்கதி-கண் செல்லும் திறம்

#2177

திறம்பாது என் நெஞ்சமே செங்கண்மால் கண்டாய்

அறம் பாவம் என்று இரண்டும் ஆவான் புறம் தான் இ

மண் தான் மறி கடல் தான் மாருதம் தான் வான் தானே

கண்டாய் கடைக்கண் பிடி

#2178

பிடி சேர் களிறு அளித்த பேராளா உன்தன்

அடி சேர்ந்து அருள்பெற்றாள் அன்றே பொடி சேர்

அனற்கு அங்கை ஏற்றான் அவிர் சடை மேல் பாய்ந்த

புனல் கங்கை என்னும் பேர் பொன்

#2179

பொன் திகழும் மேனி புரி சடை அம் புண்ணியனும்

நின்று உலகம் தாய நெடுமாலும் என்றும்

இருவர் அங்கத்தால் திரிவரேலும் ஒருவன்

ஒருவன் அங்கத்து என்றும் உளன்

#2180

உளன் கண்டாய் நல் நெஞ்சே உத்தமன் என்றும்

உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து உளன் கண்டாய்

வெள்ளத்தின் உள்ளானும் வேங்கடத்து மேயானும்

உள்ளத்தின் உள்ளான் என்று ஓர்

#2181

ஓர் அடியும் சாடு உதைத்த ஒண் மலர் சேவடியும்

ஈர் அடியும் காணலாம் என் நெஞ்சே ஓர் அடியில்

தாயவனை கேசவனை தண் துழாய் மாலை சேர்

மாயவனையே மனத்து வை

பூதத்தாழ்வார் - இரண்டாம் திருவந்தாதி

#2182

அன்பே தகளியா ஆர்வமே நெய் ஆக

இன்பு உருகு சிந்தை இடு திரியா நன்பு உருகி

ஞான சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு

ஞான தமிழ் புரிந்த நான்

#2183

ஞானத்தால் நன்கு உணர்ந்து நாரணன்-தன் நாமங்கள்

தானத்தால் மற்று அவன் பேர் சாற்றினால் வானத்து

அணி அமரர் ஆக்குவிக்கும் அஃது அன்றே நங்கள்

பணி அமரர் கோமான் பரிசு

#2184

பரிசு நறு மலரால் பாற்கடலான் பாதம்

புரிவார் புகப்பெறுவர் போலாம் புரிவார்கள்

தொல் அமரர் கேள்வி துலங்கு ஒளி சேர் தோற்றத்து

நல் அமரர் கோமான் நகர்

#2185

நகர் இழைத்து நித்திலத்து நாள்மலர் கொண்டு ஆங்கே

திகழும் மணி வயிரம் சேர்த்து நிகர் இல்லா

பைம் கமலம் ஏந்தி பணிந்தேன் பனி மலராள்

அங்கம் வலம் கொண்டான் அடி

#2186

அடி மூன்றில் இ உலகம் அன்று அளந்தாய் போலும்

அடி மூன்று இரந்து அவனி கொண்டாய் படிநின்ற

நீர் ஓத மேனி நெடுமாலே நின் அடியை

யார் ஓத வல்லார் அறிந்து

#2187

அறிந்து ஐந்தும் உள் அடக்கி ஆய் மலர் கொண்டு ஆர்வம்

செறிந்த மனத்தராய் செவ்வே அறிந்து அவன்-தன்

பேர் ஓதி ஏத்தும் பெருந்தவத்தோர் காண்பரே

கார் ஓத வண்ணன் கழல்

#2188

கழல் எடுத்து வாய் மடித்து கண் சுழன்று மாற்றார்

அழல் எடுத்த சிந்தையராய் அஞ்ச தழல் எடுத்த

போர் ஆழி ஏந்தினான் பொன் மலர் சேவடியை

ஓர் ஆழி நெஞ்சே உகந்து

#2189

உகந்து உன்னை வாங்கி ஒளி நிறம் கொள் கொங்கை

அகம் குளிர உண் என்றாள் ஆவி உகந்து

முலை உண்பாய் போலே முனிந்து உண்டாய் நீயும்

அலை பண்பால் ஆனமையால் அன்று

#2190

அன்று அது கண்டு அஞ்சாத ஆய்ச்சி உனக்கு இரங்கி

நின்று முலை தந்த இ நீர்மைக்கு அன்று

வரன்முறையால் நீ அளந்த மா கடல் சூழ் ஞாலம்

பெரு முறையால் எய்துமோ பேர்த்து

#2191

பேர்த்தனை மா சகடம் பிள்ளையாய் மண் இரந்து

காத்தனை பல் உயிரும் காவலனே ஏத்திய

நா உடையேன் பூ உடையேன் நின் உள்ளி நின்றமையால்

கா அடியேன் பட்ட கடை

#2192

கடை நின்று அமரர் கழல் தொழுது நாளும்

இடைநின்ற இன்பத்தர் ஆவர் புடைநின்ற

நீர் ஓத மேனி நெடுமாலே நின் அடியை

ஆர் ஓத வல்லார் அவர்

#2193

அவர் இவர் என்று இல்லை அரவு அணையான் பாதம்

எவர் வணங்கி ஏத்தாதார் எண்ணில் பவரும்

செழும் கதிரோன் ஒண் மலரோன் கண் நுதலோன் அன்றே

தொழும் தகையார் நாளும் தொடர்ந்து

#2194

தொடர் எடுத்த மால் யானை சூழ் கயம் புக்கு அஞ்சி

படர் எடுத்த பைம் கமலம் கொண்டு அன்று இடர் அடுக்க

ஆழியான் பாதம் பணிந்து அன்றே வானவர் கோன்

பாழி தான் எய்திற்று பண்டு

#2195

பண்டி பெரும் பதியை ஆக்கி பழி பாவம்

கொண்டு இங்கு வாழ்வாரை கூறாதே எண் திசையும்

பேர்த்த கரம் நான்கு உடையான் பேர் ஓதி பேதைகாள்

தீர்த்தகரர் ஆமின் திரிந்து

#2196

திரிந்தது வெம் சமத்து தேர் கடவி அன்று

பிரிந்தது சீதையை மான் பின் போய் புரிந்ததுவும்

கண் பள்ளிகொள்ள அழகியதே நாகத்தின்

தண் பள்ளி கொள்வான் தனக்கு

#2197

தனக்கு அடிமை பட்டது தான் அறியானேலும்

மனத்து அடைய வைப்பது ஆம் மாலை வன திடரை

ஏரி ஆம் வண்ணம் இயற்றும் இது அல்லால்

மாரி யார் பெய்கிற்பார் மற்று

#2198

மற்று ஆர் இயல் ஆவார் வானவர் கோன் மா மலரோன்

சுற்றும் வணங்கும் தொழிலானை ஒற்றை

பிறை இருந்த செம் சடையான் பின் சென்று மாலை

குறை இரந்து தான் முடித்தான் கொண்டு

#2199

கொண்டது உலகம் குறள் உருவாய் கோளரியாய்

ஒண் திறலோன் மார்வத்து உகிர் வைத்தது உண்டதுவும்

தான் கடந்த ஏழ் உலகே தாமரை கண் மால் ஒரு நாள்

வான் கடந்தான் செய்த வழக்கு

#2200

வழக்கு அன்று கண்டாய் வலி சகடம் செற்றாய்

வழக்கு என்று நீ மதிக்க வேண்டா குழ கன்று

தீ விளவின் காய்க்கு எறிந்த தீமை திருமாலே

பார் விளங்க செய்தாய் பழி

#2201

பழி பாவம் கையகற்றி பல்காலும் நின்னை

வழிவாழ்வார் வாழ்வராம்-மாதோ வழு இன்றி

நாரணன்-தன் நாமங்கள் நன்கு உணர்ந்து நன்கு ஏத்தும்

காரணங்கள் தாம் உடையார் தாம்

#2202

தாம் உளரே தம் உள்ளம் உள் உளதே தாமரையின்

பூ உளதே ஏத்தும் பொழுது உண்டே வாமன்

திரு மருவு தாள் மருவு சென்னியரே செவ்வே

அரு நரகம் சேர்வது அரிது

#2203

அரியது எளிது ஆகும் ஆற்றலால் மாற்றி

பெருக முயல்வாரை பெற்றால் கரியது ஓர்

வெண் கோட்டு மால் யானை வென்றி முடித்தன்றே

தண் கோட்டு மா மலரால் தாழ்ந்து

#2204

தாழ்ந்து வரம் கொண்டு தக்க வகைகளால்

வாழ்ந்து கழிவாரை வாழ்விக்கும் தாழ்ந்த

விளம் கனிக்கு கன்று எறிந்து வேற்று உருவாய் ஞாலம்

அளந்து அடி கீழ் கொண்ட அவன்

#2205

அவன் கண்டாய் நல் நெஞ்சே ஆர் அருளும் கேடும்

அவன் கண்டாய் ஐம்புலனாய் நின்றான் அவன் கண்டாய்

காற்று தீ நீர் வான் கரு வரை மண் கார் ஓத

சீற்ற தீ ஆவானும் சென்று

#2206

சென்றது இலங்கை மேல் செவ்வே தன் சீற்றத்தால்

கொன்றது இராவணனை கூறும்-கால் நின்றதுவும்

வேய் ஓங்கு தண் சாரல் வேங்கடமே விண்ணவர்-தம்

வாய் ஓங்கு தொல் புகழான் வந்து

#2207

வந்தித்து அவனை வழிநின்ற ஐம்பூதம்

ஐந்தும் அகத்து அடக்கி ஆர்வமாய் உந்தி

படி அமரர் வேலையான் பண்டு அமரர்க்கு ஈந்த

படி அமரர் வாழும் பதி

#2208

பதி அமைந்து நாடி பருத்து எழுந்த சிந்தை

மதி உரிஞ்சி வான் முகடு நோக்கி கதி மிகுத்து அம்

கோல் தேடி ஓடும் கொழுந்ததே போன்றதே

மால் தேடி ஓடும் மனம்

#2209

மனத்து உள்ளான் வேங்கடத்தான் மா கடலான் மற்றும்

நினைப்பு அரிய நீள் அரங்கத்து உள்ளான் எனை பலரும்

தேவாதிதேவன் எனப்படுவான் முன் ஒரு நாள்

மா வாய் பிளந்த மகன்

#2210

மகனாக கொண்டு எடுத்தாள் மாண்பு ஆய கொங்கை

அகன் ஆர உண்பன் என்று உண்டு மகனை தாய்

தேறாத வண்ணம் திருத்தினாய் தென் இலங்கை

நீறு ஆக எய்து அழித்தாய் நீ

#2211

நீ அன்று உலகு அளந்தாய் நீண்ட திருமாலே

நீ அன்று உலகு இடந்தாய் என்பரால் நீ அன்று

கார் ஓதம் முன் கடைந்து பின் அடைத்தாய் மா கடலை

பேர் ஓத மேனி பிரான்

#2212

பிரான் என்றும் நாளும் பெரும் புலரி என்றும்

குரா நல் செழும் போது கொண்டு வராகத்து

அணி உருவன் பாதம் பணியும் அவர் கண்டீர்

மணி உருவம் காண்பார் மகிழ்ந்து

#2213

மகிழ்ந்தது சிந்தை திருமாலே மற்றும்

மகிழ்ந்தது உன் பாதமே போற்றி மகிழ்ந்தது

அழல் ஆழி சங்கம் அவை பாடி ஆடும்

தொழில் ஆகம் சூழ்ந்து துணிந்து

#2214

துணிந்தது சிந்தை துழாய் அலங்கல் அங்கம்

அணிந்தவன் பேர் உள்ளத்து பல்கால் பணிந்ததுவும்

வேய் பிறங்கு சாரல் விறல் வேங்கடவனையே

வாய் திறங்கள் சொல்லும் வகை

#2215

வகையால் அவனி இரந்து அளந்தாய் பாதம்

புகையால் நறு மலரால் முன்னே மிக வாய்ந்த

அன்பு ஆக்கி ஏத்தி அடிமைப்பட்டேன் உனக்கு

என் பாக்கியத்தால் இனி

#2216

இனிது என்பர் காமம் அதனிலும் ஆற்ற

இனிது என்பர் தண்ணீரும் எந்தாய் இனிது என்று

காமம் நீர் வேளாது நின் பெருமை வேட்பரேல்

சேம நீர் ஆகும் சிறிது

#2217

சிறியார் பெருமை சிறிதின்-கண் எய்தும்

அறியாரும் தாம் அறியார் ஆவர் அறியாமை

மண் கொண்டு மண் உண்டு மண் உமிழ்ந்த மாயன் என்று

எண் கொண்டு என் நெஞ்சே இரு

#2218

இரும் தண் கமலத்து இரு மலரின் உள்ளே

திருந்து திசைமுகனை தந்தாய் பொருந்திய நின்

பாதங்கள் ஏத்தி பணியாவேல் பல் பிறப்பும்

ஏதங்கள் எல்லாம் எமக்கு

#2219

எமக்கு என்று இரு நிதியம் ஏமாந்து இராதே

தமக்கு என்றும் சார்வம் அறிந்து நமக்கு என்றும்

மாதவனே என்னும் மனம் படைத்து மற்று அவன் பேர்

ஓதுவதே நாவினால் ஓத்து

#2220

ஓத்தின் பொருள் முடிவும் இத்தனையே உத்தமன் பேர்

ஏத்தும் திறம் அறி-மின் ஏழைகாள் ஓத்து அதனை

வல்லீரேல் நன்று அதனை மாட்டீரேல் மாதவன் பேர்

சொல்லுவதே ஓத்தின் சுருக்கு

#2221

சுருக்காக வாங்கி சுலாவி நின்று ஐயார்

நெருக்கா முன் நீர் நினை-மின் கண்டீர் திரு பொலிந்த

ஆகத்தான் பாதம் அறிந்தும் அறியாத

போகத்தால் இல்லை பொருள்

#2222

பொருளால் அமர் உலகம் புக்கு இயலல் ஆகாது

அருளால் அறம் அருளும் அன்றே அருளாலே

மா மறையோர்க்கு ஈந்த மணி வண்ணன் பாதமே

நீ மறவேல் நெஞ்சே நினை

#2223

நினைப்பன் திருமாலை நீண்ட தோள் காண

நினைப்பார் பிறப்பு ஒன்றும் நேரார் மனை-பால்

பிறந்தார் பிறந்து எய்தும் பேரின்பம் எல்லாம்

துறந்தார் தொழுதார் அ தோள்

#2224

தோள் இரண்டு எட்டு ஏழும் மூன்றும் முடி அனைத்தும்

தாள் இரண்டும் வீழ சரம் துரந்தான் தாள் இரண்டும்

ஆர் தொழுவார் பாதம் அவை தொழுவது அன்றே என்

சீர் கெழு தோள் செய்யும் சிறப்பு

#2225

சிறந்தார்க்கு எழு துணையாம் செங்கண்மால் நாமம்

மறந்தாரை மானிடமா வையேன் அறம் தாங்கும்

மாதவனே என்னும் மனம் படைத்து மற்று அவன் பேர்

ஓதுவதே நாவினால் உள்ளு

#2226

உளது என்று இறுமாவார் உண்டு இல்லை என்று

தளர்தல் அதன் அருகும் சாரார் அளவு அரிய

வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடி தோயும்

பாதத்தான் பாதம் பயின்று

#2227

பயின்றது அரங்கம் திருக்கோட்டி பல் நாள்

பயின்றதுவும் வேங்கடமே பல் நாள் பயின்றது

அணி திகழும் சோலை அணி நீர்மலையே

மணி திகழும் வண் தடக்கை மால்

#2228

மாலை அரி உருவன் பாத மலர் அணிந்து

காலை தொழுது எழு-மின் கைகோலி ஞாலம்

அளந்து இடந்து உண்டு உமிழ்ந்த அண்ணலை மற்று அல்லால்

உளம் கிடந்த ஆற்றால் உணர்ந்து

#2229

உணர்ந்தாய் மறை நான்கும் ஓதினாய் நீதி

மணந்தாய் மலர் மகள் தோள் மாலே மணந்தாய் போய்

வேய் இரும் சாரல் வியல் இரு ஞாலம் சூழ்

மா இரும் சோலை மலை

#2230

மலை ஏழும் மாநிலங்கள் ஏழும் அதிர

குலை சூழ் குரை கடல்கள் ஏழும் முலை சூழ்ந்த

நஞ்சு உரத்து பெண்ணை நவின்று உண்ட நாவன் என்று

அஞ்சாது என் நெஞ்சே அழை

#2231

அழைப்பன் திருமாலை ஆங்கு அவர்கள் சொன்ன

பிழைப்பு இல் பெரும் பெயரே பேசி இழைப்பு அரிய

ஆயவனே யாதவனே என்றவனை யார் முகப்பும்

மாயவனே என்று மதித்து

#2232

மதி கண்டாய் நெஞ்சே மணி வண்ணன் பாதம்

மதி கண்டாய் மற்று அவன் பேர்-தன்னை மதி கண்டாய்

பேர் ஆழிநின்று பெயர்ந்து கடல் கடைந்த

நீர் ஆழி வண்ணன் நிறம்

#2233

நிறம் கரியன் செய்ய நெடு மலராள் மார்வன்

அறம் பெரியன் ஆர் அது அறிவார் மறம் புரிந்த

வாள் அரக்கன் போல்வானை வானவர் கோன் தானத்து

நீள் இருக்கைக்கு உய்த்தான் நெறி

#2234

நெறியார் குழல் கற்றை முன் நின்று பின் தாழ்ந்து

அறியாது இளம் கிரி என்று எண்ணி பிரியாது

பூம் கொடிக்கள் வைகும் பொரு புனல் குன்று என்னும்

வேங்கடமே யாம் விரும்பும் வெற்பு

#2235

வெற்பு என்று இரும் சோலை வேங்கடம் என்று இ இரண்டும்

நிற்பு என்று நீ மதிக்கும் நீர்மை போல் நிற்பு என்று

உளம் கோயில் உள்ளம் வைத்து உள்ளினேன் வெள்ளத்து

இளம் கோயில் கைவிடேல் என்று

#2236

என்றும் மறந்தறியேன் ஏழ் பிறப்பும் எப்பொழுதும்

நின்று நினைப்பு ஒழியா நீர்மையால் வென்றி

அடல் ஆழி கொண்ட அறிவனே இன்ப

கடல் ஆழி நீ அருளி காண்

#2237

காண கழி காதல் கைமிக்கு காட்டினால்

நாணப்படும் என்றால் நாணுமே பேணி

கரு மாலை பொன் மேனி காட்டா முன் காட்டும்

திருமாலை நங்கள் திரு

#2238

திருமங்கை நின்றருளும் தெய்வம் நா வாழ்த்தும்

கருமம் கடைப்பிடி-மின் கண்டீர் உரிமையால்

ஏத்தினோம் பாதம் இரும் தடக்கை எந்தை பேர்

நால் திசையும் கேட்டீரே நாம்

#2239

நாம் பெற்ற நன்மையும் நா மங்கை நல் நெஞ்சத்து

ஓம்பி இருந்து எம்மை ஓதுவித்து வேம்பின்

பொருள் நீர்மை ஆயினும் பொன் ஆழி பாடு என்று

அருள் நீர்மை தந்த அருள்

#2240

அருள் புரிந்த சிந்தை அடியார் மேல் வைத்து

பொருள் தெரிந்து காண்குற்ற அப்போது இருள் திரிந்து

நோக்கினேன் நோக்கி நினைந்தேன் அது ஒண் கமலம்

ஓக்கினேன் என்னையும் அங்கு ஓர்ந்து

#2241

ஓர் உருவன் அல்லை ஒளி உருவம் நின் உருவம்

ஈர் உருவன் என்பர் இரு நிலத்தோர் ஓர் உருவம்

ஆதியாம் வண்ணம் அறிந்தார் அவர் கண்டீர்

நீதியால் மண் காப்பார் நின்று

#2242

நின்றது ஓர் பாதம் நிலம் புதைப்ப நீண்ட தோள்

சென்று அளந்தது என்பர் திசை எல்லாம் அன்று

கரு மாணியாய் இரந்த கள்வனே உன்னை

பிரமாணித்தார் பெற்ற பேறு

#2243

பேறு ஒன்றும் முன் அறியேன் பெற்று அறியேன் பேதைமையால்

மாறு என்று சொல்லி வணங்கினேன் ஏறின்

பெருத்த எருத்தம் கோடு ஒசிய பெண் நசையின் பின் போய்

எருத்து இறுத்த நல் ஆயர் ஏறு

#2244

ஏறு ஏழும் வென்று அடர்த்த எந்தை எரி உருவத்து

ஏறு ஏறி பட்ட இடு சாபம் பாறு ஏறி

உண்ட தலை வாய் நிறைய கோட்டு அம் கை ஒண் குருதி

கண்ட பொருள் சொல்லின் கதை

#2245

கதையின் பெரும் பொருளும் கண்ணா நின் பேரே

இதயம் இருந்தவையே ஏத்தில் கதையின்

திருமொழியாய் நின்ற திருமாலே உன்னை

பரு மொழியால் காண பணி

#2246

பணிந்தேன் திருமேனி பைம் கமலம் கையால்

அணிந்தேன் உன் சேவடி மேல் அன்பாய் துணிந்தேன்

புரிந்து ஏத்தி உன்னை புகலிடம் பார்த்து ஆங்கே

இருந்து ஏத்தி வாழும் இது

#2247

இது கண்டாய் நல் நெஞ்சே இ பிறவி ஆவது

இது கண்டாய் எல்லாம் நாம் உற்றது இது கண்டாய்

நாரணன் பேர் ஓதி நரகத்து அருகு அணையா

காரணமும் வல்லையேல் காண்

#2248

கண்டேன் திருமேனி யான் கனவில் ஆங்கு அவன் கை

கண்டேன் கனலும் சுடர் ஆழி கண்டேன்

உறு நோய் வினை இரண்டும் ஓட்டுவித்து பின்னும்

மறு நோய் செறுவான் வலி

#2249

வலி மிக்க வாள் எயிற்று வாள் அவுணர் மாள

வலி மிக்க வாள் வரை மத்து ஆக வலி மிக்க

வாள் நாகம் சுற்றி மறுக கடல் கடைந்தான்

கோள் நாகம் கொம்பு ஒசித்த கோ

#2250

கோ ஆகி மாநிலம் காத்து நம் கண் முகப்பே

மா ஏகி செல்கின்ற மன்னவரும் பூ மேவும்

செங்கமல நாபியான் சேவடிக்கே ஏழ் பிறப்பும்

தண் கமலம் ஏய்ந்தார் தமர்

#2251

தமர் உள்ளம் தஞ்சை தலை அரங்கம் தண்கால்

தமர் உள்ளும் தண் பொருப்பு வேலை தமர் உள்ளும்

மாமல்லை கோவல் மதிள் குடந்தை என்பரே

ஏ வல்ல எந்தைக்கு இடம்

#2252

இடம் கை வலம்புரி நின்று ஆர்ப்ப எரி கான்று

அடங்கார் ஒடுங்குவித்தது ஆழி விடம் காலும்

தீ வாய் அரவு அணை மேல் தோன்றல் திசை அளப்பான்

பூ ஆர் அடி நிமிர்த்த-போது

#2253

போது அறிந்து வானரங்கள் பூம் சுனை புக்கு ஆங்கு அலர்ந்த

போது அரிந்துகொண்டு ஏத்தும் போது உள்ளம் போதும்

மணி வேங்கடவன் மலர் அடிக்கே செல்ல

அணி வேங்கடவன் பேர் ஆய்ந்து

#2254

ஆய்ந்து உரைப்பன் ஆயிரம் பேர் ஆதி நடு அந்திவாய்

வாய்ந்த மலர் தூவி வைகலும் ஏய்ந்த

பிறை கோட்டு செம் கண் கரி விடுத்த பெம்மான்

இறைக்கு ஆட்பட துணிந்த யான்

#2255

யானே தவம் செய்தேன் ஏழ் பிறப்பும் எப்பொழுதும்

யானே தவம் உடையேன் எம்பெருமான் யானே

இரும் தமிழ் நல் மாலை இணை அடிக்கே சொன்னேன்

பெரும் தமிழன் நல்லேன் பெருகு

#2256

பெருகு மத வேழம் மா பிடிக்கு முன் நின்று

இரு கண் இள மூங்கில் வாங்கி அருகு இருந்த

தேன் கலந்து நீட்டும் திருவேங்கடம் கண்டீர்

வான் கலந்த வண்ணன் வரை

#2257

வரை சந்தன குழம்பும் வான் கலனும் பட்டும்

விரை பொலிந்த வெண் மல்லிகையும் நிரைத்துக்கொண்டு

ஆதி-கண் நின்ற அறிவன் அடி இணையே

ஓதி பணிவது உறும்

#2258

உறும் கண்டாய் நல் நெஞ்சே உத்தமன் நல் பாதம்

உறும் கண்டாய் ஒண் கமலம் தன்னால் உறும் கண்டாய்

ஏத்தி பணிந்து அவன் பேர் ஈரைஞ்ஞூறு எப்பொழுதும்

சாத்தி உரைத்தல் தவம்

#2259

தவம் செய்து நான்முகனே பெற்றான் தரணி

நிவந்து அளப்ப நீட்டிய பொன் பாதம் சிவந்த தன்

கை அனைத்தும் ஆர கழுவினான் கங்கை நீர்

பெய்து அனைத்து பேர் மொழிந்து பின்

#2260

பின் நின்று தாய் இரப்ப கேளான் பெரும் பணை தோள்

முன் நின்று தான் இரப்பாள் மொய் மலராள் சொல் நின்ற

தோள் நலத்தான் நேர் இல்லா தோன்றல் அவன் அளந்த

நீள் நிலம் தான் அத்தனைக்கும் நேர்

#2261

நேர்ந்தேன் அடிமை நினைந்தேன் அது ஒண் கமலம்

ஆர்ந்தேன் உன் சேவடி மேல் அன்பாய் ஆர்ந்த

அடி கோலம் கண்டவர்க்கு என்-கொலோ முன்னை

படி கோலம் கண்ட பகல்

#2262

பகல் கண்டேன் நாரணனை கண்டேன் கனவில்

மிக கண்டேன் மீண்டு அவனை மெய்யே மிக கண்டேன்

ஊன் திகழும் நேமி ஒளி திகழும் சேவடியான்

வான் திகழும் சோதி வடிவு

#2263

வடி கோல வாள் நெடும் கண் மா மலராள் செவ்வி

படி கோலம் கண்டு அகலாள் பல் நாள் அடிக்கோலி

ஞாலத்தாள் பின்னும் நலம் புரிந்தது என்-கொலோ

கோலத்தால் இல்லை குறை

#2264

குறையாக வெம் சொற்கள் கூறினேன் கூறி

மறை ஆங்கு என உரைத்த மாலை இறையேனும்

ஈயும்-கொல் என்றே இருந்தேன் எனை பகலும்

மாயன்-கண் சென்ற வரம்

#2265

வரம் கருதி தன்னை வணங்காத வன்மை

உரம் கருதி மூர்க்கத்தவனை நரம் கலந்த

சிங்கமாய் கீண்ட திருவன் அடி இணையே

அம் கண் மா ஞாலத்து அமுது

#2266

அமுது என்றும் தேன் என்றும் ஆழியான் என்றும்

அமுது அன்று கொண்டு உகந்தான் என்றும் அமுது அன்ன

சொல் மாலை ஏத்தி தொழுதேன் சொலப்பட்ட

நல் மாலை ஏத்தி நவின்று

#2267

நவின்று உரைத்த நாவலர்கள் நாள்மலர் கொண்டு ஆங்கே

பயின்றதனால் பெற்ற பயன் என்-கொல் பயின்றார் தம்

மெய் தவத்தால் காண்பு அரிய மேக மணி வண்ணனை யான்

எ தவத்தால் காண்பன்-கொல் இன்று

#2268

இன்றா அறிகின்றேன் அல்லேன் இரு நிலத்தை

சென்று ஆங்கு அளந்த திருவடியை அன்று

கரு கோட்டியுள் கிடந்து கைதொழுதேன் கண்டேன்

திருக்கோட்டி எந்தை திறம்

#2269

திறம்பிற்று இனி அறிந்தேன் தென் அரங்கத்து எந்தை

திறம்பா வழி சென்றார்க்கு அல்லால் திறம்பா

செடி நரகை நீக்கி தாம் செல்வதன் முன் வானோர்

கடி நகர வாசல் கதவு

#2270

கதவி கதம் சிறந்த கஞ்சனை முன் காய்ந்து

அதவி போர் யானை ஒசித்து பதவியாய்

பாணியால் நீர் ஏற்று பண்டு ஒருகால் மாவலியை

மாணியாய் கொண்டிலையே மண்

#2271

மண்ணுலகம் ஆளேனே வானவர்க்கும் வானவனாய்

விண்ணுலகம் தன் அகத்தும் மேவேனே நண்ணி

திருமாலை செம் கண் நெடியானை எங்கள்

பெருமானை கைதொழுத பின்

#2272

பின்னால் அரு நரகம் சேராமல் பேதுறுவீர்

முன்னால் வணங்க முயல்-மினோ பல் நூல்

அளந்தானை கார் கடல் சூழ் ஞாலத்தை எல்லாம்

அளந்தான் அவன் சேவடி

#2273

அடியால் முன் கஞ்சனை செற்று அமரர் ஏத்தும்

படியான் கொடி மேல் புள் கொண்டான் நெடியான்-தன்

நாமமே ஏத்து-மின்கள் ஏத்தினால் தாம் வேண்டும்

காமமே காட்டும் கடிது

#2274

கடிது கொடு நரகம் பிற்காலும் செய்கை

கொடிது என்று அது கூடா முன்னம் வடி சங்கம்

கொண்டானை கூந்தல் வாய் கீண்டானை கொங்கை நஞ்சு

உண்டானை ஏத்து-மினோ உற்று

#2275

உற்று வணங்கி தொழு-மின் உலகு ஏழும்

முற்றும் விழுங்கும் முகில் வண்ணன் பற்றி

பொருந்தாதான் மார்பு இடந்து பூம் பாடகத்துள்

இருந்தானை ஏத்தும் என் நெஞ்சு

#2276

என் நெஞ்சம் மேயான் என் சென்னியான் தானவனை

வல் நெஞ்சம் கீண்ட மணி வண்ணன் முன்னம் சேய்

ஊழியான் ஊழி பெயர்த்தான் உலகு ஏத்தும்

ஆழியான் அத்தியூரான்

#2277

அத்தியூரான் புள்ளை ஊர்வான் அணி மணியின்

துத்தி சேர் நாகத்தின் மேல் துயில்வான் முத்தீ

மறை ஆவான் மா கடல் நஞ்சு உண்டான் தனக்கும்

இறை ஆவான் எங்கள் பிரான்

#2278

எங்கள் பெருமான் இமையோர் தலைமகன் நீ

செம் கண் நெடுமால் திருமார்பா பொங்கு

பட மூக்கின் ஆயிர வாய் பாம்பு அணை மேல் சேர்ந்தாய்

குடமூக்கு கோயிலா கொண்டு

#2279

கொண்டு வளர்க்க குழவியாய் தான் வளர்ந்தது

உண்டது உலகு ஏழும் உள் ஒடுங்க கொண்டு

குடம் ஆடி கோவலனாய் மேவி என் நெஞ்சம்

இடமாக கொண்ட இறை

#2280

இறை எம்பெருமான் அருள் என்று இமையோர்

முறை நின்று மொய் மலர்கள் தூவ அறை கழல

சேவடியான் செம் கண் நெடியான் குறள் உருவாய்

மாவடிவின் மண் கொண்டான் மால்

#2281

மாலே நெடியோனே கண்ணனே விண்ணவர்க்கு

மேலா வியன் துழாய் கண்ணியனே மேலால்

விளவின் காய் கன்றினால் வீழ்த்தவனே என்தன்

அளவு அன்றால் யானுடைய அன்பு

பேயாழ்வார் - மூன்றாம் திருவந்தாதி

#2282

திரு கண்டேன் பொன் மேனி கண்டேன் திகழும்

அருக்கன் அணி நிறமும் கண்டேன் செரு கிளரும்

பொன் ஆழி கண்டேன் புரி சங்கம் கை கண்டேன்

என் ஆழி வண்ணன்-பால் இன்று

#2283

இன்றே கழல் கண்டேன் ஏழ் பிறப்பும் யான் அறுத்தேன்

பொன் தோய் வரை மார்பில் பூம் துழாய் அன்று

திரு கண்டு கொண்ட திருமாலே உன்னை

மருக்கண்டுகொண்டு என் மனம்

#2284

மனத்து உள்ளான் மா கடல் நீர் உள்ளான் மலராள்

தனத்து உள்ளான் தண் துழாய் மார்பன் சினத்து

செருநர் உக செற்று உகந்த தேங்கு ஓத வண்ணன்

வரு நரகம் தீர்க்கும் மருந்து

#2285

மருந்தும் பொருளும் அமுதமும் தானே

திருந்திய செங்கண்மால் ஆங்கே பொருந்தியும்

நின்று உலகம் உண்டு உமிழ்ந்து நீர் ஏற்று மூ அடியால்

அன்று உலகம் தாயோன் அடி

#2286

அடி வண்ணம் தாமரை அன்று உலகம் தாயோன்

படி வண்ணம் பார் கடல் நீர் வண்ணம் முடி வண்ணம்

ஓர் ஆழி வெய்யோன் ஒளியும் அஃது அன்றே

ஆர் ஆழி கொண்டாற்கு அழகு

#2287

அழகு அன்றே ஆழியாற்கு ஆழி நீர் வண்ணம்

அழகு அன்றே அண்டம் கடத்தல் அழகு அன்றே

அங்கை நீர் ஏற்றாற்கு அலர் மேலோன் கால் கழுவ

கங்கை நீர் கான்ற கழல்

#2288

கழல் தொழுதும் வா நெஞ்சே கார் கடல் நீர் வேலை

பொழில் அளந்த புள் ஊர்தி செல்வன் எழில் அளந்து அங்கு

எண்ணற்கு அரியானை எ பொருட்கும் சேயானை

நண்ணற்கு அரியானை நாம்

#2289

நாமம் பல சொல்லி நாராயணா என்று

நாம் அங்கையால் தொழுதும் நல் நெஞ்சே வா மருவி

மண்ணுலகம் உண்டு உமிழ்ந்த வண்டு அறையும் தண் துழாய்

கண்ணனையே காண்க நம் கண்

#2290

கண்ணும் கமலம் கமலமே கைத்தலமும்

மண் அளந்த பாதமும் மற்று அவையே எண்ணில்

கரு மா முகில் வண்ணன் கார் கடல் நீர் வண்ணன்

திரு மா மணி வண்ணன் தேசு

#2291

தேசும் திறலும் திருவும் உருவமும்

மாசு இல் குடிப்பிறப்பும் மற்றவையும் பேசில்

வலம் புரிந்த வான் சங்கம் கொண்டான் பேர் ஓத

நலம் புரிந்து சென்று அடையும் நன்கு

#2292

நன்கு ஓதும் நால் வேதத்து உள்ளான் நறவு இரியும்

பொங்கு ஓத அருவி புனல் வண்ணன் சங்கு ஓத

பாற்கடலான் பாம்பு அணையின் மேலான் பயின்று உரைப்பார்

நூல் கடலான் நுண் அறிவினான்

#2293

அறிவு என்னும் தாள் கொளுவி ஐம்புலனும் தம்மில்

செறிவு என்னும் திண் கதவம் செம்மி மறை என்றும்

நன்கு ஓதி நன்கு உணர்வார் காண்பரே நாள்-தோறும்

பைம் கோத வண்ணன் படி

#2294

படி வட்ட தாமரை பண்டு உலகம் நீர் ஏற்று

அடி வட்டத்தால் அளப்ப நீண்ட முடி வட்டம்

ஆகாயம் ஊடறுத்து அண்டம் போய் நீண்டதே

மா காயமாய் நின்ற மாற்கு

#2295

மால்-பால் மனம் சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு

நூல்-பால் மனம் வைக்க நொய்விது ஆம் நால் பால

வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடி தோயும்

பாதத்தான் பாதம் பணிந்து

#2296

பணிந்து உயர்ந்த பௌவ படு திரைகள் மோத

பணிந்த பண மணிகளாலே அணிந்து அங்கு

அனந்தன் அணை கிடக்கும் அம்மான் அடியேன்

மனம் தன் அணை கிடக்கும் வந்து

#2297

வந்து உதைத்த வெண் திரைகள் செம் பவள வெண் முத்தம்

அந்தி விளக்கும் அணி விளக்காம் எந்தை

ஒரு அல்லி தாமரையாள் ஒன்றிய சீர் மார்வன்

திருவல்லிக்கேணியான் சென்று

#2298

சென்ற நாள் செல்லாத செங்கண்மால் எங்கள் மால்

என்ற நாள் எ நாளும் நாள் ஆகும் என்றும்

இறவாத எந்தை இணை அடிக்கே ஆளாய்

மறவாது வாழ்த்துக என் வாய்

#2299

வாய் மொழிந்து வாமனனாய் மாவலி-பால் மூவடி மண்

நீ அளந்து கொண்ட நெடுமாலே தாவிய நின்

எஞ்சா இணை அடிக்கே ஏழ் பிறப்பும் ஆளாகி

அஞ்சாது இருக்க அருள்

#2300

அருளாது ஒழியுமே ஆலிலை மேல் அன்று

தெருளாத பிள்ளையாய் சேர்ந்தான் இருளாத

சிந்தையராய் சேவடிக்கே செம் மலர் தூய் கைதொழுது

முந்தையராய் நிற்பார்க்கு முன்

#2301

முன் உலகம் உண்டு உமிழ்ந்தாய்க்கு அ உலகம் ஈர் அடியால்

பின் அளந்துகோடல் பெரிது ஒன்றே என்னே

திருமாலே செம் கண் நெடியானே எங்கள்

பெருமானே நீ அதனை பேசு

#2302

பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே

வாச மலர் துழாய் மாலையான் தேசு உடைய

சக்கரத்தான் சங்கினான் சார்ங்கத்தான் பொங்கு அரவ

வக்கரனை கொன்றான் வடிவு

#2303

வடிவு ஆர் முடி கோட்டி வானவர்கள் நாளும்

கடி ஆர் மலர் தூவி காணும் படியானை

செம்மையால் உள் உருகி செவ்வனே நெஞ்சமே

மெய்ம்மையே காண விரும்பு

#2304

விரும்பி விண் மண் அளந்த அம் சிறைய வண்டு ஆர்

சுரும்பு தொளையில் சென்று ஊத அரும்பும்

புனம் துழாய் மாலையான் பொன் அம் கழற்கே

மனம் துழாய் மாலாய் வரும்

#2305

வருங்கால் இரு நிலனும் மால் விசும்பும் காற்றும்

நெருங்கு தீ நீர் உருவும் ஆனான் பொருந்தும்

சுடர் ஆழி ஒன்று உடையான் சூழ் கழலே நாளும்

தொடர் ஆழி நெஞ்சே தொழுது

#2306

தொழுதால் பழுது உண்டே தூ நீர் உலகம்

முழுது உண்டு மொய் குழலாள் ஆய்ச்சி விழுது உண்ட

வாயானை மால் விடை ஏழ் செற்றானை வானவர்க்கும்

சேயானை நெஞ்சே சிறந்து

#2307

சிறந்த என் சிந்தையும் செம் கண் அரவும்

நிறைந்த சீர் நீள் கச்சியுள்ளும் உறைந்ததுவும்

வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமே

தாம் கடவார் தண் துழாயார்

#2308

ஆரே துயர் உழந்தார் துன்புற்றார் ஆண்டையார்

காரே மலிந்த கரும் கடலை நேரே

கடைந்தானை காரணனை நீர் அணை மேல் பள்ளி

அடைந்தானை நாளும் அடைந்து

#2309

அடைந்தது அரவு அணை மேல் ஐவர்க்காய் அன்று

மிடைந்தது பாரத வெம் போர் உடைந்ததுவும்

ஆய்ச்சி பால் மத்துக்கே அம்மனே வாள் எயிற்று

பேய்ச்சி பால் உண்ட பிரான்

#2310

பேய்ச்சி பால் உண்ட பெருமானை பேர்ந்து எடுத்து

ஆய்ச்சி முலைகொடுத்தாள் அஞ்சாதே வாய்த்த

இருள் ஆர் திருமேனி இன் பவள செ வாய்

தெருளா மொழியானை சேர்ந்து

#2311

சேர்ந்த திருமால் கடல் குடந்தை வேங்கடம்

நேர்ந்த என் சிந்தை நிறை விசும்பு வாய்ந்த

மறை பாடகம் அனந்தன் வண் துழாய் கண்ணி

இறைபாடி ஆய இவை

#2312

இவை அவன் கோயில் இரணியனது ஆகம்

அவை செய்து அரி உருவம் ஆனான் செவி தெரியா

நாகத்தான் நால் வேதத்து உள்ளான் நறவு ஏற்றான்

பாகத்தான் பாற்கடல் உளான்

#2313

பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனி விசும்பும்

நூல் கடலும் நுண் நூல தாமரை மேல் பாற்பட்டு

இருந்தார் மனமும் இடமாக கொண்டான்

குருந்து ஒசித்த கோபாலகன்

#2314

பாலகனாய் ஆலிலை மேல் பைய உலகு எல்லாம்

மேல் ஒரு நாள் உண்டவனே மெய்ம்மையே மாலவனே

மந்தரத்தால் மா நீர் கடல் கடைந்து வான் அமுதம்

அந்தரத்தார்க்கு ஈந்தாய் நீ அன்று

#2315

அன்று இ உலகம் அளந்த அசைவே-கொல்

நின்று இருந்து வேளுக்கை நீள் நகர்வாய் அன்று

கிடந்தானை கேடு இல் சீரானை முன் கஞ்சை

கடந்தானை நெஞ்சமே காண்

#2316

காண்காண் என விரும்பும் கண்கள் கதிர் இலகு

பூண் தார் அகலத்தான் பொன் மேனி பாண் கண்

தொழில் பாடி வண்டு அறையும் தொங்கலான் செம்பொன்

கழல் பாடி யாம் தொழுதும் கை

#2317

கைய கனல் ஆழி கார் கடல் வாய் வெண் சங்கம்

வெய்ய கதை சார்ங்கம் வெம் சுடர் வாள் செய்ய

படை பரவை பாழி பனி நீர் உலகம்

அடி அளந்த மாயன் அவற்கு

#2318

அவற்கு அடிமை பட்டேன் அகத்தான் புறத்தான்

உவர்க்கும் கரும் கடல் நீர் உள்ளான் துவர்க்கும்

பவள வாய் பூ மகளும் பல் மணி பூண் ஆரம்

திகழும் திருமார்பன் தான்

#2319

தானே தனக்கு உவமன் தன் உருவே எ உருவும்

தானே தவ உருவும் தாரகையும் தானே

எரி சுடரும் மால் வரையும் எண் திசையும் அண்டத்து

இரு சுடரும் ஆய இறை

#2320

இறையாய் நிலன் ஆகி எண் திசையும் தானாய்

மறையாய் மறை பொருளாய் வானாய் பிறை வாய்ந்த

வெள்ளத்து அருவி விளங்கு ஒலி நீர் வேங்கடத்தான்

உள்ளத்தின் உள்ளே உளன்

#2321

உளன் கண்டாய் நல் நெஞ்சே உத்தமன் என்றும்

உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து உளன் கண்டாய்

விண் ஒடுங்க கோடு உயரும் வீங்கு அருவி வேங்கடத்தான்

மண் ஒடுங்க தான் அளந்த மன்

#2322

மன்னு மணி முடி நீண்டு அண்டம் போய் எண் திசையும்

துன்னு பொழில் அனைத்தும் சூழ் கழலே மின்னை

உடையாக கொண்டு அன்று உலகு அளந்தான் குன்றம்

குடையாக ஆ காத்த கோ

#2323

கோவலனாய் ஆநிரைகள் மேய்த்து குழல் ஊதி

மா வலனாய் கீண்ட மணி வண்ணன் மேவி

அரி உருவம் ஆகி இரணியனது ஆகம்

தெரி உகிரால் கீண்டான் சினம்

#2324

சின மா மத களிற்றின் திண் மருப்பை சாய்த்து

புனம் மேய பூமி அதனை தனமாக

பேர் அகலத்துள் ஒடுக்கும் பேர் ஆர மார்வனார்

ஓர் அகலத்து உள்ளது உலகு

#2325

உலகமும் ஊழியும் ஆழியும் ஒண் கேழ்

அலர் கதிரும் செம் தீயும் ஆவான் பல கதிர்கள்

பாரித்த பைம்பொன் முடியான் அடி இணைக்கே

பூரித்து என் நெஞ்சே புரி

#2326

புரிந்து மத வேழம் மா பிடியோடு ஊடி

திரிந்து சினத்தால் பொருது விரிந்த சீர்

வெண் கோட்டு முத்து உதிர்க்கும் வேங்கடமே மேல் ஒரு நாள்

மண் கோட்டு கொண்டான் மலை

#2327

மலை முகடு மேல் வைத்து வாசுகியை சுற்றி

தலை முகடு தான் ஒரு கை பற்றி அலை முகட்டு

அண்டம் போய் நீர் தெறிப்ப அன்று கடல் கடைந்தான்

பிண்டமாய் நின்ற பிரான்

#2328

நின்ற பெருமானே நீர் ஏற்று உலகு எல்லாம்

சென்ற பெருமானே செம் கண்ணா அன்று

துரக வாய் கீண்ட துழாய் முடியாய் நங்கள்

நரக வாய் கீண்டாயும் நீ

#2329

நீ அன்றே நீர் ஏற்று உலகம் அடி அளந்தாய்

நீ அன்றே நின்று நிரை மேய்த்தாய் நீ அன்றே

மா வாய் உரம் பிளந்து மா மருதின் ஊடு போய்

தேவாசுரம் பொருதாய் செற்று

#2330

செற்றதுவும் சேரா இரணியனை சென்று ஏற்று

பெற்றதுவும் மாநிலம் பின்னைக்காய் முற்றல்

முரி ஏற்றின் முன் நின்று மொய்ம்பு ஒழித்தாய் மூரி

சுரி ஏறு சங்கினாய் சூழ்ந்து

#2331

சூழ்ந்த துழாய் அலங்கல் சோதி மணி முடி மால்

தாழ்ந்த அருவி தட வரைவாய் ஆழ்ந்த

மணி நீர் சுனை வளர்ந்த மா முதலை கொன்றான்

அணி நீல வண்ணத்தவன்

#2332

அவனே அரு வரையால் ஆநிரைகள் காத்தான்

அவனே அணி மருதம் சாய்த்தான் அவனே

கலங்கா பெரு நகரம் காட்டுவான் கண்டீர்

இலங்காபுரம் எரித்தான் எய்து

#2333

எய்தான் மராமரம் ஏழும் இராமனாய்

எய்தான் அம் மான் மறியை ஏந்து இழைக்காய் எய்ததுவும்

தென் இலங்கை கோன் வீழ சென்று குறள் உரு ஆய்

முன் நிலம் கைக்கொண்டான் முயன்று

#2334

முயன்று தொழு நெஞ்சே மூரி நீர் வேலை

இயன்ற மரத்து ஆலிலையின் மேலால் பயின்று அங்கு ஓர்

மண் நலம் கொள் வெள்ளத்து மாய குழவியாய்

தண் அலங்கல் மாலையான் தாள்

#2335

தாளால் சகடம் உதைத்து பகடு உந்தி

கீளா மருது இடை போய் கேழலாய் மீளாது

மண் அகலம் கீண்டு அங்கு ஓர் மாது உகந்த மார்வற்கு

பெண் அகலம் காதல் பெரிது

#2336

பெரிய வரை மார்பில் பேர் ஆரம் பூண்டு

கரிய முகிலிடை மின் போல தெரியும்-கால்

பாண் ஒடுங்க வண்டு அறையும் பங்கயமே மற்று அவன்-தன்

நீள் நெடும் கண் காட்டும் நிறம்

#2337

நிறம் வெளிது செய்து பசிது கரிது என்று

இறை உருவம் யாம் அறியோம் எண்ணில் நிறைவு உடைய

நா மங்கை தானும் நலம் புகழ் வல்லளே

பூ மங்கை கேள்வன் பொலிவு

#2338

பொலிந்து இருண்ட கார் வானில் மின்னே போல் தோன்றி

மலிந்து திரு இருந்த மார்வன் பொலிந்த

கருடன் மேல் கொண்ட கரியான் கழலே

தெருள்-தன் மேல் கண்டாய் தெளி

#2339

தெளிந்த சிலாதலத்தின் மேல் இருந்த மந்தி

அளிந்த கடுவனையே நோக்கி விளங்கிய

வெண் மதியம் தா என்னும் வேங்கடமே மேல் ஒரு நாள்

மண் மதியில் கொண்டு உகந்தான் வாழ்வு

#2340

வாழும் வகை அறிந்தேன் மை போல் நெடு வரைவாய்

தாழும் அருவி போல் தார் கிடப்ப சூழும்

திரு மா மணி வண்ணன் செங்கண்மால் எங்கள்

பெருமான் அடி சேரப்பெற்று

#2341

பெற்றம் பிணை மருதம் பேய் முலை மா சகடம்

முற்ற காத்து ஊடு போய் உண்டு உதைத்து கற்று

குணிலை விளம் கனிக்கு கொண்டு எறிந்தான் வெற்றி

பணிலம் வாய் வைத்து உகந்தான் பண்டு

#2342

பண்டு எல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்

கொண்டு அங்கு உறைவார்க்கு கோயில் போல் வண்டு

வளம் கிளரும் நீள் சோலை வண் பூம் கடிகை

இளம் குமரன்-தன் விண்ணகர்

#2343

விண்ணகரம் வெஃகா விரி திரை நீர் வேங்கடம்

மண் நகரம் மா மாட வேளுக்கை மண்ணகத்த

தென் குடந்தை தேன் ஆர் திருவரங்கம் தென்கோட்டி

தன் குடங்கை நீர் ஏற்றான் தாழ்வு

#2344

தாழ் சடையும் நீள் முடியும் ஒண் மழுவும் சக்கரமும்

சூழ் அரவும் பொன் நாணும் தோன்றுமால் சூழும்

திரண்டு அருவி பாயும் திருமலை மேல் எந்தைக்கு

இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து

#2345

இசைந்த அரவமும் வெற்பும் கடலும்

பசைந்து அங்கு அமுது படுப்ப அசைந்து

கடைந்த வருத்தமோ கச்சி வெஃகாவில்

கிடந்து இருந்து நின்றதுவும் அங்கு

#2346

அங்கற்கு இடர் இன்றி அந்தி பொழுதத்து

மங்க இரணியனது ஆகத்தை பொங்கி

அரி உருவமாய் பிளந்த அம்மான் அவனே

கரி உருவம் கொம்பு ஒசித்தான் காய்ந்து

#2347

காய்ந்து இருளை மாற்றி கதிர் இலகு மா மணிகள்

ஏய்ந்த பண கதிர் மேல் வெவ்வுயிர்ப்ப வாய்ந்த

மது கைடவரும் வயிறு உருகி மாண்டார்

அது கேடு அவர்க்கு இறுதி ஆங்கு

#2348

ஆங்கு மலரும் குவியுமால் உந்திவாய்

ஓங்கு கமலத்தின் ஒண் போது ஆம் கை

திகிரி சுடர் என்றும் வெண் சங்கம் வானில்

பகரும் மதி என்றும் பார்த்து

#2349

பார்த்த கடுவன் சுனை நீர் நிழல் கண்டு

பேர்த்து ஓர் கடுவன் என பேர்ந்து கார்த்த

களங்கனிக்கு கை நீட்டும் வேங்கடமே மேல் நாள்

விளங்கனிக்கு கன்று எறிந்தான் வெற்பு

#2350

வெற்பு என்று வேங்கடம் பாடும் வியன் துழாய்

கற்பு என்று சூடும் கரும் குழல் மேல் மல் பொன்ற

நீண்ட தோள் மால் கிடந்த நீள் கடல் நீர் ஆடுவான்

பூண்ட நாள் எல்லாம் புகும்

#2351

புகு மதத்தால் வாய் பூசி கீழ் தாழ்ந்து அருவி

உகு மதத்தால் கால் கழுவி கையால் மிகு மத தேன்

விண்ட மலர் கொண்டு விறல் வேங்கடவனையே

கண்டு வணங்கும் களிறு

#2352

களிறு முகில் குத்த கை எடுத்து ஓடி

ஒளிறு மருப்பு ஒசி கை யாளி பிளிறி

விழ கொன்று நின்று அதிரும் வேங்கடமே மேல் நாள்

குழ கன்று கொண்டு எறிந்தான் குன்று

#2353

குன்று ஒன்றின் ஆய குறமகளிர் கோல் வளை கை

சென்று விளையாடும் தீம் கழை போய் வென்று

விளங்கு மதி கோள் விடுக்கும் வேங்கடமே மேலை

இளம் குமரர் கோமான் இடம்

#2354

இடம் வலம் ஏழ் பூண்ட இரவி தேர் ஓட்டி

வட முக வேங்கடத்து மன்னும் குடம் நயந்த

கூத்தனாய் நின்றான் குரை கழலே கூறுவதே

நா-தன்னால் உள்ள நலம்

#2355

நலமே வலிது-கொல் நஞ்சு ஊட்டு வன் பேய்

நிலமே புரண்டு போய் வீழ சலமே தான்

வெம் கொங்கை உண்டானை மீட்டு ஆய்ச்சி ஊட்டுவான்

தன் கொங்கை வாய் வைத்தாள் சார்ந்து

#2356

சார்ந்து அகடு தேய்ப்ப தடாவிய கோட்டு உச்சிவாய்

ஊர்ந்து இயங்கும் வெண் மதியின் ஒண் முயலை சேர்ந்து

சின வேங்கை பார்க்கும் திருமலையே ஆயன்

புன வேங்கை நாறும் பொருப்பு

#2357

பொருப்பிடையே நின்றும் புனல் குளித்தும் ஐந்து

நெருப்பிடையே நிற்கவும் நீர் வேண்டா விருப்பு உடைய

வெஃகாவே சேர்ந்தானை மெய் மலர் தூய் கைதொழுதால்

அஃகாவே தீவினைகள் ஆய்ந்து

#2358

ஆய்ந்த அரு மறையோன் நான்முகத்தோன் நன் குறங்கில்

வாய்ந்த குழவியாய் வாள் அரக்கன் ஏய்ந்த

முடி போது மூன்று ஏழ் என்று எண்ணினான் ஆர்ந்த

அடி போது நங்கட்கு அரண்

#2359

அரண் ஆம் நமக்கு என்றும் ஆழி வலவன்

முரன் நாள் வலம் சுழிந்த மொய்ம்பன் சரண் ஆமேல்

ஏது கதி ஏது நிலை ஏது பிறப்பு என்னாதே

ஓது கதி மாயனையே ஓர்த்து

#2360

ஓர்த்த மனத்தராய் ஐந்து அடக்கி ஆராய்ந்து

பேர்த்தால் பிறப்பு ஏழும் பேர்க்கலாம் கார்த்த

விரை ஆர் நறும் துழாய் வீங்கு ஓத மேனி

நிரை ஆர மார்வனையே நின்று

#2361

நின்று எதிராய நிரை மணி தேர் வாணன் தோள்

ஒன்றிய ஈரைஞ்ஞூறு உடன் துணிய வென்று இலங்கும்

ஆர் படு வான் நேமி அரவு அணையான் சேவடிக்கே

நேர்படுவான் தான் முயலும் நெஞ்சு

#2362

நெஞ்சால் நினைப்பு அரியனேலும் நிலைப்பெற்று என்

நெஞ்சமே பேசாய் நினைக்கும்-கால் நெஞ்சத்து

பேராது நிற்கும் பெருமானை என்-கொலோ

ஓராது நிற்பது உணர்வு

#2363

உணரில் உணர்வு அரியன் உள்ளம் புகுந்து

புணரிலும் காண்பு அரியன் உண்மை இணர் அணைய

கொங்கு அணைந்து வண்டு அறையும் தண் துழாய் கோமானை

எங்கு அணைந்து காண்டும் இனி

#2364

இனி அவன் மாயன் என உரைப்பரேலும்

இனி அவன் காண்பு அரியனேலும் இனியவன்

கள்ளத்தால் மண் கொண்டு விண் கடந்த பைம் கழலான்

உள்ளத்தின் உள்ளே உளன்

#2365

உளனாய நான்மறையின் உட்பொருளை உள்ளத்து

உளனாக தேர்ந்து உணர்வரேலும் உளனாய

வண் தாமரை நெடும் கண் மாயவனை யாவரே

கண்டார் உகப்பர் கவி

#2366

கவியினார் கை புனைந்து கண் ஆர் கழல் போய்

செவியின் ஆர் கேள்வியராய் சேர்ந்தார் புவியினார்

போற்றி உரைக்க பொலியுமே பின்னைக்கு ஆய்

ஏற்று உயிரை அட்டான் எழில்

#2367

எழில் கொண்ட மின்னு கொடி எடுத்து வேக

தொழில்கொண்டு தான் முழங்கி தோன்றும் எழில்கொண்ட

நீர் மேகம் அன்ன நெடுமால் நிறம் போல

கார் வானம் காட்டும் கலந்து

#2368

கலந்து மணி இமைக்கும் கண்ணா நின் மேனி

மலர்ந்து மரகதமே காட்டும் நலம் திகழும்

கொந்தின்வாய் வண்டு அறையும் தண் துழாய் கோமானை

அந்தி வான் காட்டும் அது

#2369

அது நன்று இது தீது என்று ஐயப்படாதே

மது நின்ற தண் துழாய் மார்வன் பொது நின்ற

பொன் அம் கழலே தொழு-மின் முழுவினைகள்

முன்னம் கழலும் முடிந்து

#2370

முடிந்த பொழுதில் குற வாணர் ஏனம்

படிந்து உழு சால் பைம் தினைகள் வித்த தடிந்து எழுந்த

வேய் கழை போய் விண் திறக்கும் வேங்கடமே மேல் ஒரு நாள்

தீம் குழல் வாய் வைத்தான் சிலம்பு

#2371

சிலம்பும் செறி கழலும் சென்று இசைப்ப விண் ஆறு

அலம்பிய சேவடி போய் அண்டம் புலம்பிய தோள்

எண் திசையும் சூழ இடம் போதாது என்-கொலோ

வண் துழாய் மால் அளந்த மண்

#2372

மண் உண்டும் பேய்ச்சி முலை உண்டும் ஆற்றாதாய்

வெண்ணெய் விழுங்க வெகுண்டு ஆய்ச்சி கண்ணி

கயிற்றினால் கட்ட தான் கட்டுண்டிருந்தான்

வயிற்றினோடு ஆற்றா மகன்

#2373

மகன் ஒருவர்க்கு அல்லாத மா மேனி மாயன்

மகன் ஆம் அவன் மகன் தன் காதல் மகனை

சிறைசெய்த வாணன் தோள் செற்றான் கழலே

நிறைசெய்து என் நெஞ்சே நினை

#2374

நினைத்து உலகில் ஆர் தெளிவார் நீண்ட திருமால்

அனைத்து உலகும் உள் ஒடுக்கி ஆல் மேல் கனைத்து உலவு

வெள்ளத்து ஓர் பிள்ளையாய் மெள்ள துயின்றானை

உள்ளத்தே வை நெஞ்சமே உய்த்து

#2375

உய்த்து உணர்வு என்னும் ஒளி கொள் விளக்கு ஏற்றி

வைத்து அவனை நாடி வலைப்படுத்தேன் மெத்தெனவே

நின்றான் இருந்தான் கிடந்தான் என் நெஞ்சத்து

பொன்றாமை மாயன் புகுந்து

#2376

புகுந்து இலங்கும் அந்தி பொழுதத்து அரியாய்

இகழ்ந்த இரணியனது ஆகம் சுகிர்ந்து எங்கும்

சிந்த பிளந்த திருமால் திருவடியே

வந்தித்து என் நெஞ்சமே வாழ்த்து

#2377

வாழ்த்திய வாயராய் வானோர் மணி மகுடம்

தாழ்த்தி வணங்க தழும்பாமே கேழ்த்த

அடி தாமரை மலர் மேல் மங்கை மணாளன்

அடி தாமரை ஆம் அலர்

#2378

அலர் எடுத்த உந்தியான் ஆங்கு எழில் ஆய

மலர் எடுத்த மா மேனி மாயன் அலர் எடுத்த

வண்ணத்தான் மா மலரான் வார் சடையான் என்று இவர்கட்கு

எண்ணத்தான் ஆமோ இமை

#2379

இமம் சூழ் மலையும் இரு விசும்பும் காற்றும்

அமம் சூழ்ந்து அற விளங்கி தோன்றும் நமன் சூழ்

நரகத்து நம்மை நணுகாமல் காப்பான்

துரகத்தை வாய் பிளந்தான் தொட்டு

#2380

தொட்ட படை எட்டும் தோலாத வென்றியான்

அட்டபுயகரத்தான் அஞ்ஞான்று குட்டத்து

கோள் முதலை துஞ்ச குறித்து எறிந்த சக்கரத்தான்

தாள் முதலே நங்கட்கு சார்வு

#2381

சார்வு நமக்கு என்றும் சக்கரத்தான் தண் துழாய்

தார் வாழ் வரை மார்பன் தான் முயங்கும் கார் ஆர்ந்த

வான் அமரும் மின் இமைக்கும் வண் தாமரை நெடும் கண்

தேன் அமரும் பூ மேல் திரு

திருமழிசை ஆழ்வார் - நான்முகன் திருவந்தாதி

#2382

நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும்

தான் முகமாய் சங்கரனை தான் படைத்தான் யான் முகமாய்

அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் ஆழ் பொருளை

சிந்தாமல் கொள்-மின் நீர் தேர்ந்து

#2383

தேரும்-கால் தேவன் ஒருவனே என்று உரைப்பர்

ஆரும் அறியார் அவன் பெருமை ஓரும்

பொருள் முடிவும் இத்தனையே எ தவம் செய்தார்க்கும்

அருள் முடிவது ஆழியான்-பால்

#2384

பாலில் கிடந்ததுவும் பண்டு அரங்கம் மேயதுவும்

ஆலில் துயின்றதுவும் ஆர் அறிவார் ஞாலத்து

ஒரு பொருளை வானவர் தம் மெய் பொருளை அப்பில்

அரு பொருளை யான் அறிந்த ஆறு

#2385

ஆறு சடை கரந்தான் அண்டர் கோன் தன்னோடும்

கூறு உடையன் என்பதுவும் கொள்கைத்தே வேறு ஒருவர்

இல்லாமை நின்றானை எம்மானை எ பொருட்கும்

சொல்லானை சொன்னேன் தொகுத்து

#2386

தொகுத்த வரத்தனாய் தோலாதான் மார்வம்

வகிர்த்த வளை உகிர் தோள் மாலே உகத்தில்

ஒரு நான்று நீ உயர்த்தி உள்வாங்கி நீயே

அரு நான்கும் ஆனாய் அறி

#2387

அறியார் சமணர் அயர்த்தார் பவுத்தர்

சிறியார் சிவப்பட்டார் செப்பில் வெறியாய

மாயவனை மாலவனை மாதவனை ஏத்தாதார்

ஈனவரே ஆதலால் இன்று

#2388

இன்று ஆக நாளையே ஆக இனி சிறிது

நின்று ஆக நின் அருள் என்-பாலதே நன்றாக

நான் உன்னை அன்றி இலேன் கண்டாய் நாரணனே

நீ என்னை அன்றி இலை

#2389

இலை துணை மற்று என் நெஞ்சே ஈசனை வென்ற

சிலை கொண்ட செங்கண்மால் சேரா குலை கொண்ட

ஈரைந்தலையான் இலங்கையை ஈடு அழித்த

கூர் அம்பன் அல்லால் குறை

#2390

குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர் பெய்து

மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி கறைகொண்ட

கண்டத்தான் சென்னி மேல் ஏற கழுவினான்

அண்டத்தான் சேவடியை ஆங்கு

#2391

ஆங்கு ஆரவாரம் அது கேட்டு அழல் உமிழும்

பூம் கார் அரவு அணையான் பொன் மேனி யாம் காண

வல்லமே அல்லமே மா மலரான் வார் சடையான்

வல்லரே அல்லரே வாழ்த்து

#2392

வாழ்த்துக வாய் காண்க கண் கேட்க செவி மகுடம்

தாழ்த்தி வணங்கு-மின்கள் தண் மலரால் சூழ்த்த

துழாய் மன்னு நீள் முடி என் தொல்லை மால்-தன்னை

வழா வண் கை கூப்பி மதித்து

#2393

மதித்தாய் போய் நான்கில் மதியார் போய் வீழ

மதித்தாய் மதி கோள் விடுத்தாய் மதித்தாய்

மடு கிடந்த மா முதலை கோள் விடுப்பான் ஆழி

விடற்கு இரண்டும் போய் இரண்டின் வீடு

#2394

வீடு ஆக்கும் பெற்றி அறியாது மெய் வருத்தி

கூடு ஆக்கி நின்று உண்டு கொன்று உழல்வீர் வீடு ஆக்கும்

மெய்ப்பொருள் தான் வேத முதற்பொருள் தான் விண்ணவர்க்கு

நற்பொருள் தான் நாராயணன்

#2395

நாராயணன் என்னை ஆளி நரகத்து

சேராமல் காக்கும் திருமால்-தன் பேரான

பேச பெறாத பிண சமயர் பேச கேட்டு

ஆசைப்பட்டு ஆழ்வார் பலர

#2396

பல தேவர் ஏத்த படி கடந்தான் பாதம்

மலர் ஏற இட்டு இறைஞ்சி வாழ்த்த வலர் ஆகில்

மார்க்கண்டன் கண்ட வகையே வரும் கண்டீர்

நீர்க்கண்டன் கண்ட நிலை

#2397

நிலைமன்னும் என் நெஞ்சம் அந்நான்று தேவர்

தலைமன்னர் தாமே மாற்றாக பல மன்னர்

போர் மாள வெம் கதிரோன் மாய பொழில் மறைய

தேர் ஆழியால் மறைத்தாரால்

#2398

ஆல நிழல் கீழ் அறநெறியை நால்வர்க்கு

மேலை யுகத்து உரைத்தான் மெய் தவத்தோன் ஞாலம்

அளந்தானை ஆழி கிடந்தானை ஆல் மேல்

வளர்ந்தானை தான் வணங்குமாறு

#2399

மாறு ஆய தானவனை வள் உகிரால் மார்வு இரண்டு

கூறாக கீறிய கோளரியை வேறாக

ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்று அவரை

சாத்தியிருப்பார் தவம்

#2400

தவம் செய்து நான்முகனால் பெற்ற வரத்தை

அவம் செய்த ஆழியாய் அன்றே உவந்து எம்மை

காப்பாய் நீ காப்பதனை ஆவாய் நீ வைகுந்தம்

ஈப்பாயும் எ உயிர்க்கும் நீ

#2401

நீயே உலகும் எல்லாம் நின் அருளே நிற்பனவும்

நீயே தவ தேவதேவனும் நீயே

எரி சுடரும் மால் வரையும் எண் திசையும் அண்டத்து

இரு சுடரும் ஆய இவை

#2402

இவையா பில வாய் திறந்து எரி கான்ற

இவையா எரிவட்ட கண்கள் இவையா

எரி பொங்கி காட்டும் இமையோர் பெருமான்

அரி பொங்கி காட்டும் அழகு

#2403

அழகியான் தானே அரி உருவன் தானே

பழகியான் தாளே பணி-மின் குழவியாய்

தான் ஏழ் உலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே

மீனாய் உயிர் அளிக்கும் வித்து

#2404

வித்தும் இடவேண்டும்-கொல்லோ விடை அடர்த்த

பத்தி உழவன் பழம் புனத்து மொய்த்து எழுந்த

கார் மேகம் அன்ன கரு மால் திருமேனி

நீர் வானம் காட்டும் நிகழ்ந்து

#2405

நிகழ்ந்தாய் பால் பொன் பசுப்பு கார் வண்ணம் நான்கும்

இகழ்ந்தாய் இருவரையும் வீய புகழ்ந்தாய்

சின போர் சுவேதனை சேனாபதியாய்

மன போர் முடிக்கும் வகை

#2406

வகையால் மதியாது மண் கொண்டாய் மற்றும்

வகையால் வருவது ஒன்று உண்டே வகையால்

வயிரம் குழைத்து உண்ணும் மாவலி தான் என்னும்

வயிர வழக்கு ஒழித்தாய் மற்று

#2407

மற்று தொழுவார் ஒருவரையும் யான் இன்மை

கற்றை சடையான் கரி கண்டாய் எற்றைக்கும்

கண்டுகொள் கண்டாய் கட வண்ணா யான் உன்னை

கண்டு கொள்கிற்குமாறு

#2408

மால் தான் புகுந்த மட நெஞ்சம் மற்றதுவும்

பேறாக கொள்வனோ பேதைகாள் நீறாடி

தான் காண மாட்டாத தார் அகல சேவடியை

யான் காண வல்லேற்கு இது

#2409

இது இலங்கை ஈடு அழிய கட்டிய சேது

இது விலங்கு வாலியை வீழ்த்தது இது இலங்கை

தான் ஒடுங்க வில் நுடங்க தண் தார் இராவணனை

ஊன் ஒடுங்க எய்தான் உகப்பு

#2410

உகப்பு உருவன் தானே ஒளி உருவன் தானே

மகப்பு உருவன் தானே மதிக்கில் மிக புருவம்

ஒன்றுக்கு ஒன்று ஓசனையான் வீழ ஒரு கணையால்

அன்றிக்கொண்டு எய்தான் அவன்

#2411

அவன் என்னை ஆளி அரங்கத்து அரங்கில்

அவன் என்னை எய்தாமல் காப்பான் அவன் என்னது

உள்ளத்து நின்றான் இருந்தான் கிடக்குமே

வெள்ளத்து அரவு அணையின் மேல்

#2412

மேல் நான்முகன் அரனை இட்ட விடு சாபம்

தான் நாரணன் ஒழித்தான் தாரகையுள் வானோர்

பெருமானை ஏத்தாத பேய்காள் பிறக்கும்

கரு மாயம் பேசில் கதை

#2413

கதை பொருள் தான் கண்ணன் திருவயிற்றின் உள்ள

உதைப்பளவு போதுபோக்கு இன்றி வதை பொருள் தான்

வாய்ந்த குணத்து படாதது அடைமினோ

ஆய்ந்த குணத்தான் அடி

#2414

அடி சகடம் சாடி அரவு ஆட்டி யானை

பிடித்து ஒசித்து பேய் முலை நஞ்சு உண்டு வடி பவள

வாய் பின்னை தோளிக்கா வல் ஏற்று எருத்து இறுத்து

கோ பின்னும் ஆனான் குறிப்பு

#2415

குறிப்பு எனக்கு கோட்டியூர் மேயானை ஏத்த

குறிப்பு எனக்கு நன்மை பயக்க வெறுப்பனோ

வேங்கடத்து மேயானை மெய் வினை நோய் எய்தாமல்

தான் கடத்தும் தன்மையான் தாள்

#2416

தாளால் உலகம் அளந்த அசைவே-கொல்

வாளா கிடந்தருளும் வாய்திறவான் நீள் ஓதம்

வந்து அலைக்கும் மா மயிலை மா அல்லி கேணியான்

ஐந்தலை வாய் நாகத்து அணை

#2417

நாகத்து அணை குடந்தை வெஃகா திரு எவ்வுள்

நாகத்து அணை அரங்கம் பேர் அன்பில் நாகத்து

அணை பாற்கடல் கிடக்கும் ஆதி நெடுமால்

அணைப்பார் கருத்தன் ஆவான்

#2418

வான் உலவு தீவளி மா கடல் மா பொருப்பு

தான் உலவு வெம் கதிரும் தண் மதியும் மேல் நிலவு

கொண்டல் பெயரும் திசை எட்டும் சூழ்ச்சியும்

அண்டம் திருமால் அகைப்பு

#2419

அகைப்பு இல் மனிசரை ஆறு சமயம்

புகைத்தான் பொரு கடல் நீர் வண்ணன் உகைக்குமேல்

எ தேவர் வாலாட்டும் எவ்வாறு செய்கையும்

அப்போது ஒழியும் அழைப்பு

#2420

அழைப்பன் திருவேங்கடத்தானை காண

இழைப்பன் திருக்கூடல் கூட மழை பேர்

அருவி மணி வரன்றி வந்து இழிய யானை

வெருவி அரவு ஒடுங்கும் வெற்பு

#2421

வெற்பு என்று வேங்கடம் பாடினேன் வீடு ஆக்கி

நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன் கற்கின்ற

நூல் வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்

கால் வலையில் பட்டிருந்தேன் காண்

#2422

காணலுறுகின்றேன் கல் அருவி முத்து உதிர

ஓண விழவில் ஒலி அதிர பேணி

வரு வேங்கடவா என் உள்ளம் புகுந்தாய்

திருவேங்கடம் அதனை சென்று

#2423

சென்று வணங்கு-மினோ சேண் உயர் வேங்கடத்தை

நின்று வினை கெடுக்கும் நீர்மையால் என்றும்

கடி கமல நான்முகனும் கண்மூன்றத்தானும்

அடி கமலம் இட்டு ஏத்தும் அங்கு

#2424

மங்குல் தோய் சென்னி வடவேங்கடத்தானை

கங்குல் புகுந்தார்கள் காப்பு அணிவான் திங்கள்

சடை ஏற வைத்தானும் தாமரைமேலானும்

குடை ஏற தாம் குவித்து கொண்டு

#2425

கொண்டு குடங்கால் மேல் வைத்த குழவியாய்

தண்ட அரக்கன் தலை தாளால் பண்டு எண்ணி

போம் குமரன் நிற்கும் பொழில் வேங்கடமலைக்கே

போம் குமரருள்ளீர் புரிந்து

#2426

புரிந்து மலர் இட்டு புண்டரீக பாதம்

பரிந்து படுகாடு நிற்ப தெரிந்து எங்கும்

தான் ஓங்கி நிற்கின்றான் தண் அருவி வேங்கடமே

வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு

#2427

வைப்பன் மணி விளக்கா மா மதியை மாலுக்கு என்று

எப்பொழுதும் கை நீட்டும் யானையை எப்பாடும்

வேடு வளைக்க குறவர் வில் எடுக்கும் வேங்கடமே

நாடு வளைத்து ஆடுதுமேல் நன்று

#2428

நன் மணி வண்ணன் ஊர் ஆளியும் கோளரியும்

பொன் மணியும் முத்தமும் பூ மரமும் பன் மணி நீ

ரோடு பொருது உருளும் கானமும் வானரமும்

வேடும் உடை வேங்கடம்

#2429

வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்

வேங்கடமே மெய் வினை நோய் தீர்ப்பதுவும் வேங்கடமே

தானவரை வீழ தன் ஆழி படை தொட்டு

வானவரை காப்பான் மலை

#2430

மலை ஆமை மேல் வைத்து வாசுகியை சுற்றி

தலை ஆமை தான் ஒரு கை பற்றி அலையாமல்

பீற கடைந்த பெருமான் திருநாமம்

கூறுவதே யாவர்க்கும் கூற்று

#2431

கூற்றமும் சாரா கொடு வினையும் சாரா தீ

மாற்றமும் சாரா வகை அறிந்தேன் ஆற்றம்

கரை கிடக்கும் கண்ணன் கடல் கிடக்கும் மாயன்

உரை கிடக்கும் உள்ளத்து எனக்கு

#2432

எனக்கு ஆவார் ஆர் ஒருவரே எம்பெருமான்

தனக்கு ஆவான் தானே மற்று அல்லால் புன காயா

வண்ணனே உன்னை பிறர் அறியார் என் மதிக்கு

விண் எல்லாம் உண்டோ விலை

#2433

விலைக்கு ஆட்படுவர் விசாதி ஏற்று உண்பர்

தலைக்கு ஆட்பலி திரிவர் தக்கோர் முலை-கால்

விடம் உண்ட வேந்தனையே வேறா ஏத்தாதார்

கடம் உண்டார் கல்லாதவர்

#2434

கல்லாதவர் இலங்கை கட்டழித்த காகுத்தன்

அல்லால் ஒரு தெய்வம் யான் இலேன் பொல்லாத

தேவரை தேவர் அல்லாரை திரு இல்லா

தேவரை தேறேல்-மின் தேவு

#2435

தேவராய் நிற்கும் அ தேவும் அ தேவரில்

மூவராய் நிற்கும் முது புணர்ப்பும் யாவராய்

நிற்கின்றது எல்லாம் நெடுமால் என்று ஓராதார்

கற்கின்றது எல்லாம் கடை

#2436

கடை நின்று அமரர் கழல் தொழுது நாளும்

இடைநின்ற இன்பத்தர் ஆவர் புடைநின்ற

நீர் ஓத மேனி நெடுமாலே நின் அடியை

யார் ஓத வல்லார் அவர்

#2437

அவர் இவர் என்று இல்லை அனங்கவேள் தாதைக்கு

எவரும் எதிர் இல்லை கண்டீர் உவரி

கடல் நஞ்சம் உண்டான் கடன் என்று வாணற்கு

உடன் நின்று தோற்றான் ஒருங்கு

#2438

ஒருங்கு இருந்த நல்வினையும் தீவினையும் ஆவான்

பெரும் குருந்தம் சாய்த்தவனே பேசில் மருங்கு இருந்த

வானவர் தாம் தானவர் தாம் தாரகை தான் என் நெஞ்சம்

ஆனவர் தாம் அல்லாதது என்

#2439

என் நெஞ்சம் மேயான் இருள் நீக்கி எம்பிரான்

மன் அஞ்ச முன் ஒரு நாள் மண் அளந்தான் என் நெஞ்சம்

மேயானை இல்லா விடை ஏற்றான் வெவ்வினை தீர்த்து

ஆயானுக்கு ஆக்கினேன் அன்பு

#2440

அன்பு ஆவாய் ஆர் அமுதம் ஆவாய் அடியேனுக்கு

இன்பு ஆவாய் எல்லாமும் நீ ஆவாய் பொன் பாவை

கேள்வா கிளர் ஒளி என் கேசவனே கேடு இன்றி

ஆள்வாய்க்கு அடியேன் நான் ஆள்

#2441

ஆள் பார்த்து உழிதருவாய் கண்டுகொள் என்றும் நின்

தாள்பார்த்து உழிதருவேன் தன்மையை கேட்பார்க்கு

அரும் பொருளாய் நின்ற அரங்கனே உன்னை

விரும்புவதே விள்ளேன் மனம்

#2442

மன கேதம் சாரா மதுசூதன்-தன்னை

தனக்கே தான் தஞ்சமா கொள்ளில் எனக்கே தான்

இன்று ஒன்றி நின்று உலகை ஏழ் ஆணை ஓட்டினான்

சென்று ஒன்றி நின்ற திரு

#2443

திரு நின்ற பக்கம் திறவிது என்று ஓரார்

கரு நின்ற கல்லார்க்கு உரைப்பர் திரு இருந்த

மார்பில் சிரீதரன் தன் வண்டு உலவு தண் துழாய்

தார் தன்னை சூடி தரித்து

#2444

தரித்திருந்தேன் ஆகவே தாரா கண போர்

விரித்து உரைத்த வெம் நாகத்து உன்னை தெரித்து எழுதி

வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்

பூசித்தும் போக்கினேன் போது

#2445

போதான இட்டு இறைஞ்சி ஏத்து-மினோ பொன் மகர

காதானை ஆதி பெருமானை நாதானை

நல்லானை நாரணனை நம் ஏழ் பிறப்பு அறுக்கும்

சொல்லானை சொல்லுவதே சூது

#2446

சூது ஆவது என் நெஞ்சத்து எண்ணினேன் சொல் மாலை

மாது ஆய மாலவனை மாதவனை யாதானும்

வல்லவா சிந்தித்திருப்பேற்கு வைகுந்தத்து

இல்லையோ சொல்லீர் இடம்

#2447

இடம் ஆவது என் நெஞ்சம் இன்றெல்லாம் பண்டு

படட நாக அணை நெடிய மாற்கு திடமாக

வையேன் மதிசூடி தன்னோடு அயனை நான்

வையேன் ஆட்செய்யேன் வலம்

#2448

வலம் ஆக மாட்டாமை தான் ஆக வைகல்

குலம் ஆக குற்றம் தான் ஆக நலம் ஆக

நாரணனை நா பதியை ஞான பெருமானை

சீரணனை ஏத்தும் திறம்

#2449

திறம்பேல்-மின் கண்டீர் திருவடி தன் நாமம்

மறந்தும் புரம் தொழா மாந்தர் இறைஞ்சியும்

சாதுவராய் போது-மின்கள் என்றான் நமனும் தன்

தூதுவரை கூவி செவிக்கு

#2450

செவிக்கு இன்பம் ஆவதுவும் செங்கண்மால் நாமம்

புவிக்கும் புவி அதுவே கண்டீர் கவிக்கு

நிறை பொருளாய் நின்றானை நேர்பட்டேன் பார்க்கில்

மறை பொருளும் அத்தனையேதான்

#2451

தான் ஒருவன் ஆகி தரணி இடந்து எடுத்து

ஏன் ஒருவனாய் எயிற்றில் தாங்கியதும் யான் ஒருவன்

இன்றா அறிகின்றேன் அல்லேன் இரு நிலத்தை

சென்று ஆங்கு அடிப்படுத்த சேய்

#2452

சேயன் அணியன் சிறியன் மிக பெரியன்

ஆயன் துவரை கோனாய் நின்ற மாயன் அன்று

ஓதிய வாக்கு-அதனை கல்லார் உலகத்தில்

ஏதிலர் ஆம் மெய்ஞ்ஞானம் இல்

#2453

இல்லறம் அல்லேல் துறவறம் இல் என்னும்

சொல் அறம் அல்லனவும் சொல் அல்ல நல்லறம்

ஆவனவும் நால் வேத மா தவமும் நாரணனே

ஆவது ஈது அன்று என்பார் ஆர்

#2454

ஆரே அறிவார் அனைத்து உலகும் உண்டு உமிழ்ந்த

பேர் ஆழியான்-தன் பெருமையை கார் செறிந்த

கண்டத்தான் எண் கண்ணான் காணான் அவன் வைத்த

பண்டை தானத்தின் பதி

#2455

பதி பகைஞற்கு ஆற்றாது பாய் திரை நீர் பாழி

மதித்து அடைந்த வாள் அரவம்-தன்னை மதித்து அவன்-தன்

வல் ஆகத்து ஏற்றிய மா மேனி மாயவனை

அல்லாது ஒன்று ஏத்தாது என் நா

#2456

நா கொண்டு மானிடம் பாடேன் நலம் ஆக

தீ கொண்ட செஞ்சடையான் சென்று என்றும் பூ கொண்டு

வல்லவாறு ஏத்த மகிழாத வைகுந்த

செல்வனார் சேவடி மேல் பாட்டு

#2457

பாட்டும் முறையும் படு கதையும் பல் பொருளும்

ஈட்டிய தீயும் இரு விசும்பும் கேட்ட

மனுவும் சுருதி மறை நான்கும் மாயன்

தன மாயையில் பட்ட தற்பு

#2458

தற்பு என்னை தான் அறியானேலும் தடம் கடலை

கல் கொண்டு தூர்த்த கடல் வண்ணன் என் கொண்ட

வெவ்வினையும் நீங்க விலங்கா மனம் வைத்தான்

ஏ வினையும் மாயுமால் கண்டு

#2459

கண்டு வணங்கினார்க்கு என்னாம்-கொல் காமன் உடல்

கொண்ட தவத்தாற்கு உமை உணர்த்த வண்டு அலம்பும்

தார் அலங்கல் நீள் முடியான் தன் பெயரே கேட்டிருந்து அங்கு

ஆர் அலங்கல் ஆனமையால் ஆய்ந்து

#2460

ஆய்ந்து கொண்டு ஆதி பெருமானை அன்பினால்

வாய்ந்த மனத்து இருத்த வல்லார்கள் ஏய்ந்த தம்

மெய் குந்தம் ஆக விரும்புவரே தாமும் தம்

வைகுந்தம் காண்பார் விரைந்து

#2461

விரைந்து அடை-மின் மேல் ஒரு நாள் வெள்ளம் பரக்க

கரந்து உலகம் காத்து அளித்த கண்ணன் பரந்து உலகம்

பாடின ஆடின கேட்டு படு நரகம்

வீடின வாசல் கதவு

#2462

கதவு மனம் என்றும் காணலாம் என்றும்

குதையும் வினை ஆவி தீர்ந்தேன் விதை ஆக

நல் தமிழை வித்தி என் உள்ளத்தை நீ விளைத்தாய்

கற்ற மொழி ஆகி கலந்து

#2463

கலந்தான் என் உள்ளத்து காமவேள் தாதை

நலம் தானும் ஈது ஒப்பது உண்டே அலர்ந்து அலர்கள்

இட்டு ஏத்தும் ஈசனும் நான்முகனும் என்று இவர்கள்

விட்டு ஏத்த மாட்டாத வேந்து

#2464

வேந்தராய் விண்ணவராய் விண் ஆகி தண்ணளியாய்

மாந்தராய் மாதுவாய் மற்று எல்லாமாய் சார்ந்தவர்க்கு

தன் ஆற்றான் நேமியான் மால் வண்ணன் தான் கொடுக்கும்

பின்னால் தான் செய்யும் பிதிர்

#2465

பிதிரும் மனம் இலேன் பிஞ்ஞகன் தன்னோடு

எதிர்வன் அவன் எனக்கு நேரான் அதிரும்

கழல் கால மன்னனையே கண்ணனையே நாளும்

தொழ காதல் பூண்டேன் தொழில்

#2466

தொழில் எனக்கு தொல்லை மால் தன் நாமம் ஏத்த

பொழுது எனக்கு மற்று அதுவே போதும் கழி சினத்த

வல்லாளன் வானர கோன் வாலி மதன் அழித்த

வில்லாளன் நெஞ்சத்து உளன்

#2467

உளன் கண்டாய் நல் நெஞ்சே உத்தமன் என்றும்

உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து உளன் கண்டாய்

தன் ஒப்பான் தானாய் உளன் காண் தமியேற்கும்

என் ஒப்பார்க்கு ஈசன் இமை

#2468

இமய பெரு மலை போல் இந்திரனார்க்கு இட்ட

சமய விருந்து உண்டு ஆர் காப்பார் சமயங்கள்

கண்டான் அவை காப்பான் கார்க்கண்டன் நான்முகனோடு

உண்டான் உலகோடு உயிர்

#2469

உயிர் கொண்டு உடல் ஒழிய ஓதும்-போது ஓடி

அயர்வு என்ற தீர்ப்பான் பேர் பாடி செயல் தீர

சிந்தித்து வாழ்வாரே வாழ்வார் சிறு சமய

பந்தனையார் வாழ்வேல் பழுது

#2470

பழுது ஆகாது ஒன்று அறிந்தேன் பாற்கடலான் பாதம்

வழுவா வகை நினைந்து வைகல் தொழுவாரை

கண்டு இறைஞ்சி வாழ்வார் கலந்த வினை கெடுத்து

விண் திறந்து வீற்றிருப்பார் மிக்கு

#2471

வீற்றிருந்து விண் ஆள வேண்டுவார் வேங்கடத்தான்

பால் திருந்த வைத்தாரே பல் மலர்கள் மேல் திருந்தி

வாழ்வார் வரும் மதி பார்த்து அன்பினராய் மற்று அவற்கே

தாழ்வாய் இருப்பார் தமர்

#2472

தமர் ஆவார் யாவர்க்கும் தாமரை மேலாற்கும்

அமரர்க்கும் ஆடு அரவு ஆர்த்தாற்கும் அமரர்கள்

தாள் தாமரை மலர்கள் இட்டு இறைஞ்சி மால் வண்ணன்

தாள் தாமரை அடைவோம் என்று

#2473

என்றும் மறந்தறியேன் என் நெஞ்சத்தே வைத்து

நின்றும் இருந்தும் நெடுமாலை என்றும்

திரு இருந்த மார்பன் சிரீதரனுக்கு ஆளாய்

கரு இருந்த நாள் முதலா காப்பு

#2474

காப்பு மறந்தறியேன் கண்ணனே என்று இருப்பன்

ஆப்பு அங்கு ஒழியவும் பல் உயிர்க்கும் ஆக்கை

கொடுத்து அளித்த கோனே குணப்பரனே உன்னை

விட துணியார் மெய் தெளிந்தார் தாம்

#2475

மெய் தெளிந்தார் என் செய்யார் வேறு ஆனார் நீறு ஆக

கை தெளிந்து காட்டி களப்படுத்து பை தெளிந்த

பாம்பின் அணையாய் அருளாய் அடியேற்கு

வேம்பும் கறி ஆகும் என்று

#2476

ஏன்றேன் அடிமை இழிந்தேன் பிறப்பு இடும்பை

ஆன்றேன் அமரர்க்கு அமராமை ஆன்றேன்

கடன் நாடும் மண் நாடும் கைவிட்டு மேலை

இடம் நாடு காண இனி

#2477

இனி அறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம்

இனி அறிந்தேன் எம்பெருமான் உன்னை இனி அறிந்தேன்

காரணன் நீ கற்றவை நீ கற்பவை நீ நல் கிரிசை

நாரணன் நீ நன்கு அறிந்தேன் நான்

நம்மாழ்வார் - திருவிருத்தம்

#2478

பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்கு உடம்பும்

இ நின்ற நீர்மை இனி யாம் உறாமை உயிர் அளிப்பான்

எ நின்ற யோனியுமாய் பிறந்தாய் இமையோர் தலைவா

மெய் நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பமே

#2479

செழு நீர் தடத்து கயல் மிளிர்ந்தால் ஒப்ப சே அரி கண்

அழு நீர் துளும்ப அலமருகின்றன வாழியரோ

முழு நீர் முகில் வண்ணன் கண்ணன் விண் நாட்டவர் மூதுவர் ஆம்

தொழு நீர் இணை அடிக்கே அன்பு சூட்டிய சூழ் குழற்கே

#2480

குழல் கோவலர் மட பாவையும் மண் மகளும் திருவும்

நிழல் போல்வனர் கண்டு நிற்கும்-கொல் மீளும்-கொல் தண் அம் துழாய்

அழல் போல் அடும் சக்கரத்து அண்ணல் விண்ணோர் தொழ கடவும்

தழல் போல் சினத்த அ புள்ளின் பின் போன தனி நெஞ்சமே

#2481

தனி நெஞ்சம் முன் அவர் புள்ளே கவர்ந்தது தண் அம் துழாய்க்கு

இனி நெஞ்சம் இங்கு கவர்வது யாம் இலம் நீ நடுவே

முனி வஞ்ச பேய்ச்சி முலை சுவைத்தான் முடி சூடு துழாய்

பனி நஞ்ச மாருதமே எம்மது ஆவி பனிப்பு இயல்வே

#2482

பனிப்பு இயல்வாக உடைய தண் வாடை இ காலம் இ ஊர்

பனிப்பு இயல்பு எல்லாம் தவிர்ந்து எரி வீசும் அம் தண் அம் துழாய்

பனி புயல் சோரும் தடம் கண்ணி மாமை திறத்து-கொலாம்

பனி புயல் வண்ணன் செங்கோல் ஒருநான்று தடாவியதே

#2483

தடாவிய அம்பும் முரிந்த சிலைகளும் போகவிட்டு

கடாயின கொண்டு ஒல்கும் வல்லி ஈது ஏனும் அசுரர் மங்க

கடாவிய வேக பறவையின் பாகன் மதன செங்கோல்

நடாவிய கூற்றம் கண்டீர் உயிர் கா-மின்கள் ஞாலத்துள்ளே

#2484

ஞாலம் பனிப்ப செறுத்து நல் நீர் இட்டு கால் சிதைந்து

நீல வல் ஏறு பொராநின்ற வானம் இது திருமால்

கோலம் சுமந்து பிரிந்தார் கொடுமை குழறு தண் பூம்

காலம்-கொலோ அறியேன் வினையாட்டியேன் காண்கின்றவே

#2485

காண்கின்றனகளும் கேட்கின்றனகளும் காணில் இ நாள்

பாண் குன்ற நாடர் பயில்கின்றன இது எல்லாம் அறிந்தோம்

மாண் குன்றம் ஏந்தி தண் மா மலை வேங்கடத்து உம்பர் நம்பும்

சேண் குன்றம் சென்று பொருள் படைப்பான் கற்ற திண்ணனவே

#2486

திண் பூம் சுடர் நுதி நேமி அம் செல்வர் விண் நாடு அனைய

வண் பூ மணி வல்லி யாரே பிரிபவர் தாம் இவையோ

கண் பூம் கமலம் கரும் சுடர் ஆடி வெண் முத்து அரும்பி

வண் பூம் குவளை மட மான் விழிக்கின்ற மா இதழே

#2487

மாயோன் வடதிருவேங்கட நாட வல்லி கொடிகாள்

நோயோ உரைக்கிலும் கேட்கின்றிலீர் உறையீர் நுமது

வாயோ அது அன்றி வல்வினையேனும் கிளியும் எள்கும்

ஆயோ அடும் தொண்டையோ அறையோ இது அறிவு அரிதே

#2488

அரியன யாம் இன்று காண்கின்றன கண்ணன் விண் அனையாய்

பெரியன காதம் பொருட்கோ பிரிவு என ஞாலம் எய்தற்கு

உரியன ஒண் முத்தும் பைம்பொன்னும் ஏந்தி ஒரோ குடங்கை

பெரியன கெண்டை குலம் இவையோ வந்து பேர்கின்றவே

#2489

பேர்கின்றது மணி மாமை பிறங்கி அள்ளல் பயலை

ஊர்கின்றது கங்குல் ஊழிகளே இது எல்லாம் இனவே

ஈர்கின்ற சக்கரத்து எம்பெருமான் கண்ணன் தண் அம் துழாய்

சார்கின்ற நல் நெஞ்சினார் தந்து போன தனி வளமே

#2490

தனி வளர் செங்கோல் நடாவு தழல் வாய் அரசு அவிய

பனி வளர் செங்கோல் இருள் வீற்றிருந்து பார் முழுதும்

துனி வளர் காதல் துழாயை துழாவு தண் வாடை தடிந்து

இனி வளை காப்பவர் ஆர் எனை ஊழிகள் ஈர்வனவே

#2491

ஈர்வன வேலும் அம் சேலும் உயிர் மேல் மிளிர்ந்து இவையோ

பேர்வனவோ அல்ல தெய்வ நல் வேள் கணை பேர் ஒளியே

சோர்வன நீல சுடர் விடு மேனி அம்மான் விசும்பு ஊர்

தேர்வன தெய்வம் அன்னீர கண்ணோ இ செழும் கயலே

#2492

கயலோ நும கண்கள் என்று களிறு வினவி நிற்றீர்

அயலோர் அறியிலும் ஈது என்ன வார்த்தை கடல் கவர்ந்த

புயலோடு உலாம் கொண்டல் வண்ணன் புன வேங்கடத்து எம்மொடும்

பயலோ இலீர் கொல்லை காக்கின்ற நாளும் பல பலவே

#2493

பலபல ஊழிகள் ஆயிடும் அன்றி ஓர் நாழிகையை

பலபல கூறிட்ட கூறு ஆயிடும் கண்ணன் விண் அனையாய்

பலபல நாள் அன்பர் கூடிலும் நீங்கிலும் யாம் மெலிதும்

பலபல சூழல் உடைத்து அம்ம வாழி இ பாய் இருளே

#2494

இருள் விரிந்தால் அன்ன மா நீர் திரை கொண்டு வாழியரோ

இருள் பிரிந்தார் அன்பர் தேர் வழி தூரல் அரவு அணை மேல்

இருள் விரி நீல கரு நாயிறு சுடர் கால்வது போல்

இருள் விரி சோதி பெருமான் உறையும் எறி கடலே

#2495

கடல் கொண்டு எழுந்தது வானம் அ வானத்தை அன்றி சென்று

கடல் கொண்டு ஒழிந்த அதனால் இது கண்ணன் மண்ணும் விண்ணும்

கடல் கொண்டு எழுந்த அ காலம்-கொலோ புயல் காலம்-கொலோ

கடல் கொண்ட கண்ணீர் அருவிசெய்யாநிற்கும் காரிகையே

#2496

காரிகையார் நிறை காப்பவர் யார் என்று கார் கொண்டு இன்னே

மாரி கை ஏறி அறையிடும் காலத்தும் வாழியரோ

சாரிகை புள்ளர் அம் தண் அம் துழாய் இறை கூய் அருளார்

சேரி கை ஏறும் பழியாய் விளைந்தது என் சில் மொழிக்கே

#2497

சில் மொழி நோயோ கழி பெரும் தெய்வம் இ நோய் இனது என்று

இல் மொழி கேட்கும் இளம் தெய்வம் அன்று இது வேல நில் நீ

என் மொழி கேள்-மின் என் அம்மனைமீர் உலகு ஏழும் உண்டான்

சொல் மொழி மாலை அம் தண் அம் துழாய் கொண்டு சூட்டு-மினே

#2498

சூட்டு நல் மாலைகள் தூயன ஏந்தி விண்ணோர்கள் நல் நீர்

ஆட்டி அம் தூபம் தராநிற்கவே அங்கு ஓர் மாயையினால்

ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ண போந்து இமில் ஏற்று வன் கூன்

கோட்டிடை ஆடினை கூத்து அடல் ஆயர் தம் கொம்பினுக்கே

#2499

கொம்பு ஆர் தழை கை சிறு நாண் எறிவு இலம் வேட்டை கொண்டாட்டு

அம்பு ஆர் களிறு வினவுவது ஐயர் புள் ஊரும் கள்வர்

தம் பாரகத்து என்றும் ஆடாதன தம்மில் கூடாதன

வம்பு ஆர் வினா சொல்லவோ எம்மை வைத்தது இ வான் புனத்தே

#2500

புனமோ புனத்து அயலே வழிபோகும் அருவினையேன்

மனமோ மகளிர் நும் காவல் சொல்லீர் புண்டரீகத்து அம் கேழ்

வனம் ஓர் அனைய கண்ணான் கண்ணன் வான் நாடு அமரும் தெய்வத்து

இனம் ஓர் அனையீர்களாய் இவையோ நும் இயல்வுகளே

#2501

இயல்வாயின வஞ்ச நோய் கொண்டு உலாவும் ஒரோ குடங்கை

கயல் பாய்வன பெரு நீர் கண்கள் தம்மொடும் குன்றம் ஒன்றால்

புயல் வாய் இன நிரை காத்த புள் ஊர்தி கள் ஊரும் துழாய்

கொயல் வாய் மலர் மேல் மனத்தொடு என்னாம்-கொல் எம் கோல் வளைக்கே

#2502

எம் கோல் வளை முதலா கண்ணன் மண்ணும் விண்ணும் அளிக்கும்

செங்கோல் வளைவு விளைவிக்குமால் திறல் சேர் அமரர்

தம் கோனுடைய தம் கோன் உம்பர் எல்லா எவர்க்கும் தம் கோன்

நம் கோன் உகக்கும் துழாய் என் செய்யாது இனி நானிலத்தே

#2503

நானிலம் வாய் கொண்டு நல் நீர் அற மென்று கோது கொண்ட

வேனில் அலம் செல்வன் சுவைத்து உமிழ் பாலை கடந்த பொன்னே

கால் நிலம் தோய்ந்து விண்ணோர் தொழும் கண்ணன் வெஃகா உது அம் பூம்

தேன் இளம் சோலை அப்பாலது எப்பாலைக்கும் சேமத்ததே

#2504

சேமம் செங்கோன் அருளே செறுவாரும் நட்பு ஆகுவர் என்று

ஏமம் பெற வையம் சொல்லும் மெய்யே பண்டு எல்லாம் அறை கூய்

யாமங்கள்-தோறு எரி வீசும் நம் கண்ணன் அம் தண் அம் துழாய்

தாமம் புனைய அ வாடை ஈதோ வந்து தண்ணென்றதே

#2505

தண் அம் துழாய் வளை கொள்வது யாம் இழப்போம் நடுவே

வண்ணம் துழாவி ஓர் வாடை உலாவும் வள் வாய் அலகால்

புள் நந்து உழாமே பொரு நீர் திருவரங்கா அருளாய்

எண்ணம் துழாவுமிடத்து உளவோ பண்டும் இன்னன்னவே

#2506

இன்னன்ன தூது எம்மை ஆள் அற்றப்பட்டு இரந்தாள் இவள் என்று

அன்னன்ன சொல்லா பெடையொடும் போய்வரும் நீலம் உண்ட

மின் அன்ன மேனி பெருமான் உலகில் பெண் தூது செல்லா

அன்னன்ன நீர்மை-கொலோ குடி சீர்மை இல் அன்னங்களே

#2507

அன்னம் செல்வீரும் வண்டானம் செல்வீரும் தொழுது இரந்தேன்

முன்னம் செல்வீர்கள் மறவேல்-மினோ கண்ணன் வைகுந்தனோடு

என் நெஞ்சினாரை கண்டால் என்னை சொல்லி அவரிடை நீர்

இன்னம் செல்லீரோ இதுவோ தகவு என்று இசை-மின்களே

#2508

இசை-மின்கள் தூது என்று இசைத்தால் இசையிலம் என் தலை மேல்

அசை-மின்கள் என்றால் அசையும்-கொலாம் அம் பொன் மா மணிகள்

திசை மின் மிளிரும் திருவேங்கடத்து வன் தாள் சிமயம்

மிசை மின் மிளிரிய போவான் வழிக்கொண்ட மேகங்களே

#2509

மேகங்களோ உரையீர் திருமால் திருமேனி ஒக்கும்

யோகங்கள் உங்களுக்கு எவ்வாறு பெற்றீர் உயிர் அளிப்பான்

மாகங்கள் எல்லாம் திரிந்து நல் நீர்கள் சுமந்து நும் தம்

ஆகங்கள் நோவ வருத்தும் தவம் ஆம் அருள்பெற்றதே

#2510

அருள் ஆர் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும்

இருள் ஆர் வினை கெட செங்கோல் நடாவுதிர் ஈங்கு ஓர் பெண்-பால்

பொருளோ எனும் இகழ்வோ இவற்றின் புறத்தாள் என்று எண்ணோ

தெருளோம் அரவு அணையீர் இவள் மாமை சிதைக்கின்றதே

#2511

சிதைக்கின்றது ஆழி என்று ஆழியை சீறி தன் சீறடியால்

உதைக்கின்ற நாயகம் தன்னொடு மாலே உனது தண் தார்

ததைக்கின்ற தண் அம் துழாய் அணிவான் அதுவே மனமாய்

பதைக்கின்ற மாதின் திறத்து அறியேன் செயற்பாலதுவே

#2512

பால் வாய் பிறை பிள்ளை ஒக்கலை கொண்டு பகல் இழந்த

மேல்-பால் திசை பெண் புலம்புறு மாலை உலகு அளந்த

மால்-பால் துழாய்க்கு மனம் உடையார்க்கு நல்கிற்றை எல்லாம்

சோல்வான் புகுந்து இது ஓர் பனி வாடை துழாகின்றதே

#2513

துழா நெடும் சூழ் இருள் என்று தம் தண் தார் அது பெயரா

எழா நெடு ஊழி எழுந்த இ காலத்தும் ஈங்கு இவளோ

வழா நெடும் துன்பத்தள் என்று இரங்கார் அம்மனோ இலங்கை

குழா நெடு மாடம் இடித்த பிரானார் கொடுமைகளே

#2514

கொடும் கால் சிலையர் நிரைகோள் உழவர் கொலையில் வெய்ய

கடும் கால் இளைஞர் துடி படும் கவ்வைத்து அருவினையேன்

நெடும் காலமும் கண்ணன் நீள் மலர் பாதம் பரவி பெற்ற

தொடும்-கால் ஒசியும் இடை இள மான் சென்ற சூழ் கடமே

#2515

கடம் ஆயினகள் கழித்து தன் கால் வன்மையால் பல நாள்

தடம் ஆயின புக்கு நீர் நிலைநின்ற தவம் இது-கொல்

குடம் ஆடி இ மண்ணும் விண்ணும் குலுங்க உலகு அளந்து

நடமாடிய பெருமான் உரு ஒத்தன நீலங்களே

#2516

நீல தட வரை மேல் புண்டரீக நெடும் தடங்கள்

போல பொலிந்து எமக்கு எல்லா இடத்தவும் பொங்கு முந்நீர்

ஞால பிரான் விசும்புக்கும் பிரான் மற்றும் நல்லோர் பிரான்

கோலம் கரிய பிரான் எம்பிரான் கண்ணின் கோலங்களே

#2517

கோல பகல் களிறு ஒன்று கல் புய்ய குழாம் விரிந்த

நீல கங்குல் களிறு எல்லாம் நிரைந்தன நேர் இழையீர்

ஞால பொன் மாதின் மணாளன் துழாய் நங்கள் சூழ் குழற்கே

ஏல புனைந்து என்னைமார் எம்மை நோக்குவது என்று-கொலோ

#2518

என்றும் புன் வாடை இது கண்டு அறிதும் இவ்வாறு வெம்மை

ஒன்றும் உருவும் சுவடும் தெரியிலம் ஓங்கு அசுரர்

பொன்றும் வகை புள்ளை ஊர்வான் அருள் அருளாத இ நாள்

மன்றில் நிறை பழி தூற்றி நின்று என்னை வன் காற்று அடுமே

#2519

வன் காற்று அறைய ஒருங்கே மறிந்து கிடந்து அலர்ந்த

மென் கால் கமல தடம் போல் பொலிந்தன மண்ணும் விண்ணும்

என் காற்கு அளவின்மை காண்-மின் என்பான் ஒத்து வான் நிமிர்ந்த

தன் கால் பணிந்த என்-பால் எம்பிரான் தடம் கண்களே

#2520

கண்ணும் செந்தாமரை கையும் அவை அடியோ அவையே

வண்ணம் கரியது ஓர் மால் வரை போன்று மதி விகற்பால்

விண்ணும் கடந்து உம்பர் அப்பால் மிக்கு மற்று எப்பால் எவர்க்கும்

எண்ணும் இடத்ததுவோ எம்பிரானது எழில் நிறமே

#2521

நிறம் உயர் கோலமும் பேரும் உருவும் இவைஇவை என்று

அறம் முயல் ஞான சமயிகள் பேசிலும் அங்கு அங்கு எல்லாம்

உற உயர் ஞான சுடர் விளக்காய் நின்றது அன்றி ஒன்றும்

பெற முயன்றார் இல்லையால் எம்பிரான் பெருமையையே

#2522

பெரும் கேழலார் தம் பெரும் கண் மலர் புண்டரீகம் நம் மேல்

ஒருங்கே பிறழ வைத்தார் இவ்வ காலம் ஒருவர் நம் போல்

வரும் கேழ்பவர் உளரே தொல்லை வாழியம் சூழ் பிறப்பு

மருங்கே வர பெறுமே சொல்லு வாழி மட நெஞ்சமே

#2523

மட நெஞ்சம் என்றும் தமது என்றும் ஓர் கருமம் கருதி

விட நெஞ்சை உற்றார் விடவோ அமையும் அ பொன் பெயரோன்

தட நெஞ்சம் கீண்ட பிரானார் தமது அடி கீழ் விட போய்

திட நெஞ்சமாய் எம்மை நீத்து இன்றுதாறும் திரிகின்றதே

#2524

திரிகின்றது வட மாருதம் திங்கள் வெம் தீ முகந்து

சொரிகின்றது அதுவும் அது கண்ணன் விண்ணூர் தொழவே

சரிகின்றது சங்கம் தண் அம் துழாய்க்கு வண்ணம் பயலை

விரிகின்றது முழு மெய்யும் என் ஆம்-கொல் என் மெல்லியற்கே

#2525

மெல்லியல் ஆக்கை கிருமி குருவில் மிளிர்தந்து ஆங்கே

செல்லிய செல்கைத்து உலகை என் காணும் என்னாலும்
தன்னை

சொல்லிய சூழல் திருமால் அவன் கவி ஆது கற்றேன்

பல்லியின் சொல்லும் சொல்லா கொள்வதோ உண்டு பண்டுபண்டே

#2526

பண்டும் பலபல வீங்கு இருள் காண்டும் இ பாய் இருள் போல்

கண்டும் அறிவதும் கேட்பதும் யாம் இலம் காள வண்ண

வண்டு உண் துழாய் பெருமான் மதுசூதனன் தாமோதரன்

உண்டும் உமிழ்ந்தும் கடாய மண் நேர் அன்ன ஒள் நுதலே

#2527

ஒள் நுதல் மாமை ஒளி பயவாமை விரைந்து நம் தேர்

நண்ணுதல் வேண்டும் வலவ கடாகின்று தேன் நவின்ற

விண் முதல் நாயகன் நீள் முடி வெண் முத்த வாசிகைத்தாய்

மண் முதல் சேர்வுற்று அருவிசெய்யாநிற்கும் மா மலைக்கே

#2528

மலை கொண்டு மத்தா அரவால் சுழற்றிய மாய பிரான்

அலை கண்டு கொண்ட அமுதம் கொள்ளாது கடல் பரதர்

விலை கொண்டு தந்த சங்கம் இவை வேரி துழாய் துணையா

துலை கொண்டு தாயம் கிளர்ந்து கொள்வான் ஒத்து அழைக்கின்றதே

#2529

அழைக்கும் கரும் கடல் வெண் திரை கைக்கொண்டு போய் அலர்வாய்

மழை கண் மடந்தை அரவு அணை ஏற மண் மாதர் விண்வாய்

அழைத்து புலம்பி முலை மலை மேல்-நின்றும் ஆறுகளாய்

மழை கண்ண நீர் திருமால் கொடியான் என்று வார்கின்றதே

#2530

வார் ஆயின முலையாள் இவள் வானோர் தலைமகன் ஆம்

சீர் ஆயின தெய்வ நல் நோய் இது தெய்வ தண் அம் துழாய்

தார் ஆயினும் தழை ஆயினும் தண் கொம்பு அது ஆயினும் கீழ்

வேர் ஆயினும் நின்ற மண் ஆயினும் கொண்டு வீசு-மினே

#2531

வீசும் சிறகால் பறத்தீர் விண் நாடு நுங்கட்கு எளிது

பேசும் படி அன்ன பேசியும் போவது நெய் தொடு உண்டு

ஏசும்படி அன்ன செய்யும் எம் ஈசர் விண்ணோர் பிரானார்

மாசு இல் மலர் அடி கீழ் எம்மை சேர்விக்கும் வண்டுகளே

#2532

வண்டுகளோ வம்-மின் நீர் பூ நில பூ மரத்தில் ஒண் பூ

உண்டு களித்து உழல்வீர்க்கு ஒன்று உரைக்கியம் ஏனம் ஒன்றாய்

மண் துகள் ஆடி வைகுந்தம் அன்னாள் குழல்வாய் விரை போல்

விண்டு கள் வாரும் மலர் உளவோ நும் வியலிடத்தே

#2533

வியலிடம் உண்ட பிரானார் விடுத்த திருவருளால்

உயல் இடம் பெற்று உய்ந்தம் அஞ்சலம் தோழி ஓர் தண் தென்றல் வந்து

அயலிடை யாரும் அறிந்திலர் அம் பூம் துழாயின் இன் தேன்

புயலுடை நீர்மையினால் தடவிற்று என் புலன் கலனே

#2534

புல குண்டல புண்டரீகத்த போர் கெண்டை வல்லி ஒன்றால்

விலக்குண்டு உலாகின்று வேல் விழிக்கின்றன கண்ணன் கையால்

மலக்குண்டு அமுதம் சுரந்த மறி கடல் போன்று அவற்றால்

கலக்குண்ட நான்று கண்டார் எம்மை யாரும் கழறலரே

#2535

கழல் தலம் ஒன்றே நிலம் முழுது ஆயிற்று ஒரு கழல் போய்

நிழல் தர எல்லா விசும்பும் நிறைந்தது நீண்ட அண்டத்து

உழறு அலர் ஞான சுடர் விளக்காய் உயர்ந்தோரை இல்லா

அழறு அலர் தாமரை கண்ணன் என்னோ இங்கு அளக்கின்றதே

#2536

அளப்பு அரும் தன்மைய ஊழி அம் கங்குல் அம் தண் அம் துழாய்க்கு

உள பெரும் காதலின் நீளியவாய் உள ஓங்கு முந்நீர்

வள பெரு நாடன் மதுசூதனன் என்னும் வல்வினையேன்

தள பெரு நீள் முறுவல் செய்ய வாய தட முலையே

#2537

முலையோ முழு முற்றும் போந்தில மொய் பூம் குழல் குறிய

கலையோ அரை இல்லை நாவோ குழறும் கடல் மண் எல்லாம்

விலையோ என மிளிரும் கண் இவள் பரமே பெருமான்

மலையோ திருவேங்கடம் என்று கற்கின்ற வாசகமே

#2538

வாசகம் செய்வது நம்பரமே தொல்லை வானவர்-தம்

நாயகன் நாயகர் எல்லாம் தொழும் அவன் ஞாலம் முற்றும்

வேய் அகம் ஆயினும் சோரா வகை இரண்டே அடியால்

தாயவனாய் குலமாய் வந்து தோன்றிற்று நம் இறையே

#2539

இறையோ இரக்கினும் ஈங்கு ஓர் பெண்-பால் எனவும் இரங்காது

அறையோ என நின்று அதிரும் கரும் கடல் ஈங்கு இவள்-தன்

நிறையோ இனி உன் திருவருளால் அன்றி காப்பு அரிதால்

முறையோ அரவு அணை மேல் பள்ளி கொண்ட முகில் வண்ணனே

#2540

வண்ணம் சிவந்துள வான் நாடு அமரும் குளிர் விழிய

தண் மென் கமல தடம் போல் பொலிந்தன தாம் இவையோ

கண்ணன் திருமால் திருமுகம் தன்னொடும் காதல்செய்தேற்கு

எண்ணம் புகுந்து அடியேனொடு இ காலம் இருக்கின்றவே

#2541

இருக்கு ஆர் மொழியால் நெறி இழுக்காமை உலகு அளந்த

திருத்தாள் இணை நிலத்தேவர் வணங்குவர் யாமும் அவா

ஒருக்கா வினையொடும் எம்மொடும் நொந்து கனி இன்மையின்

கருக்காய் கடிப்பவர் போல் திருநாம சொல் கற்றனமே

#2542

கற்று பிணை மலர் கண்ணின் குலம் வென்று ஒரோ கருமம்

உற்று பயின்று செவியொடு உசாவி உலகம் எல்லாம்

முற்றும் விழுங்கி உமிழ்ந்த பிரானார் திருவடி கீழ்

உற்றும் உறாதும் மிளிர்ந்த கண்ணாய் எம்மை உண்கின்றவே

#2543

உண்ணாது உறங்காது உணர்வுறும் எத்தனை யோகியர்க்கும்

எண்ணாய் மிளிரும் இயல்வின ஆம் எரி நீர் வளி வான்

மண் ஆகிய எம் பெருமான் தனது வைகுந்தம் அன்னாள்

கண்ணாய் அருவினையேன் உயிர் ஆயின காவிகளே

#2544

காவியும் நீலமும் வேலும் கயலும் பலபல வென்று

ஆவியின் தன்மை அளவு அல்ல பாரிப்பு அசுரரை செற்ற

மா வியம் புள் வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடம் சேர்

தூவி அம் பேடை அன்னாள் கண்கள் ஆய துணை மலரே

#2545

மலர்ந்தே ஒழிந்தில மாலையும் மாலை பொன் வாசிகையும்

தோய் தழை பந்தர் தண்டு உற நாற்றி பொரு கடல் சூழ்

தாவிய எம்பெருமான் தனது வைகுந்தம் அன்னாய்

கலந்தார் வரவு எதிர்கொண்டு வன் கொன்றைகள் கார்த்தனவே

#2546

கார் ஏற்று இருள் செகில் ஏற்றின் சுடருக்கு உளைந்து வெல்வான்

ஏற்று எதிர்ந்தது புன் தலை மாலை புவனி எல்லாம்

ஏற்று அளந்த நெடிய பிரான் அருளா விடுமே

வார் ஏற்று இள முலையாய் வருந்தேல் உன் வளை திறமே

#2547

வாய் திருச்சக்கரத்து எங்கள் வானவனார் முடி மேல்

வாய் நறும் கண்ணி தண் அம் துழாய்க்கு வண்ணம் பயலை

வான் மிக வந்து நாள் திங்கள் ஆண்டு ஊழி நிற்க எம்மை

உளைவான் புகுந்து இது ஓர் கங்குல் ஆயிரம் ஊழிகளே

#2548

ஊழிகளாய் உலகு ஏழும் உண்டான் என்றிலம் பழம் கண்டு

ஆழி களாம்பழம் வண்ணம் என்றேற்கு அஃதே கொண்டு அன்னை

நாழ் இவளோ என்னும் ஞாலம் உண்டான் வண்ணம் சொல்லிற்று என்னும்

தோழிகளோ உரையீர் எம்மை அம்மனை சூழ்கின்றவே

#2549

சூழ்கின்ற கங்குல் சுருங்கா இருளின் கரும் திணிம்பை

போழ்கின்ற திங்கள் அம் பிள்ளையும் போழ்க துழாய் மலர்க்கே

தாழ்கின்ற நெஞ்சத்து ஒரு தமியாட்டியேன் மாமைக்கு இன்று

வாழ்கின்ற ஆறு இதுவோ வந்து தோன்றிற்று வாலியதே

#2550

வால் வெண் நிலவு உலகு ஆர சுரக்கும் வெண் திங்கள் என்னும்

பால் விண் சுரவி சுர முதிர் மாலை பரிதி வட்டம்

போலும் சுடர் அடல் ஆழி பிரான் பொழில் ஏழ் அளிக்கும்

சால்பின் தகைமை-கொலாம் தமியாட்டி தளர்ந்ததுவே

#2551

தளர்ந்தும் முறிந்தும் வரு திரை பாயல் திரு நெடும் கண்

வளர்ந்தும் அறிவுற்றும் வையம் விழுங்கியும் மால் வரையை

கிளர்ந்து மறிதர கீண்டு எடுத்தான் முடி சூடு துழாய்

அளைந்து உண் சிறு பசும் தென்றல் அந்தோ வந்து உலாகின்றதே

#2552

உலாகின்ற கெண்டை ஒளி அம்பு எம் ஆவியை ஊடுருவ

குலாகின்ற வெம் சிலை வாள் முகத்தீர் குனி சங்கு இடறி

புலாகின்ற வேலை புணரி அம் பள்ளி அம்மான் அடியார்

நிலாகின்ற வைகுந்தமோ வையமோ நும் நிலையிடமே

#2553

இடம் போய் விரிந்து இ உலகு அளந்தான் எழில் ஆர் தண் துழாய்

வடம் போது இனையும் மட நெஞ்சமே நங்கள் வெள் வளைக்கே

விடம் போல் விரிதல் இது வியப்பே வியன் தாமரையின்

தடம் போது ஒடுங்க மெல் ஆம்பல் அலர்விக்கும் வெண் திங்களே

#2554

திங்கள் அம் பிள்ளை புலம்ப தன் செங்கோல் அரசு பட்ட

செம் களம் பற்றி நின்று எள்கு புன் மாலை தென்-பால் இலங்கை

வெம் களம் செய்த நம் விண்ணோர் பிரானார் துழாய் துணையா

நங்களை மாமை கொள்வான் வந்து தோன்றி நலிகின்றதே

#2555

நலியும் நரகனை வீட்டிற்றும் வாணன் திண் தோல் துணித்த

வலியும் பெருமையும் யாம் சொல்லும் நீர்த்து அல்ல மை வரை போல்

பொலியும் உருவின் பிரானார் புனை பூம் துழாய் மலர்க்கே

மெலியும் மட நெஞ்சினார் தந்து போயின வேதனையே

#2556

வேதனை வெண் புரி நூலனை விண்ணோர் பரவ நின்ற

நாதனை ஞாலம் விழுங்கும் அநாதனை ஞாலம் தத்தும்

பாதனை பாற்கடல் பாம்பு அணை மேல் பள்ளிகொண்டருளும்

சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியரே

#2557

சீர் அரசு ஆண்டு தன் செங்கோல் சில நாள் செலீஇ கழிந்த

பார் அரசு ஒத்து மறைந்தது நாயிறு பார் அளந்த

பேர் அரசே எம் விசும்பு அரசே எம்மை நீத்து வஞ்சித்த

ஓர் அரசே அருளாய் இருளாய் வந்து உறுகின்றதே

#2558

உறுகின்ற கன்மங்கள் மேலன ஓர்ப்பிலராய் இவளை

பெறுகின்ற தாயர் மெய் நொந்து பெறார்-கொல் துழாய் குழல் வாய்

துறுகின்றிலர் தொல்லை வேங்கடம் ஆட்டவும் சூழ்கின்றிலர்

இறுகின்றதால் இவள் ஆகம் மெல் ஆவி எரி கொள்ளவே

#2559

எரி கொள் செம் நாயிறு இரண்டு உடனே உதய மலைவாய்

விரிகின்ற வண்ணத்த எம் பெருமான் கண்கள் மீண்டு அவற்றுள்

எரி கொள் செம் தீ வீழ் அசுரரை போல எம் போலியர்க்கும்

விரிவ சொல்லீர் இதுவோ வையம் முற்றும் விளரியதே

#2560

விளரி குரல் அன்றில் மென் பெடை மேகின்ற முன்றில் பெண்ணை

முளரி குரம்பை இதுஇதுவாக முகில் வண்ணன் பேர்

கிளரி கிளரி பிதற்றும் மெல் ஆவியும் நைவும் எல்லாம்

தளரின்-கொலோ அறியேன் உய்யல் ஆவது இ தையலுக்கே

#2561

தையல் நல்லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும்

ஐய நல்லார்கள் குழிய விழவினும் அங்குஅங்கு எல்லாம்

கைய பொன் ஆழி வெண் சங்கொடும் காண்பான் அவாவுவன் நான்

மைய வண்ணா மணியே முத்தமே என்தன் மாணிக்கமே

#2562

மாணிக்கம் கொண்டு குரங்கு எறிவு ஒத்து இருளோடு முட்டி

ஆணிப்பொன் அன்ன சுடர் படும் மாலை உலகு அளந்த

மாணிக்கமே என் மரகதமே மற்று ஒப்பாரை இல்லா

ஆணிப்பொன்னே அடியேன் அடி ஆவி அடைக்கலமே

#2563

அடை கலத்து ஓங்கு கமலத்து அலர் அயன் சென்னி என்னும்

முடை கலத்து ஊண் முன் அரனுக்கு நீக்கியை ஆழி சங்கம்

படைக்கலம் ஏந்தியை வெண்ணெய்க்கு அன்று ஆய்ச்சி வன் தாம்புகளால்

புடை கலந்தானை எம்மானை என் சொல்லி புலம்புவனே

#2564

புலம்பும் கன குரல் போழ் வாய அன்றிலும் பூம் கழி பாய்ந்து

அலம்பும் கன குரல் சூழ் திரை ஆழியும் ஆங்கு அவை நின்

வலம் புள்ளது நலம் பாடும் இது குற்றமாக வையம்

சிலம்பும்படி செய்வதே திருமால் இ திருவினையே

#2565

திருமால் உரு ஒக்கும் மேரு அம் மேருவில் செம் சுடரோன்

திருமால் திருக்கை திருச்சக்கரம் ஒக்கும் அன்ன கண்டும்

திருமால் உருவோடு அவன் சின்னமே பிதற்றா நிற்பது ஓர்

திருமால் தலைக்கொண்ட நங்கட்கு எங்கே வரும் தீவினையே

#2566

தீவினைக்கு ஆரு நஞ்சை நல்வினைக்கு இன் அமுதத்தினை

பூவினை மேவிய தேவி மணாளனை புன்மை எள்காது

ஆவினை மேய்க்கும் வல் ஆயனை அன்று உலகு ஈர் அடியால்

தாவின ஏற்றை எம்மானை எஞ்ஞான்று தலைப்பெய்வனே

#2567

தலைப்பெய்து யான் உன் திருவடி சூடும் தகைமையினால்

நிலைப்பு எய்த ஆக்கைக்கு நோற்ற இ மாயமும் மாயம் செவ்வே

நிலைப்பு எய்திலாத நிலைமையும் காண்-தோறு அசுரர் குழாம்

தொலை பெய்த நேமி எந்தாய் தொல்லை ஊழி சுருங்கலதே

#2568

சுருங்கு உறி வெண்ணெய் தொடு உண்ட கள்வனை வையம் முற்றும்

ஒருங்குற உண்ட பெரு வயிற்றாளனை மாவலி-மாட்டு

இரும் குறள் ஆகி இசைய ஓர் மூவடி வேண்டி சென்ற

பெரும் கிறியானை அல்லால் அடியேன் நெஞ்சம் பேணலதே

#2569

பேண் நலம் இல்லா அரக்கர் முந்நீர பெரும் பதிவாய்

நீள் நகர் நீள் எரி வைத்தருளாய் என்று நின்னை விண்ணோர்

தாள் நிலம் தோய்ந்து தொழுவர் நின் மூர்த்தி பல் கூற்றில் ஒன்று

காணலும் ஆம்-கொல் என்றே வைகல் மாலையும் காலையுமே

#2570

காலை வெய்யோற்கு முன் ஓட்டு கொடுத்த கங்குல் குறும்பர்

மாலை வெய்யோன் பட வையகம் பாவுவர் அன்ன கண்டும்

காலை நல் ஞான துறை படிந்து ஆடி கண் போது செய்து

மாலை நல் நாவில் கொள்ளார் நினையார் அவன் மை படியே

#2571

மை படி மேனியும் செந்தாமரை கண்ணும் வைதிகரே

மெய்ப்படியால் உன் திருவடி சூடும் தகைமையினார்

எப்படி ஊர் ஆ மிலைக்க குருட்டு ஆ மிலைக்கும் என்னும்

அப்படி யானும் சொன்னேன் அடியேன் மற்று யாது என்பனே

#2572

யாதானும் ஓர் ஆக்கையில் புக்கு அங்கு ஆப்புண்டும் ஆப்பு அவிழ்ந்தும்

மூது ஆவியில் தடுமாறும் உயிர் முன்னமே அதனால்

யாதானும் பற்றி நீங்கும் விரதத்தை நல் வீடுசெய்யும்

மாதாவினை பிதுவை திருமாலை வணங்குவனே

#2573

வணங்கும் துறைகள் பலபல ஆக்கி மதி விகற்பால்

பிணங்கும் சமயம் பலபல ஆக்கி அவைஅவை-தோறு

அணங்கும் பலபல ஆக்கி நின் மூர்த்தி பரப்பி வைத்தாய்

இணங்கும் நின்னோரை இல்லாய் நின்-கண் வேட்கை எழுவிப்பனே

#2574

எழுவதும் மீண்டே படுவதும் பட்டு எனை ஊழிகள் போய்

கழிவதும் கண்டு கண்டு எள்கல் அல்லால் இமையோர்கள் குழாம்

தொழுவதும் சூழ்வதும் செய் தொல்லை மாலை கண்ணார கண்டு

கழிவது ஓர் காதல் உற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதலே

#2575

துஞ்சா முனிவரும் அல்லாதவரும் தொடர நின்ற

எஞ்சா பிறவி இடர் கடிவான் இமையோர்-தமக்கும்

தன் சார்வு இலாத தனி பெரு மூர்த்தி தன் மாயம் செவ்வே

நெஞ்சால் நினைப்பு அரிதால் வெண்ணெய் ஊண் என்னும் ஈன சொல்லே

#2576

ஈன சொல் ஆயினும் ஆக எறி திரை வையம் முற்றும்

ஏனத்து உருவாய் இடந்த பிரான் இரும் கற்பகம் சேர்

வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்று எல்லா எவர்க்கும

ஞான பிரானை அல்லால் இல்லை நான் கண்ட நல்லதுவே

#2577

நல்லார் நவில் குருகூர் நகரான் திருமால் திருப்பேர்

வல்லார் அடி கண்ணி சூடிய மாறன் விண்ணப்பம் செய்த

சொல் ஆர் தொடையல் இ நூறும் வல்லார் அழுந்தார் பிறப்பு ஆம்

பொல்லா அருவினை மாய வன் சேற்று அள்ளல் பொய் நிலத்தே

நம்மாழ்வார் - திருவாசிரியம்

#2578

செக்கர் மா முகில் உடுத்து மிக்க செம் சுடர்

பரிதி சூடி அம் சுடர் மதியம் பூண்டு

பல சுடர் புனைந்த பவள செ வாய்

திகழ் பசும் சோதி மரகத குன்றம்

கடலோன் கை மிசை கண்வளர்வது போல்

பீதக ஆடை முடி பூண் முதலா

மேதகு பல் கலன் அணிந்து சோதி

வாயவும் கண்ணவும் சிவப்ப மீதிட்டு

பச்சை மேனி மிக பகைப்ப

நச்சு வினை கவர்தலை அரவின் அமளி ஏறி

எறி கடல் நடுவுள் அறிதுயில் அமர்ந்து

சிவன் அயன் இந்திரன் இவர் முதல் அனைத்தோர்

தெய்வ குழாங்கள் கைதொழ கிடந்த

தாமரை உந்தி தனி பெரு நாயக

மூ உலகு அளந்த சேவடியோயே

#2579

உலகு படைத்து உண்ட எந்தை அறை கழல்

சுடர் பூம் தாமரை சூடுதற்கு அவாவு ஆ

ருயிர் உருகி உக்க நேரிய காதல்

அன்பில் இன்பு ஈன் தேறல் அமுத

வெள்ளத்தான் ஆம் சிறப்பு விட்டு ஒரு பொருட்கு

அசைவோர் அசைக திருவொடு மருவிய

இயற்கை மாயா பெரு விறல் உலகம்

மூன்றினொடு நல் வீடு பெறினும்

கொள்வது எண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே

#2580

குறிப்பில் கொண்டு நெறிப்பட உலகம்

மூன்று உடன் வணங்கு தோன்று புகழ் ஆணை

மெய் பெற நடாய தெய்வம் மூவரில்

முதல்வன் ஆகி சுடர் விளங்கு அகலத்து

வரை புரை திரை பொர பெரு வரை வெருவர

உரும் முரல் ஒலி மலி நளிர் கடல் பட அரவு

அரசு உடல் தட வரை சுழற்றிய தனி மா

தெய்வத்து அடியவர்க்கு இனி நாம் ஆளாகவே

இசையும்-கொல் ஊழி-தோறு ஊழி ஓவாதே

#2581

ஊழி-தோறு ஊழி ஓவாது வாழிய

என்று யாம் தொழ இசையும்-கொல்

யாவகை உலகமும் யாவரும் இல்லா

மேல் வரும் பெரும்பாழ் காலத்து இரும் பொருட்கு

எல்லாம் அரும்பெறல் தனி வித்து ஒரு தான்

ஆகி தெய்வ நான்முக கொழு முளை

ஈன்று முக்கண் ஈசனொடு தேவு பல நுதலி

மூ உலகம் விளைத்த உந்தி

மாய கடவுள் மா முதல் அடியே

#2582

மா முதல் அடி போது ஒன்று கவிழ்த்து அலர்த்தி

மண் முழுதும் அகப்படுத்து ஒண் சுடர் அடி போது

ஒன்று விண் செலீஇ நான்முக புத்தேள்

நாடு வியந்து உவப்ப வானவர் முறைமுறை

வழிபட நெறீஇ தாமரை காடு

மலர் கண்ணொடு கனி வாய் உடையதும்

ஆய் இரு நாயிறு ஆயிரம் மலர்ந்து அன்ன

கற்பக காவு பற்பல அன்ன

முடி தோள் ஆயிரம் தழைத்த

நெடியோய்க்கு அல்லது அடியதோ உலகே

#2583

ஓஓ உலகினது இயல்வே ஈன்றோள் இருக்க

மணை நீராட்டி படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து

அளந்து தேர்ந்து உலகு அளிக்கும் முதல் பெரும்

கடவுள் நிற்ப புடை பல தான் அறி

தெய்வம் பேணுதல் தனாது

புல்லறிவாண்மை பொருந்த காட்டி

கொல்வன முதலா அல்லன முயலும்

இனைய செய்கை இன்பு துன்பு அளி

தொல் மா மாய பிறவியுள் நீங்கா

பல் மா மாயத்து அழுந்துமாம் நளிர்ந்தே

#2584

நளிர் மதி சடையனும் நான்முக கடவுளும்

தளிர் ஒளி இமையவர் தலைவனும் முதலா

யாவகை உலகமும் யாவரும் அகப்பட

நிலம் நீர் தீ கால் சுடர் இரு விசும்பும்

மலர் சுடர் பிறவும் சிறிது உடன் மயங்க

ஒரு பொருள் புறப்பாடு இன்றி முழுவதும்

அகப்பட கரந்து ஓர் ஆலிலை சேர்ந்த எம்

பெரு மா மாயனை அல்லது

ஒரு மா தெய்வம் மற்று உடையமோ யாமே

நம்மாழ்வார் - பெரியதிருவந்தாதி

#2585

முயற்றி சுமந்து எழுந்து முந்துற்ற நெஞ்சே

இயற்றுவாய் எம்மொடு நீ கூடி நயப்பு உடைய

நா ஈன் தொடை கிளவியுள் பொதிவோம் நல் பூவை

பூ ஈன்ற வண்ணன் புகழ்

#2586

புகழ்வோம் பழிப்போம் புகழோம் பழியோம்

இகழ்வோம் மதிப்போம் மதியோம் இகழோம் மற்று

எங்கள் மால் செங்கண்மால் சீறல் நீ தீவினையோம்

எங்கள் மால் கண்டாய் இவை

#2587

இவை அன்றே நல்ல இவை அன்றே தீய

இவை என்று இவை அறிவனேலும் இவை எல்லாம்

என்னால் அடைப்பு நீக்கு ஒண்ணாது இறையவனே

என்னால் செயற்பாலது என்

#2588

என்னின் மிகு புகழார் யாவரே பின்னையும் மற்று

எண் இல் மிகு புகழேன் யான் அல்லால் என்ன

கரும் சோதி கண்ணன் கடல் புரையும் சீல

பெருஞ்சோதிக்கு என் நெஞ்சு ஆட்பெற்று

#2589

பெற்ற தாய் நீயே பிறப்பித்த தந்தை நீ

மற்றையார் ஆவாரும் நீ பேசில் எற்றேயோ

மாய மா மாயவளை மாய முலை வாய் வைத்த

நீ அம்மா காட்டும் நெறி

#2590

நெறி காட்டி நீக்குதியோ நின்-பால் கரு மா

முறி மேனி காட்டுதியோ மேல் நாள் அறியோமை

என் செய்வான் எண்ணினாய் கண்ணனே ஈது உரையாய்

என் செய்தால் என் படோம் யாம்

#2591

யாமே அருவினையோம் சேயோம் என் நெஞ்சினார்

தாமே அணுக்கராய் சார்ந்து ஒழிந்தார் பூ மேய

செம்மாதை நின் மார்வில் சேர்வித்து பார் இடந்த

அம்மா நின் பாதத்து அருகு

#2592

அருகும் சுவடும் தெரிவு உணரோம் அன்பே

பெருகும் மிக இது என் பேசீர் பருகலாம்

பண்புடையீர் பார் அளந்தீர் பாவியேம் கண் காண்பு அரிய

நுண்பு உடையீர் நும்மை நுமக்கு

#2593

நுமக்கு அடியோம் என்றுஎன்று நொந்து உரைத்து என் மாலார்

தமக்கு அவர் தாம் சார்வு அரியர் ஆனால் எமக்கு இனி

யாதானும் ஆகிடு காண் நெஞ்சே அவர் திறத்தே

யாதானும் சிந்தித்து இரு

#2594

இரு நால்வர் ஈரைந்தின் மேல் ஒருவர் எட்டோடு

ஒரு நால்வர் ஓர் இருவர் அல்லால் திருமாற்கு

யாம் ஆர் வணக்கம் ஆர் ஏ பாவம் நல் நெஞ்சே

நாமா மிக உடையோம் நாழ்

#2595

நாழால் அமர் முயன்ற வல் அரக்கன் இன் உயிரை

வாழா வகை வலிதல் நின் வலியே ஆழாத

பாரும் நீ வானும் நீ காலும் நீ தீயும் நீ

நீரும் நீ ஆய் நின்ற நீ

#2596

நீ அன்றே ஆழ் துயரில் வீழ்விப்பான் நின்று உழன்றாய்

போய் ஒன்று சொல்லி என் போ நெஞ்சே நீ என்றும்

காழ்த்து உபதேசம் தரினும் கைக்கொள்ளாய் கண்ணன் தாள்

வாழ்த்துவதே கண்டாய் வழக்கு

#2597

வழக்கொடு மாறுகோள் அன்று அடியார் வேண்ட

இழக்கவும் காண்டும் இறைவ இழப்பு உண்டே

எம் ஆட்கொண்டு ஆகிலும் யான் வேண்ட என் கண்கள்

தம்மால் காட்டு உன் மேனி சாய்

#2598

சாயால் கரியானை உள் அறியாராய் நெஞ்சே

பேயார் முலை கொடுத்தார் பேயராய் நீ யார் போய்

தேம்பு ஊண் சுவைத்து ஊன் அறிந்து அறிந்தும் தீவினை ஆம்

பாம்பார் வாய் கைம் நீட்டல் பார்த்து

#2599

பார்த்து ஓர் எதிரிதா நெஞ்சே படு துயரம்

பேர்த்து ஓத பீடு அழிவு ஆம் பேச்சு இல்லை ஆர்த்து ஓதம்

தம் மேனி தாள் தடவ தாம் கிடந்து தம்முடைய

செம் மேனி கண்வளர்வார் சீர்

#2600

சீரால் பிறந்து சிறப்பால் வளராது

பேர் வாமன் ஆகா-கால் பேராளா மார்பு ஆர

புல்கி நீ உண்டு உமிழ்ந்த பூமி நீர் ஏற்பு அரிதே

சொல்லு நீ யாம் அறிய சூழ்ந்து

#2601

சூழ்ந்து அடியார் வேண்டின-கால் தோன்றாது விட்டாலும்

வாழ்ந்திடுவர் பின்னும் தம் வாய் திறவார் சூழ்ந்து எங்கும்

வாள் வரைகள் போல் அரக்கன் வன் தலைகள் தாம் இடிய

தாள் வரை வில் ஏந்தினார் தாம்

#2602

தாம்பால் ஆப்புண்டாலும் அ தழும்பு தான் இளக

பாம்பால் ஆப்புண்டு பாடு உற்றாலும் சோம்பாது இ

பல் உருவை எல்லாம் படர்வித்த வித்தா உன்

தொல் உருவை யார் அறிவார் சொல்லு

#2603

சொல்லில் குறை இல்லை சூது அறியா நெஞ்சமே

எல்லி பகல் என்னாது எப்போதும் தொல்லை-கண்

மா தானைக்கு எல்லாம் ஓர் ஐவரையே மாறு ஆக

காத்தானை காண்டும் நீ காண்

#2604

காணப்புகில் அறிவு கைக்கொண்ட நல் நெஞ்சம்

நாணப்படும் அன்றே நாம் பேசில் மாணி

உரு ஆகிக்கொண்டு உலகம் நீர் ஏற்ற சீரான்

திரு ஆகம் தீண்டிற்று சென்று

#2605

சென்று அங்கு வெம் நரகில் சேராமல் காப்பதற்கு

இன்று இங்கு என் நெஞ்சால் இடுக்குண்ட அன்று அங்கு

பார் உருவும் பார் வளைத்த நீர் உருவும் கண் புதைய

கார் உருவன் தான் நிமிர்த்த கால்

#2606

காலே பொத திரிந்து கத்துவராம் இனநாள்

மாலார் குடிபுகுந்தார் என் மனத்தே மேலால்

தருக்கும் இடம்பாட்டினொடும் வல்வினையார் தாம் வீற்று

இருக்கும் இடம் காணாது இளைத்து

#2607

இளைப்பாய் இளையாப்பாய் நெஞ்சமே சொன்னேன்

இளைக்க நமன் தமர்கள் பற்றி இளைப்பு எய்த

நாய் தந்து மோதாமல் நல்குவான் நல்காப்பான்

தாய் தந்தை எ உயிர்க்கும் தான்

#2608

தானே தனி தோன்றல் தன் அளப்பு ஒன்று இல்லாதான்

தானே பிறர்கட்கும் தன் தோன்றல் தானே

இளைக்கில் பார் கீழ் மேல் ஆம் மீண்டு அமைப்பான் ஆனால்

அளக்கிற்பார் பாரின் மேல் ஆர்

#2609

ஆரானும் ஆதானும் செய்ய அகலிடத்தை

ஆராய்ந்து அது திருத்தல் ஆவதே சீர் ஆர்

மனத்தலை வன் துன்பத்தை மாற்றினேன் வானோர்

இன தலைவன் கண்ணனால் யான்

#2610

யானும் என் நெஞ்சும் இசைந்து ஒழிந்தோம் வல்வினையை

கானும் மலையும் புக கடிவான் தான் ஓர்

இருள் அன்ன மா மேனி எம் இறையார் தந்த

அருள் என்னும் தண்டால் அடித்து

#2611

அடியால் படி கடந்த முத்தோ அது அன்றேல்

முடியால் விசும்பு அளந்த முத்தோ நெடியாய்

செறி கழல் கொள் தாள் நிமிர்த்து சென்று உலகம் எல்லாம்

அறிகிலமால் நீ அளந்த அன்று

#2612

அன்றே நம் கண் காணும் ஆழியான் கார் உருவம்

இன்றே நாம் காணாது இருப்பதுவும் என்றேனும்

கட்கண்ணால் காணாத அ உருவை நெஞ்சு என்னும்

உட்கண்ணேல் காணும் உணர்ந்து

#2613

உணர ஒருவர்க்கு எளியேனே செவ்வே

இணரும் துழாய் அலங்கல் எந்தை உணர

தனக்கு எளியர் எ அளவர் அ அளவன் ஆனால்

எனக்கு எளியன் எம்பெருமான் இங்கு

#2614

இங்கு இல்லை பண்டு போல் வீற்றிருத்தல் என்னுடைய

செங்கண்மால் சீர்க்கும் சிறிது உள்ளம் அங்கே

மடி அடக்கி நிற்பதனில் வல்வினையார் தாம் ஈண்டு

அடி எடுப்பது அன்றோ அழகு

#2615

அழகும் அறிவோமாய் வல்வினையை தீர்ப்பான்

நிழலும் அடி தாறும் ஆனோம் சுழல

குடங்கள் தலை மீது எடுத்து கொண்டு ஆடி அன்று அ

தடம் கடலை மேயார் தமக்கு

#2616

தமக்கு அடிமை வேண்டுவார் தாமோதரனார்

தமக்கு அடிமைசெய் என்றால் செய்யாது எமக்கு என்று

தம் செய்யும் தீவினைக்கே தாழ்வுறுவர் நெஞ்சினார்

யாம் செய்வது இவ்விடத்து இங்கு யாது

#2617

யாதானும் ஒன்று அறியில் தன் உகக்கில் என்-கொலோ

யாதானும் நேர்ந்து அணுகா ஆறு தான் யாதானும்

தேறுமா செய்யா அசுரர்களை நேமியால்

பாறுபாறு ஆக்கினான்-பால்

#2618

பால் ஆழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்

கால் ஆழும் நெஞ்சு அழியும் கண் சுழலும் நீல் ஆழி

சோதியாய் ஆதியாய் தொல்வினை எம்-பால் கடியும்

நீதியாய் நின் சார்ந்து நின்று

#2619

நின்றும் இருந்தும் கிடந்தும் திரிதந்தும்

ஒன்றும் ஓவாற்றான் என் நெஞ்சு அகலான் அன்று அம் கை

வன் புடையால் பொன் பெயரோன் வாய் தகர்த்து மார்வு இடந்தான்

அன்புடையன் அன்றே அவன்

#2620

அவன் ஆம் இவன் ஆம் உவன் ஆம் மற்று உம்பர்

அவன் ஆம் அவன் என்று இராதே அவன் ஆம்

அவனே என தெளிந்து கண்ணனுக்கே தீர்ந்தால்

அவனே எவனேலும் ஆம்

#2621

ஆம் ஆறு அறிவுடையார் ஆவது அரிது அன்றே

நாமே அது உடையோம் நல் நெஞ்சே பூ மேய்

மதுகரம் மே தண் துழாய் மாலாரை வாழ்த்து ஆம்

அது கரமே அன்பால் அமை

#2622

அமைக்கும் பொழுது உண்டே ஆராயில் நெஞ்சே

இமைக்கும் பொழுதும் இடைச்சி குமைத்திறங்கள்

ஏசியே ஆயினும் ஈன் துழாய் மாயனையே

பேசியே போக்காய் பிழை

#2623

பிழைக்க முயன்றோமோ நெஞ்சமே பேசாய்

தழைக்கும் துழாய் மார்வன் தன்னை அழைத்து ஒருகால்

போய் உபகாரம் பொலிய கொள்ளாது அவன் புகழே

வாய் உபகாரம் கொண்ட வாய்ப்பு

#2624

வாய்ப்போ இது ஒப்ப மற்று இல்லை வா நெஞ்சே

போய் போஒய் வெம் நரகில் பூவியேல் தீ பால

பேய் தாய் உயிர் கலாய் பால் உண்டு அவள் உயிரை

மாய்த்தானை வாழ்த்தே வலி

#2625

வலியம் என நினைந்து வந்து எதிர்ந்த மல்லர்

வலிய முடி இடிய வாங்கி வலிய நின்

பொன் ஆழி கையால் புடைத்திடுதி கீளாதே

பல் நாளும் நிற்கும் இ பார்

#2626

பார் உண்டான் பார் உமிழ்ந்தான் பார் இடந்தான் பார் அளந்தான்

பார் இடம் முன் படைத்தான் என்பரால் பார் இடம்

ஆவானும் தான் ஆனால் ஆர் இடமே மற்றொருவர்க்கு

ஆவான் புகாவால் அவை

#2627

அவையம் என நினைந்து வந்த சுரர்-பாலே

நவையை நளிர்விப்பான் தன்னை கவை இல்

மனத்து உயர வைத்திருந்து வாழ்த்தாதார்க்கு உண்டோ

மன துயரை மாய்க்கும் வகை

#2628

வகை சேர்ந்த நல் நெஞ்சும் நா உடைய வாயும்

மிக வாய்ந்து வீழா எனிலும் மிக ஆய்ந்து

மாலை தாம் வாழ்த்தாது இருப்பர் இது அன்றே

மேலை தாம் செய்யும் வினை

#2629

வினையார் தர முயலும் வெம்மையை அஞ்சி

தினையாம் சிறிதளவும் செல்ல நினையாது

வாசகத்தால் ஏத்தினேன் வானோர் தொழுது இறைஞ்சும்

நாயகத்தான் பொன் அடிக்கள் நான்

#2630

நான் கூறும் கூற்றாவது இத்தனையே நாள்நாளும்

தேங்கு ஓத நீர் உருவன் செங்கண்மால் நீங்காத

மா கதி ஆம் வெம் நரகில் சேராமல் காப்பதற்கு

நீ கதி ஆம் நெஞ்சே நினை

#2631

நினைத்து இறைஞ்சி மானிடவர் ஒன்று இரப்பர் என்றே

நினைத்திடவும் வேண்டா நீ நேரே நினைத்து இறைஞ்ச

ஏ அளவர் ஏ இடத்தோர் மாலே அது தானும்

எவ்வளவும் உண்டோ எமக்கு

#2632

எமக்கு யாம் விண் நாட்டுக்கு உச்சமது ஆம் வீட்டை

அமைத்திருந்தோம் அஃது அன்றே ஆம் ஆறு அமை பொலிந்த

மென் தோளி காரணமா வெம் கோட்டு ஏறு ஏழ் உடனே

கொன்றானையே மனத்து கொண்டு

#2633

கொண்டல் தான் மால் வரை தான் மா கடல் தான் கூர் இருள் தான்

வண்டு அறா பூவை தான் மற்றுத்தான் கண்ட நாள்

கார் உருவம் காண்-தோறும் நெஞ்சு ஓடும் கண்ணனார்

பேர் உரு என்று எம்மை பிரிந்து

#2634

பிரிந்து ஒன்று நோக்காது தம்முடைய பின்னே

திரிந்து உழலும் சிந்தனையார்-தம்மை புரிந்து ஒருகால்

ஆஆ என இரங்கார் அந்தோ வலிதே-கொல்

மா வாய் பிளந்தார் மனம்

#2635

மனம் ஆளும் ஓர் ஐவர் வன் குறும்பர்-தம்மை

சினம் மாள்வித்து ஓர் இடத்தே சேர்த்து புனம் மேய

தண் துழாயான் அடியை தாம் காணும் அஃது அன்றே

வண் துழாம் சீரார்க்கு மாண்பு

#2636

மாண் பாவித்து அஞ்ஞான்று மண் இரந்தான் மாயவள் நஞ்சு

ஊண் பாவித்து உண்டானது ஓர் உருவம் காண்பான் நம்

கண் அவா மற்று ஒன்று காண் உறா சீர் பரவாது

உண்ண வாய் தான் உறுமோ ஒன்று

#2637

ஒன்று உண்டு செங்கண்மால் யான் உரைப்பது உன் அடியார்க்கு

என் செய்வன் என்றே இருத்தி நீ நின் புகழில்

வைகும் தம் சிந்தையிலும் மற்று இனிதோ நீ அவர்க்கு

வைகுந்தம் என்று அருளும் வான்

#2638

வானோ மறி கடலோ மாருதமோ தீயகமோ

கானோ ஒருங்கிற்று கண்டிலமால் ஆன் ஈன்ற

கன்று உயர தாம் எறிந்து காய் உதிர்த்தார் தாள் பணிந்தோம்

வன் துயரை ஆஆ மருங்கு

#2639

மருங்கு ஓதம் மோதும் மணி நாக அணையார்

மருங்கே வர அரியரேலும் ஒருங்கே

எமக்கு அவரை காணலாம் எப்பொழுதும் உள்ளால்

மன கவலை தீர்ப்பார் வரவு

#2640

வரவு ஆறு ஒன்று இல்லையால் வாழ்வு இனிதால் எல்லே

ஒரு ஆறு ஒருவன் புகாவாறு உரு மாறும்

ஆயவர் தாம் சேயவர் தாம் அன்று உலகம் தாயவர் தாம்

மாயவர் தாம் காட்டும் வழி

#2641

வழி தங்கு வல்வினையை மாற்றானோ நெஞ்சே

தழீஇக்கொண்டு போர் அவுணன் தன்னை சுழித்து எங்கும்

தாழ்வு இடங்கள் பற்றி புலால் வெள்ளம் தான் உகள

வாழ்வு அடங்க மார்வு இடந்த மால்

#2642

மாலே படி சோதி மாற்றேல் இனி உனது

பாலே போல் சீரில் பழுத்து ஒழிந்தேன் மேலால்

பிறப்பு இன்மை பெற்று அடி கீழ் குற்றேவல் அன்று

மறப்பு இன்மை யான் வேண்டும் மாடு

#2643

மாடே வரப்பெறுவராம் என்றே வல்வினையார்

காடானும் ஆதானும் கைக்கொள்ளார் ஊடே போய்

பேர் ஓதம் சிந்து திரை கண்வளரும் பேராளன்

பேர் ஓத சிந்திக்க பேர்ந்து

#2644

பேர்ந்து ஒன்று நோக்காது பின் நிற்பாய் நில்லாப்பாய்

ஈர்ம் துழாய் மாயனையே என் நெஞ்சே பேர்ந்து எங்கும்

தொல்லை மா வெம் நரகில் சேராமல் காப்பதற்கு

இல்லை காண் மற்றோர் இறை

#2645

இறை முறையான் சேவடி மேல் மண் அளந்த அ நாள்

மறை முறையால் வான் நாடர் கூடி முறைமுறையின்

தாது இலகு பூ தெளித்தால் ஒவ்வாதே தாழ் விசும்பின்

மீது இலகி தான் கிடக்கும் மீன்

#2646

மீன் என்னும் கம்பில் வெறி என்னும் வெள்ளி வேய்

வான் என்னும் கேடு இலா வான் குடைக்கு தான் ஓர்

மணி காம்பு போல் நிமிர்ந்து மண் அளந்தான் நங்கள்

பிணிக்கு ஆம் பெரு மருந்து பின்

#2647

பின் துரக்கும் காற்று இழந்த சூல் கொண்டல் பேர்ந்தும் போய்

வன் திரை-கண் வந்து அணைந்த வாய்மைத்தே அன்று

திரு செய்ய நேமியான் தீ அரக்கி மூக்கும்

பரு செவியும் ஈர்ந்த பரன்

#2648

பரன் ஆம் அவன் ஆதல் பாவிப்பர் ஆகில்

உரனால் ஒரு மூன்று போதும் மரம் ஏழ் அன்று

எய்தானை புள்ளின் வாய் கீண்டானையே அமரர்

கைதான் தொழாவே கலந்து

#2649

கலந்து நலியும் கடும் துயரை நெஞ்சே

மலங்க அடித்து மடிப்பான் விலங்கல் போல்

தொல் மாலை கேசவனை நாரணனை மாதவனை

சொல் மாலை எப்பொழுதும் சூட்டு

#2650

சூட்டாய நேமியான் தொல் அரக்கன் இன் உயிரை

மாட்டே துயர் இழைத்த மாயவனை ஈட்ட

வெறி கொண்ட தண் துழாய் வேதியனை நெஞ்சே

அறி கண்டாய் சொன்னேன் அது

#2651

அதுவோ நன்று என்று அங்கு அமர் உலகோ வேண்டில்

அதுவோ பொருள் இல்லை அன்றே அது ஒழிந்து

மண் நின்று ஆள்வேன் எனிலும் கூடும் மட நெஞ்சே

கண்ணன் தாள் வாழ்த்துவதே கல்

#2652

கல்லும் கனை கடலும் வைகுந்த வான் நாடும்

புல் என்று ஒழிந்தன-கொல் ஏ பாவம் வெல்ல

நெடியான் நிறம் கரியான் உள்புகுந்து நீங்கான்

அடியேனது உள்ளத்து அகம்

#2653

அகம் சிவந்த கண்ணினராய் வல்வினையர் ஆவார்

முகம் சிதைவராம் அன்றே முக்கி மிகும் திருமால்

சீர் கடலை உள் பொதிந்த சிந்தனையேன்-தன்னை

ஆர்க்கு அடல் ஆம் செவ்வே அடர்த்து

#2654

அடர் பொன் முடியானை ஆயிரம் பேரானை

சுடர் கொள் சுடர் ஆழியானை இடர் கடியும்

மாதா பிதாவாக வைத்தேன் எனது உள்ளே

யாது ஆகில் யாதே இனி

#2655

இனி நின்று நின் பெருமை யான் உரைப்பது என்னே

தனி நின்ற சார்வு இலா மூர்த்தி பனி நீர்

அகத்து உலவு செம் சடையான் ஆகத்தான் நான்கு

முகத்தான் நின் உந்தி முதல்

#2656

முதல் ஆம் திருவுருவம் மூன்று அன்பர் ஒன்றே

முதல் ஆகும் மூன்றுக்கும் என்பர் முதல்வா

நிகர் இலகு கார் உருவா நின் அகத்தது அன்றே

புகர் இலகு தாமரையின் பூ

#2657

பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற

காவி மலர் என்றும் காண்-தோறும் பாவியேன்

மெல் ஆவி மெய் மிகவே பூரிக்கும் அவ்வவை

எல்லாம் பிரான் உருவே என்று

#2658

என்றும் ஒரு நாள் ஒழியாமை யான் இரந்தால்

ஒன்றும் இரங்கார் உரு காட்டார் குன்று

குடை ஆக ஆ காத்த கோவலனார் நெஞ்சே

புடை தான் பெரிதே புவி

#2659

புவியும் இரு விசும்பும் நின் அகத்த நீ என்

செவியின் வழி புகுந்து என் உள்ளாய் அவிவு இன்றி

யான் பெரியன் நீ பெரியை என்பதனை யார் அறிவார்

ஊன் பருகு நேமியாய் உள்ளு

#2660

உள்ளிலும் உள்ளம் தடிக்கும் வினை படலம்

விள்ள விழித்து உன்னை மெய் உற்றால் உள்ள

உலகு அளவும் யானும் உளன் ஆவன் என்-கொல்

உலகு அளந்த மூர்த்தி உரை

#2661

உரைக்கில் ஓர் சுற்றத்தார் உற்றார் என்று ஆரே

இரைக்கும் கடல் கிடந்த எந்தாய் உரைப்பு எல்லாம்

நின் அன்றி மற்று இலேன் கண்டாய் எனது உயிர்க்கு ஓர்

சொல் நன்றி ஆகும் துணை

#2662

துணை நாள் பெரும் கிளையும் தொல் குலமும் சுற்றத்து

இணை நாளும் இன்பு உடைத்தாமேலும் கணை நாணில்

ஓவா தொழில் சார்ங்கன் தொல் சீரை நல் நெஞ்சே

ஓவாத ஊணாக உண்

#2663

உள் நாட்டு தேசு அன்றே ஊழ்வினையை அஞ்சுமே

விண் நாட்டை ஒன்று ஆக மெச்சுமே மண் நாட்டில்

ஆர் ஆகி எ இழிவிற்று ஆனாலும் ஆழி அங்கை

பேர் ஆயற்கு ஆள் ஆம் பிறப்பு

#2664

பிறப்பு இறப்பு மூப்பு பிணி துறந்து பின்னும்

இறக்கவும் இன்பு உடைத்தாமேலும் மறப்பு எல்லாம்

ஏதமே என்று அல்லால் எண்ணுவனே மண் அளந்தான்

பாதமே ஏத்தா பகல்

#2665

பகல் இரா என்பதுவும் பாவியாது எம்மை

இகல் செய்து இரு பொழுதும் ஆள்வர் தகவா

தொழும்பர் இவர் சீர்க்கும் துணை இலர் என்று ஓரார்

செழும் பரவை மேயார் தெரிந்து

#2666

தெரிந்துணர்வு ஒன்று இன்மையால் தீவினையேன் வாளா

இருந்து ஒழிந்தேன் கீழ் நாள்கள் எல்லாம் கரந்துருவின்

அம் மானை அந்நான்று பின்தொடர்ந்த ஆழி அங்கை

அம்மானை ஏத்தாது அயர்த்து

#2667

அயர்ப்பாய் அயராப்பாய் நெஞ்சமே சொன்னேன்

உயப்போம் நெறி இதுவே கண்டாய் செயற்பால

அல்லவே செய்கிறுதி நெஞ்சமே அஞ்சினேன்

மல்லர் நாள் வவ்வினனை வாழ்த்து

#2668

வாழ்த்தி அவன் அடியை பூ புனைந்து நின் தலையை

தாழ்த்து இரு கை கூப்பு என்றால் கூப்பாத பாழ்த்த விதி

எங்கு உற்றாய் என்று அவனை ஏத்தாது என் நெஞ்சமே

தங்கத்தான் ஆமேலும் தங்கு

#2669

தங்கா முயற்றியவாய் தாழ் விசும்பின் மீது பாய்ந்து

எங்கே புக்கு எ தவம் செய்திட்டன-கொல் பொங்கு ஓத

தண் அம் பால் வேலைவாய் கண்வளரும் என்னுடைய

கண்ணன்-பால் நல் நிறம் கொள் கார்

#2670

கார் கலந்த மேனியான் கை கலந்த ஆழியான்

பார் கலந்த வல் வயிற்றான் பாம்பு அணையான் சீர் கலந்த

சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையின் ஆழ் துயரை

என் நினைந்து போக்குவர் இப்போது

#2671

இப்போதும் இன்னும் இனி சிறிது நின்றாலும்

எப்போதும் ஈதே சொல் என் நெஞ்சே எப்போதும்

கை கழலா நேமியான் நம் மேல் வினை கடிவான்

மொய் கழலே ஏத்த முயல்

திருமங்கை ஆழ்வார் - திருவெழுக்கூற்றிருக்கை

#2672

ஒரு பேர் உந்தி இரு மலர் தவிசில்

ஒரு முறை அயனை ஈன்றனை ஒரு முறை

இரு சுடர் மீதினில் இயங்கா மு மதிள்

இலங்கை இரு கால் வளைய ஒரு சிலை

ஒன்றிய ஈர் எயிற்று அழல் வாய் வாளியில்

அட்டனை மூவடி நானிலம் வேண்டி

முப்புரி நூலொடு மான் உரி இலங்கு

மார்வினில் இரு பிறப்பு ஒரு மாண் ஆகி

ஒரு முறை ஈர் அடி மூ உலகு அளந்தனை

நால் திசை நடுங்க அம் சிறை பறவை

ஏறி நால் வாய் மு மதத்து இரு செவி

ஒரு தனி வேழத்து அரந்தையை ஒரு நாள்

இரு நீர் மடுவுள் தீர்த்தனை முத்தீ

நான்மறை ஐ வகை வேள்வி அறு தொழில்

அந்தணர் வணங்கும் தன்மையை ஐம்புலன்

அகத்தினுள் செறித்து நான்கு உடன் அடக்கி

மு குணத்து இரண்டு அவை அகற்றி ஒன்றினில்

ஒன்றி நின்று ஆங்கு இரு பிறப்பு அறுப்போர்

அறியும் தன்மையை முக்கண் நால் தோள்

ஐ வாய் அரவோடு ஆறு பொதி சடையோன்

அறிவு அரும் தன்மை பெருமையுள் நின்றனை

ஏழ் உலகு எயிற்றினில் கொண்டனை கூறிய

அறு சுவை பயனும் ஆயினை சுடர்விடும்

ஐம் படை அங்கையுள் அமர்ந்தனை சுந்தர

நால் தோள் முந்நீர் வண்ண நின் ஈர் அடி

ஒன்றிய மனத்தால் ஒரு மதி முகத்து

மங்கையர் இருவரும் மலர் அன அங்கையில்

முப்பொழுதும் வருட அறிதுயில் அமர்ந்தனை

நெறி முறை நால் வகை வருணமும் ஆயினை

மேதகும் ஐம் பெரும் பூதமும் நீயே

அறுபதம் முரலும் கூந்தல் காரணம்

ஏழ் விடை அடங்க செற்றனை

அறு வகை சமயமும் அறிவு அரு நிலையினை

ஐம்பால் ஓதியை ஆகத்து இருத்தினை

அறம் முதல் நான்கு அவை ஆய்

மூர்த்தி மூன்றாய் இரு வகை பயனாய்

ஒன்றாய் விரிந்து நின்றனை குன்றா

மது மலர் சோலை வண் கொடி படப்பை

வரு புனல் பொன்னி மா மணி அலைக்கும்

செந்நெல் ஒண் கழனி திகழ் வனம் உடுத்த

கற்போர் புரிசை கனக மாளிகை

நிமிர் கொடி விசும்பில் இளம் பிறை துவக்கும்

செல்வம் மல்கு தென் திருக்குடந்தை

அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க

ஆடு அரவு அமளியில் அறிதுயில் அமர்ந்த

பரம நின் அடி இணை பணிவன்

வரும் இடர் அகல மாற்றோ வினையே

திருமங்கை ஆழ்வார் - சிறிய திருமடல்

#2673

கார் ஆர் வரை கொங்கை கண் ஆர் கடல் உடுக்கை

சீர் ஆர் சுடர் சுட்டி செங்கலுழி பேர் ஆற்று

பேர் ஆர மார்வில் பெரு மா மழை கூந்தல்

நீர் ஆர வேலி நில மங்கை என்னும் இ

பாரோர் சொலப்பட்ட மூன்று அன்றே அ மூன்றும்

#2674

ஆராயில் தானே அறம் பொருள் இன்பம் என்று

ஆர்ஆர் இவற்றினிடை அதனை எய்துவார்

சீர் ஆர் இரு கலையும் எய்துவர் சிக்கென மற்று

#2675

ஆரானும் உண்டு என்பார் என்பது தான் அதுவும்

ஓராமை அன்றே உலகத்தார் சொல்லும் சொல்

ஓராமை ஆம் ஆறு அது உரைக்கேன் கேளாமே

கார் ஆர் புரவி ஏழ் பூண்ட தனி ஆழி

தேர் ஆர் நிறை கதிரோன் மண்டலத்தை கீண்டு புக்கு

ஆரா அமுதம் அங்கு எய்தி அதில்-நின்றும்

#2676

வாராது ஒழிவது ஒன்று உண்டே அது நிற்க

ஏர் ஆர் முயல் விட்டு காக்கை பின் போவதே

ஏர் ஆர் இள முலையீர் என்தனக்கு உற்றது தான்

#2677

கார் ஆர் குழல் எடுத்து கட்டி கதிர் முலையை

வார் ஆர வீக்கி மணிமேகலை திருத்தி

ஆர்ஆர் அயில் வேல் கண் அஞ்சனத்தின் நீறு அணிந்து

சீர் ஆர் செழும் பந்து கொண்டு அடியா நின்றேன் நான்

நீர் ஆர் கமலம் போல் செங்கண்மால் என்று ஒருவன்

பாரோர்கள் எல்லாம் மகிழ பறை கறங்க

சீர் ஆர் குடம் இரண்டு ஏந்தி செழும் தெருவே

#2678

ஆர்ஆர் என சொல்லி ஆடும் அது கண்டு

ஏர் ஆர் இள முலையார் அன்னையரும் எல்லாரும்

வாராயோ என்றார்க்கு சென்றேன் என் வல்வினையால்

கார் ஆர் மணி நிறமும் கை வளையும் காணேன் நான்

ஆரானும் சொல்லிற்றும் கொள்ளேன் அறிவு அழிந்து

#2679

தீரா உடம்பொடு பேதுறுவேன் கண்டு இரங்கி

ஏர் ஆர் கிளி கிளவி எம் அனை தான் வந்து என்னை

சீர் ஆர் செழும் புழுதி காப்பிட்டு செம் குறிஞ்சி

#2680

தார் ஆர் நறு மாலை சாத்தற்கு தான் பின்னும்

நேராதன ஒன்று நேர்ந்தாள் அதனாலும்

#2681

தீராது என் சிந்தை நோய் தீராது என் பேதுறவு

வாராது மாமை அது கண்டு மற்று ஆங்கே

ஆரானும் மூது அறியும் அம்மனைமார் சொல்லுவார்

பாரோர் சொலப்படும் கட்டுப்படுத்திரேல்

ஆரானும் மெய்ப்படுவன் என்றார் அது கேட்டு

#2682

கார் ஆர் குழல் கொண்டை கட்டுவிச்சி கட்டேறி

சீர் ஆர் சுளகில் சில நெல் பிடித்து எறியா

வேரா விதிர்விதிரா மெய் சிலிரா கை மோவா

பேர் ஆயிரம் உடையான் என்றாள் பெயர்த்தேயும்

#2683

கார் ஆர் திருமேனி காட்டினாள் கையதுவும்

சீர் ஆர் வலம்புரியே என்றாள் திரு துழாய

#2684

தார் ஆர் நறு மாலை கட்டுரைத்தாள் கட்டுரையா

நீர் ஏதும் அஞ்சேல்-மின் நும் மகளை நோய் செய்தான்

ஆரானும் அல்லன் அறிந்தேன் அவனை நான்

கூர் ஆர் வேல் கண்ணீர் உமக்கு அறிய கூறுகெனோ

ஆரால் இ வையம் அடி அளப்புண்டது தான்

ஆரால் இலங்கை பொடி பொடியா வீழ்ந்தது மற்று

ஆராலே கல் மாரி காத்தது தான் ஆழி நீர்

ஆரால் கடைந்திடப்பட்டது அவன் காண்-மின்

#2685

ஊர் ஆநிரை மேய்த்து உலகு எல்லாம் உண்டு உமிழ்ந்தும்

ஆராத தன்மையனாய் ஆங்கு ஒரு நாள் ஆய்ப்பாடி

சீர் ஆர் கலை அல்குல் சீர் அடி செம் துவர் வாய்

வார் ஆர் வன முலையாள் மத்து ஆர பற்றிக்கொண்டு

ஏர் ஆர் இடை நோவ எத்தனையோர் போதும் ஆய்

சீர் ஆர் தயிர் கடைந்து வெண்ணெய் திரண்டதனை

வேர் ஆர் நுதல் மடவாள் வேறு ஓர் கலத்து இட்டு

நார் ஆர் உறி ஏற்றி நன்கு அமைய வைத்ததனை

போர் ஆர் வேல் கண் மடவாள் போந்தனையும் பொய் உறக்கம்

ஓராதவன் போல் உறங்கி அறிவு உற்று

தார் ஆர் தடம் தோள்கள் உள் அளவும் கைம் நீட்டி

ஆராத வெண்ணெய் விழுங்கி அருகு இருந்த

#2686

மோர் ஆர் குடம் உருட்டி முன் கிடந்த தானத்தே

ஓராதவன் போல் கிடந்தானை கண்டு அவளும்

வாரா தான் வைத்தது காணாள் வயிறு அடித்து இங்கு

#2687

ஆர்ஆர் புகுதுவார் ஐயர் இவர் அல்லால்

நீர் ஆம் இது செய்தீர் என்று ஓர் நெடும் கயிற்றால்

ஊரார்கள் எல்லாரும் காண உரலோடே

தீரா வெகுளியளாய் சிக்கென ஆர்த்து அடிப்ப

ஆரா வயிற்றினோடு ஆற்றாதான் அன்றியும்

#2688

நீர் ஆர் நெடும் கயத்தை சென்று அலைக்க நின்று உரப்பி

ஓர் ஆயிரம் பண வெம் கோ இயல் நாகத்தை

வாராய் எனக்கு என்று மற்று அதன் மத்தகத்து

சீர் ஆர் திருவடியால் பாய்ந்தான் தன் சீதைக்கு

#2689

நேர் ஆவன் என்று ஓர் நிசாசரி தான் வந்தாளை

கூர் ஆர்ந்த வாளால் கொடி மூக்கும் காது இரண்டும்

ஈரா விடுத்து அவட்கு மூத்தோனை வெம் நரகம்

#2690

சேரா வகையே சிலை குனித்தான் செந்துவர் வாய்

வார் ஆர் வன முலையால் வைதேவி காரணமா

ஏர் ஆர் தடம் தோள் இராவணனை ஈரைந்து

சீர் ஆர் சிரம் அறுத்து செற்று உகந்த செங்கண்மால்

#2691

போர் ஆர் நெடு வேலோன் பொன் பெயரோன் ஆகத்தை

கூர் ஆர்ந்த வள் உகிரால் கீண்டு குடல் மாலை

#2692

சீர் ஆர் திருமார்பின் மேல் கட்டி செம் குருதி

சோரா கிடந்தானை குங்கும தோள் கொட்டி

ஆரா எழுந்தான் அரி உருவாய் அன்றியும்

#2693

பேர் வாமன் ஆகிய காலத்து மூ அடி மண்

தாராய் எனக்கு என்று வேண்டி சலத்தினால்

நீர் ஏற்று உலகு எல்லாம் நின்று அளந்தான் மாவலியை

ஆராத போரில் அசுரர்களும் தானுமாய்

கார் ஆர் வரை நட்டு நாகம் கயிறு ஆக

பேராமல் தாங்கி கடைந்தான் திரு துழாய்

#2694

தார் ஆர்ந்த மார்வன் தட மால் வரை போலும்

போர் ஆனை பொய்கைவாய் கோட்பட்டு நின்று அலறி

நீர் ஆர் மலர் கமலம் கொண்டு ஓர் நெடும் கையால்

நாராயணா ஓ மணி வண்ணா நாக அணையாய்

வாராய் என் ஆர் இடரை நீக்காய் என வெகுண்டு

#2695

தீராத சீற்றத்தால் சென்று இரண்டு கூறு ஆக

ஈரா அதனை இடர் கடிந்தான் எம்பெருமான்

பேர் ஆயிரம் உடையான் பேய் பெண்டீர் நும் மகளை

தீரா நோய் செய்தான் என உரைத்தாள் சிக்கென மற்று

#2696

ஆரானும் அல்லாமை கேட்டு எங்கள் அம்மனையும்

போர் ஆர் வேல் கண்ணீர் அவன் ஆகில் பூம் துழாய்

தாராது ஒழியுமே தன் அடிச்சி அல்லளே மற்று

ஆரானும் அல்லனே என்று ஒழிந்தாள் நான் அவனை

#2697

கார் ஆர் திருமேனி கண்டதுவே காரணமா

பேரா பிதற்றா திரிதருவன் பின்னையும்

#2698

ஈரா புகுதலும் இ உடலை தண் வாடை

சோரா மறுக்கும் வகை அறியேன் சூழ் குழலார்

#2699

ஆரானும் ஏசுவர் என்னும் அதன் பழியை

வாராமல் காப்பதற்கு வாளா இருந்து ஒழிந்தேன்

வாராய் மட நெஞ்சே வந்து மணி வண்ணன்

#2700

சீர் ஆர் திரு துழாய் மாலை நமக்கு அருளி

தாரான் தரும் என்று இரண்டத்தில் ஒன்று அதனை

ஆரானும் ஒன்னாதார் கேளாமே சொன்ன-கால்

ஆராயுமேலும் பணி கேட்டு அது அன்று எனிலும்

போராது ஒழியாதே போந்திடு நீ என்றேற்கு

கார் ஆர் கடல் வண்ணன் பின் போன நெஞ்சமும்

வாராதே என்னை மறந்தது தான் வல்வினையேன்

#2701

ஊரார் உகப்பதே ஆயினேன் மற்று எனக்கு இங்கு

#2702

ஆராய்வார் இல்லை அழல்வாய் மெழுகு போல்

நீராய் உருகும் என் ஆவி நெடும் கண்கள்

#2703

ஊரார் உறங்கிலும் தான் உறங்கா உத்தமன் தன்

பேர் ஆயினவே பிதற்றுவன் பின்னையும்

#2704

கார் ஆர் கடல் போலும் காமத்தர் ஆயினார்

ஆரே பொல்லாமை அறிவார் அது நிற்க

ஆரானும் ஆதானும் அல்லள் அவள் காணீர்

வார் ஆர் வன முலை வாசவதத்தை என்று

ஆரானும் சொல்லப்படுவாள் அவளும் தன்

#2705

பேராயம் எல்லாம் ஒழிய பெரும் தெருவே

தார் ஆர் தடம் தோள் தளை காலன் பின் போனாள்

ஊரார் இகழ்ந்திடப்பட்டாளே மற்று எனக்கு இங்கு

#2706

ஆரானும் கற்பிப்பார் நாயகரே நான் அவனை

கார் ஆர் திருமேனி காணும் அளவும் போய்

சீர் ஆர் திருவேங்கடமே திருக்கோவ

லூரே மதிள் கச்சி ஊரகமே பேரகமே

பேரா மருது இறுத்தான் வெள்ளறையே வெஃகாவே

பேர் ஆலி தண்கால் நறையூர் திருப்புலியூர்

ஆராமம் சூழ்ந்த அரங்கம் கணமங்கை

#2707

கார் ஆர் மணி நிற கண்ணனூர் விண்ணகரம்

சீர் ஆர் கணபுரம் சேறை திருவழுந்தூர்

கார் ஆர் குடந்தை கடிகை கடல்மல்லை

ஏர் ஆர் பொழில் சூழ் இடவெந்தை நீர்மலை

சீர் ஆரும் மாலிருஞ்சோலை திருமோகூர்

#2708

பாரோர் புகழும் வதரி வடமதுரை

ஊர் ஆய எல்லாம் ஒழியாமே நான் அவனை

ஓர் ஆனை கொம்பு ஒசித்து ஓர் ஆனை கோள்விடுத்த

சீரானை செம் கண் நெடியானை தேன் துழாய்

தாரானை தாமரை போல் கண்ணானை எண் அரும் சீர்

#2709

பேர் ஆயிரமும் பிதற்றி பெரும் தெருவே

#2710

ஊரார் இகழிலும் ஊராது ஒழியேன் நான்

வார் ஆர் பூம் பெண்ணை மடல்

திருமங்கை ஆழ்வார் - பெரிய திருமடல்

#2711

மன்னிய பல் பொறி சேர் ஆயிர வாய் வாள் அரவின்

சென்னி மணி குடுமி தெய்வ சுடர் நடுவுள்

மன்னி அ நாகத்து அணை மேல் ஓர் மா மலை போல்

மின்னும் மணி மகர குண்டலங்கள் வில் வீச

துன்னிய தாரகையின் பேர் ஒளி சேர் ஆகாசம்

என்னும் விதானத்தின் கீழால் இரு சுடரை

#2712

மன்னும் விளக்கு ஆக ஏற்றி மறி கடலும்

பன்னு திரை கவரி வீச நில மங்கை

#2713

தன்னை முன நாள் அளவிட்ட தாமரை போல்

மன்னிய சேவடியை வான் இயங்கு தாரகை மீன்

என்னும் மலர் பிணையல் ஏய்ந்த மழை கூந்தல்

#2714

தென்னன் உயர் பொருப்பும் தெய்வ வடமலையும்

என்னும் இவையே முலையா வடிவு அமைந்த

அன்ன நடைய அணங்கே அடி இணையை

#2715

தன்னுடைய அங்கைகளால் தான் தடவ தான் கிடந்து ஓர்

உன்னிய யோகத்து உறக்கம் தலைக்கொண்ட

பின்னை தன் நாபி வலயத்து பேர் ஒளி சேர்

மன்னிய தாமரை மா மலர் பூத்து அம் மலர் மேல்

முன்னம் திசைமுகனை தான் படைக்க மற்று அவனும்

முன்னம் படைத்தனன் நான்மறைகள் அ மறை தான்

#2716

மன்னும் அறம் பொருள் இன்பம் வீடு என்று உலகில்

நல் நெறி மேம்பட்டன நான்கு அன்றே நான்கினிலும்

#2717

பின்னையது பின்னை பெயர்தரும் என்பது ஓர்

தொல் நெறியை வேண்டுவார் வீழ் கனியும் ஊழ் இலையும்

என்னும் இவையே நுகர்ந்து உடலம் தாம் வருந்தி

துன்னும் இலை குரம்பை துஞ்சியும் வெம் சுடரோன்

#2718

மன்னும் அழல் நுகர்ந்தும் வண் தடத்தினுள் கிடந்தும்

இன்னது ஓர் தன்மையராய் ஈங்கு உடலம் விட்டு எழுந்து

தொல் நெறி-கண் சென்றார் எனப்படும் சொல் அல்லால்

இன்னது ஓர் காலத்து இனையார் இது பெற்றார்

என்னவும் கேட்டு அறிவது இல்லை உளது என்னில்

#2719

மன்னும் கடும் கதிரோன் மண்டலத்தின் நல் நடுவுள்

அன்னது ஓர் இல்லியின் ஊடு போய் வீடு என்னும்

#2720

தொல் நெறி-கண் சென்றாரை சொல்லு-மின்கள் சொல்லாதே

அன்னதே பேசும் அறிவு இல் சிறு மனத்து ஆங்கு

அன்னவரை கற்பிப்போம் யாமே அது நிற்க

#2721

முன்னம் நான் சொன்ன அறத்தின் வழி முயன்ற

அன்னவர் தாம் கண்டீர்கள் ஆயிர கண் வானவர் கோன்

பொன் நகரம் புக்கு அமரர் போற்றி செப்ப பொங்கு ஒளி சேர்

#2722

கொல் நவிலும் கோல் அரிமா தான் சுமந்த கோலம் சேர்

மன்னிய சிங்காசனத்தின் மேல் வாள் நெடும் கண்

#2723

கன்னியரால் இட்ட கவரி பொதி அவிழ்ந்து ஆங்கு

இன் இளம் பூம் தென்றல் இயங்க மருங்கு இருந்த

#2724

மின் அனைய நுண் மருங்குல் மெல் இயலார் வெண் முறுவல்

முன்னம் முகிழ்த்த முகிழ் நிலா வந்து அரும்ப

அன்னவர்-தம் மான் நோக்கம் உண்டு ஆங்கு அணி மலர் சேர்

பொன் இயல் கற்பகத்தின் காடு உடுத்த மாடு எல்லாம்

மன்னிய மந்தாரம் பூத்த மது திவலை

இன் இசை வண்டு அமரும் சோலைவாய் மாலை சேர்

மன்னிய மா மயில் போல் கூந்தல் மழை தடம் கண்

#2725

மின் இடையாரோடும் விளையாடி வேண்டு இடத்து

மன்னும் மணி தலத்து மாணிக்க மஞ்சரியின்

மின்னின் ஒளி சேர் பளிங்கு விளிம்பு அடுத்த

மன்னும் பவள கால் செம்பொன் செய் மண்டபத்துள்

அன்ன நடைய அரம்பையர் தம் கை வளர்த்த

இன் இசை யாழ் பாடல் கேட்டு இன்புற்று இரு விசும்பில்

#2726

மன்னும் மழை தவழும் வாள் நிலா நீள் மதி தோய்

மின்னின் ஒளி சேர் விசும்பு ஊரும் மாளிகை மேல்

மன்னும் மணி விளக்கை மாட்டி மழை கண்ணார்

#2727

பன்னு விசித்திரமா பாப்படுத்த பள்ளி மேல்

துன்னிய சாலேகம் சூழ் கதவம் தாள் திறப்ப

அன்னம் உழக்க நெரிந்து உக்க வாள் நீல

சின்ன நறும் தாது சூடி ஓர் மந்தாரம்

#2728

துன்னு நறு மலரால் தோள் கொட்டி கற்பகத்தின்

மன்னு மலர்வாய் மணி வண்டு பின்தொடர

இன் இளம் பூம் தென்றல் புகுந்து ஈங்கு இள முலை மேல்

நல் நறும் சந்தன சேறு உலர்த்த தாங்கு அரும் சீர்

#2729

மின் இடைமேல் கை வைத்து இருந்து ஏந்து இள முலை மேல்

பொன் அரும்பு ஆரம் புலம்ப அகம் குழைந்து ஆங்கு

#2730

இன்ன உருவின் இமையா தடம் கண்ணார்

அன்னவர்-தம் மான் நோக்கம் உண்டு ஆங்கு அணி முறுவல்

இன் அமுதம் மாந்தி இருப்பர் இது அன்றே

#2731

அன்ன அறத்தின் பயன் ஆவது ஒண் பொருளும்

அன்ன திறத்ததே ஆதலால் காமத்தின்

#2732

மன்னும் வழிமுறையே நிற்றும் நாம் மான் நோக்கின்

அன்ன நடையார் அலர் ஏச ஆடவர் மேல்

மன்னும் மடல் ஊரார் என்பது ஓர் வாசகமும்

தென் உரையில் கேட்டு அறிவது உண்டு

அதனை யாம் தெளியோம்

#2733

மன்னும் வடநெறியே வேண்டினோம் வேண்டாதார்

தென்னன் பொதியில் செழும் சந்தன குழம்பின்

அன்னது ஓர் தன்மை அறியாதார் ஆயன் வேய்

#2734

இன் இசை ஓசைக்கு இரங்காதார் மால் விடையின்

மன்னும் மணி புலம்ப வாடாதார் பெண்ணை மேல்

#2735

பின்னும் அ அன்றில் பெடை வாய் சிறு குரலுக்கு

உன்னி உடல் உருகி நையாதார் உம்பர்வாய்

#2736

துன்னும் மதி உகுத்த தூ நிலா நீள் நெருப்பில்

தம் உடலம் வேவ தளராதார் காமவேள்

#2737

மன்னும் சிலைவாய் மலர் வாளி கோத்து எய்ய

பொன் நெடு வீதி புகாதார் தம் பூ அணை மேல்

#2738

சின்ன மலர் குழலும் அல்குலும் மென் முலையும்

இன் இளவாடை தடவ தாம் கண் துயிலும்

பொன் அனையார் பின்னும் திரு உறுக போர் வேந்தன்

#2739

தன்னுடைய தாதை பணியால் அரசு ஒழிந்து

பொன் நகரம் பின்னே புலம்ப வலம்கொண்டு

மன்னும் வள நாடு கைவிட்டு மாதிரங்கள்

#2740

மின் உருவில் விண் தேர் திரிந்து வெளிப்பட்டு

கல் நிரைந்து தீய்ந்து கழை உடைந்து கால் சுழன்று

பின்னும் திரை வயிற்று பேயே திரிந்து உலவா

கொல் நவிலும் வெம் கானத்தூடு கொடும் கதிரோன்

#2741

துன்னு வெயில் வறுத்த வெம் பரல் மேல் பஞ்சு அடியால்

மன்னன் இராமன் பின் வைதேவி என்று உரைக்கும்

அன்ன நடைய அணங்கு நடந்திலளே

#2742

பின்னும் கரு நெடும் கண் செ வாய் பிணை நோக்கின்

மின் அனைய நுண் மருங்குல் வேகவதி என்று உரைக்கும்

கன்னி-தன் இன் உயிராம் காதலனை காணாது

தன்னுடைய முன் தோன்றல் கொண்டு ஏக தான் சென்று ஆங்கு

அன்னவனை நோக்காது அழித்து உரப்பி வாள் அமருள்

#2743

கல் நவில் தோள் காளையை கைப்பிடித்து மீண்டும் போய்

பொன் நவிலும் ஆகம் புணர்ந்திலளே பூம் கங்கை

#2744

முன்னம் புனல் பரக்கும் நல் நாடன் மின் ஆடும்

கொல் நவிலும் நீள் வேல் குருக்கள் குல மதலை

தன் நிகர் ஒன்று இல்லாத வெற்றி தனஞ்சயனை

பன்னாகராயன் மட பாவை பாவை-தன்

#2745

மன்னிய நாண் அச்சம் மடம் என்று இவை அகல

தன்னுடைய கொங்கை முகம் நெரிய தான் அவன்-தன்

#2746

பொன் வரை ஆகம் தழீஇ கொண்டு போய் தனது

நல் நகரம் புக்கு நயந்து இனிது வாழ்ந்ததுவும்

முன் உரையில் கேட்டு அறிவது இல்லையே சூழ் கடலுள்

#2747

பொன் நகரம் செற்ற புரந்தரனோடு ஏர் ஒக்கும்

மன்னவன் வாணன் அவுணர்க்கு வாள் வேந்தன்

தன்னுடைய பாவை உலகத்து தன் ஒக்கும்

கன்னியரை இல்லாத காட்சியாள் தன்னுடைய

#2748

இன் உயிர் தோழியால் எம் பெருமான் ஈன் துழாய்

மன்னு மணி வரை தோள் மாயவன் பாவியேன்

#2749

என்னை இது விளைத்த ஈரிரண்டு மால் வரை தோள்

மன்னவன் தன் காதலனை மாயத்தால் கொண்டுபோய்

கன்னி தன்-பால் வைக்க மற்றவனோடு எத்தனை ஓர்

மன்னிய பேர் இன்பம் எய்தினாள் மற்று இவை தான்

#2750

என்னாலே கேட்டீரே ஏழைகாள் என் உரைக்கேன்

மன்னு மலை அரையன் பொன் பாவை வாள் நிலா

#2751

மின்னும் அணி முறுவல் செ வாய் உமை என்னும்

அன்ன நடைய அணங்கு நுடங்கு இடை சேர்

பொன் உடம்பு வாட புலன் ஐந்தும் நொந்து அகல

தன்னுடைய கூழை சடாபாரம் தான் தரித்து ஆங்கு

அன்ன அரும் தவத்தின் ஊடு போய் ஆயிரம் தோள்

#2752

மன்னு கரதலங்கள் மட்டித்து மாதிரங்கள்

மின்னி எரி வீச மேல் எடுத்த சூழ் கழல் கால்

பொன் உலகம் ஏழும் கடந்து உம்பர் மேல் சிலும்ப

மன்னு குல வரையும் மாருதமும் தாரகையும்

தன்னின் உடனே சுழல சுழன்று ஆடும்

கொல் நவிலும் மூவிலை வேல் கூத்தன் பொடி ஆடி

அன்னவன் தன் பொன் அகலம் சென்று ஆங்கு அணைந்திலளே

பன்னி உரைக்கும்-கால் பாரதம் ஆம் பாவியேற்கு

#2753

என் உறு நோய் யான் உரைப்ப கேள்-மின் இரும் பொழில் சூழ்

மன்னும் மறையோர் திருநறையூர் மா மலை போல்

பொன் இயலும் மாட கவாடம் கடந்து புக்கு

என்னுடைய கண் களிப்ப நோக்கினேன் நோக்குதலும்

#2754

மன்னன் திருமார்பும் வாயும் அடி இணையும்

பன்னு கரதலமும் கண்களும் பங்கயத்தின்

#2755

பொன் இயல் காடு ஓர் மணி வரை மேல் பூத்தது போல்

மின்னி ஒளி படைப்ப வீழ் நாணும் தோள் வளையும்

மன்னிய குண்டலமும் ஆரமும் நீள் முடியும்

துன்னு வெயில் விரித்த சூளாமணி இமைப்ப

மன்னு மரகத குன்றின் மருங்கே ஓர்

இன் இள வஞ்சி கொடி ஒன்று நின்றதுதான்

#2756

அன்னமாய் மானாய் அணி மயிலாய் ஆங்கு இடையே

மின்னாய் இள வேய் இரண்டாய் இணை செப்பாய்

முன் ஆய தொண்டையாய் கெண்டை குலம் இரண்டாய்

அன்ன திருவுருவம் நின்றது அறியாதே

என்னுடைய நெஞ்சும் அறிவும் இன வளையும்

பொன் இயலும் மேகலையும் ஆங்கு ஒழிய போந்தேற்கு

மன்னு மறி கடலும் ஆர்க்கும் மதி உகுத்த

#2757

இன் நிலாவின் கதிரும் என்தனக்கே வெய்து ஆகும்

தன்னுடைய தன்மை தவிர தான் என்-கொலோ

தென்னன் பொதியில் செழும் சந்தின் தாது அளைந்து

மன் இ உலகை மனம் களிப்ப வந்து இயங்கும்

இன் இளம் பூம் தென்றலும் வீசும் எரி எனக்கே

முன்னிய பெண்ணை மேல் முள் முளரி கூட்டகத்து

பின்னும் அ அன்றில் பெடை வாய் சிறு குரலும்

என்னுடைய நெஞ்சுக்கு ஓர் ஈர் வாளாம் என் செய்கேன்

கல் நவில் தோள் காமன் கருப்பு சிலை வளைய

கொல் நவிலும் பூம் கணைகள் கோத்து பொத அணைந்து

தன்னுடைய தோள் கழிய வாங்கி தமியேன் மேல்

#2758

என்னுடைய நெஞ்சே இலக்காக எய்கின்றான்

பின் இதனை காப்பீர் தாம் இல்லையே பேதையேன்

#2759

கல் நவிலும் காட்டகத்து ஓர் வல்லி கடி மலரின்

நல் நறு வாசம் மற்று ஆரானும் எய்தாமே

மன்னும் வறு நிலத்து வாளாங்கு உகுத்தது போல்

என்னுடைய பெண்மையும் என் நலனும் என் முலையும்

மன்னும் மலர் மங்கை மைந்தன் கணபுரத்து

#2760

பொன் மலை போல் நின்றவன் தன் பொன் அகலம் தோயாவேல்

என் இவைதான் வாளா எனக்கே பொறை ஆகி

முன் இருந்து மூக்கின்று மூவாமை காப்பது ஓர்

மன்னும் மருந்து அறிவீர் இல்லையே மால் விடையின்

#2761

துன்னு பிடர் எருத்து தூக்குண்டு வன் தொடரால்

கன்னியர் கண் மிளிர கட்டுண்டு மாலைவாய்

#2762

தன்னுடைய நா ஒழியாது ஆடும் தனி மணியின்

இன் இசை ஓசையும் வந்து என் செவி தனக்கே

கொல் நவிலும் எஃகில் கொடிதாய் நெடிது ஆகும்

என் இதனை காக்குமா சொல்லீர் இது விளைத்த

#2763

மன்னன் நறும் துழாய் வாழ் மார்பன் மா மதிகோள்

முன்னம் விடுத்த முகில் வண்ணன் காயாவின்

#2764

சின்ன நறும் பூம் திகழ் வண்ணன் வண்ணம் போல்

அன்ன கடலை மலை இட்டு அணை கட்டி

மன்னன் இராவணனை மா மண்டு வெம் சமத்து

பொன் முடிகள் பத்தும் புரள சரம் துரந்து

தென் உலகம் ஏற்றுவித்த சேவகனை ஆயிரம் கண்

#2765

மன்னவன் வானமும் வானவர் தம் பொன் உலகும்

தன்னுடைய தோள் வலியால் கைக்கொண்ட தானவனை

பின் ஓர் அரி உருவம் ஆகி எரி விழித்து

கொல் நவிலும் வெம் சமத்து கொல்லாதே வல்லாளன்

#2766

மன்னு மணி குஞ்சி பற்றி வர ஈர்த்து

தன்னுடைய தாள் மேல் கிடாத்தி அவனுடைய

#2767

பொன் அகலம் வள் உகிரால் போழ்ந்து புகழ்படைத்த

மின் இலங்கு ஆழி படை தட கை வீரனை

மன்னு இ அகல் இடத்தை மா முது நீர் தான் விழுங்க

பின்னும் ஓர் ஏனமாய் புக்கு வளை மருப்பில்

கொல் நவிலும் கூர் நுதி வேல் வைத்து எடுத்த கூத்தனை

மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால்

மின்னும் இரு சுடரும் விண்ணும் பிறங்கு ஒளியும்

தன்னினுடனே சுழல மலை திரித்து ஆங்கு

இன் அமுதம் வானவரை ஊட்டி அவருடைய

மன்னும் துயர் கடிந்த வள்ளலை மற்று அன்றியும்

#2768

தன் உருவம் ஆரும் அறியாமல் தான் அங்கு ஓர்

மன்னும் குறள் உருவில் மாணியாய் மாவலி-தன்

#2769

பொன் இயலும் வேள்வி-கண் புக்கு இருந்து போர் வேந்தர்

மன்னை மனம் கொள்ள வஞ்சித்து நெஞ்சு உருக்கி

என்னுடைய பாதத்தால் யான் அளப்ப மூ அடி மண்

மன்னா தருக என்று வாய் திறப்ப மற்று அவனும்

#2770

என்னால் தரப்பட்டது என்றலுமே அத்துணை-கண்

மின் ஆர் மணி முடி போய் விண் தடவ மேல் எடுத்த

#2771

பொன் ஆர் கனை கழல் கால் ஏழ் உலகும் போய் கடந்து அங்கு

ஒன்றா அசுரர் துளங்க செல நீட்டி

மன் இ அகல் இடத்தை மாவலியை வஞ்சித்து

தன் உலகம் ஆக்குவித்த தாளனை தாமரை மேல்

#2772

மின் இடையாள் நாயகனை விண் நகருள் பொன் மலையை

பொன்னி மணி கொழிக்கும் பூம் குடந்தை போர் விடையை

தென்னன் குறுங்குடியுள் செம் பவள குன்றினை

மன்னிய தண் சேறை வள்ளலை மா மலர் மேல்

#2773

அன்னம் துயிலும் அணி நீர் வயல் ஆலி

என்னுடைய இன் அமுதை எவ்வுள் பெரு மலையை

கன்னி மதிள் சூழ் கணமங்கை கற்பகத்தை

மின்னை இரு சுடரை வெள்ளறையுள் கல் அறை மேல்

பொன்னை மரகதத்தை புட்குழி எம் போர் ஏற்றை

மன்னும் அரங்கத்து எம் மா மணியை வல்லவாழ்

#2774

பின்னை மணாளனை பேரில் பிறப்பிலியை

தொல் நீர் கடல் கிடந்த தோளா மணி சுடரை

என் மனத்து மாலை இடவெந்தை ஈசனை

மன்னும் கடல்மல்லை மாயவனை வானவர்-தம்

#2775

சென்னி மணி சுடரை தண்கால் திறல் வலியை

தன்னை பிறர் அறியா தத்துவத்தை முத்தினை

அன்னத்தை மீனை அரியை அரு மறையை

முன் இ உலகு உண்ட மூர்த்தியை கோவலூர்

#2776

மன்னும் இடைகழி எம் மாயவனை பேய் அலற

பின்னும் முலை உண்ட பிள்ளையை அள்ளல்வாய்

#2777

அன்னம் இரை தேர் அழுந்தூர் எழும் சுடரை

தென் தில்லை சித்திரகூடத்து என் செல்வனை

#2778

மின்னி மழை தவழும் வேங்கடத்து எம் வித்தகனை

மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை

கொல் நவிலும் ஆழி படையானை கோட்டியூர்

#2779

அன்ன உருவின் அரியை திருமெய்யத்து

இன் அமுத வெள்ளத்தை இந்தளூர் அந்தணனை

மன்னு மதிள் கச்சி வேளுக்கை ஆள் அரியை

மன்னிய பாடகத்து எம் மைந்தனை வெஃகாவில்

#2780

உன்னிய யோகத்து உறக்கத்தை ஊரகத்துள்

அன்னவனை அட்ட புயகரத்து எம்மான் ஏற்றை

என்னை மனம் கவர்ந்த ஈசனை வானவர்-தம்

#2781

முன்னவனை மூழிக்களத்து விளக்கினை

அன்னவனை ஆதனூர் ஆண்டு அளக்கும் ஐயனை

நென்னலை இன்றினை நாளையை நீர்மலை மேல்

#2782

மன்னும் மறை நான்கும் ஆனானை புல்லாணி

தென்னன் தமிழை வடமொழியை நாங்கூரில்

#2783

மன்னும் மணிமாடக்கோயில் மணாளனை

நல் நீர் தலைச்சங்க நாள்மதியை நான் வணங்கும்

#2784

கண்ணனை கண்ணபுரத்தானை தென் நறையூர்

மன்னும் மணிமாடக்கோயில் மணாளனை

கல் நவில் தோள் காளையை கண்டு ஆங்கு கைதொழுது

என் நிலைமை எல்லாம் அறிவித்தால் எம் பெருமான்

தன் அருளும் ஆகமும் தாரானேல் தன்னை நான்

#2785

மின் இடையார் சேரியிலும் வேதியர்கள் வாழ்விடத்தும்

தன் அடியார் முன்பும் தரணி முழுது ஆளும்

கொல் நவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும்

தன் நிலைமை எல்லாம் அறிவிப்பன் தான் முன நாள்

#2786

மின் இடை ஆய்ச்சியர் தம் சேரி களவின்-கண்

துன்னு படல் திறந்து புக்கு தயிர் வெண்ணெய்

#2787

தன் வயிறார விழுங்க கொழும் கயல் கண்

மன்னு மடவோர்கள் பற்றி ஓர் வான் கயிற்றால்

பின்னும் உரலோடு கட்டுண்ட பெற்றிமையும்

அன்னது ஓர் பூதமாய் ஆயர் விழவின்-கண்

துன்னு சகடத்தால் புக்க பெரும் சோற்றை

முன் இருந்து முற்ற தான் துற்றிய தெற்றெனவும்

மன்னர் பெரும் சவையுள் வாழ் வேந்தர் தூதனாய்

தன்னை இகழ்ந்து உரைப்ப தான் முன நாள் சென்றதுவும்

மன்னு பறை கறங்க மங்கையர்-தம் கண் களிப்ப

கொல் நவிலும் கூத்தனாய் பேர்த்தும் குடம் ஆடி

என் இவன் என்னப்படுகின்ற ஈடறவும்

தென் இலங்கையாட்டி அரக்கர் குல பாவை

மன்னன் இராவணன் தன் நல் தங்கை வாள் எயிற்று

#2788

துன்னு சுடு சினத்து சூர்ப்பணகா சோர்வு எய்தி

பொன் நிறம் கொண்டு புலர்ந்து எழுந்த காமத்தால்

தன்னை நயந்தாளை தான் முனிந்து மூக்கு அரிந்து

மன்னிய திண்ணெனவும் வாய்ந்த மலை போலும்

தன் நிகர் ஒன்று இல்லாத தாடகையை மா முனிக்கா

#2789

தென் உலகம் ஏற்றுவித்த திண் திறலும் மற்று இவைதான்

#2790

உன்னி உலவா உலகு அறிய ஊர்வன நான்

முன்னி முளைத்து எழுந்து ஓங்கி ஒளி பரந்த

மன்னிய பூம் பெண்ணை மடல்

திருவரங்கத்து அமுதனார் - இராமானுச நூற்றந்தாதி

#2791

பூ மன்னு மாது பொருந்திய மார்பன் புகழ் மலிந்த

பா மன்னு மாறன் அடிபணிந்து உய்ந்தவன் பல் கலையோர்

தாம் மன்ன வந்த இராமானுசன் சரணாரவிந்தம்

நாம் மன்னி வாழ நெஞ்சே சொல்லுவோம் அவன் நாமங்களே

#2792

கள் ஆர் பொழில் தென் அரங்கன் கமல பதங்கள் நெஞ்சில்

கொள்ளா மனிசரை நீங்கி குறையல் பிரான் அடி கீழ்

விள்ளாத அன்பன் இராமாநுசன் மிக்க சீலம் அல்லால்

உள்ளாது என் நெஞ்சு ஒன்று அறியேன் எனக்கு உற்ற பேர் இயல்வே

#2793

பேர் இயல் நெஞ்சே அடிபணிந்தேன் உன்னை பேய் பிறவி

பூரியரோடு உள்ள சுற்றம் புலர்த்தி பொருவு அரும் சீர்

ஆரியன் செம்மை இராமாநுசமுனிக்கு அன்பு செய்யும்

சீரிய பேறு உடையார் அடி கீழ் என்னை சேர்த்ததற்கே

#2794

என்னை புவியில் ஒரு பொருள் ஆக்கி மருள் சுரந்த

முன்னை பழவினை வேர் அறுத்து ஊழி முதல்வனையே

பன்ன பணித்த இராமாநுசன் பரன் பாதமும் என்

சென்னி தரிக்க வைத்தான் எனக்கு ஏதும் சிதைவு இல்லையே

#2795

எனக்கு உற்ற செல்வம் இராமாநுசன் என்று இசையகில்லா

மன குற்ற மாந்தர் பழிக்கில் புகழ் அவன் மன்னிய சீர்

தனக்கு உற்ற அன்பர் அவன் திருநாமங்கள் சாற்றும் என் பா

இன குற்றம் காணகில்லார் பத்தி ஏய்ந்த இயல் இது என்றே

#2796

இயலும் பொருளும் இசைய தொடுத்து ஈன் கவிகள் அன்பால்

மயல் கொண்டு வாழ்த்தும் இராமாநுசனை மதி இன்மையால்

பயிலும் கவிகளில் பத்தி இல்லாத என் பாவி நெஞ்சால்

முயல்கின்றனன் அவன் தன் பெரும் கீர்த்தி மொழிந்திடவே

#2797

மொழியை கடக்கும் பெரும் புகழான் வஞ்ச முக்குறும்பு ஆம்

குழியை கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண் கூடிய பின்

பழியை கடத்தும் இராமாநுசன் புகழ் பாடி அல்லா

வழியை கடத்தல் எனக்கு இனியாதும் வருத்தம் அன்றே

#2798

வருத்தும் புற இருள் மாற்ற எம் பொய்கை பிரான் மறையின்

குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்ற

திரித்து அன்று எரித்த திருவிளக்கை தன் திருவுளத்தே

இருத்தும் பரமன் இராமாநுசன் எம் இறையவனே

#2799

இறைவனை காணும் இதயத்து இருள் கெட ஞானம் என்னும்

நிறை விளக்கு ஏற்றிய பூத திருவடி தாள்கள் நெஞ்சத்து

உறைய வைத்து ஆளும் இராமாநுசன் புகழ் ஓதும் நல்லோர்

மறையினை காத்து இந்த மண்ணகத்தே மன்ன வைப்பவரே

#2800

மன்னிய பேர் இருள் மாண்ட பின் கோவலுள் மா மலராள்

தன்னொடும் ஆயனை கண்டமை காட்டும் தமிழ் தலைவன்

பொன் அடி போற்றும் இராமாநுசற்கு அன்பு பூண்டவர் தாள்

சென்னியில் சூடும் திருவுடையார் என்றும் சீரியரே

#2801

சீரிய நான்மறை செம்பொருள் செந்தமிழால் அளித்த

பார் இயலும் புகழ பாண்பெருமாள் சரண் ஆம் பதும

தார் இயல் சென்னி இராமாநுசன்-தன்னை சார்ந்தவர்-தம்

கார் இயல் வண்மை என்னால் சொல்லொணாது இ கடல் இடத்தே

#2802

இடம் கொண்ட கீர்த்தி மழிசைக்கு இறைவன் இணை அடிப்போது

அடங்கும் இதயத்து இராமானுசன் அம் பொன் பாதம் என்றும்

கடம் கொண்டு இறைஞ்சும் திரு முனிவர்க்கு அன்றி காதல்செய்யா

திடம் கொண்ட ஞானியர்க்கே அடியேன் அன்பு செய்வதுவே

#2803

செய்யும் பசும் துளப தொழில் மாலையும் செந்தமிழில்

பெய்யும் மறை தமிழ் மாலையும் பேராத சீர் அரங்கத்து

ஐயன் கழற்கு அணியும் பரன் தாள் அன்றி ஆதரியா

மெய்யன் இராமானுசன் சரணே கதி வேறு எனக்கே

#2804

கதிக்கு பதறி வெம் கானமும் கல்லும் கடலும் எல்லாம்

கொதிக்க தவம் செய்யும் கொள்கை அற்றேன் கொல்லி காவலன் சொல்

பதிக்கும் கலை கவி பாடும் பெரியவர் பாதங்களே

துதிக்கும் பரமன் இராமானுசன் என்னை சோர்விலனே

#2805

சோராத காதல் பெரும் சுழிப்பால் தொல்லை மாலை ஒன்றும்

பாராது அவனை பல்லாண்டு என்று காப்பிடும் பான்மையன் தாள்

பேராத உள்ளத்து இராமாநுசன் தன் பிறங்கிய சீர்

சாரா மனிசரை சேரேன் எனக்கு என்ன தாழ்வு இனியே

#2806

தாழ்வு ஒன்று இல்லா மறை தாழ்ந்து தலம் முழுதும் கலியே

ஆள்கின்ற நாள் வந்து அளித்தவன் காண்-மின் அரங்கர் மௌலி

சூழ்கின்ற மாலையை சூடி கொடுத்தவள் தொல் அருளால்

வாழ்கின்ற வள்ளல் இராமாநுசன் என்னும் மா முனியே

#2807

முனியார் துயரங்கள் முந்திலும் இன்பங்கள் மொய்த்திடினும்

கனியார் மனம் கண்ணமங்கை நின்றானை கலை பரவும்

தனி ஆனையை தண் தமிழ் செய்த நீலன் தனக்கு உலகில்

இனியானை எங்கள் இராமாநுசனை வந்து எய்தினரே

#2808

எய்தற்கு அரிய மறைகளை ஆயிரம் இன் தமிழால்

செய்தற்கு உலகில் வரும் சடகோபனை சிந்தையுள்ளே

பெய்தற்கு இசையும் பெரியவர் சீரை உயிர்கள் எல்லாம்

உய்தற்கு உதவும் இராமாநுசன் எம் உறுதுணையே

#2809

உறு பெரும் செல்வமும் தந்தையும் தாயும் உயர் குருவும்

வெறி தரு பூ மகள் நாதனும் மாறன் விளங்கிய சீர்

நெறி தரும் செந்தமிழ் ஆரணமே என்று இ நீள் நிலத்தோர்

அறிதர நின்ற இராமாநுசன் எனக்கு ஆர் அமுதே

#2810

ஆர பொழில் தென் குருகை பிரான் அமுத திருவாய்

ஈர தமிழின் இசை உணர்ந்தோர்கட்கு இனியவர் தம்

சீரை பயின்று உய்யும் சீலம்கொள் நாதமுனியை நெஞ்சால்

வாரி பருகும் இராமாநுசன் என்தன் மா நிதியே

#2811

நிதியை பொழியும் முகில் என்று நீசர் தம் வாசல் பற்றி

துதி கற்று உலகில் துவள்கின்றிலேன் இனி தூய் நெறி சேர்

எதிகட்கு இறைவன் யமுனை துறைவன் இணை அடியாம்

கதி பெற்றுடைய இராமாநுசன் என்னை காத்தனனே

#2812

கார்த்திகையானும் கரிமுகத்தானும் கனலும் முக்கண்

மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு மூ உலகும்

பூத்தவனே என்று போற்றிட வாணன் பிழை பொறுத்த

தீர்த்தனை ஏத்தும் இராமாநுசன் என்தன் சேம வைப்பே

#2813

வைப்பு ஆய வான் பொருள் என்று நல் அன்பர் மனத்தகத்தே

எப்போதும் வைக்கும் இராமாநுசனை இரு நிலத்தில்

ஒப்பார் இலாத உறு வினையேன் வஞ்ச நெஞ்சில் வைத்து

முப்போதும் வாழ்த்துவன் என் ஆம் இது அவன் மொய் புகழ்க்கே

#2814

மொய்த்த வெம் தீவினையால் பல் உடல்-தொறும் மூத்து அதனால்

எய்த்து ஒழிந்தேன் முனை நாள்கள் எல்லாம் இன்று கண்டு உயர்ந்தேன்

பொய் தவம் போற்றும் புலை சமயங்கள் நிலத்து அவிய

கைத்த மெய்ஞ்ஞானத்து இராமாநுசன் என்னும் கார் தன்னையே

#2815

கார் ஏய் கருணை இராமாநுச இ கடலிடத்தில்

ஆரே அறிபவர் நின் அருளின் தன்மை அல்லலுக்கு

நேரே உறைவிடம் நான் வந்து நீ என்னை உய்த்த பின் உன்

சீரே உயிர்க்கு உயிராய் அடியேற்கு இன்று தித்திக்குமே

#2816

திக்கு உற்ற கீர்த்தி இராமாநுசனை என் செய் வினை ஆம்

மெய் குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை மேவும் நல்லோர்

எ குற்றவாளர் எது பிறப்பு ஏது இயல்வு ஆக நின்றோர்

அ குற்றம் அ பிறப்பு அ இயல்வே நம்மை ஆட்கொள்ளுமே

#2817

கொள்ள குறைவு அற்று இலங்கி கொழுந்து விட்டு ஓங்கிய உன்

வள்ளல் தனத்தினால் வல்வினையேன் மனம் நீ புகுந்தாய்

வெள்ளை சுடர் விடும் உன் பெரு மேன்மைக்கு இழுக்கு இது என்று

தள்ளுற்று இரங்கும் இராமாநுச என் தனி நெஞ்சமே

#2818

நெஞ்சில் கறை கொண்ட கஞ்சனை காய்ந்த நிமலன் நங்கள்

பஞ்சி திருவடி பின்னை தன் காதலன் பாதம் நண்ணா

வஞ்சர்க்கு அரிய இராமாநுசன் புகழ் அன்றி என் வாய்

கொஞ்சி பரவகில்லாது என்ன வாழ்வு இன்று கூடியதே

#2819

கூட்டும் விதி என்று கூடும்-கொலோ தென் குருகை பிரான்

பாட்டு என்னும் வேத பசும் தமிழ்-தன்னை தன் பத்தி என்னும்

வீட்டின்-கண் வைத்த இராமாநுசன் புகழ் மெய் உணர்ந்தோர்

ஈட்டங்கள்-தன்னை என் நாட்டங்கள் கண்டு இன்பம் எய்திடவே

#2820

இன்பம் தரு பெரு வீடு வந்து எய்தில் என் எண் இறந்த

துன்பம் தரு நிரயம் பல சூழில் என் தொல் உலகில்

மன் பல் உயிர்கட்கு இறையவன் மாயன் என மொழிந்த

அன்பன் அனகன் இராமாநுசன் என்னை ஆண்டனனே

#2821

ஆண்டுகள் நாள் திங்களாய் நிகழ் காலம் எல்லாம் மனமே

ஈண்டு பல் யோனிகள்-தோறு உழல்வோம் இன்று ஓர் எண் இன்றியே

காண் தகு தோள் அண்ணல் தென் அத்தி ஊரர் கழல் இணை கீழ்

பூண்ட அன்பாளன் இராமாநுசனை பொருந்தினமே

#2822

பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும் நல்ல

திருந்திய ஞானமும் செல்வமும் சேரும் செறு கலியால்

வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்து எடுத்து அளித்த

அரும் தவன் எங்கள் இராமாநுசனை அடைபவர்க்கே

#2823

அடை ஆர் கமலத்து அலர் மகள் கேள்வன் கை ஆழி என்னும்

படையோடும் நாந்தகமும் படர் தண்டும் ஒண் சார்ங்க வில்லும்

புடை ஆர் புரி சங்கமும் இந்த பூதலம் காப்பதற்கு என்று

இடையே இராமாநுசமுனி ஆயின இ நிலத்தே

#2824

நிலத்தை செறுத்து உண்ணும் நீச கலியை நினைப்பு அரிய

பெலத்தை செறுத்தும் பிறங்கியது இல்லை என் பெய் வினை தென்

புலத்தில் பொறித்த அ புத்தக சும்மை பொறுக்கிய பின்

நலத்தை பொறுத்தது இராமாநுசன் தன் நய புகழே

#2825

நயவேன் ஒரு தெய்வம் நானிலத்தே சில மானிடத்தை

புயலே என கவி போற்றி செய்யேன் பொன் அரங்கம் என்னில்

மயலே பெருகும் இராமாநுசன் மன்னு மா மலர் தாள்

அயரேன் அருவினை என்னை எவ்வாறு இன்று அடர்ப்பதுவே

#2826

அடல் கொண்ட நேமியன் ஆருயிர் நாதன் அன்று ஆரண சொல்

கடல் கொண்ட ஒண் பொருள் கண்டு அளிப்ப பின்னும் காசினியோர்

இடரின்-கண் வீழ்ந்திட தானும் அ ஒண் பொருள் கொண்டு அவர் பின்

படரும் குணன் எம் இராமாநுசன் தன் படி இதுவே

#2827

படி கொண்ட கீர்த்தி இராமாயணம் என்னும் பத்தி வெள்ளம்

குடி கொண்ட கோயில் இராமாநுசன் குணம் கூறும் அன்பர்

கடி கொண்ட மா மலர் தாள் கலந்து உள்ளம் கனியும் நல்லோர்

அடி கண்டு கொண்டு உகந்து என்னையும் ஆள் அவர்க்கு ஆக்கினரே

#2828

ஆக்கி அடிமை நிலை பித்தனை என்னை இன்று அவமே

போக்கி புறத்திட்டது என் பொருளா முன்பு புண்ணியர்-தம்

வாக்கில் பிரியா இராமாநுச நின் அருளின் வண்ணம்

நோக்கில் தெரிவு அரிதால் உரையாய் இந்த நுண் பொருளே

#2829

பொருளும் புதல்வரும் பூமியும் பூம் குழலாரும் என்றே

மருள் கொண்டு இளைக்கும் நமக்கு நெஞ்சே மற்று உளார் தரமோ

இருள் கொண்ட வெம் துயர் மாற்றி தன் ஈறு இல் பெரும் புகழே

தெருளும் தெருள் தந்து இராமாநுசன் செய்யும் சேமங்களே

#2830

சேம நல் வீடும் பொருளும் தருமமும் சீரிய நல்

காமமும் என்று இவை நான்கு என்பர் நான்கினும் கண்ணனுக்கே

ஆம் அது காமம் அறம் பொருள் வீடு இதற்கு என்று உரைத்தான்

வாமனன் சீலன் இராமாநுசன் இந்த மண் மிசையே

#2831

மண் மிசை யோனிகள்-தோறும் பிறந்து எங்கள் மாதவனே

கண்ணுற நிற்கிலும் காணகில்லா உலகோர்கள் எல்லாம்

அண்ணல் இராமாநுசன் வந்து தோன்றிய அ பொழுதே

நண்ணரும் ஞானம் தலைக்கொண்டு நாரணற்கு ஆயினரே

#2832

ஆயிழையார் கொங்கை தங்கும் அ காதல் அளற்று அழுந்தி

மாயும் என் ஆவியை வந்து எடுத்தான் இன்று மா மலராள்

நாயகன் எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும்

தூயவன் தீது இல் இராமாநுசன் தொல் அருள் சுரந்தே

#2833

சுரக்கும் திருவும் உணர்வும் சொல புகில் வாய் அமுதம்

பரக்கும் இரு வினை பற்று அற ஓடும் படியில் உள்ளீர்

உரைக்கின்றனன் உமக்கு யான் அறம் சீறும் உறு கலியை

துரக்கும் பெருமை இராமாநுசன் என்று சொல்லு-மினே

#2834

சொல் ஆர் தமிழ் ஒரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லை

இல்லா அறநெறி யாவும் தெரிந்தவன் எண் அரும் சீர்

நல்லார் பரவும் இராமாநுசன் திருநாமம் நம்பி

கல்லார் அகல் இடத்தோர் எது பேறு என்று காமிப்பரே

#2835

பேறு ஒன்று மற்று இல்லை நின் சரண் அன்றி அ பேறு அளித்தற்கு

ஆறு ஒன்றும் இல்லை மற்று அ சரண் அன்றி என்று இ பொருளை

தேறும் அவர்க்கும் எனக்கும் உனை தந்த செம்மை சொல்லால்

கூறும் பரம் அன்று இராமாநுச மெய்ம்மை கூறிடிலே

#2836

கூறும் சமயங்கள் ஆறும் குலைய குவலயத்தே

மாறன் பணித்த மறை உணர்ந்தோனை மதியிலியேன்

தேறும்படி என் மனம் புகுந்தானை திசை அனைத்தும்

ஏறும் குணனை இராமாநுசனை இறைஞ்சினமே

#2837

இறைஞ்ச படும் பரன் ஈசன் அரங்கன் என்று இ உலகத்து

அறம் செப்பும் அண்ணல் இராமாநுசன் என் அருவினையின்

திறம் செற்று இரவும் பகலும் விடாது என்தன் சிந்தையுள்ளே

நிறைந்து ஒப்பு அற இருந்தான் எனக்கு ஆரும் நிகர் இல்லையே

#2838

நிகர் இன்றி நின்ற என் நீசதைக்கு உன் அருளின் கண் அன்றி

புகல் ஒன்றும் இல்லை அருட்கும் அஃதே புகல் புன்மையிலோர்

பகரும் பெருமை இராமாநுச இனி நாம் பழுதே

அகலும் பொருள் என் பயன் இருவோமுக்கும் ஆன பின்னே

#2839

ஆனது செம்மை அறநெறி பொய்ம்மை அறு சமயம்

போனது பொன்றி இறந்தது வெம் கலி பூம் கமல

தேன் நதி பாய் வயல் தென் அரங்கன் கழல் சென்னி வைத்து

தான் அதில் மன்னும் இராமாநுசன் இ தலத்து உதித்தே

#2840

உதிப்பன உத்தமர் சிந்தையுள் ஒன்னலர் நெஞ்சம் அஞ்சி

கொதித்திட மாறி நடப்பன கொள்ளை வன் குற்றம் எல்லாம்

பதித்த என் புன் கவி பா இனம் பூண்டன பாவு தொல் சீர்

எதி தலை நாதன் இராமாநுசன் தன் இணை அடியே

#2841

அடியை தொடர்ந்து எழும் ஐவர்கட்காய் அன்று பாரத போர்

முடிய பரி நெடும் தேர் விடும் கோனை முழுது உணர்ந்த

அடியர்க்கு அமுதம் இராமாநுசன் என்னை ஆள வந்து இ

படியில் பிறந்தது மற்று இல்லை காரணம் பார்த்திடிலே

#2842

பார்த்தான் அறு சமயங்கள் பதைப்ப இ பார் முழுதும்

போர்த்தான் புகழ்கொண்டு புன்மையினேனிடை தான் புகுந்து

தீர்த்தான் இரு வினை தீர்த்து அரங்கன் செய்ய தாள் இணையோடு

ஆர்த்தான் இவை எம் இராமாநுசன் செய்யும் அற்புதமே

#2843

அற்புதன் செம்மை இராமாநுசன் என்னை ஆள வந்த

கற்பகம் கற்றவர் காமுறு சீலன் கருது அரிய

பற்பல உயிர்களும் பல் உலகு யாவும் பரனது என்னும்

நற்பொருள் தன்னை இ நானிலத்தே வந்து நாட்டினனே

#2844

நாட்டிய நீச சமயங்கள் மாண்டன நாரணனை

காட்டிய வேதம் களிப்புற்றது தென் குருகை வள்ளல்

வாட்டம் இலா வண் தமிழ் மறை வாழ்ந்தது மண்ணுலகில்

ஈட்டிய சீலத்து இராமாநுசன் தன் இயல்வு கண்டே

#2845

கண்டவர் சிந்தை கவரும் கடி பொழில் தென் அரங்கன்

தொண்டர் குலாவும் இராமாநுசனை தொகை இறந்த

பண் தரு வேதங்கள் பார் மேல் நிலவிட பார்த்தருளும்

கொண்டலை மேவி தொழும் குடி ஆம் எங்கள் கோக்குடியே

#2846

கோ குல மன்னரை மூவெழு கால் ஒரு கூர் மழுவால்

போக்கிய தேவனை போற்றும் புனிதன் புவனம் எங்கும்

ஆக்கிய கீர்த்தி இராமாநுசனை அடைந்த பின் என்

வாக்கு உரையாது என் மனம் நினையாது இனி மற்று ஒன்றையே

#2847

மற்று ஒரு பேறு மதியாது அரங்கன் மலர் அடிக்கு ஆள்

உற்றவரே தனக்கு உற்றவராய் கொள்ளும் உத்தமனை

நல் தவர் போற்றும் இராமாநுசனை இ நானிலத்தே

பெற்றனன் பெற்ற பின் மற்று அறியேன் ஒரு பேதைமையே

#2848

பேதையர் வேத பொருள் இது என்று உன்னி பிரமம் நன்று என்று

ஓதி மற்று எல்லா உயிரும் அஃது என்று உயிர்கள் மெய்விட்டு

ஆதி பரனோடு ஒன்று ஆம் என்று சொல்லும் அ அல்லல் எல்லாம்

வாதில் வென்றான் எம் இராமாநுசன் மெய் மதி கடலே

#2849

கடல் அளவு ஆய திசை எட்டினுள்ளும் கலி இருளே

மிடைதரு காலத்து இராமாநுசன் மிக்க நான்மறையின்

சுடர் ஒளியால் அ இருளை துரந்திலனேல் உயிரை

உடையவன் நாரணன் என்று அறிவார் இல்லை உற்று உணர்ந்தே

#2850

உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகம்-தொறும் திருவாய்மொழியின்

மணம் தரும் இன் இசை மன்னும் இடம்-தொறும் மா மலராள்

புணர்ந்த பொன் மார்பன் பொருந்தும் பதி-தொறும் புக்கு நிற்கும்

குணம் திகழ் கொண்டல் இராமாநுசன் எம் குல கொழுந்தே

#2851

கொழுந்துவிட்டு ஓடி படரும் வெம் கோள் வினையால் நிரயத்து

அழுந்தியிட்டேனை வந்து ஆட்கொண்ட பின்னும் அரு முனிவர்

தொழும் தவத்தோன் எம் இராமாநுசன் தொல் புகழ் சுடர் மிக்கு

எழுந்தது அத்தால் நல் அதிசயம் கண்டது இரு நிலமே

#2852

இருந்தேன் இரு வினை பாசம் கழற்றி இன்று யான் இறையும்

வருந்தேன் இனி எம் இராமாநுசன் மன்னு மா மலர் தாள்

பொருந்தா நிலை உடை புன்மையினோர்க்கு ஒன்றும் நன்மை செய்யா

பெருந்தேவரை பரவும் பெரியோர் தம் கழல் பிடித்தே

#2853

பிடியை தொடரும் களிறு என்ன யான் உன் பிறங்கிய சீர்

அடியை தொடரும்படி நல்க வேண்டும் அறு சமய

செடியை தொடரும் மருள் செறிந்தோர் சிதைந்து ஓட வந்து இ

படியை தொடரும் இராமானுச மிக்க பண்டிதனே

#2854

பண் தரு மாறன் பசும் தமிழ் ஆனந்தம் பாய் மதமாய்

விண்டிட எங்கள் இராமானுச முனி வேழம் மெய்ம்மை

கொண்ட நல் வேத கொழும் தண்டம் ஏந்தி குவலயத்தே

மண்டி வந்து ஏன்றது வாதியர்காள் உங்கள் வாழ்வு அற்றதே

#2855

வாழ்வு அற்றது தொல்லை வாதியர்க்கு என்றும் மறையவர்-தம்

தாழ்வு அற்றது தவம் தாரணி பெற்றது தத்துவ நூல்

கூழ் அற்றது குற்றம் எல்லாம் பதித்த குணத்தினர்க்கு அ

நாழ் அற்றது நம் இராமானுசன் தந்த ஞானத்திலே

#2856

ஞானம் கனிந்த நலம் கொண்டு நாள்-தொறும் நைபவர்க்கு

வானம் கொடுப்பது மாதவன் வல்வினையேன் மனத்தில்

ஈனம் கடிந்த இராமானுசன் தன்னை எய்தினர்க்கு அ

தானம் கொடுப்பது தன் தகவு என்னும் சரண் கொடுத்தே

#2857

சரணம் அடைந்த தருமனுக்கா பண்டு நூற்றுவரை

மரணம் அடைவித்த மாயவன்-தன்னை வணங்க வைத்த

கரணம் இவை உமக்கு அன்று என்று இராமாநுசன் உயிர்கட்கு

அரண் அங்கு அமைத்திலனேல் அரண் ஆர் மற்று இ
ஆருயிர்க்கே

#2858

ஆர் எனக்கு இன்று நிகர் சொல்லில் மாயன் அன்று ஐவர் தெய்வ

தேரினில் செப்பிய கீதையின் செம்மை பொருள் தெரிய

பாரினில் சொன்ன இராமாநுசனை பணியும் நல்லோர்

சீரினில் சென்று பணிந்தது என் ஆவியும் சிந்தையுமே

#2859

சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து முன் நாள்

அந்தம் உற்று ஆழ்ந்தது கண்டு அவை என்தனக்கு அன்று
அருளால்

தந்த அரங்கனும் தன் சரண் தந்திலன் தான் அது தந்து

எந்தை இராமாநுசன் வந்து எடுத்தனன் இன்று என்னையே

#2860

என்னையும் பார்த்து என் இயல்வையும் பார்த்து எண் இல் பல் குணத்த

உன்னையும் பார்க்கில் அருள்செய்வதே நலம் அன்றி என்-பால்

பின்னையும் பார்க்கில் நலம் உளதே உன் பெரும் கருணை

தன்னை என் பார்ப்பர் இராமாநுச உன்னை சார்ந்தவரே

#2861

சார்ந்தது என் சிந்தை உன் தாள் இணை கீழ் அன்பு தான் மிகவும்

கூர்ந்தது அ தாமரை தாள்களுக்கு உன்தன் குணங்களுக்கே

தீர்ந்தது என் செய்கை முன் செய்வினை நீ செய்வினை அதனால்

பேர்ந்தது வண்மை இராமாநுச எம் பெருந்தகையே

#2862

கைத்தனன் தீய சமய கலகரை காசினிக்கே

உய்த்தனன் தூய மறைநெறி தன்னை என்று உன்னி உள்ளம்

நெய்த்த அன்போடு இருந்து ஏத்தும் நிறை புகழோருடனே

வைத்தனன் என்னை இராமாநுசன் மிக்க வண்மை செய்தே

#2863

வண்மையினாலும் தன் மா தகவாலும் மதி புரையும்

தண்மையினாலும் இ தாரணியோர்கட்கு தான் சரணாய்

உண்மை நல் ஞானம் உரைத்த இராமாநுசனை உன்னும்

திண்மை அல்லால் எனக்கு இல்லை மற்று ஓர் நிலை தேர்ந்திடிலே

#2864

தேரார் மறையின் திறம் என்று மாயவன் தீயவரை

கூர் ஆழி கொண்டு குறைப்பது கொண்டல் அனைய வண்மை

ஏர் ஆர் குணத்து எம் இராமாநுசன் அ எழில் மறையில்

சேராதவரை சிதைப்பது அப்போது ஒரு சிந்தைசெய்தே

#2865

செய்த்தலை சங்கம் செழு முத்தம் ஈனும் திருவரங்கர்

கைத்தலத்து ஆழியும் சங்கமும் ஏந்தி நம் கண்முகப்பே

மொய்த்து அலைத்து உன்னை விடேன் என்று இருக்கிலும் நின் புகழே

மொய்த்து அலைக்கும் வந்து இராமாநுச என்னை முற்றும் நின்றே

#2866

நின்ற வண் கீர்த்தியும் நீள் புனலும் நிறை வேங்கட பொன்

குன்றமும் வைகுந்த நாடும் குலவிய பாற்கடலும்

உன்தனக்கு எத்தனை இன்பம் தரும் உன் இணை மலர் தாள்

என்தனக்கும் அது இராமாநுச இவை ஈய்ந்து அருளே

#2867

ஈய்ந்தனன் ஈயாத இன் அருள் எண் இல் மறை குறும்பை

பாய்ந்தனன் அ மறை பல் பொருளால் இப்படி அனைத்தும்

ஏய்ந்தனன் கீர்த்தியினால் என் வினைகளை வேர் பறிய

காய்ந்தனன் வண்மை இராமாநுசற்கு என் கருத்து இனியே

#2868

கருத்தில் புகுந்து உள்ளில் கள்ளம் கழற்றி கருது அரிய

வருத்தத்தினால் மிக வஞ்சித்து நீ இந்த மண்ணகத்தே

திருத்தி திருமகள் கேள்வனுக்கு ஆக்கிய பின் என் நெஞ்சில்

பொருத்தப்படாது எம் இராமாநுச மற்று ஓர் பொய்ப்பொருளே

#2869

பொய்யை சுரக்கும் பொருளை துரந்து இந்த பூதலத்தே

மெய்யை புரக்கும் இராமாநுசன் நிற்க வேறு நம்மை

உய்ய கொள வல்ல தெய்வம் இங்கு யாது என்று உலர்ந்து அவமே

ஐயப்படா நிற்பர் வையத்துள்ளோர் நல் அறிவு இழந்தே

#2870

நல்லார் பரவும் இராமாநுசன் திருநாமம் நம்ப

வல்லார் திறத்தை மறவாதவர்கள் எவர் அவர்க்கே

எல்லா இடத்திலும் என்றும் எப்போதிலும் ஏ தொழும்பும்

சொல்லால் மனத்தால் கருமத்தினால் செய்வன் சோர்வு
இன்றியே

#2871

சோர்வு இன்றி உன்தன் துணை அடி கீழ் தொண்டுபட்டவர்-பால்

சார்வு இன்றி நின்ற எனக்கு அரங்கன் செய்ய தாள் இணைகள்

பேர்வு இன்றி இன்று பெறுத்தும் இராமாநுச இனி உன்

சீர் ஒன்றிய கருணைக்கு இல்லை மாறு தெரிவுறிலே

#2872

தெரிவுற்ற ஞானம் செறியப்பெறாது வெம் தீவினையால்

உரு அற்ற ஞானத்து உழல்கின்ற என்னை ஒரு பொழுதில்

பொரு அற்ற கேள்வியன் ஆக்கி நின்றான் என்ன புண்ணியனோ

தெரிவுற்ற கீர்த்தி இராமாநுசன் என்னும் சீர் முகிலே

#2873

சீர் கொண்டு பேர் அறம் செய்து நல் வீடு செறிதும் என்னும்

பார் கொண்ட மேன்மையர் கூட்டன் அல்லேன் உன் பத யுகம் ஆம்

ஏர் கொண்ட வீட்டை எளிதினில் எய்துவன் உன்னுடைய

கார் கொண்ட வண்மை இராமாநுச இது கண்டு கொள்ளே

#2874

கண்டுகொண்டேன் எம் இராமாநுசன் தன்னை காண்டலுமே

தொண்டு கொண்டேன் அவன் தொண்டர் பொன் தாளில் என் தொல்லை வெம்நோய்

விண்டு கொண்டேன் அவன் சீர் வெள்ள வாரியை வாய்மடுத்து இன்று

உண்டு கொண்டேன் இன்னம் உற்றன ஓதில் உலப்பு இல்லையே

#2875

ஓதிய வேதத்தின் உட்பொருளாய் அதன் உச்சி மிக்க

சோதியை நாதன் என அறியாது உழல்கின்ற தொண்டர்

பேதைமை தீர்த்த இராமாநுசனை தொழும் பெரியோர்

பாதம் அல்லால் என்தன் ஆருயிர்க்கு யாதொன்றும் பற்று இல்லையே

#2876

பற்றா மனிசரை பற்றி அ பற்று விடாதவரே

உற்றார் என உழன்று ஓடி நையேன் இனி ஒள்ளிய நூல்

கற்றார் பரவும் இராமாநுசனை கருதும் உள்ளம்

பெற்றார் எவர் அவர் எம்மை நின்று ஆளும் பெரியவரே

#2877

பெரியவர் பேசிலும் பேதையர் பேசிலும் தன் குணங்கட்கு

உரிய சொல் என்றும் உடையவன் என்று என்று உணர்வில் மிக்கோர்

தெரியும் வண் கீர்த்தி இராமாநுசன் மறை தேர்ந்து உலகில்

புரியும் நல் ஞானம் பொருந்தாதவரை பொரும் கலியே

#2878

கலி மிக்க செந்நெல் கழனி குறையல் கலை பெருமான்

ஒலி மிக்க பாடலை உண்டு தன் உள்ளம் தடித்து அதனால்

வலி மிக்க சீயம் இராமாநுசன் மறைவாதியர் ஆம்

புலி மிக்கது என்று இ புவனத்தில் வந்தமை போற்றுவனே

#2879

போற்று அரும் சீலத்து இராமாநுச நின் புகழ் தெரிந்து

சாற்றுவனேல் அது தாழ்வு அது தீரில் உன் சீர்-தனக்கு ஓர்

ஏற்றம் என்றே கொண்டு இருக்கிலும் என் மனம் ஏத்தி அன்றி

ஆற்றகில்லாது இதற்கு என் நினைவாய் என்றிட்டு அஞ்சுவனே

#2880

நினையார் பிறவியை நீக்கும் பிரானை இ நீள் நிலத்தே

எனை ஆள வந்த இராமாநுசனை இரும் கவிகள்

புனையார் புனையும் பெரியவர் தாள்களில் பூம் தொடையல்

வனையார் பிறப்பில் வருந்துவர் மாந்தர் மருள் சுரந்தே

#2881

மருள் சுரந்து ஆகமவாதியர் கூறும் அவப்பொருள் ஆம்

இருள் சுரந்து எய்த்த உலகு இருள் நீங்க தன் ஈண்டிய சீர்

அருள் சுரந்து எல்லா உயிர்கட்கும் நாதன் அரங்கன் என்னும்

பொருள் சுரந்தான் எம் இராமாநுசன் மிக்க புண்ணியனே

#2882

புண்ணிய நோன்பு புரிந்தும் இலேன் அடி போற்றி செய்யும்

நுண் அரும் கேள்வி நுவன்றும் இலேன் செம்மை நூல் புலவர்க்கு

எண் அரும் கீர்த்தி இராமாநுச இன்று நீ புகுந்து என்

கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்ற இ காரணம் கட்டுரையே

#2883

கட்ட பொருளை மறை பொருள் என்று கயவர் சொல்லும்

பெட்டை கெடுக்கும் பிரான் அல்லனே என் பெரு வினையை

கிட்டி கிழங்கொடு தன் அருள் என்னும் ஒள் வாள் உருவி

வெட்டி களைந்த இராமாநுசன் என்னும் மெய்த்தவனே

#2884

தவம் தரும் செல்வும் தகவும் தரும் சலியா பிறவி

பவம் தரும் தீவினை பாற்றி தரும் பரந்தாமம் என்னும்

திவம் தரும் தீது இல் இராமாநுசன் தன்னை சார்ந்தவர்கட்கு

உவந்து அருந்தேன் அவன் சீர் அன்றி யான் ஒன்றும் உள் மகிழ்ந்தே

#2885

உள் நின்று உயிர்களுக்கு உற்றனவே செய்து அவர்க்கு உயவே

பண்ணும் பரனும் பரிவிலன் ஆம்படி பல் உயிர்க்கும்

விண்ணின் தலை நின்று வீடு அளிப்பான் எம் இராமாநுசன்

மண்ணின் தலத்து உதித்து உய்மறை நாலும் வளர்த்தனனே

#2886

வளரும் பிணிகொண்ட வல்வினையால் மிக்க நல்வினையில்

கிளரும் துணிவு கிடைத்தறியாது முடைத்தலை ஊன்

தளரும் அளவும் தரித்தும் விழுந்தும் தனி திரிவேற்கு

உளர் எம் இறைவர் இராமாநுசன் தன்னை உற்றவரே

#2887

தன்னை உற்று ஆட்செய்யும் தன்மையினோர் மன்னு தாமரை தாள்

தன்னை உற்று ஆட்செய்ய என்னை உற்றான் இன்று தன் தகவால்

தன்னை உற்றார் அன்றி தன்மை உற்றார் இல்லை என்று அறிந்து

தன்னை உற்றாரை இராமாநுசன் குணம் சாற்றிடுமே

#2888

இடுமே இனிய சுவர்க்கத்தில் இன்னும் நரகில் இட்டு

சுடுமே அவற்றை தொடர் தரு தொல்லை சுழல் பிறப்பில்

நடுமே இனி நம் இராமாநுசன் நம்மை நம் வசத்தே

விடுமே சரணம் என்றால் மனமே நையல் மேவுதற்கே

#2889

தற்க சமணரும் சாக்கிய பேய்களும் தாழ்சடையோன்

சொல் கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும்

நிற்க குறும்பு செய் நீசரும் மாண்டனர் நீள் நிலத்தே

பொன் கற்பகம் எம் இராமாநுச முனி போந்த பின்னே

#2890

போந்தது என் நெஞ்சு என்னும் பொன் வண்டு உனது அடிப்போதில் ஒண் சீர்

ஆம் தெளி தேன் உண்டு அமர்ந்திட வேண்டி நின்-பால் அதுவே

ஈந்திட வேண்டும் இராமாநுச இது அன்றி ஒன்றும்

மாந்தகில்லாது இனி மற்று ஒன்று காட்டி மயக்கிடலே

#2891

மயக்கும் இரு வினை வல்லியில் பூண்டு மதி மயங்கி

துயக்கும் பிறவியில் தோன்றிய என்னை துயர் அகற்றி

உயக்கொண்டு நல்கும் இராமாநுச என்றது உன்னை உன்னி

நயக்கும் அவர்க்கு இது இழுக்கு என்பர் நல்லவர் என்றும் நைந்தே

#2892

நையும் மனம் உன் குணங்களை உன்னி என் நா இருந்து எம்

ஐயன் இராமாநுசன் என்று அழைக்கும் அருவினையேன்

கையும் தொழும் கண் கருதிடும் காண கடல் புடை சூழ்

வையம் இதனில் உன் வண்மை என்-பால் என் வளர்ந்ததுவே

#2893

வளர்ந்த வெம் கோப மடங்கல் ஒன்றாய் அன்று வாள் அவுணன்

கிளர்ந்த பொன் ஆகம் கிழித்தவன் கீர்த்தி பயிர் எழுந்து

விளைந்திடும் சிந்தை இராமாநுசன் என்தன் மெய்வினை நோய்

களைந்து நல் ஞானம் அளித்தனன் கையில் கனி என்னவே

#2894

கையில் கனி என்ன கண்ணனை காட்டி தரிலும் உன்தன்

மெய்யில் பிறங்கிய சீர் அன்றி வேண்டிலன் யான் நிரய

தொய்யில் கிடக்கிலும் சோதி விண் சேரிலும் இ அருள் நீ

செய்யில் தரிப்பன் இராமாநுச என் செழும் கொண்டலே

#2895

செழும் திரை பாற்கடல் கண் துயில் மாயன் திருவடி கீழ்

விழுந்திருப்பார் நெஞ்சில் மேவு நல் ஞானி நல் வேதியர்கள்

தொழும் திருப்பாதன் இராமாநுசனை தொழும் பெரியோர்

எழுந்து இரைத்து ஆடும் இடம் அடியேனுக்கு இருப்பிடமே

#2896

இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை என்னும்

பொருப்பிடம் மாயனுக்கு என்பர் நல்லோர் அவை தம்மொடும் வந்து

இருப்பிடம் மாயன் இராமாநுசன் மனத்து இன்று அவன் வந்து

இருப்பிடம் என்தன் இதயத்துள்ளே தனக்கு இன்புறவே

#2897

இன்பு உற்ற சீலத்து இராமாநுச என்றும் எவ்விடத்தும்

என்பு உற்ற நோய் உடல்-தோறும் பிறந்து இறந்து எண் அரிய

துன்பு உற்று வீயினும் சொல்லுவது ஒன்று உண்டு உன் தொண்டர்கட்கே

அன்பு உற்று இருக்கும்படி என்னை ஆக்கி அங்கு ஆட்படுத்தே

#2898

அம் கயல் பாய் வயல் தென் அரங்கன் அணி ஆகம் மன்னும்

பங்கய மா மலர் பாவையை போற்றுதும் பத்தி எல்லாம்

தங்கியது என்ன தழைத்து நெஞ்சே நம் தலை மிசையே

பொங்கிய கீர்த்தி இராமானுசன் அடி பூ மன்னவே

4. நான்காம் ஆயிரம்

நம்மாழ்வார் - திருவாய்மொழி

#2899

உயர்வு அற உயர் நலம் உடையவன் எவன் அவன்

மயர்வு அற மதி நலம் அருளினன் எவன் அவன்

அயர்வு அறும் அமரர்கள் அதிபதி எவன் அவன்

துயர் அறு சுடர் அடி தொழுது எழு என் மனனே

#2900

மனன் அகம் மலம் அற மலர் மிசை எழுதரும்

மனன் உணர்வு அளவு இலன் பொறி உணர்வு அவை இலன்

இனன் உணர் முழு நலம் எதிர் நிகழ் கழிவினும்

இனன் இலன் எனன் உயிர் மிகுநரை இலனே

#2901

இலன் அது உடையன் இது என நினைவு அரியவன்

நிலனிடை விசும்பிடை உருவினன் அருவினன்

புலனொடு புலன் அலன் ஒழிவு இலன் பரந்த அ

நலன் உடை ஒருவனை நணுகினம் நாமே

#2902

நாம் அவன் இவன் உவன் அவள் இவள் உவள் எவள்

தாம் அவர் இவர் உவர் அது இது உது எது

வீம் அவை இவை உவை அவை நலம் தீங்கு அவை

ஆம் அவை ஆயவை ஆய்நின்ற அவரே

#2903

அவரவர் தமதமது அறிவு அறி வகைவகை

அவரவர் இறையவர் என அடி அடைவர்கள்

அவரவர் இறையவர் குறைவு இலர் இறையவர்

அவரவர் விதி வழி அடைய நின்றனரே

#2904

நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்

நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்

என்றும் ஓர் இயல்வினர் என நினைவு அரியவர்

என்றும் ஓர் இயல்வொடு நின்ற எம் திடரே

#2905

திட விசும்பு எரி வளி நீர் நிலம் இவை மிசை

படர் பொருள் முழுவதுமாய் அவைஅவை-தொறும்

உடல் மிசை உயிர் என கரந்து எங்கும் பரந்து உளன்

சுடர் மிகு சுருதியுள் இவை உண்ட சுரனே

#2906

சுரர் அறிவு அரு நிலை விண் முதல் முழுவதும்

வரன் முதலாய் அவை முழுது உண்ட பரபரன்

புரம் ஒரு மூன்று எரித்து அமரர்க்கும் அறிவியந்து

அரன் அயன் என உலகு அழித்து அமைத்து உளனே

#2907

உளன் எனில் உளன் அவன் உருவம் இ உருவுகள்

உளன் அலன் எனில் அவன் அருவம் இ அருவுகள்

உளன் என இலன் என இவை குணம் உடைமையில்

உளன் இரு தகைமையொடு ஒழிவு இலன் பரந்தே

#2908

பரந்த தண் பரவையுள் நீர்-தொறும் பரந்து உளன்

பரந்த அண்டம் இது என நிலம் விசும்பு ஒழிவு அற

கரந்த சில் இடம்-தொறும் இடம் திகழ் பொருள்-தொறும்

கரந்து எங்கும் பரந்து உளன் இவை உண்ட கரனே

#2909

கர விசும்பு எரி வளி நீர் நிலம் இவை மிசை

வரன் நவில் திறல் வலி அளி பொறையாய் நின்ற

பரன் அடி மேல் குருகூர் சடகோபன் சொல்

நிரல் நிறை ஆயிரத்து இவை பத்தும் வீடே

#2910

வீடு-மின் முற்றவும்

வீடு செய்து உம் உயிர்

வீடு உடையானிடை

வீடு செய்ம்-மினே

#2911

மின்னின் நிலை இல

மன் உயிர் ஆக்கைகள்

என்னும் இடத்து இறை

உன்னு-மின் நீரே

#2912

நீர் நுமது என்று இவை

வேர் முதல் மாய்த்து இறை

சேர்-மின் உயிர்க்கு அதன்

நேர் நிறை இல்லே

#2913

இல்லதும் உள்ளதும்

அல்லது அவன் உரு

எல்லை இல் அ நலம்

புல்கு பற்று அற்றே

#2914

அற்றது பற்று எனில்

உற்றது வீடு உயிர்

செற்ற அது மன் உறில்

அற்று இறை பற்றே

#2915

பற்று இலன் ஈசனும்

முற்றவும் நின்றனன்

பற்று இலையாய் அவன்

முற்றில் அடங்கே

#2916

அடங்கு எழில் சம்பத்து

அடங்க கண்டு ஈசன்

அடங்கு எழில் அஃது என்று

அடங்குக உள்ளே

#2917

உள்ளம் உரை செயல்

உள்ள இ மூன்றையும்

உள்ளி கெடுத்து இறை

உள்ளில் ஒடுங்கே

#2918

ஒடுங்க அவன்-கண்

ஒடுங்கலும் எல்லாம்

விடும் பின்னும் ஆக்கை

விடும்-பொழுது எண்ணே

#2919

எண் பெருக்கு அ நலத்து

ஒண் பொருள் ஈறு இல

வண் புகழ் நாரணன்

திண் கழல் சேரே

#2920

சேர்த்தட தென் குரு

கூர் சடகோபன் சொல்

சீர் தொடை ஆயிரத்து

ஓர்த்த இ பத்தே

#2921

பத்து உடை அடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரிய

வித்தகன் மலர் மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள்

மத்து உறு கடை வெண்ணெய் களவினில் உரவிடை யாப்புண்டு

எத்திறம் உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளியவே

#2922

எளிவரும் இயல்வினன் நிலை வரம்பு இல பல பிறப்பாய்

ஒளிவரும் முழு நலம் முதல் இல கேடு இல வீடு ஆம்

தெளிதரும் நிலைமையது ஒழிவு இலன் முழுவதும் இறையோன்

அளிவரும் அருளினோடு அகத்தனன் புறத்தனன் அமைந்தே

#2923

அமைவு உடை அறநெறி முழுவதும் உயர்வு அற உயர்ந்து

அமைவு உடை முதல் கெடல் ஒடிவு இடை அற நிலம் அது ஆம்

அமைவு உடை அமரரும் யாவையும் யாவரும் தான் ஆம்

அமைவு உடை நாரணன் மாயையை அறிபவர் யாரே

#2924

யாரும் ஓர் நிலைமையன் என அறிவு அரிய எம் பெருமான்

யாரும் ஓர் நிலைமையன் என அறிவு எளிய எம் பெருமான்

பேரும் ஓர் ஆயிரம் பிற பல உடைய எம் பெருமான்

பேரும் ஓர் உருவமும் உளது இல்லை இலது இல்லை பிணக்கே

#2925

பிணக்கு அற அறு வகை சமயமும் நெறி உள்ளி உரைத்த

கணக்கு அறு நலத்தனன் அந்தம் இல் ஆதி அம் பகவன்

வணக்கு உடை தவ நெறி வழிநின்று புறநெறி களைகட்டு

உணக்கு-மின் பசை அற அவனுடை உணர்வுகொண்டு உணர்ந்தே

#2926

உணர்ந்து உணர்ந்து இழிந்து அகன்று உயர்ந்து உரு வியந்த இ நிலைமை

உணர்ந்து உணர்ந்து உணரிலும் இறைநிலை உணர்வு அரிது உயிர்காள்

உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து அரி அயன் அரன் என்னும் இவரை

உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து இறைஞ்சு-மின் மனப்பட்டது ஒன்றே

#2927

ஒன்று என பல என அறிவு அரும் வடிவினுள் நின்ற

நன்று எழில் நாரணன் நான்முகன் அரன் என்னும் இவரை

ஒன்ற நும் மனத்து வைத்து உள்ளி நும் இரு பசை அறுத்து

நன்று என நலம் செய்வது அவனிடை நம்முடை நாளே

#2928

நாளும் நின்று அடு நம பழமை அம் கொடுவினை உடனே

மாளும் ஓர் குறைவு இல்லை மனன் அகம் மலம் அற கழுவி

நாளும் நம் திரு உடை அடிகள் தம் நலம் கழல் வணங்கி

மாளும் ஓர் இடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே

#2929

வலத்தனன் திரிபுரம் எரித்தவன் இடம்பெற துந்தி

தலத்து எழு திசைமுகன் படைத்த நல் உலகமும் தானும்

புலப்பட பின்னும் தன் உலகத்தில் அகத்தனன் தானே

சொல புகில் இவை பின்னும் வயிற்று உள இவை அவன் துயக்கே

#2930

துயக்கு அறு மதியில் நல் ஞானத்துள் அமரரை துயக்கும்

மயக்கு உடை மாயைகள் வானிலும் பெரியன வல்லன்

புயல் கரு நிறத்தனன் பெரு நிலம் கடந்த நல் அடி போது

அயர்ப்பிலன் அலற்றுவன் தழுவுவன் வணங்குவன் அமர்ந்தே

#2931

அமரர்கள் தொழுது எழ அலை கடல் கடைந்தவன்-தன்னை

அமர் பொழில் வளம் குருகூர் சடகோபன் குற்றேவல்கள்

அமர் சுவை ஆயிரத்து அவற்றினுள் இவை பத்தும் வல்லார்

அமரரோடு உயர்வில் சென்று அறுவர் தம் பிறவி அம் சிறையே

#2932

அம் சிறைய மட நாராய் அளியத்தாய் நீயும் நின்

அம் சிறைய சேவலுமாய் ஆஆ என்று எனக்கு அருளி

வெம் சிறை புள் உயர்த்தார்க்கு என் விடு தூதாய் சென்ற-கால்

வன் சிறையில் அவன் வைக்கில் வைப்புண்டால் என் செயுமோ

#2933

என் செய்ய தாமரை கண் பெருமானார்க்கு என் தூதாய்

என் செய்யும் உரைத்த-கால் இன குயில்காள் நீர் அலிரே

முன் செய்த முழுவினையால் திருவடி கீழ் குற்றேவல்

முன் செய்ய முயலாதேன் அகல்வதுவோ விதியினமே

#2934

விதியினால் பெடை மணக்கும் மென் நடைய அன்னங்காள்

மதியினால் குறள் மாணாய் உலகு இரந்த கள்வர்க்கு

மதியிலேன் வல்வினையே மாளாதோ என்று ஒருத்தி

மதி எல்லாம் உள் கலங்கி மயங்குமால் என்னீரே

#2935

என் நீர்மை கண்டு இரங்கி இது தகாது என்னாத

என் நீல முகில் வண்ணற்கு என் சொல்லி யான் சொல்லுகேனோ

நன் நீர்மை இனி அவர்-கண் தங்காது என்று ஒரு வாய்ச்சொல்

நன் நீல மகன்றில்காள் நல்குதிரோ நல்கீரோ

#2936

நல்கி தான் காத்து அளிக்கும் பொழில் ஏழும் வினையேற்கே

நல்க தான் ஆகாதோ நாரணனை கண்ட-கால்

மல்கு நீர் புனல் படப்பை இரை தேர் வண் சிறு குருகே

மல்கு நீர் கண்ணேற்கு ஓர் வாசகம் கொண்டு அருளாயே

#2937

அருளாத நீர் அருளி அவர் ஆவி துவரா முன்

அருள் ஆழி புட்கடவீர் அவர் வீதி ஒரு நாள் என்று

அருள் ஆழி அம்மானை கண்ட-கால் இது சொல்லி

அருள் ஆழி வரி வண்டே யாமும் என் பிழைத்தோமே

#2938

என்பு இழை கோப்பது போல பனி வாடை ஈர்கின்றது

என் பிழையே நினைந்தருளி அருளாத திருமாலார்க்கு

என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு என்று ஒரு வாய்ச்சொல்

என் பிழைக்கும் இளம் கிளியே யான் வளர்த்த நீ அலையே

#2939

நீ அலையே சிறு பூவாய் நெடுமாலார்க்கு என் தூதாய்

நோய் எனது நுவல் என்ன நுவலாதே இருந்து ஒழிந்தாய்

சாயலொடு மணி மாமை தளர்ந்தேன் நான் இனி உனது

வாய் அலகில் இன் அடிசில் வைப்பாரை நாடாயே

#2940

நாடாத மலர் நாடி நாள்-தோறும் நாரணன்-தன்

வாடாத மலர் அடி கீழ் வைக்கவே வகுக்கின்று

வீடாடி வீற்றிருத்தல் வினை அற்றது என் செய்வதோ

ஊடாடு பனி வாடாய் உரைத்து ஈராய் எனது உடலே

#2941

உடல் ஆழி பிறப்பு வீடு உயிர் முதலா முற்றுமாய்

கடல் ஆழி நீர் தோற்றி அதனுள்ளே கண்வளரும்

அடல் ஆழி அம்மானை கண்ட-கால் இது சொல்லி

விடல் ஆழி மட நெஞ்சே வினையோம் ஒன்றாம் அளவே

#2942

அளவு இயன்ற ஏழ் உலகத்தவர் பெருமான் கண்ணனை

வள வயல் சூழ் வண் குருகூர் சடகோபன் வாய்ந்து உரைத்த

அளவு இயன்ற அந்தாதி ஆயிரத்துள் இ பத்தின்

வள உரையால் பெறலாகும் வான் ஓங்கு பெரு வளமே

#2943

வள ஏழ் உலகில் முதலாய வானோர் இறையை அருவினையேன்

களவேழ் வெண்ணெய் தொடு உண்ட கள்வா என்பன் பின்னையும்

தளவு ஏழ் முறுவல் பின்னைக்காய் வல் ஆன் ஆயர் தலைவனாய்

இள ஏறு ஏழும் தழுவிய எந்தாய் என்பன் நினைந்து நைந்தே

#2944

நினைந்து நைந்து உள் கரைந்து உருகி இமையோர் பலரும் முனிவரும்

புனைந்த கண்ணி நீர் சாந்தம் புகையோடு ஏந்தி வணங்கினால்

நினைந்த எல்லா பொருள்கட்கும் வித்தாய் முதலில் சிதையாமே

மனம் செய் ஞானத்து உன் பெருமை மாசூணாதோ மாயோனே

#2945

மா யோனிகளாய் நடை கற்ற வானோர் பலரும் முனிவரும்

நீ யோனிகளை படை என்று நிறை நான்முகனை படைத்தவன்

சேயோன் எல்லா அறிவுக்கும் திசைகள் எல்லாம் திருவடியால்

தாயோன் எல்லா எ உயிர்க்கும் தாயோன் தான் ஓர் உருவனே

#2946

தான் ஓர் உருவே தனி வித்தாய் தன்னின் மூவர் முதலாய

வானோர் பலரும் முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய்

தான் ஓர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள் கண்வளரும்

வானோர் பெருமான் மா மாயன் வைகுந்தன் எம் பெருமானே

#2947

மான் ஏய் நோக்கி மடவாளை மார்பில் கொண்டாய் மாதவா

கூனே சிதைய உண்டை வில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா

வான் ஆர் சோதி மணி வண்ணா மதுசூதா நீ அருளாய் உன்

தேனே மலரும் திருப்பாதம் சேருமாறு வினையேனே

#2948

வினையேன் வினை தீர் மருந்து ஆனாய் விண்ணோர் தலைவா கேசவா

மனை சேர் ஆயர் குல முதலே மா மாயனே மாதவா

சினை ஏய் தழைய மராமரங்கள் ஏழும் எய்தாய் சிரீதரா

இனையாய் இனைய பெயரினாய் என்று நைவன் அடியேனே

#2949

அடியேன் சிறிய ஞானத்தன் அறிதல் ஆர்க்கும் அரியானை

கடி சேர் தண் அம் துழாய் கண்ணி புனைந்தான் தன்னை கண்ணனை

செடி ஆர் ஆக்கை அடியாரை சேர்தல் தீர்க்கும் திருமாலை

அடியேன் காண்பான் அலற்றுவன் இதனின் மிக்கு ஓர் அயர்வு உண்டே

#2950

உண்டாய் உலகு ஏழ் முன்னமே உமிழ்ந்து மாயையால் புக்கு

உண்டாய் வெண்ணெய் சிறு மனிசர் உவலை ஆக்கை நிலை எய்தி

மண் தான் சோர்ந்தது உண்டேலும் மனிசர்க்கு ஆகும் பீர் சிறிதும்

அண்டா வண்ணம் மண் கரைய நெய் ஊண் மருந்தோ மாயோனே

#2951

மாயோம் தீய அலவலை பெரு மா வஞ்ச பேய் வீய

தூய குழவியாய் விட பால் அமுதா அமுதுசெய்திட்ட

மாயன் வானோர் தனி தலைவன் மலராள் மைந்தன் எ உயிர்க்கும்

தாயோன் தம்மான் என் அம்மான் அம்மா மூர்த்தியை சார்ந்தே

#2952

சார்ந்த இரு வல்வினைகளும் சரித்து மாய பற்று அறுத்து

தீர்ந்து தன்-பால் மனம் வைக்க திருத்தி வீடு திருத்துவான்

ஆர்ந்த ஞான சுடர் ஆகி அகலம் கீழ் மேல் அளவு இறந்து

நேர்ந்த உருவாய் அருவாகும் இவற்றின் உயிராம் நெடுமாலே

#2953

மாலே மாய பெருமானே மா மாயவனே என்று என்று

மாலே ஏறி மால் அருளால் மன்னு குருகூர் சடகோபன்

பால் ஏய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரத்தின்

பாலே பட்ட இவை பத்தும் வல்லார்க்கு இல்லை பரிவதே

#2954

பரிவது இல் ஈசனை பாடி

விரிவது மேவல் உறுவீர்

பிரி வகை இன்றி நல் நீர் தூய்

புரிவதுவும் புகை பூவே

#2955

மதுவார் தண் அம் துழாயான்

முது வேத முதலவனுக்கு

எது ஏது என் பணி என்னாது

அதுவே ஆள் செய்யும் ஈடே

#2956

ஈடும் எடுப்பும் இல் ஈசன்

மாடு விடாது என் மனனே

பாடும் என் நா அவன் பாடல்

ஆடும் என் அங்கம் அணங்கே

#2957

அணங்கு என ஆடும் என் அங்கம்

வணங்கி வழிபடும் ஈசன்

பிணங்கி அமரர் பிதற்றும்

குணங்கெழு கொள்கையினானே

#2958

கொள்கை கொளாமை இலாதான்

எள்கல் இராகம் இலாதான்

விள்கை விள்ளாமை விரும்பி

உள் கலந்தார்க்கு ஓர் அமுதே

#2959

அமுதம் அமரர்கட்கு ஈந்த

நிமிர் சுடர் ஆழி நெடுமால்

அமுதிலும் ஆற்ற இனியன்

நிமிர் திரை நீள் கடலானே

#2960

நீள் கடல் சூழ் இலங்கை கோன்

தோள்கள் தலை துணிசெய்தான்

தாள்கள் தலையில் வணங்கி

நாள்கள் தலைக்கழி-மின்னே

#2961

கழி-மின் தொண்டீர்கள் கழித்து

தொழு-மின் அவனை தொழுதால்

வழிநின்ற வல்வினை மாள்வித்து

அழிவின்றி ஆக்கம் தருமே

#2962

தரும அரும் பயன் ஆய

திருமகளார் தனி கேள்வன்

பெருமை உடைய பிரானார்

இருமை வினை கடிவாரே

#2963

கடிவார் தீய வினைகள்

நொடியாரும் அளவை-கண்

கொடியா அடு புள் உயர்த்த

வடிவு ஆர் மாதவனாரே

#2964

மாதவன்-பால் சடகோபன்

தீது அவம் இன்றி உரைத்த

ஏதம் இல் ஆயிரத்து இ பத்து

ஓத வல்லார் பிறவாரே

#2965

பிறவி துயர் அற ஞானத்துள் நின்று

துறவி சுடர் விளக்கம் தலைப்பெய்வார்

அறவனை ஆழிப்படை அந்தணனை

மறவியை இன்றி மனத்து வைப்பாரே

#2966

வைப்பு ஆம் மருந்து ஆம் அடியரை வல்வினை

துப்பு ஆம் புலன் ஐந்தும் துஞ்சக்கொடான் அவன்

எப்பால் எவர்க்கும் நலத்தால் உயர்ந்து உயர்ந்து

அப்பாலவன் எங்கள் ஆயர் கொழுந்தே

#2967

ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்ணும்

மாய பிரானை என் மாணிக்க சோதியை

தூய அமுதை பருகி பருகி என்

மாய பிறவி மயர்வு அறுத்தேனே

#2968

மயர்வு அற என் மனத்தே மன்னினான் தன்னை

உயர்வினையே தரும் ஒண் சுடர் கற்றையை

அயர்வு இல் அமரர்கள் ஆதி கொழுந்தை என்

இசைவினை என் சொல்லி யான் விடுவேனோ

#2969

விடுவேனோ என் விளக்கை என் ஆவியை

நடுவே வந்து உய்ய கொள்கின்ற நாதனை

தொடுவே செய்து இள ஆய்ச்சியர் கண்ணினுள்

விடவே செய்து விழிக்கும் பிரானையே

#2970

பிரான் பெரு நிலம் கீண்டவன் பின்னும்

விராய் மலர் துழாய் வேய்ந்த முடியன்

மராமரம் எய்த மாயவன் என்னுள்

இரான் எனில் பின்னை யான் ஒட்டுவேனோ

#2971

யான் ஒட்டி என்னுள் இருத்துவன் என்றிலன்

தான் ஒட்டி வந்து என் தனி நெஞ்சை வஞ்சித்து

ஊன் ஒட்டி நின்று என் உயிரில் கலந்து இயல்

வான் ஒட்டுமோ இனி என்னை நெகிழ்க்கவே

#2972

என்னை நெகிழ்க்கிலும் என்னுடை நன் நெஞ்சம்

தன்னை அகல்விக்க தானும் கில்லான் இனி

பின்னை நெடும் பணை தோள் மகிழ் பீடு உடை

முன்னை அமரர் முழுமுதல் தானே

#2973

அமரர் முழுமுதல் ஆகிய ஆதியை

அமரர்க்கு அமுது ஈந்த ஆயர் கொழுந்தை

அமர அழும்ப துழாவி என் ஆவி

அமர தழுவிற்று இனி அகலும்மோ

#2974

அகலில் அகலும் அணுகில் அணுகும்

புகலும் அரியன் பொரு அல்லன் எம்மான்

நிகர் இல் அவன் புகழ் பாடி இளைப்பு இலம்

பகலும் இரவும் படிந்து குடைந்தே

#2975

குடைந்து வண்டு உண்ணும் துழாய் முடியானை

அடைந்த தென் குருகூர் சடகோபன்

மிடைந்த சொல் தொடை ஆயிரத்து இ பத்து

உடைந்து நோய்களை ஓடுவிக்குமே

#2976

ஓடும் புள் ஏறி

சூடும் தண் துழாய்

நீடு நின்றவை

ஆடும் அம்மானே

#2977

அம்மானாய் பின்னும்

எம் மாண்பும் ஆனான்

வெம் மா வாய் கீண்ட

செம் மா கண்ணனே

#2978

கண் ஆவான் என்றும்

மண்ணோர் விண்ணோர்க்கு

தண் ஆர் வேங்கட

விண்ணோர் வெற்பனே

#2979

வெற்பை ஒன்று எடுத்து

ஒற்கம் இன்றியே

நிற்கும் அம்மான் சீர்

கற்பன் வைகலே

#2980

வைகலும் வெண்ணெய்

கைகலந்து உண்டான்

பொய் கலவாது என்

மெய் கலந்தானே

#2981

கலந்து என் ஆவி

நலம் கொள் நாதன்

புலன் கொள் மாணாய்

நிலம் கொண்டானே

#2982

கொண்டான் ஏழ் விடை

உண்டான் ஏழ் வையம்

தண் தாமம் செய்து என்

எண் தான் ஆனானே

#2983

ஆனான் ஆன் ஆயன்

மீனோடு ஏனமும்

தான் ஆனான் என்னில்

தான் ஆய சங்கே

#2984

சங்கு சக்கரம்

அங்கையில் கொண்டான்

எங்கும் தானாய

நங்கள் நாதனே

#2985

நாதன் ஞாலம் கொள்

பாதன் என் அம்மான்

ஓதம் போல் கிளர்

வேத நீரனே

#2986

நீர் புரை வண்ணன்

சீர் சடகோபன்

நேர்தல் ஆயிரத்து

ஓர்தல் இவையே

#2987

இவையும் அவையும் உவையும் இவரும் அவரும் உவரும்

எவையும் எவரும் தன்னுளே ஆகியும் ஆக்கியும் காக்கும்

அவையுள் தனிமுதல் எம்மான் கண்ணபிரான் என் அமுதம்

சுவையன் திருவின் மணாளன் என்னுடை சூழல் உளானே

#2988

சூழல் பலபல வல்லான் தொல்லை அம் காலத்து உலகை

கேழல் ஒன்று ஆகி இடந்த கேசவன் என்னுடை அம்மான்

வேழ மருப்பை ஒசித்தான் விண்ணவர்க்கு எண்ணல் அரியான்

ஆழ நெடும் கடல் சேர்ந்தான் அவன் என் அருகலிலானே

#2989

அருகல் இலாய பெரும் சீர் அமரர்கள் ஆதி முதல்வன்

கருகிய நீல நன் மேனி வண்ணன் செந்தாமரை கண்ணன்

பொரு சிறை புள் உவந்து ஏறும் பூ மகளார் தனி கேள்வன்

ஒருகதியின் சுவை தந்திட்டு ஒழிவு இலன் என்னோடு உடனே

#2990

உடன் அமர் காதல் மகளிர் திருமகள் மண் மகள் ஆயர்

மட மகள் என்று இவர் மூவர் ஆளும் உலகமும் மூன்றே

உடன் அவை ஒக்க விழுங்கி ஆலிலை சேர்ந்தவன் எம்மான்

கடல் மலி மாய பெருமான் கண்ணன் என் ஒக்கலையானே

#2991

ஒக்கலை வைத்து முலை பால் உண் என்று தந்திட வாங்கி

செக்கம் செக அன்று அவள்-பால் உயிர் செக உண்ட பெருமான்

நக்க பிரானோடு அயனும் இந்திரனும் முதலாக

ஒக்கவும் தோற்றிய ஈசன் மாயன் என் நெஞ்சின் உளானே

#2992

மாயன் என் நெஞ்சின் உள்ளான் மற்றும் எவர்க்கும் அதுவே

காயமும் சீவனும் தானே காலும் எரியும் அவனே

சேயன் அணியன் எவர்க்கும் சிந்தைக்கும் கோசரம் அல்லன்

தூயன் துயக்கன் மயக்கன் என்னுடை தோள் இணையானே

#2993

தோள் இணை மேலும் நன் மார்பின் மேலும் சுடர் முடி மேலும்

தாள் இணை மேலும் புனைந்த தண் அம் துழாய் உடை அம்மான்

கேள் இணை ஒன்றும் இலாதான் கிளரும் சுடர் ஒளி மூர்த்தி

நாள் அணைந்து ஒன்றும் அகலான் என்னுடை நாவின் உளானே

#2994

நாவினுள் நின்று மலரும் ஞான கலைகளுக்கு எல்லாம்

ஆவியும் ஆக்கையும் தானே அழிப்போடு அளிப்பவன் தானே

பூ இயல் நால் தடம் தோளன் பொரு படை ஆழி சங்கு ஏந்தும்

காவி நன் மேனி கமல கண்ணன் என் கண்ணின் உளானே

#2995

கமல கண்ணன் என் கண்ணின் உள்ளான் காண்பன் அவன் கண்களாலே

அமலங்கள் ஆக விழிக்கும் ஐம்புலனும் அவன் மூர்த்தி

கமலத்து அயன் நம்பி தன்னை கண் நுதலானொடும் தோற்றி

அமல தெய்வத்தொடு உலகம் ஆக்கி என் நெற்றி உளானே

#2996

நெற்றியுள் நின்று என்னை ஆளும் நிரை மலர் பாதங்கள் சூடி

கற்றை துழாய் முடி கோல கண்ணபிரானை தொழுவார்

ஒற்றை பிறை அணிந்தானும் நான்முகனும் இந்திரனும்

மற்றை அமரரும் எல்லாம் வந்து எனது உச்சியுளானே

#2997

உச்சியுள்ளே நிற்கும் தேவதேவற்கு கண்ணபிரானுக்கு

இச்சையுள் செல்ல உணர்த்தி வண் குருகூர் சடகோபன்

இ சொன்ன ஆயிரத்துள்ளே இவையும் ஓர் பத்து எம்பிராற்கு

நிச்சலும் விண்ணப்பம் செய்ய நீள் கழல் சென்னி பொருமே

#2998

பொரு மா நீள் படை ஆழி சங்கத்தொடு

திரு மா நீள் கழல் ஏழ் உலகும் தொழ

ஒரு மாணி குறள் ஆகி நிமிர்ந்த அ

கருமாணிக்கம் என் கண்ணுளது ஆகுமே

#2999

கண்ணுள்ளே நிற்கும் காதன்மையால் தொழில்

எண்ணிலும் வரும் என் இனி வேண்டுவம்

மண்ணும் நீரும் எரியும் நல் வாயுவும்

விண்ணுமாய் விரியும் எம் பிரானையே

#3000

எம்பிரானை எந்தை தந்தை தந்தைக்கும்

தம்பிரானை தண் தாமரை கண்ணனை

கொம்பு அராவு நுண் நேர் இடை மார்பனை

எம்பிரானை தொழாய் மட நெஞ்சமே

#3001

நெஞ்சமே நல்லை நல்லை உன்னை பெற்றால்

என் செய்யோம் இனி என்ன குறைவினம்

மைந்தனை மலராள் மணவாளனை

துஞ்சும்போதும் விடாது தொடர்கண்டாய்

#3002

கண்டாயே நெஞ்சே கருமங்கள் வாய்க்கின்று ஓர்

எண் தானும் இன்றியே வந்து இயலுமாறு

உண்டானை உலகு ஏழும் ஓர் மூவடி

கொண்டானை கண்டுகொண்டனை நீயுமே

#3003

நீயும் நானும் இ நேர்நிற்கில் மேல் மற்றோர்

நோயும் சார்கொடான் நெஞ்சமே சொன்னேன்

தாயும் தந்தையுமாய் இ உலகினில்

வாயும் ஈசன் மணி வண்ணன் எந்தையே

#3004

எந்தையே என்றும் எம் பெருமான் என்றும்

சிந்தையுள் வைப்பன் சொல்லுவன் பாவியேன்

எந்தை எம் பெருமான் என்று வானவர்

சிந்தையுள் வைத்து சொல்லும் செல்வனையே

#3005

செல்வ நாரணன் என்ற சொல் கேட்டலும்

மல்கும் கண் பனி நாடுவன் மாயமே

அல்லும் நன் பகலும் இடைவீடு இன்றி

நல்கி என்னை விடான் நம்பி நம்பியே

#3006

நம்பியை தென் குறுங்குடி நின்ற அ

செம்பொனே திகழும் திருமூர்த்தியை

உம்பர் வானவர் ஆதி அம் சோதியை

எம் பிரானை என் சொல்லி மறப்பனோ

#3007

மறப்பும் ஞானமும் நான் ஒன்று உணர்ந்திலன்

மறக்கும் என்று செந்தாமரை கண்ணொடு

மறப்பு அற என் உள்ளே மன்னினான்-தன்னை

மறப்பனோ இனி யான் என் மணியையே

#3008

மணியை வானவர் கண்ணனை தன்னது ஓர்

அணியை தென் குருகூர் சடகோபன் சொல்

பணிசெய் ஆயிரத்துள் இவை பத்துடன்

தணிவிலர் கற்பரேல் கல்வி வாயுமே

#3009

வாயும் திரை உகளும் கானல் மட நாராய்

ஆயும் அமர் உலகும் துஞ்சிலும் நீ துஞ்சாயால்

நோயும் பயலைமையும் மீது ஊர எம்மே போல்

நீயும் திருமாலால் நெஞ்சம் கோள் பட்டாயே

#3010

கோள் பட்ட சிந்தையையாய் கூர் வாய அன்றிலே

சேண் பட்ட யாமங்கள் சேராது இரங்குதியால்

ஆள் பட்ட எம்மே போல் நீயும் அரவு அணையான்

தாள் பட்ட தண் துழாய் தாமம் காமுற்றாயே

#3011

காமுற்ற கையறவோடு எல்லே இராப்பகல்

நீ முற்ற கண்துயிலாய் நெஞ்சு உருகி ஏங்குதியால்

தீ முற்ற தென் இலங்கை ஊட்டினான் தாள் நயந்த

யாம் உற்றது உற்றாயோ வாழி கனை கடலே

#3012

கடலும் மலையும் விசும்பும் துழாய் எம் போல்

சுடர் கொள் இராப்பகல் துஞ்சாயால் தண் வாடாய்

அடல் கொள் படை ஆழி அம்மானை காண்பான் நீ

உடலம் நோய் உற்றாயோ ஊழி-தோறு ஊழியே

#3013

ஊழி-தோறு ஊழி உலகுக்கு நீர்கொண்டு

தோழியரும் யாமும் போல் நீராய் நெகிழ்கின்ற

வாழிய வானமே நீயும் மதுசூதன்

பாழிமையில் பட்டு அவன்-கண் பாசத்தால் நைவாயே

#3014

நைவாய எம்மே போல் நாள்மதியே நீ இ நாள்

மை வான் இருள் அகற்றாய் மாழாந்து தேம்புதியால்

ஐ வாய் அரவு அணை மேல் ஆழி பெருமானார்

மெய் வாசகம் கேட்டு உன் மெய்ந்நீர்மை தோற்றாயே

#3015

தோற்றோம் மட நெஞ்சம் எம் பெருமான் நாரணற்கு எம்

ஆற்றாமை சொல்லி அழுவோமை நீ நடுவே

வேற்றோர் வகையில் கொடிதாய் எனை ஊழி

மாற்றாண்மை நிற்றியோ வாழி கனை இருளே

#3016

இருளின் திணி வண்ணம் மா நீர் கழியே போய்

மருளுற்று இராப்பகல் துஞ்சிலும் நீ துஞ்சாயால்

உருளும் சகடம் உதைத்த பெருமானார்

அருளின் பெரு நசையால் ஆழாந்து நொந்தாயே

#3017

நொந்து ஆரா காதல் நோய் மெல் ஆவி உள் உலர்த்த

நந்தா விளக்கமே நீயும் அளியத்தாய்

செந்தாமரை தடம் கண் செம் கனி வாய் எம் பெருமான்

அம் தாமம் தண் துழாய் ஆசையால் வேவாயே

#3018

வேவு ஆரா வேட்கை நோய் மெல் ஆவி உள் உலர்த்த

ஓவாது இராப்பகல் உன்-பாலே வீழ்த்து ஒழிந்தாய்

மா வாய் பிளந்து மருதிடை போய் மண் அளந்த

மூவா முதல்வா இனி எம்மை சோரேலே

#3019

சோராத எ பொருட்கும் ஆதியாம் சோதிக்கே

ஆராத காதல் குருகூர் சடகோபன்

ஓராயிரம் சொன்ன அவற்றுள் இவை பத்தும்

சோரார் விடார் கண்டீர் வைகுந்தம் திண்ணனவே

#3020

திண்ணன் வீடு முதல் முழுதும் ஆய்

எண்ணின் மீதியன் எம் பெருமான்

மண்ணும் விண்ணும் எல்லாம் உடன் உண்ட நம்

கண்ணன் கண் அல்லது இல்லை ஓர் கண்ணே

#3021

ஏ பாவம் பரமே ஏழ் உலகும்

ஈ பாவம் செய்து அருளால் அளிப்பார் ஆர்

மா பாவம் விட அரற்கு பிச்சை பெய்

கோபால கோளரி ஏறு அன்றியே

#3022

ஏறனை பூவனை பூ மகள்-தன்னை

வேறு இன்றி விண் தொழ தன்னுள் வைத்து

மேல் தன்னை மீதிட நிமிர்ந்து மண் கொண்ட

மால்-தனின் மிக்கும் ஓர் தேவும் உளதே

#3023

தேவும் எ பொருளும் படைக்க

பூவில் நான்முகனை படைத்த

தேவன் எம் பெருமானுக்கு அல்லால்

பூவும் பூசனையும் தகுமே

#3024

தகும் சீர் தன் தனிமுதலினுள்ளே

மிகும் தேவும் எ பொருளும் படைக்க

தகும் கோல தாமரை கண்ணன் எம்மான்

மிகும் சோதி மேல் அறிவார் எவரே

#3025

எவரும் யாவையும் எல்லா பொருளும்

கவர்வு இன்றி தன்னுள் ஒடுங்க நின்ற

பவர் கொள் ஞான வெள்ள சுடர் மூர்த்தி

அவர் எம் ஆழி அம் பள்ளியாரே

#3026

பள்ளி ஆலிலை ஏழ் உலகும் கொள்ளும்

வள்ளல் வல் வயிற்று பெருமான்

உள் உள் ஆர் அறிவார் அவன்-தன்

கள்ள மாய மனக்கருத்தே

#3027

கருத்தில் தேவும் எல்லா பொருளும்

வருத்தித்த மாய பிரான் அன்றி யாரே

திருத்தி திண் நிலை மூ உலகும் தம்முள்

இருத்தி காக்கும் இயல்வினரே

#3028

காக்கும் இயல்வினன் கண்ண பெருமான்

சேர்க்கை செய்து தன் உந்தியுள்ளே

வாய்த்த திசைமுகன் இந்திரன் வானவர்

ஆக்கினான் தெய்வ உலகுகளே

#3029

கள்வா எம்மையும் ஏழ் உலகும் நின்

உள்ளே தோற்றிய இறைவ என்று

வெள் ஏறன் நான்முகன் இந்திரன் வானவர்

புள் ஊர்தி கழல் பணிந்து ஏத்துவரே

#3030

ஏத்த ஏழ் உலகும் கொண்ட கோல

கூத்தனை குருகூர் சடகோபன் சொல்

வாய்த்த ஆயிரத்துள் இவை பத்துடன்

ஏத்த வல்லவர்க்கு இல்லை ஓர் ஊனமே

#3031

ஊனில் வாழ் உயிரே நல்லை போ உன்னை பெற்று

வான் உளார் பெருமான் மதுசூதன் என் அம்மான்

தானும் யானும் எல்லாம் தன்னுள்ளே கலந்து ஒழிந்தோம்

தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதும் ஒத்தே

#3032

ஒத்தார் மிக்காரை இலையாய மா மாய

ஒத்தாய் எ பொருட்கும் உயிராய் என்னை பெற்ற

அ தாயாய் தந்தையாய் அறியாதன அறிவித்து

அத்தா நீ செய்தன அடியேன் அறியேனே

#3033

அறியா காலத்துள்ளே அடிமை-கண் அன்பு செய்வித்து

அறியா மா மாயத்து அடியேனை வைத்தாயால்

அறியாமை குறளாய் நிலம் மாவலி மூவடி என்று

அறியாமை வஞ்சித்தாய் எனது ஆவியுள் கலந்தே

#3034

எனது ஆவியுள் கலந்த பெரு நல் உதவி கைம்மாறு

எனது ஆவி தந்து ஒழிந்தேன் இனி மீள்வது என்பது உண்டே

எனது ஆவி ஆவியும் நீ பொழில் ஏழும் உண்ட எந்தாய்

எனது ஆவி யார் யான் ஆர் தந்த நீ கொண்டாக்கினையே

#3035

இனி யார் ஞானங்களால் எடுக்கல் எழாத எந்தாய்

கனிவார் வீட்டு இன்பமே என் கடல் படா அமுதே

தனியேன் வாழ் முதலே பொழில் ஏழும் ஏனம் ஒன்றாய்

நுனி ஆர் கோட்டில் வைத்தாய் நுன பாதம் சேர்ந்தேனே

#3036

சேர்ந்தார் தீவினைகட்கு அரு நஞ்சை திண் மதியை

தீர்ந்தார் தம் மனத்து பிரியாது அவர் உயிரை

சோர்ந்தே புகல் கொடா சுடரை அரக்கியை மூக்கு

ஈர்ந்தாயை அடியேன் அடைந்தேன் முதல் முன்னமே

#3037

முன் நல் யாழ் பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே

பல் நலார் பயிலும் பரனே பவித்திரனே

கன்னலே அமுதே கார் முகிலே என் கண்ணா

நின் அலால் இலேன் காண் என்னை நீ குறிக்கொள்ளே

#3038

குறிக்கொள் ஞானங்களால் எனை ஊழி செய் தவமும்

கிறிக்கொண்டு இ பிறப்பே சில நாளில் எய்தினன் யான்

உறிக்கொண்ட வெண்ணெய் பால் ஒளித்து உண்ணும் அம்மான் பின்

நெறிக்கொண்ட நெஞ்சனாய் பிறவி துயர் கடிந்தே

#3039

கடி வார் தண் அம் துழாய் கண்ணன் விண்ணவர் பெருமான்

படி வானம் இறந்த பரமன் பவித்திரன் சீர்

செடி ஆர் நோய்கள் கெட படிந்து குடைந்து ஆடி

அடியேன் வாய்மடுத்து பருகி களித்தேனே

#3040

களிப்பும் கவர்வும் அற்று பிறப்பு பிணி மூப்பு இறப்பு அற்று

ஒளிக்கொண்ட சோதியுமாய் உடன்கூடுவது என்று-கொலோ

துளிக்கின்ற வான் இ நிலம் சுடர் ஆழி சங்கு ஏந்தி

அளிக்கின்ற மாய பிரான் அடியார்கள் குழாங்களையே

#3041

குழாம் கொள் பேர் அரக்கன் குலம் வீய முனிந்தவனை

குழாம் கொள் தென் குருகூர் சடகோபன் தெரிந்து உரைத்த

குழாம் கொள் ஆயிரத்துள் இவை பத்தும் உடன் பாடி

குழாங்களாய் அடியீர் உடன் கூடிநின்று ஆடு-மினே

#3042

ஆடி ஆடி அகம் கரைந்து இசை

பாடி பாடி கண்ணீர் மல்கி எங்கும்

நாடி நாடி நரசிங்கா என்று

வாடி வாடும் இ வாள் நுதலே

#3043

வாள் நுதல் இ மடவரல் உம்மை

காணும் ஆசையுள் நைகின்றாள் விறல்

வாணன் ஆயிரம் தோள் துணித்தீர் உம்மை

காண நீர் இரக்கம் இலீரே

#3044

இரக்க மனத்தோடு எரி அணை

அரக்கும் மெழுகும் ஒக்கும் இவள்

இரக்கம் எழீர் இதற்கு என் செய்கேன்

அரக்கன் இலங்கை செற்றீருக்கே

#3045

இலங்கை செற்றவனே என்னும் பின்னும்

வலம் கொள் புள் உயர்த்தாய் என்னும் உள்ளம்

மலங்க வெவ் உயிர்க்கும் கண்ணீர் மிக

கலங்கி கைதொழும் நின்று இவளே

#3046

இவள் இராப்பகல் வாய்வெரீ இ தன

குவளை ஒண் கண்ண நீர் கொண்டாள் வண்டு

திவளும் தண் அம் துழாய் கொடீர் என

தவள வண்ணர் தகவுகளே

#3047

தகவு உடையவனே என்னும் பின்னும்

மிக விரும்பும் பிரான் என்னும் எனது

அக உயிர்க்கு அமுதே என்னும் உள்ளம்

உக உருகி நின்று உள் உளே

#3048

உள்உள் ஆவி உலர்ந்துஉலர்ந்து என

வள்ளலே கண்ணனே என்னும் பின்னும்

வெள்ள நீர் கிடந்தாய் என்னும் என

கள்வி தான் பட்ட வஞ்சனையே

#3049

வஞ்சனே என்னும் கைதொழும் தன

நெஞ்சம் வேவ நெடிது உயிர்க்கும் விறல்

கஞ்சனை வஞ்சனை செய்தீர் உம்மை

தஞ்சம் என்று இவள் பட்டனவே

#3050

பட்ட போது எழு போது அறியாள் விரை

மட்டு அலர் தண் துழாய் என்னும் சுடர்

வட்ட வாய் நுதி நேமியீர் நுமது

இட்டம் என்-கொல் இ ஏழைக்கே

#3051

ஏழை பேதை இராப்பகல் தன

கேழ் இல் ஒண் கண்ண நீர் கொண்டாள் கிளர்

வாழ்வை வேவ இலங்கை செற்றீர் இவள்

மாழை நோக்கு ஒன்றும் வாட்டேன்-மினே

#3052

வாட்டம் இல் புகழ் வாமனனை இசை

கூட்டி வண் சடகோபன் சொல் அமை

பாட்டு ஓர் ஆயிரத்து இ பத்தால் அடி

சூட்டலாகும் அம் தாமமே

#3053

அம் தாமத்து அன்பு செய்து என் ஆவி சேர் அம்மானுக்கு

அம் தாமம் வாழ் முடி சங்கு ஆழி நூல் ஆரம் உள

செந்தாமரை தடம் கண் செம் கனி வாய் செங்கமலம்

செந்தாமரை அடிகள் செம்பொன் திரு உடம்பே

#3054

திரு உடம்பு வான் சுடர் செந்தாமரை கண் கை கமலம்

திரு இடமே மார்வம் அயன் இடமே கொப்பூழ்

ஒருவு இடமும் எந்தை பெருமாற்கு அரனே ஓ

ஒருவு இடம் ஒன்று இன்றி என்னுள் கலந்தானுக்கே

#3055

என்னுள் கலந்தவன் செம் கனி வாய் செங்கமலம்

மின்னும் சுடர் மலைக்கு கண் பாதம் கை கமலம்

மன்னும் முழு ஏழ் உலகும் வயிற்றின் உள

தன்னுள் கலவாதது எ பொருளும் தான் இலையே

#3056

எ பொருளும் தானாய் மரகத குன்றம் ஒக்கும்

அப்பொழுதை தாமரைப்பூ கண் பாதம் கை கமலம்

எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டு ஊழி ஊழி-தொறும்

அப்பொழுதைக்கு அப்பொழுது என் ஆரா அமுதமே

#3057

ஆரா அமுதமாய் அல் ஆவியுள் கலந்த

கார் ஆர் கரு முகில் போல் என் அம்மான் கண்ணனுக்கு

நேரா வாய் செம் பவளம் கண் பாதம் கை கமலம்

பேர் ஆரம் நீள் முடி நாண் பின்னும் இழை பலவே

#3058

பலபலவே ஆபரணம் பேரும் பலபலவே

பலபலவே சோதி வடிவு பண்பு எண்ணில்

பலபல கண்டு உண்டு கேட்டு உற்று மோந்து இன்பம்

பலபலவே ஞானமும் பாம்பு அணை மேலாற்கேயோ

#3059

பாம்பு அணை மேல் பாற்கடலுள் பள்ளி அமர்ந்ததுவும்

காம்பு அணை தோள் பின்னைக்காய் ஏறு உடன் ஏழ் செற்றதுவும்

தேம் பணைய சோலை மராமரம் ஏழ் எய்ததுவும்

பூம் பிணைய தண் துழாய் பொன் முடி அம் போர் ஏறே

#3060

பொன் முடி அம் போர் ஏற்றை எம்மானை நால் தடம் தோள்

தன் முடிவு ஒன்று இல்லாத தண் துழாய் மாலையனை

என் முடிவு காணாதே என்னுள் கலந்தானை

சொல் முடிவு காணேன் நான் சொல்லுவது என் சொல்லீரே

#3061

சொல்லீர் என் அம்மானை என் ஆவி ஆவி-தனை

எல்லை இல் சீர் என் கருமாணிக்க சுடரை

நல்ல அமுதம் பெறற்கு அரிய வீடும் ஆய்

அல்லி மலர் விரை ஒத்து ஆண் அல்லன் பெண் அலனே

#3062

ஆண் அல்லன் பெண் அல்லன் அல்லா அலியும் அல்லன்

காணலும் ஆகான் உளன் அல்லன் இல்லை அல்லன்

பேணுங்கால் பேணும் உரு ஆகும் அல்லனும் ஆம்

கோணை பெரிது உடைத்து எம் பெம்மானை கூறுதலே

#3063

கூறுதல் ஒன்று ஆரா குட கூத்த அம்மானை

கூறுதலே மேவி குருகூர் சடகோபன்

கூறின அந்தாதி ஓர் ஆயிரத்துள் இ பத்தும்

கூறுதல் வல்லார் உளரேல் கூடுவர் வைகுந்தமே

#3064

வைகுந்தா மணி வண்ணனே என் பொல்லா திருக்குறளா என்னுள் மன்னி

வைகும் வைகல்-தோறும் அமுது ஆய வான் ஏறே

செய் குந்தா அரும் தீமை உன் அடியார்க்கு தீர்த்து அசுரர்க்கு தீமைகள்

செய் குந்தா உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கெனவே

#3065

சிக்கென சிறிது ஓர் இடமும் புறப்படா தன்னுள்ளே உலகுகள்

ஒக்கவே விழுங்கி புகுந்தான் புகுந்ததன் பின்

மிக்க ஞான வெள்ள சுடர் விளக்காய் துளக்கு அற்று அமுதமாய் எங்கும்

பக்கம் நோக்கு அறியான் என் பைம் தாமரை கண்ணனே

#3066

தாமரை கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை துழாய் விரை

பூ மருவு கண்ணி எம் பிரானை பொன் மலையை

நாம் மருவி நன்கு ஏத்தி உள்ளி வணங்கி நாம் மகிழ்ந்து ஆட நாவு அலர்

பா மருவி நிற்க தந்த பான்மையே வள்ளலே

#3067

வள்ளலே மதுசூதனா என் மரகத மலையே உனை நினைந்து

எள்கல் தந்த எந்தாய் உன்னை எங்ஙனம் விடுகேன்

வெள்ளமே புரை நின் புகழ் குடைந்து ஆடி பாடி களித்து உகந்து உகந்து

உள்ள நோய்கள் எல்லாம் துரந்து உய்ந்து போந்திருந்தே

#3068

உய்ந்து போந்து என் உலப்பு இலாத வெம் தீவினைகளை நாசம் செய்து உனது

அந்தம் இல் அடிமை அடைந்தேன் விடுவேனோ

ஐந்து பைந்தலை ஆடு அரவு அணை மேவி பாற்கடல் யோக நித்திரை

சிந்தைசெய்த எந்தாய் உன்னை சிந்தைசெய்து செய்தே

#3069

உன்னை சிந்தைசெய்துசெய்து உன் நெடு மா மொழி இசை பாடி ஆடி என்

முன்னை தீவினைகள் முழு வேர் அரிந்தனன் யான்

உன்னை சிந்தையினால் இகழ்ந்த இரணியன் அகல் மார்வம் கீண்ட என்

முன்னை கோளரியே முடியாதது என் எனக்கே

#3070

முடியாதது என் எனக்கேல் இனி முழு ஏழ் உலகும் உண்டான் உகந்து வந்து

அடியேன் உட்புகுந்தான் அகல்வானும் அல்லன் இனி

செடி ஆர் நோய்கள் எல்லாம் துரந்து எமர் கீழ் மேல் எழு பிறப்பும்

விடியா வெம் நரகத்து என்றும் சேர்தல் மாறினரே

#3071

மாறிமாறி பல பிறப்பும் பிறந்து அடியை அடைந்து உள்ளம் தேறி

ஈறு இல் இன்பத்து இரு வெள்ளம் யான் மூழ்கினன்

பாறி பாறி அசுரர்-தம் பல் குழாங்கள் நீறு எழ பாய் பறவை ஒன்று

ஏறி வீற்றிருந்தாய் உன்னை என்னுள் நீக்கேல் எந்தாய்

#3072

எந்தாய் தண் திருவேங்கடத்துள் நின்றாய் இலங்கை செற்றாய் மராமரம்

பைம் தாள் ஏழ் உருவ ஒரு வாளி கோத்த வில்லா

கொந்து ஆர் தண் அம் துழாயினாய் அமுதே உன்னை என்னுள்ளே குழைத்த எம்

மைந்தா வான் ஏறே இனி எங்கு போகின்றதே

#3073

போகின்ற காலங்கள் போய காலங்கள் போகு காலங்கள் தாய் தந்தை உயிர்

ஆகின்றாய் உன்னை நான் அடைந்தேன் விடுவேனோ

பாகின்ற தொல் புகழ் மூ உலகுக்கும் நாதனே பரமா தண் வேங்கடம்

மேகின்றாய் தண் துழாய் விரை நாறு கண்ணியனே

#3074

கண்ணி தண் அம் துழாய் முடி கமல தடம் பெரும் கண்ணனை புகழ்

நண்ணி தென் குருகூர் சடகோபன் மாறன் சொன்ன

எண்ணில் சோர்வு இல் அந்தாதி ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து இசையொடும்

பண்ணில் பாட வல்லார் அவர் கேசவன் தமரே

#3075

கேசவன் தமர் கீழ் மேல் எமர் ஏழ் எழு பிறப்பும்

மா சதிர் இது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா

ஈசன் என் கருமாணிக்கம் என் செங்கோல கண்ணன் விண்ணோர்

நாயகன் எம் பிரான் எம்மான் நாராயணனாலே

#3076

நாரணன் முழு ஏழ் உலகுக்கும் நாதன் வேத மயன்

காரணம் கிரிசை கருமம் இவை முதல்வன் எந்தை

சீர் அணங்கு அமரர் பிறர் பலரும் தொழுது ஏத்த நின்று

வாரணத்தை மருப்பு ஒசித்த பிரான் என் மாதவனே

#3077

மாதவன் என்றதே கொண்டு என்னை இனி இப்பால் பட்டது

யாது அவங்களும் சேர்கொடேன் என்று என்னுள் புகுந்து இருந்து

தீது அவம் கெடுக்கும் அமுதம் செந்தாமரை கண் குன்றம்

கோது அவம் இல் என் கன்னல் கட்டி எம்மான் என் கோவிந்தனே

#3078

கோவிந்தன் குட கூத்தன் கோவலன் என்று என்றே குனித்து

தேவும் தன்னையும் பாடி ஆட திருத்தி என்னை கொண்டு என்

பாவம் தன்னையும் பாற கைத்து எமர் ஏழ் எழு பிறப்பும்

மேவும் தன்மையம் ஆக்கினான் வல்லன் எம்பிரான் விட்டுவே

#3079

விட்டு இலங்கு செம் சோதி தாமரை பாதம் கைகள் கண்கள்

விட்டு இலங்கு கரும் சுடர் மலையே திரு உடம்பு

விட்டு இலங்கு மதியம் சீர் சங்கு சக்கரம் பரிதி

விட்டு இலங்கு முடி அம்மான் மதுசூதனன் தனக்கே

#3080

மதுசூதனை அன்றி மற்று இலேன் என்று எத்தாலும் கருமம் இன்றி

துதி சூழ்ந்த பாடல்கள் பாடி ஆட நின்று ஊழி ஊழி-தொறும்

எதிர் சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள் செய்ய

விதி சூழ்ந்ததால் எனக்கேல் அம்மான் திரிவிக்கிரமனையே

#3081

திரிவிக்கிரமன் செந்தாமரை கண் எம்மான் என் செம் கனி வாய்

உருவில் பொலிந்த வெள்ளை பளிங்கு நிறத்தனன் என்று என்று உள்ளி

பரவி பணிந்து பல் ஊழி ஊழி நின் பாத பங்கயமே

மருவி தொழும் மனமே தந்தாய் வல்லை காண் என் வாமனனே

#3082

வாமனன் என் மரகத வண்ணன் தாமரை கண்ணினன்

காமனை பயந்தாய் என்றுஎன்று உன் கழல் பாடியே பணிந்து

தூ மனத்தனனாய் பிறவி துழதி நீங்க என்னை

தீ மனம் கெடுத்தாய் உனக்கு என் செய்கேன் என் சிரீதரனே

#3083

சிரீதரன் செய்ய தாமரை கண்ணன் என்று என்று இராப்பகல் வாய்

வெரீஇ அலமந்து கண்கள் நீர் மல்கி வெவ்வுயிர்த்து உயிர்த்து

மரீஇய தீவினை மாள இன்பம் வளர வைகல்வைகல்

இரீஇ உன்னை என்னுள் வைத்தனை என் இருடீகேசனே

#3084

இருடீகேசன் எம் பிரான் இலங்கை அரக்கர் குலம்

முருடு தீர்த்த பிரான் எம்மான் அமரர் பெம்மான் என்றுஎன்று

தெருடியாகில் நெஞ்சே வணங்கு திண்ணம் அறி அறிந்து

மருடியேலும் விடேல் கண்டாய் நம்பி பற்பநாபனையே

#3085

பற்பநாபன் உயர்வு அற உயரும் பெரும் திறலோன்

எற்பரன் என்னை ஆக்கி கொண்டு எனக்கே தன்னை தந்த

கற்பகம் என் அமுதம் கார் முகில் போலும் வேங்கட நல்

வெற்பன் விசும்போர் பிரான் எந்தை தாமோதரனே

#3086

தாமோதரனை தனிமுதல்வனை ஞாலம் உண்டவனை

ஆமோ தரம் அறிய ஒருவர்க்கு என்றே தொழும் அவர்கள்

தாமோதரன் உரு ஆகிய சிவற்கும் திசைமுகற்கும்

ஆமோ தரம் அறிய எம்மானை என் ஆழி வண்ணனையே

#3087

வண்ண மா மணி சோதியை அமரர் தலைமகனை

கண்ணனை நெடுமாலை தென் குருகூர் சடகோபன்

பண்ணிய தமிழ் மாலை ஆயிரத்துள் இவை பன்னிரண்டும்

பண்ணில் பன்னிரு நாம பாட்டு அண்ணல் தாள்
அணைவிக்குமே

#3088

அணைவது அரவு அணை மேல் பூம் பாவை ஆகம்

புணர்வது இருவர் அவர் முதலும் தானே

இணைவன் ஆம் எ பொருட்கும் வீடு முதல் ஆம்

புணைவன் பிறவி கடல் நீந்துவார்க்கே

#3089

நீந்தும் துயர் பிறவி உட்பட மற்று எ எவையும்

நீந்தும் துயர் இல்லா வீடு முதல் ஆம்

பூம் தண் புனல் பொய்கை யானை இடர் கடிந்த

பூம் தண் துழாய் என் தனி நாயகன் புணர்ப்பே

#3090

புணர்க்கும் அயன் ஆம் அழிக்கும் அரன் ஆம்

புணர்த்த தன் உந்தியொடு ஆகத்து மன்னி

புணர்த்த திரு ஆகி தன் மார்வில் தான் சேர்

புணர்ப்பன் பெரும் புணர்ப்பு எங்கும் புலனே

#3091

புலன் ஐந்தும் மேயும் பொறி ஐந்தும் நீங்கி

நலம் அந்தம் இல்லது ஓர் நாடு புகுவீர்

அலமந்து வீய அசுரரை செற்றான்

பலம் முந்து சீரில் படி-மின் ஓவாதே

#3092

ஓவா துயர் பிறவி உட்பட மற்று எவ்எவையும்

மூவா தனிமுதலாய் மூ உலகும் காவலோன்

மா ஆகி ஆமையாய் மீன் ஆகி மானிடம் ஆம்

தேவாதிதேவ பெருமான் என் தீர்த்தனே

#3093

தீர்த்தன் உலகு அளந்த சேவடி மேல் பூம் தாமம்

சேர்த்தி அவையே சிவன் முடி மேல் தான் கண்டு

பார்த்தன் தெளிந்து ஒழிந்த பைம் துழாயான் பெருமை

பேர்த்தும் ஒருவரால் பேச கிடந்ததே

#3094

கிடந்து இருந்து நின்று அளந்து கேழலாய் கீழ் புக்கு

இடந்திடும் தன்னுள் கரக்கும் உமிழும்

தடம் பெரும் தோள் ஆர தழுவும் பார் என்னும்

மடந்தையை மால் செய்கின்ற மால் ஆர் காண்பாரே

#3095

காண்பார் ஆர் எம் ஈசன் கண்ணனை என் காணுமாறு

ஊண் பேசில் எல்லா உலகும் ஓர் துற்று ஆற்றா

சேண் பால வீடோ உயிரோ மற்று எ பொருட்கும்

ஏண் பாலும் சோரான் பரந்து உளன் ஆம் எங்குமே

#3096

எங்கும் உளன் கண்ணன் என்ற மகனை காய்ந்து

இங்கு இல்லையால் என்று இரணியன் தூண் புடைப்ப

அங்கு அப்பொழுதே அவன் வீய தோன்றிய என்

சிங்க பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே

#3097

சீர்மை கொள் வீடு சுவர்க்கம் நரகு ஈறா

ஈர்மை கொள் தேவர் நடுவா மற்று எப்பொருட்கும்

வேர் முதலாய் வித்தாய் பரந்து தனி நின்ற

கார் முகில் போல் வண்ணன் என் கண்ணனை நான் கண்டேனே

#3098

கண் தலங்கள் செய்ய கரு மேனி அம்மானை

வண்டு அலம்பும் சோலை வழுதி வள நாடன்

பண் தலையில் சொன்ன தமிழ் ஆயிரத்து இ பத்தும் வலார்

விண் தலையில் வீற்றிருந்து ஆள்வர் எம் மா வீடே

#3099

எம் மா வீட்டு திறமும் செப்பம் நின்

செம் மா பாட பற்பு தலை சேர்த்து ஒல்லை

கைம்மா துன்பம் கடிந்த பிரானே

அம்மா அடியேன் வேண்டுவது ஈதே

#3100

ஈதே யான் உன்னை கொள்வது எஞ்ஞான்றும் என்

மை தோய் சோதி மணி வண்ண எந்தாய்

எய்தா நின் கழல் யான் எய்த ஞான

கை தா கால கழிவு செய்யேலே

#3101

செய்யேல் தீவினை என்று அருள்செய்யும் என்

கை ஆர் சக்கர கண்ணபிரானே

ஐ ஆர் கண்டம் அடைக்கிலும் நின் கழல்

எய்யாது ஏத்த அருள்செய் எனக்கே

#3102

எனக்கே ஆட்செய் எக்காலத்தும் என்று என்

மனக்கே வந்து இடைவீடு இன்றி மன்னி

தனக்கே ஆக எனை கொள்ளும் ஈதே

எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே

#3103

சிறப்பில் வீடு சுவர்க்கம் நரகம்

இறப்பில் எய்துக எய்தற்க யானும்

பிறப்பு இல் பல் பிறவி பெருமானை

மறப்பு ஒன்று இன்றி என்றும் மகிழ்வனே

#3104

மகிழ் கொள் தெய்வம் உலோகம் அலோகம்

மகிழ் கொள் சோதி மலர்ந்த அம்மானே

மகிழ் கொள் சிந்தை சொல் செய்கை கொண்டு என்றும்

மகிழ்வுற்று உன்னை வணங்க வாராயே

#3105

வாராய் உன் திருப்பாத மலர் கீழ்

பேராதே யான் வந்து அடையும்படி

தாராதாய் உன்னை என்னுள் வைப்பில் என்றும்

ஆராதாய் எனக்கு என்றும் எக்காலே

#3106

எக்காலத்து எந்தையாய் என்னுள் மன்னில் மற்று

எக்காலத்திலும் யாதொன்றும் வேண்டேன்

மிக்கார் வேத விமலர் விழுங்கும் என்

அக்கார கனியே உன்னை யானே

#3107

யானே என்னை அறியகிலாதே

யானே என் தனதே என்று இருந்தேன்

யானே நீ என் உடைமையும் நீயே

வானே ஏத்தும் எம் வானவர் ஏறே

#3108

ஏறேல் ஏழும் வென்று ஏர் கொள் இலங்கையை

நீறே செய்த நெடும் சுடர் சோதி

தேறேல் என்னை உன் பொன் அடி சேர்த்து ஒல்லை

வேறே போக எஞ்ஞான்றும் விடலே

#3109

விடல் இல் சக்கரத்து அண்ணலை மேவல்

விடல் இல் வண் குருகூர் சடகோபன்

கெடல் இல் ஆயிரத்துள் இவை பத்தும்

கெடல் இல் வீடு செய்யும் கிளர்வார்க்கே

#3110

கிளர் ஒளி இளமை கெடுவதன் முன்னம்

வளர் ஒளி மாயோன் மருவிய கோயில்

வளர் இளம் பொழில் சூழ் மாலிருஞ்சோலை

தளர்வு இலர் ஆகி சார்வது சதிரே

#3111

சதிர் இள மடவார் தாழ்ச்சியை மதியாது

அதிர் குரல் சங்கத்து அழகர்-தம் கோயில்

மதி தவழ் குடுமி மாலிருஞ்சோலை

பதியது ஏத்தி எழுவது பயனே

#3112

பயன் அல்ல செய்து பயன் இல்லை நெஞ்சே

புயல் மழை வண்ணர் புரிந்து உறை கோயில்

மயல் மிகு பொழில் சூழ் மாலிருஞ்சோலை

அயல் மலை அடைவது அது கருமமே

#3113

கரும வன் பாசம் கழித்து உழன்று உய்யவே

பெருமலை எடுத்தான் பீடு உறை கோயில்

வரு மழை தவழும் மாலிருஞ்சோலை

திருமலை அதுவே அடைவது திறமே

#3114

திறம் உடை வலத்தால் தீவினை பெருக்காது

அறம் முயல் ஆழி படையவன் கோயில்

மறு இல் வண் சுனை சூழ் மாலிருஞ்சோலை

புற மலை சார போவது கிறியே

#3115

கிறி என நினை-மின் கீழ்மை செய்யாதே

உறி அமர் வெண்ணெய் உண்டவன் கோயில்

மறியொடு பிணை சேர் மாலிருஞ்சோலை

நெறி பட அதுவே நினைவது நலமே

#3116

நலம் என நினை-மின் நரகு அழுந்தாதே

நிலம் முனம் இடந்தான் நீடு உறை கோயில்

மலம் அறு மதி சேர் மாலிருஞ்சோலை

வலம் முறை எய்தி மருவுதல் வலமே

#3117

வலஞ்செய்து வைகல் வலம் கழியாதே

வலஞ்செய்யும் ஆய மாயவன் கோயில்

வலஞ்செய்யும் வானோர் மாலிருஞ்சோலை

வலஞ்செய்து நாளும் மருவுதல் வழக்கே

#3118

வழக்கு என நினை-மின் வல்வினை மூழ்காது

அழக்கொடி அட்டான் அமர் பெரும் கோயில்

மழ களிற்று இனம் சேர் மாலிருஞ்சோலை

தொழ கருதுவதே துணிவது சூதே

#3119

சூது என்று களவும் சூதும் செய்யாதே

வேதம் முன் விரித்தான் விரும்பிய கோயில்

மாது உறு மயில் சேர் மாலிருஞ்சோலை

போது அவிழ் மலையே புகுவது பொருளே

#3120

பொருள் என்று இ உலகம் படைத்தவன் புகழ் மேல்

மருள் இல் வண் குருகூர் வண் சடகோபன்

தெருள் கொள்ள சொன்ன ஓர் ஆயிரத்துள் இ பத்து

அருளுடையவன் தாள் அணைவிக்கும் முடித்தே

#3121

முடி சோதியாய் உனது முக சோதி மலர்ந்ததுவோ

அடி சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ

படி சோதி ஆடையொடும் பல் கலனாய் நின் பைம்பொன்

கடி சோதி கலந்ததுவோ திருமாலே கட்டுரையே

#3122

கட்டுரைக்கில் தாமரை நின் கண் பாதம் கை ஒவ்வா

சுட்டு உரைத்த நன் பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது

ஒட்டு உரைத்து இ உலகு உன்னை புகழ்வு எல்லாம் பெரும்பாலும்

பட்டுரையாய் புற்கு என்றே காட்டுமால் பரஞ்சோதீ

#3123

பரஞ்சோதி நீ பரமாய் நின் இகழ்ந்து பின் மற்று ஓர்

பரம் சோதி இன்மையின் படி ஓவி நிகழ்கின்ற

பரஞ்சோதி நின்னுள்ளே படர் உலகம் படைத்த எம்

பரஞ்சோதி கோவிந்தா பண்பு உரைக்கமாட்டேனே

#3124

மாட்டாதே ஆகிலும் இ மலர் தலை மா ஞாலம் நின்

மாட்டு ஆய மலர் புரையும் திருவுருவம் மனம் வைக்க

மாட்டாத பல சமய மதி கொடுத்தாய் மலர் துழாய்

மாட்டே நீ மனம் வைத்தாய் மா ஞாலம் வருந்தாதே

#3125

வருந்தாத அரும் தவத்த மலர் கதிரின் சுடர் உடம்பு ஆய்

வருந்தாத ஞானமாய் வரம்பு இன்றி முழுது இயன்றாய்

வரும் காலம் நிகழ் காலம் கழி காலமாய் உலகை

ஒருங்காக அளிப்பாய் சீர் எங்கு உலக்க ஓதுவனே

#3126

ஓதுவார் ஓத்து எல்லாம் எ உலகத்து எவ்வெவையும்

சாதுவாய் நின் புகழின் தகை அல்லால் பிறிது இல்லை

போது வாழ் புனம் துழாய் முடியினாய் பூவின் மேல்

மாது வாழ் மார்பினாய் என் சொல்லி யான் வாழ்த்துவனே

#3127

வாழ்த்துவார் பலர் ஆக நின்னுள்ளே நான்முகனை

மூழ்த்த நீர் உலகு எல்லாம் படை என்று முதல் படைத்தாய்

கேழ்த்த சீர் அரன் முதலா கிளர் தெய்வமாய் கிளர்ந்து

சூழ்த்து அமரர் துதித்தால் உன் தொல் புகழ் மாசூணாதே

#3128

மாசூணா சுடர் உடம்பாய் மலராது குவியாது

மாசூணா ஞானமாய் முழுதுமாய் முழுது இயன்றாய்

மாசூணா வான் கோலத்து அமரர் கோன் வழிப்பட்டால்

மாசூணா உன பாத மலர் சோதி மழுங்காதே

#3129

மழுங்காத வை நுதிய சக்கர நல் வலத்தையாய்

தொழும் காதல் களிறு அளிப்பான் புள் ஊர்ந்து தோன்றினையே

மழுங்காத ஞானமே படை ஆக மலர் உலகில்

தொழும்பாயார்க்கு அளித்தால் உன் சுடர் சோதி மறையாதே

#3130

மறை ஆய நால் வேதத்துள் நின்ற மலர் சுடரே

முறையால் இ உலகு எல்லாம் படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து அளந்தாய்

பிறை ஏறு சடையானும் நான்முகனும் இந்திரனும்

இறை ஆதல் அறிந்து ஏத்த வீற்றிருத்தல் இது வியப்பே

#3131

வியப்பு ஆய வியப்பு இல்லா மெய்ஞ்ஞான வேதியனை

சய புகழார் பலர் வாழும் தடம் குருகூர் சடகோபன்

துயக்கு இன்றி தொழுது உரைத்த ஆயிரத்துள் இ பத்தும்

உயக்கொண்டு பிறப்பு அறுக்கும் ஒலி முந்நீர் ஞாலத்தே

#3132

முந்நீர் ஞாலம் படைத்த எம் முகில் வண்ணனே

அ நாள் நீ தந்த ஆக்கையின் வழி உழல்வேன்

வெம் நாள் நோய் வீய வினைகளை வேர் அற பாய்ந்து

ஏ நாள் யான் உன்னை இனி வந்து கூடுவனே

#3133

வன் மா வையம் அளந்த எம் வாமனா நின்

பல் மா மாய பல் பிறவியில் படிகின்ற யான்

தொல் மா வல்வினை தொடர்களை முதல் அரிந்து

நின் மா தாள் சேர்ந்து நிற்பது எஞ்ஞான்று-கொலோ

#3134

கொல்லா மாக்கோல் கொலைசெய்து பாரத போர்

எல்லா சேனையும் இரு நிலத்து அவித்த எந்தாய்

பொல்லா ஆக்கையின் புணர்வினை அறுக்கல் அறா

சொல்லாய் யான் உன்னை சார்வது ஓர் சூழ்ச்சியே

#3135

சூழ்ச்சி ஞான சுடர் ஒளி ஆகி என்றும்

ஏழ்ச்சி கேடு இன்றி எங்கணும் நிறைந்த எந்தாய்

தாழ்ச்சி மற்று எங்கும் தவிர்ந்து நின் தாள் இணை கீழ்

வாழ்ச்சி யான் சேரும் வகை அருளாய் வந்தே

#3136

வந்தாய் போலே வந்தும் என் மனத்தினை நீ

சிந்தாமல் செய்யாய் இதுவே இது ஆகில்

கொந்து ஆர் காயாவின் கொழு மலர் திரு நிறத்த

எந்தாய் யான் உன்னை எங்கு வந்து அணுகிற்பனே

#3137

கிற்பன் கில்லேன் என்று இலன் முனம் நாளால்

அற்ப சாரங்கள் அவை சுவைத்து அகன்று ஒழிந்தேன்

பற்பல் ஆயிரம் உயிர் செய்த பரமா நின்

நல் பொன் சோதித்தாள் நணுகுவது எஞ்ஞான்றே

#3138

எஞ்ஞான்றும் நாம் இருந்து இருந்து இரங்கி நெஞ்சே

மெய்ஞ்ஞானம் இன்றி வினை இயல் பிறப்பு அழுந்தி

எஞ்ஞான்றும் எங்கும் ஒழிவு அற நிறைந்து நின்ற

மெய்ஞ்ஞான சோதி கண்ணனை மேவுதுமே

#3139

மேவு துன்ப வினைகளை விடுத்துமிலேன்

ஓவுதல் இன்றி உன் கழல் வணங்கிற்றிலேன்

பாவு தொல் சீர் கண்ணா என் பரஞ்சுடரே

கூவுகின்றேன் காண்பான் எங்கு எய்த கூவுவனே

#3140

கூவிக்கூவி கொடுவினை தூற்றுள் நின்று

பாவியேன் பல காலம் வழி திகைத்து அலமர்கின்றேன்

மேவி அன்று ஆநிரை காத்தவன் உலகம் எல்லாம்

தாவிய அம்மானை எங்கு இனி தலைப்பெய்வனே

#3141

தலைப்பெய் காலம் நமன்-தமர் பாசம் விட்டால்

அலைப்பூண் உண்ணும் அ அல்லல் எல்லாம் அகல

கலை பல் ஞானத்து என் கண்ணனை கண்டுகொண்டு

நிலை பெற்று என் நெஞ்சம் பெற்றது நீடு உயிரே

#3142

உயிர்கள் எல்லா உலகமும் உடையவனை

குயில் கொள் சோலை தென் குருகூர் சடகோபன்

செயிர் இல் சொல் இசை மாலை ஆயிரத்துள் இ பத்தும்

உயிரின் மேல் ஆக்கை ஊனிடை ஒழிவிக்குமே

#3143

ஒழிவு இல் காலம் எல்லாம் உடனாய் மன்னி

வழு இலா அடிமைசெய்யவேண்டும் நாம்

தெழி குரல் அருவி திருவேங்கடத்து

எழில் கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே

#3144

எந்தை தந்தைதந்தை தந்தைதந்தைக்கும்

முந்தை வானவர் வானவர் கோனொடும்

சிந்து பூ மகிழும் திருவேங்கடத்து

அந்தம் இல் புகழ் கார் எழில் அண்ணலே

#3145

அண்ணல் மாயன் அணி கொள் செந்தாமரை

கண்ணன் செம் கனி வாய் கருமாணிக்கம்

தெள் நிறை சுனை நீர் திருவேங்கடத்து

எண் இல் தொல் புகழ் வானவர் ஈசனே

#3146

ஈசன் வானவர்க்கு என்பன் என்றால் அது

தேசமோ திருவேங்கடத்தானுக்கு

நீசனேன் நிறைவு ஒன்றும் இலேன் என்-கண்

பாசம் வைத்த பரஞ்சுடர் சோதிக்கே

#3147

சோதி ஆகி எல்லா உலகும் தொழும்

ஆதிமூர்த்தி என்றால் அளவு ஆகுமோ

வேதியர் முழு வேதத்து அமுதத்தை

தீது இல் சீர் திருவேங்கடத்தானையே

#3148

வேம் கடங்கள் மெய் மேல் வினை முற்றவும்

தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்

வேங்கடத்து உறைவார்க்கு நம என்னல்

ஆம் கடமைஅது சுமந்தார்கட்கே

#3149

சுமந்து மா மலர் நீர் சுடர் தூபம் கொண்டு

அமர்ந்து வானவர் வானவர் கோனொடும்

நமன்று எழும் திருவேங்கடம் நங்கட்கு

சமன் கொள் வீடு தரும் தடம் குன்றமே

#3150

குன்றம் ஏந்தி குளிர் மழை காத்தவன்

அன்று ஞாலம் அளந்த பிரான் பரன்

சென்று சேர் திருவேங்கட மா மலை

ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே

#3151

ஓயும் மூப்பு பிறப்பு இறப்பு பிணி

வீயுமாறு செய்வான் திருவேங்கடத்து

ஆயன் நாள்மலர் ஆம் அடி தாமரை

வாயுள்ளும் மனத்துள்ளும் வைப்பார்கட்கே

#3152

வைத்த நாள் வரை எல்லை குறுகி சென்று

எய்த்து இளைப்பதன் முன்னம் அடை-மினோ

பைத்த பாம்பு அணையான் திருவேங்கடம்

மொய்த்த சோலை மொய் பூம் தடம் தாழ்வரே

#3153

தாள் பரப்பி மண் தாவிய ஈசனை

நீள் பொழில் குருகூர் சடகோபன் சொல்

கேழ் இல் ஆயிரத்து இ பத்தும் வல்லவர்

வாழ்வர் வாழ்வு எய்தி ஞாலம் புகழவே

#3154

புகழும் நல் ஒருவன் என்கோ பொரு இல் சீர் பூமி என்கோ

திகழும் தண் பரவை என்கோ தீ என்கோ வாயு என்கோ

நிகழும் ஆகாசம் என்கோ நீள் சுடர் இரண்டும் என்கோ

இகழ்வு இல் இ அனைத்தும் என்கோ கண்ணனை கூவும் ஆறே

#3155

கூவும் ஆறு அறியமாட்டேன் குன்றங்கள் அனைத்தும் என்கோ

மேவு சீர் மாரி என்கோ விளங்கு தாரகைகள் என்கோ

நா இயல் கலைகள் என்கோ ஞான நல் ஆவி என்கோ

பாவு சீர் கண்ணன் எம்மான் பங்கய கண்ணனையே

#3156

பங்கய கண்ணன் என்கோ பவள செ வாயன் என்கோ

அம் கதிர் அடியன் என்கோ அஞ்சன வண்ணன் என்கோ

செம் கதிர் முடியன் என்கோ திரு மறு மார்பன் என்கோ

சங்கு சக்கரத்தன் என்கோ சாதி மாணிக்கத்தையே

#3157

சாதி மாணிக்கம் என்கோ சவி கொள் பொன் முத்தம் என்கோ

சாதி நல் வயிரம் என்கோ தவிவு இல் சீர் விளக்கம் என்கோ

ஆதி அம் சோதி என்கோ ஆதி அம் புருடன் என்கோ

ஆதும் இல் காலத்து எந்தை அச்சுதன் அமலனையே

#3158

அச்சுதன் அமலன் என்கோ அடியவர் வினை கெடுக்கும்

நச்சும் மா மருந்தம் என்கோ நலம் கடல் அமுதம் என்கோ

அ சுவை கட்டி என்கோ அறுசுவை அடிசில் என்கோ

நெய் சுவை தேறல் என்கோ கனி என்கோ பால் என்கேனோ

#3159

பால் என்கோ நான்கு வேத பயன் என்கோ சமய நீதி

நூல் என்கோ நுடங்கு கேள்வி இசை என்கோ இவற்றுள் நல்ல

மேல் என்கோ வினையின் மிக்க பயன் என்கோ கண்ணன்
என்கோ

மால் என்கோ மாயன் என்கோ வானவர் ஆதியையே

#3160

வானவர் ஆதி என்கோ வானவர் தெய்வம் என்கோ

வானவர் போகம் என்கோ வானவர் முற்றும் என்கோ

ஊனம் இல் செல்வம் என்கோ ஊனம் இல் சுவர்க்கம் என்கோ

ஊனம் இல் மோக்கம் என்கோ ஒளி மணி வண்ணனையே

#3161

ஒளி மணி வண்ணன் என்கோ ஒருவன் என்று ஏத்த நின்ற

நளிர் மதி சடையன் என்கோ நான்முக கடவுள் என்கோ

அளி மகிழ்ந்து உலகம் எல்லாம் படைத்து அவை ஏத்த நின்ற

களி மலர் துளவன் எம்மான் கண்ணனை மாயனையே

#3162

கண்ணனை மாயன்-தன்னை கடல் கடைந்து அமுதம் கொண்ட

அண்ணலை அச்சுதனை அனந்தனை அனந்தன்-தன் மேல்

நண்ணி நன்கு உறைகின்றானை ஞாலம் உண்டு உமிழ்ந்த மாலை

எண்ணும் ஆறு அறியமாட்டேன் யாவையும் எவரும் தானே

#3163

யாவையும் எவரும் தானாய் அவரவர் சமயம்-தோறும்

தோய்வு இலன் புலன் ஐந்துக்கும் சொலப்படான் உணர்வின் மூர்த்தி

ஆவி சேர் உயிரின் உள்ளால் ஆதும் ஓர் பற்று இலாத

பாவனை அதனை கூடில் அவனையும் கூடலாமே

#3164

கூடி வண்டு அறையும் தண் தார் கொண்டல் போல் வண்ணன்-தன்னை

மாடு அலர் பொழில் குருகூர் வண் சடகோபன் சொன்ன

பாடல் ஓர் ஆயிரத்துள் இவையும் ஓர் பத்தும் வல்லார்

வீடு இல போகம் எய்தி விரும்புவர் அமரர் மொய்த்தே

#3165

மொய்ம் மாம் பூம் பொழில் பொய்கை முதலை சிறைப்பட்டு நின்ற

கைம்மாவுக்கு அருள்செய்த கார் முகில் போல் வண்ணன் கண்ணன்

எம்மானை சொல்லி பாடி எழுந்தும் பறந்தும் துள்ளாதார்

தம்மால் கருமம் என் சொல்லீர் தண் கடல் வட்டத்து உள்ளீரே

#3166

தண் கடல் வட்டத்து உள்ளாரை தமக்கு இரையா தடிந்து உண்ணும்

திண் கழல் கால் அசுரர்க்கு தீங்கு இழைக்கும் திருமாலை

பண்கள் தலைக்கொள்ள பாடி பறந்தும் குனித்தும் உழலாதார்

மண் கொள் உலகில் பிறப்பார் வல்வினை மோத மலைந்தே

#3167

மலையை எடுத்து கல் மாரி காத்து பசுநிரை-தன்னை

தொலைவு தவிர்த்த பிரானை சொல்லிச்சொல்லி நின்று எப்போதும்

தலையினோடு ஆதனம் தட்ட தடுகுட்டமாய் பறவாதார்

அலை கொள் நரகத்து அழுந்தி கிடந்து உழைக்கின்ற வம்பரே

#3168

வம்பு அவிழ் கோதை-பொருட்டா மால் விடை ஏழும் அடர்த்த

செம் பவள திரள் வாயன் சிரீதரன் தொல் புகழ் பாடி

கும்பிடு நட்டம் இட்டு ஆடி கோகு உகட்டுண்டு உழலாதார்

தம் பிறப்பால் பயன் என்னே சாது சனங்களிடையே

#3169

சாது சனத்தை நலியும் கஞ்சனை சாதிப்பதற்கு

ஆதி அம் சோதி உருவை அங்கு வைத்து இங்கு பிறந்த

வேத முதல்வனை பாடி வீதிகள்-தோறும் துள்ளாதார்

ஓதி உணர்ந்தவர் முன்னா என் சவிப்பார் மனிசரே

#3170

மனிசரும் மற்றும் முற்றுமாய் மாய பிறவி பிறந்த

தனியன் பிறப்பிலி தன்னை தடம் கடல் சேர்ந்த பிரானை

கனியை கரும்பின் இன் சாற்றை கட்டியை தேனை அமுதை

முனிவு இன்றி ஏத்தி குனிப்பார் முழுது உணர் நீர்மையினாரே

#3171

நீர்மை இல் நூற்றுவர் வீய ஐவர்க்கு அருள்செய்து நின்று

பார் மல்கு சேனை அவித்த பரஞ்சுடரை நினைந்து ஆடி

நீர் மல்கு கண்ணினர் ஆகி நெஞ்சம் குழைந்து நையாதே

ஊர் மல்கி மோடு பருப்பார் உத்தமர்கட்கு என் செய்வாரே

#3172

வார் புனல் அம் தண் அருவி வடதிருவேங்கடத்து எந்தை

பேர் பல சொல்லி பிதற்றி பித்தர் என்றே பிறர் கூற

ஊர் பல புக்கும் புகாதும் உலோகர் சிரிக்க நின்று ஆடி

ஆர்வம் பெருகி குனிப்பார் அமரர் தொழப்படுவாரே

#3173

அமரர் தொழப்படுவானை அனைத்து உலகுக்கும் பிரானை

அமர மனத்தினுள் யோகு புணர்ந்து அவன் தன்னோடு ஒன்று ஆக

அமர துணிய வல்லார்கள் ஒழிய அல்லாதவர் எல்லாம்

அமர நினைந்து எழுந்து ஆடி அலற்றுவதே கருமமே

#3174

கருமமும் கரும பலனும் ஆகிய காரணன்-தன்னை

திரு மணி வண்ணனை செங்கண்மாலினை தேவபிரானை

ஒருமை மனத்தினுள் வைத்து உள்ளம் குழைந்து எழுந்து ஆடி

பெருமையும் நாணும் தவிர்ந்து பிதற்று-மின் பேதைமை தீர்ந்தே

#3175

தீர்ந்த அடியவர்-தம்மை திருத்தி பணிகொள்ள வல்ல

ஆர்ந்த புகழ் அச்சுதனை அமரர் பிரானை எம்மானை

வாய்ந்த வள வயல் சூழ் தண் வளம் குருகூர் சடகோபன்

நேர்ந்த ஓர் ஆயிரத்து இ பத்து அருவினை நீறு செய்யுமே

#3176

செய்ய தாமரை கண்ணனாய் உலகு ஏழும் உண்ட அவன் கண்டீர்

வையம் வானம் மனிசர் தெய்வம் மற்றும் மற்றும் மற்றும் முற்றுமாய்

செய்ய சூழ் சுடர் ஞானமாய் வெளி பட்டு இவை படைத்தான் பின்னும்

மொய் கொள் சோதியோடு ஆயினான் ஒரு மூவர் ஆகிய மூர்த்தியே

#3177

மூவர் ஆகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன்-தன்னை

சாவம் உள்ளன நீக்குவானை தடம் கடல் கிடந்தான்-தன்னை

தேவதேவனை தென் இலங்கை எரி எழ செற்ற வில்லியை

பாவ நாசனை பங்கய தடம் கண்ணனை பரவு-மினோ

#3178

பரவி வானவர் ஏத்த நின்ற பரமனை பரஞ்சோதியை

குரவை கோத்த குழகனை மணி வண்ணனை குட கூத்தனை

அரவம் ஏறி அலை கடல் அமரும் துயில்கொண்ட அண்ணலை

இரவும் நன் பகலும் விடாது என்றும் ஏத்துதல் மனம் வைம்-மினோ

#3179

வைம்-மின் நும் மனத்து என்று யான் உரைக்கின்ற மாயவன் சீர்மையை

எம்மனோர்கள் உரைப்பது என் அது நிற்க நாள்-தொறும் வானவர்

தம்மை ஆளும் அவனும் நான்முகனும் சடைமுடி அண்ணலும்

செம்மையால் அவன் பாத பங்கயம் சிந்தித்து ஏத்தி திரிவரே

#3180

திரியும் காற்றோடு அகல் விசும்பு திணிந்த மண் கிடந்த கடல்

எரியும் தீயோடு இரு சுடர் தெய்வம் மற்றும் மற்றும் முற்றுமாய்

கரிய மேனியன் செய்ய தாமரை கண்ணன் கண்ணன் விண்ணோர் இறை

சுரியும் பல் கரும் குஞ்சி எங்கள் சுடர் முடி அண்ணல் தோற்றமே

#3181

தோற்றம் கேடு அவை இல்லவன் உடையான் அவன் ஒரு மூர்த்தியாய்

சீற்றத்தோடு அருள்பெற்றவன் அடி கீழ் புக நின்ற செங்கண்மால்

நாற்றம் தோற்றம் சுவை ஒலி உறல் ஆகி நின்ற எம் வானவர்

ஏற்றையே அன்றி மற்றொருவரை யான் இலேன் எழுமைக்குமே

#3182

எழுமைக்கும் எனது ஆவிக்கு இன் அமுதத்தினை எனது ஆருயிர்

கெழுமிய கதிர் சோதியை மணி வண்ணனை குட கூத்தனை

விழுமிய அமரர் முனிவர் விழுங்கும் கன்னல் கனியினை

தொழு-மின் தூய மனத்தராய் இறையும் நில்லா துயரங்களே

#3183

துயரமே தரு துன்ப இன்ப வினைகளாய் அவை அல்லனாய்

உயர நின்றது ஓர் சோதியாய் உலகு ஏழும் உண்டு உமிழ்ந்தான்-தன்னை

அயர வாங்கும் நமன் தமர்க்கு அரு நஞ்சினை அச்சுதன்-தன்னை

தயரதற்கு மகன்-தன்னை அன்றி மற்று இலேன் தஞ்சமாகவே

#3184

தஞ்சம் ஆகிய தந்தை தாயொடு தானுமாய் அவை அல்லனாய்

எஞ்சல் இல் அமரர் குலமுதல் மூவர் தம்முள்ளும் ஆதியை

அஞ்சி நீர் உலகத்துள்ளீர்கள் அவன் இவன் என்று கூழேன்-மின்

நெஞ்சினால் நினைப்பான் எவன் அவன் ஆகும் நீள் கடல் வண்ணனே

#3185

கடல் வண்ணன் கண்ணன் விண்ணவர் கருமாணிக்கம் எனது ஆருயிர்

பட அரவின் அணை கிடந்த பரஞ்சுடர் பண்டு நூற்றுவர்

அட வரும் படை மங்க ஐவர்கட்கு ஆகி வெம் சமத்து அன்று தேர்

கடவிய பெருமான் கனை கழல் காண்பது என்று-கொல் கண்களே

#3186

கண்கள் காண்டற்கு அரியனாய் கருத்துக்கு நன்றும் எளியனாய்

மண் கொள் ஞாலத்து உயிர்க்கு எல்லாம் அருள்செய்யும் வானவர் ஈசனை

பண் கொள் சோலை வழுதி நாடன் குருகை கோன் சடகோபன் சொல்

பண் கொள் ஆயிரத்து இ பத்தால் பத்தர் ஆக கூடும் பயிலு-மினே

#3187

பயிலும் சுடர் ஒளி மூர்த்தியை பங்கய கண்ணனை

பயில இனிய நம் பாற்கடல் சேர்ந்த பரமனை

பயிலும் திரு உடையார் எவரேலும் அவர் கண்டீர்

பயிலும் பிறப்பிடை-தோறு எம்மை ஆளும் பரமரே

#3188

ஆளும் பரமனை கண்ணனை ஆழி பிரான்-தன்னை

தோளும் ஓர் நான்கு உடை தூ மணி வண்ணன் எம்மான்-தன்னை

தாளும் தட கையும் கூப்பி பணியும் அவர் கண்டீர்

நாளும் பிறப்பிடை-தோறு எம்மை ஆளுடை நாதரே

#3189

நாதனை ஞாலமும் வானமும் ஏத்தும் நறும் துழாய்

போதனை பொன் நெடும் சக்கரத்து எந்தை பிரான்-தன்னை

பாதம் பணிய வல்லாரை பணியும் அவர் கண்டீர்

ஓதும் பிறப்பிடை-தோறு எம்மை ஆளுடையார்களே

#3190

உடை ஆர்ந்த ஆடையன் கண்டிகையன் உடை நாணினன்

புடை ஆர் பொன் நூலினன் பொன் முடியன் மற்றும் பல்கலன்

நடையா உடை திருநாரணன் தொண்டர்தொண்டர் கண்டீர்

இடை ஆர் பிறப்பிடை-தோறு எமக்கு எம் பெருமக்களே

#3191

பெருமக்கள் உள்ளவர்-தம் பெருமானை அமரர்கட்கு

அருமை ஒழிய அன்று ஆர் அமுது ஊட்டிய அப்பனை

பெருமை பிதற்ற வல்லாரை பிதற்றும் அவர் கண்டீர்

வருமையும் இம்மையும் நம்மை அளிக்கும் பிராக்களே

#3192

அளிக்கும் பரமனை கண்ணனை ஆழி பிரான்-தன்னை

துளிக்கும் நறும் கண்ணி தூ மணி வண்ணன் எம்மான்-தன்னை

ஒளி கொண்ட சோதியை உள்ளத்து கொள்ளும் அவர் கண்டீர்

சலிப்பு இன்றி ஆண்டு எம்மை சன்மசன்மாந்தரம் காப்பரே

#3193

சன்மசன்மாந்தரம் காத்து அடியார்களை கொண்டுபோய்

தன்மை பெறுத்தி தன் தாள் இணை கீழ் கொள்ளும் அப்பனை

தொன்மை பிதற்ற வல்லாரை பிதற்றும் அவர் கண்டீர்

நன்மை பெறுத்து எம்மை நாள் உய்யக்கொள்கின்ற நம்பரே

#3194

நம்பனை ஞாலம் படைத்தவனை திருமார்பனை

உம்பர் உலகினில் யார்க்கும் உணர்வு அரியான்-தன்னை

கும்பி நரகர்கள் ஏத்துவரேலும் அவர் கண்டீர்

எம் பல் பிறப்பிடை-தோறு எம் தொழுகுலம் தாங்களே

#3195

குலம் தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து எத்தனை

நலம் தான் இலாத சண்டாள சண்டாளர்கள் ஆகிலும்

வலம் தாங்கு சக்கரத்து அண்ணல் மணி வண்ணற்கு ஆள் என்று உள்

கலந்தார் அடியார் தம் அடியார் எம் அடிகளே

#3196

அடி ஆர்ந்த வையம் உண்டு ஆலிலை அன்ன வசம் செய்யும்

படி யாதும் இல் குழவிப்படி எந்தை பிரான் தனக்கு

அடியார்அடியார்-தம் அடியார்அடியார்-தமக்கு

அடியார்அடியார்-தம் அடியார்அடியோங்களே

#3197

அடி ஓங்கு நூற்றுவர் வீய அன்று ஐவர்க்கு அருள்செய்த

நெடியோனை தென் குருகூர் சடகோபன் குற்றேவல்கள்

அடி ஆர்ந்த ஆயிரத்துள் இவை பத்து அவன் தொண்டர் மேல்

முடிவு ஆர கற்கிற்கில் சன்மம் செய்யாமை முடியுமே

#3198

முடியானே மூ உலகும் தொழுது ஏத்தும் சீர்

அடியானே ஆழ் கடலை கடைந்தாய் புள் ஊர்

கொடியானே கொண்டல் வண்ணா அண்டத்து உம்பரில்

நெடியானே என்று கிடக்கும் என் நெஞ்சமே

#3199

நெஞ்சமே நீள் நகர் ஆக இருந்த என்

தஞ்சனே தண் இலங்கைக்கு இறையை செற்ற

நஞ்சனே ஞாலம் கொள்வான் குறள் ஆகிய

வஞ்சனே என்னும் எப்போதும் என் வாசகமே

#3200

வாசகமே ஏத்த அருள்செய்யும் வானவர்-தம்

நாயகனே நாள் இளம் திங்களை கோள் விடுத்து

வேய் அகம் பால் வெண்ணெய் தொடு உண்ட ஆன் ஆயர்

தாயவனே என்று தடவும் என் கைகளே

#3201

கைகளால் ஆர தொழுதுதொழுது உன்னை

வைகலும் மாத்திரை போதும் ஓர் வீடு இன்றி

பை கொள் பாம்பு ஏறி உறை பரனே உன்னை

மெய்கொள்ள காண விரும்பும் என் கண்களே

#3202

கண்களால் காண வரும்-கொல் என்று ஆசையால்

மண் கொண்ட வாமனன் ஏற மகிழ்ந்து செல்

பண் கொண்ட புள்ளின் சிறகு ஒலி பாவித்து

திண் கொள்ள ஓர்க்கும் கிடந்து என் செவிகளே

#3203

செவிகளால் ஆர நின் கீர்த்தி கனி என்னும்

கவிகளே கால பண் தேன் உறைப்ப துற்று

புவியின் மேல் பொன் நெடும் சக்கரத்து உன்னையே

அவிவு இன்றி ஆதரிக்கும் எனது ஆவியே

#3204

ஆவியே ஆர் அமுதே என்னை ஆளுடை

தூவி அம் புள் உடையாய் சுடர் நேமியாய்

பாவியேன் நெஞ்சம் புலம்ப பல-காலும்

கூவியும் காணப்பெறேன் உன கோலமே

#3205

கோலமே தாமரை கண்ணது ஓர் அஞ்சன

நீலமே நின்று எனது ஆவியை ஈர்கின்ற

சீலமே சென்று செல்லாதன முன் நிலாம்

காலமே உன்னை எ நாள் கண்டுகொள்வனே

#3206

கொள்வன் நான் மாவலி மூ அடி தா என்ற

கள்வனே கஞ்சனை வஞ்சித்து வாணனை

உள் வன்மை தீர ஓர் ஆயிரம் தோள் துணித்த

புள் வல்லாய் உன்னை எஞ்ஞான்று பொருந்துவனே

#3207

பொருந்திய மா மருதின் இடை போய எம்

பெருந்தகாய் உன் கழல் காணிய பேதுற்று

வருந்தி நான் வாசக மாலை கொண்டு உன்னையே

இருந்து இருந்து எத்தனை காலம் புலம்புவனே

#3208

புலம்பு சீர் பூமி அளந்த பெருமானை

நலம் கொள் சீர் நன் குருகூர் சடகோபன் சொல்

வலம் கொண்ட ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து

இலங்கு வான் யாவரும் ஏறுவர் சொன்னாலே

#3209

சொன்னால் விரோதம் இது ஆகிலும் சொல்லுவான் கேண்-
மினோ

என் நாவில் இன் கவி யான் ஒருவர்க்கும் கொடுக்கிலேன்

தென்னா தெனா என்று வண்டு முரல் திருவேங்கடத்து

என் ஆனை என் அப்பன் எம் பெருமான் உளனாகவே

#3210

உளனாகவே எண்ணி தன்னை ஒன்றாக தன் செல்வத்தை

வளனா மதிக்கும் இ மானிடத்தை கவி பாடி என்

குளன் ஆர் கழனி சூழ் கண்ணன் குறுங்குடி மெய்ம்மையே

உளனாய எந்தையை எந்தை பெம்மானை ஒழியவே

#3211

ஒழிவு ஒன்று இல்லாத பல் ஊழி-தோறு ஊழி நிலாவப்போம்

வழியை தரும் நங்கள் வானவர் ஈசனை நிற்கப்போய்

கழிய மிக நல்லவான் கவி கொண்டு புலவீர்காள்

இழிய கருதி ஓர் மானிடம் பாடல் என் ஆவதே

#3212

என் ஆவது எத்தனை நாளைக்கு போதும் புலவீர்காள்

மன்னா மனிசரை பாடி படைக்கும் பெரும் பொருள்

மின் ஆர் மணி முடி விண்ணவர் தாதையை பாடினால்

தன்னாகவே கொண்டு சன்மம் செய்யாமையும் கொள்ளுமே

#3213

கொள்ளும் பயன் இல்லை குப்பை கிளர்த்து அன்ன செல்வத்தை

வள்ளல் புகழ்ந்து நும் வாய்மை இழக்கும் புலவீர்காள்

கொள்ள குறைவு இலன் வேண்டிற்று எல்லாம் தரும் கோது இல் என்

வள்ளல் மணி வண்ணன்-தன்னை கவி சொல்ல வம்-மினோ

#3214

வம்-மின் புலவீர் நும் மெய் வருத்தி கைசெய்து உய்ம்-மினோ

இ மன் உலகினில் செல்வர் இப்போது இல்லை நோக்கினோம்

நும் இன் கவி கொண்டு நும்நும் இட்டா தெய்வம் ஏத்தினால்

செம் மின் சுடர் முடி என் திருமாலுக்கு சேருமே

#3215

சேரும் கொடை புகழ் எல்லை இலானை ஓர் ஆயிரம்

பேரும் உடைய பிரானை அல்லால் மற்று யான் கிலேன்

மாரி அனைய கை மால் வரை ஒக்கும் திண் தோள் என்று

பாரில் ஓர் பற்றையை பச்சை பசும் பொய்கள் பேசவே

#3216

வேயின் மலி புரை தோளி பின்னைக்கு மணாளனை

ஆய பெரும் புகழ் எல்லை இலாதன பாடிப்போய்

காயம் கழித்து அவன் தாள் இணை கீழ் புகும் காதலன்

மாய மனிசரை என் சொல்ல வல்லேன் என் வாய்கொண்டே

#3217

வாய் கொண்டு மானிடம் பாட வந்த கவியேன் அல்லேன்

ஆய்கொண்ட சீர் வள்ளல் ஆழி பிரான் எனக்கே உளன்

சாய் கொண்ட இம்மையும் சாதித்து வானவர் நாட்டையும்

நீ கண்டுகொள் என்று வீடும் தரும் நின்றுநின்றே

#3218

நின்றுநின்று பல நாள் உய்க்கும் இ உடல் நீங்கிப்போய்

சென்றுசென்று ஆகிலும் கண்டு சன்மம் கழிப்பான் எண்ணி

ஒன்றிஒன்றி உலகம் படைத்தான் கவி ஆயினேற்கு

என்றும்என்றும் இனி மற்றொருவர் கவி ஏற்குமே

#3219

ஏற்கும் பெரும் புகழ் வானவர் ஈசன் கண்ணன்-தனக்கு

ஏற்கும் பெரும் புகழ் வண் குருகூர் சடகோபன் சொல்

ஏற்கும் பெரும் புகழ் ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து

ஏற்கும் பெரும் புகழ் சொல்ல வல்லார்க்கு இல்லை சன்மமே

#3220

சன்மம் பலபல செய்து வெளிப்பட்டு சங்கொடு சக்கரம் வில்

ஒண்மை உடைய உலக்கை ஒள் வாள் தண்டு கொண்டு புள்
ஊர்ந்து உலகில்

வன்மை உடைய அரக்கர் அசுரரை மாள படை பொருத

நன்மை உடையவன் சீர் பரவ பெற்ற நான் ஓர் குறைவு இலனே

#3221

குறைவு இல் தடம் கடல் கோள் அரவு ஏறி தன் கோல செந்தாமரை கண்

உறைபவன் போல ஓர் யோகு புணர்ந்த ஒளி மணி வண்ணன் கண்ணன்

கறை அணி மூக்கு உடை புள்ளை கடாவி அசுரரை காய்ந்த அம்மான்

நிறை புகழ் ஏத்தியும் பாடியும் ஆடியும் யான் ஒரு முட்டு இலனே

#3222

முட்டு இல் பல் போகத்து ஒரு தனி நாயகன் மூ உலகுக்கு உரிய

கட்டியை தேனை அமுதை நன் பாலை கனியை கரும்பு-தன்னை

மட்டு அவிழ் தண் அம் துழாய் முடியானை வணங்கி அவன் திறத்து

பட்ட பின்னை இறையாகிலும் யான் என் மனத்து பரிவு இலனே

#3223

பரிவு இன்றி வாணனை காத்தும் என்று அன்று படையொடும் வந்து எதிர்ந்த

திரிபுரம் செற்றவனும் மகனும் பின்னும் அங்கியும் போர் தொலைய

பொரு சிறை புள்ளை கடாவிய மாயனை ஆயனை பொன் சக்கரத்து

அரியினை அச்சுதனை பற்றி யான் இறையேனும் இடர் இலனே

#3224

இடர் இன்றியே ஒரு நாள் ஒரு போழ்தில் எல்லா உலகும் கழிய

படர் புகழ் பார்த்தனும் வைதிகனும் உடன் ஏற திண் தேர் கடவி

சுடர் ஒளியாய் நின்ற தன்னுடை சோதியில் வைதிகன் பிள்ளைகளை

உடலொடும் கொண்டு கொடுத்தவனை பற்றி ஒன்றும் துயர் இலனே

#3225

துயர் இல் சுடர் ஒளி தன்னுடை சோதி நின்ற வண்ணம் நிற்கவே

துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றி கண் காண வந்து

துயரங்கள் செய்து தன் தெய்வநிலை உலகில் புக உய்க்கும் அம்மான்

துயரம் இல் சீர் கண்ணன் மாயன் புகழ் துற்ற யான் ஓர் துன்பம் இலனே

#3226

துன்பமும் இன்பமும் ஆகிய செய்வினையாய் உலகங்களுமாய்

இன்பம் இல் வெம் நரகு ஆகி இனிய நல் வான் சுவர்க்கங்களுமாய்

மன் பல் உயிர்களும் ஆகி பலபல மாய மயக்குக்களால்

இன்புறும் இ விளையாட்டு உடையானை பெற்று ஏதும் அல்லல் இலனே

#3227

அல்லல் இல் இன்பம் அளவிறந்து எங்கும் அழகு அமர் சூழ் ஒளியன்

அல்லி மலர் மகள் போக மயக்குக்கள் ஆகியும் நிற்கும் அம்மான்

எல்லை இல் ஞானத்தன் ஞானம் அஃதே கொண்டு எல்லா கருமங்களும் செய்

எல்லை இல் மாயனை கண்ணனை தாள் பற்றி யான் ஓர் துக்கம் இலனே

#3228

துக்கம் இல் ஞான சுடர் ஒளி மூர்த்தி துழாய் அலங்கல் பெருமான்

மிக்க பல் மாயங்களால் விகிர்தம் செய்து வேண்டும் உருவு கொண்டு

நக்க பிரானோடு அயன் முதலாக எல்லாரும் எவையும் தன்னுள்

ஒக்க ஒடுங்க விழுங்க வல்லானை பெற்று ஒன்றும் தளர்வு இலனே

#3229

தளர்வு இன்றியே என்றும் எங்கும் பரந்த தனிமுதல் ஞானம் ஒன்றாய்

அளவு உடை ஐம்புலன்கள் அறியாவகையால் அருவு ஆகி நிற்கும்

வளர் ஒளி ஈசனை மூர்த்தியை பூதங்கள் ஐந்தை இரு சுடரை

கிளர் ஒளி மாயனை கண்ணனை தாள் பற்றி யான் என்றும் கேடு இலனே

#3230

கேடு இல் விழு புகழ் கேசவனை குருகூர் சடகோபன் சொன்ன

பாடல் ஓர் ஆயிரத்துள் இவை ஒரு பத்தும் பயிற்ற வல்லார்கட்கு அவன்

நாடும் நகரமும் நன்குடன் காண நலனிடை ஊர்தி பண்ணி

வீடும் பெறுத்தி தன் மூ உலகுக்கும் தரும் ஒரு நாயகமே

#3231

ஒரு நாயகமாய் ஓட உலகு உடன் ஆண்டவர்

கரு நாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்

பெரு நாடு காண இம்மையிலே பிச்சை தாம் கொள்வர்

திருநாரணன் தாள் காலம்பெற சிந்தித்து உய்ம்-மினோ

#3232

உய்ம்-மின் திறைகொணர்ந்து என்று உலகு ஆண்டவர் இம்மையே

தம் இன் சுவை மடவாரை பிறர் கொள்ள தாம் விட்டு

வெம் மின் ஒளி வெயில் கானகம் போய் குமை தின்பர்கள்

செம் மின் முடி திருமாலை விரைந்து அடி சேர்-மினோ

#3233

அடி சேர் முடியினர் ஆகி அரசர்கள் தாம் தொழ

இடி சேர் முரசங்கள் முற்றத்து இயம்ப இருந்தவர்

பொடி சேர் துகளாய் போவர்கள் ஆதலில் நொக்கென

கடி சேர் துழாய் முடி கண்ணன் கழல்கள் நினை-மினோ

#3234

நினைப்பான் புகில் கடல் எக்கலின் நுண்மணலில் பலர்

எனைத்தோர் உகங்களும் இ உலகு ஆண்டு கழிந்தவர்

மனை-பால் மருங்கு அற மாய்தல் அல்லால் மற்று கண்டிலம்

பனை தாள் மத களிறு அட்டவன் பாதம் பணி-மினோ

#3235

பணி-மின் திருவருள் என்னும் அம் சீத பைம் பூம் பள்ளி

அணி மென் குழலார் இன்ப கலவி அமுது உண்டார்

துணி முன்பு நால பல் ஏழையர் தாம் இழிப்ப செல்வர்

மணி மின்னு மேனி நம் மாயவன் பேர் சொல்லி வாழ்-மினோ

#3236

வாழ்ந்தார்கள் வாழ்ந்தது மா மழை மொக்குளின் மாய்ந்துமாய்ந்து

ஆழ்ந்தார் என்று அல்லால் அன்று முதல் இன்று அறுதியா

வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பது இல்லை நிற்குறில்

ஆழ்ந்து ஆர் கடல் பள்ளி அண்ணல் அடியவர் ஆ-மினோ

#3237

ஆம் இன் சுவை அவை ஆறோடு அடிசில் உண்டு ஆர்ந்த பின்

தூ மென் மொழி மடவார் இரக்க பின்னும் துற்றுவார்

ஈ-மின் எமக்கு ஒரு துற்று என்று இடறுவர் ஆதலின்

கோமின் துழாய் முடி ஆதி அம் சோதி குணங்களே

#3238

குணம் கொள் நிறை புகழ் மன்னர் கொடைக்கடன் பூண்டிருந்து

இணங்கி உலகு உடன் ஆக்கிலும் ஆங்கு அவனை இல்லார்

மணம் கொண்ட போகத்து மன்னியும் மீள்வர்கள் மீள்வு இல்லை

பணம் கொள் அரவு அணையான் திருநாமம் படி-மினோ

#3239

படி மன்னு பல் கலன் பற்றோடு அறுத்து ஐம்புலன் வென்று

செடி மன்னு காயம் செற்றார்களும் ஆங்கு அவனை இல்லார்

குடி மன்னும் இன் சுவர்க்கம் எய்தியும் மீள்வர்கள் மீள்வு இல்லை

கொடி மன்னு புள் உடை அண்ணல் கழல்கள் குறுகு-மினோ

#3240

குறுக மிக உணர்வத்தொடு நோக்கி எல்லாம் விட்ட

இறுகல் இறப்பு என்னும் ஞானிக்கும் அ பயன் இல்லையேல்

சிறுக நினைவது ஓர் பாசம் உண்டாம் பின்னும் வீடு இல்லை

மறுகல் இல் ஈசனை பற்றி விடாவிடில் வீடு அஃதே

#3241

அஃதே உய்ய புகும் ஆறு என்று கண்ணன் கழல்கள் மேல்

கொய் பூம் பொழில் சூழ் குருகூர் சடகோபன் குற்றேவல்

செய் கோலத்து ஆயிரம் சீர் தொடை பாடல் இவை பத்தும்

அஃகாமல் கற்பவர் ஆழ் துயர் போய் உய்யற்பாலரே

#3242

பாலனாய் ஏழ் உலகு உண்டு பரிவு இன்றி

ஆலிலை அன்னவசம் செய்யும் அண்ணலார்

தாள் இணை மேல் அணி தண் அம் துழாய் என்றே

மாலுமால் வல்வினையேன் மட வல்லியே

#3243

வல்லி சேர் நுண் இடை ஆய்ச்சியர்-தம்மொடும்

கொல்லைமை செய்து குரவை பிணைந்தவர்

நல் அடி மேல் அணி நாறு துழாய் என்றே

சொல்லுமால் சூழ் வினையாட்டியேன் பாவையே

#3244

பா இயல் வேத நல் மாலை பல கொண்டு

தேவர்கள் மா முனிவர் இறைஞ்ச நின்ற

சேவடி மேல் அணி செம்பொன் துழாய் என்றே

கூவுமால் கோள் வினையாட்டியேன் கோதையே

#3245

கோது இல வண் புகழ் கொண்டு சமயிகள்

பேதங்கள் சொல்லி பிதற்றும் பிரான் பரன்

பாதங்கள் மேல் அணி பைம்பொன் துழாய் என்றே

ஓதுமால் ஊழ்வினையேன் தடம் தோளியே

#3246

தோளி சேர் பின்னை பொருட்டு எருது ஏழ் தழீஇ

கோளியார் கோவலனார் குட கூத்தனார்

தாள் இணை மேல் அணி தண் அம் துழாய் என்றே

நாளும் நாள் நைகின்றதால் என் தன் மாதரே

#3247

மாதர் மா மண் மடந்தை-பொருட்டு ஏனமாய்

ஆதி அம் காலத்து அகல் இடம் கீண்டவர்

பாதங்கள் மேல் அணி பைம்பொன் துழாய் என்றே

ஓதும் மால் எய்தினள் என்தன் மடந்தையே

#3248

மடந்தையை வண் கமல திருமாதினை

தடம் கொள் தார் மார்பினில் வைத்தவர் தாளின் மேல்

வடம் கொள் பூம் தண் அம் துழாய் மலர்க்கே இவள்

மடங்குமால் வாள் நுதலீர் என் மட கொம்பே

#3249

கொம்பு போல் சீதை-பொருட்டு இலங்கை நகர்

அம்பு எரி உய்த்தவர் தாள் இணை மேல் அணி

வம்பு அவிழ் தண் அம் துழாய் மலர்க்கே இவள்

நம்புமால் நான் இதற்கு என் செய்கேன் நங்கைமீர்

#3250

நங்கைமீர் நீரும் ஓர் பெண் பெற்று நல்கினீர்

எங்ஙனே சொல்லுகேன் யான் பெற்ற ஏழையை

சங்கு என்னும் சக்கரம் என்னும் துழாய் என்னும்

இங்ஙனே சொல்லும் இராப்பகல் என் செய்கேன்

#3251

என் செய்கேன் என்னுடை பேதை என் கோமளம்

என் சொல்லும் என் வசமும் அல்லள் நங்கைமீர்

மின் செய் பூண் மார்பினன் கண்ணன் கழல் துழாய்

பொன் செய் பூண் மென் முலைக்கு என்று மெலியுமே

#3252

மெலியும் நோய் தீர்க்கும் நம் கண்ணன் கழல்கள் மேல்

மலி புகழ் வண் குருகூர் சடகோபன் சொல்

ஒலி புகழ் ஆயிரத்து இ பத்தும் வல்லவர்

மலி புகழ் வானவர்க்கு ஆவர் நல் கோவையே

#3253

கோவை வாயாள்-பொருட்டு ஏற்றின் எருத்தம் இறுத்தாய் மதிள் இலங்கை

கோவை வீய சிலை குனித்தாய் குல நல் யானை மருப்பு ஒசித்தாய்

பூவை வீயா நீர் தூவி போதால் வணங்கேனேலும் நின்

பூவை வீயாம் மேனிக்கு பூசும் சாந்து என் நெஞ்சமே

#3254

பூசும் சாந்து என் நெஞ்சமே புனையும் கண்ணி எனதுடைய

வாசகம் செய் மாலையே வான் பட்டு ஆடையும் அஃதே

தேசம் ஆன அணிகலனும் என் கைகூப்பு செய்கையே

ஈசன் ஞாலம் உண்டு உமிழ்ந்த எந்தை ஏக மூர்த்திக்கே

#3255

ஏக மூர்த்தி இரு மூர்த்தி மூன்று மூர்த்தி பல மூர்த்தி

ஆகி ஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவு ஆகி

நாகம் ஏறி நடு கடலுள் துயின்ற நாராயணனே உன்

ஆகம் முற்றும் அகத்து அடக்கி ஆவி அல்லல் மாய்த்ததே

#3256

மாய்த்தல் எண்ணி வாய் முலை தந்த மாய பேய் உயிர்

மாய்த்த ஆய மாயனே வாமனனே மாதவா

பூ தண் மாலை கொண்டு உன்னை போதால் வணங்கேனேலும் நின்

பூ தண் மாலை நெடு முடிக்கு புனையும் கண்ணி எனது உயிரே

#3257

கண்ணி எனது உயிர் காதல் கனக சோதி முடி முதலா

எண் இல் பல் கலன்களும் ஏலும் ஆடையும் அஃதே

நண்ணி மூ உலகும் நவிற்றும் கீர்த்தியும் அஃதே

கண்ணன் எம் பிரான் எம்மான் கால சக்கரத்தானுக்கே

#3258

கால சக்கரத்தொடு வெண் சங்கம் கை ஏந்தினாய்

ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த நாராயணனே என்றுஎன்று

ஓலம் இட்டு நான் அழைத்தால் ஒன்றும் வாராயாகிலும்

கோலம் ஆம் என் சென்னிக்கு உன் கமலம் அன்ன குரை கழலே

#3259

குரை கழல்கள் நீட்டி மண் கொண்ட கோல வாமனா

குரை கழல் கைகூப்புவார்கள் கூட நின்ற மாயனே

விரை கொள் பூவும் நீரும் கொண்டு ஏத்தமாட்டேனேலும் உன்

உரை கொள் சோதி திருவுருவம் என்னது ஆவி மேலதே

#3260

என்னது ஆவி மேலையாய் ஏர் கொள் ஏழ் உலகமும்

துன்னி முற்றும் ஆகி நின்ற சோதி ஞான மூர்த்தியாய்

உன்னது என்னது ஆவியும் என்னது உன்னது ஆவியும்

இன்ன வண்ணமே நின்றாய் என்று உரைக்க வல்லேனே

#3261

உரைக்க வல்லேன் அல்லேன் உன் உலப்பு இல் கீர்த்தி வெள்ளத்தின்

கரை-கண் என்று செல்வன் நான் காதல் மையல் ஏறினேன்

புரைப்பு இலாத பரம்பரனே பொய் இலாத பரஞ்சுடரே

இரைத்து நல்ல மேன்மக்கள் ஏத்த யானும் ஏத்தினேன்

#3262

யானும் ஏத்தி ஏழ் உலகும் முற்றும் ஏத்தி பின்னையும்

தானும் ஏத்திலும் தன்னை ஏத்தஏத்த எங்கு எய்தும்

தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகி தித்திப்ப

யானும் எம் பிரானையே ஏத்தினேன் யான் உய்வானே

#3263

உய்வு உபாயம் மற்று இன்மை தேறி கண்ணன் ஒண் கழல்கள் மேல்

செய்ய தாமரை பழன தென்னன் குருகூர் சடகோபன்

பொய் இல் பாடல் ஆயிரத்துள் இவையும் பத்தும் வல்லார்கள்

வையம் மன்னி வீற்றிருந்து விண்ணும் ஆள்வர் மண்ணூடே

#3264

மண்ணை இருந்து துழாவி வாமனன் மண் இது என்னும்

விண்ணை தொழுது அவன் மேவு வைகுந்தம் என்று கைகாட்டும்

கண்ணை உள் நீர் மல்க நின்று கடல் வண்ணன் என்னும் அன்னே என்

பெண்ணை பெரு மயல் செய்தாற்கு என் செய்கேன் பெய் வளையீரே

#3265

பெய் வளை கைகளை கூப்பி பிரான் கிடக்கும் கடல் என்னும்

செய்யது ஓர் ஞாயிற்றை காட்டி சிரீதரன் மூர்த்தி ஈது என்னும்

நையும் கண்ணீர் மல்க நின்று நாரணன் என்னும் அன்னே என்

தெய்வ உருவில் சிறு மான் செய்கின்றது ஒன்று அறியேனே

#3266

அறியும் செம் தீயை தழுவி அச்சுதன் என்னும் மெய் வேவாள்

எறியும் தண் காற்றை தழுவி என்னுடை கோவிந்தன் என்னும்

வெறி கொள் துழாய் மலர் நாறும் வினையுடையாட்டியேன் பெற்ற

செறி வளை முன் கை சிறு மான் செய்கின்றது என் கண்ணுக்கு ஒன்றே

#3267

ஒன்றிய திங்களை காட்டி ஒளி மணி வண்ணனே என்னும்

நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே வா என்று கூவும்

நன்று பெய்யும் மழை காணில் நாரணன் வந்தான் என்று ஆலும்

என்று இன மையல்கள் செய்தான் என்னுடை கோமளத்தையே

#3268

கோமள வான் கன்றை புல்கி கோவிந்தன் மேய்த்தன என்னும்

போம் இள நாகத்தின் பின் போய் அவன் கிடக்கை ஈது என்னும்

ஆம் அளவு ஒன்றும் அறியேன் அருவினையாட்டியேன் பெற்ற

கோமள வல்லியை மாயோன் மால் செய்து செய்கின்ற கூத்தே

#3269

கூத்தர் குடம் எடுத்து ஆடில் கோவிந்தனாம் எனா ஓடும்

வாய்த்த குழல் ஓசை கேட்கில் மாயவன் என்று மையாக்கும்

ஆய்ச்சியர் வெண்ணெய்கள் காணில் அவன் உண்ட வெண்ணெய் ஈது என்னும்

பேய்ச்சி முலை சுவைத்தாற்கு என் பெண் கொடி ஏறிய பித்தே

#3270

ஏறிய பித்தினோடு எல்லா உலகும் கண்ணன் படைப்பு என்னும்

நீறு செவ்வே இட காணில் நெடுமால் அடியார் என்று ஓடும்

நாறு துழாய் மலர் காணில் நாரணன் கண்ணி ஈது என்னும்

தேறியும் தேறாதும் மாயோன் திறத்தனளே இ திருவே

#3271

திரு உடை மன்னரை காணில் திருமாலை கண்டேனே என்னும்

உரு உடை வண்ணங்கள் காணில் உலகு அளந்தான் என்று துள்ளும்

கரு உடை தேவு இல்கள் எல்லாம் கடல் வண்ணன் கோயிலே என்னும்

வெருவிலும் வீழ்விலும் ஓவாள் கண்ணன் கழல்கள் விரும்புமே

#3272

விரும்பி பகவரை காணில் வியல் இடம் உண்டானே என்னும்

கரும் பெரு மேகங்கள் காணில் கண்ணன் என்று ஏற பறக்கும்

பெரும் புல ஆநிரை காணில் பிரான் உளன் என்று பின் செல்லும்

அரும்பெறல் பெண்ணினை மாயோன் அலற்றி அயர்ப்பிக்கின்றானே

#3273

அயர்க்கும் சுற்றும் பற்றி நோக்கி அகலவே நீள் நோக்கு கொள்ளும்

வியர்க்கும் மழை கண் துளும்ப வெவ்வுயிர் கொள்ளும் மெய் சோரும்

பெயர்த்தும் கண்ணா என்று பேசும் பெருமானே வா என்று கூவும்

மயல் பெரும் காதல் என் பேதைக்கு என் செய்கேன் வல்வினையேனே

#3274

வல்வினை தீர்க்கும் கண்ணனை வண் குருகூர் சடகோபன்

சொல் வினையால் சொன்ன பாடல் ஆயிரத்துள் இவை பத்தும்

நல்வினை என்று கற்பார்கள் நலனிடை வைகுந்தம் நண்ணி

தொல்வினை தீர எல்லாரும் தொழுது எழ வீற்றிருப்பாரே

#3275

வீற்றிருந்து ஏழ் உலகும் தனிக்கோல் செல்ல வீவு இல் சீர்

ஆற்றல் மிக்கு ஆளும் அம்மானை வெம் மா பிளந்தான்-தன்னை

போற்றி என்றே கைகள் ஆர தொழுது சொல் மாலைகள்

ஏற்ற நோற்றேற்கு இனி என்ன குறை எழுமையுமே

#3276

மைய கண்ணாள் மலர் மேல் உறைவாள் உறை மார்பினன்

செய்ய கோல தடம் கண்ணன் விண்ணோர் பெருமான்-தன்னை

மொய்ய சொல்லால் இசை மாலைகள் ஏத்தி உள்ளப்பெற்றேன்

வெய்ய நோய்கள் முழுதும் வியன் ஞாலத்து வீயவே

#3277

வீவு இல் இன்பம் மிக எல்லை நிகழ்ந்த நம் அச்சுதன்

வீவு இல் சீரன் மலர் கண்ணன் விண்ணோர் பெருமான்-தன்னை

வீவு இல் காலம் இசை மாலைகள் ஏத்தி மேவப்பெற்றேன்

வீவு இல் இன்பம் மிக எல்லை நிகழ்ந்தனன் மேவியே

#3278

மேவி நின்று தொழுவார் வினை போக மேவும் பிரான்

தூவி அம் புள் உடையான் அடல் ஆழி அம்மான்-தன்னை

நா இயலால் இசை மாலைகள் ஏத்தி நண்ண பெற்றேன்

ஆவி என் ஆவியை யான் அறியேன் செய்த ஆற்றையே

#3279

ஆற்ற நல்ல வகை காட்டும் அம்மானை அமரர்-தம்

ஏற்றை எல்லா பொருளும் விரித்தானை எம்மான்-தன்னை

மாற்ற மாலை புனைந்து ஏத்தி நாளும் மகிழ்வு எய்தினேன்

காற்றின் முன்னம் கடுகி வினை நோய்கள் கரியவே

#3280

கரிய மேனி மிசை வெளிய நீறு சிறிதே இடும்

பெரிய கோல தடம் கண்ணன் விண்ணோர் பெருமான்-தன்னை

உரிய சொல்லால் இசை மாலைகள் ஏத்தி உள்ளப்பெற்றேற்கு

அரியது உண்டோ எனக்கு இன்று-தொட்டும் இனி என்றுமே

#3281

என்றும் ஒன்று ஆகி ஒத்தாரும் மிக்கார்களும் தன் தனக்கு

இன்றி நின்றானை எல்லா உலகும் உடையான்-தன்னை

குன்றம் ஒன்றால் மழை காத்த பிரானை சொல் மாலைகள்

நன்று சூட்டும் விதி எய்தினம் என்ன குறை நமக்கே

#3282

நமக்கும் பூவின் மிசை நங்கைக்கும் இன்பனை ஞாலத்தார்

தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை தண் தாமரை

சுமக்கும் பாத பெருமானை சொல் மாலைகள் சொல்லுமாறு

அமைக்க வல்லேற்கு இனி யாவர் நிகர் அகல் வானத்தே

#3283

வானத்தும் வானத்துள் உம்பரும் மண்ணுள்ளும் மண்ணின் கீழ்

தானத்தும் எண் திசையும் தவிராது நின்றான்-தன்னை

கூனல் சங்க தடக்கை-அவனை குடம் ஆடியை

வான கோனை கவி சொல்ல வல்லேற்கு இனி மாறு உண்டே

#3284

உண்டும் உமிழ்ந்தும் கடந்தும் இடந்தும் கிடந்தும் நின்றும்

கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தும் மணம் கூடியும்

கண்ட ஆற்றால் தனதே உலகு என நின்றான்-தன்னை

வண் தமிழ் நூற்க நோற்றேன் அடியார்க்கு இன்ப மாரியே

#3285

மாரி மாறாத தண் அம் மலை வேங்கடத்து அண்ணலை

வாரி மாறாத பைம் பூம் பொழில் சூழ் குருகூர் நகர்

காரி மாறன் சடகோபன் சொல் ஆயிரத்து இ பத்தால்

வேரி மாறாத பூ மேல் இருப்பாள் வினை தீர்க்குமே

#3286

தீர்ப்பாரை யாம் இனி எங்ஙனம் நாடுதும் அன்னைமீர்

ஓர்ப்பால் இ ஒள் நுதல் உற்ற நல் நோய் இது தேறினோம்

போர்ப்பாகு தான் செய்து அன்று ஐவரை வெல்வித்த மாய போர்

தேர்ப்பாகனார்க்கு இவள் சிந்தை துழாய் திசைக்கின்றதே

#3287

திசைக்கின்றதே இவள் நோய் இது மிக்க பெரும் தெய்வம்

இசைப்பு இன்றி நீர் அணங்கு ஆடும் இளம் தெய்வம் அன்று இது

திசைப்பு இன்றியே சங்கு சக்கரம் என்று இவள் கேட்க நீர்

இசைக்கிற்றிராகில் நன்றே இல் பெறும் இது காண்-மினே

#3288

இது காண்-மின் அன்னைமீர் இ கட்டுவிச்சி சொல் கொண்டு நீர்

எதுவானும் செய்து அங்கு ஓர் கள்ளும் இறைச்சியும் தூவேன்-மின்

மது வார் துழாய் முடி மாய பிரான் கழல் வாழ்த்தினால்

அதுவே இவள் உற்ற நோய்க்கும் அரு மருந்து ஆகுமே

#3289

மருந்து ஆகும் என்று அங்கு ஓர் மாய வலவை சொல் கொண்டு நீர்

கரும் சோறும் மற்றை செம் சோறும் களன் இழைத்து என் பயன்

ஒருங்காகவே உலகு ஏழும் விழுங்கி உமிழ்ந்திட்ட

பெருந்தேவன் பேர் சொல்லகிற்கில் இவளை பெறுதிரே

#3290

இவளை பெறும் பரிசு இ அணங்கு ஆடுதல் அன்று அந்தோ

குவளை தடம் கண்ணும் கோவை செ வாயும் பயந்தனள்

கவள கடா களிறு அட்ட பிரான் திருநாமத்தால்

தவள பொடி கொண்டு நீர் இட்டிடு-மின் தணியுமே

#3291

தணியும் பொழுது இல்லை நீர் அணங்கு ஆடுதிர் அன்னைமீர்

பிணியும் ஒழிகின்றது இல்லை பெருகும் இது அல்லால்

மணியின் அணி நிற மாயன் தமர் அடி நீறு கொண்டு

அணிய முயலின் மற்று இல்லை கண்டீர் இ அணங்குக்கே

#3292

அணங்குக்கு அரு மருந்து என்று அங்கு ஓர் ஆடும் கள்ளும் பராய்

துணங்கை எறிந்து நும் தோள் குலைக்கப்படும் அன்னைமீர்

உணங்கல் கெட கழுதை உதடு ஆட்டம் கண்டு என் பயன்

வணங்கீர்கள் மாய பிரான் தமர் வேதம் வல்லாரையே

#3293

வேதம் வல்லார்களை கொண்டு விண்ணோர் பெருமான் திருப்

பாதம் பணிந்து இவள் நோய் இது தீர்த்து கொள்ளாது போய்

ஏதம் பறைந்து அல்ல செய்து கள் ஊடு கலாய் தூய்

கீதம் முழவு இட்டு நீர் அணங்கு ஆடுதல் கீழ்மையே

#3294

கீழ்மையினால் அங்கு ஓர் கீழ்மகன் இட்ட முழவின் கீழ்

நாழ்மை பல சொல்லி நீர் அணங்கு ஆடும் பொய் காண்கிலேன்

ஏழ்மை பிறப்புக்கும் சேமம் இ நோய்க்கும் ஈதே மருந்து

ஊழ்மையில் கண்ணபிரான் கழல் வாழ்த்து-மின் உன்னித்தே

#3295

உன்னித்து மற்று ஒரு தெய்வம் தொழாஅள் அவனை அல்லால்

நும் இச்சை சொல்லி நும் தோள் குலைக்கப்படும் அன்னைமீர்

மன்னப்படும் மறைவாணனை வண் துவராபதி

மன்னனை ஏத்து-மின் ஏத்துதலும் தொழுது ஆடுமே

#3296

தொழுது ஆடி தூ மணி வண்ணனுக்கு ஆட்செய்து நோய் தீர்ந்த

வழுவாத தொல் புகழ் வண் குருகூர் சடகோபன் சொல்

வழுவாத ஆயிரத்துள் இவை பத்து வெறிகளும்

தொழுது ஆடி பாட வல்லார் துக்க சீலம் இலர்களே

#3297

சீலம் இல்லா சிறியனேலும் செய்வினையோ பெரிதால்

ஞாலம் உண்டாய் ஞான மூர்த்தி நாராயணா என்றுஎன்று

காலம்-தோறும் யான் இருந்து கை தலை பூசலிட்டால்

கோல மேனி காண வாராய் கூவியும் கொள்ளாயே

#3298

கொள்ள மாளா இன்ப வெள்ளம் கோது இல தந்திடும் என்

வள்ளலேயோ வையம் கொண்ட வாமனாவோ என்றுஎன்று

நள்ளிராவும் நன் பகலும் நான் இருந்து ஓலம் இட்டால்

கள்ள மாயா உன்னை என் கண் காண வந்து ஈயாயே

#3299

ஈவு இலாத தீவினைகள் எத்தனை செய்தனன்-கொல்

தாவி வையம் கொண்ட எந்தாய் தாமோதரா என்றுஎன்று

கூவிக்கூவி நெஞ்சு உருகி கண் பனி சோர நின்றால்

பாவி நீ என்று ஒன்று சொல்லாய் பாவியேன் காண வந்தே

#3300

காண வந்து என் கண்முகப்பே தாமரை கண் பிறழ

ஆணி செம்பொன் மேனி எந்தாய் நின்று அருளாய் என்றுஎன்று

நாணம் இல்லா சிறு தகையேன் நான் இங்கு அலற்றுவது என்

பேணி வானோர் காணமாட்டா பீடு உடை அப்பனையே

#3301

அப்பனே அடல் ஆழியானே ஆழ் கடலை கடைந்த

துப்பனே உன் தோள்கள் நான்கும் கண்டிடக்கூடும்-கொல் என்று

எப்பொழுதும் கண்ண நீர் கொண்டு ஆவி துவர்ந்துதுவர்ந்து

இப்பொழுதே வந்திடாய் என்று ஏழையேன் நோக்குவனே

#3302

நோக்கிநோக்கி உன்னை காண்பான் யான் எனது ஆவியுள்ளே

நாக்கு நீள்வன் ஞானம் இல்லை நாள்-தோறும் என்னுடைய

ஆக்கையுள்ளும் ஆவியுள்ளும் அல்ல புறத்தினுள்ளும்

நீக்கம் இன்றி எங்கும் நின்றாய் நின்னை அறிந்து அறிந்தே

#3303

அறிந்துஅறிந்து தேறித்தேறி யான் எனது ஆவியுள்ளே

நிறைந்த ஞானமூர்த்தியாயை நின்மலமாக வைத்து

பிறந்தும் செத்தும் நின்று இடறும் பேதைமை தீர்ந்து ஒழிந்தேன்

நறும் துழாயின் கண்ணி அம்மா நான் உன்னை கண்டுகொண்டே

#3304

கண்டுகொண்டு என் கைகள் ஆர நின் திருப்பாதங்கள் மேல்

எண் திசையும் உள்ள பூ கொண்டு ஏத்தி உகந்துஉகந்து

தொண்டரோங்கள் பாடி ஆட சூழ் கடல் ஞாலத்துள்ளே

வண் துழாயின் கண்ணி வேந்தே வந்திடகில்லாயே

#3305

இடகிலேன் ஒன்று அட்ட கில்லேன் ஐம்புலன் வெல்ல கில்லேன்

கடவன் ஆகி காலம்-தோறும் பூ பறித்து ஏத்த கில்லேன்

மட வல் நெஞ்சம் காதல் கூர வல்வினையேன் அயர்ப்பாய்

தடவுகின்றேன் எங்கு காண்பன் சக்கரத்து அண்ணலையே

#3306

சக்கரத்து அண்ணலே என்று தாழ்ந்து கண்ணீர் ததும்ப

பக்கம் நோக்கி நின்று அலந்தேன் பாவியேன் காண்கின்றிலேன்

மிக்க ஞானமூர்த்தி ஆய வேத விளக்கினை என்

தக்க ஞான கண்களாலே கண்டு தழுவுவனே

#3307

தழுவிநின்ற காதல் தன்னால் தாமரை கண்ணன்-தன்னை

குழுவு மாட தென் குருகூர் மாறன் சடகோபன் சொல்

வழுவு இலாத ஒண் தமிழ்கள் ஆயிரத்துள் இ பத்தும்

தழுவ பாடி ஆட வல்லார் வைகுந்தம் ஏறுவரே

#3308

ஏறு ஆளும் இறையோனும் திசைமுகனும் திருமகளும்

கூறு ஆளும் தனி உடம்பன் குலம்குலமா அசுரர்களை

நீறு ஆகும்படியாக நிருமித்து படை தொட்ட

மாறாளன் கவராத மணி மாமை குறைவு இலமே

#3309

மணி மாமை குறைவு இல்லா மலர் மாதர் உறை மார்பன்

அணி மான தட வரை தோள் அடல் ஆழி தட கையன்

பணி மானம் பிழையாமே அடியேனை பணிகொண்ட

மணிமாயன் கவராத மட நெஞ்சால் குறைவு இலமே

#3310

மட நெஞ்சால் குறைவு இல்லா மகள் தாய் செய்து ஒரு பேய்ச்சி

விட நஞ்ச முலை சுவைத்த மிகு ஞான சிறு குழவி

பட நாகத்து அணை கிடந்த பரு வரை தோள் பரம்புருடன்

நெடுமாயன் கவராத நிறையினால் குறைவு இலமே

#3311

நிறையினால் குறைவு இல்லா நெடும் பணை தோள் மட பின்னை

பொறையினால் முலை அணைவான் பொரு விடை ஏழ் அடர்த்து உகந்த

கறையினார் துவர் உடுக்கை கடை ஆவின் கழி கோல் கை

சறையினார் கவராத தளிர் நிறத்தால் குறைவு இலமே

#3312

தளிர் நிறத்தால் குறைவு இல்லா தனி சிறையில் விளப்பு உற்ற

கிளி மொழியாள் காரணமா கிளர் அரக்கன் நகர் எரித்த

களி மலர் துழாய் அலங்கல் கமழ் முடியன் கடல் ஞாலத்து

அளி மிக்கான் கவராத அறிவினால் குறைவு இலமே

#3313

அறிவினால் குறைவு இல்லா அகல் ஞாலத்தவர் அறிய

நெறி எல்லாம் எடுத்து உரைத்த நிறை ஞானத்து ஒரு மூர்த்தி

குறிய மாண் உரு ஆகி கொடும் கோளால் நிலம் கொண்ட

கிறி அம்மான் கவராத கிளர் ஒளியால் குறைவு இலமே

#3314

கிளர் ஒளியால் குறைவு இல்லா அரி உருவாய் கிளர்ந்து எழுந்து

கிளர் ஒளிய இரணியனது அகல் மார்பம் கிழித்து உகந்த

வளர் ஒளிய கனல் ஆழி வலம்புரியன் மணி நீல

வளர் ஒளியான் கவராத வரி வளையால் குறைவு இலமே

#3315

வரி வளையால் குறைவு இல்லா பெரு முழக்கால் அடங்காரை

எரி அழலம் புக ஊதி இரு நிலம் முன் துயர் தவிர்த்த

தெரிவு அரிய சிவன் பிரமன் அமரர் கோன் பணிந்து ஏத்தும்

விரி புகழான் கவராத மேகலையால் குறைவு இலமே

#3316

மேகலையால் குறைவு இல்லா மெலிவுற்ற அகல் அல்குல்

போக மகள் புகழ் தந்தை விறல் வாணன் புயம் துணித்து

நாக மிசை துயில்வான் போல் உலகு எல்லாம் நன்கு ஒடுங்க

யோகு அணைவான் கவராத உடம்பினால் குறைவு இலமே

#3317

உடம்பினால் குறைவு இல்லா உயிர் பிரிந்த மலைத்துண்டம்

கிடந்தன போல் துணி பலவா அசுரர் குழாம் துணித்து உகந்த

தடம் புனல சடைமுடியன் தனி ஒரு கூறு அமர்ந்து உறையும்

உடம்பு உடையான் கவராத உயிரினால் குறைவு இலமே

#3318

உயிரினால் குறைவு இல்லா உலகு ஏழ் தன்னுள் ஒடுக்கி

தயிர் வெண்ணெய் உண்டானை தடம் குருகூர் சடகோபன்

செயிர் இல் சொல் இசை மாலை ஆயிரத்துள் இ பத்தால்

வயிரம் சேர் பிறப்பு அறுத்து வைகுந்தம் நண்ணுவரே

#3319

நண்ணாதார் முறுவலிப்ப நல் உற்றார் கரைந்து ஏங்க

எண் ஆரா துயர் விளைக்கும் இவை என்ன உலகு இயற்கை

கண்ணாளா கடல் கடைந்தாய் உன கழற்கே வரும் பரிசு

தண்ணாவாது அடியேனை பணி கண்டாய் சாம் ஆறே

#3320

சாம் ஆறும் கெடும் ஆறும் தமர் உற்றார் தலைத்தலைப்பெய்து

ஏமாறி கிடந்து அலற்றும் இவை என்ன உலகு இயற்கை

ஆம் ஆறு ஒன்று அறியேன் நான் அரவு அணையாய் அம்மானே

கூமாறே விரைகண்டாய் அடியேனை குறிக்கொண்டே

#3321

கொண்டாட்டும் குலம் புனைவும் தமர் உற்றார் விழு நிதியும்

வண்டு ஆர் பூம் குழலாளும் மனை ஒழிய உயிர் மாய்தல்

கண்டு ஆற்றேன் உலகு இயற்கை கடல் வண்ணா அடியேனை

பண்டே போல் கருதாது உன் அடிக்கே கூய் பணிக்கொள்ளே

#3322

கொள் என்று கிளர்ந்து எழுந்த பெரும் செல்வம் நெருப்பு ஆக

கொள் என்று தமம் மூடும் இவை என்ன உலகு இயற்கை

வள்ளலே மணி வண்ணா உன கழற்கே வரும் பரிசு

வள்ளல் செய்து அடியேனை உனது அருளால் வாங்காயே

#3323

வாங்கு நீர் மலர் உலகில் நிற்பனவும் திரிவனவும்

ஆங்கு உயிர்கள் பிறப்பு இறப்பு பிணி மூப்பால் தகர்ப்புண்ணும்

ஈங்கு இதன் மேல் வெம் நரகம் இவை என்ன உலகு இயற்கை

வாங்கு எனை நீ மணி வண்ணா அடியேனை மறுக்கேலே

#3324

மறுக்கி வல் வலைப்படுத்தி குமைத்திட்டு கொன்று உண்பர்

அறப்பொருளை அறிந்து ஓரார் இவை என்ன உலகு இயற்கை

வெறி துளவ முடியானே வினையேனை உனக்கு அடிமை

அறக்கொண்டாய் இனி என் ஆர் அமுதே கூயருளாயே

#3325

ஆயே இ உலகத்து நிற்பனவும் திரிவனவும்

நீயே மற்று ஒரு பொருளும் இன்றி நீ நின்றமையால்

நோயே மூப்பு இறப்பு பிறப்பு பிணியே என்று இவை ஒழிய

கூயேகொள் அடியேனை கொடு உலகம் காட்டேலே

#3326

காட்டி நீ கரந்து உமிழும் நிலம் நீர் தீ விசும்பு கால்

ஈட்டி நீ வைத்து அமைத்த இமையோர் வாழ் தனி முட்டை

கோட்டையினில் கழித்து என்னை உன் கொழும் சோதி உயரத்து

கூட்டு அரிய திருவடிக்கள் எஞ்ஞான்று கூட்டுதியே

#3327

கூட்டுதி நின் குரை கழல்கள் இமையோரும் தொழாவகைசெய்து

ஆட்டுதி நீ அரவு அணையாய் அடியேனும் அஃது அறிவன்

வேட்கை எல்லாம் விடுத்து என்னை உன் திருவடியே சுமந்து உழல

கூட்டு அரிய திருவடிக்கள் கூட்டினை நான் கண்டேனே

#3328

கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி

கண்ட இன்பம் தெரிவு அரிய அளவு இல்லா சிற்றின்பம்

ஒண் தொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப

கண்ட சதிர் கண்டு ஒழிந்தேன் அடைந்தேன் உன் திருவடியே

#3329

திருவடியை நாரணனை கேசவனை பரஞ்சுடரை

திருவடி சேர்வது கருதி செழும் குருகூர் சடகோபன்

திருவடி மேல் உரைத்த தமிழ் ஆயிரத்துள் இ பத்தும்

திருவடியே அடைவிக்கும் திருவடி சேர்ந்து ஒன்றும்-மினே

#3330

ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் இல்லா

அன்று நான்முகன்-தன்னொடு தேவர் உலகோடு உயிர் படைத்தான்

குன்றம் போல் மணி மாடம் நீடு திருக்குருகூர்-அதனுள்

நின்ற ஆதிப்பிரான் நிற்க மற்றை தெய்வம் நாடுதிரே

#3331

நாடி நீர் வணங்கும் தெய்வமும் உம்மையும் முன் படைத்தான்

வீடு இல் சீர் புகழ் ஆதிப்பிரான் அவன் மேவி உறை கோயில்

மாட மாளிகை சூழ்ந்து அழகு ஆய திருக்குருகூர்-அதனை

பாடி ஆடி பரவி செல்-மின்கள் பல் உலகீர் பரந்தே

#3332

பரந்த தெய்வமும் பல் உலகும் படைத்து அன்று உடனே விழுங்கி

கரந்து உமிழ்ந்து கடந்து இடந்தது கண்டும் தெளியகில்லீர்

சிரங்களால் அமரர் வணங்கும் திருக்குருகூர்-அதனுள்

பரன் திறம் அன்றி பல் உலகீர் தெய்வம் மற்று இல்லை பேசு-மினே

#3333

பேச நின்ற சிவனுக்கும் பிரமன்-தனக்கும் பிறர்க்கும்

நாயகன் அவனே கபால நல் மோக்கத்து கண்டுகொள்-மின்

தேச மா மதிள் சூழ்ந்து அழகு ஆய திருக்குருகூர் அதனுள்

ஈசன்-பால் ஓர் அவம் பறைதல் என் ஆவது இலிங்கியர்க்கே

#3334

இலிங்கத்து இட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்

வலிந்து வாது செய்வீர்களும் மற்றும் நும் தெய்வமும் ஆகி நின்றான்

மலிந்து செந்நெல் கவரி வீசும் திருக்குருகூர்-அதனுள்

பொலிந்து நின்ற பிரான் கண்டீர் ஒன்றும் பொய் இல்லை போற்று-மினே

#3335

போற்றி மற்று ஓர் தெய்வம் பேண புறத்திட்டு உம்மை இன்னே

தேற்றி வைத்தது எல்லீரும் வீடு பெற்றால் உலகு இல்லை என்றே

சேற்றில் செந்நெல் கமலம் ஓங்கு திருக்குருகூர்-அதனுள்

ஆற்ற வல்லவன் மாயம் கண்டீர் அது அறிந்து அறிந்து ஓடு-மினே

#3336

ஓடிஓடி பல பிறப்பும் பிறந்து மற்று ஓர் தெய்வம்

பாடி ஆடி பணிந்து பல்படிகால் வழி ஏறி கண்டீர்

கூடி வானவர் ஏத்த நின்ற திருக்குருகூர்-அதனுள்

ஆடு புள் கொடி ஆதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே

#3337

புக்கு அடிமையினால் தன்னை கண்ட மார்க்கண்டேயன்-அவனை

நக்க பிரானும் அன்று உய்யக்கொண்டது நாராயணன் அருளே

கொக்கு அலர் தடம் தாழை வேலி திருக்குருகூர்-அதனுள்

மிக்க ஆதிப்பிரான் நிற்க மற்றை தெய்வம் விளம்புதிரே

#3338

விளம்பும் ஆறு சமயமும் அவை ஆகியும் மற்றும் தன்-பால்

அளந்து காண்டற்கு அரியன் ஆகிய ஆதிப்பிரான் அமரும்

வளம் கொள் தண் பணை சூழ்ந்து அழகு ஆய திருக்குருகூர்-
அதனை

உளம் கொள் ஞானத்து வைம்-மின் உம்மை உய்யக்கொண்டு போகுறிலே

#3339

உறுவது ஆவது எ தேவும் எ உலகங்களும் மற்றும் தன்-பால்

மறு இல் மூர்த்தியோடு ஒத்து இத்தனையும் நின்ற வண்ணம் நிற்கவே

செறுவில் செந்நெல் கரும்பொடு ஓங்கு திருக்குருகூர்-அதனுள்

குறிய மாண் உரு ஆகிய நீள் குட கூத்தனுக்கு ஆள் செய்வதே

#3340

ஆள் செய்து ஆழி பிரானை சேர்ந்தவன் வண் குருகூர் நகரான்

நாள் கமழ் மகிழ் மாலை மார்பினன் மாறன் சடகோபன்

வேட்கையால் சொன்ன பாடல் ஆயிரத்துள் இ பத்தும் வல்லார்

மீட்சி இன்றி வைகுந்த மாநகர் மற்றது கையதுவே

#3341

கை ஆர் சக்கரத்து என் கருமாணிக்கமே என்று என்று

பொய்யே கைம்மை சொல்லி புறமே புறமே ஆடி

மெய்யே பெற்று ஒழிந்தேன் விதி வாய்க்கின்று காப்பார் ஆர்

ஐயோ கண்ணபிரான் அறையோ இனி போனாலே

#3342

போனாய் மா மருதின் நடுவே என் பொல்லா மணியே

தேனே இன் அமுதே என்று என்றே சில கூத்து சொல்ல

தானேல் எம் பெருமான் அவன் என் ஆகி ஒழிந்தான்

வானே மாநிலமே மற்றும் முற்றும் என் உள்ளனவே

#3343

உள்ளன மற்று உளவா புறமே சில மாயம் சொல்லி

வள்ளல் மணி வண்ணனே என்று என்றே உன்னையும் வஞ்சிக்கும்

கள்ள மனம் தவிர்ந்தே உன்னை கண்டுகொண்டு உய்ந்து ஒழிந்தேன்

வெள்ளத்து அணை கிடந்தாய் இனி உன்னை விட்டு என் கொள்வனே

#3344

என் கொள்வன் உன்னை விட்டு என்னும் வாசகங்கள் சொல்லியும்

வன் கள்வனேன் மனத்தை வலித்து கண்ண நீர் கரந்து

நின்-கண் நெருங்கவைத்தே எனது ஆவியை நீக்ககில்லேன்

என்-கண் மலினம் அறுத்து என்னை கூவி அருளாய் கண்ணனே

#3345

கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தை அமுதை

நண்ணியும் நண்ணகில்லேன் நடுவே ஓர் உடம்பில் இட்டு

திண்ணம் அழுந்த கட்டி பல செய்வினை வன் கயிற்றால்

புண்ணை மறைய வரிந்து என்னை போர வைத்தாய் புறமே

#3346

புறம் அற கட்டிக்கொண்டு இரு வல்வினையார் குமைக்கும்

முறை முறை யாக்கை புகல் ஒழிய கண்டு கொண்டு ஒழிந்தேன்

நிறம் உடை நால் தடம் தோள் செய்ய வாய் செய்ய தாமரை கண்

அறம் முயல் ஆழி அங்கை கருமேனி அம்மான்-தன்னையே

#3347

அம்மான் ஆழிப்பிரான் அவன் எ இடத்தான் யான் ஆர்

எ மா பாவியர்க்கும் விதி வாய்க்கின்று வாய்க்கும் கண்டீர்

கைம்மா துன்பு ஒழித்தாய் என்று கைதலை பூசலிட்டே

மெய்ம் மாலாய் ஒழிந்தேன் எம்பிரானும் என் மேலானே

#3348

மேலா தேவர்களும் நில தேவரும் மேவி தொழும்

மாலார் வந்து இனநாள் அடியேன் மனத்தே மன்னினார்

சேல் ஏய் கண்ணியரும் பெரும் செல்வமும் நன்மக்களும்

மேலா தாய் தந்தையும் அவரே இனி ஆவாரே

#3349

ஆவார் ஆர் துணை என்று அலை நீர் கடலுள் அழுந்தும்

நாவாய் போல் பிறவி கடலுள் நின்று நான் துளங்க

தேவு ஆர் கோலத்தொடும் திருச்சக்கரம் சங்கினொடும்

ஆஆ என்று அருள்செய்து அடியேனொடும் ஆனானே

#3350

ஆனான் ஆளுடையான் என்று அஃதே கொண்டு உகந்து வந்து

தானே இன் அருள்செய்து என்னை முற்றவும் தான் ஆனான்

மீனாய் ஆமையுமாய் நரசிங்கமுமாய் குறளாய்

கான் ஆர் ஏனமுமாய் கற்கி ஆம் இன்னம் கார் வண்ணனே

#3351

கார் வண்ணன் கண்ணபிரான் கமல தடம் கண்ணன்-தன்னை

ஏர் வள ஒண் கழனி குருகூர் சடகோபன் சொன்ன

சீர் வண்ணம் ஒண் தமிழ்கள் இவை ஆயிரத்துள் இ பத்தும்

ஆர் வண்ணத்தால் உரைப்பார் அடி கீழ் புகுவார் பொலிந்தே

#3352

பொலிக பொலிக பொலிக போயிற்று வல் உயிர் சாபம்

நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு யாது ஒன்றும் இல்லை

கலியும் கெடும் கண்டுகொள்-மின் கடல் வண்ணன் பூதங்கள் மண் மேல்

மலிய புகுந்து இசை பாடி ஆடி உழிதர கண்டோம்

#3353

கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கு இனியன கண்டோம்

தொண்டீர் எல்லீரும் வாரீர் தொழுதுதொழுது நின்று ஆர்த்தும்

வண்டு ஆர் தண் அம் துழாயான் மாதவன் பூதங்கள் மண் மேல்

பண் தான் பாடி நின்று ஆடி பரந்து திரிகின்றனவே

#3354

திரியும் கலியுகம் நீங்கி தேவர்கள் தாமும் புகுந்து

பெரிய கிதயுகம் பற்றி பேரின்ப வெள்ளம் பெருக

கரிய முகில் வண்ணன் எம்மான் கடல் வண்ணன் பூதங்கள் மண் மேல்

இரிய புகுந்து இசை பாடி எங்கும் இடம் கொண்டனவே

#3355

இடம் கொள் சமயத்தை எல்லாம் எடுத்து களைவன போலே

தடம் கடல் பள்ளி பெருமான்-தன்னுடை பூதங்களே ஆய்

கிடந்தும் இருந்தும் எழுந்தும் கீதம் பலபல பாடி

நடந்தும் பறந்தும் குனித்தும் நாடகம் செய்கின்றனவே

#3356

செய்கின்றது என் கண்ணுக்கு ஒன்றே ஒக்கின்றது இ உலகத்து

வைகுந்தன் பூதங்களேயாய் மாயத்தினால் எங்கும் மன்னி

ஐயம் ஒன்று இல்லை அரக்கர் அசுரர் பிறந்தீர் உள்ளீரேல்

உய்யும் வகை இல்லை தொண்டீர் ஊழி பெயர்த்திடும் கொன்றே

#3357

கொன்று உயிர் உண்ணும் விசாதி பகை பசி தீயன எல்லாம்

நின்று இ உலகில் கடிவான் நேமி பிரான் தமர் போந்தார்

நன்று இசை பாடியும் துள்ளி ஆடியும் ஞாலம் பரந்தார்

சென்று தொழுது உய்ம்-மின் தொண்டீர் சிந்தையை செந்நிறுத்தியே

#3358

நிறுத்தி நும் உள்ளத்து கொள்ளும் தெய்வங்கள் உம்மை உய்யக்கொள்

மறுத்தும் அவனோடே கண்டீர் மார்க்கண்டேயனும் கரியே

கறுத்த மனம் ஒன்றும் வேண்டா கண்ணன் அல்லால் தெய்வம் இல்லை

இறுப்பது எல்லாம் அவன் மூர்த்தியாய் அவர்க்கே இறும்-மினே

#3359

இறுக்கும் இறை இறுத்து உண்ண எ உலகுக்கும் தன் மூர்த்தி

நிறுத்தினான் தெய்வங்கள் ஆக அ தெய்வ நாயகன் தானே

மறு திருமார்வன் அவன் தன் பூதங்கள் கீதங்கள் பாடி

வெறுப்பு இன்றி ஞாலத்து மிக்கார் மேவி தொழுது உய்ம்-மின் நீரே

#3360

மேவி தொழுது உய்ம்-மின் நீர்கள் வேத புனித இருக்கை

நாவில் கொண்டு அச்சுதன்-தன்னை ஞானவிதி பிழையாமே

பூவில் புகையும் விளக்கும் சாந்தமும் நீரும் மலிந்து

மேவி தொழும் அடியாரும் பகவரும் மிக்கது உலகே

#3361

மிக்க உலகுகள்-தோறும் மேவி கண்ணன் திருமூர்த்தி

நக்க பிரானோடு அயனும் இந்திரனும் முதலாக

தொக்க அமரர் குழாங்கள் எங்கும் பரந்தன தொண்டீர்

ஒக்க தொழ கிற்றிராகில் கலியுகம் ஒன்றும் இல்லையே

#3362

கலியுகம் ஒன்றும் இன்றிக்கே தன் அடியார்க்கு அருள்செய்யும்

மலியும் சுடர் ஒளி மூர்த்தி மாய பிரான் கண்ணன்-தன்னை

கலி வயல் தென் நன் குருகூர் காரிமாறன் சடகோபன்

ஒலி புகழ் ஆயிரத்து இ பத்து உள்ளத்தை மாசு அறுக்குமே

#3363

மாசு அறு சோதி என் செய்ய வாய் மணி குன்றத்தை

ஆசு அறு சீலனை ஆதிமூர்த்தியை நாடியே

பாசறவு எய்தி அறிவு இழந்து எனை நாளையம்

ஏசு அறும் ஊரவர் கவ்வை தோழீ என் செய்யுமே

#3364

என் செய்யும் ஊரவர் கவ்வை தோழீ இனி நம்மை

என் செய்ய தாமரை கண்ணன் என்னை நிறை கொண்டான்

முன் செய்ய மாமை இழந்து மேனி மெலிவு எய்தி

என் செய்ய வாயும் கரும் கண்ணும் பயப்பு ஊர்ந்தவே

#3365

ஊர்ந்த சகடம் உதைத்த பாதத்தன் பேய் முலை

சார்ந்து சுவைத்த செ வாயன் என்னை நிறை கொண்டான்

பேர்ந்தும் பெயர்ந்தும் அவனோடு அன்றி ஓர் சொல் இலேன்

தீர்ந்த என் தோழீ என் செய்யும் ஊரவர் கவ்வையே

#3366

ஊரவர் கவ்வை எரு இட்டு அன்னை சொல் நீர் படுத்து

ஈர நெல் வித்தி முளைத்த நெஞ்ச பெரும் செய்யுள்

பேர் அமர் காதல் கடல் புரைய விளைவித்த

கார் அமர் மேனி நம் கண்ணன் தோழீ கடியனே

#3367

கடியன் கொடியன் நெடிய மால் உலகம் கொண்ட

அடியன் அறிவு அரு மேனி மாயத்தன் ஆகிலும்

கொடிய என் நெஞ்சம் அவன் என்றே கிடக்கும் எல்லே

துடி கொள் இடை மட தோழீ அன்னை என் செய்யுமே

#3368

அன்னை என் செய்யில் என் ஊர் என் சொல்லில் என் தோழிமீர்

என்னை இனி உமக்கு ஆசை இல்லை அகப்பட்டேன்

முன்னை அமரர் முதல்வன் வண் துவராபதி

மன்னன் மணி வண்ணன் வாசுதேவன் வலையுளே

#3369

வலையுள் அகப்படுத்து என்னை நல் நெஞ்சம் கூவிக்கொண்டு

அலை கடல் பள்ளி அம்மானை ஆழிப்பிரான் தன்னை

கலை கொள் அகல் அல்குல் தோழீ நம் கண்களால் கண்டு

தலையில் வணங்கவும் ஆம்-கொலோ தையலார் முன்பே

#3370

பேய் முலை உண்டு சகடம் பாய்ந்து மருது இடை

போய் முதல் சாய்த்து புள் வாய் பிளந்து களிறு அட்ட

தூ முறுவல் தொண்டைவாய் பிரானை எ நாள்-கொலோ

யாம் உறுகின்றது தோழீ அன்னையர் நாணவே

#3371

நாணும் நிறையும் கவர்ந்து என்னை நல் நெஞ்சம் கூவிக்கொண்டு

சேண் உயர் வானத்து இருக்கும் தேவபிரான்-தன்னை

ஆணை என் தோழீ உலகு-தோறு அலர் தூற்றி ஆம்

கோணைகள் செய்து குதிரியாய் மடல் ஊர்துமே

#3372

யாம் மடல் ஊர்ந்தும் எம் ஆழி அங்கை பிரான் உடை

தூ மடல் தண் அம் துழாய் மலர் கொண்டு சூடுவோம்

ஆம் மடம் இன்றி தெருவு-தோறு அயல் தையலார்

நா மடங்கா பழி தூற்றி நாடும் இரைக்கவே

#3373

இரைக்கும் கரும் கடல் வண்ணன் கண்ணபிரான்-தன்னை

விரை கொள் பொழில் குருகூர் சடகோபன் சொன்ன

நிரை கொள் அந்தாதி ஓர் ஆயிரத்துள் இ பத்தும்

உரைக்க வல்லார்க்கு வைகுந்தம் ஆகும் தம் ஊர் எல்லாம்

#3374

ஊர் எல்லாம் துஞ்சி உலகு எல்லாம் நள்ளிருளாய்

நீர் எல்லாம் தேறி ஓர் நீள் இரவாய் நீண்டதால்

பார் எல்லாம் உண்ட நம் பாம்பு அணையான் வாரானால்

ஆர் எல்லே வல்வினையேன் ஆவி காப்பார் இனியே

#3375

ஆவி காப்பார் இனி யார் ஆழ் கடல் மண் விண் மூடி

மா விகாரமாய் ஓர் வல் இரவாய் நீண்டதால்

காவி சேர் வண்ணன் என் கண்ணனும் வாரானால்

பாவியேன் நெஞ்சமே நீயும் பாங்கு அல்லையே

#3376

நீயும் பாங்கு அல்லை காண் நெஞ்சமே நீள் இரவும்

ஓயும் பொழுது இன்றி ஊழியாய் நீண்டதால்

காயும் கடும் சிலை என் காகுத்தன் வாரானால்

மாயும் வகை அறியேன் வல்வினையேன் பெண் பிறந்தே

#3377

பெண் பிறந்தார் எய்தும் பெரும் துயர் காண்கிலேன் என்று

ஒண் சுடரோன் வாராது ஒளித்தான் இ மண் அளந்த

கண் பெரிய செ வாய் எம் கார் ஏறு வாரானால்

எண் பெரிய சிந்தை நோய் தீர்ப்பார் ஆர் என்னையே

#3378

ஆர் என்னை ஆராய்வார் அன்னையரும் தோழியரும்

நீர் என்னே என்னாதே நீள் இரவும் துஞ்சுவரால்

கார் அன்ன மேனி நம் கண்ணனும் வாரானால்

பேர் என்னை மாயாதால் வல்வினையேன் பின் நின்றே

#3379

பின் நின்று காதல் நோய் நெஞ்சம் பெரிது அடுமால்

முன் நின்று இரா ஊழி கண் புதைய மூடிற்றால்

மன் நின்ற சக்கரத்து எம் மாயவனும் வாரானால்

இ நின்ற நீள் ஆவி காப்பார் ஆர் இ இடத்தே

#3380

காப்பார் ஆர் இ இடத்து கங்கு இருளின் நுண் துளியாய்

சேண் பாலது ஊழியாய் செல்கின்ற கங்குல்வாய்

தூ பால வெண் சங்கு சக்கரத்தன் தோன்றானால்

தீ பால வல்வினையேன் தெய்வங்காள் என் செய்கேனோ

#3381

தெய்வங்காள் என் செய்கேன் ஓர் இரவு ஏழ் ஊழியாய்

மெய் வந்து நின்று எனது ஆவி மெலிவிக்கும்

கைவந்த சக்கரத்து என் கண்ணனும் வாரானால்

தைவந்த தண் தென்றல் வெம் சுடரில் தான் அடுமே

#3382

வெம் சுடரில் தான் அடுமால் வீங்கு இருளின் நுண் துளியாய்

அம் சுடர வெய்யோன் அணி நெடும் தேர் தோன்றாதால்

செம் சுடர் தாமரை கண் செல்வனும் வாரானால்

நெஞ்சு இடர் தீர்ப்பார் இனி யார் நின்று உருகுகின்றேனே

#3383

நின்று உருகுகின்றேனே போல நெடு வானம்

சென்று உருகி நுண் துளியாய் செல்கின்ற கங்குல்வாய்

அன்று ஒருகால் வையம் அளந்த பிரான் வாரான் என்று

ஒன்று ஒருகால் சொல்லாது உலகோ உறங்குமே

#3384

உறங்குவான் போல் யோகுசெய்த பெருமானை

சிறந்த பொழில் சூழ் குருகூர் சடகோபன் சொல்

நிறம் கிளர்ந்த அந்தாதி ஆயிரத்துள் இ பத்தால்

இறந்து போய் வைகுந்தம் சேராவாறு எங்ஙனேயோ

#3385

எங்ஙனேயோ அன்னைமீர்காள் என்னை முனிவது நீர்

நங்கள் கோல திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

சங்கினோடும் நேமியோடும் தாமரை கண்களோடும்

செங்கனி வாய் ஒன்றினோடும் செல்கின்றது என் நெஞ்சமே

#3386

என் நெஞ்சினால் நோக்கி காணீர் என்னை முனியாதே

தென் நன் சோலை திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

மின்னு நூலும் குண்டலமும் மார்பில் திருமறுவும்

மன்னு பூணும் நான்கு தோளும் வந்து எங்கும் நின்றிடுமே

#3387

நின்றிடும் திசைக்கும் நையும் என்று அன்னையரும் முனிதிர்

குன்ற மாட திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

வென்றி வில்லும் தண்டும் வாளும் சக்கரமும் சங்கமும்

நின்று தோன்றி கண்ணுள் நீங்கா நெஞ்சுள்ளும் நீங்காவே

#3388

நீங்க நில்லா கண்ண நீர்கள் என்று அன்னையரும் முனிதிர்

தேன் கொள் சோலை திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

பூம் தண் மாலை தண் துழாயும் பொன் முடியும் வடிவும்

பாங்கு தோன்றும் பட்டும் நாணும் பாவியேன் பக்கத்தவே

#3389

பக்கம் நோக்கி நிற்கும் நையும் என்று அன்னையரும் முனிதிர்

தக்க கீர்த்தி திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

தொக்க சோதி தொண்டை வாயும் நீண்ட புருவங்களும்

தக்க தாமரை கண்ணும் பாவியேன் ஆவியின் மேலனவே

#3390

மேலும் வன் பழி நம் குடிக்கு இவள் என்று அன்னை காணக்கொடாள்

சோலை சூழ் தண் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

கோல நீள் கொடி மூக்கும் தாமரை கண்ணும் கனி வாயும்

நீல மேனியும் நான்கு தோளும் என் நெஞ்சம் நிறைந்தனவே

#3391

நிறைந்த வன் பழி நம் குடிக்கு இவள் என்று அன்னை காணக்கொடாள்

சிறந்த கீர்த்தி திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

நிறைந்த சோதி வெள்ளம் சூழ்ந்த நீண்ட பொன் மேனியொடும்

நிறைந்து என் உள்ளே நின்று ஒழிந்தான் நேமி அங்கை உளதே

#3392

கையுள் நன் முகம் வைக்கும் நையும் என்று அன்னையரும் முனிதிர்

மை கொள் மாட திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

செய்ய தாமரை கண்ணும் அல்குலும் சிற்றிடையும் வடிவும்

மொய்ய நீள் குழல் தாழ்ந்த தோள்களும் பாவியேன் முன் நிற்குமே

#3393

முன் நின்றாய் என்று தோழிமார்களும் அன்னையரும் முனிதிர்

மன்னு மாட திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

சென்னி நீள் முடி ஆதி ஆய உலப்பு இல் அணிகலத்தன்

கன்னல் பால் அமுது ஆகி வந்து என் நெஞ்சம் கழியானே

#3394

கழிய மிக்கது ஓர் காதலள் இவள் என்று அன்னை காணக்கொடாள்

வழு இல் கீர்த்தி திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின்

குழுமி தேவர் குழாங்கள் கைதொழ சோதி வெள்ளத்தினுள்ளே

எழுவது ஓர் உரு என் நெஞ்சுள் எழும் ஆர்க்கும் அறிவு அரிதே

#3395

அறிவு அரிய பிரானை ஆழி அங்கையனையே அலற்றி

நறிய நன் மலர் நாடி நன் குருகூர் சடகோபன் சொன்ன

குறி கொள் ஆயிரத்துள் இவை பத்தும் திருக்குறுங்குடி-அதன் மேல்

அறிய கற்று வல்லார் வைட்டவர் ஆழ் கடல் ஞாலத்துள்ளே

#3396

கடல் ஞாலம் செய்தேனும் யானே என்னும் கடல் ஞாலம் ஆவேனும் யானே என்னும்

கடல் ஞாலம் கொண்டேனும் யானே என்னும் கடல் ஞாலம் கீண்டேனும் யானே என்னும்

கடல் ஞாலம் உண்டேனும் யானே என்னும் கடல் ஞாலம் ஈசன் வந்து ஏற-கொலோ

கடல் ஞாலத்தீர்க்கு இவை என் சொல்லுகேன் கடல் ஞாலத்து என் மகள் கற்கின்றவே

#3397

கற்கும் கல்விக்கு எல்லை இலனே என்னும் கற்கும் கல்வி ஆவேனும் யானே என்னும்

கற்கும் கல்வி செய்வேனும் யானே என்னும் கற்கும் கல்வி தீர்ப்பேனும் யானே என்னும்

கற்கும் கல்வி சாரமும் யானே என்னும் கற்கும் கல்வி நாதன் வந்து ஏற-கொலோ

கற்கும் கல்வியீர்க்கு இவை என் சொல்லுகேன் கற்கும் கல்வி என் மகள் காண்கின்றவே

#3398

காண்கின்ற நிலம் எல்லாம் யானே என்னும் காண்கின்ற விசும்பு எல்லாம் யானே என்னும்

காண்கின்ற வெம் தீ எல்லாம் யானே என்னும் காண்கின்ற இ காற்று எல்லாம் யானே என்னும்

காண்கின்ற கடல் எல்லாம் யானே என்னும் காண்கின்ற கடல் வண்ணன் ஏற-கொலோ

காண்கின்ற உலகத்தீர்க்கு என் சொல்லுகேன் காண்கின்ற என் காரிகை செய்கின்றவே

#3399

செய்கின்ற கிதி எல்லாம் யானே என்னும் செய்வான் நின்றனகளும் யானே என்னும்

செய்து முன் இறந்தவும் யானே என்னும் செய்கை பயன் உண்பேனும் யானே என்னும்

செய்வார்களை செய்வேனும் யானே என்னும் செய்ய கமல கண்ணன் ஏற-கொலோ

செய்ய உலகத்தீர்க்கு இவை என் சொல்லுகேன் செய்ய கனி வாய் இள மான் திறத்தே

#3400

திறம்பாமல் மண் காக்கின்றேன் யானே என்னும் திறம்பாமல் மலை எடுத்தேனே என்னும்

திறம்பாமல் அசுரரை கொன்றேனே என்னும் திறம் காட்டி அன்று ஐவரை காத்தேனே என்னும்

திறம்பாமல் கடல் கடைந்தேனே என்னும் திறம்பாத கடல் வண்ணன் ஏற-கொலோ

திறம்பாத உலகத்தீர்க்கு என் சொல்லுகேன் திறம்பாது என் திருமகள் எய்தினவே

#3401

இன வேய் மலை ஏந்தினேன் யானே என்னும் இன ஏறுகள் செற்றேனும் யானே என்னும்

இன ஆன் கன்று மேய்த்தேனும் யானே என்னும் இன ஆநிரை காத்தேனும் யானே என்னும்

இன ஆயர் தலைவனும் யானே என்னும் இன தேவர் தலைவன் வந்து ஏற-கொலோ

இன வேல் கண் நல்லீர்க்கு இவை என் சொல்லுகேன் இன வேல் கண்ணி என் மகள் உற்றனவே

#3402

உற்றார்கள் எனக்கு இல்லை யாரும் என்னும் உற்றார்கள் எனக்கு இங்கு எல்லாரும் என்னும்

உற்றார்களை செய்வேனும் யானே என்னும் உற்றார்களை அழிப்பேனும் யானே என்னும்

உற்றார்களுக்கு உற்றேனும் யானே என்னும் உற்றார் இலி மாயன் வந்து ஏற-கொலோ

உற்றீர்கட்கு என் சொல்லி சொல்லுகேன் யான் உற்று என்னுடை பேதை உரைக்கின்றவே

#3403

உரைக்கின்ற முக்கண் பிரான் யானே என்னும் உரைக்கின்ற திசைமுகன் யானே என்னும்

உரைக்கின்ற அமரரும் யானே என்னும் உரைக்கின்ற அமரர் கோன் யானே என்னும்

உரைக்கின்ற முனிவரும் யானே என்னும் உரைக்கின்ற முகில் வண்ணன் ஏற-கொலோ

உரைக்கின்ற உலகத்தீர்க்கு என் சொல்லுகேன் உரைக்கின்ற என் கோமள ஒண் கொடிக்கே

#3404

கொடிய வினை யாதும் இலனே என்னும் கொடிய வினை ஆவேனும் யானே என்னும்

கொடிய வினை செய்வேனும் யானே என்னும் கொடிய வினை தீர்ப்பேனும் யானே என்னும்

கொடியான் இலங்கை செற்றேனே என்னும் கொடிய புள் உடையவன் ஏற-கொலோ

கொடிய உலகத்தீர்க்கு இவை என் சொல்லுகேன் கொடியேன் கொடி என் மகள் கோலங்களே

#3405

கோலம் கொள் சுவர்க்கமும் யானே என்னும் கோலம் இல் நரகமும் யானே என்னும்

கோலம் திகழ் மோக்கமும் யானே என்னும் கோலம் கொள் உயிர்களும் யானே என்னும்

கோலம் கொள் தனிமுதல் யானே என்னும் கோலம் கொள் முகில் வண்ணன் ஏற-கொலோ

கோலம் கொள் உலகத்தீர்க்கு என் சொல்லுகேன் கோலம் திகழ் கோதை என் கூந்தலுக்கே

#3406

கூந்தல் மலர் மங்கைக்கும் மண் மடந்தைக்கும் குல ஆயர் கொழுந்துக்கும் கேள்வன்-தன்னை

வாய்ந்த வழுதி வள நாடன் மன்னு குருகூர் சடகோபன் குற்றேவல் செய்து

ஆய்ந்த தமிழ் மாலை ஆயிரத்துள் இவையும் ஓர் பத்தும் வல்லார் உலகில்

ஏந்து பெரும் செல்வத்தராய் திருமால் அடியார்களை பூசிக்க நோற்றார்களே

#3407

நோற்ற நோன்பு இலேன் நுண் அறிவு இலேன் ஆகிலும் இனி உன்னை விட்டு ஒன்றும்

ஆற்ற கிற்கின்றிலேன் அரவின் அணை அம்மானே

சேற்று தாமரை செந்நெல் ஊடு மலர் சிரீவரமங்கல நகர்

வீற்றிருந்த எந்தாய் உனக்கு மிகை அல்லேன் அங்கே

#3408

அங்குற்றேன் அல்லேன் இங்குற்றேன் அல்லேன் உன்னை காணும் அவாவில் வீழ்ந்து நான்

எங்குற்றேனும் அல்லேன் இலங்கை செற்ற அம்மானே

திங்கள் சேர் மணி மாடம் நீடு சிரீவரமங்கல நகர் உறை

சங்கு சக்கரத்தாய் தமியேனுக்கு அருளாயே

#3409

கருள புள் கொடி சக்கர படை வான நாட என் கார் முகில் வண்ணா

பொருள் அல்லாத என்னை பொருளாக்கி அடிமைகொண்டாய்

தெருள் கொள் நான்மறை வல்லவர் பலர் வாழ் சிரீவரமங்கல நகர்க்கு

அருள்செய்து அங்கு இருந்தாய் அறியேன் ஒரு கைம்மாறே

#3410

மாறு சேர் படை நூற்றுவர் மங்க ஓர் ஐவர்க்காய் அன்று மாய போர் பண்ணி

நீறு செய்த எந்தாய் நிலம் கீண்ட அம்மானே

தேறு ஞானத்தர் வேத வேள்வி அறா சிரீவரமங்கல நகர்

ஏறி வீற்றிருந்தாய் உன்னை எங்கு எய்த கூவுவனே

#3411

எய்த கூவுதல் ஆவதே எனக்கு எவ்வ தெவ்வத்துள் ஆயுமாய் நின்று

கைதவங்கள் செய்யும் கரு மேனி அம்மானே

செய்த வேள்வியர் வையத்தேவர் அறா சிரீவரமங்கல நகர்

கைதொழ இருந்தாய் அது நானும் கண்டேனே

#3412

ஏனமாய் நிலம் கீண்ட என் அப்பனே கண்ணா என்றும் என்னை ஆளுடை

வான நாயகனே மணி மாணிக்க சுடரே

தேன மாம் பொழில் தண் சிரீவரமங்கலத்தவர் கைதொழ உறை

வானமாமலையே அடியேன் தொழ வந்தருளே

#3413

வந்தருளி என் நெஞ்சு இடம் கொண்ட வானவர் கொழுந்தே உலகுக்கு ஓர்

முந்தை தாய் தந்தையே முழு ஏழ் உலகும் உண்டாய்

செந்தொழிலவர் வேத வேள்வி அறா சிரீவரமங்கல நகர்

அந்தம் இல் புகழாய் அடியேனை அகற்றேலே

#3414

அகற்ற நீ வைத்த மாய வல் ஐம்புலன்களாம் அவை நன்கு அறிந்தனன்

அகற்றி என்னையும் நீ அரும் சேற்றில் வீழ்த்திகண்டாய்

பகல் கதிர் மணி மாடம் நீடு சிரீவரமங்கை வாணனே என்றும்

புகற்கு அரிய எந்தாய் புள்ளின் வாய் பிளந்தானே

#3415

புள்ளின் வாய் பிளந்தாய் மருது இடை போயினாய் எருது ஏழ் அடர்த்த என்

கள்ள மாயவனே கருமாணிக்க சுடரே

தெள்ளியார் திரு நான்மறைகள் வல்லார் மலி தண் சிரீவரமங்கை

யுள் இருந்த எந்தாய் அருளாய் உய்யுமாறு எனக்கே

#3416

ஆறு எனக்கு நின் பாதமே சரண் ஆக தந்து ஒழிந்தாய் உனக்கு ஓர் கைம்

மாறு நான் ஒன்று இலேன் எனது ஆவியும் உனதே

சேறு கொள் கரும்பும் பெரும் செந்நெலும் மலி தண் சிரீவரமங்கை

நாறு பூம் தண் துழாய் முடியாய் தெய்வ நாயகனே

#3417

தெய்வ நாயகன் நாரணன் திரிவிக்கிரமன் அடி இணை மிசை

கொய் கொள் பூம் பொழில் சூழ் குருகூர் சடகோபன்

செய்த ஆயிரத்துள் இவை தண் சிரீவரமங்கை மேய பத்துடன்

வைகல் பாட வல்லார் வானோர்க்கு ஆரா அமுதே

#3418

ஆரா அமுதே அடியேன் உடலம் நின்-பால் அன்பாயே

நீராய் அலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே

சீர் ஆர் செந்நெல் கவரி வீசும் செழு நீர் திருக்குடந்தை

ஏர் ஆர் கோலம் திகழ கிடந்தாய் கண்டேன் எம்மானே

#3419

எம்மானே என் வெள்ளை மூர்த்தி என்னை ஆள்வானே

எம் மா உருவும் வேண்டும் ஆற்றால் ஆவாய் எழில் ஏறே

செம் மா கமலம் செழு நீர்மிசை-கண் மலரும் திருக்குடந்தை

அம் மா மலர்-கண் வளர்கின்றானே என் நான் செய்கேனே

#3420

என் நான் செய்கேன் யாரே களைகண் என்னை என் செய்கின்றாய்

உன்னால் அல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்

கன் ஆர் மதிள் சூழ் குடந்தை கிடந்தாய் அடியேன் அரு வாழ்நாள்

செல் நாள் எ நாள் அ நாள் உன தாள் பிடித்தே செல காணே

#3421

செல காண்கிற்பார் காணும் அளவும் செல்லும் கீர்த்தியாய்

உலப்பு இலானே எல்லா உலகும் உடைய ஒரு மூர்த்தி

நலத்தால் மிக்கார் குடந்தை கிடந்தாய் உன்னை காண்பான் நான்

அலப்பாய் ஆகாசத்தை நோக்கி அழுவன் தொழுவனே

#3422

அழுவன் தொழுவன் ஆடி காண்பான் பாடி அலற்றுவன்

தழு வல்வினையால் பக்கம் நோக்கி நாணி கவிழ்ந்திருப்பன்

செழு ஒண் பழன குடந்தை கிடந்தாய் செந்தாமரை கண்ணா

தொழுவனேனை உன தாள் சேரும் வகையே சூழ்கண்டாய்

#3423

சூழ்கண்டாய் என் தொல்லை வினையை அறுத்து உன் அடி சேரும்

ஊழ் கண்டிருந்தே தூரா குழி தூர்த்து எனை நாள் அகன்று இருப்பன்

வாழ் தொல் புகழார் குடந்தை கிடந்தாய் வானோர் கோமானே

யாழின் இசையே அமுதே அறிவின் பயனே அரி ஏறே

#3424

அரி ஏறே என் அம் பொன் சுடரே செம் கண் கரு முகிலே

எரி ஏய் பவள குன்றே நால் தோள் எந்தாய் உனது அருளே

பிரியா அடிமை என்னை கொண்டாய் குடந்தை திருமாலே

தரியேன் இனி உன் சரணம் தந்து என் சன்மம் களையாயே

#3425

களைவாய் துன்பம் களையாது ஒழிவாய் களைகண் மற்று இலேன்

வளை வாய் நேமி படையாய் குடந்தை கிடந்த மா மாயா

தளரா உடலம் எனது ஆவி சரிந்து போம்-போது

இளையாது உன தாள் ஒருங்க பிடித்து போத இசை நீயே

#3426

இசைவித்து என்னை உன் தாள் இணை கீழ் இருத்தும் அம்மானே

அசைவு இல் அமரர் தலைவர் தலைவா ஆதி பெரு மூர்த்தி

திசை வில் வீசும் செழு மா மணிகள் சேரும் திருக்குடந்தை

அசைவு இல் உலகம் பரவ கிடந்தாய் காண வாராயே

#3427

வாரா அருவாய் வரும் என் மாயா மாயா மூர்த்தியாய்

ஆரா அமுதாய் அடியேன் ஆவி அகமே தித்திப்பாய்

தீரா வினைகள் தீர என்னை ஆண்டாய் திருக்குடந்தை

ஊராய் உனக்கு ஆள் பட்டும் அடியேன் இன்னம் உழல்வேனோ

#3428

உழலை என்பில் பேய்ச்சி முலையூடு அவளை உயிர் உண்டான்

கழல்கள் அவையே சரண் ஆக கொண்ட குருகூர் சடகோபன்

குழலின் மலிய சொன்ன ஓர் ஆயிரத்துள் இ பத்தும்

மழலை தீர வல்லார் காமர் மான் ஏய் நோக்கியர்க்கே

#3429

மான் ஏய் நோக்கு நல்லீர் வைகலும் வினையேன் மெலிய

வான் ஆர் வண் கமுகும் மது மல்லிகை கமழும்

தேன் ஆர் சோலைகள் சூழ் திருவல்லவாழ் உறையும்

கோனாரை அடியேன் அடிகூடுவது என்று-கொலோ

#3430

என்று-கொல் தோழிமீர்காள் எம்மை நீர் நலிந்து என் செய்தீரோ

பொன் திகழ் புன்னை மகிழ் புது மாதவி மீது அணவி

தென்றல் மணம் கமழும் திருவல்லவாழ் நகருள்

நின்ற பிரான் அடிநீறு அடியோம் கொண்டு சூடுவதே

#3431

சூடு மலர் குழலீர் துயராட்டியேன் மெலிய

பாடும் நல் வேத ஒலி பரவை திரை போல் முழங்க

மாடு உயர்ந்து ஓம புகை கமழும் தண் திருவல்லவாழ்

நீடு உறைகின்ற பிரான் கழல் காண்டும்-கொல் நிச்சலுமே

#3432

நிச்சலும் தோழிமீர்காள் எம்மை நீர் நலிந்து என் செய்தீரோ

பச்சிலை நீள் கமுகும் பலவும் தெங்கும் வாழைகளும்

மச்சு அணி மாடங்கள் மீது அணவும் தண் திருவல்லவாழ்

நச்சு அரவின் அணை மேல் நம்பிரானது நல் நலமே

#3433

நல் நல தோழிமீர்காள் நல்ல அந்தணர் வேள்வி புகை

மை நலம் கொண்டு உயர் விண் மறைக்கும் தண் திருவல்லவாழ்

கன்னல் அம் கட்டி தன்னை கனியை இன் அமுதம்-தன்னை

என் நலம் கொள் சுடரை என்று-கொல் கண்கள் காண்பதுவே

#3434

காண்பது எஞ்ஞான்று-கொலோ வினையேன் கனிவாய் மடவீர்

பாண் குரல் வண்டினொடு பசும் தென்றலும் ஆகி எங்கும்

சேண் சினை ஓங்கு மர செழும் கானல் திருவல்லவாழ்

மாண் குறள் கோல பிரான் மலர் தாமரை பாதங்களே

#3435

பாதங்கள் மேல் அணி பூம் தொழ கூடும்-கொல் பாவை நல்லீர்

ஓத நெடும் தடத்துள் உயர் தாமரை செங்கழுநீர்

மாதர்கள் வாள் முகமும் கண்ணும் ஏந்தும் திருவல்லவாழ்

நாதன் இ ஞாலம் உண்ட நம் பிரான் தன்னை நாள்-தொறுமே

#3436

நாள்-தொறும் வீடு இன்றியே தொழ கூடும்-கொல் நல் நுதலீர்

ஆடு உறு தீம் கரும்பும் விளை செந்நெலும் ஆகி எங்கும்

மாடு உறு பூம் தடம் சேர் வயல் சூழ் தண் திருவல்லவாழ்

நீடு உறைகின்ற பிரான் நிலம் தாவிய நீள் கழலே

#3437

கழல் வளை பூரிப்ப யாம் கண்டு கைதொழ கூடும்-கொலோ

குழல் என்ன யாழும் என்ன குளிர் சோலையுள் தேன் அருந்தி

மழலை வரி வண்டுகள் இசை பாடும் திருவல்லவாழ்

சுழலின் மலி சக்கர பெருமானது தொல் அருளே

#3438

தொல் அருள் நல்வினையால் சொல கூடும்-கொல் தோழிமீர்காள்

தொல் அருள் மண்ணும் விண்ணும் தொழ நின்ற திருநகரம்

நல் அருள் ஆயிரவர் நலன் ஏந்தும் திருவல்லவாழ்

நல் அருள் நம் பெருமான் நாராயணன் நாமங்களே

#3439

நாமங்கள் ஆயிரம் உடைய நம் பெருமான் அடி மேல்

சேமம் கொள் தென் குருகூர் சடகோபன் தெரிந்து உரைத்த

நாமங்கள் ஆயிரத்துள் இவை பத்தும் திருவல்லவாழ்

சேமம் கொள் தென் நகர் மேல் செப்புவார் சிறந்தார் பிறந்தே

#3440

பிறந்த ஆறும் வளர்ந்த ஆறும் பெரிய பாரதம் கைசெய்து ஐவர்க்கு

திறங்கள் காட்டியிட்டு செய்து போன மாயங்களும்

நிறம் தன் ஊடு புக்கு எனது ஆவியை நின்று நின்று உருக்கி உண்கின்ற இ

சிறந்த வான் சுடரே உன்னை என்று-கொல் சேர்வதுவே

#3441

வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும் மாய மாவினை வாய் பிளந்ததும்

மதுவை வார் குழலார் குரவை பிணைந்த குழகும்

அது இது உது என்னலாவன அல்ல என்னை உன் செய்கை நைவிக்கும்

முது வைய முதல்வா உன்னை என்று தலைப்பெய்வனே

#3442

பெய்யும் பூம் குழல் பேய் முலை உண்ட பிள்ளை தேற்றமும்

பேர்ந்து ஓர் சாடு இற

செய்ய பாதம் ஒன்றால் செய்த நின் சிறு சேவகமும்

நெய் உண் வார்த்தையுள் அன்னை கோல் கொள்ள நீ உன்

தாமரை கண்கள் நீர் மல்க

பையவே நிலையும் வந்து என் நெஞ்சை உருக்குங்களே

#3443

கள்ள வேடத்தை கொண்டு போய் புரம் புக்க ஆறும் கலந்து

அசுரரை

உள்ளம் பேதம் செய்திட்டு உயிர் உண்ட உபாயங்களும்

வெள்ள நீர் சடையானும் நின்னிடை வேறு அலாமை விளங்க

நின்றதும்

உள்ளம் உள் குடைந்து என் உயிரை உருக்கி உண்ணுமே

#3444

உண்ண வானவர் கோனுக்கு ஆயர் ஒருப்படுத்த அடிசில்

உண்டதும்

வண்ண மால் வரையை எடுத்து மழை காத்தலும்

மண்ணை முன் படைத்து உண்டு உமிழ்ந்து கடந்து இடந்து

மணந்த மாயங்கள்

எண்ணும்-தோறும் என் நெஞ்சு எரிவாய் மெழுகு ஒக்கும் நின்றே

#3445

நின்ற ஆறும் இருந்த ஆறும் கிடந்த ஆறும் நினைப்பு அரியன

ஒன்று அலா உருவாய் அருவாய நின் மாயங்கள்

நின்று நின்று நினைக்கின்றேன் உன்னை எங்ஙனம் நினைகிற்பன் பாவியேற்கு

ஒன்று நன்கு உரையாய் உலகம் உண்ட ஒண் சுடரே

#3446

ஒண் சுடரோடு இருளுமாய் நின்ற ஆறும் உண்மையோடு இன்மையாய் வந்து என்

கண் கொளா வகை நீ கரந்து என்னை செய்கின்றன

எண் கொள் சிந்தையுள் நைகின்றேன் என் கரிய மாணிக்கமே என் கண்கட்கு

திண் கொள்ள ஒரு நாள் அருளாய் உன் திரு உருவே

#3447

திருவுருவு கிடந்த ஆறும் கொப்பூழ் செந்தாமரை மேல் திசைமுகன்

கருவுள் வீற்றிருந்து படைத்திட்ட கருமங்களும்

பொரு இல் உன் தனி நாயகம் அவை கேட்கும்-தோறும் என் நெஞ்சம் நின்று நெக்கு

அருவி சோரும் கண்ணீர் என் செய்கேன் அடியேனே

#3448

அடியை மூன்றை இரந்த ஆறும் அங்கே நின்று ஆழ் கடலும் மண்ணும் விண்ணும்

முடிய ஈர் அடியால் முடித்துக்கொண்ட முக்கியமும்

நொடியுமாறு அவை கேட்கும்-தோறும் என் நெஞ்சம் நின் தனக்கே கரைந்து உகும்

கொடிய வல்வினையேன் உன்னை என்று-கொல் கூடுவதே

#3449

கூடி நீரை கடைந்த ஆறும் அமுதம் தேவர் உண்ண அசுரரை

வீடும் வண்ணங்களே செய்து போன வித்தகமும்

ஊடு புக்கு எனது ஆவியை உருக்கி உண்டிடுகின்ற நின்-தன்னை

நாடும் வண்ணம் சொல்லாய் நச்சு நாகு அணையானே

#3450

நாகு அணை மிசை நம் பிரான் சரணே சரண் நமக்கு என்று நாள்-தொறும்

ஏக சிந்தையனாய் குருகூர் சடகோபன் மாறன்

ஆக நூற்ற அந்தாதி ஆயிரத்துள் இவையும் ஓர் பத்தும் வல்லார்

மாக வைகுந்தத்து மகிழ்வு எய்துவர் வைகலுமே

#3451

வைகல் பூம் கழிவாய் வந்து மேயும் குருகினங்காள்

செய் கொள் செந்நெல் உயர் திருவண்வண்டூர் உறையும்

கை கொள் சக்கரத்து என் கனி வாய் பெருமானை கண்டு

கைகள் கூப்பி சொல்லீர் வினையாட்டியேன் காதன்மையே

#3452

காதல் மென் பெடையோடு உடன் மேயும் கரு நாராய்

வேத வேள்வி ஒலி முழங்கும் தண் திருவண்வண்டூர்

நாதன் ஞாலம் எல்லாம் உண்ட நம் பெருமானை கண்டு

பாதம் கைதொழுது பணியீர் அடியேன் திறமே

#3453

திறங்கள் ஆகி எங்கும் செய்கள் ஊடு உழல் புள் இனங்காள்

சிறந்த செல்வம் மல்கு திருவண்வண்டூர் உறையும்

கறங்கு சக்கர கை கனி வாய் பெருமானை கண்டு

இறங்கி நீர் தொழுது பணியீர் அடியேன் இடரே

#3454

இடர் இல் போகம் மூழ்கி இணைந்து ஆடும் மட அன்னங்காள்

விடல் இல் வேத ஒலி முழங்கும் தண் திருவண்வண்டூர்

கடலின் மேனி பிரான் கண்ணனை நெடுமாலை கண்டு

உடலம் நைந்து ஒருத்தி உருகும் என்று உணர்த்து-மினே

#3455

உணர்த்தல் ஊடல் உணர்ந்து உடன் மேயும் மட அன்னங்காள்

திணர்த்த வண்டல்கள் மேல் சங்கு சேரும் திருவண்வண்டூர்

புணர்த்த பூம் தண் துழாய் முடி நம் பெருமானை கண்டு

புணர்த்த கையினராய் அடியேனுக்கும் போற்று-மினே

#3456

போற்றி யான் இரந்தேன் புன்னை மேல் உறை பூம் குயில்காள்

சேற்றில் வாளை துள்ளும் திருவண்வண்டூர் உறையும்

ஆற்றல் ஆழி அங்கை அமரர் பெருமானை கண்டு

மாற்றம் கொண்டருளீர் மையல் தீர்வது ஒரு வண்ணமே

#3457

ஒரு வண்ணம் சென்று புக்கு எனக்கு ஒன்று உரை ஒண் கிளியே

செரு ஒண் பூம் பொழில் சூழ் செக்கர் வேலை திருவண்வண்டூர்

கரு வண்ணம் செய்ய வாய் செய்ய கண் செய்ய கை செய்ய கால்

செரு ஒண் சக்கரம் சங்கு அடையாளம் திருந்த கண்டே

#3458

திருந்த கண்டு எனக்கு ஒன்று உரையாய் ஒண் சிறு பூவாய்

செருந்தி ஞாழல் மகிழ் புன்னை சூழ் தண் திருவண்வண்டூர்

பெரும் தண் தாமரை கண் பெரு நீள் முடி நால் தடம் தோள்

கரும் திண் மா முகில் போல் திருமேனி அடிகளையே

#3459

அடிகள் கைதொழுது அலர் மேல் அசையும் அன்னங்காள்

விடிவை சங்கு ஒலிக்கும் திருவண்வண்டூர் உறையும்

கடிய மாயன்-தன்னை கண்ணனை நெடுமாலை கண்டு

கொடிய வல்வினையேன் திறம் கூறு-மின் வேறுகொண்டே

#3460

வேறுகொண்டு உம்மை யான் இரந்தேன் வெறி வண்டினங்காள்

தேறு நீர் பம்பை வட-பாலை திருவண்வண்டூர்

மாறு இல் போர் அரக்கன் மதிள் நீறு எழ செற்று உகந்த

ஏறு சேவகனார்க்கு என்னையும் உளள் என்-மின்களே

#3461

மின் கொள் சேர் புரி நூல் குறளாய் அகல் ஞாலம் கொண்ட

வன் கள்வன் அடி மேல் குருகூர் சடகோபன் சொன்ன

பண் கொள் ஆயிரத்துள் இவை பத்தும் திருவண்வண்டூர்க்கு

இன் கொள் பாடல் வல்லார் மதனர் மின்னிடையவர்க்கே

#3462

மின் இடை மடவார்கள் நின் அருள் சூடுவார் முன்பு நான் அது அஞ்சுவன்

மன் உடை இலங்கை அரண் காய்ந்த மாயவனே

உன்னுடைய சுண்டாயம் நான் அறிவன் இனி அது-கொண்டு செய்வது என்

என்னுடைய பந்தும் கழலும் தந்து போகு நம்பீ

#3463

போகு நம்பீ உன் தாமரை புரை கண் இணையும் செ வாய் முறுவலும்

ஆகுலங்கள் செய்ய அழிதற்கே நோற்றோமே யாம்

தோகை மா மயிலார்கள் நின் அருள் சூடுவார் செவி ஓசை வைத்து எழ

ஆகள் போகவிட்டு குழல் ஊது போயிருந்தே

#3464

போயிருந்து நின் புள்ளுவம் அறியாதவர்க்கு உரை நம்பீ நின் செய்ய

வாய் இரும் கனியும் கண்களும் விபரீதம் இ நாள்

வேய் இரும் தடம் தோளினார் இ திருவருள் பெறுவார் எவர்-கொல்

மா இரும் கடலை கடைந்த பெருமானாலே

#3465

ஆலின் நீள் இலை ஏழ் உலகும் உண்டு அன்று நீ கிடந்தாய் உன் மாயங்கள்

மேலை வானவரும் அறியார் இனி எம் பரமே

வேலின் நேர் தடம் கண்ணினார் விளையாடு சூழலை சூழவே நின்று

காலி மேய்க்க வல்லாய் எம்மை நீ கழறேலே

#3466

கழறேல் நம்பீ உன் கைதவம் மண்ணும் விண்ணும் நன்கு அறியும் திண் சக்கர

நிழறு தொல் படையாய் உனக்கு ஒன்று உணர்த்துவன் நான்

மழறு தேன் மொழியார்கள் நின் அருள் சூடுவார் மனம் வாடி நிற்க எம்

குழறு பூவையொடும் கிளியோடும் குழகேலே

#3467

குழகி எங்கள் குழமணன்-கொண்டு கோயின்மை செய்து கன்மம் ஒன்று இல்லை

பழகி யாம் இருப்போம் பரமே இ திருவருள்கள்

அழகியார் இ உலகம் மூன்றுக்கும் தேவிமை ஈதகுவார் பலர் உளர்

கழகம் ஏறேல் நம்பீ உனக்கும் இளைதே கன்மமே

#3468

கன்மம் அன்று எங்கள் கையில் பாவை பறிப்பது கடல் ஞாலம் உண்டிட்ட

நின்மலா நெடியாய் உனக்கேலும் பிழை பிழையே

வன்மமே சொல்லி எம்மை நீ விளையாடுதி அது கேட்கில் என் ஐம்மார்

தன்ம பாவம் என்னார் ஒரு நான்று தடி பிணக்கே

#3469

பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமல் பேதித்தும்

பேதியாதது ஓர்

கணக்கு இல் கீர்த்தி வெள்ள கதிர் ஞான மூர்த்தியினாய்

இணக்கி எம்மை எம் தோழிமார் விளையாட போது-மின் என்ன

போந்தோமை

உணக்கி நீ வளைத்தால் என் சொல்லார் உகவாதவரே

#3470

உகவையால் நெஞ்சம் உள் உருகி உன் தாமரை தடம் கண்

விழிகளின்

அக வலை படுப்பான் அழித்தாய் உன் திருவடியால்

தகவு செய்திலை எங்கள் சிற்றிலும் யாம் அடு சிறு சோறும்

கண்டு நின்

முக ஒளி திகழ முறுவல் செய்து நின்றிலையே

#3471

நின்று இலங்கு முடியினாய் இருபத்தோர் கால் அரசு களைகட்ட

வென்றி நீள் மழுவா வியன் ஞாலம் முன் படைத்தாய்

இன்று இ ஆயர் குலத்தை வீடு உய்ய தோன்றிய கருமாணிக்க சுடர்

நின்-தன்னால் நலிவே படுவோம் என்றும் ஆய்ச்சியோமே

#3472

ஆய்ச்சி ஆகிய அன்னையால் அன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்ற முண்டு அழு

கூத்த அப்பன் தன்னை குருகூர் சடகோபன்

ஏத்திய தமிழ் மாலை ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து இசையொடும்

நா-தன்னால் நவில உரைப்பார்க்கு இல்லை நல்குரவே

#3473

நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்

வெல் பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்

பல்வகையும் பரந்த பெருமான் என்னை ஆள்வானை

செல்வம் மல்கு குடி திருவிண்ணகர் கண்டேனே

#3474

கண்ட இன்பம் துன்பம் கலக்கங்களும் தேற்றமுமாய்

தண்டமும் தண்மையும் தழலும் நிழலுமாய்

கண்டுகோடற்கு அரிய பெருமான் என்னை ஆள்வான் ஊர்

தெண் திரை புனல் சூழ் திருவிண்ணகர் நல் நகரே

#3475

நகரமும் நாடுகளும் ஞானமும் மூடமுமாய்

நிகர் இல் சூழ் சுடராய் இருளாய் நிலனாய் விசும்பாய்

சிகர மாடங்கள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த பிரான்

புகர் கொள் கீர்த்தி அல்லால் இல்லை யாவர்க்கும் புண்ணியமே

#3476

புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவு என்று இவையாய்

எண்ணமாய் மறப்பாய் உண்மையாய் இன்மையாய் அல்லனாய்

திண்ண மாடங்கள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த பிரான்

கண்ணன் இன் அருளே கண்டுகொள்-மின்கள் கைதவமே

#3477

கைதவம் செம்மை கருமை வெளுமையுமாய்

மெய் பொய் இளமை முதுமை புதுமை பழமையுமாய்

செய்த திண் மதிள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த பிரான்

பெய்த காவு கண்டீர் பெரும் தேவு உடை மூ உலகே

#3478

மூ உலகங்களுமாய் அல்லனாய் உகப்பாய் முனிவாய்

பூவில் வாழ் மகளாய் தவ்வையாய் புகழாய் பழியாய்

தேவர் மேவி தொழும் திருவிண்ணகர் சேர்ந்த பிரான்

பாவியேன் மனத்தே உறைகின்ற பரஞ்சுடரே

#3479

பரஞ்சுடர் உடம்பாய் அழுக்கு பதித்த உடம்பாய்

கரந்தும் தோன்றியும் நின்றும் கைதவங்கள் செய்தும் விண்ணோர்

சிரங்களால் வணங்கும் திருவிண்ணகர் சேர்ந்த பிரான்

வரம் கொள் பாதம் அல்லால் இல்லை யாவர்க்கும் வன் சரணே

#3480

வன் சரண் சுரர்க்காய் அசுரர்க்கு வெம் கூற்றமுமாய்

தன் சரண் நிழல் கீழ் உலகம் வைத்தும் வையாதும்

தென் சரண் திசைக்கு திருவிண்ணகர் சேர்ந்த பிரான்

என் சரண் என் கண்ணன் என்னை ஆளுடை என் அப்பனே

#3481

என் அப்பன் எனக்காய் இகுளாய் என்னை பெற்றவளாய்

பொன் அப்பன் மணி அப்பன் முத்து அப்பன் என் அப்பனுமாய்

மின்ன பொன் மதிள் சூழ் திருவிண்ணகர் சேர்ந்த அப்பன்

தன் ஒப்பார் இல் அப்பன் தந்தனன் தன தாள் நிழலே

#3482

நிழல் வெய்யில் சிறுமை பெருமை குறுமை நெடுமையுமாய்

சுழல்வன நிற்பன மற்றுமாய் அவை அல்லனுமாய்

மழலை வாய் வண்டு வாழ் திருவிண்ணகர் மன்னு பிரான்

கழல்கள் அன்றி மற்றோர் களைகண் இலம் காண்-மின்களே

#3483

காண்-மின்கள் உலகீர் என்று கண்முகப்பே நிமிர்ந்த

தாள் இணையன் தன்னை குருகூர் சடகோபன் சொன்ன

ஆணை ஆயிரத்து திருவிண்ணகர் பத்தும் வல்லார்

கோணை இன்றி விண்ணோர்க்கு என்றும் ஆவர் குரவர்களே

#3484

குரவை ஆய்ச்சியரோடு கோத்ததும் குன்றம் ஒன்று ஏந்தியதும்

உரவு நீர் பொய்கை நாகம் காய்ந்ததும் உட்பட மற்றும் பல

அரவில் பள்ளி பிரான் தன் மாய வினைகளையே அலற்றி

இரவும் நன் பகலும் தவிர்கிலன் என்ன குறை எனக்கே

#3485

கேய தீம் குழல் ஊதிற்றும் நிரை மேய்த்ததும் கெண்டை ஒண் கண்

வாச பூம் குழல் பின்னை தோள்கள் மணந்ததும் மற்றும் பல

மாய கோல பிரான் தன் செய்கை நினைந்து மனம் குழைந்து

நேயத்தோடு கழிந்த-போது எனக்கு எ உலகம் நிகரே

#3486

நிகர் இல் மல்லரை செற்றதும் நிரை மேய்த்ததும் நீள் நெடும் கை

சிகர மா களிறு அட்டதும் இவை போல்வனவும் பிறவும்

புகர் கொள் சோதி பிரான் தன் செய்கை நினைந்து புலம்பி என்றும்

நுகர வைகல் வைகப்பெற்றேன் எனக்கு என் இனி நோவதுவே

#3487

நோவ ஆய்ச்சி உரலோடு ஆர்க்க இரங்கிற்றும் வஞ்ச பெண்ணை

சாவ பால் உண்டதும் ஊர் சகடம் இற சாடியதும்

தேவ கோல பிரான் தன் செய்கை நினைந்து மனம் குழைந்து

மேவ காலங்கள் கூடினேன் எனக்கு என் இனி வேண்டுவதே

#3488

வேண்டி தேவர் இரக்க வந்து பிறந்ததும் வீங்கு இருள்வாய்

பூண்டு அன்று அன்னை புலம்ப போய் அங்கு ஓர் ஆய் குலம் புக்கதும்

காண்டல் இன்றி வளர்ந்து கஞ்சனை துஞ்ச வஞ்சம் செய்ததும்

ஈண்டு நான் அலற்றப்பெற்றேன் எனக்கு என்ன இகல் உளதே

#3489

இகல் கொள் புள்ளை பிளந்ததும் இமில் ஏறுகள் செற்றதுவும்

உயர் கொள் சோலை குருந்து ஒசித்ததும் உட்பட மற்றும் பல

அகல் கொள் வையம் அளந்த மாயன் என் அப்பன் தன் மாயங்களே

பகல் இரா பரவ பெற்றேன் எனக்கு என்ன மன பரிப்பே

#3490

மன பரிப்போடு அழுக்கு மானிட சாதியில் தான் பிறந்து

தனக்கு வேண்டு உரு கொண்டு தான் தன சீற்றத்தினை முடிக்கும்

புன துழாய் முடி மாலை மார்பன் என் அப்பன் தன் மாயங்களே

நினைக்கும் நெஞ்சு உடையேன் எனக்கு இனி யார் நிகர் நீள் நிலத்தே

#3491

நீள் நிலத்தொடு வான் வியப்ப நிறை பெரும் போர்கள் செய்து

வாணன் ஆயிரம் தோள் துணித்ததும் உட்பட மற்றும் பல

மாணியாய் நிலம் கொண்ட மாயன் என் அப்பன் தன் மாயங்களே

காணும் நெஞ்சு உடையேன் எனக்கு இனி என்ன கலக்கம் உண்டே

#3492

கலக்க ஏழ் கடல் ஏழ் மலை உலகு ஏழும் கழிய கடாய்

உலக்க தேர் கொடு சென்ற மாயமும் உட்பட மற்றும் பல

வலக்கை ஆழி இடக்கை சங்கம் இவை உடை மால் வண்ணனை

மலக்கும் நா உடையேற்கு மாறு உளதோ இ மண்ணின் மிசையே

#3493

மண் மிசை பெரும் பாரம் நீங்க ஓர் பாரத மா பெரும் போர்

பண்ணி மாயங்கள் செய்து சேனையை பாழ்பட நூற்றிட்டு போய்

விண் மிசை தன தாமமே புக மேவிய சோதி-தன் தாள்

நண்ணி நான் வணங்கப்பெற்றேன் எனக்கு ஆர் பிறர் நாயகரே

#3494

நாயகன் முழு ஏழ் உலகுக்குமாய் முழு ஏழ் உலகும் தன்

வாயகம் புக வைத்து உமிழ்ந்து அவையாய் அவை அல்லனும் ஆம்

கேசவன் அடி இணை மிசை குருகூர் சடகோபன் சொன்ன

தூய ஆயிரத்து இ பத்தால் பத்தர் ஆவர் துவள் இன்றியே

#3495

துவள் இல் மா மணி மாடம் ஓங்கு தொலைவில்லிமங்கலம் தொழும்

இவளை நீர் இனி அன்னைமீர் உமக்கு ஆசை இல்லை விடு-மினோ

தவள ஒண் சங்கு சக்கரம் என்றும் தாமரை தடம் கண் என்றும்

குவளை ஒண் மலர் கண்கள் நீர் மல்க நின்று நின்று குமுறுமே

#3496

குமுறும் ஓசை விழவு ஒலி தொலைவில்லிமங்கலம் கொண்டு புக்கு

அமுத மென் மொழியாளை நீர் உமக்கு ஆசை இன்றி அகற்றினீர்

திமிர் கொண்டால் ஒத்து நிற்கும் மற்று இவள் தேவதேவபிரான் என்றே

நிமியும் வாயொடு கண்கள் நீர் மல்க நெக்கு ஒசிந்து கரையுமே

#3497

கரை கொள் பைம் பொழில் தண் பணை தொலைவில்லிமங்கலம் கொண்டு புக்கு

உரை கொள் இன் மொழியாளை நீர் உமக்கு ஆசை இன்றி அகற்றினீர்

திரை கொள் பௌவத்து சேர்ந்ததும் திசை ஞாலம் தாவி அளந்ததும்

நிரைகள் மேய்த்ததுமே பிதற்றி நெடும் கண் நீர் மல்க நிற்குமே

#3498

நிற்கும் நால்மறை வாணர் வாழ் தொலைவில்லிமங்கலம் கண்ட பின்

அற்கம் ஒன்றும் அற உறாள் மலிந்தாள் கண்டீர் இவள் அன்னைமீர்

கற்கும் கல்வி எல்லாம் கரும் கடல் வண்ணன் கண்ணபிரான் என்றே

ஒற்கம் ஒன்றும் இலள் உகந்து உகந்து உள் மகிழ்ந்து குழையுமே

#3499

குழையும் வாள் முகத்து ஏழையை தொலைவில்லிமங்கலம் கொண்டு புக்கு

இழை கொள் சோதி செந்தாமரை கண் பிரான் இருந்தமை காட்டினீர்

மழை பெய்தால் ஒக்கும் கண்ண நீரினொடு அன்று-தொட்டும் மையாந்து இவள்

நுழையும் சிந்தையள் அன்னைமீர் தொழும் அ திசை உற்று நோக்கியே

#3500

நோக்கும் பக்கம் எல்லாம் கரும்பொடு செந்நெல் ஓங்கு செந்தாமரை

வாய்க்கும் தண் பொருநல் வடகரை வண் தொலைவில்லிமங்கலம்

நோக்குமேல் அ திசை அல்லால் மறு நோக்கு இலள் வைகல் நாள்-தொறும்

வாய்க்கொள் வாசகமும் மணி வண்ணன் நாமமே இவள் அன்னைமீர்

#3501

அன்னைமீர் அணி மா மயில் சிறு மான் இவள் நம்மை கைவலிந்து

என்ன வார்த்தையும் கேட்குறாள் தொலைவில்லிமங்கலம் என்று அல்லால்

முன்னம் நோற்ற விதி-கொலோ முகில் வண்ணன் மாயம்-கொலோ அவன்

சின்னமும் திருநாமமும் இவள் வாயனகள் திருந்தவே

#3502

திருந்து வேதமும் வேள்வியும் திரு மா மகளிரும் தாம் மலிந்து

இருந்து வாழ் பொருநல் வடகரை வண் தொலைவில்லிமங்கலம்

கரும் தடம் கண்ணி கைதொழுத அ நாள் தொடங்கி இ நாள்-தொறும்

இருந்து இருந்து அரவிந்தலோசன என்று என்றே நைந்து இரங்குமே

#3503

இரங்கி நாள்-தொறும் வாய் வெரீஇ இவள் கண்ண நீர்கள் அலமர

மரங்களும் இரங்கும் வகை மணி வண்ணவோ என்று கூவுமால்

துரங்கம் வாய் பிளந்தான் உறை தொலைவில்லிமங்கலம் என்று தன்

கரங்கள் கூப்பி தொழும் அ ஊர் திருநாமம் கற்றதன் பின்னையே

#3504

பின்னை-கொல் நில மா மகள்-கொல் திருமகள்-கொல் பிறந்திட்டாள்

என்ன மாயம்-கொலோ இவள் நெடுமால் என்றே நின்று கூவுமால்

முன்னி வந்து அவன் நின்று இருந்து உறையும் தொலைவில்லிமங்கலம்

சென்னியால் வணங்கும் அ ஊர் திருநாமம் கேட்பது சிந்தையே

#3505

சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே

தந்தை தாய் என்று அடைந்த வண் குருகூரவர் சடகோபன்

முந்தை ஆயிரத்துள் இவை தொலை வில்லிமங்கலத்தை சொன்ன

செந்தமிழ் பத்தும் வல்லார் அடிமைசெய்வார் திருமாலுக்கே

#3506

மாலுக்கு வையம் அளந்த மணாளற்கு

நீல கரு நிற மேக நியாயற்கு

கோல செந்தாமரை கண்ணற்கு என் கொங்கு அலர்

ஏல குழலி இழந்தது சங்கே

#3507

சங்கு வில் வாள் தண்டு சக்கர கையற்கு

செம் கனி வாய் செய்ய தாமரை கண்ணற்கு

கொங்கு அலர் தண் அம் துழாய் முடியானுக்கு என்

மங்கை இழந்தது மாமை நிறமே

#3508

நிறம் கரியானுக்கு நீடு உலகு உண்ட

திறம் கிளர் வாய் சிறு கள்வன் அவற்கு

கறங்கிய சக்கர கையவனுக்கு என்

பிறங்கு இரும் கூந்தல் இழந்தது பீடே

#3509

பீடு உடை நான்முகனை படைத்தானுக்கு

மாடு உடை வையம் அளந்த மணாளற்கு

நாடு உடை மன்னர்க்கு தூது செல் நம்பிக்கு என்

பாடு உடை அல்குல் இழந்தது பண்பே

#3510

பண்பு உடை வேதம் பயந்த பரனுக்கு

மண் புரை வையம் இடந்த வராகற்கு

தெண் புனல் பள்ளி எம் தேவபிரானுக்கு என்

கண் புனை கோதை இழந்தது கற்பே

#3511

கற்பக கா அன நல் பல தோளற்கு

பொன் சுடர் குன்று அன்ன பூம் தண் முடியற்கு

நல் பல தாமரை நாள்மலர் கையற்கு என்

வில் புருவ கொடி தோற்றது மெய்யே

#3512

மெய் அமர் பல் கலன் நன்கு அணிந்தானுக்கு

பை அரவின் அணை பள்ளியினானுக்கு

கையொடு கால் செய்ய கண்ணபிரானுக்கு என்

தையல் இழந்தது தன்னுடை சாயே

#3513

சாய குருந்தம் ஒசித்த தமியற்கு

மாய சகடம் உதைத்த மணாளற்கு

பேயை பிணம்பட பால் உண் பிரானுக்கு என்

வாச குழலி இழந்தது மாண்பே

#3514

மாண்பு அமை கோலத்து எம் மாய குறளற்கு

சேண் சுடர் குன்று அன்ன செம் சுடர் மூர்த்திக்கு

காண் பெரும் தோற்றத்து எம் காகுத்தநம்பிக்கு என்

பூண் புனை மென் முலை தோற்றது பொற்பே

#3515

பொற்பு அமை நீள் முடி பூம் தண் துழாயற்கு

மல் பொரு தோள் உடை மாய பிரானுக்கு

நிற்பன பல் உருவாய் நிற்கும் மாயற்கு என்

கற்பு உடையாட்டி இழந்தது கட்டே

#3516

கட்டு எழில் சோலை நல் வேங்கட வாணனை

கட்டு எழில் தென் குருகூர் சடகோபன் சொல்

கட்டு எழில் ஆயிரத்து இ பத்தும் வல்லவர்

கட்டு எழில் வானவர் போகம் உண்பாரே

#3517

உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம்

கண்ணன் எம் பெருமான் என்று என்றே கண்கள் நீர் மல்கி

மண்ணினுள் அவன் சீர் வளம் மிக்கவன் ஊர் வினவி

திண்ணம் என் இள மான் புகும் ஊர் திருக்கோளூரே

#3518

ஊரும் நாடும் உலகமும் தன்னை போல் அவனுடைய

பேரும் தார்களுமே பிதற்ற கற்பு வான் இடறி

சேரும் நல் வளம் சேர் பழன திருக்கோளூர்க்கே

போரும்-கொல் உரையீர் கொடியேன் கொடி பூவைகளே

#3519

பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம் புட்டில்கள்

யாவையும் திருமால் திருநாமங்களே கூவி எழும் என்

பாவை போய் இனி தண் பழன திருக்கோளூர்க்கே

கோவை வாய் துடிப்ப மழை கண்ணொடு என் செய்யும்-கொலோ

#3520

கொல்லை என்பர்-கொலோ குணம் மிக்கனள் என்பர்-கொலோ

சில்லை வாய் பெண்டுகள் அயல் சேரி உள்ளாரும் எல்லே

செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே

மேல் இடை நுடங்க இள மான் செல்ல மேவினளே

#3521

மேவி நைந்து நைந்து விளையாடலுறாள் என் சிறு

தேவி போய் இனி தன் திருமால் திருக்கோளூரில்

பூ இயல் பொழிலும் தடமும் அவன் கோயிலும் கண்டு

ஆவி உள் குளிர எங்ஙனே உகக்கும்-கொல் இன்றே

#3522

இன்று எனக்கு உதவாது அகன்ற இள மான் இனி போய்

தென் திசை திலதம் அனைய திருக்கோளூர்க்கே

சென்று தன் திருமால் திருக்கண்ணும் செ வாயும் கண்டு

நின்று நின்று நையும் நெடும் கண்கள் பனி மல்கவே

#3523

மல்கு நீர் கண்ணொடு மையல் உற்ற மனத்தினளாய்

அல்லும் நன் பகலும் நெடுமால் என்று அழைத்து இனி போய்

செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே

ஒல்கிஒல்கி நடந்து எங்ஙனே புகும்-கொல் ஒசிந்தே

#3524

ஒசிந்த நுண் இடை மேல் கையை வைத்து நொந்துநொந்து

கசிந்த நெஞ்சினளாய் கண்ண நீர் துளும்ப செல்லும்-கொல்

ஒசிந்த ஒண் மலராள் கொழுநன் திருக்கோளூர்க்கே

கசிந்த நெஞ்சினளாய் எம்மை நீத்த எம் காரிகையே

#3525

காரியம் நல்லனகள் அவை காணில் என் கண்ணனுக்கு என்று

ஈரியாய் இருப்பாள் இது எல்லாம் கிடக்க இனி போய்

சேரி பல் பழி தூஉய் இரைப்ப திருக்கோளூர்க்கே

நேர் இழை நடந்தாள் எம்மை ஒன்றும் நினைந்திலளே

#3526

நினைக்கிலேன் தெய்வங்காள் நெடும் கண் இள மான் இனி போய்

அனைத்து உலகும் உடைய அரவிந்தலோசனனை

தினைத்தனையும் விடாள் அவன் சேர் திருக்கோளூர்க்கே

மனைக்கு வான் பழியும் நினையாள் செல்ல வைத்தனளே

#3527

வைத்த மா நிதியாம் மதுசூதனையே அலற்றி

கொத்து அலர் பொழில் சூழ் குருகூர் சடகோபன் சொன்ன

பத்து நூற்றுள் இ பத்து அவன் சேர் திருக்கோளூர்க்கே

சித்தம் வைத்து உரைப்பார் திகழ் பொன் உலகு ஆள்வாரே

#3528

பொன் உலகு ஆளீரோ புவனி முழுது ஆளீரோ

நல் நல புள் இனங்காள் வினையாட்டியேன் நான் இரந்தேன்

முன் உலகங்கள் எல்லாம் படைத்த முகில் வண்ணன் கண்ணன்

என் நலம் கொண்ட பிரான் தனக்கு என் நிலைமை உரைத்தே

#3529

மை அமர் வாள் நெடும் கண் மங்கைமார் முன்பு என் கை இருந்து

நெய் அமர் இன் அடிசில் நிச்சல் பாலொடு மேவீரோ

கை அமர் சக்கரத்து என் கனிவாய் பெருமானை கண்டு

மெய் அமர் காதல் சொல்லி கிளிகாள் விரைந்து ஓடிவந்தே

#3530

ஓடிவந்து என் குழல் மேல் ஒளி மா மலர் ஊதீரோ

கூடிய வண்டினங்காள் குருநாடு உடை ஐவர்கட்காய்

ஆடிய மா நெடும் தேர் படை நீறு எழ செற்ற பிரான்

சூடிய தண் துளவம் உண்ட தூ மது வாய்கள் கொண்டே

#3531

தூ மது வாய்கள் கொண்டுவந்து என் முல்லைகள் மேல் தும்பிகாள்

பூ மது உண்ண செல்லில் வினையேனை பொய்செய்து அகன்ற

மா மது வார் தண் துழாய் முடி வானவர் கோனை கண்டு

யாம் இதுவோ தக்கவாறு என்ன வேண்டும் கண்டீர் நுங்கட்கே

#3532

நுங்கட்கு யான் உரைக்கேன் வம்-மின் யான் வளர்த்த கிளிகாள்

வெம் கண் புள் ஊர்ந்து வந்து வினையேனை நெஞ்சம் கவர்ந்த

செம் கண் கரு முகிலை செய்ய வாய் செழும் கற்பகத்தை

எங்கு சென்றாகிலும் கண்டு இதுவோ தக்கவாறு என்-மினே

#3533

என் மின்னு நூல் மார்வன் என் கரும் பெருமான் என் கண்ணன்

தன் மன்னு நீள் கழல் மேல் தண் துழாய் நமக்கு அன்றி நல்கான்

கல்-மின்கள் என்று உம்மை யான் கற்பியாவைத்த மாற்றம் சொல்லி

செல்-மின்கள் தீவினையேன் வளர்த்த சிறு பூவைகளே

#3534

பூவைகள் போல் நிறத்தன் புண்டரீகங்கள் போலும் கண்ணன்

யாவையும் யாவருமாய் நின்ற மாயன் என் ஆழி பிரான்

மாவை வல் வாய் பிளந்த மதுசூதற்கு என் மாற்றம் சொல்லி

பாவைகள் தீர்க்கிற்றிரே வினையாட்டியேன் பாசறவே

#3535

பாசறவு எய்தி இன்னே வினையேன் எனை ஊழி நைவேன்

ஆசு அறு தூவி வெள்ளை குருகே அருள்செய்து ஒரு நாள்

மாசு அறு நீல சுடர் முடி வானவர் கோனை கண்டு

ஏசு அறும் நும்மை அல்லால் மறுநோக்கு இலள் பேர்த்து மற்றே

#3536

பேர்த்து மற்று ஓர் களைகண் வினையாட்டியேன் நான் ஒன்று இலேன்

நீர் திரை மேல் உலவி இரை தேரும் புதா இனங்காள்

கார் திரள் மா முகில் போல் கண்ணன் விண்ணவர் கோனை கண்டு

வார்த்தைகள் கொண்டு அருளி உரையீர் வைகல் வந்திருந்தே

#3537

வந்திருந்து உம்முடைய மணி சேவலும் நீரும் எல்லாம்

அந்தரம் ஒன்றும் இன்றி அலர் மேல் அசையும் அன்னங்காள்

என் திருமார்வற்கு என்னை இன்னவாறு இவள் காண்-மின் என்று

மந்திரத்து ஒன்று உணர்த்தி உரையீர் மறுமாற்றங்களே

#3538

மாற்றங்கள் ஆய்ந்துகொண்டு மதுசூத பிரான் அடி மேல்

நாற்றங்கொள் பூம் பொழில் சூழ் குருகூர் சடகோபன் சொன்ன

தோற்றங்கள் ஆயிரத்துள் இவையும் ஒரு பத்தும் வல்லார்

ஊற்றின்-கண் நுண் மணல் போல் உருகாநிற்பர் நீராயே

#3539

நீராய் நிலனாய் தீயாய் காலாய் நெடு வானாய்

சீர் ஆர் சுடர்கள் இரண்டாய் சிவனாய் அயன் ஆனாய்

கூர் ஆர் ஆழி வெண் சங்கு ஏந்தி கொடியேன்-பால்

வாராய் ஒரு நாள் மண்ணும் விண்ணும் மகிழவே

#3540

மண்ணும் விண்ணும் மகிழ குறளாய் வலம் காட்டி

மண்ணும் விண்ணும் கொண்ட மாய அம்மானே

நண்ணி உனை நான் கண்டு உகந்து கூத்தாட

நண்ணி ஒரு நாள் ஞாலத்தூடே நடவாயே

#3541

ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்து இருந்தும்

சால பல நாள் உகம்-தோறு உயிர்கள் காப்பானே

கோல திரு மா மகளோடு உன்னை கூடாதே

சால பல நாள் அடியேன் இன்னும் தளர்வேனோ

#3542

தளர்ந்தும் முறிந்தும் சகட அசுரர் உடல் வேறா

பிளந்து வீய திருக்கால் ஆண்ட பெருமானே

கிளர்ந்து பிரமன் சிவன் இந்திரன் விண்ணவர் சூழ

விளங்க ஒரு நாள் காண வாராய் விண் மீதே

#3543

விண் மீது இருப்பாய் மலை மேல் நிற்பாய் கடல் சேர்ப்பாய்

மண் மீது உழல்வாய் இவற்றுள் எங்கும் மறைந்து உறைவாய்

எண் மீது இயன்ற புற அண்டத்தாய் எனது ஆவி

யுள் மீது ஆடி உரு காட்டாதே ஒளிப்பாயோ

#3544

பாய் ஓர் அடி வைத்து அதன் கீழ் பரவை நிலம் எல்லாம்

தாய் ஓர் அடியால் எல்லா உலகும் தடவந்த

மாயோன் உன்னை காண்பான் வருந்தி எனை நாளும்

தீயோடு உடன் சேர் மெழுகாய் உலகில் திரிவேனோ

#3545

உலகில் திரியும் கரும கதியாய் உலகமாய்

உலகுக்கே ஓர் உயிரும் ஆனாய் புற அண்டத்து

அலகில் பொலிந்த திசை பத்து ஆய அருவேயோ

அலகில் பொலிந்த அறிவிலேனுக்கு அருளாயே

#3546

அறிவிலேனுக்கு அருளாய் அறிவார் உயிர் ஆனாய்

வெறி கொள் சோதி மூர்த்தி அடியேன் நெடுமாலே

கிறிசெய்து என்னை புறத்திட்டு இன்னம் கெடுப்பாயோ

பிறிது ஒன்று அறியா அடியேன் ஆவி திகைக்கவே

#3547

ஆவி திகைக்க ஐவர் குமைக்கும் சிற்றின்பம்

பாவியேனை பல நீ காட்டி படுப்பாயோ

தாவி வையம் கொண்ட தடம் தாமரை கட்கே

கூவி கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ

#3548

குறுகா நீளா இறுதிகூடா எனை ஊழி

சிறுகா பெருகா அளவு இல் இன்பம் சேர்ந்தாலும்

மறு கால் இன்றி மாயோன் உனக்கே ஆளாகும்

சிறு காலத்தை உறுமோ அந்தோ தெரியிலே

#3549

தெரிதல் நினைதல் எண்ணல் ஆகா திருமாலுக்கு

உரிய தொண்டர்தொண்டர் தொண்டன் சடகோபன்

தெரிய சொன்ன ஓர் ஆயிரத்துள் இ பத்தும்

உரிய தொண்டர் ஆக்கும் உலகம் உண்டாற்கே

#3550

உலகம் உண்ட பெரு வாயா உலப்பு இல் கீர்த்தி அம்மானே

நிலவும் சுடர் சூழ் ஒளி மூர்த்தி நெடியாய் அடியேன் ஆருயிரே

திலதம் உலகுக்காய் நின்ற திருவேங்கடத்து எம் பெருமானே

குல தொல் அடியேன் உன பாதம் கூடும் ஆறு கூறாயே

#3551

கூறாய் நீறாய் நிலன் ஆகி கொடு வல் அசுரர் குலம் எல்லாம்

சீறா எரியும் திரு நேமி வலவா தெய்வ கோமானே

சேறு ஆர் சுனை தாமரை செம் தீ மலரும் திருவேங்கடத்தானே

ஆறா அன்பில் அடியேன் உன் அடி சேர் வண்ணம் அருளாயே

#3552

வண்ணம் மருள் கொள் அணி மேக வண்ணா மாய அம்மானே

எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே இமையோர் அதிபதியே

தெள் நல் அருவி மணி பொன் முத்து அலைக்கும் திருவேங்கடத்தானே

அண்ணலே உன் அடி சேர அடியேற்கு ஆஆ என்னாயே

#3553

ஆஆ என்னாது உலகத்தை அலைக்கும் அசுரர் வாழ் நாள் மேல்

தீ வாய் வாளி மழை பொழிந்த சிலையா திரு மா மகள் கேள்வா

தேவா சுரர்கள் முனி கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே

பூ ஆர் கழல்கள் அருவினையேன் பொருந்துமாறு புணராயே

#3554

புணரா நின்ற மரம் ஏழ் அன்று எய்த ஒரு வில் வலவா ஓ

புணர் ஏய் நின்ற மரம் இரண்டின் நடுவே போன முதல்வா ஓ

திணர் ஆர் மேகம் என களிறு சேரும் திருவேங்கடத்தானே

திணர் ஆர் சார்ங்கத்து உன பாதம் சேர்வது அடியேன் எந்நாளே

#3555

எந்நாளே நாம் மண் அளந்த இணை தாமரைகள் காண்பதற்கு என்று

எந்நாளும் நின்று இமையோர்கள் ஏத்தி இறைஞ்சி இனம் இனமாய்

மெய்ம் நா மனத்தால் வழிபாடு செய்யும் திருவேங்கடத்தானே

மெய்ம் நான் எய்தி எ நாள் உன் அடி-கண் அடியேன் மேவுவதே

#3556

அடியேன் மேவி அமர்கின்ற அமுதே இமையோர் அதிபதியே

கொடியா அடு புள் உடையானே கோல கனிவாய் பெருமானே

செடி ஆர் வினைகள் தீர் மருந்தே திருவேங்கடத்து எம் பெருமானே

நொடி ஆர் பொழுதும் உன பாதம் காண நோலாது ஆற்றேனே

#3557

நோலாது ஆற்றேன் உன பாதம் காண என்று நுண் உணர்வின்

நீல் ஆர் கண்டத்து அம்மானும் நிறை நான்முகனும் இந்திரனும்

சேல் ஏய் கண்ணார் பலர் சூழ விரும்பும் திருவேங்கடத்தானே

மாலாய் மயக்கி அடியேன்-பால் வந்தாய் போலே வாராயே

#3558

வந்தாய் போலே வாராதாய் வாராதாய் போல் வருவானே

செந்தாமரை கண் செம் கனி வாய் நால் தோள் அமுதே எனது உயிரே

சிந்தாமணிகள் பகர் அல்லை பகல் செய் திருவேங்கடத்தானே

அந்தோ அடியேன் உன பாதம் அகலகில்லேன் இறையுமே

#3559

அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா

நிகர் இல் புகழாய் உலகம் மூன்று உடையாய் என்னை ஆள்வானே

நிகர் இல் அமரர் முனி கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே

புகல் ஒன்று இல்லா அடியேன் உன் அடி கீழ் அமர்ந்து புகுந்தேனே

#3560

அடி கீழ் அமர்ந்து புகுந்து அடியீர் வாழ்-மின் என்று என்று அருள்கொடுக்கும்

படி கேழ் இல்லா பெருமானை பழன குருகூர் சடகோபன்

முடிப்பான் சொன்ன ஆயிரத்து திருவேங்கடத்துக்கு இவை பத்தும்

பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரிய வானுள் நிலாவுவரே

#3561

உள் நிலாவிய ஐவரால் குமைதீற்றி என்னை உன் பாத பங்கயம்

நண்ணிலா வகையே நலிவான் இன்னும் எண்ணுகின்றாய்

எண் இலா பெறு மாயனே இமையோர்கள் ஏத்தும் உலகம் மூன்று உடை

அண்ணலே அமுதே அப்பனே என்னை ஆள்வானே

#3562

என்னை ஆளும் வன் கோ ஓர் ஐந்து இவை பெய்து இராப்பகல் மோதுவித்திட்டு

உன்னை நான் அணுகா வகை செய்து போதிகண்டாய்

கன்னலே அமுதே கார் முகில் வண்ணனே கடல் ஞாலம் காக்கின்ற

மின்னு நேமியினாய் வினையேனுடை வேதியனே

#3563

வேதியா நிற்கும் ஐவரால் வினையேனை மோதுவித்து உன் திருவடி

சாதியா வகை நீ தடுத்து என் பெறுதி அந்தோ

ஆதி ஆகி அகல் இடம் படைத்து உண்டு உமிழ்ந்து கடந்து இடந்திட்ட

சோதி நீள் முடியாய் தொண்டனேன் மதுசூதனனே

#3564

சூது நான் அறியா வகை சுழற்றி ஓர் ஐவரை காட்டி உன் அடி

போது நான் அணுகா வகை செய்து போதி கண்டாய்

யாதும் யாவரும் இன்றி நின் அகம்-பால் ஒடுக்கி ஓர் ஆலின் நீள் இலை

மீது சேர் குழவி வினையேன் வினைதீர் மருந்தே

#3565

தீர் மருந்து இன்றி ஐந்து நோய் அடும் செக்கில் இட்டு திரிக்கும் ஐவரை

நேர் மருங்கு உடைத்தா அடைத்து நெகிழ்ப்பான் ஒக்கின்றாய்

ஆர் மருந்து இனி ஆகுவார் அடல் ஆழி ஏந்தி அசுரர் வன் குலம்

வேர் மருங்கு அறுத்தாய் விண்ணுளார் பெருமானே ஓ

#3566

விண்ணுளார் பெருமாற்கு அடிமைசெய்வாரையும் செறும் ஐம்புலன் இவை

மண்ணுள் என்னை பெற்றால் என் செய்யா மற்று நீயும் விட்டால்

பண்ணுளாய் கவி தன்னுளாய் பத்தியின் உள்ளாய் பரமீசனே வந்து என்

கண்ணுளாய் நெஞ்சுளாய் சொல்லுளாய் ஒன்று சொல்லாயே

#3567

ஒன்று சொல்லி ஒருத்தினில் நிற்கிலாத ஓர் ஐவர் வன் கயவரை

என்று யான் வெல்கிற்பன் உன் திருவருள் இல்லையேல்

அன்று தேவர் அசுரர் வாங்க அலை கடல் அரவம் அளாவி ஓர்

குன்றம் வைத்த எந்தாய் கொடியேன் பருகு இன் அமுதே

#3568

இன் அமுது என தோன்றி ஓர் ஐவர் யாவரையும் மயக்க நீ வைத்த

முன்னம் மாயம் எல்லாம் முழு வேர் அரிந்து என்னை உன்

சின்னமும் திருமூர்த்தியும் சிந்தித்து ஏத்தி கைதொழவே அருள் எனக்கு

என் அம்மா என் கண்ணா இமையோர் தம் குலமுதலே

#3569

குலம் முதல் அடும் தீவினை கொடு வன் குழியினில் வீழ்க்கும் ஐவரை

வலம் முதல் கெடுக்கும் வரமே தந்து அருள் கண்டாய்

நிலம் முதல் இனி எ உலகுக்கும் நிற்பன செல்வன என பொருள்

பல முதல் படைத்தாய் என் கண்ணா என் பரஞ்சுடரே

#3570

என் பரஞ்சுடரே என்று உன்னை அலற்றி உன் இணை தாமரைகட்கு

அன்பு உருகி நிற்கும் அது நிற்க சுமடு தந்தாய்

வன் பரங்கள் எடுத்து ஐவர் திசைதிசை வலித்து எற்றுகின்றனர்

முன் பரவை கடைந்து அமுதம் கொண்ட மூர்த்தி ஓ

#3571

கொண்ட மூர்த்தி ஓர் மூவராய் குணங்கள் படைத்து அளித்து கெடுக்கும் அ

புண்டரீக கொப்பூழ் புனல் பள்ளி அப்பனுக்கே

தொண்டர்தொண்டர் தொண்டர்தொண்டன் சடகோபன் சொல் ஆயிரத்துள் இ பத்தும்

கண்டு பாட வல்லார் வினை போம் கங்குலும் பகலே

#3572

கங்குலும் பகலும் கண் துயில் அறியாள் கண்ண நீர் கைகளால் இறைக்கும்

சங்கு சக்கரங்கள் என்று கை கூப்பும் தாமரை கண் என்றே தளரும்

எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட்டு என்னும் இரு நிலம் கை துழா இருக்கும்

செம் கயல் பாய் நீர் திருவரங்கத்தாய் இவள் திறத்து என் செய்கின்றாயே

#3573

என் செய்கின்றாய் என் தாமரை கண்ணா என்னும் கண்ணீர் மல்க இருக்கும்

என் செய்கேன் எறி நீர் திருவரங்கத்தாய் என்னும் வெவ்வுயிர்த்து உயிர்த்து உருகும்

முன் செய்த வினையே முகப்படாய் என்னும் முகில் வண்ணா தகுவதோ என்னும்

முன் செய்து இ உலகம் உண்டு உமிழ்ந்து அளந்தாய் என்-கொலோ முடிகின்றது இவட்கே

#3574

வட்கு இலள் இறையும் மணி வண்ணா என்னும் வானமே நோக்கும் மையாக்கும்

உட்கு உடை அசுரர் உயிர் எல்லாம் உண்ட ஒருவனே என்னும் உள் உருகும்

கட்கிலீ உன்னை காணுமாறு அருளாய் காகுத்தா கண்ணனே என்னும்

திண் கொடி மதிள் சூழ் திருவரங்கத்தாய் இவள் திறத்து என் செய்திட்டாயே

#3575

இட்ட கால் இட்ட கையளாய் இருக்கும் எழுந்து உலாய் மயங்கும் கை கூப்பும்

கட்டமே காதல் என்று மூர்ச்சிக்கும் கடல் வண்ணா கடியை காண் என்னும்

வட்ட வாய் நேமி வலங்கையா என்னும் வந்திடாய் என்று என்றே மயங்கும்

சிட்டனே செழு நீர் திருவரங்கத்தாய் இவள் திறத்து என் சிந்தித்தாயே

#3576

சிந்திக்கும் திசைக்கும் தேறும் கை கூப்பும் திருவரங்கத்துள்ளாய் என்னும்

வந்திக்கும் ஆங்கே மழை கண் நீர் மல்க வந்திடாய் என்று என்றே மயங்கும்

அந்தி போது அவுணன் உடல் இடந்தானே அலை கடல் கடைந்த ஆர் அமுதே

சந்தித்து உன் சரணம் சார்வதே வலித்த தையலை மையல் செய்தானே

#3577

மையல் செய்து என்னை மனம் கவர்ந்தானே என்னும் மா மாயனே என்னும்

செய்ய வாய் மணியே என்னும் தண் புனல் சூழ் திருவரங்கத்துள்ளாய் என்னும்

வெய்ய வாள் தண்டு சங்கு சக்கரம் வில் ஏந்தும் விண்ணோர் முதல் என்னும்

பை கொள் பாம்பு அணையாய் இவள் திறத்து அருளாய் பாவியேன் செயற்பாலதுவே

#3578

பால துன்பங்கள் இன்பங்கள் படைத்தாய் பற்றிலார் பற்ற நின்றானே

கால சக்கரத்தாய் கடல் இடம் கொண்ட கடல் வண்ணா கண்ணனே என்னும்

சேல் கொள் தண் புனல் சூழ் திருவரங்கத்தாய் என்னும் என் தீர்த்தனே என்னும்

கோல மா மழை கண் பனி மல்க இருக்கும் என்னுடை கோமள கொழுந்தே

#3579

கொழுந்து வானவர்கட்கு என்னும் குன்று ஏந்தி கோ நிரை காத்தவன் என்னும்

அழும் தொழும் ஆவி அனல வெவ்வுயிர்க்கும் அஞ்சன வண்ணனே என்னும்

எழுந்து மேல் நோக்கி இமைப்பிலள் இருக்கும் எங்ஙனே நோக்குகேன் என்னும்

செழும் தடம் புனல் சூழ் திருவரங்கத்தாய் என் செய்கேன் என் திருமகட்கே

#3580

என் திருமகள் சேர் மார்வனே என்னும் என்னுடை ஆவியே என்னும்

நின் திரு எயிற்றால் இடந்து நீ கொண்ட நில மகள் கேள்வனே என்னும்

அன்று உரு ஏழும் தழுவி நீ கொண்ட ஆய் மகள் அன்பனே என்னும்

தென் திருவரங்கம் கோயில்கொண்டானே தெளிகிலேன் முடிவு இவள் தனக்கே

#3581

முடிவு இவள் தனக்கு ஒன்று அறிகிலேன் என்னும் மூ உலகு ஆளியே என்னும்

கடி கமழ் கொன்றை சடையனே என்னும் நான்முக கடவுளே என்னும்

வடிவு உடை வானோர் தலைவனே என்னும் வண் திருவரங்கனே என்னும்

அடி அடையாதாள் போல் இவள் அணுகி அடைந்தனள் முகில் வண்ணன் அடியே

#3582

முகில் வண்ணன் அடியை அடைந்து அருள் சூடி உய்ந்தவன் மொய் புனல் பொருநல்

துகில் வண்ண தூ நீர் சேர்ப்பன் வண் பொழில் சூழ் வண் குருகூர் சடகோபன்

முகில் வண்ணன் அடி மேல் சொன்ன சொல் மாலை ஆயிரத்து இ பத்தும் வல்லா

முகில் வண்ண வானத்து இமையவர் சூழ இருப்பர் பேரின்ப வெள்ளத்தே

#3583

வெள்ளை சுரி சங்கொடு ஆழி ஏந்தி தாமரை கண்ணன் என் நெஞ்சினூடே

புள்ளை கடாகின்ற ஆற்றை காணீர் என் சொல்லி சொல்லுகேன் அன்னைமீர்காள்

வெள்ள சுகம் அவன் வீற்றிருந்த வேத ஒலியும் விழா ஒலியும்

பிள்ளை குழா விளையாட்டு ஒலியும் அறா திருப்பேரெயில் சேர்வன் நானே

#3584

நான கரும் குழல் தோழிமீர்காள் அன்னையர்காள் அயல் சேரியீர்காள்

நான் இ தனி நெஞ்சம் காக்கமாட்டேன் என் வசம் அன்று இது இராப்பகல் போய்

தேன் மொய்த்த பூம் பொழில் தண் பணை சூழ் தென் திருப்பேரெயில் வீற்றிருந்த

வான பிரான் மணி வண்ணன் கண்ணன் செம் கனி வாயின் திறத்ததுவே

#3585

செம் கனி வாயின் திறத்ததாயும் செம் சுடர் நீள் முடி தாழ்ந்ததாயும்

சங்கொடு சக்கரம் கண்டு உகந்தும் தாமரை கண்களுக்கு அற்று தீர்ந்தும்

திங்களும் நாளும் விழா அறாத தென் திருப்பேரெயில் வீற்றிருந்த

நங்கள் பிரானுக்கு என் நெஞ்சம் தோழீ நாணும் நிறையும் இழந்ததுவே

#3586

இழந்த எம் மாமை திறத்து போன என் நெஞ்சினாரும் அங்கே ஒழிந்தார்

உழந்து இனி யாரைக்கொண்டு என் உசாகோ ஓத கடல் ஒலி போல எங்கும்

எழுந்த நல் வேதத்து ஒலி நின்று ஓங்கு தென் திருப்பேரெயில் வீற்றிருந்த

முழங்கு சங்க கையன் மாயத்து ஆழ்ந்தேன் அன்னையர்காள் என்னை என் முனிந்தே

#3587

முனிந்து சகடம் உதைத்து மாய பேய் முலை உண்டு மருது இடை போய்

கனிந்த விளவுக்கு கன்று எறிந்த கண்ணபிரானுக்கு என் பெண்மை தோற்றேன்

முனிந்து இனி என் செய்தீர் அன்னைமீர்காள் முன்னி அவன் வந்து வீற்றிருந்த

கனிந்த பொழில் திருப்பேரெயிற்கே காலம்பெற என்னை காட்டு-மினே

#3588

காலம்பெற என்னை காட்டு-மின்கள் காதல் கடலின் மிக
பெரிதால்

நீல முகில் வண்ணத்து எம் பெருமான் நிற்கும் முன்னே வந்து
என் கைக்கும் எய்தான்

ஞாலத்து அவன் வந்து வீற்றிருந்த நான்மறையாளரும் வேள்வி
ஓவா

கோல செந்நெற்கள் கவரி வீசும் கூடு புனல் திருப்பேரெயிற்கே

#3589

பேர் எயில் சூழ் கடல் தென் இலங்கை செற்ற பிரான் வந்து
வீற்றிருந்த

பேரெயிற்கே புக்கு என் நெஞ்சம் நாடி பேர்த்து வர எங்கும்
காணமாட்டேன்

ஆரை இனி இங்கு உடையம் தோழீ என் நெஞ்சம் கூவ வல்லாரும்
இல்லை

ஆரை இனிக்கொண்டு என் சாதிக்கின்றது என் நெஞ்சம்
கண்டதுவே கண்டேனே

#3590

கண்டதுவே கொண்டு எல்லாரும் கூடி கார் கடல் வண்ணனோடு என் திறத்து

கொண்டு அலர் தூற்றிற்று அது முதலா கொண்ட என் காதல் உரைக்கில் தோழீ

மண் திணி ஞாலமும் ஏழ் கடலும் நீள் விசும்பும் கழிய பெரிதால்

தெண் திரை சூழ்ந்து அவன் வீற்றிருந்த தென் திருப்பேரெயில் சேர்வன் சென்றே

#3591

சேர்வன் சென்று என்னுடை தோழிமீர்காள் அன்னையர்காள் என்னை தேற்ற வேண்டா

நீர்கள் உரைக்கின்றது என் இதற்கு நெஞ்சும் நிறைவும் எனக்கு இங்கு இல்லை

கார் வண்ணன் கார் கடல் ஞாலம் உண்ட கண்ணபிரான் வந்து வீற்றிருந்த

ஏர் வள ஒண் கழனி பழன தென் திருப்பேரெயில் மாநகரே

#3592

நகரமும் நாடும் பிறவும் தேர்வேன் நாண் எனக்கு இல்லை என் தோழிமீர்காள்

சிகர மணி நெடு மாடம் நீடு தென் திருப்பேரெயில் வீற்றிருந்த

மகர நெடும் குழை காதன் மாயன் நூற்றுவரை அன்று மங்க நூற்ற

நிகர் இல் முகில் வண்ணன் நேமியான் என் நெஞ்சம் கவர்ந்து எனை ஊழியானே

#3593

ஊழி-தோறு ஊழி உருவும் பேரும் செய்கையும் வேறவன் வையம் காக்கும்

ஆழி நீர் வண்ணனை அச்சுதனை அணி குருகூர் சடகோபன் சொன்ன

கேழ் இல் அந்தாதி ஓர் ஆயிரத்துள் இவை திருப்பேரெயில் மேய பத்தும்

ஆழி அங்கையனை ஏத்த வல்லார் அவர் அடிமை திறத்து ஆழியாரே

#3594

ஆழி எழ சங்கும் வில்லும் எழ திசை

வாழி எழ தண்டும் வாளும் எழ அண்டம்

மோழை எழ முடி பாதம் எழ அப்பன்

ஊழி எழ உலகம் கொண்டவாறே

#3595

ஆறு மலைக்கு எதிர்ந்து ஓடும் ஒலி அரவு

ஊறு சுலாய் மலை தேய்க்கும் ஒலி கடல்

மாறு சுழன்று அழைக்கின்ற ஒலி அப்பன்

சாறுபட அமுதம் கொண்ட நான்றே

#3596

நான்றில ஏழ் மண்ணும் தானத்தவே பின்னும்

நான்றில ஏழ் மலை தானத்தவே பின்னும்

நான்றில ஏழ் கடல் தானத்தவே அப்பன்

ஊன்றி இடந்து எயிற்றில் கொண்ட நாளே

#3597

நாளும் எழ நிலம் நீரும் எழ விண்ணும்

கோளும் எழ எரி காலும் எழ மலை

தாளும் எழ சுடர் தானும் எழ அப்பன்

ஊளி எழ உலகம் உண்ட ஊணே

#3598

ஊணுடை மல்லர் ததர்ந்த ஒலி மன்னர்

ஆண் உடை சேனை நடுங்கும் ஒலி விண்ணுள்

ஏண் உடை தேவர் வெளிப்பட்ட ஒலி அப்பன்

காணுடை பாரதம் கை அறை போழ்தே

#3599

போழ்து மெலிந்த புன் செக்கரில் வான் திசை

சூழும் எழுந்து உதிர புனலா மலை

கீழ்து பிளந்த சிங்கம் ஒத்ததால் அப்பன்

ஆழ் துயர் செய்து அசுரரை கொல்லுமாறே

#3600

மாறு நிரைத்து இரைக்கும் சரங்கள் இன

நூறு பிணம் மலை போல் புரள கடல்

ஆறு மடுத்து உதிர புனலா அப்பன்

நீறு பட இலங்கை செற்ற நேரே

#3601

நேர் சரிந்தான் கொடி கோழி கொண்டான் பின்னும்

நேர் சரிந்தான் எரியும் அனலோன் பின்னும்

நேர் சரிந்தான் முக்கண் மூர்த்தி கண்டீர் அப்பன்

நேர் சரி வாணன் திண் தோள் கொண்ட அன்றே

#3602

அன்று மண் நீர் எரி கால் விண் மலை முதல்

அன்று சுடர் இரண்டு பிறவும் பின்னும்

அன்று மழை உயிர் தேவும் மற்றும் அப்பன்

அன்று முதல் உலகம் செய்ததுமே

#3603

மேய் நிரை கீழ் புக மா புரள சுனை

வாய் நிறை நீர் பிளிறி சொரிய இன

ஆநிரை பாடி அங்கே ஒடுங்க அப்பன்

தீ மழை காத்து குன்றம் எடுத்தானே

#3604

குன்றம் எடுத்த பிரான் அடியாரொடும்

ஒன்றி நின்ற சடகோபன் உரைசெயல்

நன்றி புனைந்த ஓர் ஆயிரத்துள் இவை

வென்றி தரும் பத்தும் மேவி கற்பார்க்கே

#3605

கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ

புல் பா முதலா புல் எறும்பு ஆதி ஒன்று இன்றியே

நல் பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்

நல் பாலுக்கு உய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே

#3606

நாட்டில் பிறந்தவர் நாரணற்கு ஆள் அன்றி ஆவரோ

நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்காய்

நாட்டை நலியும் அரக்கரை நாடி தடிந்திட்டு

நாட்டை அளித்து உய்ய செய்து நடந்தமை கேட்டுமே

#3607

கேட்பார்கள் கேசவன் கீர்த்தி அல்லால் மற்றும் கேட்பரோ

கேட்பார் செவி சுடு கீழ்மை வசைவுகளே வையும்

சேண்-பால் பழம் பகைவன் சிசுபாலன் திருவடி

தாள்-பால் அடைந்த தன்மை அறிவாரை அறிந்துமே

#3608

தன்மை அறிபவர் தாம் அவற்கு ஆள் அன்றி ஆவரோ

பன்மை படர் பொருள் ஆதும் இல் பாழ் நெடும் காலத்து

நன்மை புனல் பண்ணி நான்முகனை பண்ணி தன்னுள்ளே

தொன்மை மயக்கிய தோற்றிய சூழல்கள் சிந்தித்தே

#3609

சூழல்கள் சிந்திக்கில் மாயன் கழல் அன்றி சூழ்வரோ

ஆழ பெரும் புனல் தன்னுள் அழுந்திய ஞாலத்தை

தாழ படாமல் தன்-பால் ஒரு கோட்டிடை தான் கொண்ட

கேழல் திரு உரு ஆயிற்று கேட்டும் உணர்ந்துமே

#3610

கேட்டும் உணர்ந்தவர் கேசவற்கு ஆள் அன்றி ஆவரோ

வாட்டம் இலா வண் கை மாவலி வாதிக்க வாதிப்புண்டு

ஈட்டம் கொள் தேவர்கள் சென்று இரந்தார்க்கு இடர் நீக்கிய

கோட்டு அங்கை வாமனனாய் செய்த கூத்துக்கள் கண்டுமே

#3611

கண்டும் தெளிந்தும் கற்றார் கண்ணற்கு ஆள் அன்றி ஆவரோ

வண்டு உண் மலர் தொங்கல் மார்க்கண்டேயனுக்கு வாழும் நாள்

இண்டை சடைமுடி ஈசன் உடன்கொண்டு உசா செல்ல

கொண்டு அங்கு தன்னொடும் கொண்டு உடன் சென்றது உணர்ந்துமே

#3612

செல்ல உணர்ந்தவர் செல்வன் தன் சீர் அன்றி கற்பரோ

எல்லை இலாத பெரும் தவத்தால் பல செய் மிறை

அல்லல் அமரரை செய்யும் இரணியன் ஆகத்தை

மல்லல் அரி உருவாய் செய்த மாயம் அறிந்துமே

#3613

மாயம் அறிபவர் மாயவற்கு ஆள் அன்றி ஆவரோ

தாயம் செறும் ஒரு நூற்றுவர் மங்க ஓர் ஐவர்க்காய்

தேசம் அறிய ஓர் சாரதியாய் சென்று சேனையை

நாசம் செய்திட்டு நடந்த நல் வார்த்தை அறிந்துமே

#3614

வார்த்தை அறிபவர் மாயவற்கு ஆள் அன்றி ஆவரோ

போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பு இவை

பேர்த்து பெரும் துன்பம் வேர் அற நீக்கி தன் தாளின் கீழ்

சேர்த்து அவன் செய்யும் சேமத்தை எண்ணி தெளிவுற்றே

#3615

தெளிவுற்று வீவு இன்றி நின்றவர்க்கு இன்ப கதி செய்யும்

தெளிவுற்ற கண்ணனை தென் குருகூர் சடகோபன் சொல்

தெளிவுற்ற ஆயிரத்துள் இவை பத்தும் வல்லார் அவர்

தெளிவுற்ற சிந்தையர் பா மரு மூ உலகத்துள்ளே

#3616

பா மரு மூ உலகும் படைத்த பற்பநாபா ஓ

பா மரு மூ உலகும் அளந்த பற்பபாதா ஓ

தாமரை கண்ணா ஓ தனியேன் தனி ஆளா ஓ

தாமரை கையா ஓ உன்னை என்று-கொல் சேர்வதுவே

#3617

என்று-கொல் சேர்வது அந்தோ அரன் நான்முகன் ஏத்தும் செய்ய

நின் திருப்பாதத்தை யான் நிலம் நீர் எரி கால் விண் உயிர்

என்று இவை தாம் முதலா முற்றுமாய் நின்ற எந்தாய் ஓ

குன்று எடுத்து ஆநிரை மேய்த்து அவை காத்த எம் கூத்தா ஓ

#3618

காத்த எம் கூத்தா ஓ மலை ஏந்தி கல் மாரி-தன்னை

பூ தண் துழாய் முடியாய் புனை கொன்றை அம் செம் சடையாய்

வாய்த்த என் நான்முகனே வந்து என் ஆருயிர் நீ ஆனால்

ஏத்து அரும் கீர்த்தியினாய் உன்னை எங்கு தலைப்பெய்வனே

#3619

எங்கு தலைப்பெய்வன் நான் எழில் மூ உலகும் நீயே

அங்கு உயர் முக்கண் பிரான் பிரம பெருமான் அவன் நீ

வெம் கதிர் வச்சிர கை இந்திரன் முதலா தெய்வம் நீ

கொங்கு அலர் தண் அம் துழாய் முடி என்னுடை கோவலனே

#3620

என்னுடை கோவலனே என் பொல்லா கருமாணிக்கமே

உன்னுடை உந்தி மலர் உலகம் அவை மூன்றும் பரந்து

உன்னுடை சோதி வெள்ளத்து அகம்-பால் உன்னை கண்டு கொண்டிட்டு

என்னுடை ஆருயிரார் எங்ஙனே-கொல் வந்து எய்துவரே

#3621

வந்து எய்துமாறு அறியேன் மல்கு நீல சுடர் தழைப்ப

செம் சுடர் சோதிகள் பூத்து ஒரு மாணிக்கம் சேர்வது போல்

அந்தரமேல் செம்பட்டோடு அடி உந்தி கை மார்பு கண் வாய்

செம் சுடர் சோதி விட உறை என் திருமார்பனையே

#3622

என் திருமார்பன்-தன்னை என் மலை மகள் கூறன்-தன்னை

என்றும் என் நாமகளை அகம்-பால் கொண்ட நான்முகனை

நின்ற சசிபதியை நிலம் கீண்டு எயில் மூன்று எரித்த

வென்று புலன் துரந்த விசும்பு ஆளியை காணேனோ

#3623

ஆளியை காண் பரியாய் அரி காண் நரியாய் அரக்கர்

ஊளை இட்டு அன்று இலங்கை கடந்து பிலம் புக்கு ஒளிப்ப

மீளி அம் புள்ளை கடாய் விறல் மாலியை கொன்று பின்னும்

ஆள் உயர் குன்றங்கள் செய்து அடர்த்தானையும் காண்டும்-கொலோ

#3624

காண்டும்-கொலோ நெஞ்சமே கடிய வினையே முயலும்

ஆண் திறல் மீளி மொய்ம்பின் அரக்கன் குலத்தை தடிந்து

மீண்டும் அவன் தம்பிக்கே விரி நீர் இலங்கை அருளி

ஆண்டு தன் சோதி புக்க அமரர் அரி ஏற்றினையே

#3625

ஏற்று அரும் வைகுந்தத்தை அருளும் நமக்கு ஆயர் குலத்து

ஈற்று இளம் பிள்ளை ஒன்றாய் புக்கு மாயங்களே இயற்றி

கூற்று இயல் கஞ்சனை கொன்று ஐவர்க்காய் கொடும் சேனை தடிந்து

ஆற்றல் மிக்கான் பெரிய பரஞ்சோதி புக்க அரியே

#3626

புக்க அரி உருவாய் அவுணன் உடல் கீண்டு உகந்த

சக்கர செல்வன் தன்னை குருகூர் சடகோபன் சொன்ன

மிக்க ஓர் ஆயிரத்துள் இவை பத்தும் வல்லார் அவரை

தொக்கு பல்லாண்டு இசைத்து கவரிசெய்வர் ஏழையரே

#3627

ஏழையர் ஆவி உண்ணும் இணை கூற்றம்-கொலோ அறியேன்

ஆழி அம் கண்ணபிரான் திருக்கண்கள்-கொலோ அறியேன்

சூழவும் தாமரை நாள்மலர் போல் வந்து தோன்றும் கண்டீர்

தோழியர்காள் அன்னைமீர் என் செய்கேன் துயராட்டியேனே

#3628

ஆட்டியும் தூற்றியும் நின்று அன்னைமீர் என்னை நீர் நலிந்து என்

மாட்டு உயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ அறியேன்

ஈட்டிய வெண்ணெய் உண்டான் திருமூக்கு எனது ஆவியுள்ளே

மாட்டிய வல் விளக்கின் சுடராய் நிற்கும் வாலியதே

#3629

வாலியது ஓர் கனி-கொல் வினையாட்டியேன் வல்வினை-கொல்

கோலம் திரள் பவள கொழும் துண்டம்-கொலோ அறியேன்

நீல நெடு முகில் போல் திருமேனி அம்மான் தொண்டைவாய்

ஏலும் திசையுள் எல்லாம் வந்து தோன்றும் என் இன் உயிர்க்கே

#3630

இன் உயிர்க்கு ஏழையர் மேல் வளையும் இணை நீல வில்-கொல்

மன்னிய சீர் மதனன் கருப்பு சிலை-கொல் மதனன்

தன் உயிர் தாதை கண்ண பெருமான் புருவம் அவையே

என் உயிர் மேலனவாய் அடுகின்றன என்றும் நின்றே

#3631

என்றும் நின்றே திகழும் செய்ய ஈன் சுடர் வெண் மின்னு-கொல்

அன்றி என் ஆவி அடும் அணி முத்தம்-கொலோ அறியேன்

குன்றம் எடுத்த பிரான் முறுவல் எனது ஆவி அடும்

ஒன்றும் அறிகின்றிலேன் அன்னைமீர் எனக்கு உய்வு இடமே

#3632

உய்வு இடம் ஏழையர்க்கும் அசுரர்க்கும் அரக்கர்கட்கும்

எவ்விடம் என்று இலங்கி மகரம் தழைக்கும் தளிர்-கொல்

பை விட பாம்பு அணையான் திரு குண்டல காதுகளே

கைவிடல் ஒன்றும் இன்றி அடுகின்றன காண்-மின்களே

#3633

காண்-மின்கள் அன்னையர்காள் என்று காட்டும் வகை அறியேன்

நாள் மன்னு வெண் திங்கள் கொல் நயந்தார்கட்கு நச்சு இலை-கொல்

சேண் மன்னு நால் தடம் தோள் பெருமான் தன் திருநுதலே

கோள் மன்னி ஆவி அடும் கொடியேன் உயிர் கோள் இழைத்தே

#3634

கோள் இழை தாமரையும் கொடியும் பவளமும் வில்லும்

கோள் இழை தண் முத்தமும் தளிரும் குளிர் வான் பிறையும்

கோள் இழையா உடைய கொழும் சோதிவட்டம்-கொல் கண்ணன்

கோள் இழை வாள் முகமாய் கொடியேன் உயிர் கொள்கின்றதே

#3635

கொள்கின்ற கோள் இருளை சுகிர்ந்திட்ட கொழும் சுருளின்

உள்கொண்ட நீல நல் நூல் தழை-கொல் அன்று மாயன் குழல்

விள்கின்ற பூம் தண் துழாய் விரை நாற வந்து என் உயிரை

கள்கின்றவாறு அறியீர் அன்னைமீர் கழறா நிற்றிரே

#3636

நிற்றி முற்றத்துள் என்று நெரித்த கையராய் என்னை நீர்

சுற்றியும் சூழ்ந்தும் வைதிர் சுடர் சோதி மணி நிறமாய்

முற்ற இ மூ உலகும் விரிகின்ற சுடர் முடிக்கே

ஒற்றுமை கொண்டது உள்ளம் அன்னைமீர் நசை என் நுங்கட்கே

#3637

கட்கு அரிய பிரமன் சிவன் இந்திரன் என்று இவர்க்கும்

கட்கு அரிய கண்ணனை குருகூர் சடகோபன் சொன்ன

உட்கு உடை ஆயிரத்துள் இவையும் ஒரு பத்தும் வல்லார்

உட்கு உடை வானவரோடு உடனாய் என்றும் மாயாரே

#3638

மாயா வாமனனே மதுசூதா நீ அருளாய்

தீயாய் நீராய் நிலனாய் விசும்பாய் காலாய்

தாயாய் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய்

நீயாய் நீ நின்றவாறு இவை என்ன நியாயங்களே

#3639

அம் கள் மலர் தண் துழாய் முடி அச்சுதனே அருளாய்

திங்களும் ஞாயிறுமாய் செழும் பல் சுடராய் இருளாய்

பொங்கு பொழி மழையாய் புகழாய் பழியாய் பின்னும் நீ

வெம் கண் வெம் கூற்றமும் ஆம் இவை என்ன விசித்திரமே

#3640

சித்திர தேர் வலவா திருச்சக்கரத்தாய் அருளாய்

எத்தனை ஓர் உகமும் அவையாய் அவற்றுள் இயலும்

ஒத்த ஒண் பல் பொருள்கள் உலப்பு இல்லனவாய் வியவாய்

வித்தகத்தாய் நிற்றி நீ இவை என்ன விடமங்களே

#3641

கள் அவிழ் தாமரை கண் கண்ணனே எனக்கு ஒன்று அருளாய்

உள்ளதும் இல்லதுமாய் உலப்பு இல்லனவாய் வியவாய்

வெள்ள தடம் கடலுள் விட நாகு அணை மேல் மருவி

உள்ள பல் யோகு செய்தி இவை என்ன உபாயங்களே

#3642

பாசங்கள் நீக்கி என்னை உனக்கே அற கொண்டிட்டு நீ

வாச மலர் தண் துழாய் முடி மாயவனே அருளாய்

காயமும் சீவனுமாய் கழிவாய் பிறப்பாய் பின்னும் நீ

மாயங்கள் செய்து வைத்தி இவை என்ன மயக்குக்களே

#3643

மயக்கா வாமனனே மதி ஆம் வண்ணம் ஒன்று அருளாய்

அயர்ப்பாய் தேற்றமுமாய் அழலாய் குளிராய் வியவாய்

வியப்பாய் வென்றிகளாய் வினையாய் பயனாய் பின்னும் நீ

துயக்காய் நீ நின்றவாறு இவை என்ன துயரங்களே

#3644

துயரங்கள் செய்யும் கண்ணா சுடர் நீள் முடியாய் அருளாய்

துயரம் செய் மானங்களாய் மதன் ஆகி உகவைகளாய்

துயரம் செய் காமங்களாய் துலையாய் நிலையாய் நடையாய்

துயரங்கள் செய்து வைத்தி இவை என்ன சுண்டாயங்களே

#3645

என்ன சுண்டாயங்களால் நின்றிட்டாய் என்னை ஆளும் கண்ணா

இன்னது ஓர் தன்மையை என்று உன்னை யாவர்க்கும்
தேற்றரியை

முன்னிய மூ உலகும் அவையாய் அவற்றை படைத்து

பின்னும் உள்ளாய் புறத்தாய் இவை என்ன இயற்கைகளே

#3646

என்ன இயற்கைகளால் எங்ஙனே நின்றிட்டாய் என் கண்ணா

துன்னு கரசரணம் முதலாக எல்லா உறுப்பும்

உன்னு சுவை ஒளி ஊறு ஒலி நாற்றம் முற்றும் நீயே

உன்னை உணரவுறில் உலப்பு இல்லை நுணுக்கங்களே

#3647

இல்லை நுணுக்கங்களே இதனில் பிறிது என்னும் வண்ணம்

தொல்லை நல் நூலில் சொன்ன உருவும் அருவும் நீயே

அல்லி துழாய் அலங்கல் அணி மார்ப என் அச்சுதனே

வல்லது ஓர் வண்ணம் சொன்னால் அதுவே உனக்கு ஆம் வண்ணமே

#3648

ஆம் வண்ணம் இன்னது ஒன்று என்று அறிவது அரிய அரியை

ஆம் வண்ணத்தால் குருகூர் சடகோபன் அறிந்து உரைத்த

ஆம் வண்ண ஒண் தமிழ்கள் இவை ஆயிரத்துள் இ பத்தும்

ஆம் வண்ணத்தால் உரைப்பார் அமைந்தார் தமக்கு என்றைக்குமே

#3649

என்றைக்கும் என்னை உய்யக்கொண்டு போகிய

அன்றைக்கு அன்று என்னை தன்னாக்கி என்னால் தன்னை

இன் தமிழ் பாடிய ஈசனை ஆதியாய்

நின்ற என் சோதியை என் சொல்லி நிற்பனோ

#3650

என் சொல்லி நிற்பன் என் இன் உயிர் இன்று ஒன்றாய்

என் சொல்லால் யான் சொன்ன இன் கவி என்பித்து

தன் சொல்லால் தான் தன்னை கீர்த்தித்த மாயன் என்

முன் சொல்லும் மூவுருவாம் முதல்வனே

#3651

ஆம் முதல்வன் இவன் என்று தன் தேற்றி என்

நா முதல் வந்து புகுந்து நல் இன் கவி

தூ முதல் பத்தர்க்கு தான் தன்னை சொன்ன என்

வாய் முதல் அப்பனை என்று மறப்பனோ

#3652

அப்பனை என்று மறப்பன் என் ஆகியே

தப்புதல் இன்றி தனை கவி தான் சொல்லி

ஒப்பிலா தீவினையேனை உய்யக்கொண்டு

செப்பமே செய்து திரிகின்ற சீர் கண்டே

#3653

சீர் கண்டுகொண்டு திருந்து நல் இன் கவி

நேர்பட யான் சொல்லும் நீர்மை இலாமையில்

ஏர்வு இலா என்னை தன்னாக்கி என்னால் தன்னை

பார் பரவு இன் கவி பாடும் பரமரே

#3654

இன் கவி பாடும் பரம் கவிகளால்

தன் கவி தான் தன்னை பாடுவியாது இன்று

நன்கு வந்து என்னுடன் ஆக்கி என்னால் தன்னை

வன் கவி பாடும் என் வைகுந்தநாதனே

#3655

வைகுந்தநாதன் என வல்வினை மாய்ந்து அற

செய் குந்தன் தன்னை என் ஆக்கி என்னால் தன்னை

வைகுந்தன் ஆக புகழ வண் தீம் கவி

செய் குந்தன் தன்னை எ நாள் சிந்தித்து ஆர்வனோ

#3656

ஆர்வனோ ஆழி அங்கை எம்பிரான் புகழ்

பார் விண் நீர் முற்றும் கலந்து பருகிலும்

ஏர்வு இலா என்னை தன்னாக்கி என்னால் தன்னை

சீர் பெற இன் கவி சொன்ன திறத்துக்கே

#3657

திறத்துக்கு ஏய் துப்புரவு ஆம் திருமாலின் சீர்

இறப்பு எதிர் காலம் பருகிலும் ஆர்வனோ

மறப்பு இலா என்னை தன்னாக்கி என்னால் தன்னை

உற பல இன் கவி சொன்ன உதவிக்கே

#3658

உதவி கைம்மாறு என் உயிர் என்ன உற்று எண்ணில்

அதுவும் மற்று ஆங்கவன் தன்னது என்னால் தன்னை

பதவிய இன் கவி பாடிய அப்பனுக்கு

எதுவும் ஒன்றும் இல்லை செய்வது இங்கும் அங்கே

#3659

இங்கும் அங்கும் திருமால் அன்றி இன்மை கண்டு

அங்ஙனே வண் குருகூர் சடகோபன்

இங்ஙனே சொன்ன ஓர் ஆயிரத்து இ பத்தும்

எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்குமே

#3660

இன்பம் பயக்க எழில் மலர் மாதரும் தானும் இ ஏழ் உலகை

இன்பம் பயக்க இனிது உடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள்
பிரான்

அன்புற்று அமர்ந்து உறைகின்ற அணி பொழில் சூழ் திருவாறன்விளை

அன்புற்று அமர்ந்து வலஞ்செய்து கைதொழும் நாள்களும் ஆகும்-கொலோ

#3661

ஆகும்-கொல் ஐயம் ஒன்று இன்றி அகல் இடம் முற்றவும் ஈர் அடியே

ஆகும் பரிசு நிமிர்ந்த திருக்குறள் அப்பன் அமர்ந்து உறையும்

மாகம் திகழ் கொடி மாடங்கள் நீடு மதிள் திருவாறன்விளை

மா கந்த நீர்கொண்டு தூவி வலஞ்செய்து கைதொழ கூடும்-கொலோ

#3662

கூடும்-கொல் வைகலும் கோவிந்தனை மதுசூதனை கோளரியை

ஆடும் பறவை மிசை கண்டு கைதொழுது அன்றி அவன் உறையும்

பாடும் பெரும் புகழ் நான்மறை வேள்வி ஐந்து ஆறு அங்கம் பன்னினர் வாழ்

நீடு பொழில் திருவாறன்விளை தொழ வாய்க்கும்-கொல் நிச்சலுமே

#3663

வாய்க்கும்-கொல் நிச்சலும் எப்பொழுதும் மனத்து ஈங்கு நினைக்கப்பெற

வாய்க்கும் கரும்பும் பெரும் செந்நெலும் வயல் சூழ் திருவாறன்விளை

வாய்க்கும் பெரும் புகழ் மூ உலகு ஈசன் வடமதுரை பிறந்த

வாய்க்கும் மணி நிற கண்ணபிரான்-தன் மலர் அடி போதுகளே

#3664

மலர் அடி போதுகள் என் நெஞ்சத்து எப்பொழுதும் இருத்தி வணங்க

பலர் அடியார் முன்பு அருளிய பாம்பு அணை அப்பன் அமர்ந்து உறையும்

மலரின் மணி நெடு மாடங்கள் நீடு மதிள் திருவாறன்விளை

உலகம் மலி புகழ் பாட நம் மேல் வினை ஒன்றும் நில்லா கெடுமே

#3665

ஒன்றும் நில்லா கெடும் முற்றவும் தீவினை உள்ளி தொழு-மின் தொண்டீர்

அன்று அங்கு அமர் வென்று உருப்பிணி நங்கை அணி நெடும் தோள் புணர்ந்தான்

என்றும் எப்போதும் என் நெஞ்சம் துதிப்ப உள்ளே இருக்கின்ற பிரான்

நின்ற அணி திருவாறன்விளை என்னும் நீள் நகரம் அதுவே

#3666

நீள் நகரம் அதுவே மலர் சோலைகள் சூழ் திருவாறன்விளை

நீள் நகரத்து உறைகின்ற பிரான் நெடுமால் கண்ணன் விண்ணவர் கோன்

வாணபுரம் புக்கு முக்கண் பிரானை தொலைய வெம் போர்கள் செய்து

வாணனை ஆயிரம் தோள் துணித்தான் சரண் அன்றி மற்று ஒன்று இலமே

#3667

அன்றி மற்று ஒன்று இலம் நின் சரணே என்று அகல் இரும் பொய்கையின்வாய்

நின்று தன் நீள் கழல் ஏத்திய ஆனையின் நெஞ்சு இடர் தீர்த்த பிரான்

சென்று அங்கு இனிது உறைகின்ற செழும் பொழில் சூழ் திருவாறன்விளை

ஒன்றி வலஞ்செய்ய ஒன்றுமோ தீவினை உள்ளத்தின் சார்வு அல்லவே

#3668

தீவினை உள்ளத்தின் சார்வு அல்ல ஆகி தெளி விசும்பு ஏறலுற்றால்

நாவினுள்ளும் உள்ளத்துள்ளும் அமைந்த தொழிலினுள்ளும் நவின்று

யாவரும் வந்து வணங்கும் பொழில் திருவாறன்விளை அதனை

மேவி வலஞ்செய்து கைதொழ கூடும்-கொல் என்னும் என் சிந்தனையே

#3669

சிந்தை மற்றொன்றின் திறத்தது அல்லா தன்மை தேவபிரான் அறியும்

சிந்தையினால் செய்வ தான் அறியாதன மாயங்கள் ஒன்றும் இல்லை

சிந்தையினால் சொல்லினால் செய்கையால் நிலத்தேவர் குழு வணங்கும்

சிந்தை மகிழ் திருவாறன்விளை உறை தீர்த்தனுக்கு அற்ற பின்னே

#3670

தீர்த்தனுக்கு அற்ற பின் மற்று ஓர் சரண் இல்லை என்று எண்ணி தீர்த்தனுக்கே

தீர்த்த மனத்தனன் ஆகி செழும் குருகூர் சடகோபன் சொன்ன

தீர்த்தங்கள் ஆயிரத்துள் இவை பத்தும் வல்லார்களை தேவர் வைகல்

தீர்த்தங்களே என்று பூசித்து நல்கி உரைப்பர் தம் தேவியர்க்கே

#3671

தேவிமார் ஆவார் திருமகள் பூமி ஏவ மற்று அமரர் ஆட்செய்வார்

மேவிய உலகம் மூன்று அவை ஆட்சி வேண்டுவேண்டு உருவம் நின் உருவம்

பாவியேன் தன்னை அடுகின்ற கமல கண்ணது ஓர் பவள வாய் மணியே

ஆவியே அமுதே அலை கடல் கடைந்த அப்பனே காணுமாறு அருளாய்

#3672

காணுமாறு அருளாய் என்று என்றே கலங்கி கண்ண நீர் அலமர வினையேன்

பேணுமாறு எல்லாம் பேணி நின் பெயரே பிதற்றுமாறு அருள் எனக்கு அந்தோ

காணுமாறு அருளாய் காகுத்தா கண்ணா தொண்டனேன் கற்பக கனியே

பேணுவார் அமுதே பெரிய தண் புனல் சூழ் பெரு நிலம் எடுத்த பேராளா

#3673

எடுத்த பேராளன் நந்தகோபன் தன் இன் உயிர் சிறுவனே அசோதைக்கு

அடுத்த பேரின்ப குல இளம் களிறே அடியனேன் பெரிய அம்மானே

கடுத்த போர் அவுணன் உடல் இரு பிளவா கைஉகிர் ஆண்ட எம் கடலே

அடுத்தது ஓர் உருவாய் இன்று நீ வாராய் எங்ஙனம் தேறுவர் உமரே

#3674

உமர் உகந்து உகந்த உருவம் நின் உருவம் ஆகி உன்தனக்கு அன்பர் ஆனார்

அவர் உகந்து அமர்ந்த செய்கை உன் மாயை அறிவு ஒன்றும் சங்கிப்பன் வினையேன்

அமர் அது பண்ணி அகல் இடம் புடைசூழ் அடு படை அவித்த அம்மானே

அமரர் தம் அமுதே அசுரர்கள் நஞ்சே என்னுடை ஆருயிரேயோ

#3675

ஆர் உயிரேயோ அகல் இடம் முழுதும் படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து அளந்த

பேர் உயிரேயோ பெரிய நீர் படைத்து அங்கு உறைந்து அது கடைந்து அடைத்து உடைத்த

சீர் உயிரேயோ மனிசர்க்கு தேவர் போல தேவர்க்கும் தேவாவோ

ஓர் உயிரேயோ உலகங்கட்கு எல்லாம் உன்னை நான் எங்கு வந்து உறுகோ

#3676

எங்கு வந்து உறுகோ என்னை ஆள்வானே ஏழ் உலகங்களும் நீயே

அங்கு அவர்க்கு அமைத்த தெய்வமும் நீயே அவற்று அவை கருமமும் நீயே

பொங்கிய புறம்பால் பொருள் உளவேலும் அவையுமோ நீ இன்னே ஆனால்

மங்கிய அறிவாம் நேர்ப்பமும் நீயே வான் புலன் இறந்ததும் நீயே

#3677

இறந்ததும் நீயே எதிர்ந்ததும் நீயே நிகழ்வதோ நீ இன்னே ஆனால்

சிறந்த நின் தன்மை அது இது உது என்று அறிவு ஒன்றும் சங்கிப்பன் வினையேன்

கறந்த பால் நெய்யே நெய்யின் இன் சுவையே கடலினுள் அமுதமே அமுதில்

பிறந்த இன் சுவையே சுவையது பயனே பின்னை தோள் மணந்த பேர் ஆயா

#3678

மணந்த பேர் ஆயா மாயத்தால் முழுதும் வல்வினையேனை ஈர்கின்ற

குணங்களை உடையாய் அசுரர் வன் கையர் கூற்றமே கொடிய புள் உயர்த்தாய்

பணங்கள் ஆயிரமும் உடைய பைம் நாக பள்ளியாய் பாற்கடல் சேர்ப்பா

வணங்குமாறு அறியேன் மனமும் வாசகமும் செய்கையும் யானும் நீ தானே

#3679

யானும் நீ தானே ஆவதோ மெய்யே அரு நரகு அவையும் நீ ஆனால்

வான் உயர் இன்பம் எய்தில் என் மற்றை நரகமே எய்தில் என் எனினும்

யானும் நீ தானாய் தெளி-தொறும் நன்றும் அஞ்சுவன் நரகம் நான் அடைதல்

வான் உயர் இன்பம் மன்னி வீற்றிருந்தாய் அருளு நின் தாள்களை எனக்கே

#3680

தாள்களை எனக்கே தலைத்தலை சிறப்ப தந்த பேர் உதவி கைம்மாறா

தோள்களை ஆர தழுவி என் உயிரை அற விலை செய்தனன் சோதீ

தோள்கள் ஆயிரத்தாய் முடிகள் ஆயிரத்தாய் துணை மலர் கண்கள் ஆயிரத்தாய்

தாள்கள் ஆயிரத்தாய் பேர்கள் ஆயிரத்தாய் தமியனேன் பெரிய அப்பனே

#3681

பெரிய அப்பனை பிரமன் அப்பனை உருத்திரன் அப்பனை முனிவர்க்கு

உரிய அப்பனை அமரர் அப்பனை உலகுக்கு ஓர் தனி அப்பன்-தன்னை

பெரிய வண் குருகூர் வண் சடகோபன் பேணின ஆயிரத்துள்ளும்

உரிய சொல் மாலை இவையும் பத்து இவற்றால் உய்யலாம் தொண்டீர் நங்கட்கே

#3682

நங்கள் வரி வளை ஆயங்காளோ நம்முடை ஏதலர் முன்பு நாணி

நுங்கட்கு யான் ஒன்று உரைக்கும் மாற்றம் நோக்குகின்றேன் எங்கும் காணமாட்டேன்

சங்கம் சரிந்தன சாய் இழந்தேன் தட முலை பொன் நிறமாய் தளர்ந்தேன்

வெம் கண் பறவையின் பாகன் எம் கோன் வேங்கட வாணனை வேண்டி சென்றே

#3683

வேண்டி சென்று ஒன்று பெறுகிற்பாரில் என்னுடை தோழியர் நுங்கட்கேலும்

ஈண்டு இது உரைக்கும் படியை அந்தோ காண்கின்றிலேன் இடராட்டியேன் நான்

காண் தகு தாமரை கண்ணன் கள்வன் விண்ணவர் கோன் நங்கள் கோனை கண்டால்

ஈண்டிய சங்கும் நிறைவும் கொள்வான் எத்தனை காலம் இளைக்கின்றேனே

#3684

காலம் இளைக்கில் அல்லால் வினையேன் நான் இளைக்கின்றிலன் கண்டுகொள்-மின்

ஞாலம் அறிய பழி சுமந்தேன் நல் நுதலீர் இனி நாணி தான் என்

நீல மலர் நெடும் சோதி சூழ்ந்த நீண்ட முகில் வண்ணன் கண்ணன் கொண்ட

கோல வளையொடும் மாமை கொள்வான் எத்தனை காலமும் கூட சென்றே

#3685

கூட சென்றேன் இனி என் கொடுக்கேன் கோல் வளை நெஞ்சு தொடக்கம் எல்லாம்

பாடு அற்று ஒழிய இழந்து வைகல் பல் வளையார் முன் பரிசு அழிந்தேன்

மாட கொடி மதிள் தென் குளந்தை வண் குட-பால் நின்ற மாய கூத்தன்

ஆடல் பறவை உயர்த்த வெல் போர் ஆழிவலவனை ஆதரித்தே

#3686

ஆழிவலவனை ஆதரிப்பும் ஆங்கு அவன் நம்மில் வரவும் எல்லாம்

தோழியர்காள் நம் உடையமேதான் சொல்லுவதோ இங்கு அரியதுதான்

ஊழி-தோறு ஊழி ஒருவனாக நன்கு உணர்வார்க்கும் உணரலாகா

சூழல் உடைய சுடர் கொள் ஆதி தொல்லை அம் சோதி நினைக்கும்-காலே

#3687

தொல்லை அம் சோதி நினைக்கும்-கால் என் சொல் அளவு அன்று இமையோர்-தமக்கும்

எல்லை இலாதன கூழ்ப்பு செய்யும் அ திறம் நிற்க எம் மாமை கொண்டான்

அல்லி மலர் தண் துழாயும் தாரான் ஆர்க்கு இடுகோ இனி பூசல் சொல்லீர்

வல்லி வள வயல் சூழ் குடந்தை மா மலர்-கண் வளர்கின்ற மாலே

#3688

மால் அரி கேசவன் நாரணன் சீமாதவன் கோவிந்தன் வைகுந்தன் என்றுஎன்று

ஓலம் இட என்னை பண்ணி விட்டிட்டு ஒன்றும் உருவும் சுவடும் காட்டான்

ஏல மலர் குழல் அன்னைமீர்காள் என்னுடை தோழியர்காள் என் செய்கேன்

காலம் பல சென்றும் காண்பது ஆணை உங்களோடு எங்கள் இடை இல்லையே

#3689

இடை இல்லை யான் வளர்த்த கிளிகாள் பூவைகள்காள் குயில்காள் மயில்காள்

உடைய நம் மாமையும் சங்கும் நெஞ்சும் ஒன்றும் ஒழிய ஒட்டாது கொண்டான்

அடையும் வைகுந்தமும் பாற்கடலும் அஞ்சன வெற்பும் அவை நணிய

கடையற பாசங்கள் விட்ட பின்னை அன்றி அவன் அவை காண்கொடானே

#3690

காண்கொடுப்பான் அல்லன் ஆர்க்கும் தன்னை கைசெய்

அப்பாலது ஓர் மாயம்-தன்னால்

மாண் குறள் கோல வடிவு காட்டி மண்ணும் விண்ணும் நிறைய

மலர்ந்த

சேண் சுடர் தோள்கள் பல தழைத்த தேவபிராற்கு என்

நிறைவினோடு

நாண் கொடுத்தேன் இனி என் கொடுக்கேன் என்னுடை நல் நுதல்

நங்கைமீர்காள்

#3691

என்னுடை நல் நுதல் நங்கைமீர்காள் யான் இனி செய்வது என்

என் நெஞ்சு என்னை

நின் இடையேன் அல்லேன் என்று நீங்கி நேமியும் சங்கும் இரு

கை கொண்டு

பல் நெடும் சூழ் சுடர் ஞாயிற்றோடு பால் மதி ஏந்தி ஓர் கோல நீல

நல் நெடும் குன்றம் வருவது ஒப்பான் நாள்மலர் பாதம்

அடைந்ததுவே

#3692

பாதம் அடைவதன் பாசத்தாலே மற்றவன் பாசங்கள் முற்ற விட்டு

கோது இல் புகழ் கண்ணன் தன் அடி மேல் வண் குருகூர் சடகோபன் சொன்ன

தீது இல் அந்தாதி ஓர் ஆயிரத்துள் இவையும் ஓர் பத்து இசையொடும் வல்லார்

ஆதும் ஓர் தீது இலர் ஆகி இங்கும் அங்கும் எல்லாம் அமைவார்கள் தாமே

#3693

அங்கும் இங்கும் வானவர் தானவர் யாவரும்

எங்கும் இனையை என்று உன்னை அறியகிலாது அலற்றி

அங்கம் சேரும் பூ மகள் மண் மகள் ஆய் மகள்

சங்கு சக்கர கையவன் என்பர் சரணமே

#3694

சரணம் ஆகிய நான்மறை நூல்களும் சாராதே

மரணம் தோற்றம் வான்பிணி மூப்பு என்று இவை மாய்த்தோம்

கரண பல் படை பற்று அற ஓடும் கனல் ஆழி

அரண திண் படை ஏந்திய ஈசற்கு ஆளாயே

#3695

ஆளும் ஆளார் ஆழியும் சங்கும் சுமப்பார் தாம்

வாளும் வில்லும் கொண்டு பின் செல்வார் மற்று இல்லை

தாளும் தோளும் கைகளை ஆர தொழ காணேன்

நாளும் நாளும் நாடுவன் அடியேன் ஞாலத்தே

#3696

ஞாலம் போனகம் பற்றி ஓர் முற்றா உரு ஆகி

ஆலம் பேர் இலை அன்னவசம் செய்யும் அம்மானே

காலம் பேர்வது ஓர் கார் இருள் ஊழி ஒத்து உளதால் உன்

கோலம் கார் எழில் காணலுற்று ஆழும் கொடியேற்கே

#3697

கொடியார் மாட கோளூர் அகத்தும் புளியங்குடியும்

மடியாது இன்னே நீ துயில் மேவி மகிழ்ந்தது தான்

அடியார் அல்லல் தவிர்த்த அசைவோ அன்றேல் இப்

படி தான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே

#3698

பணியா அமரர் பணிவும் பண்பும் தாமே ஆம்

அணி ஆர் ஆழியும் சங்கமும் ஏந்தும் அவர் காண்-மின்

தணியா வெம் நோய் உலகில் தவிர்ப்பான் திருநீல

மணி ஆர் மேனியோடு என் மனம் சூழ வருவாரே

#3699

வருவார் செல்வார் வண்பரிசாரத்து இருந்த என்

திரு வாழ் மார்வற்கு என் திறம் சொல்லார் செய்வது என்

உரு ஆர் சக்கரம் சங்கு சுமந்து இங்கு உம்மோடு

ஒரு பாடு உழல்வான் ஓர் அடியானும் உளன் என்றே

#3700

என்றே என்னை உன் ஏர் ஆர் கோல திருந்து அடி கீழ்

நின்றே ஆட்செய்ய நீ கொண்டருள நினைப்பதுதான்

குன்று ஏழ் பார் ஏழ் சூழ் கடல் ஞாலம் முழு ஏழும்

நின்றே தாவிய நீள் கழல் ஆழி திருமாலே

#3701

திருமால் நான்முகன் செம் சடையான் என்று இவர்கள் எம்

பெருமான் தன்மையை யார் அறிகிற்பார் பேசி என்

ஒரு மா முதல்வா ஊழி பிரான் என்னை ஆளுடை

கரு மா மேனியன் என்பன் என் காதல் கலக்கவே

#3702

கலக்கம் இல்லா நல் தவ முனிவர் கரை கண்டோர்

துளக்கம் இல்லா வானவர் எல்லாம் தொழுவார்கள்

மலக்கம் எய்த மா கடல்-தன்னை கடைந்தானை

உலக்க நாம் புகழ்கிற்பது என் செய்வது உரையீரே

#3703

உரையா வெம் நோய் தவிர அருள் நீள் முடியானை

வரை ஆர் மாடம் மன்னு குருகூர் சடகோபன்

உரை ஏய் சொல் தொடை ஓர் ஆயிரத்துள் இ பத்தும்

நிரையே வல்லார் நீடு உலகத்து பிறவாரே

#3704

வார் கடா அருவி யானை மா மலையின் மருப்பு இணை குவடு இறுத்து உருட்டி

ஊர் கொள் திண் பாகன் உயிர் செகுத்து அரங்கின் மல்லரை கொன்று சூழ் பரண் மேல்

போர் கடா அரசர் புறக்கிட மாடம் மீமிசை கஞ்சனை தகர்த்த

சீர் கொள் சிற்றாயன் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எங்கள் செல் சார்வே

#3705

எங்கள் செல் சார்வு யாமுடை அமுதம் இமையவர் அப்பன் என் அப்பன்

பொங்கு மூ உலகும் படைத்து அளித்து அழிக்கும் பொருந்து மூவுருவன் எம் அருவன்

செம் கயல் உகளும் தேம் பணை புடை சூழ் திருச்செங்குன்றூர் திருச்சிற்றாறு

அங்கு அமர்கின்ற ஆதியான் அல்லால் யாவர் மற்று என் அமர் துணையே

#3706

என் அமர் பெருமான் இமையவர் பெருமான் இரு நிலம் இடந்த எம் பெருமான்

முன்னை வல்வினைகள் முழுது உடன் மாள என்னை ஆள்கின்ற எம் பெருமான்

தென் திசைக்கு அணி கொள் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரை மீபால்

நின்ற எம் பெருமான் அடி அல்லால் சரண் நினைப்பிலும் பிறிது இல்லை எனக்கே

#3707

பிறிது இல்லை எனக்கு பெரிய மூ உலகும் நிறைய பேர் உருவமாய் நிமிர்ந்த

குறிய மாண் எம்மான் குரை கடல் கடைந்த கோல மாணிக்கம் என் அம்மான்

செறி குலை வாழை கமுகு தெங்கு அணி சூழ் திருச்செங்குன்றூர் திருச்சிற்றாறு

அறிய மெய்ம்மையே நின்ற எம் பெருமான் அடி இணை அல்லது ஓர் அரணே

#3708

அல்லது ஓர் அரணும் அவனில் வேறு இல்லை அது பொருள் ஆகிலும் அவனை

அல்லது என் ஆவி அமர்ந்து அணைகில்லாது ஆதலால் அவன் உறைகின்ற

நல்ல நான்மறையோர் வேள்வியுள் மடுத்த நறும் புகை விசும்பு ஒளி மறைக்கும்

நல்ல நீள் மாட திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எனக்கு நல் அரணே

#3709

எனக்கு நல் அரணை எனது ஆருயிரை இமையவர் தந்தை தாய்-தன்னை

தனக்கும் தன் தன்மை அறிவு அரியானை தடம் கடல் பள்ளி அம்மானை

மனக்கொள் சீர் மூவாயிரவர் வண் சிவனும் அயனும் தானும் ஒப்பார் வாழ்

கனக்கொள் திண் மாட திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு அதனுள் கண்டேனே

#3710

திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு-அதனுள் கண்ட அ திருவடி என்றும்

திரு செய்ய கமல கண்ணும் செ வாயும் செ அடியும் செய்ய கையும்

திரு செய்ய கமல உந்தியும் செய்ய கமலை மார்பும் செய்ய உடையும்

திரு செய்ய முடியும் ஆரமும் படையும் திகழ என் சிந்தையுளானே

#3711

திகழ என் சிந்தையுள் இருந்தானை செழு நிலத்தேவர் நான்மறையோர்

திசை கைகூப்பி ஏத்தும் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றம் கரையானை

புகர் கொள் வானவர்கள் புகலிடம்-தன்னை அசுரர் வன் கையர் வெம் கூற்றை

புகழுமாறு அறியேன் பொருந்து மூ உலகும் படைப்பொடு கெடுப்பு காப்பவனே

#3712

படைப்பொடு கெடுப்பு காப்பவன் பிரம பரம்பரன் சிவப்பிரான் அவனே

இடைப்புக்கு ஓர் உருவும் ஒழிவு இல்லை அவனே புகழ்வு இல்லை யாவையும் தானே

கொடை பெரும் புகழார் இனையர் தன் ஆனார் கூரிய விச்சையோடு ஒழுக்கம்

நடை பலி இயற்கை திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு அமர்ந்த நாதனே

#3713

அமர்ந்த நாதனை அவரவர் ஆகி அவர்க்கு அருள் அருளும் அம்மானை

அமர்ந்த தண் பழன திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றம் கரையானை

அமர்ந்த சீர் மூவாயிரவர் வேதியர்கள் தம்பதி அவனிதேவர் வாழ்வு

அமர்ந்த மாயோனை முக்கண் அம்மானை நான்முகனை அமர்ந்தேனே

#3714

தேனை நன் பாலை கன்னலை அமுதை திருந்து உலகு உண்ட அம்மானை

வான நான்முகனை மலர்ந்த தண் கொப்பூழ் மலர் மிசை படைத்த மாயோனை

கோனை வண் குருகூர் வண் சடகோபன் சொன்ன ஆயிரத்துள் இ பத்தும்

வானின் மீது ஏற்றி அருள்செய்து முடிக்கும் பிறவி மா மாய கூத்தினையே

#3715

மாய கூத்தா வாமனா வினையேன் கண்ணா கண் கை கால்

தூய செய்ய மலர்களா சோதி செ வாய் முகிழதா

சாயல் சாம திருமேனி தண் பாசடையா தாமரை நீள்

வாச தடம் போல் வருவானே ஒரு நாள் காண வாராயே

#3716

காண வாராய் என்று என்று கண்ணும் வாயும் துவர்ந்து அடியேன்

நாணி நல் நாட்டு அலமந்தால் இரங்கி ஒரு நாள் நீ அந்தோ

காண வாராய் கரு நாயிறு உதிக்கும் கரு மா மாணிக்க

நாள் நல் மலை போல் சுடர் சோதி முடி சேர் சென்னி அம்மானே

#3717

முடி சேர் சென்னி அம்மா நின் மொய் பூம் தாம தண் துழாய்

கடி சேர் கண்ணி பெருமானே என்று என்று ஏங்கி அழுத-கால்

படி சேர் மகர குழைகளும் பவள வாயும் நால் தோளும்

துடி சேர் இடையும் அமைந்தது ஓர் தூ நீர் முகில் போல் தோன்றாயே

#3718

தூ நீர் முகில் போல் தோன்றும் நின் சுடர் கொள் வடிவும் கனி வாயும்

தே நீர் கமல கண்களும் வந்து என் சிந்தை நிறைந்தவா

மா நீர் வெள்ளி மலை-தன் மேல் வண் கார் நீல முகில் போல

தூ நீர் கடலுள் துயில்வானே எந்தாய் சொல்ல மாட்டேனே

#3719

சொல்ல மாட்டேன் அடியேன் உன் துளங்கு சோதி திருப்பாதம்

எல்லை இல் சீர் இள நாயிறு இரண்டு போல் என் உள்ளவா

அல்லல் என்னும் இருள் சேர்தற்கு உபாயம் என்னே ஆழி சூழ்

மல்லை ஞாலம் முழுது உண்ட மா நீர் கொண்டல் வண்ணனே

#3720

கொண்டல் வண்ணா குடக்கூத்தா வினையேன் கண்ணா கண்ணா என்

அண்ட வாணா என்று என்னை ஆள கூப்பிட்டு அழைத்த-கால்

விண்-தன் மேல் தான் மண் மேல் தான் விரி நீர் கடல் தான் மற்றுத்தான்

தொண்டனேன் உன் கழல் காண ஒரு நாள் வந்து தோன்றாயே

#3721

வந்து தோன்றாய் அன்றேல் உன் வையம் தாய மலர் அடி கீழ்

முந்தி வந்து யான் நிற்ப முகப்பே கூவி பணிக்கொள்ளாய்

செம் தண் கமல கண் கை கால் சிவந்த வாய் ஓர் கரு நாயிறு

அந்தம் இல்லா கதிர் பரப்பி அலர்ந்தது ஒக்கும் அம்மானே

#3722

ஒக்கும் அம்மான் உருவம் என்று உள்ளம் குழைந்து நாள்நாளும்

தொக்க மேக பல் குழாங்கள் காணும்-தோறும் தொலைவன் நான்

தக்க ஐவர் தமக்காய் அன்று ஈரைம்பதின்மர் தாள் சாய

புக்க நல் தேர் தனி பாகா வாராய் இதுவோ பொருத்தமே

#3723

இதுவோ பொருத்தம் மின் ஆழி படையாய் ஏறும் இரும் சிறை புள்

அதுவே கொடியா உயர்த்தானே என்று என்று ஏங்கி அழுத-கால்

எதுவேயாக கருதும்-கொல் இ மா ஞாலம் பொறை தீர்ப்பான்

மது வார் சோலை உத்தரமதுரை பிறந்த மாயனே

#3724

பிறந்த மாயா பாரதம் பொருத மாயா நீ இன்னே

சிறந்த கால் தீ நீர் வான் மண் பிறவும் ஆய பெருமானே

கறந்த பாலுள் நெய்யே போல் இவற்றுள் எங்கும் கண்டுகொள்

இறந்து நின்ற பெரு மாயா உன்னை எங்கே காண்கேனே

#3725

எங்கே காண்கேன் ஈன் துழாய் அம்மான் தன்னை யான்

என்றுஎன்று

அங்கே தாழ்ந்த சொற்களால் அம் தண் குருகூர் சடகோபன்

செம் கேழ் சொன்ன ஆயிரத்துள் இவையும் பத்தும் வல்லார்கள்

இங்கே காண இ பிறப்பே மகிழ்வர் எல்லியும் காலையே

#3726

எல்லியும் காலையும் தன்னை நினைந்து எழ

நல்ல அருள்கள் நமக்கே தந்து அருள்செய்வான்

அல்லி அம் தண் அம் துழாய் முடி அப்பன் ஊர்

செல்வர்கள் வாழும் திருக்கடித்தானமே

#3727

திருக்கடித்தானமும் என்னுடைய சிந்தையும்

ஒருக்கடுத்து உள்ளே உறையும் பிரான் கண்டீர்

செரு கடுத்து அன்று திகைத்த அரக்கரை

உரு கெட வாளி பொழிந்த ஒருவனே

#3728

ஒருவர் இருவர் ஓர் மூவர் என நின்று

உருவு கரந்து உள்ளும்-தோறும் தித்திப்பான்

திரு அமர் மார்வன் திருக்கடித்தானத்தை

மருவி உறைகின்ற மாய பிரானே

#3729

மாய பிரான் என வல்வினை மாய்ந்து அற

நேசத்தினால் நெஞ்சம் நாடு குடிகொண்டான்

தேசத்து அமரர் திருக்கடித்தானத்தை

வாச பொழில் மன்னு கோயில் கொண்டானே

#3730

கோயில் கொண்டான் தன் திருக்கடித்தானத்தை

கோயில் கொண்டான் அதனோடும் என் நெஞ்சகம்

கோயில் கொள் தெய்வம் எல்லாம் தொழ வைகுந்தம்

கோயில் கொண்ட குடக்கூத்த அம்மானே

#3731

கூத்த அம்மான் கொடியேன் இடர் முற்றவும்

மாய்த்த அம்மான் மதுசூத அம்மான் உறை

பூத்த பொழில் தண் திருக்கடித்தானத்தை

ஏத்த நில்லா குறிக்கொள்-மின் இடரே

#3732

கொள்-மின் இடர் கெட உள்ளத்து கோவிந்தன்

மண் விண் முழுதும் அளந்த ஒண் தாமரை

மண்ணவர் தாம் தொழ வானவர் தாம் வந்து

நண்ணு திருக்கடித்தான நகரே

#3733

தான நகர்கள் தலைச்சிறந்து எங்கெங்கும்

வான் இ நிலம் கடல் முற்றும் எம் மாயற்கே

ஆன இடத்தும் என் நெஞ்சும் திருக்கடி

தான நகரும் தன தாய பதியே

#3734

தாய பதிகள் தலைச்சிறந்து எங்கெங்கும்

மாயத்தினால் மன்னி வீற்றிருந்தான் உறை

தேசத்து அமரர் திருக்கடித்தானத்துள்

ஆயர்க்கு அதிபதி அற்புதன் தானே

#3735

அற்புதன் நாராயணன் அரி வாமனன்

நிற்பது மேவி இருப்பது என் நெஞ்சகம்

நல் புகழ் வேதியர் நான்மறை நின்று அதிர்

கற்பக சோலை திருக்கடித்தானமே

#3736

சோலை திருக்கடித்தானத்து உறை திரு

மாலை மதிள் குருகூர் சடகோபன் சொல்

பாலோடு அமுது அன்ன ஆயிரத்து இ பத்தும்

மேலை வைகுந்தத்து இருத்தும் வியந்தே

#3737

இருத்தும் வியந்து என்னை தன் பொன் அடி கீழ் என்று

அருத்தித்து எனைத்து ஓர் பல நாள் அழைத்தேற்கு

பொருத்தம் உடை வாமனன் தான் புகுந்து என்தன்

கருத்தை உற வீற்றிருந்தான் கண்டு கொண்டே

#3738

இருந்தான் கண்டுகொண்டு எனது ஏழை நெஞ்சு ஆளும்

திருந்தாத ஓர் ஐவரை தேய்ந்து அற மன்னி

பெரும் தாள் களிற்றுக்கு அருள்செய்த பெருமான்

தரும் தான் அருள் தான் இனி யான் அறியேனே

#3739

அருள் தான் இனி யான் அறியேன் அவன் என் உள்

இருள் தான் அற வீற்றிருந்தான் இது அல்லால்

பொருள் தான் எனில் மூ உலகும் பொருள் அல்ல

மருள் தான் ஈதோ மாய மயக்கு மயக்கே

#3740

மாய மயக்கு மயக்கான் என்னை வஞ்சித்து

ஆயன் அமரர்க்கு அரி ஏறு எனது அம்மான்

தூய சுடர் சோதி தனது என் உள் வைத்தான்

தேசம் திகழும் தன் திருவருள் செய்தே

#3741

திகழும் தன் திருவருள் செய்து உலகத்தார்

புகழும் புகழ் தான் அது காட்டி தந்து என் உள்

திகழும் மணி குன்றம் ஒன்றே ஒத்து நின்றான்

புகழும் புகழ் மற்று எனக்கும் ஓர் பொருளே

#3742

பொருள் மற்று எனக்கும் ஓர் பொருள் தன்னில் சீர்க்க

தருமேல் பின்னை யார்க்கு அவன் தன்னை கொடுக்கும்

கருமாணிக்க குன்றத்து தாமரை போல்

திருமார்பு கால் கண் கை செவ்வாய் உந்தியானே

#3743

செ வாய் உந்தி வெண் பல் சுடர் குழை தம்மோடு

எவ்வாய் சுடரும் தம்மில் முன் வளாய் கொள்ள

செ வாய் முறுவலோடு எனது உள்ளத்து இருந்த

அ வாய் அன்றி யான் அறியேன் மற்று அருளே

#3744

அறியேன் மற்று அருள் என்னை ஆளும் பிரானார்

வெறிதே அருள்செய்வர் செய்வார்கட்கு உகந்து

சிறியேனுடை சிந்தையுள் மூ உலகும் தன்

நெறியா வயிற்றில் கொண்டு நின்று ஒழிந்தாரே

#3745

வயிற்றில் கொண்டு நின்று ஒழிந்தாரும் எவரும்

வயிற்றில் கொண்டு நின்று ஒரு மூ உலகும் தம்

வயிற்றில் கொண்டு நின்ற வண்ணம் நின்ற மாலை

வயிற்றில் கொண்டு மன்ன வைத்தேன் மதியாலே

#3746

வைத்தேன் மதியால் எனது உள்ளத்து அகத்தே

எய்த்தே ஒழிவேன் அல்லேன் என்றும் எப்போதும்

மொய்த்து ஏய் திரை மோது தண் பாற்கடலுளால்

பைத்து ஏய் சுடர் பாம்பு அணை நம் பரனையே

#3747

சுடர் பாம்பு அணை நம் பரனை திருமாலை

அடி சேர்வகை வண் குருகூர் சடகோபன்

முடிப்பான் சொன்ன ஆயிரத்து இ பத்தும் சன்மம்

விட தேய்ந்து அற நோக்கும் தன் கண்கள் சிவந்தே

#3748

கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்து உள்ளே

வெண் பல் இலகு சுடர் இலகு விலகு மகர குண்டலத்தன்

கொண்டல் வண்ணன் சுடர் முடியன் நான்கு தோளன் குனி சார்ங்கன்

ஒண் சங்கு கதை வாள் ஆழியான் ஒருவன் அடியேன் உள்ளானே

#3749

அடியேன் உள்ளான் உடல் உள்ளான் அண்டத்து அகத்தான் புறத்து உள்ளான்

படியே இது என்று உரைக்கலாம் படியன் அல்லன் பரம்பரன்

கடி சேர் நாற்றத்துள் ஆலை இன்ப துன்ப கழி நேர்மை

ஒடியா இன்ப பெருமையோன் உணர்வில் உம்பர் ஒருவனே

#3750

உணர்வில் உம்பர் ஒருவனை அவனது அருளால் உறல்-பொருட்டு என்

உணர்வின் உள்ளே இருத்தினேன் அதுவும் அவனது இன் அருளே

உணர்வும் உயிரும் உடம்பும் மற்று உலப்பிலனவும் பழுதேயாம்

உணர்வை பெற ஊர்ந்து இற ஏறி யானும் தானாய் ஒழிந்தானே

#3751

யானும் தானாய் ஒழிந்தானை யாதும் எவர்க்கும் முன்னோனை

தானும் சிவனும் பிரமனும் ஆகி பணைத்த தனிமுதலை

தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகி தித்தித்து என்

ஊனில் உயிரில் உணர்வினில் நின்ற ஒன்றை உணர்ந்தேனே

#3752

நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு அதன் நுண் நேர்மை அது இது என்று

ஒன்றும் ஒருவர்க்கு உணரலாகாது உணர்ந்தும் மேலும் காண்பு அரிது

சென்றுசென்று பரம்பரமாய் யாதும் இன்றி தேய்ந்து அற்று

நன்று தீது என்று அறிவு அரிதாய் நன்றாய் ஞானம் கடந்ததே

#3753

நன்றாய் ஞானம் கடந்துபோய் நல் இந்திரியம் எல்லாம் ஈர்த்து

ஒன்றாய் கிடந்த அரும் பெரும் பாழ் உலப்பு இல் அதனை உணர்ந்துஉணர்ந்து

சென்று ஆங்கு இன்ப துன்பங்கள் செற்று களைந்து பசை அற்றால்

அன்றே அப்போதே வீடு அதுவே வீடு வீடாமே

#3754

அதுவே வீடு வீடுபேற்று இன்பம் தானும் அது தேறி

எதுவே தானும் பற்று இன்றி யாதும் இலிகள் ஆகிற்கில்

அதுவே வீடு வீடுபேற்று இன்பம் தானும் அது தேறாது

எதுவே வீடு ஏது இன்பம் என்று எய்த்தார் எய்த்தார் எய்த்தாரே

#3755

எய்த்தார் எய்த்தார் எய்த்தார் என்று இல்லத்தாரும் புறத்தாரும்

மொய்த்து ஆங்கு அலறி முயங்க தாம் போகும்-போது உன்மத்தர் போல்

பித்தே ஏறி அநுராகம் பொழியும்-போது எம் பெம்மானோடு

ஒத்தே சென்று அங்கு உள்ளம் கூட கூடிற்றாகில் நல் உறைப்பே

#3756

கூடிற்றாகில் நல் உறைப்பு கூடாமையை கூடினால்

ஆடல் பறவை உயர் கொடி எம் மாயன் ஆவது அது அதுவே

வீடை பண்ணி ஒரு பரிசே எதிர்வும் நிகழ்வும் கழிவுமாய்

ஓடி திரியும் யோகிகளும் உளரும் இல்லை அல்லரே

#3757

உளரும் இல்லை அல்லராய் உளராய் இல்லை ஆகியே

உளர் எம் ஒருவர் அவர் வந்து என் உள்ளத்துள்ளே உறைகின்றார்

வளரும் பிறையும் தேய் பிறையும் போல அசைவும் ஆக்கமும்

வளரும் சுடரும் இருளும் போல் தெருளும் மருளும் மாய்த்தோமே

#3758

தெருளும் மருளும் மாய்த்து தன் திருந்து செம்பொன் கழல் அடி கீழ்

அருளி இருத்தும் அம்மானாம் அயனாம் சிவனாம் திருமாலால்

அருள பட்ட சடகோபன் ஓர் ஆயிரத்துள் இ பத்தால்

அருளி அடி கீழ் இருத்தும் நம் அண்ணல் கருமாணிக்கமே

#3759

கருமாணிக்க மலை மேல் மணி தடம் தாமரை காடுகள் போல்

திருமார்வு வாய் கண் கை உந்தி கால் உடை ஆடைகள் செய்ய பிரான்

திருமால் எம்மான் செழு நீர் வயல் குட்ட நாட்டு திருப்புலியூர்

அரு மாயன் பேர் அன்றி பேச்சு இலள் அன்னைமீர் இதற்கு என் செய்கேனோ

#3760

அன்னைமீர் இதற்கு என் செய்கேன் அணி மேருவின் மீது உலவும்

துன்னு சூழ் சுடர் ஞாயிறும் அன்றியும் பல் சுடர்களும் போல்

மின்னு நீள் முடி ஆரம் பல் கலன் தான் உடை எம்பெருமான்

புன்னை அம் பொழில் சூழ் திருப்புலியூர் புகழும் இவளே

#3761

புகழும் இவள் நின்று இராப்பகல் பொரு நீர் கடல் தீ பட்டு எங்கும்

திகழும் எரியொடு செல்வது ஒப்ப செழும் கதிர் ஆழி முதல்

புகழும் பொரு படை ஏந்தி போர் புக்கு அசுரரை பொன்றுவித்தான்

திகழும் மணி நெடு மாடம் நீடு திருப்புலியூர் வளமே

#3762

ஊர் வளம் கிளர் சோலையும் கரும்பும் பெரும் செந்நெலும் சூழ்ந்து

ஏர் வளம் கிளர் தண் பணை குட்ட நாட்டு திருப்புலியூர்

சீர் வளம் கிளர் மூ உலகு உண்டு உமிழ் தேவபிரான்

பேர் வளம் கிளர்ந்தன்றி பேச்சு இலள் இன்று இ புனை இழையே

#3763

புனை இழைகள் அணிவும் ஆடை உடையும் புதுக்கணிப்பும்

நினையும் நீர்மையது அன்று இவட்கு இது நின்று நினைக்க புக்கால்

சுனையினுள் தடம் தாமரை மலரும் தண் திருப்புலியூர்

முனைவன் மூ உலகு ஆளி அப்பன் திருவருள் மூழ்கினளே

#3764

திருவருள் மூழ்கி வைகலும் செழு நீர் நிற கண்ணபிரான்

திருவருள்களும் சேர்ந்தமைக்கு அடையாளம் திருந்த உள

திருவருள் அருளால் அவன் சென்று சேர் தண் திருப்புலியூர்

திருவருள் கமுகு ஒண் பழத்தது மெல் இயல் செ இதழே

#3765

மெல் இலை செல்வ வண் கொடி புல்க வீங்கு இளம் தாள் கமுகின்

மல் இலை மடல் வாழை ஈன் கனி சூழ்ந்து மணம் கமழ்ந்து

புல் இலை தெங்கினூடு கால் உலவும் தண் திருப்புலியூர்

மல்லல் அம் செல்வ கண்ணன் தாள் அடைந்தாள் இ மடவரலே

#3766

மடவரல் அன்னைமீர்கட்கு என் சொல்லி சொல்லுகேன் மல்லை செல்வ

வடமொழி மறைவாணர் வேள்வியுள் நெய் அழல் வான் புகை போய்

திட விசும்பில் அமரர் நாட்டை மறைக்கும் தண் திருப்புலியூர்

பட அரவு அணையான்-தன் நாமம் அல்லால் பரவாள் இவளே

#3767

பரவாள் இவள் நின்று இராப்பகல் பனி நீர் நிற கண்ணபிரான்

விரவு ஆர் இசை மறை வேதியர் ஒலி வேலையின் நின்று ஒலிப்ப

கரவு ஆர் தடம்-தொறும் தாமரை கயம் தீவிகை நின்று அலரும்

புரவு ஆர் கழனிகள் சூழ் திருப்புலியூர் புகழ் அன்றி மற்றே

#3768

அன்றி மற்றோர் உபாயம் என் இவள் அம் தண் துழாய் கமழ்தல்

குன்ற மா மணி மாட மாளிகை கோல குழாங்கள் மல்கி

தென் திசை திலதம் புரை குட்ட நாட்டு திருப்புலியூர்

நின்ற மாய பிரான் திருவருளாம் இவள் நேர்பட்டதே

#3769

நேர்பட்ட நிறை மூ உலகுக்கும் நாயகன் தன் அடிமை

நேர்பட்ட தொண்டர்தொண்டர் தொண்டர்தொண்டன் சடகோபன்
சொல்

நேர்பட்ட தமிழ் மாலை ஆயிரத்துள் இவை பத்தும்

நேர்பட்டார் அவர் நேர்பட்டார் நெடுமாற்கு அடிமைசெய்யவே

#3770

நெடுமாற்கு அடிமைசெய்வேன் போல் அவனை கருத வஞ்சித்து

தடுமாற்று அற்ற தீக்கதிகள் முற்றும் தவிர்ந்த சதிர் நினைந்தால்

கொடு மா வினையேன் அவன் அடியார் அடியே கூடும் இது அல்லால்

விடுமாறு என்பது என் அந்தோ வியன் மூ உலகு பெறினுமே

#3771

வியன் மூ உலகு பெறினும் போய் தானே தானே ஆனாலும்

புயல் மேகம் போல் திருமேனி அம்மான் புனை பூம் கழல் அடி கீழ்

சயமே அடிமை தலைநின்றார் திருத்தாள் வணங்கி இம்மையே

பயனே இன்பம் யான் பெற்றது உறுமோ பாவியேனுக்கே

#3772

உறுமோ பாவியேனுக்கு இ உலகம் மூன்றும் உடன் நிறைய

சிறு மா மேனி நிமிர்த்த என் செந்தாமரை கண் திருக்குறளன்

நறு மா விரை நாள்மலர் அடி கீழ் புகுதல் அன்றி அவன் அடியார்

சிறு மா மனிசராய் என்னை ஆண்டார் இங்கே திரியவே

#3773

இங்கே திரிந்தேற்கு இழுக்கு உற்று என் இரு மாநிலம் முன் உண்டு உமிழ்ந்த

செங்கோலத்த பவள வாய் செந்தாமரை கண் என் அம்மான்

பொங்கு ஏழ் புகழ்கள் வாயவாய் புலன் கொள் வடிவு என் மனத்ததுவாய்

அங்கு ஏய் மலர்கள் கையவாய் வழிபட்டு ஓட அருளிலே

#3774

வழிபட்டு ஓட அருள்பெற்று மாயன் கோல மலர் அடி கீழ்

சுழிபட்டு ஓடும் சுடர்ச்சோதி வெள்ளத்து இன்புற்று இருந்தாலும்

இழிபட்டு ஓடும் உடலினில் பிறந்து தன் சீர் யான் கற்று

மொழிபட்டு ஓடும் கவி அமுதம் நுகர்ச்சி உறுமோ முழுதுமே

#3775

நுகர்ச்சி உறுமோ மூ உலகின் வீடுபேறு தன் கேழ் இல்

புகர் செம் முகத்த களிறு அட்ட பொன் ஆழிக்கை என் அம்மான்

நிகர் செம் பங்கி எரி விழிகள் நீண்ட அசுரர் உயிர் எல்லாம்

தகர்த்து உண்டு உழலும் புள் பாகன் பெரிய தனி மா புகழே

#3776

தனி மா புகழே எஞ்ஞான்றும் நிற்கும்படியா தான் தோன்றி

முனி மா பிரம முதல் வித்தாய் உலகம் மூன்றும் முளைப்பித்த

தனி மா தெய்வ தளிர் அடி கீழ் புகுதல் அன்றி அவன் அடியார்

நனி மா கலவி இன்பமே நாளும் வாய்க்க நங்கட்கே

#3777

நாளும் வாய்க்க நங்கட்கு நளிர் நீர் கடலை படைத்து தன்

தாளும் தோளும் முடிகளும் சமன் இலாத பல பரப்பி

நீளும் படர் பூம் கற்பக காவும் நிறை பல் நாயிற்றின்

கோளும் உடைய மணி மலை போல் கிடந்தான் தமர்கள் கூட்டமே

#3778

தமர்கள் கூட்ட வல்வினையை நாசம் செய்யும் சது மூர்த்தி

அமர் கொள் ஆழி சங்கு வாள் வில் தண்டு ஆதி பல் படையன்

குமரன் கோல ஐங்கணை வேள் தாதை கோது இல் அடியார்-தம்

தமர்கள் தமர்கள் தமர்களாம் சதிரே வாய்க்க தமியேற்கே

#3779

வாய்க்க தமியேற்கு ஊழி-தோறு ஊழிஊழி மா காயாம்

பூ கொள் மேனி நான்கு தோள் பொன் ஆழி கை என் அம்மான்

நீக்கம் இல்லா அடியார்-தம் அடியார்அடியார்அடியார் எம்

கோக்கள் அவர்க்கே குடிகளாய் செல்லும் நல்ல கோட்பாடே

#3780

நல்ல கோட்பாட்டு உலகங்கள் மூன்றினுள்ளும் தான் நிறைந்த

அல்லி கமல கண்ணனை அம் தண் குருகூர் சடகோபன்

சொல்லப்பட்ட ஆயிரத்துள் இவையும் பத்தும் வல்லார்கள்

நல்ல பதத்தால் மனை வாழ்வர் கொண்ட பெண்டீர் மக்களே

#3781

கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர் பிறரும்

கண்டதோடு பட்டது அல்லால் காதல் மற்று யாதும் இல்லை

எண் திசையும் கீழும் மேலும் முற்றவும் உண்ட பிரான்

தொண்டரோமாய் உய்யல் அல்லால் இல்லை கண்டீர் துணையே

#3782

துணையும் சார்வும் ஆகுவார் போல் சுற்றத்தவர் பிறரும்

அணைய வந்த ஆக்கம் உண்டேல் அட்டைகள் போல் சுவைப்பர்

கணை ஒன்றாலே ஏழ் மரமும் எய்த எம் கார் முகிலை

புணை என்று உய்ய போகல் அல்லால் இல்லை கண்டீர் பொருளே

#3783

பொருள் கை உண்டாய் செல்ல காணில் போற்றி என்று ஏற்று எழுவர்

இருள் கொள் துன்பத்து இன்மை காணில் என்னே என்பாரும் இல்லை

மருள் கொள் செய்கை அசுரர் மங்க வடமதுரை பிறந்தாற்கு

அருள் கொள் ஆளாய் உய்யல் அல்லால் இல்லை கண்டீர் அரணே

#3784

அரணம் ஆவர் அற்ற காலைக்கு என்று என்று அமைக்கப்பட்டார்

இரணம் கொண்ட தெப்பர் ஆவர் இன்றியிட்டாலும் அஃதே

வருணித்து என்னே வடமதுரை பிறந்தவன் வண் புகழே

சரண் என்று உய்ய போகல் அல்லால் இல்லை கண்டீர் சதிரே

#3785

சதுரம் என்று தம்மை தாமே சம்மதித்து இன் மொழியார்

மதுர போகம் துற்றவரே வைகி மற்று ஒன்று உறுவர்

அதிர் கொள் செய்கை அசுரர் மங்க வடமதுரை பிறந்தாற்கு

எதிர்கொள் ஆளாய் உய்யல் அல்லால் இல்லை கண்டீர் இன்பமே

#3786

இல்லை கண்டீர் இன்பம் அந்தோ உள்ளது நினையாதே

தொல்லையார்கள் எத்தனைவர் தோன்றி கழிந்து ஒழிந்தார்

மல்லை மூதூர் வடமதுரை பிறந்தவன் வண் புகழே

சொல்லி உய்ய போகல் அல்லால் மற்றொன்று இல்லை சுருக்கே

#3787

மற்றொன்று இல்லை சுருங்க சொன்னோம் மாநிலத்து எ உயிர்க்கும்

சிற்ற வேண்டா சிந்திப்பே அமையும் கண்டீர்கள் அந்தோ

குற்றம் அன்று எங்கள் பெற்ற தாயன் வடமதுரை பிறந்தான்

குற்றம் இல் சீர் கற்று வைகல் வாழ்தல் கண்டீர் குணமே

#3788

வாழ்தல் கண்டீர் குணம் இது அந்தோ மாயவன் அடி பரவி

போழ்து போக உள்ளகிற்கும் புன்மை இலாதவர்க்கு

வாழ் துணையா வடமதுரை பிறந்தவன் வண் புகழே

வீழ் துணையா போம் இதனில் யாதும் இல்லை மிக்கதே

#3789

யாதும் இல்லை மிக்கு அதனில் என்றுஎன்று அது கருதி

காது செய்வான் கூதை செய்து கடைமுறை வாழ்க்கையும் போம்

மா துகிலின் கொடி கொள் மாட வடமதுரை பிறந்த

தாது சேர் தோள் கண்ணன் அல்லால் இல்லை கண்டீர் சரணே

#3790

கண்ணன் அல்லால் இல்லை கண்டீர் சரண் அது நிற்க வந்து

மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரை பிறந்தான்

திண்ணமா நும் உடைமை உண்டேல் அவன் அடி சேர்த்து உய்ம்-
மினோ

எண்ண வேண்டா நும்மது ஆதும் அவன் அன்றி மற்று
இல்லையே

#3791

ஆதும் இல்லை மற்று அவனில் என்று அதுவே துணிந்து

தாது சேர் தோள் கண்ணனை குருகூர் சடகோபன் சொன்ன

தீது இலாத ஒண் தமிழ்கள் இவை ஆயிரத்துள் இ பத்தும்

ஓத வல்ல பிராக்கள் நம்மை ஆளுடையார்கள் பண்டே

#3792

பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்

கொண்டு நின் கோயில் சீய்த்து பல்படிகால் குடிகுடி வழிவந்து ஆட்செய்யும்

தொண்டரோர்க்கு அருளி சோதி வாய் திறந்து உன் தாமரை கண்களால் நோக்காய்

தெண் திரை பொருநல் தண் பணை சூழ்ந்த திருப்புளிங்குடி கிடந்தானே

#3793

குடிக்கிடந்து ஆக்கம் செய்து நின் தீர்த்த அடிமை குற்றேவல்செய்து உன் பொன்

அடி கடவாதே வழி வருகின்ற அடியரோர்க்கு அருளி நீ ஒரு நாள்

படிக்கு அளவாக நிமிர்த்த நின் பாத பங்கயமே தலைக்கு அணியாய்

கொடி கொள் பொன் மதிள் சூழ் குளிர் வயல் சோலை திருப்புளிங்குடி கிடந்தானே

#3794

கிடந்த நாள் கிடந்தாய் எத்தனை காலம் கிடத்தி உன் திரு உடம்பு அசைய

தொடர்ந்து குற்றேவல்செய்து தொல் அடிமை வழி வரும் தொண்டரோர்க்கு அருளி

தடம் கொள் தாமரை கண் விழித்து நீ எழுந்து உன் தாமரை மங்கையும் நீயும்

இடம் கொள் மூ உலகும் தொழ இருந்தருளாய் திருப்புளிங்குடி கிடந்தானே

#3795

புளிங்குடி கிடந்து வரகுணமங்கை இருந்து வைகுந்தத்துள் நின்று

தெளிந்த என் சிந்தையகம் கழியாதே என்னை ஆள்வாய் எனக்கு அருளி

நளிர்ந்த சீர் உலகம் மூன்றுடன் வியப்ப நாங்கள் கூத்து ஆடி நின்று ஆர்ப்ப

பளிங்கு நீர் முகிலின் பவளம் போல் கனி வாய் சிவப்ப நீ காண வாராயே

#3796

பவளம் போல் கனி வாய் சிவப்ப நீ காண வந்து நின் பல் நிலா முத்தம்

தவழ் கதிர் முறுவல் செய்து நின் திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய்

பவள நன் படர் கீழ் சங்கு உறை பொருநல் தண் திருப்புளிங்குடி கிடந்தாய்

கவள மா களிற்றின் இடர் கெட தடத்து காய் சின பறவை ஊர்ந்தானே

#3797

காய் சின பறவை ஊர்ந்து பொன் மலையின் மீமிசை கார் முகில் போல

மா சின மாலி மாலிமான் என்று அங்கு அவர் பட கனன்று முன் நின்ற

காய் சின வேந்தே கதிர் முடியானே கலி வயல் திருப்புளிங்குடியாய்

காய் சின ஆழி சங்கு வாள் வில் தண்டு ஏந்தி எம் இடர் கடிவானே

#3798

எம் இடர் கடிந்து இங்கு என்னை ஆள்வானே இமையவர்-தமக்கும் ஆங்கு அனையாய்

செம் மடல் மலரும் தாமரை பழன தண் திருப்புளிங்குடி கிடந்தாய்

நம்முடை அடியர் கவ்வை கண்டு உகந்து நாம் களித்து உளம் நலம் கூர

இ மட உலகர் காண நீ ஒரு நாள் இருந்திடாய் எங்கள் கண் முகப்பே

#3799

எங்கள் கண் முகப்பே உலகர்கள் எல்லாம் இணை அடி தொழுது எழுது இறைஞ்சி

தங்கள் அன்பு ஆர தமது சொல் வலத்தால் தலைத்தலை சிறந்து பூசிப்ப

திங்கள் சேர் மாட திருப்புளிங்குடியாய் திருவைகுந்தத்துள்ளாய் தேவா

இங்கண் மா ஞாலத்து இதனுளும் ஒரு நாள் இருந்திடாய் வீற்று இடம் கொண்டே

#3800

வீற்று இடம்கொண்டு வியன் கொள் மா ஞாலத்து இதனுளும் இருந்திடாய் அடியோம்

போற்றி ஓவாதே கண் இணை குளிர புது மலர் ஆகத்தை பருக

சேற்று இள வாளை செந்நெலூடு உகளும் செழும் பனை திருப்புளிங்குடியாய்

கூற்றமாய் அசுரர் குலமுதல் அரிந்த கொடு வினை படைகள் வல்லானே

#3801

கொடு வினை படைகள் வல்லையாய் அமரர்க்கு இடர் கெட அசுரர்கட்கு இடர் செய்

கடு வினை நஞ்சே என்னுடை அமுதே கலி வயல் திருப்புளிங்குடியாய்

வடிவு இணை இல்லா மலர் மகள் மற்றை நில மகள் பிடிக்கும் மெல் அடியை

கொடு வினையேனும் பிடிக்க நீ ஒரு நாள் கூவுதல் வருதல் செய்யாயே

#3802

கூவுதல் வருதல் செய்திடாய் என்று குரை கடல் கடைந்தவன்-தன்னை

மேவி நன்கு அமர்ந்த வியன் புனல் பொருநல் வழுதி நாடன் சடகோபன்

நா இயல் பாடல் ஆயிரத்துள்ளும் இவையும் ஓர் பத்தும் வல்லார்கள்

ஓவுதல் இன்றி உலகம் மூன்று அளந்தான் அடி இணை உள்ளத்து ஓர்வாரே

#3803

ஓர் ஆயிரமாய் உலகு ஏழ் அளிக்கும்

பேர் ஆயிரம் கொண்டது ஓர் பீடு உடையன்

கார் ஆயின காள நல் மேனியினன்

நாராயணன் நங்கள் பிரான் அவனே

#3804

அவனே அகல் ஞாலம் படைத்து இடந்தான்

அவனே அஃது உண்டு உமிழ்ந்தான் அளந்தான்

அவனே அவனும் அவனும் அவனும்

அவனே மற்று எல்லாமும் அறிந்தனமே

#3805

அறிந்தன வேத அரும் பொருள் நூல்கள்

அறிந்தன கொள்க அரும் பொருள் ஆதல்

அறிந்தனர் எல்லாம் அரியை வணங்கி

அறிந்தனர் நோய்கள் அறுக்கும் மருந்தே

#3806

மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கு என்று

பெரும் தேவர் குழாங்கள் பிதற்றும் பிரான்

கரும் தேவன் எம்மான் கண்ணன் விண் உலகம்

தரும் தேவனை சோரேல் கண்டாய் மனமே

#3807

மனமே உன்னை வல்வினையேன் இரந்து

கனமே சொல்லினேன் இது சோரேல் கண்டாய்

புனம் மேவிய பூம் தண் துழாய் அலங்கல்

இனம் ஏதும் இலானை அடைவதுமே

#3808

அடைவதும் அணி ஆர் மலர் மங்கை தோள்

மிடைவதும் அசுரர்க்கு வெம் போர்களே

கடைவதும் கடலுள் அமுதம் என் மனம்

உடைவதும் அவற்கே ஒருங்காகவே

#3809

ஆகம் சேர் நரசிங்கம் அது ஆகி ஓர்

ஆகம் வள் உகிரால் பிளந்தான் உறை

மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம்

ஏகம் எண்ணும் இராப்பகல் இன்றியே

#3810

இன்றி போக இருவினையும் கெடுத்து

ஒன்றி யாக்கை புகாமை உய்யக்கொள்வான்

நின்ற வேங்கடம் நீள் நிலத்து உள்ளது

சென்று தேவர்கள் கைதொழுவார்களே

#3811

தொழுது மா மலர் நீர் சுடர் தூபம் கொண்டு

எழுதும் என்னும் இது மிகை ஆதலின்

பழுது இல் தொல் புகழ் பாம்பு அணை பள்ளியாய்

தழுவுமாறு அறியேன் உன தாள்களே

#3812

தாள தாமரையான் உனது உந்தியான்

வாள் கொள் நீள் மழு ஆளி உன் ஆகத்தான்

ஆளராய் தொழுவாரும் அமரர்கள்

நாளும் என் புகழ்கோ உன சீலமே

#3813

சீலம் எல்லை இலான் அடி மேல் அணி

கோலம் நீள் குருகூர் சடகோபன் சொல்

மாலை ஆயிரத்துள் இவை பத்தினின்

பாலர் வைகுந்தம் ஏறுதல் பான்மையே

#3814

மை ஆர் கரும் கண்ணி கமல மலர் மேல்

செய்யாள் திருமார்வினில் சேர் திருமாலே

வெய்யார் சுடர் ஆழி சுரி சங்கம் ஏந்தும்

கையா உன்னை காண கருதும் என் கண்ணே

#3815

கண்ணே உன்னை காண கருதி என் நெஞ்சம்

எண்ணே கொண்ட சிந்தையதாய் நின்று இயம்பும்

விண்ணோர் முனிவர்க்கு என்றும் காண்பு அரியாயை

நண்ணாது ஒழியேன் என்று நான் அழைப்பனே

#3816

அழைக்கின்ற அடிநாயேன் நாய் கூழை வாலால்

குழைக்கின்றது போல என் உள்ளம் குழையும்

மழைக்கு அன்று குன்றம் எடுத்து ஆநிரை காத்தாய்

பிழைக்கின்றது அருள் என்று பேதுறுவனே

#3817

உறுவது இது என்று உனக்கு ஆள் பட்டு நின்-கண்

பெறுவது எது-கொல் என்று பேதையேன் நெஞ்சம்

மறுகல் செய்யும் வானவர் தானவர்க்கு என்றும்

அறிவது அரிய அரியாய அம்மானே

#3818

அரியாய அம்மானை அமரர் பிரானை

பெரியானை பிரமனை முன் படைத்தானை

வரி வாள் அரவின் அணை பள்ளிகொள்கின்ற

கரியான் கழல் காண கருதும் கருத்தே

#3819

கருத்தே உன்னை காண கருதி என் நெஞ்சத்து

இருத்தாக இருத்தினேன் தேவர்கட்கு எல்லாம்

விருத்தா விளங்கும் சுடர்ச்சோதி உயரத்து

ஒருத்தா உன்னை உள்ளும் என் உள்ளம் உகந்தே

#3820

உகந்தே உன்னை உள்ளும் என் உள்ளத்து அகம்-பால்

அகம் தான் அமர்ந்தே இடம் கொண்ட அமலா

மிகும் தானவன் மார்வு அகலம் இரு கூறா

நகந்தாய் நரசிங்கம் அது ஆய உருவே

#3821

உரு ஆகிய ஆறு சமயங்கட்கு எல்லாம்

பொரு ஆகி நின்றான் அவன் எல்லா பொருட்கும்

அரு ஆகிய ஆதியை தேவர்கட்கு எல்லாம்

கரு ஆகிய கண்ணனை கண்டுகொண்டேனே

#3822

கண்டுகொண்டு என் கண் இணை ஆர களித்து

பண்டை வினையாயின பற்றோடு அறுத்து

தொண்டர்க்கு அமுது உண்ண சொல் மாலைகள் சொன்னேன்

அண்டத்து அமரர் பெருமான் அடியேனே

#3823

அடியான் இவன் என்று எனக்கு ஆர் அருள்செய்யும்

நெடியானை நிறை புகழ் அம் சிறை புள்ளின்

கொடியானை குன்றாமல் உலகம் அளந்த

அடியானை அடைந்து அடியேன் உய்ந்தவாறே

#3824

ஆறா மத யானை அடர்த்தவன் தன்னை

சேறு ஆர் வயல் தென் குருகூர் சடகோபன்

நூறே சொன்ன ஓர் ஆயிரத்துள் இ பத்தும்

ஏறே தரும் வானவர் தம் இன் உயிர்க்கே

#3825

இன் உயிர் சேவலும் நீரும் கூவிக்கொண்டு இங்கு எத்தனை

என் உயிர் நோவ மிழற்றேல்-மின் குயில் பேடைகாள்

என் உயிர் கண்ணபிரானை நீர் வர கூவுகிலீர்

என் உயிர் கூவி கொடுப்பார்க்கும் இத்தனை வேண்டுமோ

#3826

இத்தனை வேண்டுவது அன்று அந்தோ அன்றில் பேடைகாள்

எத்தனை நீரும் நும் சேவலும் கரைந்து ஏங்குதிர்

வித்தகன் கோவிந்தன் மெய்யன் அல்லன் ஒருவர்க்கும்

அத்தனை ஆம் இனி என் உயிர் அவன் கையதே

#3827

அவன் கையதே எனது ஆருயிர் அன்றில் பேடைகாள்

எவன் சொல்லி நீர் குடைந்து ஆடுதிர் புடை சூழவே

தவம் செய்தில்லா வினையாட்டியேன் உயிர் இங்கு உண்டோ

எவன் சொல்லி நிற்றும் நும் ஏங்கு கூக்குரல் கேட்டுமே

#3828

கூக்குரல் கேட்டும் நம் கண்ணன் மாயன் வெளிப்படான்

மேல் கிளை கொள்ளேல்-மின் நீரும் சேவலும் கோழிகாள்

வாக்கும் மனமும் கருமமும் நமக்கு ஆங்கதே

ஆக்கையும் ஆவியும் அந்தரம் நின்று உழலுமே

#3829

அந்தரம் நின்று உழல்கின்ற யானுடை பூவைகாள்

நும் திறத்து ஏதும் இடை இல்லை குழறேல்-மினோ

இந்திர ஞாலங்கள் காட்டி இ ஏழ் உலகும் கொண்ட

நம் திருமார்பன் நம் ஆவி உண்ண நன்கு எண்ணினான்

#3830

நன்கு எண்ணி நான் வளர்த்த சிறு கிளி பைதலே

இன் குரல் நீ மிழற்றேல் என் ஆருயிர் காகுத்தன்

நின் செய்ய வாய் ஒக்கும் வாயன் கண்ணன் கை காலினன்

நின் பசும் சாம நிறத்தன் கூட்டுண்டு நீங்கினான்

#3831

கூட்டுண்டு நீங்கிய கோல தாமரை கண் செ வாய்

வாட்டம் இல் என் கருமாணிக்கம் கண்ணன் மாயன் போல்

கோட்டிய வில்லொடு மின்னும் மேக குழாங்கள்காள்

காட்டேல்-மின் நும் உரு என் உயிர்க்கு அது காலனே

#3832

உயிர்க்கு அது காலன் என்று உம்மை யான் இரந்தேற்கு நீர்

குயில் பைதல்காள் கண்ணன் நாமமே குழறி கொன்றீர்

தயிர் பழம் சோற்றொடு பால் அடிசிலும் தந்து சொல்

பயிற்றிய நல் வளம் ஊட்டினீர் பண்பு உடையீரே

#3833

பண்பு உடை வண்டொடு தும்பிகாள் பண் மிழற்றேல்-மின்

புண் புரை வேல் கொடு குத்தால் ஒக்கும் நும் இன் குரல்

தண் பெரு நீர் தடம் தாமரை மலர்ந்தால் ஒக்கும்

கண் பெரும் கண்ணன் நம் ஆவி உண்டு எழ நண்ணினான்

#3834

எழ நண்ணி நாமும் நம் வான நாடனோடு ஒன்றினோம்

பழன நல் நாரை குழாங்கள்காள் பயின்று என் இனி

இழை நல்ல ஆக்கையும் பையவே புயக்கு அற்றது

தழை நல்ல இன்பம் தலைப்பெய்து எங்கும் தழைக்கவே

#3835

இன்பம் தலைப்பெய்து எங்கும் தழைத்த பல் ஊழிக்கு

தன் புகழ் ஏத்த தனக்கு அருள்செய்த மாயனை

தென் குருகூர் சடகோபன் சொல் ஆயிரத்துள் இவை

ஒன்பதோடு ஒன்றுக்கும் மூ உலகும் உருகுமே

#3836

உருகுமால் நெஞ்சம் உயிரின் பரமன்றி

பெருகுமால் வேட்கையும் என் செய்கேன் தொண்டனேன்

தெருவு எல்லாம் காவி கமழ் திருக்காட்கரை

மருவிய மாயன் தன் மாயம் நினை-தொறே

#3837

நினை-தொறும் சொல்லும்-தொறும் நெஞ்சு இடிந்து உகும்

வினை கொள் சீர் பாடிலும் வேம் எனது ஆருயிர்

சுனை கொள் பூஞ்சோலை தென் காட்கரை என் அப்பா

நினைகிலேன் நான் உனக்கு ஆட்செய்யும் நீர்மையே

#3838

நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்து புகுந்து என்னை

ஈர்மைசெய்து என் உயிராய் என் உயிர் உண்டான்

சீர் மல்கு சோலை தென் காட்கரை என் அப்பன்

கார் முகில் வண்ணன் தன் கள்வம் அறிகிலேன்

#3839

அறிகிலேன் தன்னுள் அனைத்து உலகும் நிற்க

நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்

வெறி கமழ் சோலை தென் காட்கரை என் அப்பன்

சிறிய என் ஆருயிர் உண்ட திருவருளே

#3840

திருவருள்செய்பவன் போல என்னுள் புகுந்து

உருவமும் ஆருயிரும் உடனே உண்டான்

திரு வளர் சோலை தென் காட்கரை என் அப்பன்

கரு வளர் மேனி என் கண்ணன் கள்வங்களே

#3841

என் கண்ணன் கள்வம் எனக்கு செம்மாய் நிற்கும்

அம் கண்ணன் உண்ட என் ஆருயிர் கோது இது

புன்கண்மை எய்தி புலம்பி இராப்பகல்

என் கண்ணன் என்று அவன் காட்கரை ஏத்துமே

#3842

காட்கரை ஏத்தும் அதனுள் கண்ணா என்னும்

வேட்கை நோய் கூர நினைந்து கரைந்து உகும்

ஆட்கொள்வான் ஒத்து என் உயிர் உண்ட மாயனால்

கோள் குறைபட்டது என் ஆருயிர் கோள் உண்டே

#3843

கோள் உண்டான் அன்றி வந்து என் உயிர் தான் உண்டான்

நாளும் நாள் வந்து என்னை முற்றவும் தான் உண்டான்

காள நீர் மேக தென் காட்கரை என் அப்பற்கு

ஆள் அன்றே பட்டது என் ஆருயிர் பட்டதே

#3844

ஆருயிர் பட்டது எனது உயிர் பட்டது

பேர் இதழ் தாமரை கண் கனி வாயது ஓர்

கார் எழில் மேக தென் காட்கரை கோயில் கொள்

சீர் எழில் நால் தடம் தோள் தெய்வ வாரிக்கே

#3845

வாரிக்கொண்டு உன்னை விழுங்குவன் காணில் என்று

ஆர்வு உற்ற என்னை ஒழிய என்னில் முன்னம்

பாரித்து தான் என்னை முற்ற பருகினான்

கார் ஒக்கும் காட்கரை அப்பன் கடியனே

#3846

கடியனாய் கஞ்சனை கொன்ற பிரான்-தன்னை

கொடி மதிள் தென் குருகூர் சடகோபன் சொல்

வடிவு அமை ஆயிரத்து இ பத்தினால் சன்மம்

முடிவு எய்தி நாசம் கண்டீர்கள் எம் கானலே

#3847

எம் கானல் அகம் கழிவாய் இரை தேர்ந்து இங்கு இனிது அமரும்

செம் கால மட நாராய் திருமூழிக்களத்து உறையும்

கொங்கு ஆர் பூம் துழாய் முடி எம் குடக்கூத்தர்க்கு என் தூதாய்

நும் கால்கள் என் தலை மேல் கெழுமீரோ நுமரோடே

#3848

நுமரோடும் பிரியாதே நீரும் நும் சேவலுமாய்

அமர் காதல் குருகு இனங்காள் அணி மூழிக்களத்து உறையும்

எமராலும் பழிப்புண்டு இங்கு என்தம்மால் இழிப்புண்டு

தமரோடு அங்கு உறைவார்க்கு தக்கிலமே கேளீரே

#3849

தக்கிலமே கேளீர்கள் தடம் புனல் வாய் இரை தேரும்

கொக்கு இனங்காள் குருகு இனங்காள் குளிர்மூழிக்களத்து உறையும்

செக்கமலத்து அலர் போலும் கண் கை கால் செம் கனி வாய்

அ கமலத்து இலை போலும் திருமேனி அடிகளுக்கே

#3850

திருமேனி அடிகளுக்கு தீவினையேன் விடு தூதாய்

திருமூழிக்களம் என்னும் செழு நகர்வாய் அணி முகில்காள்

திருமேனி அவட்கு அருளீர் என்ற-கால் உம்மை தன்

திருமேனி ஒளி அகற்றி தெளி விசும்பு கடியுமே

#3851

தெளி விசும்பு கடிது ஓடி தீ வளைத்து மின் இலகும்

ஒளி முகில்காள் திருமூழிக்களத்து உறையும் ஒண்சுடர்க்கு

தெளி விசும்பு திருநாடா தீவினையேன் மனத்து உறையும்

துளி வார் கள் குழலார்க்கு என் தூது உரைத்தல் செப்பு-மினே

#3852

தூது உரைத்தல் செப்பு-மின்கள் தூ மொழி வாய் வண்டு இனங்காள்

போது இரைத்து மது நுகரும் பொழில் மூழிக்களத்து உறையும்

மாதரை தம் மார்வகத்தே வைத்தார்க்கு என் வாய் மாற்றம்

தூது உரைத்தல் செப்புதிரேல் சுடர் வளையும் கலையுமே

#3853

சுடர் வளையும் கலையும் கொண்டு அருவினையேன் தோள் துறந்த

படர் புகழான் திருமூழிக்களத்து உறையும் பங்கய கண்

சுடர் பவள வாயனை கண்டு ஒரு நாள் ஓர் தூய் மாற்றம்

படர் பொழில்வாய் குருகு இனங்காள் எனக்கு ஒன்று பணியீரே

#3854

எனக்கு ஒன்று பணியீர்கள் இரும் பொழில்வாய் இரை தேர்ந்து

மனக்கு இன்பம் பட மேவும் வண்டு இனங்காள் தும்பிகாள்

கன கொள் திண் மதிள் புடை சூழ் திருமூழிக்களத்து உறையும்

புன கொள் காயா மேனி பூம் துழாய் முடியார்க்கே

#3855

பூம் துழாய் முடியார்க்கு பொன் ஆழி கையாருக்கு

ஏந்து நீர் இளம் குருகே திருமூழிக்களத்தாருக்கு

ஏந்து பூண் முலை பயந்து என் இணை மலர் கண் நீர் ததும்ப

தாம் தம்மை கொண்டு அகல்தல் தகவு அன்று என்று உரையீரே

#3856

தகவு அன்று என்று உரையீர்கள் தடம் புனல்வாய் இரை தேர்ந்து

மிக இன்பம் பட மேவும் மேல் நடைய அன்னங்காள்

மிக மேனி மெலிவு எய்தி மேகலையும் ஈடு அழிந்து என்

அக மேனி ஒழியாமே திருமூழிக்களத்தார்க்கே

#3857

ஒழிவு இன்றி திருமூழிக்களத்து உறையும் ஒண் சுடரை

ஒழிவு இல்லா அணி மழலை கிளி மொழியாள் அலற்றிய சொல்

வழு இல்லா வண் குருகூர் சடகோபன் வாய்ந்து உரைத்த

அழிவு இல்லா ஆயிரத்து இ பத்தும் நோய் அறுக்குமே

#3858

அறுக்கும் வினையாயின ஆகத்து அவனை

நிறுத்தும் மனத்து ஒன்றிய சிந்தையினார்க்கு

வெறி தண் மலர் சோலைகள் சூழ் திருநாவாய்

குறுக்கும் வகை உண்டு-கொலோ கொடியேற்கே

#3859

கொடி ஏர் இடை கோகனகத்தவள் கேள்வன்

வடி வேல் தடம் கண் மட பின்னை மணாளன்

நெடியான் உறை சோலைகள் சூழ் திருநாவாய்

அடியேன் அணுகப்பெறும் நாள் எவை-கொலோ

#3860

எவை-கொல் அணுகப்பெறும் நாள் என்று எப்போதும்

கவையில் மனம் இன்றி கண்ணீர்கள் கலுழ்வன்

நவை இல் திருநாரணன் சேர் திருநாவாய்

அவையுள் புகலாவது ஓர் நாள் அறியேனே

#3861

நாளேல் அறியேன் எனக்கு உள்ளன நானும்

மீளா அடிமைப்பணி செய்ய புகுந்தேன்

நீள் ஆர் மலர் சோலைகள் சூழ் திருநாவாய்

வாள் ஏய் தடம் கண் மட பின்னை மணாளா

#3862

மணாளன் மலர் மங்கைக்கும் மண் மடந்தைக்கும்

கண்ணாளன் உலகத்து உயிர் தேவர்கட்கு எல்லாம்

விண்ணாளன் விரும்பி உறையும் திருநாவாய்

கண் ஆர களிக்கின்றது இங்கு என்று-கொல் கண்டே

#3863

கண்டே களிக்கின்றது இங்கு என்று-கொல் கண்கள்

தொண்டே உனக்காய் ஒழிந்தேன் துரிசு இன்றி

வண்டு ஆர் மலர் சோலைகள் சூழ் திருநாவாய்

கொண்டே உறைகின்ற எம் கோவலர் கோவே

#3864

கோ ஆகிய மா வலியை நிலம் கொண்டாய்

தேவாசுரம் செற்றவனே திருமாலே

நாவாய் உறைகின்ற என் நாரண நம்பீ

ஆஆ அடியான் இவன் என்று அருளாயே

#3865

அருளாது ஒழிவாய் அருள்செய்து அடியேனை

பொருளாக்கி உன் பொன் அடி கீழ் புக வைப்பாய்

மருளே இன்றி உன்னை என் நெஞ்சத்து இருத்தும்

தெருளே தரு தென் திருநாவாய் என் தேவே

#3866

தேவர் முனிவர்க்கு என்றும் காண்டற்கு அரியன்

மூவர் முதல்வன் ஒரு மூ உலகு ஆளி

தேவன் விரும்பி உறையும் திருநாவாய்

யாவர் அணுக பெறுவார் இனி அந்தோ

#3867

அந்தோ அணுக பெறும் நாள் என்று எப்போதும்

சிந்தை கலங்கி திருமால் என்று அழைப்பன்

கொந்து ஆர் மலர் சோலைகள் சூழ் திருநாவாய்

வந்தே உறைகின்ற எம் மா மணி வண்ணா

#3868

வண்ணம் மணி மாட நல் நாவாய் உள்ளானை

திண்ணம் மதிள் தென் குருகூர் சடகோபன்

பண் ஆர் தமிழ் ஆயிரத்து இ பத்தும் வல்லார்

மண் ஆண்டு மணம் கமழ்வர் மல்லிகையே

#3869

மல்லிகை கமழ் தென்றல் ஈரும் ஆலோ வண் குறிஞ்சி இசை தவழும் ஆலோ

செல் கதிர் மாலையும் மயக்கும் ஆலோ செக்கர் நல் மேகங்கள் சிதைக்கும் ஆலோ

அல்லி அம் தாமரை கண்ணன் எம்மான் ஆயர்கள் ஏறு அரி ஏறு எம் மாயோன்

புல்லிய முலைகளும் தோளும் கொண்டு புகலிடம் அறிகிலம் தமியம் ஆலோ

#3870

புகலிடம் அறிகிலம் தமியம் ஆலோ புலம்புறு மணி தென்றல் ஆம்பல் ஆலோ

பகல் அடு மாலை வண் சாந்தம் ஆலோ பஞ்சமம் முல்லை தண் வாடை ஆலோ

அகல் இடம் படைத்து இடந்து உண்டு உமிழ்ந்து அளந்து எங்கும் அளிக்கின்ற ஆயன் மாயோன்

இகலிடத்து அசுரர்கள் கூற்றம் வாரான் இனி இருந்து என் உயிர் காக்கும் ஆறு என்

#3871

இனி இருந்து என் உயிர் காக்கும் ஆறு என் இணை முலை நமுக நுண் இடை நுடங்க

துனி இரும் கலவிசெய்து ஆகம் தோய்ந்து துறந்து எம்மை இட்டு அகல் கண்ணன் கள்வன்

தனி இளம் சிங்கம் எம் மாயன் வாரான் தாமரை கண்ணும் செ வாயும் நீல

பனி இரும் குழல்களும் நான்கு தோளும் பாவியேன் மனத்தே நின்று ஈரும் ஆலோ

#3872

பாவியேன் மனத்தே நின்று ஈரும் ஆலோ வாடை தண் வாடை வெவ் வாடை ஆலோ

மேவு தண் மதியம் வெம் மதியம் ஆலோ மென் மலர் பள்ளி வெம் பள்ளி ஆலோ

தூவி அம் புள் உடை தெய்வ வண்டு துதைந்த எம் பெண்மை அம் பூ இது ஆலோ

ஆவியின் பரம் அல்ல வகைகள் ஆலோ யாமுடை நெஞ்சமும் துணை அன்று ஆலோ

#3873

யாமுடை நெஞ்சமும் துணை அன்று ஆலோ ஆ புகு மாலையும் ஆகின்று ஆலோ

யாமுடை ஆயன் தன் மனம் கல் ஆலோ அவனுடை தீம் குழல் ஈரும் ஆலோ

யாமுடை துணை என்னும் தோழிமாரும் எம்மில் முன் அவனுக்கு மாய்வர் ஆலோ

யாமுடை ஆருயிர் காக்குமாறு என் அவனுடை அருள்பெறும் போது அரிதே

#3874

அவனுடை அருள்பெறும் போது அரிதால் அ அருள் அல்லன அருளும் அல்ல

அவன் அருள்பெறும் அளவு ஆவி நில்லாது அடு பகல் மாலையும் நெஞ்சும் காணேன்

சிவனொடு பிரமன் வண் திருமடந்தை சேர் திரு ஆகம் எம் ஆவி ஈரும்

எவன் இனி புகும் இடம் எவன் செய்கேனோ ஆருக்கு என் சொல்லுகேன் அன்னைமீர்காள்

#3875

ஆருக்கு என் சொல்லுகேன் அன்னைமீர்காள் ஆருயிர் அளவு அன்று இ கூர் தண் வாடை

கார் ஒக்கும் மேனி நம் கண்ணன் கள்வம் கவர்ந்த அ தனி நெஞ்சம் அவன் கணஃதே

சீர் உற்ற அகில் புகை யாழ் நரம்பு பஞ்சமம் தண் பசும் சாந்து அணைந்து

போர் உற்ற வாடை தண் மல்லிகைப்பூ புது மணம் முகந்துகொண்டு எறியும் ஆலோ

#3876

புது மணம் முகந்து கொண்டு எறியும் ஆலோ பொங்கு இள வாடை புன் செக்கர் ஆலோ

அது மணந்து அகன்ற நம் கண்ணன் கள்வம் கண்ணனில் கொடிது இனி அதனில் உம்பர்

மது மண மல்லிகை மந்த கோவை வண் பசும் சாந்தினில் பஞ்சமம் வைத்து

அது மணந்து இன் அருள் ஆய்ச்சியர்க்கே ஊதும் அ தீம் குழற்கே உய்யேன் நான்

#3877

ஊதும் அ தீம் குழற்கே உய்யேன் நான் அது மொழிந்து இடையிடை தன் செய் கோல

தூது செய் கண்கள் கொண்டு ஒன்று பேசி தூ மொழி இசைகள் கொண்டு ஒன்று நோக்கி

பேதுறு முகம்செய்து நொந்துநொந்து பேதை நெஞ்சு அறவு அற பாடும் பாட்டை

யாதும் ஒன்று அறிகிலம் அம்மஅம்ம மாலையும் வந்தது மாயன் வாரான்

#3878

மாலையும் வந்தது மாயன் வாரான் மா மணி புலம்ப வல் ஏறு அணைந்த

கோல நல் நாகுகள் உகளும் ஆலோ கொடியன குழல்களும் குழறும் ஆலோ

வால் ஒளி வளர் முல்லை கரு முகைகள் மல்லிகை அலம்பி வண்டு ஆலும் ஆலோ

வேலையும் விசும்பில் விண்டு அலறும் ஆலோ என் சொல்லி உய்வன் இங்கு அவனை விட்டே

#3879

அவனை விட்டு அகன்று உயிர் ஆற்றகில்லா அணி இழை ஆய்ச்சியர் மாலை பூசல்

அவனை விட்டு அகல்வதற்கே இரங்கி அணி குருகூர் சடகோபன் மாறன்

அவனி உண்டு உமிழ்ந்தவன் மேல் உரைத்த ஆயிரத்துள் இவை பத்தும் கொண்டு

அவனியுள் அலற்றி நின்று உய்ம்-மின் தொண்டீர் அ சொன்ன மாலை நண்ணி தொழுதே

#3880

மாலை நண்ணி தொழுது எழு-மினோ வினை கெட

காலை மாலை கமல மலர் இட்டு நீர்

வேலை மோதும் மதிள் சூழ் திருக்கண்ணபுரத்து

ஆலின் மேல் ஆல் அமர்ந்தான் அடி இணைகளே

#3881

கள் அவிழும் மலர் இட்டு நீர் இறைஞ்சு-மின்

நள்ளி சேரும் வயல் சூழ் கிடங்கின் புடை

வெள்ளி ஏய்ந்த மதிள் சூழ் திருக்கண்ணபுரம்

உள்ளி நாளும் தொழுது எழு-மினோ தொண்டரே

#3882

தொண்டர் நும் தம் துயர் போக நீர் ஏகமாய்

விண்டு வாடா மலர் இட்டு நீர் இறைஞ்சு-மின்

வண்டு பாடும் பொழில் சூழ் திருக்கண்ணபுரத்து

அண்ட வாணன் அமரர் பெருமானையே

#3883

மானை நோக்கி மட பின்னை-தன் கேள்வனை

தேனை வாடா மலர் இட்டு நீர் இறைஞ்சு-மின்

வானை உந்தும் மதிள் சூழ் திருக்கண்ணபுரம்

தான் நயந்த பெருமான் சரண் ஆகுமே

#3884

சரணம் ஆகும் தன தாள் அடைந்தார்க்கு எல்லாம்

மரணம் ஆனால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்

அரண் அமைந்த மதிள் சூழ் திருக்கண்ணபுர

தரணியாளன் தனது அன்பர்க்கு அன்பு ஆகுமே

#3885

அன்பன் ஆகும் தன தாள் அடைந்தார்க்கு எல்லாம்

செம்பொன் ஆகத்து அவுணன் உடல் கீண்டவன்

நன் பொன் ஏய்ந்த மதிள் சூழ் திருக்கண்ணபுரத்து

அன்பன் நாளும் தன மெய்யர்க்கு மெய்யனே

#3886

மெய்யன் ஆகும் விரும்பி தொழுவார்க்கு எல்லாம்

பொய்யன் ஆகும் புறமே தொழுவார்க்கு எல்லாம்

செய்யில் வாளை உகளும் திருக்கண்ணபுரத்து

ஐயன் ஆகத்து அணைப்பார்கட்கு அணியனே

#3887

அணியன் ஆகும் தன தாள் அடைந்தார்க்கு எல்லாம்

பிணியும் சாரா பிறவி கெடுத்து ஆளும்

மணி பொன் ஏய்ந்த மதிள் சூழ் திருக்கண்ணரம்

பணி-மின் நாளும் பரமேட்டி-தன் பாதமே

#3888

பாதம் நாளும் பணிய தணியும் பிணி

ஏதம் சாரா எனக்கேல் இனி என் குறை

வேத நாவர் விரும்பும் திருக்கண்ணபுரத்து

ஆதியானை அடைந்தார்க்கு அல்லல் இல்லையே

#3889

இல்லை அல்லல் எனக்கேல் இனி என் குறை

அல்லி மாதர் அமரும் திருமார்பினன்

கல்லில் ஏய்ந்த மதிள் சூழ் திருக்கண்ணபுரம்

சொல்ல நாளும் துயர் பாடு சாராவே

#3890

பாடு சாரா வினை பற்று அற வேண்டுவீர்

மாடம் நீடு குருகூர் சடகோபன் சொல்

பாடலான தமிழ் ஆயிரத்துள் இப்பத்தும்

பாடி ஆடி பணி-மின் அவன் தாள்களே

#3891

தாள தாமரை தடம் அணி வயல் திருமோகூர்

நாளும் மேவி நன்கு அமர்ந்து நின்று அசுரரை தகர்க்கும்

தோளும் நான்கு உடை சுரி குழல் கமல கண் கனி வாய்

காளமேகத்தை அன்றி மற்றொன்று இலம் கதியே

#3892

இலம் கதி மற்றொன்று எம்மைக்கும் ஈன் தண் துழாயின்
அலங்கல் அம் கண்ணி ஆயிரம் பேர் உடை அம்மான்
நலம் கொள் நான்மறை வாணர்கள் வாழ் திருமோகூர்
நலம் கழல் அவன் அடி நிழல் தடம் அன்றி யாமே

#3893

அன்றி யாம் ஒரு புகலிடம் இலம் என்று என்று அலற்றி
நின்று நான்முகன் அரனொடு தேவர்கள் நாட
வென்று இ மூ உலகு அளித்து உழல்வான் திருமோகூர்
நன்று நாம் இனி நணுகுதும் நமது இடர் கெடவே

#3894

இடர் கெட எம்மை போந்து அளியாய் என்று என்று ஏத்தி
சுடர் கொள் சோதியை தேவரும் முனிவரும் தொடர
படர் கொள் பாம்பு அணை பள்ளிகொள்வான் திருமோகூர்
இடர் கெட அடி பரவுதும் தொண்டீர் வம்-மினே

#3895

தொண்டீர் வம்-மின் நம் சுடர் ஒளி ஒரு தனிமுதல்வன்
அண்டம் மூ உலகு அளந்தவன் அணி திருமோகூர்

எண் திசையும் ஈன் கரும்பொடு பெரும் செந்நெல் விளைய

கொண்ட கோயிலை வலஞ்செய்து இங்கு ஆடுதும் கூத்தே

#3896

கூத்தன் கோவலன் குதற்று வல் அசுரர்கள் கூற்றம்

ஏத்தும் நங்கட்கும் அமரர்க்கும் முனிவர்க்கும் இன்பன்

வாய்த்த தண் பணை வள வயல் சூழ் திருமோகூர்

ஆத்தன் தாமரை அடி அன்றி மற்று இலம் அரணே

#3897

மற்று இலம் அரண் வான் பெரும் பாழ் தனிமுதலா

சுற்றும் நீர் படைத்து அதன் வழி தொல் முனி முதலா

முற்றும் தேவரோடு உலகு செய்வான் திருமோகூர்

சுற்றி நாம் வலம் செய்ய நம் துயர் கெடும் கடிதே

#3898

துயர் கெடும் கடிது அடைந்து வந்து அடியவர் தொழு-மின்

உயர் கொள் சோலை ஒண் தடம் அணி ஒளி திருமோகூர்

பெயர்கள் ஆயிரம் உடைய வல் அரக்கர் புக்கு அழுந்த

தயரதன் பெற்ற மரகத மணி தடத்தினையே

#3899

மணி தடத்து அடி மலர் கண்கள் பவள செ வாய்

அணி கொள் நால் தடம் தோள் தெய்வம் அசுரரை என்றும்

துணிக்கும் வல் அரட்டன் உறை பொழில் திருமோகூர்

நணித்து நம்முடை நல் அரண் நாம் அடைந்தனமே

#3900

நாம் அடைந்த நல் அரண் நமக்கு என்று நல் அமரர்

தீமை செய்யும் வல் அசுரரை அஞ்சி சென்று அடைந்தால்

காமரூபம் கொண்டு எழுந்து அளிப்பான் திருமோகூர்

நாமமே நவின்று எண்ணு-மின் ஏத்து-மின் நமர்காள்

#3901

ஏத்து-மின் நமர்காள் என்று தான் குடம் ஆடு

கூத்தனை குருகூர் சடகோபன் குற்றேவல்கள்

வாய்த்த ஆயிரத்துள் இவை வண் திருமோகூர்க்கு

ஈத்த பத்து இவை ஏத்த வல்லார்க்கு இடர் கெடுமே

#3902

கெடும் இடர் ஆய எல்லாம் கேசவா என்ன நாளும்

கொடு வினை செய்யும் கூற்றின் தமர்களும் குறுககில்லார்

விடம் உடை அரவில் பள்ளி விரும்பினான் சுரும்பு அலற்றும்

தடம் உடை வயல் அனந்தபுரநகர் புகுதும் இன்றே

#3903

இன்று போய் புகுதிராகில் எழுமையும் ஏதம் சாரா

குன்று நேர் மாடம் மாடே குருந்து சேர் செருந்தி புன்னை

மன்று அலர் பொழில் அனந்தபுரநகர் மாயன் நாமம்

ஒன்றும் ஓர் ஆயிரமாம் உள்ளுவார்க்கு உம்பர் ஊரே

#3904

ஊரும் புள் கொடியும் அஃதே உலகு எல்லாம் உண்டு உமிழ்ந்தான்

சேரும் தண் அனந்தபுரம் சிக்கென புகுதிராகில்

தீரும் நோய் வினைகள் எல்லாம் திண்ணம் நாம் அறிய
சொன்னோம்

பேரும் ஓர் ஆயிரத்துள் ஒன்று நீர் பேசு-மினே

#3905

பேசு-மின் கூசம் இன்றி பெரிய நீர் வேலை சூழ்ந்து

வாசமே கமழும் சோலை வயல் அணி அனந்தபுரம்

நேசம் செய்து உறைகின்றானை நெறிமையால் மலர்கள் தூவி

பூசனை செய்கின்றார்கள் புண்ணியம் செய்தவாறே

#3906

புண்ணியம் செய்து நல்ல புனலொடு மலர்கள் தூவி

எண்ணு-மின் எந்தை நாமம் இ பிறப்பு அறுக்கும் அப்பால்

திண்ணம் நாம் அறிய சொன்னோம் செறி பொழில் அனந்தபுரத்து

அண்ணலார் கமல பாதம் அணுகுவார் அமரர் ஆவார்

#3907

அமரராய் திரிகின்றார்கட்கு ஆதி சேர் அனந்தபுரத்து

அமரர் கோன் அர்ச்சிக்கின்று அங்கு அக பணி செய்வர் விண்ணோர்

நமர்களோ சொல்ல கேள்-மின் நாமும் போய் நணுகவேண்டும்

குமரனார் தாதை துன்பம் துடைத்த கோவிந்தனாரே

#3908

துடைத்த கோவிந்தனாரே உலகு உயிர் தேவும் மற்றும்

படைத்த எம் பரம மூர்த்தி பாம்பு அணை பள்ளிகொண்டான்

மடைத்தலை வாளை பாயும் வயல் அணி அனந்தபுரம்

கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடு வினை களையலாமே

#3909

கடு வினை களையலாகும் காமனை பயந்த காளை

இடவகை கொண்டது என்பர் எழில் அணி அனந்தபுரம்

படம் உடை அரவில் பள்ளி பயின்றவன் பாதம் காண

நட-மினோ நமர்கள் உள்ளீர் நாம் உமக்கு அறிய சொன்னோம்

#3910

நாம் உமக்கு அறிய சொன்ன நாள்களும் நணிய ஆன

சேமம் நன்கு உடைத்து கண்டீர் செறி பொழில் அனந்தபுரம்

தூமம் நல் விரை மலர்கள் துவள் அற ஆய்ந்துகொண்டு

வாமனன் அடிக்கு என்று ஏத்த மாய்ந்து அறும் வினைகள் தாமே

#3911

மாய்ந்து அறும் வினைகள் தாமே மாதவா என்ன நாளும்

ஏய்ந்த பொன் மதிள் அனந்தபுரநகர் எந்தைக்கு என்று

சாந்தொடு விளக்கம் தூபம் தாமரை மலர்கள் நல்ல

ஆய்ந்து கொண்டு ஏத்த வல்லார் அந்தம் இல் புகழினாரே

#3912

அந்தம் இல் புகழ் அனந்தபுரநகர் ஆதி-தன்னை

கொந்து அலர் பொழில் குருகூர் மாறன் சொல் ஆயிரத்துள்

ஐந்தினோடு ஐந்தும் வல்லார் அணைவர் போய் அமர் உலகில்

பைம் தொடி மடந்தையர்-தம் வேய் மரு தோள் இணையே

#3913

வேய் மரு தோள் இணை மெலியும் ஆலோ மெலிவும் என் தனிமையும் யாதும் நோக்கா

காமரு குயில்களும் கூவும் ஆலோ கண மயில் அவை கலந்து ஆலும் ஆலோ

ஆ மருவு இன நிரை மேய்க்க நீ போக்கு ஒரு பகல் ஆயிரம் ஊழி ஆலோ

தாமரை கண்கள் கொண்டு ஈர்தி ஆலோ தகவிலை தகவிலையே நீ கண்ணா

#3914

தகவிலை தகவிலையே நீ கண்ணா தட முலை புணர்-தொறும் புணர்ச்சிக்கு ஆரா

சுக வெள்ளம் விசும்பு இறந்து அறிவை மூழ்க சூழ்ந்து அது கனவு என நீங்கி ஆங்கே

அக உயிர் அகம் அகம்-தோறும் உள் புக்கு ஆவியின் பரம் அல்ல வேட்கை அந்தோ

மிகமிக இனி உன்னை பிரிவை ஆமால் வீவ நின் பசுநிரை மேய்க்க போக்கே

#3915

வீவன் நின் பசுநிரை மேய்க்க போக்கு வெவ்வுயிர் கொண்டு எனது ஆவி வேமால்

யாவரும் துணை இல்லை யான் இருந்து உன் அஞ்சன மேனியை ஆட்டம் காணேன்

போவது அன்று ஒரு பகல் நீ அகன்றால் பொரு கயல் கண் இணை நீரும் நில்லா

சாவது இ ஆய் குலத்து ஆய்ச்சியோமாய் பிறந்த இ தொழுத்தையோம் தனிமை தானே

#3916

தொழுத்தையோம் தனிமையும் துணை பிரிந்தார் துயரமும் நினைகிலை கோவிந்தா நின்

தொழுத்தனில் பசுக்களையே விரும்பி துறந்து எம்மை இட்டு அவை மேய்க்க போதி

பழுத்த நல் அமுதின் இன் சாற்று வெள்ளம் பாவியேன் மனம் அகம்-தோறும் உள்புக்கு

அழுத்த நின் செம் கனி வாயின் கள்வ பணிமொழி நினை-தொறும் ஆவி வேமால்

#3917

பணிமொழி நினை-தொறும் ஆவி வேமால் பகல் நிரை மேய்க்கிய போய கண்ணா

பிணி அவிழ் மல்லிகை வாடை தூவ பெரு மத மாலையும் வந்தின்று ஆலோ

மணி மிகு மார்பினில் முல்லை போது என் வன முலை கமழ்வித்து உன் வாய் அமுதம் தந்து

அணி மிகு தாமரை கையை அந்தோ அடிச்சியோம் தலை மிசை நீ அணியாய்

#3918

அடிச்சியோம் தலை மிசை நீ அணியாய் ஆழி அம் கண்ணா உன் கோல பாதம்

பிடித்து அது நடுவு உனக்கு அரிவையரும் பலர் அது நிற்க எம் பெண்மை ஆற்றோம்

வடி தடம் கண் இணை நீரும் நில்லா மனமும் நில்லா எமக்கு அது தன்னாலே

வெடிப்பு நின் பசுநிரை மேய்க்க போக்கு வேம் எமது உயிர் அழல் மெழுகில் உக்கே

#3919

வேம் எமது உயிர் அழல் மெழுகில் உக்கு வெள் வளை மேகலை கழன்று வீழ

தூ மலர் கண் இணை முத்தம் சோர துணை முலை பயந்து என தோள்கள் வாட

மா மணி வண்ணா உன் செங்கமல வண்ண மெல் மலர் அடி நோவ நீ போய்

ஆ மகிழ்ந்து உகந்து அவை மேய்க்கின்று உன்னோடு அசுரர்கள் தலைப்பெய்யில் எவன்-கொல் ஆங்கே

#3920

அசுரர்கள் தலைப்பெய்யில் எவன்-கொல் ஆங்கு என்று ஆழும் என் ஆருயிர் ஆன் பின் போகேல்

கசிகையும் வேட்கையும் உள்கலந்து கலவியும் நலியும் என் கைகழியேல்

வசிசெய் உன் தாமரை கண்ணும் வாயும் கைகளும் பீதக உடையும் காட்டி

ஒசிசெய் நுண் இடை இள ஆய்ச்சியர் நீ உகக்கும் நல்லவரொடும் உழிதராயே

#3921

உகக்கும் நல்லவரொடும் உழிதந்து உன்தன் திருவுள்ளம் இடர் கெடும்-தோறும் நாங்கள்

வியக்க இன்புறுதும் எம் பெண்மை ஆற்றோம் எம் பெருமான் பசு மேய்க்க போகேல்

மிக பல அசுரர்கள் வேண்டு உருவம் கொண்டு நின்று உழிதருவர் கஞ்சன் ஏவ

அகப்படில் அவரொடும் நின்னொடு ஆங்கே அவத்தங்கள் விளையும் என் சொல் கொள் அந்தோ

#3922

அவத்தங்கள் விளையும் என் சொல் கொள் அந்தோ அசுரர்கள் வன் கையர் கஞ்சன் ஏவ

தவத்தவர் மறுக நின்று உழிதருவர் தனிமையும் பெரிது உனக்கு இராமனையும்

உவர்த்தலை உடன் திரிகிலையும் என்று என்று ஊடுற என்னுடை ஆவி வேமால்

திவத்திலும் பசுநிரை மேய்ப்பு உவத்தி செம் கனி வாய் எங்கள் ஆயர் தேவே

#3923

செம் கனி வாய் எங்கள் ஆயர் தேவு அ திருவடி திருவடி மேல் பொருநல்

சங்கு அணி துறைவன் வண் தென் குருகூர் வண் சடகோபன் சொல் ஆயிரத்துள்

மங்கையர் ஆய்ச்சியர் ஆய்ந்த மாலை அவனொடும் பிரிவதற்கு இரங்கி தையல்

அங்கு அவன் பசுநிரை மேய்ப்பு ஒழிப்பான் உரைத்தன இவையும் பத்து அவற்றின் சார்வே

#3924

சார்வே தவநெறிக்கு தாமோதரன் தாள்கள்

கார் மேக வண்ணன் கமல நயனத்தன்

நீர் வானம் மண் எரி காலாய் நின்ற நேமியான்

பேர் வானவர்கள் பிதற்றும் பெருமையனே

#3925

பெருமையனே வானத்து இமையோர்க்கும் காண்டற்கு

அருமையனே ஆகத்து அணையாதார்க்கு என்றும்

திரு மெய் உறைகின்ற செங்கண்மால் நாளும்

இருமை வினை கடிந்து இங்கு என்னை ஆள்கின்றானே

#3926

ஆள்கின்றான் ஆழியான் ஆரால் குறைவு உடையம்

மீள்கின்றது இல்லை பிறவி துயர் கடிந்தோம்

வாள் கெண்டை ஒண் கண் மட பின்னை-தன் கேள்வன்

தாள் கண்டுகொண்டு என் தலை மேல் புனைந்தேனே

#3927

தலை மேல் புனைந்தேன் சரணங்கள் ஆலின்

இலை மேல் துயின்றான் இமையோர் வணங்க

மலை மேல் தான் நின்று என் மனத்துள் இருந்தானை

நிலை பேர்க்கல் ஆகாமை நிச்சித்து இருந்தேனே

#3928

நிச்சித்து இருந்தேன் என் நெஞ்சம் கழியாமை

கை சக்கரத்து அண்ணல் கள்வம் பெரிது உடையன்

மெச்சப்படான் பிறர்க்கு மெய் போலும் பொய் வல்லன்

நச்சப்படும் நமக்கு நாகத்து அணையானே

#3929

நாகத்து அணையானை நாள்-தோறும் ஞானத்தால்

ஆகத்து அணைப்பார்க்கு அருள்செய்யும் அம்மானை

மாகத்து இள மதியம் சேரும் சடையானை

பாகத்து வைத்தான் தன் பாதம் பணிந்தேனே

#3930

பணி நெஞ்சே நாளும் பரம பரம்பரனை

பிணி ஒன்றும் சாரா பிறவி கெடுத்து ஆளும்

மணி நின்ற சோதி மதுசூதன் என் அம்மான்

அணி நின்ற செம்பொன் அடல் ஆழியானே

#3931

ஆழியான் ஆழி அமரர்க்கும் அப்பாலான்

ஊழியான் ஊழி படைத்தான் நிரை மேய்த்தான்

பாழி அம் தோளால் வரை எடுத்தான் பாதங்கள்

வாழி என் நெஞ்சே மறவாது வாழ் கண்டாய்

#3932

கண்டேன் கமல மலர் பாதம் காண்டலுமே

விண்டே ஒழிந்த வினையாயின எல்லாம்

தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுக

பண்டே பரமன் பணித்த பணி வகையே

#3933

வகையால் மனம் ஒன்றி மாதவனை நாளும்

புகையால் விளக்கால் புது மலரால் நீரால்

திசை-தோறு அமரர்கள் சென்று இறைஞ்ச நின்ற

தகையான் சரணம் தமர்கட்கு ஓர் பற்றே

#3934

பற்று என்று பற்றி பரம பரம்பரனை

மல் திண் தோள் மாலை வழுதி வள நாடன்

சொல் தொடை அந்தாதி ஓர் ஆயிரத்துள் இ பத்தும்

கற்றார்க்கு ஓர் பற்றாகும் கண்ணன் கழல் இணையே

#3935

கண்ணன் கழல் இணை

நண்ணும் மனம் உடையீர்

எண்ணும் திருநாமம்

திண்ணம் நாரணமே

#3936

நாரணன் எம்மான்

பார் அணங்கு ஆளன்

வாரணம் தொலைத்த

காரணன் தானே

#3937

தானே உலகு எல்லாம்

தானே படைத்து இடந்து

தானே உண்டு உமிழ்ந்து

தானே ஆள்வானே

#3938

ஆள்வான் ஆழி நீர்

கோள்வாய் அரவு அணையான்

தாள்வாய் மலர் இட்டு

நாள்வாய் நாடீரே

#3939

நாடீர் நாள்-தோறும்

வாடா மலர் கொண்டு

பாடீர் அவன் நாமம்

வீடே பெறலாமே

#3940

மேயான் வேங்கடம்

காயாமலர் வண்ணன்

பேயார் முலை உண்ட

வாயான் மாதவனே

#3941

மாதவன் என்று என்று

ஓத வல்லீரேல்

தீது ஒன்றும் அடையா

ஏதம் சாராவே

#3942

சாரா ஏதங்கள்

நீர் ஆர் முகில் வண்ணன்

பேர் ஆர் ஓதுவார்

ஆர்ஆர் அமரரே

#3943

அமரர்க்கு அரியானை

தமர்கட்கு எளியானை

அமர தொழுவார்கட்கு

அமரா வினைகளே

#3944

வினை வல் இருள் என்னும்

முனைகள் வெருவி போம்

சுனை நல் மலர் இட்டு

நினை-மின் நெடியானே

#3945

நெடியான் அருள் சூடும்

படியான் சடகோபன்

நொடி ஆயிரத்து இ பத்து

அடியார்க்கு அருள் பேறே

#3946

அருள்பெறுவார் அடியார் தம் அடியனேற்கு ஆழியான்

அருள் தருவான் அமைகின்றான் அது நமது விதி வகையே

இருள் தரு மா ஞாலத்துள் இனி பிறவி யான் வேண்டேன்

மருள் ஒழி நீ மட நெஞ்சே வாட்டாற்றான் அடி வணங்கே

#3947

வாட்டாற்றான் அடி வணங்கி மா ஞால பிறப்பு அறுப்பான்

கேட்டாயே மட நெஞ்சே கேசவன் எம் பெருமானை

பாட்டு ஆய பல பாடி பழவினைகள் பற்று அறுத்து

நாட்டாரோடு இயல்வு ஒழிந்து நாரணனை நண்ணினமே

#3948

நண்ணினம் நாராயணனை நாமங்கள் பல சொல்லி

மண் உலகில் வளம் மிக்க வாட்டாற்றான் வந்து இன்று

விண் உலகம் தருவானாய் விரைகின்றான் விதி வகையே

எண்ணினவாறு ஆகா இ கருமங்கள் என் நெஞ்சே

#3949

என் நெஞ்சத்து உள் இருந்து இங்கு இரும் தமிழ் நூல் இவை மொழிந்து

வல் நெஞ்சத்து இரணியனை மார்வு இடந்த வாட்டாற்றான்

மன் அஞ்ச பாரதத்து பாண்டவர்க்கா படை தொட்டான்

நல் நெஞ்சே நம் பெருமான் நமக்கு அருள் தான் செய்வானே

#3950

வான் ஏற வழி தந்த வாட்டாற்றான் பணிவகையே

நான் ஏற பெறுகின்றேன் நரகத்தை நகு நெஞ்சே

தேன் ஏறு மலர் துளவம் திகழ் பாதன் செழும் பறவை

தான் ஏறி திரிவான தாள் இணை என் தலை மேலே

#3951

தலை மேல தாள் இணைகள் தாமரை கண் என் அம்மான்

நிலைபேரான் என் நெஞ்சத்து எப்பொழுதும் எம் பெருமான்

மலை மாடத்து அரவு அணை மேல் வாட்டாற்றான் மதம் மிக்க

கொலை யானை மருப்பு ஒசித்தான் குரை கழல்கள் குறுகினமே

#3952

குரை கழல்கள் குறுகினம் நம் கோவிந்தன் குடிகொண்டான்

திரை குழுவு கடல் புடை சூழ் தென் நாட்டு திலதம் அன்ன

வரை குழுவு மணி மாட வாட்டாற்றான் மலர் அடி மேல்

விரை குழுவு நறும் துளவம் மெய்ந்நின்று கமழுமே

#3953

மெய்ந்நின்று கமழ் துளவ விரை ஏறு திருமுடியன்

கைந்நின்ற சக்கரத்தன் கருதும் இடம் பொருது புனல்

மைந்நின்ற வரை போலும் திருவுருவ வாட்டாற்றாற்கு

எ நன்றி செய்தேனா என் நெஞ்சில் திகழ்வதுவே

#3954

திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும்

திகழ்கின்ற திருமாலார் சேர்விடம் தண் வாட்டாறு

புகழ் நின்ற புள் ஊர்தி போர் அரக்கர் குலம் கெடுத்தான்

இகழ்வு இன்றி என் நெஞ்சத்து எப்பொழுதும் பிரியானே

#3955

பிரியாது ஆட்செய் என்று பிறப்பு அறுத்து ஆள் அற கொண்டான்

அரி ஆகி இரணியனை ஆகம் கீண்டான் அன்று

பெரியார்க்கு ஆட்பட்ட-கால் பெறாத பயன் பெறுமாறு

வரி வாள் வாய் அரவு அணை மேல் வாட்டாற்றான் காட்டினனே

#3956

காட்டி தன் கனை கழல்கள் கடு நரகம் புகல் ஒழித்த

வாட்டாற்று எம் பெருமானை வளம் குருகூர் சடகோபன்

பாட்டாய தமிழ் மாலை ஆயிரத்துள் இ பத்தும்

கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கு இனிய செம் சொல்லே

#3957

செம் சொல் கவிகாள் உயிர் காத்து ஆட்செய்ம்-மின் திருமாலிருஞ்சோலை

வஞ்ச கள்வன் மா மாயன் மாய கவியாய் வந்து என்

நெஞ்சும் உயிரும் உள் கலந்து நின்றார் அறியா வண்ணம் என்

நெஞ்சும் உயிரும் அவை உண்டு தானே ஆகி நிறைந்தானே

#3958

தானே ஆகி நிறைந்து எல்லா உலகும் உயிரும் தானே ஆய்

தானே யான் என்பான் ஆகி தன்னை தானே துதித்து எனக்கு

தேனே பாலே கன்னலே அமுதே திருமாலிருஞ்சோலை

கோனே ஆகி நின்று ஒழிந்தான் என்னை முற்றும் உயிர் உண்டே

#3959

என்னை முற்றும் உயிர் உண்டு என் மாய ஆக்கை இதனுள் புக்கு

என்னை முற்றும் தானேயாய் நின்ற மாய அம்மான் சேர்

தென் நன் திருமாலிருஞ்சோலை திசை கைகூப்பி சேர்ந்த யான்

இன்னும் போவேனே-கொலோ என்-கொல் அம்மான் திருவருளே

#3960

என்-கொல் அம்மான் திருவருள்கள் உலகும் உயிரும் தானே ஆய்

நன்கு என் உடலம் கைவிடான் ஞாலத்தூடே நடந்து உழக்கி

தென் கொள் திசைக்கு திலதமாய் நின்ற திருமாலிருஞ்சோலை

நங்கள் குன்றம் கைவிடான் நண்ணா அசுரர் நலியவே

#3961

நண்ணா அசுரர் நலிவு எய்த நல்ல அமரர் பொலிவு எய்த

எண்ணாதனகள் எண்ணும் நல் முனிவர் இன்பம் தலைசிறப்ப

பண் ஆர் பாடல் இன் கவிகள் யானாய் தன்னை தான் பாடி

தென்னா என்னும் என் அம்மான் திருமாலிருஞ்சோலையானே

#3962

திருமாலிருஞ்சோலையானே ஆகி செழு மூ உலகும் தன்

ஒரு மா வயிற்றின் உள்ளே வைத்து ஊழிஊழி தலையளிக்கும்

திருமால் என்னை ஆளும் மால் சிவனும் பிரமனும் காணாது

அரு மால் எய்தி அடி பரவ அருளை ஈந்த அம்மானே

#3963

அருளை ஈ என் அம்மானே என்னும் முக்கண் அம்மானும்

தெருள் கொள் பிரமன் அம்மானும் தேவர் கோனும் தேவரும்

இருள்கள் கடியும் முனிவரும் ஏத்தும் அம்மான் திருமலை

மருள்கள் கடியும் மணி மலை திருமாலிருஞ்சோலை மலையே

#3964

திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற்கடலே என் தலையே

திருமால் வைகுந்தமே தண் திருவேங்கடமே எனது உடலே

அரு மா மாயத்து எனது உயிரே மனமே வாக்கே கருமமே

ஒரு மா நொடியும் பிரியான் என் ஊழி முதல்வன் ஒருவனே

#3965

ஊழி முதல்வன் ஒருவனே என்னும் ஒருவன் உலகு எல்லாம்

ஊழி-தோறும் தன்னுள்ளே படைத்து காத்து கெடுத்து உழலும்

ஆழி வண்ணன் என் அம்மான் அம் தண் திருமாலிருஞ்சோலை

வாழி மனமே கைவிடேல் உடலும் உயிரும் மங்க ஒட்டே

#3966

மங்க ஒட்டு உன் மா மாயை திருமாலிருஞ்சோலை மேய

நங்கள் கோனே யானே நீ ஆகி என்னை அளித்தானே

பொங்கு ஐம்புலனும் பொறி ஐந்தும் கருமேந்திரியம் ஐம்பூதம்

இங்கு இ உயிர் ஏய் பிரகிருதி மான் ஆங்காரம் மனங்களே

#3967

மான் ஆங்காரம் மனம் கெட ஐவர் வன்கையர் மங்க

தான் ஆங்காரமாய் புக்கு தானே தானே ஆனானை

தேன் ஆங்கார பொழில் குருகூர் சடகோபன் சொல் ஆயிரத்துள்

மான் ஆங்காரத்து இவை பத்தும் திருமாலிருஞ்சோலை மலைக்கே

#3968

திருமாலிருஞ்சோலை மலை என்றேன் என்ன

திருமால் வந்து என் நெஞ்சு நிறைய புகுந்தான்

குரு மா மணி உந்து புனல் பொன்னி தென்-பால்

திருமால் சென்று சேர்விடம் தென் திருப்பேரே

#3969

பேரே உறைகின்ற பிரான் இன்று வந்து

பேரேன் என்று என் நெஞ்சு நிறைய புகுந்தான்

கார் ஏழ் கடல் ஏழ் மலை ஏழ் உலகு உண்டும்

ஆரா வயிற்றானை அடங்க பிடித்தேனே

#3970

பிடித்தேன் பிறவி கெடுத்தேன் பிணி சாரேன்

மடித்தேன் மனை வாழ்க்கையுள் நிற்பது ஓர் மாயையை

கொடி கோபுர மாடங்கள் சூழ் திருப்பேரான்

அடி சேர்வது எனக்கு எளிது ஆயினவாறே

#3971

எளிதாயினவாறு என்று என் கண்கள் களிப்ப

களிது ஆகிய சிந்தையனாய் களிக்கின்றேன்

கிளி தாவிய சோலைகள் சூழ் திருப்பேரான்

தெளிது ஆகிய சேண் விசும்பு தருவானே

#3972

வானே தருவான் எனக்காய் என்னோடு ஒட்டி

ஊன் ஏய் குரம்பை இதனுள் புகுந்து இன்று

தானே தடுமாற்ற வினைகள் தவிர்த்தான்

தேன் ஏய் பொழில் தென் திருப்பேர் நகரானே

#3973

திருப்பேர் நகரான் திருமாலிருஞ்சோலை

பொருப்பே உறைகின்ற பிரான் இன்று வந்து

இருப்பேன் என்று என் நெஞ்சு நிறைய புகுந்தான்

விருப்பே பெற்று அமுதம் உண்டு களித்தேனே

#3974

உண்டு களித்தேற்கு உம்பர் என் குறை மேலை

தொண்டு உகளித்து அந்தி தொழும் சொல்லு பெற்றேன்

வண்டு களிக்கும் பொழில் சூழ் திருப்பேரான்

கண்டு களிப்ப கண்ணுள் நின்று அகலானே

#3975

கண்ணுள் நின்று அகலான் கருத்தின்-கண் பெரியன்

எண்ணில் நுண் பொருள் ஏழ் இசையின் சுவை தானே

வண்ண நல் மணி மாடங்கள் சூழ் திருப்பேரான்

திண்ணம் என் மனத்து புகுந்தான் செறிந்து இன்றே

#3976

இன்று என்னை பொருளாக்கி தன்னை என்னுள் வைத்தான்

அன்று என்னை புறம்போக புணர்த்தது என் செய்வான்

குன்று என்ன திகழ் மாடங்கள் சூழ் திருப்பேரான்

ஒன்று எனக்கு அருள்செய்ய உணர்த்தல் உற்றேனே

#3977

உற்றேன் உகந்து பணிசெய்து உன் பாதம்

பெற்றேன் ஈதே இன்னம் வேண்டுவது எந்தாய்

கற்றார் மறைவாணர்கள் சூழ் திருப்பேராற்கு

அற்றார் அடியார் தமக்கு அல்லல் நில்லாவே

#3978

நில்லா அல்லல் நீள் வயல் சூழ் திருப்பேர் மேல்

நல்லார் பலர் வாழ் குருகூர் சடகோபன்

சொல் ஆர் தமிழ் ஆயிரத்துள் இவை பத்தும்

வல்லார் தொண்டர் ஆள்வது சூழ் பொன் விசும்பே

#3979

சூழ் விசும்பு அணி முகில் தூரியம் முழக்கின

ஆழ் கடல் அலை திரை கை எடுத்து ஆடின

ஏழ் பொழிலும் வளம் ஏந்திய என் அப்பன்

வாழ் புகழ் நாரணன் தமரை கண்டு உகந்தே

#3980

நாரணன் தமரை கண்டு உகந்து நல் நீர் முகில்

பூரண பொன் குடம் பூரித்தது உயர் விண்ணில்

நீர் அணி கடல்கள் நின்று ஆர்த்தன நெடு வரை

தோரணம் நிரைத்து எங்கும் தொழுதனர் உலகே

#3981

தொழுதனர் உலகர்கள் தூப நல் மலர் மழை

பொழிவனர் பூமி அன்று அளந்தவன் தமர் முன்னே

எழு-மின் என்று இருமருங்கு இசைத்தனர் முனிவர்கள்

வழி இது வைகுந்தர்க்கு என்று வந்து எதிரே

#3982

எதிர் எதிர் இமையவர் இருப்பிடம் வகுத்தனர்

கதிரவர் அவர் அவர் கைந்நிரை காட்டினர்

அதிர் குரல் முரசங்கள் அலை கடல் முழக்கு ஒத்த

மது விரி துழாய் முடி மாதவன் தமர்க்கே

#3983

மாதவன் தமர் என்று வாசலில் வானவர்

போது-மின் எமது இடம் புகுதுக என்றலும்

கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்

வேத நல் வாயவர் வேள்வி உள்மடுத்தே

#3984

வேள்வி உள்மடுத்தலும் விரை கமழ் நறும் புகை

காளங்கள் வலம்புரி கலந்து எங்கும் இசைத்தனர்

ஆள்-மின்கள் வானகம் ஆழியான் தமர் என்று

வாள் ஒண் கண் மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே

#3985

மடந்தையர் வாழ்த்தலும் மருதரும் வசுக்களும்

தொடர்ந்து எங்கும் தோத்திரம் சொல்லினர் தொடு கடல்

கிடந்த எம் கேசவன் கிளர் ஒளி மணி முடி

குடந்தை எம் கோவலன் குடி அடியார்க்கே

#3986

குடி அடியார் இவர் கோவிந்தன்-தனக்கு என்று

முடி உடை வானவர் முறைமுறை எதிர்கொள்ள

கொடி அணி நெடு மதிள் கோபுரம் குறுகினர்

வடிவு உடை மாதவன் வைகுந்தம் புகவே

#3987

வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்

வைகுந்தன் தமர் எமர் எமது இடம் புகுத என்று

வைகுந்தத்து அமரரும் முனிவரும் வியந்தனர்

வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே

#3988

விதி வகை புகுந்தனர் என்று நல் வேதியர்

பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்

நிதியும் நல் சுண்ணமும் நிறை குட விளக்கமும்

மதி முக மடந்தையர் ஏந்தினர் வந்தே

#3989

வந்து அவர் எதிர்கொள்ள மா மணி மண்டபத்து

அந்தம் இல் பேரின்பத்து அடியரோடு இருந்தமை

கொந்து அலர் பொழில் குருகூர் சடகோபன் சொல்

சந்தங்கள் ஆயிரத்து இவை வல்லார் முனிவரே

#3990

முனியே நான்முகனே முக்கண் அப்பா என் பொல்லா

கனி வாய் தாமரை கண் கருமாணிக்கமே என் கள்வா

தனியேன் ஆருயிரே என் தலை மிசையாய் வந்திட்டு

இனி நான் போகல் ஒட்டேன் ஒன்றும் மாயம் செய்யேல் என்னையே

#3991

மாயம் செய்யேல் என்னை உன் திருமார்வத்து மாலை நங்கை

வாசம் செய் பூம் குழலாள் திரு ஆணை நின் ஆணை கண்டாய்

நேசம் செய்து உன்னோடு என்னை உயிர் வேறு இன்றி ஒன்றாகவே

கூசம் செய்யாது கொண்டாய் என்னை கூவி கொள்ளாய் வந்து அந்தோ

#3992

கூவி கொள்ளாய் வந்து அந்தோ என் பொல்லா கருமாணிக்கமே

ஆவிக்கு ஓர் பற்றுக்கொம்பு நின் அலால் அறிகின்றிலேன் யான்

மேவி தொழும் பிரமன் சிவன் இந்திரன் ஆதிக்கு எல்லாம்

நாவி கமல முதல் கிழங்கே உம்பர் அந்த அதுவே

#3993

உம்பர் அம் தண் பாழே ஓ அதனுள் மிசை நீயே ஓ

அம்பரம் நல் சோதி அதனுள் பிரமன் அரன் நீ

உம்பரும் யாதவரும் படைத்த முனிவன் அவன் நீ

எம் பரம் சாதிக்கலுற்று என்னை போர விட்டிட்டாயே

#3994

போர விட்டிட்டு என்னை நீ புறம் போக்கலுற்றால் பின்னை யான்

ஆரை கொண்டு எத்தை அந்தோ எனது என்பது என் யான் என்பது என்

தீர இரும்பு உண்ட நீர் அது போல என் ஆருயிரை

ஆர பருக எனக்கு ஆரா அமுது ஆனாயே

#3995

எனக்கு ஆரா அமுதாய் எனது ஆவியை இன் உயிரை

மனக்கு ஆராமை மன்னி உண்டிட்டாய் இனி உண்டு ஒழியாய்

புன காயா நிறத்த புண்டரீக கண் செம் கனி வாய்

உனக்கு ஏற்கும் கோல மலர் பாவைக்கு அன்பா என் அன்பேயோ

#3996

கோல மலர் பாவைக்கு அன்பு ஆகிய என் அன்பேயோ

நீல வரை இரண்டு பிறை கவ்வி நிமிர்ந்தது ஒப்ப

கோல வராகம் ஒன்றாய் நிலம் கோட்டிடை கொண்ட எந்தாய்

நீல கடல் கடைந்தாய் உன்னை பெற்று இனி போக்குவனோ

#3997

பெற்று இனி போக்குவனோ உன்னை என் தனி பேருயிரை

உற்ற இருவினையாய் உயிராய் பயன் ஆயவை ஆய்

முற்ற இ மூ உலகும் பெரும் தூறாய் தூற்றில் புக்கு

முற்ற கரந்து ஒளித்தாய் என் முதல் தனி வித்தேயோ

#3998

முதல் தனி வித்தேயோ முழு மூ உலகு ஆதிக்கு எல்லாம்

முதல் தனி உன்னை உன்னை எனை நாள் வந்து கூடுவன் நான்

முதல் தனி அங்கும் இங்கும் முழுமுற்றுறு வாழ் பாழாய்

முதல் தனி சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவிலீ ஓ

#3999

சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவில் பெரும் பாழே ஓ

சூழ்ந்து அதனில் பெரிய பர நல் மலர் சோதீ ஓ

சூழ்ந்து அதனில் பெரிய சுடர் ஞான இன்பமே ஒ

சூழ்ந்து அதனில் பெரிய என் அவா அற சூழ்ந்தாயே

#4000

அவா அற சூழ் அரியை அயனை அரனை அலற்றி

அவா அற்று வீடு பெற்ற குருகூர் சடகோபன் சொன்ன

அவா இல் அந்தாதிகளால் இவை ஆயிரமும் முடிந்த

அவா இல் அந்தாதி இ பத்து அறிந்தார் பிறந்தார் உயர்ந்தே